உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தினின்று மாதந்தோறும் வெளிவரும்

ஒரு தமிழ்ப்பத்திரிகை.



## ஒன்பதாந்தொகுதி.

பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரை:

தமிழ்ச்சங்க முத்திராசாலைப்

பதிப்பு.

1910–1911.

## “செந்தமிழ்” ஒன்பதாந்தொகுதியின்

# உள்ளுறை.

## உள்ளுறை.

## "செந்தமிழ்" ஒன்பதாந்தொகுதியில் வெளிவந்த நூல்கள்.

[முடிந்தவை.]



[முடியாதவை.]

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௯.] சாதாரண-ஹு கார்த்திகைமீ. [பகுதி-௧

## தொல்காப்பியத்துக்கண்ட
## பழைய வழக்குகள்.

(அம் தொகுதி, ருகூஅ-ம் பக்கத்தொடர்ச்சி.)

கடைச்சங்க நாளில் வீழ்ந்த கற்பியல் விதிகள்.

தொல்காப்பியனார், கற்பியலில், தலைவனுந் தலைவியும் களவு வெளிப்பட்ட பின்னர் வரைந்துகொண்டு இல்லறம் நிகழ்த்துங் காலத்தே, அவ்விருவரையும்பற்றி இன்னார் இன்னகூற்று நிகழ்த்தற்குரியர் என விதிக்குமிடத்துப் பார்ப்பார்க்குரிய கிளவிகளாக—

"காமநிலை யுரைத்தலும் தேர்நிலை யுரைத்தலும்
கிழவோன் குறிப்பினை எடுத்தனர் மொழிதலும்
மாவொடு பட்ட நிமித்தங் கூறலும்
செலவுறு கிளவியுஞ் செலவழுங்கு கிளவியு
மன்னவை பிறவும் பார்ப்பார்க் குரிய"

என்று கூறினர். இக்கிளவிகள் கடைச்சங்க காலத்துக்கு முன்னரே வழக்கு வீழ்ந்தன என்பது—"இவையெல்லாம் தலைச்சங்கத்தாரும் இடைச்சங்கத்தாருஞ் செய்த பாடலுட் பயின்றனபோலும்; இக்காலத்து இலக்கியமின்று" என நச்சினார்க்கினியர் எழுதுதலான் அறியப்படுகின்றது. இவ்வாறே கூத்தர்க்குரிய கிளவிகூறும் "தொல்லவையுரைத்தலும்" என்ற சூத்திரத்தும், நற்றாய்க்குஞ் செவிலிக்குமுரிய இலக்கணங்கூறும் "கிழவோனறியா" என்ற சூத்திரத்தும்

"இலக்கியம் இக்காலத்திறந்தன" "இலக்கணமுண்மையின் இலக்கியமும் அக்காலத்துளவென்றுணர்க" என அவர் எழுதிச் செல்லுதலுங் கண்டுகொள்க.

நான்கு வருணரும் தம்முள் மணந்த காலம்.

ஆசிரியர் தொல்காப்பியனார், "மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்—கீழோர்க் காகிய காலமு முண்டே" என்ற கற்பியற் சூத்திரத்தே, நான்காம் வருணத்தாராகிய "கீழோரது" மணநிகழ்ச்சியைக் குறிப்பிட்டார். நச்சினார்க்கினியர், இச்சூத்திரத்திற்கு—"வேதநூறுன், அந்தணர் அரசர் வணிகரென்னும் மூவர்க்கு முரியவாகக் கூறிய கரணவிதி, அந்தணர் முதலியோர்க்கு மகட்கொடைக்குரிய வேளாண் மாந்தர்க்குத் தந்திரமந்திர வகையான் உரித்தாகிய காலமுமுள" என்று உரைகூறி, "எனவே, முற்காலத்து நான்குவருணத்தார்க்கும் கரணம் ஒன்றாய் நிகழ்ந்தது என்பதாம்; அஃது இரண்டாமூழி தொடங்கி வேளாளர்க்குத் தவிர்ந்ததென்பதூஉம், தலைச்சங்கத்தாரும் முதனூலாசிரியர் கூறிய முறையே, கரணமொன்றாகச் செய்யுள் செய்தாரென்பதூஉம் கூறியவாறாயிற்று. உதாரணம் இக்காலத்தின்று" என அகலமும் இட்டனர்.

இவற்றால், ஆதியூழியில் (கிருதயுகம்) நான்கு வருணத்தாரும் தம்முள் மணம்புரிந்து வந்தனரெனவும், இரண்டாமூழியில் (திரேதாயுகம்) வேளாளர்க்கு, மற்ற மூவரோடு மணம்புரிதல் விலக்கப்பட்டதெனவும், முதலூழியில் வேளாளர் மற்றமூவருடன் மணம்புரிந்ததைக் குறிக்குந் தலைச்சங்கத்திலக்கியம் இக்காலத்திறந்ததெனவும்—நச்சினார்க்கினியர் கருதினாதல் விளங்கும்.

தமிழ்மக்கட்கு விவாகவிதி உண்டானமையும்,அதன் காரணமும்.

இனி, மேற்குறித்த சூத்திரம் வேறுமொருபொருள் கொள்ளக் கிடக்கின்றது: அஃதாவது—அந்தணர் அரசர் வணிகர் என்ற மேலோர் மூவர்க்கும் விதிக்கப்பட்ட விவாகவிதி, நான்காம் வருணத்தாராகிய 'கீழோர்'க்கு உண்டாகிய காலமும் உளது—என்பது. முன்னியல்களிற் கூறப்பட்டவாறு கந்தருவ மணமுறையே 'கீழோர்க்' குரியதாயினும், வைசிகர்க்குரிய ஆரிடவிவாகவிதி அன்னோர்க்கும் வழங்கிய வரலாற்றைக் குறிக்கவேண்டி ஆசிரியர் இச்சூத்திரங்கூறினரென

ல் பொருத்தமாகத்தோற்றுகிறது. 'கீழோர்' என்பார், ஈண்டுப் பண்டைத் தமிழ் மக்களேயாவர்; என்னை? களவியலொழுக்கத்துக்குப் பின் கற்பியன்முறையைவைத்துத் தொல்காப்பியனார் வகுத்துப் போந்த இலக்கணமெல்லாம், "வடவேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து-வழக்" கேயன்றிப் பிறநாட்டுக்குரியதன்மையின் என்க. திருத்தக்கதேவரும்—"தேவர் பண்ணிய நீங்கொடையின் சுவை-மேவர் தென்றமிழ் மெய்ப்பொருளாதலின்" (சீவக-பதுமை-கக௬௯) எனவும், "இலைபுறங் கண்ட கண்ணியின் றமிழியற் கையின்பம்" (ஷை-சுரமஞ்-கூக) எனவுங் கூறினார். இவற்றால், தமிழர்க்கு ஆதியிற் களவுமுறை அல்லது கந்தருவவிவாகமே உரியதென்பதும், கற்புமுறை பிற்காலத்தே அன்னோர்க்கு விதிக்கப்பட்டதென்பதும் அறியத்தக்கன. பொய்முதலிய குற்றமின்றியே பூர்வத்திற் றமிழர்க்குள் நிகழ்ந்துவந்த கந்தருவமணம், பிற்காலத்துப் பொய்யும்வழுவுந் தோன்றிச் சீர்கெட்டமையே, இவர்க்கு ஆரிடமுறையை இருடிகள் விதித்துப்போந்ததற்குக் காரணமென்பதைத் தொல்காப்பியனாரே "பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்- ஐயர் யாத்தனர் கரண மென்ப" என, அடுத்த சூத்திரத்தாற் குறிப்பிட்டதூஉங் காண்க. முன்னியல்களாற் களவுக்கூட்டத்துக்குரியர் என்று கூறப்பட்ட தமிழ்மக்கட்கு, ஆரியரது கரணவிதியைக் கூறியதன் காரணமென்னை-என்ற ஆசங்கையைப் பரிகரித்தற்கே இச்சூத்திரமெழுந்தமை உய்த்துணரத்தக்கது.

தொல்காப்பியத்துக்கண்ட பொருளதிகாரவியல்களுள் உவமவியல் ஒன்று. இவ்வியல் பலவகையாகிய அணிகளிலே, உவமமொன்றனையே கூறும். அகத்திணையியலுள், உவமத்தினை உள்ளுறையுவமம் ஏனையுவமமென இருகூறாகக்கூறி, இவ்வுவமவியலில் அவற்றினை விரித்து ஆசிரியர் கூறினார். உவமக்கூறுபாடுகள், தொல்காப்பியத்துக் கூறியபடி, நான்காம்: அவை—தொழில், பயன், மெய், வடிவமென்பன. பிற்காலத்து நூல்களிலோ எனின், இவ்வணி பலவாகித் தோன்றும். உவமம் பலவகையாயிருத்தலானும், வேறுபல அலங்காரங்கட்கு அடிப்படையாதலானும், பிற்காலத்தணிநூல்கள் இதனைப் பலவகை

அணிகளுள் உவமமொன்றே முற்காலத்து வழங்கியமை.

யாகவும் வேறு பல அலங்காரங்களைக் கூட்டியும் பொருளணியிலக்க ணங் கூறுவனவாயின. சொல்லணி எத்துணைச் சிறப்பிற்றாய் பின் னூல்களிற் காணப்படுகின்றதோ, அத்துணையாகத் தொல்லாசிரியர் கருதவில்லையென்பது, தொல்காப்பிய முதலியவற்றையும் பிற்கால த்து நூல்களையும் ஒப்பிடுவார்க்கு நன்கு விளங்கும்.

உவமத்தின் பலவிகற்பங்களும் வெவ்வேறணிகளாகத் தொல்கா ப்பியர்காலத்து வழங்கினவல்ல என்பது, உவமவியல் கூஎ-ம் சூத்தி ரவுரையில், உரைகாரர் "இனி, இவ்வோத்தினுட் கூறுகின்ற உவ மங்களுட் சிலவற்றையும், சொல்லதிகாரத்துள்ளும் செய்யுளியலுள் ளும் சொல்லுகின்ற சிலபொருள்களையும் வாங்கிக்கொண்டு மற்ற வை செய்யுட்கண்ணே அணியாமெனை இக்காலத்தாசிரியர் நூல்செய் தாருமுளர்; அவை ஒருதலையாகச் செய்யுட்கணியென்று இலக்கணங் கூறப்படா...........பொருளதிகாரத்துட் பொருட்பகுதியெல்லாம் செய்யுட்கணியாகலான், அவை பாடலுட் பயின்றன வென்றதனான் அவையெல்லாந்தொகுத்து அணியெனக்கூறாது வேறு சிலவற்றை வரைந்து அணியெனக்கூறுதல் பயமில்கூற்றாமென்பது" எனப்பிற் காலத்தணிமுறைகளை விரிவாக மறுத்துக்கூறுதலால் அறியப்படு

உவமவுருபுகள் மரபுபற்றியே வழங்கியமை.

தொல்காப்பியனார் "அன்னவேய்ப்ப வுறழ வொப்ப" முதலாக ப்படித்த உவமவுருபுகள் வினைபயன்மெய்யுரு என்ற நான்கன்பாலும் வழங்குமிடத்து இன்னவுருபுகள் இன்னவுவமைகட்கே உரியன என வரையறைப்படுத் துக்கூறினர். இது,

"அன்ன வாங்க மான விறப்ப
வென்ன வுறழத் தகைய நோக்கொடு
கண்ணிய வெட்டும் வினைப்பா லுவமம்.

"போல மறுப்ப ஒப்ப காய்த்த
நேர வியப்ப நளிய நந்தவென்
றொத்துவரு கிளவி யுருவி னுவமம்"

என்பனமுதலிய சூத்திரங்களால் அறியப்படும். "தத்த மரபிற் றோ ன்றுமன் பொருளே" என்ற சூத்திரவுரையில், உரைகாரர் "மறுப்ப

ஒப்ப வென்பன முதலாயினவும் ஒரு காரண முடையவென்பது, ஆசிரியன் பெருமரபினவாக உரிமைப்படுத்துக் கூறினமையின் அறிந்தாம். அல்லதூஉம் 'மரபிற்றோன்றும்' என்றதனான், இவை யெல்லாம் மரபுபற்றி அறியல்வேண்டும்; எனவே, தலைச்சங்கத்தார் முதலாயினார் செய்யுட்களுள் அவ்வாறு பயின்று வருமென்பது அறிந்தா மன்றே, இவ்வாறு சூத்திரஞ்செய்தலானேனென்பது" என்று கூறுதலால், இவ்வுருபுகள், முற்காலத்து மரபுநிலைபிறழா வழக்குடையவாயிருந் தமை விளங்கும்.

இவ்வுவம வுருபுகளில், 'நளிய' 'நந்த' என்பவை, முற்காலத் தே வழக்குவீழ்ந்தன என்பது—"நளிய, நந்த வென்பன இக்கால த்தரிய போலும்;* அவை வந்த வழிக்கண்டு கொள்க" என உரைகாரர் கூறுதலான் அறியப்படுகின்றது.

குற்றுகர குற்றிகரங்களும் மகரமும் புள்ளி பெறுதல்.

தொல்காப்பியனார் "மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்" "குற்றிய லுகரமு மற்றென மொழிப" என்ற சூத்திரங்களால் (எழுத்ததிகாரம்-கoச-ரு)மெய்யீறுபோலக் குற்றியலுகரம்புள்ளிபெறுதலுங் கூறினார். இச்சூத்திரங்கட்கு உரையாசிரியரும் நச்சினார்க்கினியருங் கூறிய வேறுரையை, நன்னூல்விருத்திகாரர்—" அற்று ' என்னும் மாட்டேற்றிற்கு, மெய்யீறுபோலக் குற்றியலுகரவீறும் புள்ளியொடு நிற்குமெனக் கொள்ளாது, இம்மூன்றுஞ்சூத்திரத்தைப் 'புள்ளியீற்றுமுன்' என்னும் ௩௬-ம் சூத்திரத்தோடு மாட்டெறிந்ததாக— கொண்டார்...... அவ்வாறு கூறுதல் மாட்டேற்றிலக்கணமன்றும்" எனக்கூறி மறுத்தனர். இதனால், குற்றியலுகரம்மெய்போலப் புள்ளி பெறுதலைகூறுவதே அவ்விருத்திகாரர் கருத்தென்பது விளங்கும். இக்கொள்கையே யாப்பருங்கலவிருத்தியுடையாருங் கொண்டதென் பது,* அவர், "குற்றியலுகரமுங் குற்றியலிகரமும் புள்ளிபெற்றுநிற்கும்; என்னை? 'குற்றிய லுகரங் குற்றியலிகரம்-மற்றவைதாமே புள்ளிபெ றுமே' என்பது சங்கயாப்பு" என்றெழுதலான் உணர்க. இவர் கூற்றில், குற்றியலுகரத்தோடு, குற்றியலிகரமும் புள்ளிபெறுமாறு கூறப்படுதல் அறியத்தக்கது. ஆசிரியர் தொல்காப்பியனார் காலத் தும், அக்குற்றிகரம் புள்ளிபெற்றே வழங்கியதென்பது, பேராசிரி

யர் " ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்" என்னுஞ் செய்யுளியற் சூத்திரவுரையில்—"எனவே எழுத்தோத்தினுள் 'மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்' எனக் கூறிக், 'குற்றிய லுகரமு மற்றென மொழிப' எனக் குற்றியலுகரத்துக்குப் புள்ளிபெறுதலுங் கூறினர்: அதுபோல, குற்றியலிகரமும் புள்ளிபெற்றுநிற்றல் உடைத்தென்ற வாறுயிற்று............இவற்றையெல்லாம் 'ஒற்றெழுத்தியற்றே' என்றதனால் புள்ளியிட்டேயெழுதுக" என்று கூறுதலால், தெள்ளிதின் உணரப்படும். இவற்றால், நாகு̊கிது, நாகி̊யது என்னுங் குற்றுகர குற்றிகரங்கட்கு, மெய்யெழுத்துப்போல—ககர கிகரங்கட்கு மேலே —புள்ளியிட்டெழுதல் தொல்காப்பியர் காலத்து வழக்காதல் தேறப் படும். இவ்வாறே, மகரமும் ப̊ எனப் புள்ளிபெறுமென்பது, "உட் பெறு புள்ளி யுருவா கும்மே" என்னும் எழுத்ததிகாரச் சூத்திரத் தால் நன்கறியப்பட்டதாம்.

நாற்சீரடிப் பாக்களே முற்காலத்து வழங்கினமை.

ஆசிரியர் தொல்காப்பியனர்—"யாத்த சீரே யடியாப் பெறுஅ" என நிறுத்தமுறையானே அடியுணர்த்தப்புகுந்து—அடியென்று சொல்லப்படுவது, நாற்சீரடியே என்னும் பொருள்பட—"நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே" எனக்கூறிப், பின்னர், இந்நாற்சீர்கொண்ட அடி இரண்டும் பலவுமடுத்துவந்த தொடையாற் பாட்டென்பது தோன்றும் என்பார் —"அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே" என்றார். இவ்வாறு, நாற்சீர்கொண்டதே அடியென்றும், அவ்வடியானே பாட்டுத்தோன் றுமென்றும் கூறப்படுதலால், தொல்காப்பியனர்காலத்து நாற்சீரடிப் பாடல்களே பெரிதும் பயின்றுவந்தமை புலப்படும். பேராசிரியரும், அச்சூத்திரவுரையில், "தலையிடைகடைச் சங்கத்தாரும் பிறசான்றோ ரும், நாற்சீரடியான் வரும் ஆசிரியமும் வெண்பாவும் கலியுமே பெரும் பான்மையுஞ் செய்தார்: வஞ்சிப்பா சிறுபான்மைவிற்றெனக் கோள்க" என்று எழுதிச்செல்லுதல் இங்கு அறியத்தக்கது.

பாவின முதலிய உறுப்புக்கள்அக் காலத்து வழங் காமை.

ஆசிரியர் தொல்காப்பியனர், பாநான்கென்று அவற்றினிலக் கணமெல்லாம் விரித்து, அவற்றின் சேர்க்கையாற் றோன்றுவது மருட்பாவென்றுங் குறித்துப் பின், "அவ்விய லல்லது பட்டாங்குக் கிளவார்" என அப் பாக்கட்கு ஒருவரையறையுங் கூறினர். அஃதாவது— "மேற்கூறிய

நான்கு பாவிலக்கணத்தானல்லது பாட்டின்கண் வேறுபாக் கூறப்படாது'' என்பதாம். இதனால், பாவின முதலிய செய்யுளுறுப்புக்கள் தொல்காப்பியர்காலத்து வழங்காமை புலப்படும். இதனைக் குறித்துப் பேராசிரியர் அச்சூத்திரவுரையில் எழுதுவன வருமாறு:—"இதுகூறிப் பயந்ததென்னையெனின், மேற்கூறிய பாக்களாற் பெயர்கூறாத செய்யுட்களும் அவைபாவாக வரினல்லது வேறுதமக்குப் பாவிலவென்பதூஉம், 'மருட்பா வேனை யிருசா ரல்லது, தானிது வென்னுந் தனிநிலை யின்று' எனவே, அவ்விரண்டன் கூட்டத்தின் கண்ணும் வேறோர் பாப் பிறக்குமெனக்கொள்ளினுங் கொள்ளற்கவெனவும், பிற்காலத்து நூல்செய்யும் ஆசிரியர் பிறவகையாற் பாவுறுப்பினை மயக்கப்பட வேண்டுவாருளராயின் அவரை விலக்கியுங் கூறினவாறு. அல்லதூஉம், பண்ணுந்திறனும் பகுத்தானைக்கண்டு இவற்றையும் பாவுமினமுமாகப் பகுத்தான்கொல் என்று ஐயுறுமை விலக்கி, இயனூலுள் அவ்வாறு கூறிற்றிலன் எனச் சொல்லினானென்பது''—எனக் கண்டுகொள்க.

ஆசிரியர் நால்வகைப் பாவின் ஆதிவரலாற்றினை—"பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின், ஆசிரி யப்பா வெண்பா வென்றாங், காயிரு பாவினு ளடங்குமென்ப" "ஆசிரிய நடைத்தே வஞ்சி யேனை, வெண்பா நடைத்தே கலியென மொழிப"—என்ற சூத்திரங்களாற் குறிப்பிடுவாராயினர். மேற்கூறிய "பாவினதுவிரிநான்குந் தொகுங்கால் இரண்டாகித் தொகுமென்பதூஉம், அங்ஙனம் இரண்டாமிடத்தும் யாதானும் ஒன்றடக்கி இரண்டாகா: முதற்பா என்று நாட்டப்படுவன இவையெனவும், அவைமுதலாகத் தோன்றி ஆண்டடங்குவன இவையெனவும் உணர்த்துகின்றது'' எனப் பேராசிரியர் இச்சூத்திரங்கட்கு அவதாரிகைகூறி,—"மேற்பாக்கள் விரிந்த தன்மையை நோக்கித் தொகுப்பின், ஆசிரியமும் வெண்பாவுமேயாம்; அவற்றுள் ஆசிரியத்து விகற்பமாகித் தூங்கலோசை விரிந்தடங்கும்; வெண்பாவின் விகற்பமாகிக் கலிப்பா விரிந்தடங்கும்; அங்ஙனம்அடங்கி இரண்டாகும் பாவின்வகை"—எனப்பொருளுங்கூறினர்.

*ஆசிரியமும் வெண்பாவுமே ஆதி பாக்களென்பது.*

இவற்றால், தமிழ்மொழியில், ஆதியிற்றோன்றிய பாக்கள் ஆசிரியமும் வெண்பாவுமேயாமெனவும், அவற்றினின்றே ஏனைவஞ்சியும் கலியும் கிளைத்தன எனவும் தொல்காப்பியர் கருதினாராதல் உய்த்துணரப்படும்.

இயைபு என்னுஞ் செய்யுளுறுப்பில், னகரவீறொழிய ஒழிந்த வீறுகளுடைய நூல்கள் வீழ்ந்தமை.

தொல்காப்பியனார், செய்யுளுறுப்புக்களாகக் கூறிய "அம்மை யழகு தொன்மை தோலே, விருந்தே யியைபே புலனே யிழைபு" என்பவற்றில், இயைபென்னும் உறுப்புக்கு இலக்கணமுணர்த்துமிடத்து,—

"ஞகாரை முதலா னகாரை யீற்றுப்
புள்ளி யிறுதி யியைபெனப் படுமே."

என்றார். இதன்பொருள்—"ஞணநமனயரலவழள என்னும் பதினொருபுள்ளியீற்றினுள் ஒன்றனையிறுதியாகச் செய்யுஞ் செய்யுள், பொருட்டொடராகவுஞ் சொற்றொடராகவுஞ் செய்வது இயைபு எனப்படும்—என்பதாம். பேராசிரியர் இவற்றுக்கு உதாரணங்காட்டுமிடத்து—"சீத்தலைச்சாத்தனாற் செய்யப்பட்ட மணிமேகலையும் கொங்குவேளிராற் செய்யப்பட்ட தொடர்நிலைச் செய்யுளும் போல்வன; அவை னகாரவீற்றான் இற்றன. மற்றவீற்றான் வருவனவற்றுக்கும் ஈண்டிலக்கண முண்மையின் இலக்கியம் பெற்றவழிக் கொள்க: இப்பொழுது அவை வீழ்ந்தனபோலும்" எனக்கூறினார். இதனால், னகாரவீற்றான் முடிந்த நூல்களொழிய, ஏனை ஞ ண ந ம ய ர ல வ ழ ள வீறுகளான் முடிந்த இயைபுநூல்களுந் தொல்காப்பியர் காலத்துவழங்கிப் பின்னிறந்தமை தெரிகின்றது.

பண்ணத்தி அடியிகந்து வருவது வீழ்ந்தவழக்காதல்.

தொல்காப்பியர், "பாட்டிடைக்கலந்த பொருளவாகிப்—பாட்டினியலபண்ணத்தியென்ப" என்றசூத்திரத்திற் "பழம் பாட்டினூடு கலந்தபொருளே தனக்குப்பொருளாகப் பாட்டுமுறையும்போலச் செய்யப்படுவன பண்ணத்தி"—எனப் பண்ணத்திக்கிலக்கணம் கூறினார். "இவை நாடகச்செய்யுளாகியபாட்டும் அவையும் வஞ்சிப்பாட்டும் மோதிரப் பாட்டும் கடகண்டு முதலாயின" என்பர் பேராசிரியர். இதன் அடிப் பெருக்கம் பன்னிரண்டெனக் குறித்து, "அடியிகந்து வரினுங் கடிவரை யின்றே" என்பதனால், அது பரந்துபட்டுவரவும் பெறுமென்று ஆசிரியர் கூறினார். இங்ஙனம் அடியிகந்துவரும் பண்ணத்திக் கிலக்கியம்—"முற்காலத்துள்ளார் காணுமையிற் காட்டாமாயினும்: இக்காத்துள்ளனவேற் கண்டு கொள்க. இலக்கணமுண்மையின் இலக்கியங்காணுமாயினும் அமையுமென்பது" என்றுகூறி உதாரணங்காட்டாது சென்றார் பேராசிரியர்.

(இன்னும் வரும்.)

பத்திராசிரியர்.

# நமது பூர்வகாலக் கப்பற்றொழில்.

(௮-ம் தொகுதி: ௩௪௮-ம் பக்கத்தொடர்ச்சி.)

## கி. பி. 4-5-வது நூற்றாண்டுகளில் சீனயாத்திரிகர்கள்.

மேலே கூறிய சாக்ஷியங்களைத் தவிர்த்து சீனாவினின்றும் யாத்திரிகர்கள் புறப்பட்டு இந்தியாவந்து தமது புத்தமதத்துக்கு வேண்டியவைகளைச் சேகரித்துச் சென்றோர் பலர். அவருள் முதன் முதலாக வந்தவர் பாஹியான் (FA-HIEN); இவர் தன்னாடு விட்டு 399-ல் புறப்பட்டு புத்தசித்தியாநுஷ்டானங்கள் சம்பாதிப்பதற்காக மத்திய ஆசியாவில் ஆறுவருடகாலம் செலவழித்துவிட்டு, இந்தியா வந்து ஆறு வருடம் தங்கியிருந்து கடைசியாக இப்பொழுது வங்காளத்தில் தாமுலுக் என்று வழங்கும் தாமரிலிப்பட்டியிற் சென்று இந்தியரது கப்பலேறி பதினான்குநாள் இரவுபகலாயோடி இலங்காத்வீபஞ் சென்றதாக அவரே எழுதியிருக்கிறார். இன்னும் அங்கு ஸ்ரீ புத்த தேவருக்கு ஒருவர்த்தகன் சீனத்திற்செய்யப்பட்ட வெண்பட்டு விசிறி யொன்று சாத்தியதைக்கண்ட அவருக்குக் கண்களில் நீர்ததும்பியதாகச் சொல்லுகிறார். இரண்டுவருடந்தங்கி வேண்டிய கிரந்தங்களைச் சம்பாதித்துக்கொண்டு ஒரு பெரிய இந்திய மரக்கலத்தில் ஏறிச் சென்றார். தொண்ணூறு நாட்கள் மழை காற்றுக்கு அவஸ்தைப்பட்டு சாவாத்தீவில் இந்தியர் குடியேறிய இடமிறங்கினோமென்கிறார். அங்கே ஐந்து மாதகாலம் தங்கி, மறுபடி கப்பலேறி வெகு கஷ்டங்களனுபவித்து, எண்பத்திரண்டு தினங்கள் கழித்து சீனராச்சியத்தில் கியாசோ குடாவில் பழயபட்டினமான த்ஸிமோவிற்கு மேற்கிற் போய் இறங்கினேனென்று தன்குரு குமாரஜீவர் ஆணையின்படி எழுதிய தனது யாத்திரையில் கூறுகின்றார்.

இந்த வியாபாரங்களில் சில பிராமணர்களும் தலையிட்டிருந்ததாகத் தெரிகிறது. பதினேழு வருஷம் சீனசக்கரவர்த்தியான

குபலேகான் சமஸ்தானத்திலிருந்த ஸேர் மார்க்கோ போலோ என்னும் வெனிஷியன் பதின்மூன்றும் நூற்றாண்டினிறுதியில் இந்தியாவைச் சுற்றிப்பார்த்தபோது குஜராத்து வடகொங்கணத்திலுள்ளவர்களைப்பற்றி "இந்தியா பிராமணர்கள் உலகத்தில் வியாபாரிகளிற் பேர்போனவர்கள்; பொய் யென்பது அணுவளவுகூடச் சொல்லார்கள்; வியாபார வழியறியாத அன்னியர் யாராவது சரக்குகளைத் தம்மிடம் ஒப்புவிப்பாராயின் அவற்றைத் தகுந்த ஊதியத்திற்கு விற்று உடையவரிடம் ஒப்பிக்கும் குண முடையோர்" என்றெழுதுகிறார்.

## சீனயாத்திரிகர்கள் கி. பி. 500-1000.

முன்னே பாஹியான் வந்ததைப்பற்றியும், அதனால் கி. பி. 500-ல் இருந்த மரக்கலத்தொழிலையும் எடுத்துக்காட்டினோம். ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்கே அறுபது புத்தசிரமணர்களுக்கு மேல் வந்ததாகத் தெரிகிறது. கி. பி. 673-ல் வந்த ஐத்ஸிங் (I-TSING) தாமெழுதிய மஹாடாங் வமிசகாலத்தில் புத்த விதிகளைத்தேடிய பெரியோர்களது சரித்திரமென்னும் (TA-TANG-SI-YU-KU-FA-KAO-SENG-CHUAN) கிரந்தத்தில் சொல்லுகிறார். இதை யொழிய சுமத்ராதீவிலுள்ள ஸ்ரீ போஜநகரத்திலிருந்து "NAN-HAI-CHI-KUEI-NAI-FA-CHUAN" என்னும் "புத்த மதம் இந்து மகா சமுத்திரத்திலிருந்து வந்தபடி" என்ற விருத்தாந்தமொன்று எழுதியிருக்கின்றார்.* இவைகளுடனும் 629-645 வரையில் இந்தியாவிற் பிரயாணம் செய்த பெரியோராகிய ஹியூவான்-த்ஸாங் (HIUE-N-THSING) கின் யாத்திரைகள், சரித்திர முதலியவற்றினாலும் இந்தியா வேறுவிதமாகத் தோற்றுகிறது. முன்னே கூறப்பட்ட வங்காளக்கடற்றுறைப்பட்டினமான தாமரலிப்திக்கும் லங்கைக்கும், லங்கைக்கும் சீனாவுக்கும் பெரும் கப்பல்கள் (OCEAN-LINERS) சென்றன. இவைகளின் பொருட்டு கடற்கரையோரமாக அநேக நாடுகள் செழிப்புற்று வர, அவைகளில் கப்பல்கள் தங்கி வேண்டிய சாமக்கிரியைகளைக்கொண்டு சென்றன.

---

*இந்த விருத்தாந்தம் சரித்திரமென்றும் தஸ்தாவேஜுகளெனவும் இரண்டு வகுப்பாகும். முன்னது ஆங்கிலத்திற்கிடையாது பிராஞ்சிய பாஷையிலுண்டு. பிந்தியது மிஸ்டர் தக்ககாசு என்பவரால் ஆங்கில பாஷையில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது.

இதற்கு இரண்டரை நூற்றாண்டுகளுக்கு முன் யாத்திரை செய்த பாஹியான் பயப்பட்டதுபோல் பயப்படவேண்டியதாயிராமல், பிராமணர்கள் மிகுந்திருந்த விடமெல்லாம் புத்தமதம் பரவியிருந்தது. இதுவன்றி ஐத்ஸாங்,சீனதேசத்தினின்று இந்தியாவைச் சுற்றிப்பார்க்கப்போகிறவர்களுக்கு சம்ஸ்கிருதபாஷை பயிலும்படியாகவும் ஸ்ரீ போஜநகரம் போன்ற விடங்களில் புத்தமத ஒழுக்கங்களைப் பயிலவும் புத்திமதிகூறுகிறார். இதைத்தவிர்த்து அவரது கிரந்தத்தில் ஜாவாவிலுள்ள கலிங்க (KALINGA) மும் போர்னியோவிலுள்ள, மகாஸின்மும் சுமத்ராவிலுள்ள கச்சாவும், பலி,போஜபுரம் மஹமான் நடுநா வென்ற நாடுகளும் எழுதப்பட்டுள்ளன. இவையன்றி இந்தியாவை யொட்டிய கண்டத்தில், பர்மாவிலுள்ள புரோம் என்பதாக சமூசயப்படுவது ஸ்ரீ க்ஷேத்திரமும், பெகு வென்றழைக்கப்படுவது லங்கசு அல்லது கமலங்கா வென்றும், சியதேசத்தில் துவாரவதி அல்லது அயுத்தியா வென்றும், கொச்சின் சீனத்தை சம்பர வென்றும் சொல்லி வந்தனர் (Records by TAKAKASUP 10—xxxix—Liii 9—12, and memoirs by CHAVANNESp 36, 42, 27, 159, 181, 57 58, 203.) ஸ்ரீ க்ஷேத்திரம், கமலங்கா, துவாரவதி, ஈசானபுரம் முதலியவைகள் கீழ் வங்காள நாட்டிற்குக் கீழ்பாலிருப்பதாக தாமஸ் வாட்டர்ன் என்பவரெழுதிய ஒன்யுவால் சுவாங் என்னுங்கிரந்தத்திலும் காணப்படுகிறது. இதைத்தவிர்த்து இந்தியர்கள் கொரியாவரையிற் சென்றிருந்ததாயும் குக்குடேசுவரம் என அதற்கு பெயரிட்டிருந்ததாயும் தெரிகிறது. அதுவன்றி அங்கிருந்து இரண்டு சிரமணர்கள் வந்து புலுஹியில் இறந்ததாகவும் தெரிகிறது.

முற்கூறிய அறுபது பெயர்களில், ஐத்ஸிங்கைப்போல் நேரே வங்காளத்திற்கு வந்தவர்களுமுண்டு. வூஹிங் (WU-HING) கைப்போல் இலங்காத் தீபம் சென்று வந்தவர்களுமுண்டு. பீ சேங்கோவைப் போல் தங்குமிடங்களில் மரித்தவர்களுமுண்டு. பீ செங் மின்னைப் போல் கப்பல் கவிழ்ந்திறந்தவர்களுமுண்டு. இவர் ஏறியிருந்த கப்பல் சுமத்ரா தீவிலுள்ள மொலயூவை விட்டதும் கப்பலுடைந்து அரைநாட்போழ்தில் முழுகிவிட்டது. கப்பற்றலைவன் இந்த குருவை உயிர்ப்படகில் ஏறிக்கொள்ளும்படி என்ன சொல்லியும் வந்ததுவரட்டுமென உயிர் துறந்தார். (ஷவானுடைய மெமொர்ஸ். p 52).

இதற்குப்பிறகு 700 முதல் கி. பி. 1000 வரையில் அநேகர் வந்துபோனதாகத் தெரிகிறது. கி. பி. 966 ல் டாவூவன் (TAW-YUEN) சந்நியாசி வந்து 12 வருடம் யாத்திரை செய்து திரும்பிய போது 157 சந்நியாசிகள் சீனசக்கிரவர்த்தி உத்தரவு பெற்று இந்தியக் கப்பல்களில் பிரயாணம் செய்து இந்தியாவைச்சுற்றிப் பார்த்ததாகத் தெரிகிறது. இதற்குப்பிறகு புத்தமதம் இந்தியாவில் அவ்வளவு உயர்ச்சியில்லாததைக்கொண்டு, வந்ததாகத் தெரியவில்லை. ஆயினும் 1342-ல் டில்லியிலாண்ட மகமது டோக்லாக் காலத்தில் சீனசக்கிரவர்த்தி தூது ஒன்றனுப்பி இமயமலைச் சாரலில் இடிந்துபோன ஒரு புத்த ஆலயத்தைப் பழுது பார்க்க உத்திரவு கேட்டிருக்கிறார். (Travels of I b u-BHTUTA p 155).

## இந்திய சாஸ்திரிகள் சீனு சென்றது.

இதுவரையில் சீன யாத்திரிகர்கள் இந்தியாவுக்கு வந்தது இந்தியக்கப்பல்களில் என்பதைப்பற்றிப்பேசி வந்தோம். இனி சீனுவிற்கு இந்தியாவினின்றும் சென்ற சாஸ்திரிகளைப்பற்றி வெளியிடுவோம். கி. பி. ஆறும் நூற்றாண்டில் அதாவது 526—ல், புத்தாவதாரத்திற்குப்பிறகு, அந்தப்பட்டத்திற்கு வந்தது · போதிதர்ம னென்பவர். புத்த கிரந்தங்களில் கியாதி பெற்ற ஜர்மனியபண்டிதரான ஹாக்மான் என்பவர் “ புத்தமதம் ஒருமதமாக—அதன் சரித்திரமேம்பாடும் அதன் தற்கால ஸ்திதியும்” என்றெழுதி இவ்வருஷ முதலில் வெளியிட்டிருக்கும் புத்தகத்தில் “526-ல் போதி தர்மரென்னும் புத்த பட்டத்தில் வந்த இருபத்தெட்டாம் பட்டத்துக்குடையவர்......... தம்நாடு விட்டுச் சீனதேசம் சென்றார் எனக் காணப்படுகிறது. டாக்டர் எட்கின்ஸ் என்பவர் எழுதிய ‘சீனரது புத்தமதம்’ என்னும் புத்தகத்தில் “ தென் இந்தியாவிலுள்ள ஓர் இராஜகுடும்பத்திற் பிறந்தவரும், பதினேழாம் பட்டத்திலிருந்த பிரக்ஞதாரரின் சிஷ்யருமான போதிதர்மரெனவும், 526-ல் போதிதர்மர் தம் வாழ்நாளில் பெரும்பாகத்தை தக்ஷிணத்தில் செலவழித்துவிட்டு சமுத்திரமார்க்கமாய் காண்டன் செல்ல, அவருடைய வயதுக்குத் தகுந்தபடியாக சீனசக்கிரவர்த்தியால் நான்கிங் பட்டணத்தில் வரவேற்கப்பட்டார்”

எனவும் வாசிக்கிரேம். அதே மாதிரியாக 1896-ம் வருஷத்து ராயல் ஏஷியாட்டிக் ஸொஸைசயிட்டியின் ஜர்னலிலும், போதி தர்மர் கடல் மார்க்கமாய் வந்ததாக சீயாடான் என்னும் பூகோளவிற்பன்னர் சொல்லுவதாகக் காணப்படுகிறது. இந்த சீயாடான் என்பவரைப்பற்றி "730-805-ல் வசித்த பேர்போன டாங் வம்ஸஸ்தர். அவர் பூகோள சாஸ்திரத்தில் பேர்போனவர். அந்நியரைப் பற்றி பூர்ண பாண்டித்திய முடையவர்; அவரெழுதியிருக்கும் அநேக படங்களிலொன்று "சமுத்திர யாத்திரையில் சீனரும் அந்நியரும்" என்பதைப்பற்றி எழுதப்பட்டது; என்று ராயல் ஏஷியாடிக் ஸொஸைட்டியின் ஜர்னலில் எழுதுகிறுர். அப்படிப் பெருமை வாய்ந்த சீயாடான் (CHIA TAIX) "அன்னுமிலிருந்து இந்தியாவிற்குச்செல்ல கரைவழி ஒன்றிருக்கிறது. ஆயினும் போதிதர்மர் கான்டனுக்கு கப்பல் மார்க்கமாக வாந்தார். இதைக்கொண்டு நாம் கடல்வழி சீக்கிரமென கேட்கக் கூடுமென்ரே?" என எழுதியிருக்கின்றுர். இந்தப் போதிதர்மராலேயே சீன முன்னேற்றத்துக்கு வெகுவாகக் காரணமுண்டு என அநேக மேனுட்டார் நினைக்கின்றனர்.

இன்னும் போதி தர்மர் சென்ற காலத்திலேயே சீனதேசத்தில் மூவாயிர இந்திய சந்நியாசிகளும், பதினுயிரம் இந்தியக்குடிகளும் இருந்ததாக ஏற்படுகிறது. டாக்டர் எடியல் எழுதிய "புத்த மதம்" என்பதில் "புத்தமதம் அந்நியரால் ஏற்படுத்தப்பட்டதாயினும் அதனைப் பரப்ப மூவாயிரம் சந்நியாசிகளிருந்தனரென எழுதுகின்றுர். அதே மாதிரியாக "சீனருடைய புத்தமத'மென டாக்டர் எட்கின்ஸ் எழுதியதிலும் "ஆரும் நூற்ருண்டின்ருெடக்கத்தில் தற்காலம் ஹோனன் பூ (HONAN-FU) என்னும் லோயாங்கில் 3000 இந்தியரிருந்தனர். (WEI) வே இராச்சியத்து அரசர்கள் அவர்களைக் காப்பாற்றவேண்டிய முயற்சிகள் செய்துவந்ததோடு ரமணீயமான இடங்களில் மடங்கள் கட்டி வந்தார்'' என்று எழுதுகிறுர். இன்னும் மிஸ்டர் ககசு ஒகாகுரா (KAKASU-OKAKURA) எழுதிய "கீழ்நாட்டாரின் இலக்ஷியங்க''ளென்பதில் "இவ்விதமாக ஒரு காலத்தில் லோயாங் என்ற விடத்தில் அவர்களுடைய மதத்தின் பெருமையை சீனதேசத்திற் காட்ட மூவாயிர சந்நியாசிகளும், பதினுயிரங் குடிக

ளுமிருந்தனர்' என்றெழுதுகிறார். இவர்களைத் தவிர்த்துப் பிற்காலத்திலும் அநேகர் சென்றதாகத் தெரிகிறது. ஆனால் புத்தமதம் சிதைந்தும், முகமதியர் இந்தியாவில் அடியெடுத்து வைக்கவும், அதற்குப் பிறகு போக்குவரவு குறைந்ததாக ஏற்படுகிறது.

இவைகளைக் கொண்டு சீனாவுக்கும் இந்தியாவுக்கும் போக்குவரவு கரைவழி அதிக தூரமெனவும் கடல்வழி அதிக சுலபமானதென்பதும் நிதர்சனமாவதுடன் போக்குவரத்தும் அதிகமாயிருந்ததெனக் காட்டப் போதிய ஆதாரங்களுமிருக்கின்றன.

## இந்தியகுருமாரின் யாத்திரைகள் 500-1000 A. D.

இதுகாறும் சீனாவினின்றும் வந்த யாத்திரிகர்களைப்பற்றிச் சொல்லப்பட்டது. அதே மாதிரி இங்கிருந்து சென்றோரநேகர். 526-ல் தக்ஷிண இந்திய அரசர்களின் புதல்வரான ஒருவர் புத்த பீடத்தில் 27-வது பட்டமாண்ட பிரக்ஞுதாரரின் சிஷ்யரும் 28-வது பட்டதாரியுமான போதிதர்மர் சீன சக்கிரவர்த்தியின் வேண்டுகோட்கிணங்கிச் சென்றார். "அக்காலத்தில் பேர்போன சீன பூகோள சாஸ்திரி தாமெழுதிய மேல் நாட்டிற்குச் சென்ற இராஜாங்க சீன தூதுகள்" என்னும் ஹூவாங் ஹூவா-ஹ்வஸி-தூ-சி என்னும் கிரந்தத்தில் "தியான்சூ (இந்தியா) செல்ல அன்னுப்வழியாக ஒரு கரைப்பாதை இருக்கிறது *; ஆயினும் டாமோ (TA-MO) போதிதர்மர் கப்பலில்வந்து பான்யூ (காண்டன்) வில் இறங்கினார். ஆகையால் கரைப் பாதையைவிட கடற்பாதை சௌகரியமன்றோ?" வெனவெழுதுகிறார். இந்த சியாதான் வெகு சமர்த்தரென்றும் அந்நியரைப்பற்றி அநேக நூல்களெழுதியிருக்கிறாரென்றும் தெரிகிறது. அந்தக்காலத்தில் லோயாங் என்ற பாகத்தில் மூவாயிரத்துக்குக் குறையாத இந்தியரும் பதினாயிரத்துக்குக் குறையாத இந்தியக் குடும்பங்களுமிருந்ததாக டாக்டர் எட்கின்ஸ் டாக்டர் எதியல், மிஸ்டர் ககாசு ஓகாகுரா முதலானவர்கள் எழுதுகின்றனர்.

ஒற்றன்.

---

* சீனாவினின்றும் அன்னும் தேசத்தின் வழியாகவரும் கரைவழி நேர்மேற்காக கம்போடியா வந்து சீயதேசம் சென்று பர்மா நாட்டின் வழியாக வடக்கே போய் வங்காளம் சேருவது.

ஸ்ரீ

# பக்தி.

(அ-ம் தொகுதி: சுகo-ம் பக்கத்தொடர்ச்சி.)

அடியார்பத்தி புரிதலாவது:—மெய்யடியாரைக் காணுந்தோறும் அவர்களிடத்தில் ஜன்மநிரூபணம், சரீரநிரூபணம், பாகநிரூபணம், ஆச்ரமநிரூபணம், அவயவநிரூபணம், ஆலஸ்யநிரூபணம், வாசநிரூபணம், பந்துநிரூபணம், பிரகாசநிரூபணம், வர்த்தனநிரூபணம், பிரகாரநிரூபணம், தோஷநிரூபணம் ஆகிய துவாதச பாகவதாபசாரநிரூபணங்களைச் செய்யாமலிருத்தல் வேண்டும். இவற்றுள் (1) ஜன்மநிரூபணமாவது, ஈசுவரனுக்குத்தொண்டு பூண்ட அடியார்கள், சண்டாள சுபசாதியான கீழ்ஜாதியிற் பிறந்தவர்களென்றவமதித்தல். இங்ஙனம் அவமதிப்போரேல் தர்மவியாதர், துலாதரர், ஸ்ரீ குகப்பெருமாள், சபரியாரையும்; பஞ்சமகுலத்திலவதரித்த நம்பாடுவார், மாறனேர் நம்பி முதலான பரமபாகவதர்களையும் அவமதித்து மீளாநரகிற் காளாகவேண்டிவரும்.

2. சரீரநிரூபணமாவது:—மெய்யடியார்களுடைய திருமேனிகள் ஆணென்றும், பெண்ணென்றும், அலியென்றும், மிருகமென்றும், பட்சியென்றும், அசுர ராக்ஷசரூபமென்றும், விரூபமென்றும், நினைத்தல். இங்நினைவால், ஸ்ரீ ஆண்டாள், த்ரௌபதை, விபீஷணர், பிரஹ்லாதாழ்வார், அநந்த, கருட, கஜேந்திரன் முதலிய பரமபாகவதர்களிடத்தும் அபசாரப்பட்டவர்களாய் ஜனனமரண யாதனையை அடைவார்கள்.

3. பாகநிரூபணமாவது:—ஸ்ரீசர்வேசுவரனிடத்தில் அசஞ்சல பக்தியுள்ள தாசர்கள்—பால்ய, யௌவன, கௌமார, வார்த்திக, பர்வங்களுடையவர்களென்று நினைத்து வந்தனை வழிபாடுகள் செய்யாமல் அலக்ஷ்யபுத்தி செய்தல். இதனால் துருவர், பிரகலாதர் முதலிய அடியார்களிடத்தும் அங்நினைவுசெய்ததாய் அதோகதிக்காளாக வேண்டிவரும்.

4. ஆச்ரமநிரூபணமாவது:—அடியார்களைப் பிரமசாரிகளென்றும், கிரஹஸ்தாச்ரமிகளென்றும் வானப்பிரஸ்தரென்றும் சந்நியா

கிகளென்றும் அதிவர்ணாச்ரமிகளென்றும், ஓராசிரமமுமில்லாதவ ரென்றும் பேதபுத்திபண்ணுதல்.

5. அவயவநிரூபணமாவது:— சரீராவயவங்கள் விகாரரூபமா யிருப்பதாய் நினைத்துத் தள்ளுதல்; இதனால் பெரிய திருவடி (கருடன்) சிறிய திருவடி (அநுமான்) அநந்தாழ்வான், பெரிய உடையார் (ஜடாயு) இவர்களை பக்ஷி, குரங்கு, பாம்பு, சரீரிகளென்றெண்ணி அபசாரப்படுதலாகும்.

6. ஆலஸ்யநிரூபணமாவது:—எம்பிரான் தொண்டர்கள்—ரோகிகள், தரித்திரர்கள் என்று நினைத்தல். இதனை முரஹரி தாஸர் முதலியோர் மகாத்மியங்களை நினைவிற் கொள்வது.

7. வாசிநிரூபணமாவது:— அடியார்கள் அவதரித்த, வசித்த இடங்கள்—பறைச்சேரி பள்ளச்சேரி மிலேச்சரூர் முதலிய இழிவானவைகளாயினும் "நாதனை நரசிங்கனை நவின்றேத்துவார்களுழக்கியபாததூளிபடுதலாலிவ்வுலகம் பாக்கியஞ் செய்ததே" என்றபடி அத்தலங்களை திவ்யதேசங்களாக நினைந்துவணங்காமல் இகழ்தல். இதனை மிலேச்சதேசத்தில் ஞானதிக்கையாக வெழுந்தருளியிருந்த சாண்டிலியாரென்னும் அம்மையார் திருமாளிகைக்கெழுந்தருளிய பெரிய திருவடிநயினார் இவ்வம்மையார் இம்மிலேச்ச பூமியில் இருத்தல் தகாதெனவெண்ணி அபசாரப்பட்டுத் தன் சிறகிழந்து பின்பு அருளப் பெற்றமை அறியத்தக்கது.

8. பந்து நிரூபணமாவது:— மெய்யடியார்களைத் தங்கள் பிதா புத்ரர் பத்நினி மாதா பிராதா மாமன் மருகன் முதலான சுற்றத்தவர்களென்று பிராகிருத முறைபாராட்டி அவமதித்தல். இதனை, சிசுபாலன் கண்ணபிரானைத்தனது மாமன் மகனென வெண்ணி அவமதித்துப்பிராணனிழந்தமை முதலிய விருத்தாந்தங்களால் கவனிக்கத்தக்கது.

9. பிரகாச நிரூபணம்:—பிரகாசமான குலத்திற் பிறந்தவர்கள் தாம் வந்தனை வழிபாடுகளுக்குரியவர்களென்றும் அப்பிரகாசமான குலத்திற் பிறந்தவர்கள் ஆகார்களென்றும் பேத புத்தி பண்ணுதல்.

10. வர்த்தன நிரூபணம்:—பகவத் பாகவத சிலர்கள் தமது திருமேனி போஷணார்த்தமாகவாதல் ததியாராதனார்த்தமாகவாதல், வியவசாய உத்யோக வியாபார வர்த்தகாதிகளைச்செய்து வருவாராயின் அதைக்கண்டு அவர்களிடத்தபசாரப்படத்துணிவது. இதனை ஸ்ரீஉடையவர்காலத்தில் உடையவர் திருவடி சம்பந்திகளான அடியவர்கள் "ஊனமாயினகள் செய்யு மூனகாரர்களேனும், போனகஞ் செய்த சேடந்தருவரேற் புனிதமன்றே" என்றபடி பலிஜவாரென்கிற கௌரவ ஜாதியார்களுடன் கூடிக்கொண்டு வியாபாரஞ்செய்து வருகையில் கோயிலுக்கெழுந்தருளிய திருநாராயணபுரத்து ஸ்ரீவைஷ்ணவர்கள் அவர்களைக்கண்டு கேவலம் வியாபாரிகளென அவமதித்து அபசாரப்பட்டதை, ஸ்ரீ உடையவர் நியமனப்படி அவர்கள் ஸ்ரீபாத தீர்த்த த்ளிகைப்பிரசாதங்கள் கைக்கொண்டு மன்னிக்கப்பெற்ற சரிதத்தால் கவனிக்கத்தக்கது.

11. பிரகாரநிரூபணம்:—உலகில் "காம்பறுத்தலை சிறைத்துன் கடைத்தலையுகந்து வாழும், சோம்பரை யுகத்திபோலுஞ் சூழ்புனலரங்கத்தானே" என்றபடியை உணராமல் உள்ளபடியேயாகவேனும் டம்ப நிமித்தமாகவேனும் சில அடியார்கள் ஈசுவரனுக்குத் திருநந்தவனம் திருக்குளம் கோபுர மண்டப கைங்கர்யங்கள் முதலிய திருப்பணிகள் செய்து கொண்டிருப்பவர்கள்தாம் மெய்யடியார்களென்றும் அவைகளின்றிச் சும்மா கிடக்கின்றவர்களை வேஷதாரிகளென்று அவமதித்து வந்தனை வழிபாடுகளைச்செய்யாதிருத்தல். இவர்கள், எம்பெருமானுடைய அம்ச பூதங்களாய்க் கண்டகி நதியில் உண்டாகிற சாளக்கிராமங்களிடத்து உயர்வு தாழ்வு முதலிய புத்தி பண்ணினவர்களாவார்கள்.

12. தோஷ நிரூபணம்:—ஸ்ரீபாகவதர்களிடத்து "மாநிலத்துயிர்களெல்லாம், வெருவறக்கொன்று சுட்டிட்டீட்டியவினையரேனும், அருவினைப்பயனதுய்யார் அரங்கமாநகருளானே" என்றபடி கொலை களவு, கள், காமம் முதலிய தோஷங்களுண்டென்று நிரூபணஞ் செய்து அவர்களை அவமதித்து நிந்தனைகூறித்திரிவது. இது செய்யும் அறிவுகேடரைக் கோரமான நரகிற்காளாக்கி ஒருகாலத்திலும்

எம்பெருமானுடைய திருவருளுக்குப் பாத்திரமாகாமல் ஆத்ம நஷ்டத்தை உண்டாக்கிவிடும்.

அன்றியும்:—

"குலந்தாங்கு சாதிகள் நாலிலுங்கீழிழிந் தெத்தனை
நலந்தானிலாத சண்டாள சண்டாளர்களாகிலும்
வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணர்க் காளென்றுள்
கலந்தாரடியார் தம்மடியா ரெம்மடிகளே,, என்று நம்மாழ்வாரும்.

"திக்குற்ற கீர்த்தி இராமாநு சனையென் செய்வினையாம்
மெய்க்குற்ற நீக்கிவிளங்கிய மேகத்தை மேவுநல்லோர்
எக்குற்ற வாளரெது பிறப்பேதியல் வாகநின்றூர்
அக்குற்றமப் பிறப்பவ்வியல்வே நம்மையாட்கொள்ளுமே."

எனத்திருவரங்கத்தமுதனாரும்,

"பழுதிலா வொழுகலாற்றுப் பலசதுப் பேதிமார்கள்
இழிகுலத் தவர்களேனு மெம்மடியார்களாகில்
தொழுமினீர் கொடுமின் கொண்மின் என்றுநின்னேடுமொக்க
வழிபட வருளினுய்போன் மதிட்டிருவரங்கத் தானே".

"அமரவோரங்கமாறும் வேதமோர் நான்கு மோதித்
தமர்களிற்றலைவராய சாதியந்தணர்களேனும்
நுமர்களைப் பழிப்பராகில் நொடிப்ப தோரளவிலாங்கே
அவர்கள் தாம்புலையர்போலும் அரங்கமா நகருளானே.'

என்று தொண்டரடிப் பொடியாழ்வாரும்,

"சங்கநிதி பதுமநிதி இரண்டுந்தந்து தரணியொடு வானாளத்
தருவரேனும்
மங்குவாரவர் செல்வ மதிப்போமல்லேம் மாதேவர்க்
கேகாந்தரல்லராகில்
அங்கமெலாம் குறைந்தழுகு தொழு நோயராய்
ஆவுரித்துத்தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் யாம் வணங்குங் கடவுளாரே"

என்று அப்பரும்—இக்கருத்தோடொப்ப.

பாதியாயழுகியகால் கையரேனும் பழி தொழிலுமிழி
குலமும் படைத்தாரேனும்
ஆதியாயரவணையாய் என்பராகில் அவரன்றே
யாம் வணங்கும் அடிகளாவார்
சாதியால் ஒழுக்கத்தான் மிக்கோரேனும் சதுர்மறையால்
வேள்வியாற்றக் கோரேனும்
போதினுன் முகன்பணியப் பள்ளிகொள்வான்
பொன்னரங்கம் போற்ருதார் புலையர்தாமே.

எனப் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் முதலியோரும் திருவாய்மலர்ந் தருளியிருக்கின்றமையால் இங்ஙனங் கூறிய எவ்வித நிருபணங்களையும் அடியார்களிடத்துச்செய்யாமல் "மெய்யடியார்கள் தம்மீட்டங்கண்டிடக் கூடுமேலதுகாணுங்கண்பெற்றபயனே" என்றும், "எம்பெருமான்ருள் தொழுவார் எப்பொழுதும் என் மனத்தே இருக்கின்ருரே" என்றும் சொல்லுகிறபடி போரப்பிரீதியுடன் "வியன்மூவுலகு பெறினும்போய்த் தானே தானேயானாலும், புயல் மேகம்போற் றிருமேனி யம்மான் புனைபூங் கழலடிக்கீழ்ச், சயமேயடிமை தலை நின்ருர் திருத்தாள் வணங்கி இம்மையே, பயனே இன்பம் யான் பெற்றதுறுமோ" என்றும் "அவனடியார் சிறுமணிசரா யென்னையாண்டார்" என்றும், ஸ்ரீசடகோபர் அருளியபடி அடியார்களிடத்துள்ள மனிதபாவனையை நிவர்த்தித்து "தேவுமற்றறியாராய் அவர்களைக் கண்டவுடன், (1) பசுவைக்கண்ட கன்றைப்போலக்கரைந்தோடி முகத்தினும் அகத்தினும் விழியினும் மொழியினும் நைச்சியம் பெருகும்படி எதிர்கொள்ளுதலும், (2) அவர்களடித்தாமரைகளில் அடியற்றமரம்போல வீழ்ந்து தண்டன்சமர்ப்பித்தலும், (3) தங்கள் குடிசைக்கெழுந்தருளவேண்டுமென்றும், எழுந்து வந்து தங்கள் திருவடித் தாமரைகளாலலங்கரிக்க வேண்டுமென்றும், பிரார்த்தித்துவரச்செய்து உன்னதமும் பரிசுத்தமுமான ஆசனத்திருத்தி அவர்கள் நியமனத்தால் பயபக்தியுடன் சமீபத்தில் தானுமிருத்தலும், (4) அவரனுமதி பெற்று அவர்கள் திருவடிகளில் பரிசுத்த தீர்த்தங்கொண்டு விளக்கி "கங்கை நீர்குடைந்தாடும் வேட்கையென்னுவதே" என்றபடி ஸ்ரீபாததீர்த்த பிரசாதத்தை சுவீகரித்தலும், (5) அவர்கள் திருநாமங்களைப் பத்தியுடன் ஓதலும், (6) அவர்களுக்

கு வாசப் பூம்புகை ஊட்டலும், (7) விமலமான விளக்கம் ஏந்த லும், (8) அவர்கள் புகழைப்பாடலும், (9) பரிசுத்தமான சித்ரா ன்ன சகிதமான அலங்காரப்ரசாதத்தையும் அடைக்காயமுதையும் இயன்றவாறு அமுதுசெய்வித்தலும்; ஆகிய ததீயசேஷத்வாநவகுணங் களில் இயன்றவாறு ஒன்றுங் குறைவின்றி "அருள்கொண்டாடும் அடியவரின்புற" ச்செய்து ஆதரித்துப் பத்திபுரிதல்வேண்டும். இப் பத்தியொன்றினுனே இன்பநிலை கூடுமென்பது ஆன்றோர் கருத் தாம். இதனையே "அன்பர்பணிசெய்ய வெனையாளாக்கி விட்டு விட் டால், இன்பநிலைதானே வந்தெய்தும் பராபரமே" என்றார் தாயு மானவரும். இங்ஙனம் அடியார் பத்திபுரிதலே இறைவன் பத்தி யினும் விசேடமென்பதனை * திருமங்கை யாழ்வார் ஒருகால் திருந றையூர் முதலிய திவ்விய தேசங்களைச் சேவித்துக்கொண்டும் "திரு ச்சேறைக்கெழுந்தருளி சாரநாதனைத்தரிசித்துக் "கண்சோரவெங்கு ருதி வந்திழிய வெந்தழல்போற் கூந்தலாளை மண்சேரமுலையுண்ட மாமதலாய் வானவர்தங்கோவே" என்று பாட அவ்வளவிலே மாம தலைப்பிரான் தன்னுடைய திருவடிகளைக்கொண்டு இவர் திருமுடியி லே வைக்கவர இவரவற்றைப் புறங்கையாலேதட்டி, "நின்போது நின்ற பொன்னங்கழலோ வென்றலை மேலிருக்கக் கருதினே"னென்ன மாமதலைப்பிரான், மற்றெதுகாணென்ன; "உன்றாள் தொழுவார்கா ண்மினென்றலை மேலார்" என்றார்: அவனிதைக்கேட்டு உமக்கு நாம் அந்தர்யாமியாய் இருக்கிறோமே என்ன; "உன்றாள்தொழுவார் எப் பொழுதும் என்மனத்தே இருக்கின்றாரே" என்றார்; நாமுமக்கர்ச்சா வதாரமாய்ச் சுலபனாயிருக்கிறோமே; என்ன "கடன் மல்லைத்தல சய னத்துறை வாரைக்கொண்டாடு நெஞ்சுடையாரவரெங்கள் குலதெ ய்வமே" என்றார். ஆகிலவர்களெங்கே யுளர்காணென்ன; "போ தொடு புனல்தூவும் புண்ணியரே விண்ணவரிற் பொலிகின்றாரே" என்றார். ஆகில் "கண்களாரளவு" மென்கிறபடியே கண்ணுக்கிரை யிடுகைக்கும், அனுசந்தானமாக நெஞ்சுக்கிரை யிடுகைக்கும் நாமு மக்கு வேண்டுமே காணென்ன; "வண்சேறை யெம்பெருமானடி

---

*ஆறாயிரம் பன்னீராயிரப்படிக்குள்ள குருபரம் பராப்பிரபாவத்திலிரு ந்து எழுதியது.

யார் தம்மைக்-கண்டேனுக்கிதுகாணீ ரென்னெஞ்சுங் கண்ணிணையுங் களிக்குமாறே" என்றார். ஆகிலும் ஆழ்வீர்! உபாய உபேயங்களுக்காவது நாம் வேண்டாமோவென்ன; உபாயத்துக்கு முற்பாடராகையாலும், உபேயத்துக்கு எல்லை நிலமாகையாலும், இங்குள்ள நாளைக்கு உசாத்துணையாகையாலும் "பேராளன் பேரோதும் பெரியோரை யொருக்காலும் பிரிகிலேனே" என்றார். இதென் கொண்டு சொல்லுகிறீரென்ன; ஒருவனைக் கவிபாடுமவன் ஊரும் பேருங்குடியும் உகந்தாரும்வரக் கவிபாடுமாபோலே சொன்னேனித்தனை யென்றும்; "அடியார்க்கென்னை ஆட்படுத்தாய்" என்கிறபடியே ததீயவிஷயத்தையே உத்தேசித்துச் சொன்னேனென்றும் சாதித்தார். அதன்மேலும், மாமதலைப்பிரான் ஆழ்வீர்! நம்மை இப்படிப்பிரித்துச் சொல்லலாமோ வென்ன; பர்த்தாவினுடைய தேகத்தை விரும்பும் பதிவ்ருதைக்கு அதிற் குற்றந்தோற்றினலன்றே தேவரீருடைய திவ்விய மங்கள விக்ரஹத்தை விரும்புமடியேனுக்கு மதில் குற்றமுண்டாமென்றார். இப்படி இவர் ததீயவிஷயத்தில் தமக்குண்டான ஊற்றத்தைச் சொல்லிக்களித்து"க் காட்டினமை கண்டு தெளிக.

அன்றியும், உலகில் ஒருவரிடத்து அன்புவைத்தால் அவரைச் சார்ந்த பந்து மித்திரர்களிடத்தும் அன்புவைத்தல் வழக்காதல் போல; ஈசுவரனிடத்து மெய்யன்புடையவராயிருந்தால், அவனருளைப்பெற்ற ஆசிரியனிடத்தும், அடியாரிடத்தும், அன்புடையாராகவே இருப்பர். அங்ஙனம் குருவினிடத்தும் அடியாரிடத்தும், அன்பில்லாமல், ஈசுவரனிடத்து அன்புடையே மெனக் கூறினும் கருதினும், அத்தகையோர் அன்புடையவருமல்லர், அன்புடையவராக எண்ணப்படுபவருமல்லர்; அம்மட்டோ! அவர், தமக்கும் அன்பில்லாதவரே யாவர். என்னை? மேற்கூறியவாறு, அன்பின்மையினுல் உண்மைப் பொருளினையுணர்ந்து, உறைத்துநில்லாது, பிறந்திறந்துழலும் பெருந்துன்பத்தைத் தமக்குத்தாமே வருவித்துக்கொள்ளுதலாலென்க. இதனை "ஈசனுக்கன்பில்லார் அடியவர்க்கன்பில்லார் எவ்வுயிர்க்கு மன்பில்லார்தமக்கு மன்பில்லார்-பேசுவதென்னறிவில்லாப் பிணங்களைநாமிணங்கிற் பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்

கிடுவர் விடு நீ-ஆசையொடு மரனடியாரடியாரை யடைந்திட்டவர்கரு மம் உன்கருமமாகச்செய்து, கூசிமொழிந்தருண்ஞானக் குறியினின் று கும்பிட்டுத்தட்டமிட்டுக் கூத்தாடித்திரியே" என்னும், சித்தியார் பாசுரத்தானினிதுதெளிக. திருக்குறளில் "அன்பிலா ரெல்லாந் தமக்குரியர்" என்று கூறியிருக்கவும்,ஈண்டு, அன்பிலாரெல்லாந் தமக் கன்பிலார் எனக்கூறியது முரணுகாதோவெனின் ஆகாது. என்னை? குறளில் தம் என்னும் சொல்லுக்குத்தேகமும், சித்தியாரில் தம் என்னும் சொல்லுக்கு ஜீவான்மாவுமாகப் பொருள் கொள்ளுதலா னென்க.

இவ்வாறு பத்தியினைத் தீவிரபசியுடையானொருவன் உணவு நா ட்டமேயன்றிப் பிறிதொன்றையும் நாடாமை போலவும், சிகையில் நெருப்புப்பற்றப் பெற்றானொருவன், தண்ணீர் நாட்டமே யன்றி பிறிதொன்றையும் நாடாமைபோலவும், பேரின்பம் ஒன்றையே பெ றவெண்ணிய ஒருவன், பிரபஞ்சப்பற்றுகளாகிய "தந்தை தாய்மக்க ளே சுற்றமென்றுற்றவர் பற்றிநின்ற பந்தமார் வாழ்க்கையை நொ ந்து" அவற்றிற்பற்றுவையாது, தான் நாடிய அந்தமில் பேரின்பம் ஒன்றையே கருதி அது கூடுதற்கான முறைமையில் அவாமிக்கூர்ந் திருத்தலுக்குக் காதல் என்றும் பெயராம். இதனையே "காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி" என்றார் என் அப்பரும்.

இங்ஙனம் பத்திபுரிந்து வணங்குவதே கல்வியின் பயனுமென் னுங் கருத்துடன் "கற்றதனாலாயபயனென்கொல்வாலறிவ னற்று டொழாஅரெனின்" என நாயனார் திருக்குறளில் திருவாய்மலர்ந்து ள்ளாராதலின், பத்திக்குச் சாதனமாகிய கல்வியும் வேண்டப்படும். அக்கல்வி பல பாஷைகளாய்ப் பலநாடுகளிற் பரவியிருப்பினும் அந்நா டுகளுள்ளே, பத்திபுரிந்து இறைவனருளைப்பெறுவதற்குக் "கன்றெ றிந்த தோளான் கனைகழலேகாண்பதற்கு, நன்றறிந்த நாவலஞ்சூழ் நாடு" என்று பொய்கையாழ்வார் தொடக்கமானோர் அருளியபடி, இந்நாவலஞ் சூழ்நாடே சிறப்புடைத்தாய் விளங்கும். இச்சிறப்புத் தானும், ஆழ்வாராசாரியர்களும் நாயன்மார்முதலிய பக்தகோடிக ளும் அவதரித்துப் பத்திபுரிந்து பாடப்பெற்றுச் சிறப்புடைத்தாய எண்ணிறந்த மூர்த்திதலம் தீர்த்தங்களுடைய தென்னாட்டுக்கு மிகவு முரியது. இத்தென்னாட்டிற்குரியதாய்ப் பண்டேநின்று நிலவிய

குன்றுப் பாஷை இதுவென்பது தோன்ற "என்று முளதென்றமிழ்" எனக் கம்பநாட்டாழ்வாரும் வற்புறுத்திக் கூறியபாஷை தமிழே. இத்திருந்தமிழ்தனைய அருந்தமிழின் உயர்வு கருதியன்றே, பரமகாருணிகர்களான நம் ஆழ்வார்களும் நாயன்மார்களும் எம்பெருமானைத் தமிழ்ப்பாக்களாற் பாடித்துதித்துப் பேறு பெற்றதுமன்றி நம்மனோர்களு முய்யும்படி அப்பாசுரமுகங்களானே ஞானோபதேசம் செய்ததூஉமென்க.

இத்தகைய புத்தமுதனைய இத்தமிழின் அருமை பெருமைகளைப்பற்றிக் கல்விகேள்வி வல்லபல்லோரும் விதந்துகூறியும் எழுதியுமுள்ளராயினும், பின்னும் "இதனைச்சொல்வேனெனுமாசை யென்சொல்வழி கேளா" மற்றாண்டுகிறது. ஆகவே யான்கண்டகேட்டவாறுகளில் இரண்டொன்று கூறி இத்துடன் இவ்வியாசத்தை முடிக்கின்றேன்.

மேற்கூறியவாறு நம் நாட்டுப்பத்திக்குச் சாதனமாக "வேதந்தமிழ்செய்தமாறன்" என்றபடி வேதசொரூபமே திருவவதரித்துள்ள பிரபந்தங்களாகிய திருவாய்மொழி, திருவாசகம் தேவாரம் முதலிய பத்திநூல்களை, உள்ளன்போடும் ஓதுதலினால் மனங்கசிந்துருகுதலைக் கண்கூடாகக் காணுதல் உண்மை. இதனை "விளங்கிழை பகர்ந்த மெய்யுடை முக்கட், காரணனுரை யெனும் ஆரணமொழியோ, ஆதி சீர்பரவும் வாதவூரண்ணல், மலர்வாய்ப் பிறந்த வாசகத்தேனோ, யாதோ சிறந்த தென்குவீராயின், வேதமோதின் விழிநீர் பெருக்கி, நெஞ்சநெக்குருகி நிற்பவர்க் காண்கிலேம், திருவாசகமென்றொருகாலோதில், கருங்கன் மனமுங் கரைந்துகக் கண்கள், தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய, மெய்ம்மயிர் பொடிப்பவிதிர் விதிர்ப்பெய்தி, அன்பராகுநரன்றி, மன்பதை யுலகின் மற்றையரிலரே" என்று தமிழின் இனிமைபயத்தலைக்கூறுங் கூற்றானும், "தொண்டர் நாதனைத் தூதிடைவிடுத்ததும், முதலை உண்ட பாலனை யழைத்ததும், எலும்புபெண் ணுருவாக் கண்டதும், மறைக்கதவினைத் திறந்ததும், கன்னித்தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்" எனக் "கண்ணுதற் பெருங்கடவுளுங்கழகமோடமர்ந்து, பண்ணுறத் தெரிந்தாய்ந்தவிப் பசுந்தமிழின்" வைபவங்களைக் கூறியவாற்றானும்,

முன்னொருகால் திருமழிசையாழ்வார் திருவெஃகா வென்னும் திவ்யதலத்தெழுந்தருளிய எம்பெருமான் முன்னின்று, "கணி கண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி, மணிவண்ணா நீகிடக்க வேண்டாந்— துணிவுடனே, செந்நாப் புலவனும் யான் செல்கின்றேன் நீயுமுன்றன், பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்" என விண்ணப்பம் செய்து கொண்ட அப்பொழுதே அத்தலத்தை விட்டெழுந்து "பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப்பசுங்கொண்டலே" என்றபடி தம்பின்னேவரவும், பின்னரும் "பாய்படுத்துக்கொள்" என்றவுடன் பெருமாள் அத்தலத்திற் படுத்துக்கொண்டு சேவைதந்து "சொன்னவண்ணஞ் செய்தபெருமாள்" எனத் திருநாமங்கொள்ளச் செய்ததும்; மற்றொரு முறை, திருக்குடந்தையில் சயனத்திருக்கோலமாய் எழுந்தருளியிருந்த ஆராவமுதனை "காவிரிக்கரைக் குடந்தையிற் கிடந்தவாறெழுந்திருந்து பேசு" என விண்ணப்பஞ் செய்கையில், உத்தானசாயியாய்ச் சேவைதந்து தம்திருப்பவள வாய்திறந்து பேசச் செய்ததும், "ஞானத்தமிழ், பாலேய்தமிழான பண்ணார்பாடல், வேதமுரைத்து இமையோர்வணங்கும் செந்தமிழ்பாடுவார் தாம்வணங்குந் தேவர்" என ஆழ்வார்களால், பலபடப்புகழப்பெற்றதும், சிவபிரானால் அகத்தியருக்குத் "தமிழைப்பரிசுத்தமான வேதத்திலும் சிறந்ததாக விரும்புவோம்" என்று வரங்கொடுக்கப்பெற்றதும், அங்ஙனமே ஸ்ரீமந் நாராயணனும் ஆழ்வாராசாரியர்களை அவ்தரிப்பித்து அவர்கள் முகமாக வேதசாம்யம் தந்தருளப்பெற்றதும், முதலிய அற்புத வைபவங்களையுடையது இத்தமிழே. இன்னும் இதன் அருமை பெருமைக்கு இன்று இங்கு தமிழ்ச்சங்கம் கூடும் திருநாளைக் கேட்டமாத்திரையானே, இருபெருஞ் செல்வமுடைய கனதனவான்களும், ஏனைய நண்பர்களும், தங்கள் தங்கள் தூரதேய யாத்திரையானுண்டாகும் தேகசிரமம் பொருட் சிரமங்களையும் பொருட்செய்யாது, ஆயிரக்கணக்காய் விஜயஞ்செய்து கூடியிருக்கும், இச்சங்க நீட்சியே போதிய சாட்சி பகரக்கூடிய காட்சியாயிருக்கின்றது.

இத்தகைய மகிமைவாய்ந்த இத்தமிழை, ஆதரிப்பாரின்றித் தளர்ந்த இக்காலத்துக் கேட்டார்ப்பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்பமொழியும் சொல்வன்மையாளரும், இலனென்னுமெவ்

வழுவுறையாமல் ஈத்துவக்குமின்பமறிந்துதவுங் கொடைவண்மைக் குலநல முடையாரும், பாலவநத்தம் ஜமீந்தாருமாகிய நமது ஸ்ரீமாந்-பாண்டித்துரைச்சாமித் தேவரவர்கள் மதுரையம்பதியில், நான்காவது சங்கமெனச்சொல்லும்படி, ஒருசங்கம் நிறுவி அதனை இரு நான்கு வருடமாக வளர்த்துவருவது பலருமறிவர்.

பாண்டிநாட்டு மன்னர் கன்னிகையைச் சோழநாட்டு மன்னர் வாழ்க்கைப் படப்பெறுதல் பண்டைக்கால வழக்காதல் போல, இவ்வொன்பதாம் வருடப் பருவகாலத்தில் பாண்டிமன்னராகிய பாண்டித்துரை மன்னரால் வளர்க்கப்பெற்றுவரும் இத்தமிழ்ச்சங்கமென்னும் கன்னித்தமிழ்மாதை சோழநாட்டு மன்னரும், தஞ்சைத்தமிழ்ச்சங்க அக்ராசனாதிபதியும், பாப்பாநாட்டுஜமீந்தாருமாகிய ஸ்ரீமாந்-சாமிநாத விஜயதேவர் அவர்கள் மூலமாய் நம்நாட்டுக் கனதனவான்கள் கண்டுகளிக்கப் பெற்றிருக்கும் இச்சமையத்தைக் கைவிடாமல், இவ்வமிழ்தினுமினிய தமிழ் மொழிமாதை ஆதரித்து வளர்த்து அம்மாதிடத்தும் அம்மாதைத் தந்த நமது ஸ்ரீமாந்-பாண்டித்துரைச்சாமித் தேவரவர்களிடத்தும், பத்திபுரிதலும் அவசியம்.

அன்றியும், இங்ஙனம் கூறியவாறு இத்தமிழ்ச்சங்க வளர்ச்சிக்குக்காரணபூதராய் அக்கிராசனம் வகித்து நடத்தி நமது வேண்டுகோளையும் பூர்த்திசெய்து இங்கு விஜயம் செய்திருக்கும் நமது ஸ்ரீமாந்-பாண்டித்துரைச்சாமித் தேவரவர்களுக்கும், இன்று தஞ்சையிற்கூடிய சங்கத்திற்கு வேண்டிய பொருளுதவி அக்கிராசனாதிபதித்வம் வகித்து நடத்தி வீற்றிருக்கும் நமது ஸ்ரீமாந்-சாமிநாத விஜயதேவர் அவர்களுக்கும், இச்சங்கத் தங்கத்தினர்களையும் ஏனைய தமிழபிமானமுள்ள வித்வநண்பர்களையும் நல்வரவேற் றுபசரிக்க உப அக்கிராசனாதிபதியாயிருந்து வேண்டும் பொருளுதவி ஒன்று லொன்றுங் குறைவின்றி நிறைவேற்றிய ஸ்ரீமாந்-வா. கோபாலசாமிரகுநாத ராஜாளியாரவர்கட்கும், இவ்வருட மகோற்சவம் யாதொரு முட்டுப்பாடுமின்றி இஷ்டம்போல நிறைவேறுவதற் கின்றியமையாப் பொருள் உதவி உபகரித்தவர்களாகிய பூண்டி ஸ்ரீமாந்- V. அப்பாசாமி வாண்டையாரவர்கள், உட்கடை ராவ்பகதூர் ஸ்ரீமாந்-அண்ணுசாமித்

தேவரவர்கள், தஞ்சை வக்கீல் ராவ்பகதூர் ஸ்ரீமாந்-சீனிவாசபிள்ளையவர்கள், ராவ் சாஹேப் ஸ்ரீமாந்-ஆப்ரஹாம் பண்டிதரவர்கள், முதலிய தமிழபிமான கனதனவான்களுக்கும், இதுகாறும், இவ்வருடமகோற்சவம் சங்கத்தின் பிறப்பிடமாகிய மதுரைமாநகரிலேயே நடந்துவந்ததை, இவ்வருடம் இத்தஞ்சைமாநகரில் நடத்துவதற்குத் தாமே முதற்காரணமாய்ப் பேரவாவுடனிருந்து இக்காரியம் தாமொருவரால் மாத்திரம் நடத்துவதரிமையாயினும் இஃது அருமையுடைத்தென்றசாவாமலும் இன்பம் விழையான் வினைவிழைவானாகியும் தாமெடுத்த முயற்சி கைகூடும் வரையில் "மெய் வருத்தம் பாரார்பசி நோக்கார் கண்டுஞ்சார்" ஆய்விடாது கண்ணுங் கருத்துமாயிருந்து மேற்கூறிய தமிழபிமானிகளுடனிருந்து கூட்டி நடத்தி எம்போலியரும் எளிதிற்கண்டுகளித்தின்புறச் செய்த நமது ஸ்ரீமாந்- மு. சாம்பசிவ நாயனாரவர்களுக்கும் நமது மனதார்ந்த நன்றிசெலுத்தி, அன்னோர்கள் அரோக திடகாத்திர சுகதேக தீர்க்காயுளுடையராய் சத்புத்ர சந்தான சம்பத்துடன் பல்லாண்டு பல்லாண்டாய் வாழ்ந்திருக்க, எம்பெருமான் றிருவருளைப் பன்முறையுஞ் சிந்தித்து வந்தித்து அவ் எல்லாம்வல்ல ஈசுவரனிடத்தும் ஆசிரியனிடத்தும் அடியாரிடத்தும் என்றும் மாறுப்பத்திபுரிந்து அந்தமில்பேரின்பம் அடைந் துய்ந்திடுவோமாக.

T. V. கோபாலசாமி நாயடு.

உ

# அடக்கமுடைமை.

"அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
ஆரிரு ளுய்த்து விடும்."

புத்திமான் பெரிய அரசன்; அவனுக்குத் தன்னுள்ளேயே ஒரு ராஜ்யமுண்டு;—அறிவை ஆள்பவனாகிச் சிங்காதனத்தின்மேல் வீற்றிருந்து செங்கோலைச்செலுத்தும். அவனுடைய அந்தக்கரணங்களெல்லாம் வணக்கமுள்ள ஏவலாளர்களைப்போல அவனைப் பணியும். அந்த ராஜ்யம் சிறிது ஒடுக்கமுள்ளதாகக் காணப்பட்டாலும்

அதன் அரசன் மிகுந்த செல்வாக்கும் ராஜஸ்ரீகமுமுள்ளவனாகிச் சக்கரவர்த்தியிலும் மேலாவான். அந்தக்கரணத்துக்கும் அறிவுக்கும் ஒற்றுமையின்றி என்றைக்கும் நம்முள் ஊர்க்கலகம்போலச் சண்டை நடந்துகொண்டேயிருக்கும்; இவ்விரண்டினுள் எது மேற்கொள்ளுமோ அதற்குத் தக்கபடிதான் நாம் நல்லோராவதும் தீயோராவதும். நாம் இந்திரிய நிக்கிரகஞ்செய்து, அதை அறிவோடு இணங்கச்செய்ய வல்லோமாயின், அதைப்போலப் பேரானந்தம் வேறொன்றுமில்லை. பகைவரது கூரிய அம்பினும், அடங்காப்புலன்களே கொடியனவாம்; அவற்றிற்கு நாம் ஆட்பட்டிருத்தலானது பகைவரிட்ட பெருவிலங்கினுங் கொடியது: "தன்னைக்-குடிகெடுக்கும் நெஞ்சிற்குக் குற்றேவல் செய்யின் பிடிபடுக்கப் பட்ட களிறு" இயற்கையிற் சினமுள்ள ஒருவன் எப்பொழுதும் சான்றோரினத்திருத்தல் வேண்டும்; இவ்வாறு செய்வதினால் அவன் எளிதில் நற்குணமுள்ளவனாகலாம்; ஸகவாஸமானது மிகவும் முக்கியமானது; அதனால் ஒழுக்கமும் குணமுமாத்திரமல்ல; நமது விருப்பமும் நம்மையறியாமலே சீர்ப்படும். தன்னையடக்கி யாள்பவன் இவ்வுலகத்தையும் ஆள்கிறான்; நாம் மற்றவர்களை யடக்கி ஆள்வதிலும் நம்மையே அதிகமாக அடக்கி ஆளவேண்டும்.

"நின்னை யறப்பெறு கிற்கிலே னன்னெஞ்சே
பின்னையான் யாரைப் பெறுகிற்பேன்?—நின்னை
அறப்பெறு கிற்பனேற் பெற்றேன்மற் றீண்டு
துறக்கந் திறப்பதோர் தாள்."

பிறரிழைத்த சிறுபிழைகளை எண்ணாமல் மறப்பதே நன்று; அவற்றை மறப்பதினால் உயர்ந்தோராவோம்; மறவாமல் தீங்கு செய்தவர்க்குத் தீங்கிழைப்போமாயின் அவரினும் இழிந்தோராக வேண்டும்.

"அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை."

சினமானது மனதிற்குள்ளே உண்டாகிற ஓர்வகையான ஜ்வரமாம்; ஜ்வரநீங்கியபின்பு துர்ப்பலமுண்டாவதுபோலவே, சினங்கொண்டவர்களுக்கும் அது நீங்கினபின்பு தேகத்தில் பலக்குறைவு

ண்டாகும். இந்திரியங்களையெல்லாம் ஒருங்கே யடக்கி யாள்வது சிலருக்கு அதிக வருத்தமாதலால், அவர்கள் அவற்றை ஒருவாறு பொருந்தும்படி செய்யமுயல்வது நன்று.

> "உணர்ச்சியச் சாக வுசாவண்டி லாகப்
> புணர்ச்சிப் புலனைந்தும் பூட்டி—உணர்ந்ததனை
> யூர்கின்ற பாக னுணர்வுடைய னாகுமேல்
> போகின்ற தாகும் பிறப்பு."

மிகைபடக்கூறும்படி வழக்கப்படலாகாது; நமது நாவினின்றும் வார்த்தைகள் வெளிப்படுமுன்னமே அவற்றை ஆராய்ந்துபார்த்தறிந்து சொல்லவேண்டும். முன்னதாகவே யோசித்துப் பாராவிடில் பின்பு வார்த்தைகள் நமது நாவினின்றும் பதறி வெளிப்படாதிரா.

> "காவா தொருவன்தன் வாய்திறந்து சொல்லுஞ்சொல்
> ஓவாதே தன்னைச் சுடுதலால்—ஓவாதே
> ஆய்ந்தமைந்த கேள்வி அறிவுடையார் எஞ்ஞான்றும்
> காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து."

நமது சினம் செல்லுமிடமுமுண்டு; செல்லாத இடமுமுண்டு; நம்மினும் மேலானோரைச் சினந்துகொள்ளுதல் புத்தியீனம்; கீழானோரிடத்தில் செலுத்துதல் இழிவாகும்.

> "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
> காக்கின் என்? காவாக்கால் என்?"

அறிவினும் இந்திரியங்களே முற்பிறந்தவை; நாம் பிறக்கும்போதே இந்திரியங்கள் நம்மோடுகூடப் பிறக்கின்றன; நாம் அறிவுடையராதற்குப் பிறந்து சிறிதுகாலம் செல்லுகிறது. இந்திரியங்களை அவற்றின் போக்கின்படி விடாமல், அடக்கிக்கொள்ளவேண்டும். ஒரு கோட்டையைப் பிடித்துக்கொள்ளுவதிலும் கரணங்களையெல்லாம் நமது வசமாக்கிக்கொள்ளுதலே சிறந்தது. பிரமாணஞ்செய்து நாவைக் கெடுத்துக்கொள்ளாமலும், பகவானுடைய நாமத்தை வீணில் வழங்காமலும் இருத்தல்வேண்டும். ஹேல் என்னும் நியாயாதிபதி, "ஆசையற்றவனே தனிகன்; தன்னைத்தானடக்கப்பெற்றவனே பெரியோன்; மரணத்தை ஆனந்தத்தோடு எதிர்பார்ப்பவ

னே சந்தோஷமுள்ளவன்; மற்றவைகளைப்பற்றியோவெனில் நான் கவலைப்படேன்; மேற்சொன்ன மூன்றனுள் முற்கூறிய இரண்டைப் பற்றிக்கூட நான் அதனைக் கவலைப்பட்டேன்; மூன்றாவதைப்பற்றி எவ்வளவு கவலைவைத்திருந்தாலுந் தகும்" என்று சொல்லுகிறார். கோபம் வரும்போதே அதை வேரோடு களைந்துவிடவேண்டும்; ஆரம்பத்தில் அப்படிச் செய்யாவிட்டால், அது வேர்க்கொண்டு விருத்தியாகி, ஆதியில் நகத்தாற்கிள்ளி எறிவதைப் பின்பு கோடரிகொண்டு வெட்டுவதுபோலாகும். எவ்விடத்தில் அறிவும் நீதியும் ஆள்கின்றனவோ அங்கே அமைதியும் ஸமாதானமும் பல்கிப்பெருகும்; அடக்கமுள்ளவர்களிடத்தில் ஆனந்தங் குடிகொண்டிருக்கும்.

மிதமான செல்வமும் பெருந்தன்மையுமிருந்தால், அவ்விடத்தில் அச்சமாவது பொறாமையாவது கொஞ்சமேனுமிரா. இப்படி வாழ்ந்திருத்தலே இன்புற்று வாழ்ந்திருத்தல் என்று சொல்லப்படும். பொல்லாங்கிழைத்தற்காக அதிகாரத்தை வகிக்கவேண்டுமென்று விரும்புகிறவர்கள் சிலரே.

ஒன்றைப்பற்றி வாதிக்கும்போது, அகங்காரத்தோடும், ஆதுரத்தோடும் பேசலாகாது; ஏனெனில், உண்மை,பகைவருடைய எதிர்வாதத்தினும், தன்னை வாதிப்பவர்களின் சினத்தீயினால் அதிகமாய் வருந்தும். ஆதுரப்படாமல் அமர்ந்துபேசினால்மட்டுமே உண்மை அறிவிற்குப் புலப்படும். நாம் அந்தக்கரணங்களையெல்லாம் நமது வசமாக்கிக் கொண்டால்மட்டுமே நமக்கு மனநிலையுண்டேயன்றி, அவற்றிற்கு ஆட்படுவதினாலன்று. செல்வம், பலம் இவற்றால் மனநிலையுண்டாகாது. அடக்கமான மனச்சாக்ஷியும், கபடமற்றதும் உருக்கமுடையதுமான மனமோவென்றால் மனதை நிலைபெறச் செய்யும். மூத்தோர் வார்த்தையைக்கேளாமல், எந்தக் கருமத்தினும் நாம் பிரவர்த்திப்பது கூடாது. இளமைப்பருவமானது, எக்கருமத்தையும் எளிதில் முடிப்பதற்கேற்றதென்றாலும், யோசனை கேட்பதில் மூத்தோர்சொல் வார்த்தையே அமிர்தமாகும். பாராட்டப்படாத இறுமாப்பு மறைந்துபோம்; அதைப் பாராட்டுகிறவன் உறுதியற்றவனாகவாவது அல்லது குற்றமுள்ளவனாகவாவது ஆகவேண்டும்.

நம்மிடத்தில் இவ்வுலக இன்ப இச்சை குடிகொண்டிருந்தால், அதுகாரணமாகத் தெய்வபக்தி குன்றிப்போம்; ஆதலால் நாம் இவ்வுலக இன்பத்தைத் துறந்து பகவானுடைய கிருபைக்குப் பாத்திரராகும்படி பார்க்கவேண்டும்: இவ்வின்பம் என்றைக்கும் அழிவற்றது; ஈசுவரகடாக்ஷமிருந்தால் அது எழுவகையான விஷநோய்க்கு மருந்தாகும்:—புல்லறிவைப்போக்கி ஞானத்தைத் தரும்; சோம்பலைக்கொன்று பகுத்தறிவை நுட்பமாக்கும்; மறதியைப் போக்கி ஞாபகசக்தியை நிலைநிறுத்தும்; அச்சத்தை அகற்றி ஆண்மையைத் தரும்; மடங்கொன்று அறிவகற்றும்; தெய்வநிந்தையைப்போக்கிப் பக்தியைத்தரும்; வீண்பெருமையை ஒழித்து வினயந்தரும்.

பிறர்செய்யும் நிந்தனைக்காகக் கிலேசப்படலாகாது; யாரென்ன நிந்தித்தாலும் மௌனமாய்ப் பொறுத்திருத்தலே நன்று.

"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்."

தெய்வசங்கல்பத்துக்கு மாறாக ஒன்றும் நடவாது. நம்மைப் படைத்த கடவுள் நமக்குச் செய்யவேண்டியவற்றையெல்லாம் அறிந்திருக்கிறார்; ஒவ்வொருவருடைய நிலைமையையும் நன்றாய்ச் சீர்தூக்கிப்பார்த்தால் ஒருவரைப்போலவே எல்லோருடைய நிலைமைகளும் நல்லதாகவேயிருக்கும். நாம் பிறருடைய செய்கைகளைப்பற்றி விசாரியாமலே நாம் செய்யவேண்டியவற்றைச் செய்யவேண்டும்; நற்குணங்கள் பலவற்றுள்ளும் நாவடக்கம் மேலானது; நாம் நாவடக்கமுள்ளவர்களாயிருந்தால், நமது குற்றம் வெளிப்படாமல் மற்றவர்களுடைய குற்றங்களை அறிவது எளிதாகும். நாம் பெரியோருடைய அநுஷ்டானத்தை அநுஷ்டிக்கையில், குற்றமுள்ளவற்றை நீக்கிக் குணமானவைகளைமட்டுமே கொள்ளவேண்டும். யாரும் சினத்தைப் பொருளென்று கொள்ளலாகாது.

"சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று."

ப்ளேடோ என்னும் வித்துவான், கோபமுள்ளவர்கள் தலைகீழாய் நிற்பவர்களைப்போலே இருக்கிறார்களென்றும், அவர்களுக்குத்

தங்களைப்போலவே எல்லாம் விபரீதமாய்த் தலைகீழாகக் காணப்படு மென்றும் சொல்லியிருக்கிறார். தலைகீழும் கால்மேலுமாய் நிற்பவர்களுக்கு தலைகீழாய்த் தோற்றும் வண்ணமே, கோபமுள்ளவர்கட்கும் எல்லாம் மாறுகவே தோற்றும். கோபம் சிலகாலங்களில் மட்டும் நம்மண்டை வருகிறதுண்டு; ஆனால் அடிக்கடி நாமே அதை வலிய வரவழைத்துக்கொள்ளுகிறோம்.

> "அறிவதறிந்தடங்கி அஞ்சுவதஞ்சி
> உறுவதுலகுவப்பச்செய்து—பெறுவதினால்
> இன்புற்று வாழும் இயல்புடையார் எஞ்ஞான்றும்
> துன்புற்று வாழ்தல் அரிது."

## நெல்நாற்று (ஒற்றை அலகு) களை நடவு, தனிமுதல் எருவிடுதல்.

நெற்சாகுபடியில் சிரத்தையுள்ளவர்கள் சென்ற சுமார் 5, 6 வருஷமாக நாற்றங்காலில் விதையைக் குறைத்துப்பாவி, அப்படிச் சிறுக விதைவிடப்பட்ட நாற்றங்காலிலிருந்து கிடைக்கும் நாற்றை ஒவ்வொரு அலகாக(தனி முதலாக) நடுவதினால், விதை லாப மட்டுமன்று, நல்ல கண்டுமுதலையும் அடையலாமென்று செவ்வையாய்க் கண்டுகொண்டிருக்கிறார்கள். ஒற்றை அலகுநடப் புதிதாய் யத்தனித்தவர்கள் முதல் 1 அல்லது 2 வருஷத்தில் கொஞ்ச விஸ்தீரணத்தில் பரீக்ஷார்த்தமாக நட்டபோதிலும், வரவரத்தங்களுடையமுழு விஸ்தீர்ணத்திலும் ஒற்றை அலகாகவே நடப்பிரயாசப்படுகிறார்கள். அவ்விதமாய்ச்சாகுபடி செய்துவருகிறவர்களை விசாரித்தால் உண்மையாகவே தங்களுடைய முழுநிலத்திலும் ஒற்றை அலகு நடுவதில் சாதாரணமாக (பிடிபிடியாக)நடுவதினால் ஏற்படும் செலவைக்காட்டிலும் அதிகமாவதில்லை என்று சொல்லுகிறார்கள். ஆனால், அவ்விதமாக நட்டு அனுபவமில்லாதவர்களோ, ஒற்றை அலகு நடுவதற்கு நாற்றங்காலுக்கும் வயலுக்கும் ஏராளமான உரம் முதலிய செய்நேர்த்திகள் செய்யவேண்டுமென்றும், அதிகக்கூலிகள் பிடிக்குமென்றும், இன்னும் பலவிதமான ஆக்ஷேபணைகள் சொல்வதுண்டு.

ஒற்றை யலகே அப்பியாசமாகக்கையாடிவருபவர்களுக்கு ஷை அபிவிருத்தி மார்க்கத்தினால் உண்டாகும் கண்டுமுதலைக்காட்டிலும் அதிகமான கண்டுமுதலைக் கொடுக்கக்கூடிய கஜநடவு, தனிமுதல் எருவிடுதல், என்னும் அபிவிருத்தியைப்பற்றிக்கீழே சொல்லப்பட்ட குறிப்புகள் உபயோகமுள்ளதாயிருக்கும். மேலே சொல்லப்பட்ட நடவு, சென்ற வருஷத்தில், கும்பகோணம் தாலூகா, பாபநாசம் ஸ்டேஷனுக்குத்தெற்கே சுமார் 4 மைல் தூரமுள்ள, திருக்கருகாவூரில் (திருக்களாவூர்) மகா-ள-ள-ஸ்ரீ T. S நாராயணசாமி ஐயர் அவர்களாற் பரீக்ஷார்த்தமாக நடப்பட்டது. அது பின்வருமாறு:—

பரீக்ஷார்த்தமாக நடப்பட்ட விஸ்தீர்ணம் 41 செண்டு நிலம். நடப்பட்ட ஸ்தலம் குறுவைவிதைவிடப்பட்டநாற்றங்கால் ஆனதாலும், ஷை பரீக்ஷை செய்ய யோஜனை அவருக்குப்பிற்பாடு தோன்றினபடியாலும், ஷை நடவுக்காகத்தனியாக நாற்று தயாரிக்கப்படவுமில்லை; ஷை வயலுக்கு விசேஷித்த வேலைகளும் செய்யப்படவில்லை; நடப்பட்ட வயல் முன்னால் மண்வெட்டியாற் கொத்தப்பட்டு மூன்றுசால் உழப்பட்டிருந்தது. சாதாரணமாக (நெருக்க) விதை விடப்பட்ட பெருஞ்சம்பா (செம்பாளை) நாற்றிலிருந்துபட்டைஉறைப்புள்ளதாக பொறுக்கி நாற்பதாம் நாள் பறிக்கப்பட்டு, ஐப்பசிமாத மத்தியில் நடவு நடப்பட்டது. நடவு சாலைசாலையாக எப்பக்கமும் $2\frac{1}{2}$ அடி இடவெளி கொடுத்து ஒரே அலகு நடப்பட்டது. நடுவதற்குமுன் ஒவ்வொருமுதல் நடக்கூடிய இடத்தில் ஒரு சிறங்கை மணலுடன் ஒரு சிறங்கை தொழு (சாணி) எருவும் போட்டுக்கையாற் குழப்பப்பட்டு, ஒரே நாற்று நடப்பட்டது. இப்படி எருவிட 12வண்டித் தொழு எருவும், 24 வண்டிமணலும் செல்லும். களை எடுக்கும்தருணத்தில் இடைவெளி மண்வெட்டியாற் கொத்தப்பட்டது. அந்த சமயத்தில் ஒரு ஏக்கருக்கு ஒருபாரம் வீதம் ஷை 41 செண்டுக்கு உள்ள 8 மணங்குகடலைக்கொட்டைப் பிண்ணாக்கை 2 வண்டிச்சாம்பலுடன் கலந்து, அதை 2-தடவையாகப் பிரித்து, 10- நாளைக்கொருதரம் அதை முதலின்பேரில் வீதம் செய்து, ஒவ்வொரு முதலைச்சுற்றியும் கையாற் பறித்துக்கொண்டு எருவைக்கப்பட்டது. அறுவடையாகும் வரையில் ஒரு அங்குலம் ஜலம் பாய்ச்சப்பட்டது. முதல் 1-க்கு 60-

கிளைக்குக் குறையாமல் 100-அலகு வரையிலுமிருந்தது. இதற்கு, ஆட்கூலி, எருக்கிரயம் முழுமைக்கும் ஏற்பட்ட செலவு ரூபா 11-0-0 ஆயிற்று. இதே விஸ்தீரணமுள்ளதும் இதே மாதிரி குறுவைவிதை விட்ட நாற்றங்காலில் சாதாரண நடவில் 6-கலம் (144-பட்டணம் படி)நெல்லும், 12-கட்டு வைக்கோலும் காண, இந்தவயலில் 26-கலம் நெல்லும், (ஏக்கர் 1-க்கு 1522-பட்டணம் படி) 36-கட்டு வைக்கோலும்கிடைத்தன.

இந்த வருஷத்திலும் மகா-ள-ள-ஸ்ரீ நாராயணசாமி ஐயரவர்கள் மேலே சொல்லிய நடவைச்சுமார் 4. 33-ஏகர்நிலத்தில் நடத்திவிருக்கிறார்கள். அதில் 3.33 ஏக்கர் பெருஞ்சம்பா என்ற செம்பாளைநெல்வகையையும், மீதி ஒருஏக்கர் நிலத்தில் மத்தியமாகாணத்திலிருந்து இந்த ராஜதானிக்குப் புதிதாய்ச்சில வருஷங்களுக்குமுன் கொண்டுவரப்பட்ட பாங்கு நெல்லையும் பரீக்ஷார்த்தமாய் நட்டிருக்கிறார்கள். பெருஞ்சம்பா—நாற்றங்காலில் செண்டு 1-க்கு $\frac{3}{4}$ பட்டணம் படிவீதம் ஆடிமாத முதலில் விதை விடப்பட்டு, ஆவணிமீ 15-தேதியில் நடவு செய்யப்பட்டிருக்கிறது. வரிசைகள் சென்ற வருஷத்தைப்போலவே $2\frac{1}{2}$ அடி தூரமுள்ளது. ஆனால் வரிசையில் முதல்கள் ஓரடி தூரத்தில் நடப்பட்டிருக்கிறது. சுமார் 1-பட்டணம்படி விதையைக் கொண்டு 2-$2\frac{1}{2}$ ஏகர் நிலம் நடவாகியிருக்கிறது. நடவாகி இப்போது ஒரே மாதமாயிருந்தும், ஒரு முதலுக்கு 50 கிளைக்குக் குறையாமலும், சராசரியில் 60-65 கிளைக்குக்குறையாமலும் இருக்கின்றன. நடுவதற்குமுன் சென்ற வருஷத்தைப் போலவே, எருவைக்கப்பட்டதைத்தவிர, வேறு எரு இன்னும்வைக்கப்படவில்லை. இடைவெளி ஒரு தடவை நடவான 25-ம் நாள் மண்வெட்டியாற் கொத்தப்பட்டு இப்போது முதல்களுக்குஎருவிடத்தயாராயிருக்கிறது. பாங்கு நெல் $4\frac{1}{2}$-மாத வயதுள்ள இந்த நெல் வகையானது வைகாசிமீ முதல்நாற்றங்கால் விதை விடப்பட்டு ஆனிமீ முதலில் நடவாகிறது. வரிசைக்கு வரிசை 2-அடியும், வரிசையில் 1-அடியும் வைத்து ஒரே முதல் நடப்பட்டிருக்கிறது. நட்ட $1\frac{1}{2}$ மாதத்தில் இடைவெளிகொத்தப்பட்டு ஏக்கர் 1-க்கு 5-மணங்கு கடலைக்கொட்டைப் பிண்ணாக்கும், 2-வண்டிச்சாணி எருவும் முதலின்பேரில் வீதம்செய்துவைக்கப்பட்

டது. இப்போது பயிர் கதிராகி இன்னும் ஒருவாரம் அல்லது 10-நாளில் அறுவடையாகும் ஸ்திதியிலிருக்கிறது. ஒரு முதலில் 30கிளைக்குக் குறையாமலும், சராசரிக்கு 35 முதல் 50 கிளை வரையிலும் இருக்கிறது.

மேலே சொல்லப்பட்ட இரண்டுவகைகளும் காலத்தில் நடப்பட்டு இப்போது பயிர் இருக்கும் ஸ்திதியைக் கவனிக்கும்போது சென்றவருஷத்தில் கிடைத்த கண்டுமுதலைக்காட்டிலும் இரட்டிப்புக்கண்டுமுதல் கிடைக்குமென்று தோற்றுகிறது. ஷை சாகுபடியையும இன்னும் ஒற்றை அலகில் பத்திநடவு என்ற சாலைநடவையும் பார்வையிட இது நல்லசமயமாகையால், இந்த நூதனமுறையை நமது ஜில்லாவிலுள்ள மிராசுதார்கள் திருக்கருகாவூருக்குப் போய் நேரிற்பார்த்து தங்களுடைய பண்ணைகளில் கொஞ்ச விஸ்தீரணத்திலாவது அடுத்த வருஷத்தில் நட்டுப்பெருத்த லாபத்தை அடையவேண்டுமென்ற நோக்கத்துடன் இது எழுதப்பட்டது.

சி. நாராயண ஐயர்,
ஸ்பெஷல் ட்யூட்டி பாரம் மானேஜர்.

## மதுவிலக்கு.

நிறைந்த ஆயுளைக்குறைத்து லட்சாதிபதிகளைப் பிட்சாதிபதிகளாக்கி அழகுடையாரை அவலட்சணப்படுத்திவைக்கும் மதுபானமானது அதனைச் சிற்றளவாய்ச் சாப்பிடுவாருக்கு எத்துன்பத்தையுஞ் செய்கிறதில்லையென்று வாதிக்கும் மித மதுபானிகளையிட்டுச் சமயம் வரும்போது சாற்றிக்கொள்வதாய் முன்னர்க்கூறினோம்.

இச்சமயத்தை அச்சமயமாய்க்கொண்டு ஆரம்பிப்பதில் மிதமதுபானிகள் உடலை வளர்க்குமெனக்கள்ளையும், இரத்தத்தைத் தெளிவிக்குமென பீரையும், இரத்தபுஷ்டியைத் தருமென ஒயினையும், ஆயாசத்தைத்தீர்க்குமென விஸ்கியையும், அஜீரணத்தை அறுக்கு

மென பிராந்தியையும், நெஞ்செரிவை நிவிர்த்திபண்ணுமெனச் சாராயத்தையும், நீர்க்கடுப்பை நீக்குமென ஜின்னையும் இப்படியாக ஒவ்வொருபயன்கருதி இம்மதுபானங்களை உபயோகிக்கத் தலைப்பட்டோமென் றுரைப்பார்கள்போலும்! ஆனால் இம்மதுபானிகளின் சுபாவமான செய்கை "கிணறுவெட்டப் பூதம் புறப்பட்ட கதைக்கு" இலக்காகிவிடின் என்செய்வாரோ என்பதற்கு இவரே விடை கூறக்கடவர். மேலும் நமது உடலின் சௌகரியத்துக்கான பதார்த்தங்களில் இம்மதுபானத்தைப் பார்க்கிலும் சரஸவிலையிற் பெற்றுக்கொள்ளக்கூடிய வேறோர் நல்லவஸ்து இவர்களுக்குக்கிடைக்க வில்லையே என்பது ஒருகேள்வி. தேகப்பயனைக்கருதி மதுபானப்பழக்கத்தைக் கையாடிய இவர்கள் அப்படிக் கையாளு முன்னர்த் தமது தேகக் கூறுபாட்டையிட்டுத் தெள்ளிதில் உணர்ந்த தம் குடும்பவைத்தியரிடத்தில் நன்காலோசித்துக் கொண்டார்களோ வென்பது மற்றொரு கேள்வி. இஃதெப்படியாயினும் ஆகுக. மதுபானம் சுகதேகிகளுக்கு அணுவளவும் பொருந்தாதெனல் இம்மதுபானிகளின் வாக்குமூலத்தாலுங்கூட வெளிப்படையாயிருக்கின்றது.

இவ்வெளிப்படையே எவர்க்கும் களிப்புடையதாயிருக்க வேறோர் சலிப்புடைய விஷயமும் இந்நேரத்தில் வந்து சேர்ந்துகொண்டதால் அதையும் அறிவிக்கவேண்டியது அவசியமாகிறது. அதாவது:— மதுபானப்பழக்கத்திற்கு வைத்தியர் உத்திரவு பெற்றுக்கொள்ளும் மாந்தர் முதலான அநேகர் குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்கிறவர்களுக்கு ஒப்பாயிருக்கிறார்கள். "மிதம்" என்பதற்கு வெறியைக் கொடாதவோர் சிற்றளவு எனப்பொருள் கூறுவது எவர்க்கும் எளிதாயிருக்கலாம். ஆயினும், இம்மித மதுபானிகள் இம்மித அளவினால் மிதமிதமாகத் தங்களுக்குத் தீங்கிழைத்துக்கொள்வது அதைப்பார்க்கிலும் எளிதாயிருக்கிறதென்போம். மீளவும் இற்றைக்கு இன்னார் பரமசாதுக்களாகவும் தன்னடக்க முள்ளவர்களாகவும் அடுத்தாரைத் தொல்லைபண்ணாதவர்களுமாய்ச் செவ்வனே காலங்கழிக்கின்றார் என்பார்களோ? இம்மட்டுத்தானா? இதனுடன் அன்னார் இவரது அறிவென்னும் அங்குசத்தைக்கொண்டு ஐம்பொறிகளாகிய யானையை அடக்கி யாண்டால்தானென்ன, இவர்கள்மிதமாகவேனும்

இடைக்கிடையே சாப்பிட்டுவருவது பாஷாணத்தையொழிய வேறில்லையாதலால் அதனைக்கொண்டு நாளடைவில் தங்களுக்குத்தாங்களே நஷ்டம் வருவித்துக் கொள்ளுகிறார்களென்பதை எவர் மறுக்கக்கூடும்?

இதற்குச்சான்றாக, மகாகீர்த்தி பெற்றமருத்துவாசிரியரில் ஒருவரும் லண்டன்மாநகரத்திற் பேர்போன வைத்தியசாலையின் பண்டித சிரேஷ்டருமாகிய ஸர். அந்த்ரூ க்ளார்க் என்பவர் "நான் எனது வைத்தியசாலையில் மேற்பார்த்துவரும் நோயாளிகளில் நூற்றுக்கெழுபதுபேர் மதுபானப்பழக்கத்தால் பிணிக்குள்ளானவர்கள் என்பதைத் தக்க ஆராய்ச்சியோடும் உண்மையுடனும் விஸ்தரிக்கின்றேன். மீளவும் அவர்களுடைய வியாதிக்கு மூலகாரணமே மதுபானமல்லாமல் வேறில்லையென அனேக ஏதுக்கள் கொண்டொப்பித்து உறுதிப்படுத்துகிறேன். இந்நூற்றுக்கெழுபதுபேரும் பெரிய மதுபானிகளாயிருந்தவரென்று நான் பாராட்டவில்லை. உலகத்தார் சொல்லுகிற பெரிய மதுபானிகளும் இக்கணக்கில் சேர்க்கப்படவில்லை. பின்னை இவர்கள் எப்படிப்பட்டவரென்றால் ஏதோசிறிது சந்தோஷ சுகாநுபவத்திற்காக மதுபானத்தை மிதமிதமாய் அருந்தியவர்தாம்" என்கிறார். இவ்வுத்தம அத்தாட்சியைக்கொண்டும் மிதமதுபானத்தாலும் மோசம் வருவது கண்டோம்.

விளையாட்டுச்சிறுவர்களைப்போல் மதுபானத்தை மிதமிதமென உபயோகித்து அசாத்தியரோகங்களுக்குட்பட்டு வைத்தியசாலையின் மருந்தனைத்தையும் முடித்துப் பண்டிதராலும் கைவிடப்பட்டு முறைமை வாராமுன்னரே கல்லறையுட்புகுகின்ற இவர்கள் சிலர்சொல்லுகிறபடி ஒரு சிறிது காலம் நளினசந்தோஷ சுகாநுபவம் நுகர்ந்துவருவதாய்த்தான் தெரிகிறது. ஆம், இம்மதுபானிகளது இற்றைய உல்லாச நிலைமையைக்கண்ட அறிவிற்குறைந்தவர் எத்தனைபேர் தமக்கும் இத்தகைய மேலானசுகம் என்றோன்றுகிட்டுமோவென வாயூறிக்கொண்டிருந்தாரில்லை. இற்றைக்கு உல்லாச நிலைமையிலிருக்கிற இம்மதுபானிகளோடு அறிவிற்குறைந்தவர்எத்தனைபேர் இடைவிடாதநேசம் வைத்துக்கொள்ளவேண்டுமென இன்றளவும் பிரயாசப்பட்டாரில்லை. இற்றைக்கு உல்லாசநிலைமையிலிருக்கிற இம்மது

பானிகளுக்கு அறிவிற்குறைந்தவர் எத்தனைபேர் அவ்வவ்நேரங்களில் வேண்டிய பொரியல்களும் புரட்டல்களும் துவட்டல்களும் உடன் கொண்டுபோனாரில்லை. இற்றைக்குஉல்லாசநிலைமையிலுள்ள இம்மது பானிகளுக்கு அறிவிற்குறைந்தவர் எத்தனைபேர் மேற்கூறிய பலகார பட்சணாதிகளைப் புசித்துச்சீட்டுப்போட்டுப் பரிகாசம்பண்ணி ஆடிப்பாடி அகங்களிக்க அந்தரங்க இடங்கள் அமர்த்திக்கொடுத்தாரில்லை. இற்றைக்கு உல்லாசநிலைமையிலிருக்கிற இம்மதுபானிகளுக்கு அறிவிற்குறைந்தவர் எத்தனைபேர் துராகிருத வழிகட்கெல்லாம் தூதர்களாயிருந்தாரில்லை. இன்னமும் சொல்லவா சகோதரரே! போதும்! போதும்!! அகஸ்மாத்தாய்க் கிளம்பிய மனக்கொதிப்பால் சொன்னது இது, சொல்லாதது இதுவெனத் தெரியவில்லை.

கவனித்துப்பாருங்கள்; சிறிதுசந்தோஷ சுகாநுபவத்திற்காகக் கொண்ட மதுபானப் பழக்கஞ்செய்யும் கோலாகலத்தைக் கவனித்துப்பாருங்கள். வைத்தியரிற் சிலர் மதுபானத்தால் வருகின்ற பிணிகளைத் தீர்த்துவருகிறார்கள். ஆனால் மதுபானிகளோ நீர்ந்தபிணிகளைத் தமதுகொடியபழக்கத்தால் திரும்பத்திரும்பச் சேர்த்துவருகிறார்கள். அப்படியாக, மதுபானிகளால் வைத்தியசாலையிலுள்ள மருந்தெல்லாம் தீர்ந்துபோகிறது. மதுபானிகளாற் பண்டிதரெல்லாம் அலுத்துப்போகிறார்கள். மதுபானிகளால் யமதூதர்களுங்கூடக் களைத்துப்போகிறார்கள். இம்மதுபானிகள் இல்லாதேபோனால் இக்கரைத்துறைகளில் இத்தனை வைத்தியசாலை வேண்டாவென்று நினைக்கிறேன். இம்மதுபானிகள் இல்லாதேபோனால் இக்கரைத்துறைகளில் இத்தனை வைத்தியர்கள் அவசியமில்லையென்று நினைக்கிறேன். இம்மதுபானிகள் இல்லாதேபோனால் இக்கரைத்துறைகளில் இத்தனைமரணம் சம்பவியாதிருக்குமென்று நினைக்கிறேன்.

நான் இப்படி நினைப்பதற்கும் சொல்லுவதற்கும் உதவியாக 1887ஆ இங்கிலாந்துதேசத்தின் பிரபுக்கள் சபையார் மதுபானத்தால் நாட்டுக்குவருகிற லாப நஷ்டத்தை விசாரிக்கவேண்டி ஏற்படுத்திய ஆலோசனைசங்கத்தின்கண் யாவரும் ஒப்புக்கொள்ளத் தக்கவிதமாய் ஸர். வில்லியம் குஷ் என்பவர் "மதுசாரமும் மதுசாரம்அடங்கிய சர்வபொருள்களும் நிச்சயமாகவே சுகக்ஷேமத்திற்கு விரோதமா

னவை; மதுபானத்தை உபயோகிக்கிறவர்கள் மிதமுள்ளவராலென்ன, வெறியில்லாதவராலென்ன, சுகதேகிகள்போல் சௌந்தரியத் தோற்றமுடையவரா யிருந்தாலென்ன? மதுபானம் மனிதனைத் திடீரென அபாயத்துக்குள்ளாக்கிவிடுமென்பதற்குச் சந்தேகமில்லை. அதுவே அவனைச் சிதைவிற்கும் சீர்கேட்டிற்கும் தீவிரமாய் இழுத்துக்கொண்டுபோகிறது. இன்னமும் என் அநுபவ முதிர்ச்சியைக் கொண்டு நான் அறிந்தவரையிற் சொல்லவேண்டுமாயின் மதுபானத்தைப்போல் வேறொரு தேசவிரோதியும் மதுபானத்தைப்போல் வேறொரு குலத்துரோகியும் கிடையவே கிடையாது என்று மெய்யாகவே, மெய்யாகவே, சொல்லுகிறேன்'! என்கிறார்.

ஏ, மதுபானமே! நீ உண்மையாகவே ஆட்டுத்தோலைப் போர்த்துக்கொண்ட ஓர் ஓநாயாயிருக்கிறாய். நின் தீச்செயல்களைச் சிலர் அறிவில்லார் அறியாதிருக்கிறார் என்பது மெய்தான். ஆயினும் அறிவுள்ளார், நீ எக்குடிப் பிறப்பென்றும் யாவனென்றும் முழுதும் அறிந்தேயிருக்கிறார்கள். நெருப்புக் கொடிதென்பார் சிலர் அறியாதார். நெருப்புத் தொட்டாரைமாத்திரம் சுடுகின்றது. நீயோ தொட்டவருடன் தொடாதவரையுமன்றோ சுடுகின்றனை. ஆகையால் நீ நெருப்பைக்காட்டிலும் மிகக் கொடியையென நிச்சயமாகவே நிகழ்த்துகிறேன். இத்துணைப் பழிச்சொல்லுக்கும் பாதகத்திற்கும் இலக்காயிருக்கும் மதுபானமே! இப்போதாவது நீ என்சகோதரரைவிட்டு விலகிவிடமாட்டாயா? விலகுவையாகில் நீ நன்றாய்இருப்பை; நாடோறும் வாழ்வை. நின்னைக் கொள்வார்குலமும் கொடுப்பார் குலமும் நீடுவதிக. ஆனால் உன்னால் எனது சகோதரருக்கு வந்ததும், வருகிறதும்வருவதுமான துன்பங்களில் ஒன்றையேனும்ஒளித்துவைக்காமல் தருணம் வாய்க்கும்போதெல்லாம் சவிஸ்தாரமாய்ச் சொல்லிவருவேன் என்பதைமாத்திரம் நீ சம்பூரணமாய் அறிந்துகொள்ளக் கடவாய்.

மதுபானத்தை ஒவ்வொரு பயன்கருதி யுபயோகிக்கிறார்களென மேலே சொல்லியுள்ளேன். இப்பயனுள் அஜீரணத்தை அறுக்குமென்றோர் போலிப்பிரமாணத்தை நாடி அருந்துவார் ஆயிரத்துள் தொள்ளாயிரம்பேர். இப்படி நம்மிற் பெரும்பாலார் அஜீரணத்தை நீக்குவதற்காகவே மதுபானப் பழக்கத்தைத் தொட

ங்கி மோசம்போகிறார்களாதலால் அவ்விஷயத்தையிட்டுப் பேசுவதே இந்நிருபத்தின் பிரதானவேலையாயிருக்கிறது. ஆதலால் மதுபானம் எவ்வளவுதூரம் நம்மிலுள்ள அஜீரணத்தைப் போக்குந்தரத்ததென்று விசாரிப்போம். ஒருவனுக்குத்தீவிரஜீரணம் ஏற்படவேண்டுமானால் முதலில், அவனது இரத்தம் சுத்தமுடைத்தாதல் வேண்டும். இரண்டாவது, ஜீரணக்கருவிகள் பலமுடையவாதல்வேண்டும். மூன்றாவது, இரத்தஓட்டம் நிறைந்த அளவுடைத்தாதல்வேண்டும். இப்படியாகத்தேகத்தின்முக்கியமான அவயவங்கள்யாவும் தத்தம்வேலைகளை இணக்கமாய் நடப்பிக்கும் வண்ணம் பூரணசுகமுள்ளதாயிருப்பது அவசியத்திலும் அவசியம். இவ்வவயவம் அனைத்தையும் மதுபானம் கிலேதடுமாறச்செய்கிறதென முன்னரே அறைந்தாயிற்று. இரைப்பைக்குள் சேர்ந்த உணவுசிதைவுண்டதும் அதுதிவலைதிவலையாகி இரத்தத்தோடு இரத்தமாய்க் கலந்துபரவுமட்டும் மற்றவுறுப்பெல்லாம் அதனதன் அலுவலை விமரிசையுடனே நடாத்திக்கொண்டிருப்பது ஆதிகர்த்தனின் அற்புதமான சிருட்டியின்கீழ் எல்லாஜீவன்களுக்கும் இயற்கையில் கிடைத்ததோர்பாக்கியம். ஆனால் இவ்வித இயற்கையுள் அமைந்திருக்கும் கருவிகளுக்கிடையில் மதுசாரம் புகுந்ததும் உண்ட வுண்டியைச் சிதையவிடாமலும் திரிபடையக்கூடாமலும் செய்துவிடுகிறதென்று ஐயமின்றிக்கூறலாம்.

நான் சொல்லுவதில் இன்னமும் வாளா சந்தேகமுண்டானால் இதோ என்னுடன் ஓர் நூதனசாலைக்குப் புறப்பட்டு வாருங்கள்.ஏன்? நீங்களே அச்சாலைகளில் கண்ணாடிப் பாத்திரங்களில் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் பாம்புகள் தவளைகள் மச்சங்கள் இன்னும் வெவ்வேறு ஜீவராசிகள் இவைகளை ஒருவேளை பார்த்திருப்பீர்கள். அவைகளெல்லாம் உயிரில்லாத பொருள்களல்லவா? வருஷக்கணக்காக அவைகள் அவ்வேனங்களுள் அடக்கம்பண்ணப்பட்டிருக்கின்றன. அங்ஙனமாயின் அவைகள் இன்றுகாறும் தமது அவயவக்கட்டுவிட்டுப் பிரிவுறாமலும் பழுதுறாமலும் இருக்கவேண்டியகாரணத்தைக் கண்டுணர்ந்தீர்களா? இறந்துபோனவஸ்துக்கள் அழியாமலிருக்க ஏதோவோர் நிமித்தம் இருத்தல்வேண்டியதவசியமன்றோ? தெருவில் செத்துக்கிடக்கும் ஒரு நாயாதல் பூனையாதல் அல்லது வேறெந்தப் பிராணியாத

ல் பாருங்கள். அவைகள் ஜன நடமாட்டமுள்ள பாதையிலிருந்து உடனே அப்புறப்படுத்தப்படவேண்டும்; அல்லது பூமிக்குள் எங்கேனும் புதைத்து வைக்கப்படவேண்டும். அப்படியல்லாதபட்சத்தில் அவைகள் அழுகிப் புழுத்துப் பழுதுறுகிற காலத்தில் வருவார் போவாருக்கு இடையூறுயிருக்கக்கூடியதுர்க்கந்தத்தைக் கொடுத்து அவ்வீச்சத்தாலும் ஆவியாலும் வழிப்போக்கருக்கு அசௌக்கியத்தையுண்டுபண்ணுவது சகஜம். நல்லது, இப்போது திரும்பவும் நூதனசாலையை நோக்குவோம். ஆங்குப் பாத்திரங்களில் இடப்பட்டிருக்கும் ஜெந்துக்கள் அழிவுறவுமில்லை பிரிவுபடவுமில்லை. அவைகளின் வெளித்தோல் மாத்திரமல்ல; ஒவ்வோர் உள்ளுறுப்புகளும் அங்கிருந்து கொண்டே வருகின்றன.

சில செத்தபிராணிகள் மற்றொருவகையால் உயிருள்ளவற்றைப் போற் காணப்படலாம். அஃது எப்படியென்றால்:—பிராணியின் இரத்தாசயம் பித்தாசயம் எலும்பு தசை நார்முதலிய பாகங்கள் புறம்பாக்கப்பட்டுத்தோலானது அதனைப் பழுதுபடாமல் காக்கின்ற வெள்ளைப்பாஷாணம்போன்ற இரசாயனவர்க்கங்களால் பதமிடப்பெற்றபின்னால் அத்தோலுக்குள் புல், வைக்கோல் முதலிய பண்டங்களைச் செலுத்தி வைத்துக்கொள்ளுவதாற்றான். ஆனால் நான் தற்போது குறித்துப்பேசுகிற விநோதசாலையின் ஜந்துக்கள் இவ்விதமாய் உள்ளிந்திரியம் எடுக்கப்பட்டதுமில்லை. புறவிந்திரியம் பக்குவம் பண்ணப்பட்டதுமில்லை. அவற்றின் முழுவுடலும் ஆங்கேயில்லாமற்போகவுமில்லை. அப்படியிருக்க அது இந்நேரமட்டும் அழிவுறாதிருக்கும் காரணம் என்னை? காரணம் அறியுந்தருணம் வந்தது கவனியுங்கள். ஜெந்துக்கள் இருக்கும் பாத்திரத்தில் அவற்றோடு மற்றோர்பொருளைப் பார்க்கிறீர்கள். இஃது ஓர்வகைத் திராவகம். இதிலேயே சொன்னஜெந்துக்கள் மிதந்து கொண்டிருக்கின்றன. இத்திராவகமே அவைகள் பழுதுறாதிருக்கும் பொருட்டுப் பராமரித்து வருகிறது. அது என்ன பதார்த்தம்? என்றால், அதுதான் இலாகிரி பதார்த்தம் அல்லது மதுசாரம் என்பேன். மேற்போந்த பிராணிகளை எப்படி மதுசாரமானது மாறுபடாமலும் பிரிவுபடாமலும் இருக்கச்செய்கிறதோ அப்படியே அம்மதுசாரம் நமது குடலுள் பிரவேசிக்கின்ற

உண்டி முதலானவற்றையும் மாறுபடாமலும் பிரிவுபடாமலு மிருக்கச் செய்கிறதெனச் சற்றுமுன் எடுத்தோதிய உண்மை இப்போது பிரத்தியட்சமாய்த் தெரிகின்றதன்றோ. நாம் சாப்பிடுகிற ஆகாரம் கூறு கூறாகச் சிதைவுற்று நொய்மையாக வேண்டியது ஜீரணோபாயத்திற்கு அத்யாவசியமாயிருக்க அப்படி நம் ஆகாரத்தின் கூறுபாட்டிற்கும் வேறுபாட்டிற்கும் தடையாயிருந்துவருகிற மதுபானமானது அஜீரணத்தை அறுக்குமென்று அணுவளவும் நம்பாதொழிக.

மதுபானம் ஜீரணசக்திக்கு இடைஞ்சல் பண்ணுகிறதென்பதை ஸ்தாபிக்கும் வேறோர் திருஷ்டாந்தமும் உளது:—சில வருடங்களுக்கு முன் "பெயுமெண்ட்" எனப் பெயர் வழங்கிய பிரதான அமெரிக்கவைத்தியர் ஒருவர் இருந்தார். இவரிடத்தில் அலெக்சிஸ் மார்ட்டின் என்றோர் போர்வீரன், யுத்தத்தில் அவனது விலாப்புறத்தில் குண்டுபட்டு வைத்திய சிகிற்சைக்கு வந்து சேர்ந்தான். இரணம் ஒருவாறு சுகத்திற்கு வந்தபோதிலும் அவன் சரியான ஸ்திதிக்கு வருகிறவரையில் அவனது போஜனசயம் எந்த நிலைமையில் இருந்துகொண்டு வருகிறதென்பதை அவ்வைத்தியர் அறிந்துகொள்ள வேண்டியது அவசியமாயிருந்ததால், போஜனசயத்தை நினைத்த நேரம் தம் கண்ணாற் பார்த்துக்கொள்ள வேண்டியதற்காக இரணத்தின் ஓர் பாகத்தை மூடாமல் வைத்துக்கொண்டே இருந்தார். மார்ட்டினுக்கு ஆகாரமாக முட்டை, கிழங்கு, கோழிக்குஞ்சு, ஆட்டிறைச்சி முதலானவற்றைக் கொடுத்து அவ்வொவ்வொன்றும் ஜீரணமாகிறதற்கு எவ்வளவு நேரம் பிடிக்கிறதென்று இரணத்தின் துவாரத்தின் வழியாய்ப் பார்த்துக் குறித்துக்கொண்டுவந்தார். அதன்பின் மதுபானம் ஜீரணமாகிறதற்கு எவ்வளவு உதவி செய்கிறதென்பதைத் தானே நேரில் தெரிந்து கொள்ளுவதற்காக அவ்வாகாரத்தோடு மதுபானங்களைக் கொடுத்துப்பார்த்தார். அப்படிக்கொடுத்ததால் உண்டான வித்தியாசத்தைப் பலதரமும் கவனித்து 100-க்கு 15-பங்கு விஷமுடைத்தான பீர் முதலியவை யென்ன, 30-பங்கு விஷமுடைத்தான ஒயின் முதலியவை யென்ன, 60-பங்கு விஷமுடைத்தான பிராந்தி முதலியவை யென்ன—இவைகள் ஜீரணத்தை

அளவோடுங்கூடி நடாத்திக்கொண்டிருக்கிற சுத்தஜலம் போலாது ஜீரணத்தை மிகவே காலதாமதத்திற் குள்ளாக்கி வைக்கின்றன என்று அவ்வைத்தியர் பெருமான் மலைமேல் விளங்குஞ் மணித்தீபத் தைப்போல் ஜெகத் பிரசித்தமாய்த் தீட்டிவைத்திருக்கிறார்.

இத்தகைய பேருங்கீர்த்தியும் பெற்ற மகான்கள் எழுதித்தந்த திருட்டாந்தங்களையும் நமது அநுபவத்தையும் தெள்ளிதிலுணர்ந்த இனிய சகோதரர்காள்! ஜீரணோபாயம் ஜீரணோபாயம் என இன்னமும் மதுபானத்தை மாந்தப்போகிறீர்களா? நீவிர் மதுபானப் பழக்கத்தைத் தொடங்கிய முதல்மாதத்தில் ஒரு கிளாஸ் போதுமானதாயிருந்ததல்லவா? மறுமாதத்தில் ஏன் இரண்டுகிளாஸும் இன்னும் போகப்போக லோட்டாக்கணக்கும் போத்தல்கணக்கும் வேண்டியிருந்தது: தொடங்கினமாத்திரத்தில் எவ்வளவு காரசாரமுள்ள பானத்தைப் பிரயோகித்தீர்களோ, எந்தநிலைமையிலுள்ள ஆகாரத்தைச்சாப்பிட்டீர்களோ, அதே காரசாரமுள்ள வஸ்துவைத்தானே, அந்த நிலைமையிலுள்ள ஆகாரத்தைத்தானே போகப்போக உபயோகித்தீர்கள். ஜீரணோபாயத்திற்கு ஆரம்பத்தில் கிளாஸ்கணக்கு போதுமானதாயிருக்கத் தற்போது அதே ஜீரணோபாயத்திற்குப் போத்தல் கணக்கு ஏன் தேவையாயிருக்கிறது? மதுபானமில்லாமல் ஒரு காலத்தில் உருசிகரமாயிருந்த போஜனம் ஏன் இப்போது மதுபான வாடையில்லாமல் வாய்க்குள் முதலாய்ப் போகிறதில்லை? நீங்கள் மதுபானத்தை அடிக்கடி உபகியோகித்துங்கூட அது உங்களிடத்தில் செய்துகொண்டுவருகிற சூக்ஷ்மத்தை இன்னமுங்கண்டு பிடிக்கவில்லை. போகப்போகக் கண்டுகொள்வீர்கள்.

(இன்னும் வரும்.)

M. P. பாஸ்கரன்ஹாஸ்.

# மதுரை நாயக்கர் ஸம்ஸ்தானம்.

(அ-ம் தொடர்ச்சி: ௯உ௩-ம் பக்கத்தொடர்ச்சி.)

[ஸ்ரீமத்-சே. ப. நரசிம்மலு நாயடுகாரு எழுதியது.]

## ஸ்ரீ குமார அல்லது பெரிய கிருஷ்ணப்பநாயடுகாரு சமஸ்தானம்.

[கி. பி. 1568-ஆம் வருஷம் முதல் 1573: வரை.]

புகழுடம்பினரான விசுவநாதநாயுடு அவர்களுக்குப்பிறகு, அவர் குமாரர் குமாரகிருஷ்ணப்பநாயுடுகாரு மதுரையில் மகுடாபிஷேகம் செய்யப்பெற்றுச் சிங்காசனமேறினார். இப்படிச் சிங்காசனமேறிய குமார கிருஷ்ணப்ப நாயுடுகாருவைப் பெரிய கிருஷ்ணப்ப நாயுடு என்று சொல்வதுமுண்டு. இந்தக் குமாரகிருஷ்ணப்பநாயுடுகாரு யூகமும், சுத்தவீரமும், இராஜதந்திரமுமுடையவர். அதனோடுகூட அரியநாயக முதலியாரே இவருக்கும் மந்திரியாக இருந்தபடியால் நாட்டிற் கலகங்களுண்டாகாமல் நிம்மதியாக இருந்தார். இப்படிப் பட்ட காலத்தில், வடக்கே மகம்மதியர் கலகம் செய்து, சேனையோடு மதுரை சமஸ்தானத்துக்கு வருகின்ற சங்கதிகேட்டு, அரியநாயக முதலியார் தக்கசேனைகளோடு அவர்களைத் தாக்கப்போனார்.

இப்படிப்பட்ட சமயத்தில் 72-பாளையக்காரர்களில் ஒருவராகிய தொம்பிச்சி நாயக்கன், வேறு சில பாளையக்காரர்களுடைய உதவியைப்பெற்றுக்கொண்டு, மதுரை குமார கிருஷ்ணப்ப நாயுடுமேற் படை எடுத்துவந்தான். இப்படிப் படைஎடுத்து வந்ததற்குக் காரணம்:—தொம்பிச்சிநாயக்கன் 1543-ம் வருஷம் ஒருபெரிய மாகாணத்துக்குத் தலைவனாக இருந்தான். விசுவநாதநாயுடு காலத்தில் அவனுடைய சிலகிராமங்களைப் பிடுங்கி வேறு பாளையக்காரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தமையால், அந்தப்பகையைத் தீர்த்துக்கொள்ள இது சமயமாகவெண்ணி, பணஆசையும் பேராசையுமுடைய சில பாளையக்காரருடைய தூண்டுதலினால் பலமான சேனையை இரகசியமாகச் சேர்த்துக்கொண்டு வந்தும், அரியநாயகம் வடக்கேபோன

சங்கதியறிந்து திடீரெனச் சேனையைக் கூட்டிக்கொண்டு பரமக்குடிக்கருகில்வந்து முற்றுகையிட்டும், நாட்டைக்கொள்ளையடித்துக் குடிகளை வருத்தியும்வர, குமார கிருஷ்ணப்ப நாயுடுவுக்குச் சங்கதி தெரிந்தவுடனே தமது தளகர்த்தராகிய பெரிய கேசவப்பநாயுடு வசம் சேனையையனுப்பி அவனைத் தாக்கச்செய்தார்.

அந்தப் பெரியகேசவப்பநாயுடுவும் வந்துபோர்செய்ய, யுத்த களத்திற் கத்தியடிபட்டிறந்தார். இந்த சங்கதியைக்கேட்ட குமார கிருஷ்ணப்பர் விசனப்பட்டு, அந்தக்கேசவப்பருடைய குமாரர் வசம் 18,000 பதாதிகளைக்கொடுத்து அனுப்ப, அவரும்போய்ச் சண்டை செய்து, தம் தகப்பனைக்கொன்ற தொம்பிச்சிநாயக்கன் தலையை வெட்டி மற்றப்பாளையக்காரர்களுக்குப் படிப்பினையாகக்காட்டும்படி குமாரகிருஷ்ணநாயுடுவிடம் அனுப்பினார். உடனே கலகமடங்கியது. இக்கலகத்துக்குக் காரணமாக நின்ற தொம்பிச்சி நாயக்கனுடைய மனைவி மக்களைச் சிறையாகப்பிடித்துக் குமார கிருஷ்ணப்பரிடமனுப்ப, இவர் மஹாராஜதந்திரியாகையால் உடனே அவர்களைச் சிறையிலிருந்து விடுதலை செய்ததோடு, யுத்தச் செலவுக்குப்பிடித்த பணத்தைப் பாளையப்பட்டிலிருந்து கொடுப்பித்தும், அவர்கள் ஜீவனும்சத்துக்காகப் பரமக்குடிக்கிராமத்தைக் கொடுத்தும், மூத்த மகனுக்குப் பாளையக்காரன் என்று பட்டத்தைச் சூட்டினார்.

இந்தக்காலத்தில் இலங்கையிலிருக்கும் கண்டிராஜன், தொம்பிச்சிநாயக்கனுக்கு உதவியாக இருந்து அந்தக்காலத்தில் அதிக உதவிசெய்து, வேறு பாளையக்காரர்களைச் சண்டைக்குத் தூண்டிவிட்டதன்றியும், நாயடு ஸமஸ்தானத்தைப்பற்றிப் பரிகாசமாகப் பேசி ஹேளனம்செய்துவருவதாகவும் சங்கதிதெரிந்து, அவன் கொட்டத்தை அடக்கக் குமாரகிருஷ்ணப்பநாயுடு யுத்தகோலமாகப் புறப்பட்டனர். அவருடன் அவருக்குட்பட்ட 52-பாளையக்காரர்களும், அவர்கள் இனத்தாரும் சேர்ந்து, இலங்கைக்கு ஸ்ரீ ராமர் கட்டிய வாராவதியின் ஒன்பதாவது கல்லுக்கருகிற் போய்க் கண்டிராஜனுக்கு தாம் யுத்தசன்னத்தமாக வந்திருக்கிற சங்கதியைத்தெரிவிக்க, அக்கண்டிராஜன் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளாமல், முனைமுகத்தில் நிற்க மனமுவந்து தனது நான்கு மந்திரிகளோடும், அஷ்ட (8) தச

நாதர்களுடன், 40,000 சேனையைச் சண்டைக்கனுப்பி, ஆயுதங்களுடன் நிற்கச்செய்தான். இதையறிந்த குமாரகிருஷ்ணப்பநாயுடுவும் தமது தளகர்த்தன்வசம் 20,000-சேனையை முன் அணியாகவும் பின் அணியாகவும் வகுத்தும், அப்பின் அணியைத் தாமே நடத்திக் கொண்டுபோய்ச் சண்டை செய்ய, இருபக்கத்திலும் பிரமாதமாகப் பிராணச்சேதமுண்டாகி, கடைசியில் கண்டிராஜனுடைய மந்திரிகளில் இரண்டுபெயரும், அஷ்டதசநாதர்களில் ஐந்துபெயரும், அநேக ஆயிரம் பதாதிகளும் பிடிபட்டுச் சிறையாக, அவர்களுக்குக் குமாரகிருஷ்ணப்பர் யுத்தத்திலுண்டான வெட்டுக்காயங்களை ஆற்றி ஆதரித்துத் தனித்தனிக் கூடாரங்களில் தங்கும்படிசெய்வித்து உபசரித்துவர; மறுநாட்கண்டிராஜனுடைய நான்குமந்திரிகள் வந்து குமாரகிருஷ்ணப்பரை வணங்கி, கண்டிராஜன்செய்த அக்கிரமங்களுக்கும் அவமானத்துக்கும் தக்கபடி மன்னிப்புக் கேட்டுக்கொண்டும், இந்த யுத்தச் செலவுக்குப்பிடித்த தொகைக்குத்தக்க மாகாணங்களைக்கொடுத்தாகிலும், அல்லது பிணைவைத்தாகிலும் கடன்கட்டி வருவதாகவும்; இவ்வளவுடன் சண்டையை நிறுத்தவேண்டுமென்றும் கேட்டுக்கொள்ள, குமார கிருஷ்ணப்பரும் சம்மதித்து, அம்மந்திரிகளோடு தக்க தமது இராஜபாரியை அனுப்ப, கண்டிராஜன் கேட்டு இப்படிப்பட்ட சமாதானத்துக்கு வரத் தனக்கு இஷ்டமில்லையென்றும், சண்டைக்குத்தயாராக இருக்கச்சொல்லென்றும், சொல்லியனுப்பிவிட்டு 60,000 சிங்களியர்களையும் 8000-காப்பிரிகள் (போர்த்துகியர்) சேனைகளையும் கூட்டிக்கொண்டு போர்க்கு வந்தான். வந்தாலுமென்ன? இந்த 60,000 சிங்களிகளும், 8000 காபிரிகளும் முன்பின் போர் முகத்தையறியாத காட்டாள்களாக இருந்தபடியால், யுத்தப்பயிற்சியை முறையாகக் கற்றறிந்த மதுரைச் சேனையோடு சரியாகச்சண்டை செய்யச் சக்தியற்று, நல்ல சமயத்தில் நான்குபக்கமும் ஓடிப்போக, கண்டிராஜனும், அவனுடைய ஆப்தபந்துக்களான பத்துப்பெயருமாத்திரம் கடைசிவரை கிரமமாகச் சண்டைசெய்ய, மற்றவர்கள் கைதிகளாகப் பிடிபட்டார்கள். இதுபாதிரியாகவே கண்டிராஜனையும் உயிருடன் பிடிக்கப் பிரபல பிரயத்தனப்பட்டும் முடியாமற் கடைசியிற் குமார கிருஷ்ணப்பருடைய அம்பினால் அடிபட்டு அடியற்ற மரம்போல் விழுந்து இறந்தான்.

கண்டிராஜன் கதறி விழுந்து சாகவே, கதிரவனும் மேற்கே சாய்ந்து அஸ்தமனமாயினான். கண்டி ராஜ்யம் குமார கிருஷ்ணப்பர் வசமாகியதால் உடனே பிருதுக்கொடியைக் கோட்டையின்மேல் நட்டு, இறந்துபோன கண்டிராஜனுடைய பிரேதத்தைத்தேடி எடுத்து, தக்க மரியாதையுடன் தகனம் செய்வித்தும், அவர் மனைவிமக்களுக்கு வேண்டிய உதவிகளைச்செய்வித்தும், அங்கு மூன்று நாளிருந்து, அந்தக்கண்டிநாட்டுக்குத் தமது மைத்துனர் விஜயபூபால நாயுடுகாருவை இராஜாவாக நியமித்துவிட்டு ஜயசீலராக மதுரைக்குத்திரும்பிவந்தார்.

---

## இலங்கைக் கண்டிராஜ ஸமஸ்தானம்.

இந்த இலங்கைக் கண்டியில், விஜய பூபால மஹாராஜருக்குப் பிறகு (2) கொண்டசால மஹாராஜரும் (3) அங்கதாங்கித மஹாராஜரும், (5) இராஜாதிராஜ மஹாராஜரும், (6) விக்கிரமசிம்ஹள மஹாராஜரும் முறையே ஆண்டுவந்தார்கள். இவர்களுக்கு வெள்ளிக்குறிச்சியில் இருந்த புராதன விசுவநாத நாயுடு சந்ததிகளாகிய இராமகிருஷ்ண நாயுடு, நாராயண நாயடு, பங்காரு திருமலை நாயுடு இவர்களுடைய குமாரத்திகளையும்—பிறகு தஞ்சை சமஸ்தானம் மன்னாருசாமி நாயுடு குமாரத்திகளையும் விவாஹம் செய்துவைத்தாலும், சந்ததிகளற்றுப்போனதாகத்தெரியவருகிறது. இப்போது தஞ்சை ஜில்லா திருவையாற்றில் சப்ரிஜிஸ்டராக இருக்கும் ஸ்ரீ மகாராஜா—தியகசிம்ஹலராஜவர்களும், அவருக்கு சம்பந்தப்பட்டு இப்போது வெள்ளிக்குறிச்சி முதலான இடங்களிலிருக்கும் சிலரும், இந்த கண்டி சமஸ்தானபதிகளுடைய சந்ததிகளாகி இங்கிலீஷ் கவர்மெண்டாரிடத்தில் (தாமது இலங்கை இராஜ்யத்துக்காக பென்ஷன்) நன்கொடை பெற்று வருவதாகக் கேள்வி. இது நிற்க,

குமார கிருஷ்ணப்பர் மதுரைக்கு வந்துசேரவே, மைமதியர் வடக்கே 1564-ம் வருஷம் விஜயநகரத்தாரோடு பிரமாதச் சண்டை செய்ததில் இராமராஜா இறந்துவிட்டபடியால், சமஸ்தானத்துக்குள் கலகங்களுண்டாகி, விஜயநகரத்தாருடைய தென்னாடுகளை அரியநா

யக முதலியாருக்குக்கொடுத்து அவரை ஆண்டுவரும்படிசெய்யவும், குமார கிருஷ்ணப்பரை வடநாடுகளுக்கு அதிபதியாக நியமிக்கவும் யோசித்தார்கள். இதையறிந்த அரியநாயகம் தமது ஆசாரியரிடம் சம்மதி கேட்க, அவர் ஒரு தேசத்தை ஆண்டுவரும் வேலை க்ஷத்திரிய ஜாதியாருக்கே பொருந்தியது, வைசியனும் வேளாளனுமாகிய உனக்குத்தகாதெனத்தடுத்துச் சொல்ல, குரு வாக்கியத்தைத் திருவாக்காகக்கொள்ளும் அரிய நாயகமும், அதுசங்கதியை விஜயநகரத்தாருக்கு அறிவிக்க, அவர்கள் அரியநாயகத்தை மதுரை, மைசூர், தஞ்சை முதலான தென்னாடுகளுக்கு விசேஷ விசாரணை மந்திரியாகவும், தளகர்த்தராகவும் இருக்கும்படி கேட்டுக்கொண்டமையால்; அரியநாயகரும் அதற்குச் சம்மதித்து, இச்சமஸ்தானங்களுக்கு இடையில் தாம் வசிப்பது உத்தமமெனக்கருதி 1566-ஆம் வருஷம் மதுரைக்கடுத்த சோழவந்தான் கிராமத்தில் ஒரு சிறு கோட்டையையும் அதற்குள் 300-வீடுகளையும் கோயில், குருமடம் முதலானவைகளையும் கட்டுவித்துக் காஞ்சீபுரத்துக்கடுத்த மெய்ப்பேட்டியிருந்த தமது நெருங்கிய பந்து மித்திரர்களையும், சிவாசாரியரையும் தருவித்து அங்குவந்து வசிக்கும்படி செய்வித்தும், அவர்களுக்கு உதவியாகப் பார்ப்பார்முதற் பறையனீறாகப் பலவேலைக்காரர்களை உதவிசெய்ய நியமித்ததன்றியும், மற்ற சாதாரண பந்துமித்திரர்களை நகரி, திருமங்கலம், பட்டனேரி முதலான கிராமங்களிலும் குடியேற்றினார். இப்படிக்குடியேற்றவே, பாண்டிநாட்டாருக்கு இவரிடத்தில் நம்பிக்கை அதிகமுண்டாகியதனால், நாட்டிற் கலகமில்லாமற் குடிகள் சுகமாக வாழ்ந்து வந்தனர்.

இப்படி நாட்டிற் கலகமற்றுப்போகவே, குமார கிருஷ்ணப்பருக்கு வேறு வேலையற்றுப் பாளையங்கோட்டைக்குக் கிழக்கில்தமது பெயரால் கிருஷ்ணாபுரம் என்ற நகரத்தையும், அதில் சைவ வைஷ்ணவக் கோயில்களையும், குளத்தையும், பிராமணர்களுக்கு அக்கிரகாரங்களையும் கட்டிவைத்ததோடு; திருநெல்வேலிக்கு மேற்கேயுள்ள கடையம் கிருஷ்ணாபுரமென்ற நகரங்களையும் கட்டிக் குடிகளுக்கு உதவிசெய்து பாண்டி நாட்டைப் பத்துவருஷம் ஆண்டு 1573-ம் வருஷம் பரமபதம் அடைந்தார். கனம் டெயிலர் கணக்கின்படி

சகாப்தம் 1411-௵ வெகுதானிய வருஷமுதற் கீலகவருஷமாகிய 31-வருஷம் ஆண்டதாகத் தெரியவருகிறது.

## ஸ்ரீ கிருஷ்ணப்ப அல்லது பெரிய வீரப்பநாயடு, இரண்டாம் விசுவநாதநாயடு சமஸ்தானம்.

(கி. பி. 1573-ஆம் வருஷம் முதல் 1595-ஆம் வருஷம் வரை.)

கீர்த்திமானாகிய குமாரகிருஷ்ணப்பருக்குப் பிறகு அவருடைய மூத்த குமாரராகிய கிருஷ்ணப்ப அல்லது பெரியவீரப்ப நாயுடுவும்; சிறிய குமாரர் இரண்டாவது விசுவநாத நாயுடுவும் துவிராஜர்களாகப் பாண்டியநாட்டிற்குப் பட்டாபிஷேகம் செய்யப்பட்டார்கள். இவர்கள் காலத்திலும் அரியநாயக முதலியாரே மந்திரியாக இருந்தபடியால், நாட்டிற் கலகமற்றுப்போக, இராஜ குமாரர்கள் அரண்மனையில் ஆனந்தமாகக் காலம் கழித்தார்கள். இவர் காலத்தில் விசுவநாதர் குடும்பத்தைச்சார்ந்த ஒருவாலிபனுடைய தூண்டுதலினாற் காளையார் கோயிலிலிருந்த மாவலிவாணராஜா குட்டிக்கலகம் செய்ய எத்தனப்பட, உடனே அக்கலகத்தை அடக்கி விட்டனர். பிறகு திருச்சிராப்பள்ளிக் கோட்டையைப் பலமுடையதாக்கியும், சிதம்பரங்கோட்டையைக் கட்டிவைத்தும், பிராமணர்களுக்கு அநேக அக்கிரஹாரங்களையும் நியமித்தார்கள். இவர்களில் இளையவராகிய விசுவநாதர் முதலில் இறந்துவிடப் பெரியவீரப்பகிருஷ்ணர் 1585-ம் வருஷம் பரமபத மடைந்தார். கனம் டெயிலர் சரித்திரப்படி சகாப்தம் 1438-கி. பி. 1516. சௌமிய வருஷம்முதல் யுவ வருஷமாகிய 27-வருஷங்களாண்டார்.

## குமார கிருஷ்ணப்பநாயடு இலிங்கப்பநாயடு, விசுவப்ப நாயடு ஸமஸ்தானம்.

(கி. பி. 1595முதல் 1602-வரை.)

---

பெரிய கிருஷ்ணப்பநாயடுவின் குமாரர்களாகிய இலிங்கப்பநாயடுவும், விசுவப்பநாயடுவும் பட்டத்துக்கு வந்தகாலத்தில், மஹாமதியூ

கியும், மதுரைநாட்டின் மேதாவியும், மதுரைக் கோயிலில் ஆயிரக்கால் மண்டபம் கட்டி வைத்தவரும், பாண்டிய நாட்டிற்கும் பாளையக்காரருக்கும் பிதாவைப்போன்றவருமாகிய அரியநாயக முதலியார் 1600-வருஷம் சிவபதமடைந்தார். அவர் இறந்தது பலவிதத்திலும் விசனிக்கத்தக்கதேயாகிலும், சில விஷயங்களில் சந்தோஷிக்கவேண்டியிருக்கிறது. அதாவது அவர் புராதனரும் பிடிவாதமுடையவருமாகையால், நாட்டில் நவநாகரிகங்கள் தலைக்காட்டத் தடையாயிருந்தது.

விசுவநாதநாயடுக்குப் பிறகு, மதுரையில் ஆண்ட மூன்று தலைமுறை நாயடுமார்களும் வயதிலும் உலக அனுபவத்திலும் கல்வி கேள்விகளிலும் அரியநாயக முதலியாருக்குத் தாழ்ந்தவர்களானபடியால்; அவர்கள் தம்மூதாதைகளுடைய உத்தரவின்படி அரியநாயக முதலியாரைப் பிதாவைப்போல் பாவித்து அவர் வார்த்தையை மீறி நடக்க மனமெழாமலிருந்தார்கள், ஆகவே, அந்த வாலிபநாயடுமார்கள் தம்மிஷ்டப்படி நாட்டில் நவநாகரிகத்துக்கேற்றபடி காரியஞ்செய்ய ஊக்கமற்றிருந்தார்கள். இப்போது அரியநாயக முதலியார் இறந்து விட்டபடியால், நாயடுமார்கள் நாட்டில் இஷ்டப்படி புதிய சீர்திருத்தங்களைச்செய்ய ஆரம்பித்தார்கள்.

இப்படி ஆரம்பித்தாலும், இவர்களுடைய பாண்டியநாடு விஜயநகர சமஸ்தானத்துக்குள்ளடங்கிய ஒருபாகமாக இருந்ததேயொழிய, சுதந்திர நாடாகவில்லை. அப்போது 1602-ஆம வருஷம் விஜயநகர சமஸ்தானம் பெனுகொண்டாவில் ஸ்தாபிக்கப்பட்டு, அதற்கு ஸ்ரீ வேங்கடபதிராயலு பிரபுவாயிருந்தார். இந்த வேங்கடபதிராயலு இராமராயலுக்குப் பிறகு 21-வருஷம் ஆண்டு 1613-ஆம் வருஷம் இறந்துபோக; மதுரைநாயடு சமஸ்தானம் சுதந்தர நாடாகியதாக 1609-ஆம் வருஷச் சாசனத்தினால் வெளியாகிறது. அரியநாயக முதலியார் இறந்தவுடனே, விசுவப்பர் அல்லது 3-வது விசுவநாதநாயடுவும் இறந்துபோக; 1602-ஆம் வருஷம் இலிங்கப்ப நாயடுகாரும்—கனம் டெயிலர் சரித்திரப்படி சகாப்தம் 1458-(கி. பி. 1537) தாதுமுதல் மன்மத வருஷமாகிய 20-வரு ஆண்டபிறகு—பரபத

மடைய, அவர் குமாரர் முத்துகிருஷ்ணப்பநாயடுகாரு சிங்காசன மேறினர்.

## ஸ்ரீ முத்துக்கிருஷ்ணப்ப நாயடுகாரு ஸமஸ்தானம்.

(1602-ஆம் வருஷம் முதல் 1609-ஆம் வருஷம் வரை.)

இந்த முத்துக்கிருஷ்ணப்ப நாயடு சிங்காதனமேறிச் செங்கோலைக் கைக்கொண்டவுடனே, இவரது சிற்றப்பனும், பொறாமையும் பண ஆசைப்பேயும் பிடித்தவனுமாகிய கஸ்தூரி இரங்கைய நாயடு, முத்துக்கிருஷ்ணப்பரை வஞ்சமோசமாகப் பிடித்துச் சிறையில்வைத்துவிட்டுத் தானே பாண்டியநாட்டின் அரசன் என்று பறையடித்துச் சிங்காசனமேறியதில்; இந்த அக்கிரம நடவடிக்கையைக்கேட்ட முத்துக்கிருஷ்ணப்பருடைய ஆப்த பந்துமித்திரர்கள் அடுத்த வாரத்திலே, கஸ்தூரி இரங்கயநாயடு சந்தியாவந்தனமடத்தில் கண்களை மூடிக்கொண்டு சுவாமியைத் தொழுதுகொண்டிருக்கும் சமயத்தை யறிந்துபோய் அவர்சிரசை ஒரே வெட்டில் வெட்டித்தள்ளிப் பாண்டியநாட்டுப்பட்டத்தை மறுபடியும் முத்துக்கிருஷ்ணப்ப நாயடு வசமாக்கினார்கள். சமஸ்தானத்தில் அக்கிரமமாக ஒருவர் பட்டத்தைப்பிடுங்க, அப்படிப் பிடுங்கியவரைப் பிரேதமாகும்படி செய்த அக்கிரமநடவடிக்கைகளில் இதுவே முதலாம். இந்த விஷயத்தைப்பற்றி கனம் டெயிலர் சரித்திரத்தில் வேறுவிதம் நடந்ததாக எழுதப்பட்டுள்ளது. அதாவது—விசுப்பநாயடுகாருக்குப் பிறகு சமஸ்தானத்தை அவர் குமாரர் குமாரகிருஷ்ணப்ப நாயடும்—அவர் தம்பி கஸ்தூரி ரங்கநாயடுமாகச் சகாப்தம் 1475 (கி. பி. 1553) துன்முகி முதல், பரிதாபி வருஷமாகிய 17-வருஷங்களாண்டதாகவும், பிறகு விசுவப்பநாயடு குமாரர் முத்துக்கிருஷ்ணப்ப நாயடு வாலிபராக இருந்தபடியால், தம்பி கஸ்தூரி இரங்கய்யநாயடு சகாப்தம் 1482 (கி. பி. 1660) பிரமாதி முதல் பரதாபி-வரை வரையில் 7-வருஷம் ஆண்டு வந்ததாகவும் எழுதப்பட்டிருக்கிறது. இப்படிப் பாண்டிநாட்டைப் பெற்ற முத்துக்கிருஷ்ணப்ப நாயடுகாலத்தில் நாட்டிற் கலகம் சண்

டைசச்சரவுகளில்லாமையால் இவர் குடிகளுக்கு உபகாரியாகவே யிருந்தார்.

பல குளங்களையும், அக்கிரஹாரங்களையும் உண்டாக்கியும், மதுரைக்கும் ஸ்காந்தமலைக்கும் இடையில் தம்பெயரால் கிருஷ்ணபுரம் என்ற நகரத்தைக் கட்டியும்வைத்தார். இப்படிப்பட்ட காலத்தில் இராமேசுவரத்துக்கு யாத்திரை செய்பவர்கள் மஹாபயங்கரமான காடுகளைத் தாண்டிப்போகவேண்டி யிருந்தமையாலும், அவ்வழியில் திருடர்கள் கையில் (யாத்திரைக்காரர்) அகப்பட்டு அவஸ்தைப்பட்டு அலைந்து, இந்தப் பாண்டிநாட்டுமன்னரான முத்துக்கிருஷ்ணப்ப நாயடுகாருவிடம் முறையிட்டழுது வந்தமையாலும், இந்த ராமேச்சுவரயாத்திரைக்காரரைப் பாதுகாக்க நியமித்த காரியக்காரர்கள், தம் காரியங்களைக் கிரமமாகச் செய்யாமையால் இவ்வகைக் கஷ்டங்கள் சம்பவிக்கின்றன வென்றறிந்து, நாயடுகாரு 1605-ஆம் வருஷம் இராமநாதபுரம் சேதுபதிகுடும்பத்தைச் சார்ந்த ஸ்ரீ சடைக்கதேவ உடையாரே இத்துன்பங்களை நீக்க வல்லவரென்று கண்டு இராமநாதபுரத்துக் கடுத்த போகலூரில் சேதுபதி என்று பட்டாபிஷேகம் செய்விக்க, அந்தச் சடைக்கத்தேவ உடையார் சேதுபதியும் உடனே காடுகளை அழித்து, அவைகளை நாடுகளாகவும், நந்தவனங்களாகவும் மாற்றியும், திருடரை நாசஞ்செய்தும், யாத்திரைக்காரர் சுகமாக யாத்திரை செய்துவருமபடி செய்வித்தும், இராமநாதபுரம் போகலூரை விருத்தியாக்கியும், அங்கே கோட்டைகளைக் கட்டுவித்தும், வடக்கு வட்டகை, காளையார்கோவில், பட்டமங்கலம் முதலான இடங்களைப் பிடித்து வருஷாந்தரம் நல்ல வருமானத்தை வசூல் செய்வித்து மதுரை சமஸ்தானாதிபதிக்குக் கப்பமாய் அனுப்பி அவருடைய அன்பையும் பிரீதியும் பெற்றுடன்—அநேக வருஷங்கள் ஆண்டு 16 1-ஆம் வருஷம் இறந்துபோக, அந்த இராமநாதபுரம் சமஸ்தானத்துக்கு அவருடைய குமாரர் கூட்டனைச் சேதுபதியாக்கியதாக மதுரைச்சரித்திரத்தில் மிஸ்டர் நெல்சன் எழுதியிருக்கிறார். இந்தச் சேதுபதிகளின் ஆதி அந்தஸ்தைப்பற்றி இராமநாதபுரம் மானேஜர் ஸ்ரீமான்-பொன்னுசாமித் தேவரவர்களுடைய மெமோராண்டம் என்னும் குறிப்பில் வேறுவிதமாகச் சரித்திரம் எழுதப்பட்

டிருக்கிறது. அதை இராமநாதபுரம் சேதுபதி சரித்திரத்தில் விவரமாகக் காணலாம். இப்படிக் குடிகளுடைய நன்மையைக்கருதியும், இராமேச்சுவர யாத்திரைக்காரருடைய சுகத்தைக் கருதியும் பாடுபட்டுழைத்த முத்துக்கிருஷ்ணப்ப நாயடுகாரு—முத்துவீரப்ப நாயடு, திருமலைநாயடு, குமாரமுத்து வீரப்பநாயடு என்ற மூன்று குமாரர்களைவிட்டு 1609-வருஷம் அல்லது கனம் டெயிலர் கணக்கின்படி சகாப்தம 1521-ம் (கி. பி. 1590) ரவுத்திரி முதல் விரோதி விகிர்தியாகிய 30-ஆம் வருஷம் ஆண்டு பரமதமடைந்தார்.

(இன்னும் வரும்.)

௨

சிவமயம்.

# இராமாவதாரச்செய்யுட் பாடாந்தரம்.

(அ-ம் தொகுதி ௬௫-ம் பக்கத்தொடர்ச்சி.)

## சம்புமாலி வதைப்படலம்.

இப்படலத்தின் முதலிலே;

> என்றலு மரக்கர் வேந்த னெரிகதிர் வாளை நோக்கிக்
> கன்றிய பவளச் செவ்வா யெயிறுபுக் கழுந்தக் கவ்வி
> யொன்றுரை யாடற் கில்லா னுடலமும் விழியுஞ் சேப்ப
> நின்றவா ளரக்கர் தம்மை நெடிதுற நோக்குங் காலை.

என ஒரு செய்யுள் காணப்படுகின்றது. இதன் முதற்படலத்திறுதிச் செய்யுளிலே "உண்டதக்குரங்கின மொழிவதன் றென்றார்" எனக் கூறியதோடு பொருந்தவருதலின் இது பொருத்தமுடைத்தேயாம். நோக்குங்காலைக் கூம்பினகையனுய்நின்ற சம்புமாலி என்பவனைப் பாராஎன வருஞ்செய்யுளுடன் கூட்டிப்பொருள்கொள்க. நோக்குங்காலை நின்ற சம்புமாலி என்க.

## பஞ்சசேனுபதிகள் வதைப்படலம்.

இலங்கு வெஞ்சினத் தஞ்சிறை யெறுழ்வலிக் கலுழ
னுலங்கின் மேலுருத் தன்னநீ குரங்கின்மே லுருக்கி
னலங்கன் மாலைநின் புயமினைந் தல்லுநன் பகலுங்
குலுங்கும் வன்றுயர் நீங்குமால் வெள்ளியங் குன்றம்.

என்னும் உ-ம். செய்யுளில், "உலங்கின்மேலுருத்தன்னநீகுரங் கின்மே லுருக்கின்" என்பது "உலங்கின்மேலுருத்தென்ன நீகுரங் கின்மேலுருக்கின்" எனக்காணப்படுகின்றது. 'அன்ன' எனக்கொள் ளின் அது பெயரெச்சமாய் வினையோடு முடியாமையானும், உருக் கின் என்பதற்கு முடிபாகக்கொள்ளுதல் பொருந்தாதாகலானும் பின் னையதேபொருத்தமுடைத்து. முன்னரும் 'சேறியேல்' என்னும் எச்சத்தை 'பூக்கும்' என்பதோடுமுடித்தும், பின்னரும் சேறின் என்பதை 'பூக்கும்' என்பதோடு முடித்தும் பொருள்கொள்ளுமாறு வைத்திருத்தலானும் அதுவே பொருத்தமாதல் நன்குபெறப்படும். உலங்கு - கொசுகு. உருத்தென்ன உருக்கின் நீங்கும் எனமுடிக்க.

உலக மூன்றிற்கு முதன்மைபெற் றேரென வுயர்ந்தார்
திலக மன்னுற வணங்கினர் கோயிலிற் றீர்ந்தா
ரலகி றேர்பரி கரியொடாள் மிடைந்தபோ ரரக்கர்
தொலைவி லாதன கதுமென வருகெனச் சொன்னார்.

என்னும் ரு-ம் செய்யுளில், 'உலகமூன்றிற்கு முதன்மைபெற் றேரெனவுயர்ந்தார்' என்பது 'உலகமூன்றையுமொருங்குபெற்றாரெ ன வுவந்தார்' எனக் காணப்படுகின்றது. தமக்குப் போர்கிடைத்த மையினாலே உலகமூன்றையுந்தாமொருங்கு பெற்றுக்கொண்டவரை ப்போல மகிழ்ந்தார் என்பதே சிறந்த பொருளாதலின் பின்னையதே பொருத்தமுடைத்து. இன்னும் 'தொலைவிலாதன' என்பது 'தொ லைவிருனையை' எனக் காணப்படுகின்றது. கரியும்பரியுமாளுமாக மிடைந்த அரக்கர்சேனையை என்று பொருள்கோடலே சிறப்புடை மையின் பின்னையதே பொருத்தமுடைத்து. அரக்கர் தானை என்க. பின்னரும் இங்ஙனமே "ஆழியந்தேருமாவுமரக்கரு முருக்குஞ்செங் கட்—சூழிவெங்கோபமாவுந் துவன்றிய நிருதர்சேனை" எனக்கூறு

தல் காண்க. அரக்கர் தொலைவிலாதன என்பது பொருத்தமின்மை காண்க. மிடைந்தனவாகிய தொலைவில்லாதன என்றல் இத்துணைச் சிறப்பின்று.

ஆறு செய்தன வானையின் மதங்க ளவ்வாற்றைச்
சேறு செய்தன தேர்களின் சில்லியச் சேற்றை
நீறு செய்தன புரவியின் குரமற்றை நீற்றை
வீறு செய்தன வயப்பரிக் கலினமா விலாழி.

என்னும் ௬-ம் செய்யுளில் "மற்றைநீற்றை" என்பது மற்றந் நீற்றை' எனக் காணப்படுகின்றது. அந்நீற்றை எனச் சுட்டிவருதலே சிறப்பாதலிற் பின்னையதே பொருத்தமுடைத்து. மற்று அசை.

வஞ்சமுங் களவும் வெஃகி வழியலா வழிமே லோடி
நஞ்சினுங் கொடிய ராகி நவைசெயற் குரிய நீரார்
வெஞ்சின வரக்கரைவ ரொருவனே வெல்லப்பட்ட
வஞ்செனும் புலன்க ளொத்தா ரவனுநல் லறிவை யொத்தான்.

என்னும் ௬௪-ம் செய்யுளில், 'வெல்லப்பட்ட' என்பது 'வெல்லப்பட்டார்' எனக் காணப்படுகின்றது. வெல்லப்பட்ட எனக்கொள்ளின்; அது புலனொடுமுடிந்துபொருந்தாமையின் பின்னையதே பொருத்தமுடைத்து. அரக்கராகிய வெல்லப்பட்டவர் ஒத்தனர் எனமுடிக்க. அன்றி, முற்றாக்கி, அவர் ஒத்தார் என எழுவாய் வருவித்து முடிக்கினுமமையும். அவன் என்னுஞ் சுட்டிற்கு முன் ஒருவன் என்பது அனுமானைக்குறித்து வருதலே சிறப்பெனக.

தானையு மூலந்த தைவர் தலைவருஞ் சமைந்தார் தாக்கப்
போனபின் மீள்வோம் யாமே யதுவும்போர் புரிகிலாமை
வானையும் வென்று ளோரை வல்லையின் மடிய நூறி
யேனைய ரின்மை சோம்பி யிருந்ததக் குரங்கு மென்றார்.

என்னும் ௬௭-ம் செய்யுளில், 'போனபின் மீள்வோம்யாமே யதுவும்போர்புரிகிலாமே' என்பது 'போனவர் தம்மில் மீண்டோம் யாமமர் புரிகிலாமை' எனக்காணப்படுகின்றது. மீள்வேம்யாமே என்பது எதிர்காலமாய் வருதலிற்பின்னையதே பொருத்தமுடைத்து.

## பாசப்படலம்.

மாறெழு வாட்படை பத்திரு வெள்ள
மாறிடு கோடியின் மேலு மமைந்தார்
கூறிடு வெள்ள மிடைந்தது குந்த
வீறுடை மாருதி மேல்வரு சேனை.

என்னும் ௨௩-ம் செய்யுளில், 'மாறெழுவாட்படை பத்திருவெள்ளம்' என்பது, 'பாறெழு வாட்படை பத்திரு வெள்ளம்' எனக்காணப்படுகின்றது. மோனைக்கியைந்து வருதலிற் பின்னையதே பொருத்த முடைத்து.* பாறு - பருந்து.

ஆய பெரும்படை செல்வது கண்டு
மாய மிகுந்திறல் வானர வீரன்
நாய கனைத்திசை நோக்கி வணங்கி
மேயதொ ரின்பம் விளங்கிட நின்றான்.

என்னும் ௨௯-ம் செய்யுளில், 'ஆயபெரும்படை செல்வதுகண்டு' என்பது 'ஆயபெரும்படை யன்னதுகண்டு' எனவும், 'நாயகனைத்திசை நோக்கி வணங்கி' என்பது 'நாயகனைத்திசைநாடி வணங்கி' எனவும் காணப்படுகின்றன. மோனைக்கியைய வருதலிற் பின்னையவே சிறப்புடையன. நாடல் - நோக்கல்.

இன்னும் "ஆழியனானை" என்னும் ௩௦-ம் செய்யுளின் பின்னருள்ள ஆறு செய்யுட்களும் பொருட்பொருத்தமின்றி மிகவுமாறுபடுகின்றன. அவற்றை உண்மையாக நிச்சயித்தற்கு பலபிரதிகள் வேண்டுமாதலின், அவற்றை யாம் இங்கே தராதொழிந்தனம். எம்மிடத்திலுள்ள சில பிரதிகளில் நன்றாக நோக்கியவிடத்தும் அவை புலப்படவில்லை. இன்னும் இந்தியாவிலுள்ள சிலபிரதிகளையும் பார்த்தேம். அவற்றினாலும் பூரணமாக நிச்சயிக்கக்கூடவில்லை. ௩௦-ம் செய்யுளினிறுதியில் "கோழியினுக்கிய கூவிடுகின்றான்." என்று கூறியதற்கியைய அடுத்தசெய்யுளில், "மாருதி கூவ மகிழ்ந்தனராகி" எனச் சிலபிரதிகளில் காணப்படுகின்றது. அது; அச்சுப்பிரதியில்

"மாருதி கூறி மகிழ்ந்தன ளாகி" எனக் காணப்படுகின்றது. அது, ௩௦-ம் செய்யுளினிறுதிக்கு மாறுபடுகின்றது. இங்ஙனமே பின்னைய செய்யுட்களுமாறுபடுகின்றன. அவற்றை யாம் பிரதிகள் கிடைத்துழி ஆராய்ந்து விளக்குதும்.

ஊழி யெழுந்துல கத்தை யொடுக்க
வாழிய ருனை யரக்கர்க டங்க
வேழுல கும்மிட மில்லை யெனும்படி
யாழி கிளர்ந்தன வென்ன வளைத்தான்.

என்னும் ௩௬-ம் செய்யுளில், "ஆழிகிளர்ந்தனவென்ன வளைத்தான்" என்பது "ஆழிகிளர்ந்தன வன்றென வார்த்தார்" எனக்காணப்படுகின்றது. முற்செய்யுளில் "சென்றனைவுற்ற தரக்கர்கள்சேனை" எனக்கூறுதலின், இதில் அச்சேனைகள் ஆரவாரித்தார்கள் என வருதல் பொருத்தமாதலாலும், மோனைக்கு இயைந்து வருதலாலும் பின்னையதே பொருத்தமுடைத்து.

இன்னும் இச்செய்யுளின் பின்னர்,

சந்திர னருக்கனொடு தாரகை யினங்கள்
சிந்திட வெழுந்துதிசை யீண்டவெதிர் செல்வே
வந்தவிவ் வரக்கர்குழு வன்மையிது வென்று
விந்திரனை யன்றியுல கேழும்வெலு மென்றான்.

என ஒரு செய்யுள் காணப்படுகின்றது. இதுவும் ஈண்டுப் பொருத்தமாதல் காண்க.

சி. கணேசையர்.

## சென்னைச் சாஸனபரிசோதகரது வருஷாந்த

# அறிக்கைப்பத்திரம்.

ஐந்து வருடங்களுக்கு முன்னர் தென்காசியிலிருக்கும் விசுவ நாதஸ்வாமி கோயில் முன்கோபுரத்தில் என்றற் சில சாஸனங்கள் கண்டு பிடிக்கப்பட்டு, அவைகளின் சரித்திர விசேஷமும், பாட்டுக் களின் இயற்கையும் தமிழறிஞர்கட்குப் பயன்படும்படி, வெளி யாக்கப்பட்டன. இரண்டுமாதங்கட்குமுன்னர் மதுராஸ் 'இலாகா' சாஸன பரிசோதகரான ஸ்ரீமாந்-ஹெ. கிருஷ்ணசாஸ்திரி அவர் கள் இப்பாட்டுக்களாலாகிய சாஸனங்களைக்குறித்துத் தம்மபிப்பிரா யங்களைத் தம் வருஷாந்த அறிக்கைப்பத்திரத்தில் எழுதியுள்ளார். அவைகளைப்படித்து நோக்கியதில் எம்மிருவரில் ஒருவராயினும் பற் பல விஷயங்களில் தெளிவாகப் பொருள் கொண்டிருக்கவேண்டு மென்பது வெளியாகின்றது. தமிழறிஞர்கள் தயவு கூர்ந்து சாஸ் திரிகளுடைய கூற்றுக்களை ஆராய்ந்து தங்களபிப்பிராயங்களை வெளி யிடக்கருதி அவைகளை இங்கே வரைகின்றேன்.

ஒவ்வொரு வருஷமும் பிரதி எடுக்கப்பட்ட சாஸனங்களைப் பற்றி அறிக்கையின் கடைசியில், ஓர் அட்டவணை கொடுப்பதுவழக் கம். அவ்வட்டவணையில், அரிகேசரி பராக்கிரம பாண்டியன், சக வருஷம் 1368-ல் தென்காசியிலே விசுவநாதசுவாமியின் ஆலயத்துக் கர்ப்பக்கிரகத்தைப் பழுதுபார்த்துச் செப்பனிடக்கருதி, உள்ளிருந்த தெய்வத்தைப் பாலாலயத்துக்கொண்டு வைத்தானென்றும், அங் ஙனம் செய்த தொழில் கர்ஷணை (மற்றோரிடத்து ஆகர்ஷணை என் றும் கூறுகிறார்.) என்றும் எழுதியுள்ளார். (அறிக்கை. ப-44- கிர். 507). ஆயின் 'அன்பினுடன்,' 'அடைவு திகழ்' என்னும் பாட்டுக்களை நோக்கின், இவ்வரசன் கோயிலை அபிநவமாகக்கட்டி, விசுவநாதஸ்வா மியைப் பிரதிட்டித்தானென்று மட்டுமே விளங்குகிறது. அன்றியும், அக்கோயிலின் மற்றோர் சாஸனத்தில், அவ்வரசன் சுவப்நத்தில் காசி

விசுவநாதஸ்வாமி தோன்றி, வடகாசியில் தம் கோயில் ஜீர்ணித்துப் போய்விட்டமையால், தமக்குத் தென்னாட்டுசித்திர-நதிதீரத்து தக்ஷிணகாசியாக ஓர் ஆலயம் கட்டித்தரவேண்டுமென்று சாதிக்க, அரசன் தென்காசியில் கோயில் உபாநாதிஸ்தூபி பர்யந்தமாகக்கட்டி விசுவநாதரையும் பிரதிட்டித்தானென்று கூறியிருக்கிறது. ஆதலால், அரசன் புதிதாய்க்கோயில்கட்டினனேயன்றி, பழையதோர்கோயிலை ஜீர்ணோத்தாரம் செய்தானென்று தோற்றவில்லை. ஆகமசாஸ்திரங்களில் கர்ஷணையைப்பற்றி விஸ்தாரமாக எழுதப்பட்டிருக்கிறது. இக்கர்மம் புதுக்கோயிலுக்கே செய்வது என்பதாகவே ஆண்டுத்தோன்றுகின்றது.

அரிகேசரி பராக்கிரமனை வர்ணிப்பதில், சாஸ்திரிகள் அவனுடைய மறுபெயர்களிற் சில பொன்னின்பெருமான், அரிகேசரி, பராக்கிரமமாறன், தென்னவன், பராக்கிரமகைதவன், மானகவசன், கொற்கைவேந்தன், பெருமாள்வழுதி என்று எழுதியிருக்கிறார். பராக்கிரம மாறன், ப-வழுதி, ப-செழியன், ப-தென்னவன், ப-கைதவன் முதலியன பராக்கிரமபாண்டியன் மறுபெயர்களாமோ? திவாகரம், சூடாமணி முதலான நிகண்டுகளிலும், தமிழிலக்கியங்களிலும் ஆங்காங்குப் பாண்டியன் என்னும் பொருள்கொண்டமொழிகள்—செழியன், தென்னவன் முதலியனவென்று செவ்வனே வெளியாகிறது. பொன்னின் பெருமாள் என்பதும் ஓர் மறுபெயராகக்காணப்படவில்லை. இன்றும் திருவாங்கூர், கொச்சி சமஸ்தானத்து மகாராஜாக்களை சாமானிய ஜனங்கள் என்றே கூறுவர் 'பொன்னு தம்பிரான்' இப்பொருளிலேயே, 'பொன்னின் பாண்டியன்' என்று பிற்காலத்திருந்த குலசேகரனென்ற மன்னனையும் ஓர் பாட்டு குறிக்கின்றது. (செந்தமிழ் தொ. 4-பக்கம்-119. 'ஏடியல்மாலை' என்னும்பாட்டைப் பார்க்க). பின்னும் கொற்கைவேந்தனென்பதும் அங்ஙனமே; இவை, எல்லாப்பாண்டியர்க்கும் பொதுவான பெயரேயன்றி தனிப்பெயரல்ல. 'நற்றிறம்படராக்கொற்கைவேந்தே' 'வாழி யெங்கொற்கை வேந்தே' என்று சிலப்பதிகாரத்தில் நெடுஞ்செழியனை விளித்திருப்பதுங் கவனிக்கத்தக்கது. (சில-வழக்குரைகா-வரி-30,66).

அரிகேசரி பராக்கிரமன்காலத்து வீரமாறன் என்றோர் அரசனும் ஆண்டுகொண்டிருந்தானென்று சிலசாஸனங்களால் வெளியாகி

ன்றதாக சாஸ்திரிகளெழுதியிருக்கிறார். அச்சாஸனங்களால் அவ்வீர மாறன் சக. 1342-ல் பட்டந்தரித்தான் என்று விளங்குகின்றது. இவனை, தென்காசிச்சாஸனத்தில் அபிராமனென்று கூறப்பட்டவனும், வீரமாறனென்ற மறுபெயர்பூண்டவனும், வல்லமெறிந்தவனும், வில்லவனைவென்றவனும், சக 1510-ல் பட்டம் தரித்தவனுமானவனே என்று திட்டமாய் சாஸ்திரிகள் சொல்லுகிறார். முன்னவனுக்குக் கலியுகராமனென்று மறுபெயருமுண்டு. பெயர்களாலும், காலத்தாலும், வீரத்தொழில்களாலும் மாறுபட்டவர்களை சமகாலத்தவரென்பது தகுமோ? யுக்தியுத்திக்கு ஏற்காததென்று எனக்குத் தோன்றுவது சரியோ, அன்றித்தப்போ என்பதை நண்பர்கள் அறிவிப்பின் தமிழ்நாட்டுச் சரித்திரம் அபிவிருத்தியாகும்.

அரிகேசரி பராக்கிரமன் சக 1379-ல் கோபுரப்பணியை ஆரம்பித்து "ஆறுண்டில் கற்பணி முடித்துக் கயிலைசென்"றானென்பது "காண்டகுசீர்" என்னும் பாட்டால் விளங்குகிறது (செ. தொ. 4-ப. 117). எனவே, இவ்வரசன்காலத்து கோபுரத்தின் கற்பணி மாத்திரமே முடிந்ததென்றும், கோபுரத்தின் பணிமுற்ற முடியவில்லையென்றும் எண்சிற்றறிவிற்குத் தோற்றுகின்றது. அதற்கேற்ப, 'விண்ணுடர்போற்றும்' என்னும் பாட்டில், இவன்றம்பி அழகன்குலசேகரனென்னுமன்னன் 'எங்களண்ணும்வி செய்தபணிப்படி குறையாய்க்கிடக்க வொண்ணுதெனக் கண்டுயர்ந்த (1) தட்டோடெங்கு மூன்றுவித்தான்' என்று கூறியிருக்கிறது. ஆதலால், கோபுரப்பணிமுடியாதிருந்தது, இவனால்தான் முடிந்ததென்பது தெளிவாகின்றது. ஆனாலும் சாஸ்திரிகள் பராக்கிரமனே கோபுரப்பணியை முற்றமுடித்தான் என்று ஓரிடத்திலும், மற்றோரிடத்தில், முற்றுப்பெறாத கோபுரத்தை பராக்கிரமன்தம்பி குலசேகரன் முடித்தான் என்றும் எழுதியுள்ளார். இங்ஙனம் பரஸ்பரம் விரோதமான கூற்றுக்களில் எதைச்சரியென்று கொள்வதென்பது விளங்கவில்லை. இவ்வாறு விரோதமான கொள்கைக்குக் காரணம், என்னறிவுக்கு இன்னதென்றும் விளங்கிற்றில்லை.

பாண்டியர்களில் 'பாண்டியராஜ்யஸ்தாபனாசாரியன்' 'இறந்த காலமெடுத்தவன்' என்ற பெயர்பூண்ட ஸ்ரீவல்லபனென்னுமரசன்

(1) செந்தமிழ் தொகுதி 6. பக்கம் 432.

ஒருவனிருந்தான். இவன், பலசாஸனங்களிலும் ஆஹவராமபாண்டியனுடைய மகனென்றும், ஆஹவராமன் அண்ணன் அபிராமபராக்கிரமனென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இக்கூற்றுக்களால் இவ்வரசர்களது வமிசவிருக்ஷம் அடியில் வருமாறு ஏற்படுகிறது:—

- அபிராம பராக்கிரமன்
  - பராக்கிரமண் குலசேகரன்
    - குணராமன்
    - வரதுங்க ராமன்.
  - திருநெல்வேலிப் பெருமாள் குலசேகரன்.
    - அதிவீரராமன்.
- ஆஹவராமன்
  - 'இறந்தகாலமெடுத்த' ஸ்ரீவல்லபன்.

ஆனால் ஸ்ரீமாந்-சாஸ்திரிகள் 'இறந்தகாலம் எடுத்த' ஸ்ரீவல்லபன் என்பவனும் அபிராமபராக்கிரமனும் ஒருவனென்றும், இச்சிரீவல்லபன் மகன் திருநெல்வேலிப் பெருமாள் குலசேகரனென்றும், இவன் மகன் அதிவீரராம ஸ்ரீவல்லபனென்றும் எழுதியிருக்கின்றார். அவர் அபிப்பிராயப்படி இவ்வரசர்களின் வமிசாவளி அடியில் வருமாறு ஆகும்:—

ஆஹவராமன்
|
'இறந்தகாலமெடுத்த'
ஸ்ரீவல்லபனாகிய
அபிராமபராக்கிரமன்
|
திருநெல்வேலிப்பெருமாள்
குலசேகரன்
|
அதிவீரராமன்.

இவ்விருவமிசாவளியில் எதை நம்புவதென்பது நிச்சயப்பட்டிலது. பிரத்தியக்ஷத்திலும், ஆப்தவாக்கிய பிரமாணம் அவ்வளவு

வலியுடையதென்று எனக்கு தோன்றுமையால், சாஸனங்களின் வலிமையினும், சாஸ்திரிகள் கூற்று அவ்வளவு வலியுடைத்தான தாக எனக்குத் தோற்றவில்லை. தமிழ் நண்பர்கள் எங்ஙனமெண் ணுகிறார்களோ அறியவிரும்புகிறேன்.

சாஸ்திரிகள், புதுக்கோட்டை தானசாஸனத்தை அதிவீரராம ஸ்ரீ வல்லபனே, வரதுங்கராமனுடன் சேர்ந்து கொடுத்தானென்கி றார்கள். சாஸனமோ,

ஹ்ருதவத்ஸு பௌரஸங்காதைரதிவீரராமந்ருபதௌ தேவபதே । த்ரிதஸஹதே தயநந்தநே வத்ஸகெ - ஸஹிதைஸ்ஸ்வதஸ்ஸ நாநஜேரஸ்யவதெ॥ [19] ஸ்ரீவல்லபக்ஷோணிபதெஸ்ஸ்வதஸ்யபட்டா பிஷிக்தெ ... ... ... ...

என்று அதிவீரராம ஸ்ரீவல்லபனிறந்தானென்றும், அவன் றம்பி யாகிய ஸ்ரீவல்லபனென்பவனை மந்திரிமார்களெல்லோருங்கூடி அரச னுகப் பட்டாபிஷேகஞ் செய்துவைத்தார்களென்றுந் தெளிவாகக் கூறுகிறது. இவ்விஷயத்திலும் சாஸ்திரிகளும் சாஸனங்களும் மாறு படநேர்ந்தது. இந்தவிஷயத்திலும், எனக்கு சாஸனத்தில் அதிகநம்பி க்கை உண்மையால் சாஸ்திரிகள் கொள்கை சரியாகத் தோற்றவில்லை.

'கற்றுணர்ந்தோன்' என்னும் பாட்டில், அதன் முன்னருள்ள 'சீர்கொண்ட செங்கமலை,' 'சேனுலவுவெண்டிங்கள்,' 'பற்றலர் மண்கொள்ளும்' என்னும் மூன்று வெண்பாக்களில் முறையே பாடி யுள்ள 'நாண்மங்கலம்,' 'குடைமங்கலம்,' 'வாண்மங்கலம்' என் னும் மூன்றுமங்கலங்களைப் பாடியிருக்கிறுன் கலியன் என்னுமோர் கவிராயன். ஸ்ரீமாந்-சாஸ்திரிகள் "இச்சாஸனம், வேல் வீரமாறனு கிய அபிராமன் காசிக்கலியன் கவிராயனுக்கு ஆணமங்கலம், குடை மங்கலம், வாணமங்கலமென்னும் (மூன்று) கிராமங்களைக் கொடுத் தான்" என்று வரைந்துளார்[1]. நாண்மங்கலம் முதலியவற்றின்

(1) "Records that Vil Vira-maran *alias* Abhtraman gave (?) to Kasikkaliyan Kavirayan the villages, Anamangalam, Kudaimangalam and Vanamangalam.' No. 512. p. 44. of the Ann. Rep—for 1910.

இலக்கணங்களை நன்கறியாமையாலோ, அன்றித்திருமங்கலம், சத்ய மங்கலம், கொற்றமங்கலம்; கண்டமங்கலம் என்பனபோன்றவற்றி லுள்ள மங்கலங்களில் இவையும் ஒருவகையென்றுகொண்டோ அவ்வாறு பொருள் செய்தார்! சாஸ்திரிகள் கொண்டபடி பொருள் கொள்ளுவது தகுமோ? நாண்மங்கலமென்பதையும், வாண்மங்கல மென்பதையும், ஆணமங்கலம், வாணமங்கலமென்று படிப்பது சீர் தளை முதலிய பாட்டிலக்கணங்கட்குத்தான் பொருந்துமோ? தமிழறியும் நண்பர்கள் விளக்குவாராக!

து. அ. கோபிநாத ராவ்.

உ

# புத்தகக்குறிப்பு.

—:(o):—

புதிய ஜப்பான்:—இப்பெயர்கொண்ட நூலொன்று, சென்னைச் சுதேசமித்திரன் பத்திராசிரியர் ஸ்ரீமாந்-ஜி. சுப்பிரமணிய ஐயரவர்களால் சமீபத்தில் எழுதி வெளியிடப் பெற்றுள்ளது. ஜப்பானது பழைய சரிதம் ஐயரவர்களாற் சில வருஷங்கட்குமுன் வெளிவந்த விஷயம் பலரும் அறிவர். இப் புதிய ஜப்பானில், ஜப்பான் தேசம் சைனாவுடனும் ருஷியாவுடனும் பெரும்போர்செய்து பெற்ற வெற்றியைப் பற்றியும், அதன் பார்லிமெண்டு அமைப்பைப்பற்றியும், அந் நாட்டை உயர்நிலைக்குக் கொண்டுவந்த பெரியோர்களின் வாழ்க்கை வைபவங்களைப் பற்றியும், ஸ்திரீகளின் நிலைமை விவசாயம் கைத்தொழில் வியாபாரம்—இவற்றைப்பற்றியும், ஜனங்களின் கடமை சுவந்திரம் பெண்கல்வி முதலான பலவிவரங்களைப்பற்றியும் ஆராய்ந்து எழுதப்பட்டிருக்கின்றது. இராஜகீய விஷயங்களில் தமிழ்நாட்டார்க்கு வழிகாட்டியாய் விளங்கும் ஐயரவர்கள், அரைநூற்றாண்டுக்குள் உலகத்தே தன்னை உயர்த்திக்கொண்ட ஜப்பானது சரிதத்தை நம்மவர் படித்தறிந்து, தம்மபிவிர்த்திக்கேற்றவற்றைத் தழுவிக்கொள்ளுதல் இன்றியமையாததென்னும் மேலான நோக்கத்துடன் வெளி

யிட்டிருக்கின்றார்கள். இந்நூலில் ஐப்பானது தற்கால நிலையைப் பற்றி பலநூல்களினின்றுந் திரட்டி ஐயரவர்கள் சாங்கோபாங்கமாய், இனிய எளிய தமிழ் நடையில் விளக்கியிருத்தலோடு, நம்நாட்டினி யில்புகளை ஆங்காங்கே ஒப்பிட்டுக்கொண்டு, நம்மவரது குறைகளை யும் அவற்றைத் திருத்தும் உபாயங்களையும் உள்ளத்துப் பதியும்படி மிகவழகாகக் கூறியும் செல்கின்றார்கள். முன்பும், இவ்வாறான உயர் ந்த உபந்நியாசங்கள் பலவற்றை நம்மவர்பொருட்டு ஐயரவர்கள் வெ ளியிட்டு, உலகவறிவைத் தமிழ்மக்கட் கூட்டிய விஷயம் பலரும் அறி ந்தது. உண்மையில், ஐயரவர்களால் வெளியிடப்படும் இத்தகைய நூல்களைத் தமிழ்நாட்டாரெல்லாம் தவறாதுபடிக்கக் கூடுமானால், நம் மவர்க்குப் புதிய உணர்ச்சியுண்டாகித் தேசாபிவிர்த்திக்கு ஏதுவாகு மென்பது திண்ணம். இத்தகைய அரிய உதவியை நமக்காக அன்பு டன் செய்துவரும் ஐயரவர்களை, நம்மவரெல்லாம் ஊக்கி, அவர்க ளால் இன்னும் பலநூல்கள் வெளிவருமாறு செய்துகொள்ளுதல் நம்மவரது கடமையாகும். இப்புதிய ஐப்பானின் விலை ரூ. 1. வேண் டியோர், சென்னைச் சுதேசமித்திரன் மானேஜரவர்கட்கு எழுதிப் பெறக்கடவர்.

**பிரதாபமுதலியார் சரித்திரம்**:—இது, மாயவரம் டிஸ்டிரிக்ட் முன்சீபாய் விளங்கிய ஸ்ரீமாந்-வேதநாயகம் பிள்ளையவர்களால் இயற் றப்பெற்ற கற்பனைச் சரிதம் என்பதும், "நாவல்" என்று தமிழில் வெளியிடப்பெற்றவைகளில் முதலானதென்பதும் பலருமறிவர். இஃதியற்றிய பிள்ளையவர்கள், திரிசிரபுரம் மஹாவித்வான் ஸ்ரீமீனா க்ஷிசுந்தரம் பிள்ளை முதலிய மேதாவிகளாற் கொண்டாடப்பெற்ற வராய், தம் வாக்கினிமையால் தமிழ்நாடெங்கும் தம்புகழ் பரப் பிச்சென்ற பெருமைவாய்ந்தவரென்பதை அறியாதார் அரியர். இவ ரியற்றிய வேறு நூல்கள் நீதிநூல், பெண்மதிமாலை, சமரஸகீர்த்த னம் முதலியன. இச்சரித்திரம், உலகியல்களையும் நீதிகளையும் பிற வுயர்ந்த விஷயங்களையும் இனியகதா சந்தர்ப்பங்களுடன் கலந்தூட் டிப் படிப்பவர் மனங்களைப் பரவசமாக்கவல்லது. மற்றும் இதனரு மைகள் நம்மவர் அறிந்தவைகளேயாதலால், அவற்றை நாமும் கூறு வது மிகையாம். இதற்குமுன் இரண்டு பதிப்புக்கள் பெற்ற இந் நூல், மூன்றாமுறையாக, இதனாசிரியர் குமாரர் ஸ்ரீமத்-துரைப்பிள்

ஐயவர்களாற் பதிக்கப்பெற்றுளது. இப்பதிப்பு, நல்ல காகிதத்திற் சிறக்க அச்சிடப்பெற்று, 342-பக்கங்களில் முடிந்திருக்கிறது.

காதம்பரீ (முதற்பாகம்):—இந்நூல், மஹாகவியாகிய பட்டபாணன் வடமொழியில் கத்யரூபமாக இயற்றிய காதம்பரீயைத் தழுவி, ஸ்ரீமாந்-பண்டித-ஆர். வீ. கிருஷ்ணமாசாரியரவர்கள் தொகுத்த "காதம்பரீ ஸங்கிரஹம்" என்ற வடநூலின் தமிழ் மொழிபெயர்ப்பு; பண்டித-எம். துரைஸ்வாமி ஐயங்கார்., ஏ. கே. ஏ. ஸி., (ஆயுர்வேத பூஷணர்) என்பவர்களால் இயற்றப்பெற்றது. வடமொழி வல்லோரெல்லாம் உச்சிமேற்கொண்டு போற்றும் இவ்வரிய நூல், தமிழில் இதுகாறும் வெளிவராத குறை, ஐயங்காரவர்களியற்றிய இம்மொழிபெயர்ப்பால் ஒருவாறு நீங்கியதெனலாம். இவர்கள் மூலத்தின் சுவைக்கியையத் தெளிவாக மொழிபெயர்த்திருப்பது மெச்சத்தக்கது. இந்நூலில் அங்கங்கே காணப்படும் சொற்பிழைகள், மூலத்தின் பெருமையைநோக்க ஒரு குறையாகத் தோற்றுமாயினும், அடுத்த பதிப்பில் அவற்றைத் திருத்தித்தருவதாக, ஐயங்காரவர்களே எழுதியிருப்பது திருப்தியைத்தருகின்றது. இஃதெவ்வாறாயினும், மகாகவி யியற்றியதும் மொழிபெயர்த்தற்கரியதுமாகிய இவ்வழகிய கிரந்தத்தை இனிய எளியதமிழ்நடையில் மூலத்தின் எதிரொலியென்னும்படி மொழிபெயர்த்துதவிய ஐயங்காரவர்கட்கு நம்மவர் பெரிதும் நன்றியறிதற்பாலர். இந்நூலைத் தமிழறிஞர் முழுதும் படிப்பார்களாயின், வடமொழி மகாகவி யொருவரது அருமைபெருமைகள் நன்கு விளங்குதலேயன்றி, எண்ணிறந்த அரிய விஷயங்களை எளிதில் உணர்ந்து மகிழ்தற்கும் இடமாகுமென்பது திண்ணம். இதனிரண்டாம் பகுதியை விரைவில் வெளியிட ஐயங்காரவர்கள் முயல்வதறிந்து மகிழ்கின்றோம். இம் முதற்பாகத்தின் விலை ரூ 1. இரண்டாம்பாகத்தை வெளியிடுமுன்பே வேண்டுபவர்க்கு 10-அணாவுக்கும், மற்றவர்க்கு 12-அணாவுக்கும்விற்கப்பெறும் என்று தெரிகிறது. விலாசம்:—"ஸ்ரீமாந்-பண்டித. எம். துரைஸ்வாமி ஐயங்காரவர்கள், ஆயுர்வேத விலாசம்; 35. இருளப்பன் தெரு, ஸாவ்கார்பேட் போஸ்டு, சென்னை.

பத்திராசிரியர்.

## 1910-ஞு செப்டம்பர்மீ 1உ முதல் 30உ முடிவு வரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு. | தொகை. ரூ | அ | ப | செலவு. | தொகை. ரூ | அ | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| செந்தமிழ்ச் சந்தா வரவு ... ... | 36 | 9 | 0 | சங்கச் சிப்பந்திகளுக்கு ஜூலைமீ த்திய சம்பளம் வகையரு செல்லாக்கியது ... | 396 | 11 | 2 |
| | | | | கலாசாலைஉபயோகத்துக்குப்புத்தகம்வாங்கியது | 2 | 4 | 0 |
| ஆபீசு அச்சுக்கூலி வரவு ... ... | 307 | 0 | 3 | பைண்டிங் ஆபீசு ஸ்டேஷனரிச் செலவு 0-1-6 | | | |
| | | | | ஷை ஆபீசு கண்டிங்ஜன்சிச் செலவு 14—1—8 | | | |
| பைண்டிங் ஆபீசு வரவு ... ... | 16 | 2 | 6 | ஆக பைண்டிங் ஆபீசுச் செலவு... | 14 | 3 | 2 |
| புத்தகவிற்பனை வரவு ... ... | 94 | 5 | 0 | பிரிண்டிங் ஆபீசு ஸ்டேஷனெரிச் செலவு 16—14—9 | | | |
| அட்வர்டைஸ்மெண்ட் சார்ஜ் வரவு 4—8—0 | | | | ஷை டிபார்ட்மெண்டு ஆயில் எஞ்சின் எண்ணெய்ச் செலவு 28—2—3 | | | |
| சங்கம் காலிநிலம் மரக்கடை வாடகை நாளது சாதாரண ஞு ஆவணிமீ த்துக்கு வரவு ரூ ... 35—0—0 | | | | ஷை டிபார்ட்மெண்ட் கண்டின்ஜன்சிச் செலவு 19—11—3 | | | |
| | | | | ஆக பிரிண்டிங் ஆபீசுச் செலவு .. | 64 | 12 | 3 |
| | | | | போஸ்டேஜ் செலவு ... | 19 | 0 | 0 |
| | | | | ரிப்பேர் வகையிற் செலவு ... | 4 | 6 | 3 |
| கட்டிங்மெஷின் கத்தி சாணைபிடித்த கூலி வரவு ••• ••• 1—0—0 | | | | பிரிண்டிங் ஆபீசு ஸ்டாண்டிங் மாட்டர் (Standing Matter) வைக்கப்பலகை 4 செய்த வகையில் ஸ்டாக் செலவு ... | 2 | 10 | 0 |

| வரவு | ரூ. | அ. | பை. | செலவு | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|---|---|
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ... | 40 | 8 | 0 | லைபிரரி உபயோகத்துக்கு வாங்கிய புத்தகம் | 0 | 9 | 0 |
| | | | | ஆபீசு உபயோகத்துக்கு பிரஸ்புக் வகையறு, லெட்டர் பேப்பர் அச்சிட பார்ச்மெண்ட்பேப்பர், மைஜாடி, கார்கெவர், பேப்பர் முதலிய ஸ்டேஷனரி சாமான்கள் வாங்கியது ... 10—8—3 | | | |
| | | | | வண்டிவாடகை சுமைகூலி வகையறு 0—11—3 | | | |
| | | | | கட்டிங் மெஷீன் கத்தி சாணை பிடித்த கூலி கொடுத்தது. 0— 8—0 | | | |
| ஆக வரவு ரூ. ... | 494 | 8 | 9 | கம்பாஸிட்டர்களுக்கு (Extra) எக்ஸ்டிரா சார்ஜ் கொடுத்தது 1—0—0 | | | |
| சென்ற ஆகஸ்மீ"த்தின் கடைசி தேதியில் நின்ற பாக்கித் தொகை ... | 584 | 0 | 0 | ஆக மிஸ்லேனியஸ் செலவு ... | 12 | 11 | 6 |
| | | | | ஆக மொத்தம் செலவு ... | 517 | 3 | 4 |
| ஆக மொத்தம் வரவு ... | 1078 | 8 | 9 | போக பாக்கியிருப்பு ... | 561 | 5 | 5 |
| ஆக மொத்தம் ... | 1078 | 8 | 9 | ஆக மொத்தம் ... | 1078 | 8 | 9 |

*Audited and found correct.*

திரு. நாராயணையங்கார்,
9—11—10. மானேஜர்.

S. GOPALASAWMY IYENGAR,
20—11—10. *Auditor*

மதுரைத் தமிழ்ச் சங்கத்து

## 1910-ஞு அக்டோபர்மீ 1உ முதல் 31உ முடிவு வரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு. | தொகை. ரூ. | அ. | ப. | செலவு. | தொகை. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| செப்டம்பர்மீ த்துக்குரிய புதுக்கோட்டைசமஸ்தானம் மாதச்சந்தா வரவு ... | 50 | 0 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு ஆகஸ்டு, செப்டம்பர் மீ த்திற்குச் சம்பளம் வகையறாச் செல்லாக்கியது ... | 824 | 5 | 7 |
| சேற்றூர் ஜமீனிலிருந்து 1906ஞு செப்டம்பர்மீ 16உ முதல் 1907ஞு செப்டம்பர்மீ முடிய மீ 12½-க்கு மீ 1-க்கு ரூ 20-வீதம் மாதச்சந்தா வரவு ... | 250 | 0 | 0 | சங்கம் கலாசாலை மாணுக்கர்களின் ஆகாராதி போஷணை வகையறுவுக்காக 1910ஞு மேமீ முதல் செப்டம்பர்மீ முடிய மீ 5-க்குச் செல்லாக்கியது ... | 273 | 7 | 4 |
| செந்தமிழ்ச் சந்தா வரவு ... ... | 88 | 3 | 0 | கலாசாலைஉபயோகத்துக்குவாங்கியபுஸ்தகங்கள் | 2 | 13 | 0 |
| பிரிண்டிங் ஆபீசு அச்சுக்கூலி வரவு ... | 146 | 12 | 9 | பைண்டிங் ஆபீசு ஸ்டேஷனரிச்செலவு 2-2-11<br>ஷை ஆபீசு கண்டின்ஜென்சிச் செலவு 2-15-0<br>ஆக பைண்டிங் ஆபீசுச் செலவு ... | 5 | 1 | 11 |
| பைண்டிங் ஆபீசு வரவு ... ... | 18 | 3 | 0 | பிரிண்டிங் ஆபீசு ஸ்டேஷனரிச்செலவு 19-12-0<br>ஷை ஆபீசு எஞ்சின் சம்பந்தமாய் எண்ணெய்ச்செலவு 13- 0- 8<br>ஷை ஆபீசு கண்டின்ஜென்சிச் செலவு 11-12- 6<br>ஆக பிரிண்டிங் ஆபீசு செலவு ... | 44 | 9 | 2 |
| புத்தகவிற்பனை வரவு ... ... | 99 | 7 | 0 | போஸ்டேஜ் செலவு ... | 19 | 0 | 0 |
| போஸ்டேஜ் வகையில் வரவு 0— 2—0<br>தனித்தமிழ்ப் பரீக்ஷைக்கு அப்ளிகேஷன் கட்டணம் வரவு 1— 0—0<br>சங்கம் காலிநிலம் மாக்கடை வாடகை நாளது சாதாரணஞு புரட்டாசிமீ த்துக்கு வரவு 35— 0—0<br>ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ... | 36 | 2 | 0 | ரிப்பேர் வகையிற் செலவு ... | 3 | 5 | 6 |
| சங்கம் கலாசாலை வகையறாச் செலவுகளுக்காக பிரசிடெண்ட் டிரஸ்டியவர்களிடமிருந்து கடன் வரவு ... | 1000 | 0 | 0 | ஆயில் எஞ்சினுக்கு 1910—11-க்கு லைசென்ஸ் வரி செலுத்தியது 50—0—0 | | | |

| வரவு | ரூ. | அ. | பை. | செலவு | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | கலாசாலைக் கட்டட வாடகை 1910ஹு மேமீ முதல் செப்டம்பர்மீ முடிய மீ 5-க்கு வாடகை கொடுத்தது ரூ 90—0—0 | | | |
| | | | | ஆக மேற்கண்ட விவரபபடி செலவு ... | 140 | 0 | 0 |
| | | | | பிரிண்டிங் ஆபீசு உபயோகத்துக்கு வாங்கிய வால்கோட்டீஸ் டைப், சோழவம்ச சரித்திர உபயோகத்துக்கு எங்கிரேவ் செய்த சென்னை இராஜதானி மாப் பிளாக் வகையரு வாங்கிய வகையில் ஸ்டாக் செலவு | 114 | 5 | 6 |
| | | | | சென்ற வருஷத்தில் ஆங்கிலத் தமிழ்ப் பரீக்ஷையில் தேறியவர்களுக்கு ரொக்கப்பரிசு கொடுத்த வகையில் செலவு ரூ 80— 0—0 | | | |
| | | | | சரஸ்வதிபூஜைச் செலவு 4— 2—7 | | | |
| | | | | சேற்றூரிலிருந்து சந்தாத் தொகை வாங்கப்போன வகையில் செலவு 4— 0—0 | | | |
| ஆக வரவு ... | 1688 | 11 | 9 | ரயில் பார்சல் சார்ஜ் சுமைகூலி வகை 1— 7—9 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 89 | 10 | 4 |
| சென்ற செப்டம்பர்மீ த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ... | 561 | 5 | 5 | ஆக மொத்தம் செலவு ... | 1516 | 10 | 4 |
| ஆக மொத்தம் வரவு ... | 2250 | 1 | 2 | போக பாக்கி யிருப்பு ... | 733 | 6 | 10 |
| ஆக மொத்தம் ... | 2250 | 1 | 2 | ஆக மொத்தம் ... | 2250 | 1 | 2 |

திரு. நாராயணையங்கார்,
10—12—10. மானேஜர்.

*Audited and found correct*
S. GOPALASAWMY IYENGAR,
10—12—10. *Auditor.*

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி ௯.] சாதாரண-௵ மார்கழிமீ. [பகுதி-௨.

## தொல்காப்பியத்துக்கண்ட
# பழைய வழக்குகள்

(அ-ம் பக்கத்தொடர்ச்சி.)

——:o:——

முற்காலத்தே வீழ்ந்தசில மரபுப் பெயர்கள்.

தொல்காப்பியமரபியலிற் கண்ட வழக்குகள் பலவும் கடைச் சங்கத்தார் காலத்துக்குமுன்பே வீழ்ந்தன வென்பதற்குப் பலமேற்கோள்கள் உள்ளன. அவற்றுட் சிறந்தன சில வருமாறு:—குழவி என்றபெயர் (இக்காலத்து மக்கட்கு வழங்குவதாயினும்) குஞ்சரம், ஆ, எருமை, கடமை, மரை, குரங்கு, முசு, ஊகம் என்ற விலங்குகட்கும் உரியதென்பது, மரபியல் ௧௬—௨௨-சூத்திரங்களால் அறியப்படும். இவ்விதிப்படி குஞ்சரக்குழவி, ஆக்குழவி, எருமைக்குழவி, குரங்குக்குழவி—என்றிவ்வாறு வழங்குதல் தொல்காப்பியர்காலத்து மரபென்பது விளங்கும். இவ்வாறே, அப்பரென்றவழக்கு யாட்டிற்கும், யாடு என்பது மூடு கடமைகட்கும், பாட்டி என்பது பன்றி நாய் நரி என்பவற்றுக்கும் அவ்வாசிரியர்காலத்து வழங்கியனவாம் (மரபியல்-௪௭, ௬௪-௬௯. சூத்திரங்கள்). உரைகாரர், இவற்றுக்கெல்லாம் இலக்கியம் முற்காலத்தே வீழ்ந்தன என்றுகூறிச் செல்லுதலால், கடைச்சங்கத்தார் காலத்துக்கு முன்பே, இவை அருகிய வழக்காதல் வேண்டும்.

ஆசிரியர், அருகிவழங்கிய மரபுகள் சிலவற்றை அடியில் வருஞ் சூத்திரத்திற் குறித்தனர்:—

தொல்காப்பியர் காலத்து மருவி வந்த சில மரபுகள்.

"குரங்கி னேற்றினைக் கடுவ னென்றலும்
மரம்பயில் கூகையைக் கோட்டா னென்றலும்
செவ்வாயக் கிளியைத் தத்தை யென்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை யென்றலும்
குதிரையு ளாணினைச் சேவ லென்றலும்
இருணிறப் பன்றியை யேன மென்றலும்
எருமையு ளாணினைக் கண்டி யென்றலும்
முடிய வந்த வவ்வழக் குண்மையிற்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே."

இதனால், தொல்காப்பியர் நாளில்—ஆண்குரங்கு—கடுவன் எனவும், கூகை—கோட்டான் எனவும், கிளி - தத்தை யெனவும், வெருகு - பூசை எனவும், ஆண்குதிரை - சேவல் எனவும், பன்றி - ஏனம் எனவும், ஆணெருமை - கண்டி எனவும் மருவிவழங்கிய வழக்குகள் என்பது விளங்கும். "முடிய வந்த அவ்வழக் குண்மையிற்—கடிய லாகா கடனறிந் தோர்க்கே" என ஆசிரியர் கூறுவதினின்று, இம்மரபுகள் அக்காலத்தில் அமைந்து வழங்கினவென்பதும், ஆயினும் ஆன்றோர் வழக்கானமையிற் கொள்ளத்தக்கனவாகக் கருதப்பட்டன என்பதும் புலப்படுகின்றன. இம்மரபுகளிலே, ஆண்குதிரையைச் சேவலென்பதும் ஆண் எருமையைக் கண்டியென்பதும் ஒழிய, ஒழிந்தமரபுகள் இக்காலத்தும் வழங்குவனவாம். உரைகாரர் இச்சூத்திரவுரையில் எழுதுவன இவை:—"கடுவனு மறியுமக் கொடியோ னையே"—ஆண்குரங்கு; இதனைக் கடியலாகாதெனப்பட்ட இழுக்கென்னையெனின், மக்கட்கும் வெருகிற்கும் அக்காலத்துப் பயின்றனபோலுமாதலின்............குதிரையைச் சேவலென்றல் இக்காலத்தரிதாயிற்று... எருமையேற்றினையுங் கண்டியென்பபோலும்: அது காணலாயிற்றில்லை" என்பன. இவற்றால் தொல்காப்பியர்காலத்து, குதிரைச் சேவல் எருமைக்கண்டி என ஆண்பெயர்கள் வழங்கியதோடு, நம்காலத்துப் பெருகிவழங்கும் பெயர்கள் சில, அவர்காலத்தே அருகிவழங்கினமையும் தெளியப்படும்.

வேறுசில வழக்குகள்.

மேற்கூறியவாறு தொல்காப்பியத்துக்கண்ட பழைய வழக்குகளேயன்றி, உரைகாரர் கூற்றுக்களால் அறியப்பட்ட பண்டை மரபுகள் சிலவும் உள்ளன. மரபியலில் "மரபுநிலைதிரிதல்" என்னுஞ் சூத்திரவுரையில், உரைகாரர், மிறைக் கவிகளைப்பற்றிக் கூறுமிடத்து,—"இனி, நிறைமொழிமாந்தர் மறைமொழிபோல்வன சில மிறைக்கவிபாடினாருளரென்பதே பற்றி, அல்லாதாரும் அவ்வாறுசெய்தல் மரபன்றென்றற்கும் இது கூறினான் என்பது; அவை—சக்கரஞ் சுழிகுளம் கோமூத்திரிகை ஏகபாதம் எழுகூற்றிருக்கை மாலைமாற்று என்றாற்போல்வன. இவை மந்திர வகையானன்றி வாளாது மக்களைச் செய்யுள் செய்வார்க்கும் அகனைந் திணைக்கும் மரபன்றென்பது கருத்து. அல்லாதார் இவற்றை எல்லார்க்குஞ் செய்தற்குரியவெனை இழியக்கருதி, அன்னவகையான் வேறுசில பெய்துகொண்டு அவற்றிற்கு இலக்கணஞ் சொல்லுப. அவை இத்துணையென்று வரையறுக்கலாகா: என்னை? ஒற்றையிரட்டை புத்தி வித்தாரமென்றாற் போல்வன பலவுங் கட்டிக்கொண்டு அவற்றானே செய்யுள்செய்பினுங் கடியலாகாமையின் அவற்றிற்கு வரையறைவகையான் இலக்கணங்கூறலாகா என்பது" என்றெழுதினார். இதனால், சக்கரஞ்சுழிகுளமுதலிய சித்திரகவிகள் மந்திரவகையாற் றேவர்பொருட்டுச் செய்யப்படுவனவன்றி, மக்கட்குரியனவாக முற்காலத்தார் கருதினரல்லர் என்பது போதரும். தேவாரமுதலியவற்றில், ஏகபாதம் எழுகூற்றிருக்கை மாலைமாற்று முதலிய மிறைக்கவிகள், இவ்வாறு தேவரைப்பற்றியனவாயிருத்தலுங் கண்டுகொள்க.

இனி, ஆனந்தக்குற்றம், பாட்டியன்மரபு முதலியனவை, பழைய இலக்கியங்களுக்குரிய இலக்கணமாகா என்பது, முன்னையுரைகாரர் கொள்கை. தொல்காப்பியமரபியலிற் குறித்த ஈரைங்குற்றங்களையும் விளக்குமிடத்து உரைகாரர்—"தன்னொருபொருள் கருதிக்கூறலென்பது-மலைபடுகடாத்தினை ஆனந்தக்குற்றமெனப் பிற்காலத்தானொருவன் ஒரு சூத்திரங்காட்டுதலும், பகமுடிப்பென்பதோர் இலக்கணம் படைத்துக் கோடலும் போல்வன" எனவும், நின்று பயனின்மை என்பதற்கு உதாரணங்கூறுமிடத்து "பிற்காலத்துத் தோன்றிய வழக்கே பற்றி அவற்றிற்குங் குற்றந்தீர இலக்கணங்காட்டியவழி, அது சான்

னோர் செய்யுட்குப் பயன்படாது தம்போரன்ன செய்யுட்குப் பயன்பட்டொழியச்செய்தல்: உதாரணம் அந்தவழிக் கண்டுகொள்க; பாட்டியன் மரபெனக் காட்டுவனவும் அவை.” எனவும் எழுதிச்செல்லுதலால், ஆனந்தக்குற்றம் பாட்டியன்மரபு முதலியவை பிற்காலத்திலக்கணங்களே என்பதும், அவை முன்னோர் செய்யுட்கு ஏற்பனவல்ல என்பதும் வெளியாகின்றன.

இவ்வாறே ஆராய்ந்து செல்லுமிடத்து, கடைச்சங்கத்தார் காலத்தும் அதன்பிற்காலத்தும் வீழ்ந்த தொல்காப்பியமரபுகளும் வழக்குகளும் எண்ணிறந்தனவா மென்பது போதரும். உரைகாரர்களால் ‘இவையிவை வீழ்ந்த வழக்குகள்’ என்று குறிப்பிட்டவை பெரும்பாலவும் கடைச்சங்கத்தார் காலத்துக்கு முன்பே இறந்தவையென்று கொள்ளத்தக்கன; என்னை? அச்சங்கத்திலக்கியங்களெல்லாம் ஆராய்ந்தே அவர்கள் அங்ஙனமெழுதலான் என்பது. இனி, இக்காலத்திறந்த தொல்காப்பியவழக்குகளை எண்ணுவோமாயின் அவை கணக்கிலடங்கா; நன்னூல்முதலிய பிற்காலவிலக்கணங்கட்கு முற்றும் வேறாகத்தோன்றும் தொல்காப்பிய விஷயங்களெல்லாம் பழைய வழக்குகளேயாகும். ஆயின், அவற்றையாராயாது பழையகாலத்தே வீழ்ந்தவைகளாக உரைகாரர்காட்டிய வழக்குகள்மட்டுமே ஈண்டு ஆராய்ச்சிக்கெடுத்துக்கொள்ளப்பட்டனவென அறிக.

பத்திராசிரியர்.

## மதுவிலக்கு.

(௬௨-ம் பக்கத்தொடர்ச்சி.)

“மதுபானம் ஓரோர்வேளை உடலுக்கு மிக்க வலிமையளிக்கின்றதே இதற்கு நீர் என் சொல்வீர்” என எதிர்பாராத கேள்வியொன்று ஆங்கோர் கோணத்திலிருந்து வருகிறதாக அறிந்தேன். மதுபானத்தையிட்டுப் பிறக்கின்ற வினாக்களுக்கெல்லாம் ஏற்ற விடை விளம்பித்தீர்க்க வேண்டுமெனக்கச்சைகட்டி நிற்பவரில் அடியே

னும் ஒருவனுகையால், சகோதரருடைய கேள்விக்கு முன்சொன்னதுபோக இன்னமும் சிறிது சமாதானங் கூறலாயினேன்.

தேகவலிமையானது தேகக்கட்டிற்கு இயைந்தவண்ணம் அமையக்கூடியதொன்றும். எவருக்குத் தேகக்கட்டில்லையோ அவருக்குத் தேகவலிமை இருத்தல் முடியாது. நல்லது, இப்போது உங்கள் கையின் மணிக்கட்டை நமது புஜத்திற்கு எதிரே கொண்டுபோகுமாப்போல் உயர்வாய்த்தூக்கி ஸ்திரமாக வளைத்துப் பாருங்கள். புஜத்திற்குச் சற்றுக்கீழே உங்கள் கையினது தசை நார் விம்மிக் கெட்டித் தட்டைக் கல்லைப்போல் கடினமாயிருத்தல் காண்பீர்கள். அப்படிக் கரத்தை வளைப்பவர் என்போலும் இளைத்ததேகமுடையார் அல்லாமல் மிக்க வலிமையுடையதாய தேகக் கட்டுடையவரா யிருப்பாராகில் விம்மித் தடித்த அப்பாகம் ஏறத்தாழ இரும்பிற்கு இணையாயிருக்குமென்பது பொய்யல்ல. இப்படியாய்க் கைகால்களின் தசை நரம்பு மிகவே உறுதியாயிருக்கும் பட்சத்தில் தேகத்தின் மற்றப்பாகங்களும் உறுதியாயிருக்குமென்பது சொல்லாமலே அமையும். இத்தகையவான உறுதிக்கும் வலிமைக்கும் மதுபானம் ஆதாரமாயிருப்பது உண்மையானல் நமது தேகத்தின்முழுப்பலத்திற்குமே அம்மதுபானத்தைக் காரணமாகச் சொல்லவுங்கூடும். ஆனல் மதுபானமோ உடலினது உறுதியையும் வலிமையையும் ஒழியவைக்கிறது உண்மையே உண்மையென ஒருமுறையல்ல பலமுறையுஞ் சொன்னேன். ஈதறியாது சிலர் நமது வலிமைக்கும் திடனுக்கும் உதவி செய்கிறது மதுபானமேயென்று இன்னும் உரையாடுவாராகில் நான் அவருக்குப் பின்னும் உரையாடுகிறேன் கேளுங்கள்.

டா. "பெஞ்ஜமின் ரிச்சர்ட்ஸன்" என்பவர் மதுபானம் பெலனைக் கொடுக்கின்றதென்கிற விஷயத்தை விளக்கமாய்க் கண்டுபிடிப்பதற்காக மதுபானத்தைத் தவளைகளுக்குக் கொடுத்துப் பார்த்தார். ஏனெனில் தவளையினது தசை நரம்பும் நம் தசை நரம்பும் ஒரேமாதிரியாய் வேலைசெய்து கொண்டிருக்கிறதென ஊகிக்கப்படுகிறது. அப்படிக் கொடுத்துப் பார்த்ததில் தவளைகள் மதுவை உட்கொள்ளாததற்கு முன்றிற்கொண்டிருந்த உறுதியையும் உற்சாகத்தையும் அதனை உட்கொண்டதற்கப்புறம் உடைத்தாயிருக்கவி

ல்லை யென்பதைக் காதலா மலகமாய்க்கண்டார். இப்பரீட்சையின் தீர்மானத்தால் மதுபானம் நமது உடலுக்குப் பெலத்தைக் கொடுக்கிறதல்ல; பெலத்தைக் கெடுக்கிறதென வெகு தெளிவாய்க்காண்பித்திருக்கிறார்.

வைத்திய சிரேஷ்டரான "பார்க்கஸ்" என்பவர் போர் வீரர்களைக் கொண்டு இதுவிஷயத்தில் உலோகார்த்தமான ஒரு சோதனை பண்ணினார். அஃதெப்படி யென்றால்:—வலிமையும் சுறுசுறுப்புமுள்ள மூன்று தளபதிகளை அவர் தெரிந்தெடுத்துக்கொண்டு அவர்களுக்கு இளைக்காத வலிமையை அதாவது கடின வேலைக்குத் தொடர்ச்சியான பெலத்தைத் தருகிறதற்கு எவ்வித ஆகாரம் சிறந்ததென்பதைக்கண்டுகொள்வதற்காக அந்த வீரருக்குத்தான் கொடுக்கப் போகும் ஆகாரத்தால் வரக்கூடிய தன்மையை நுணுக்கமாய்க் கவனிக்கும்படி அவர்களைக் கேட்டிருந்தார். வைத்தியர் பெருமானின் நற்கருத்து இன்னதென்று தெரிந்துகொண்ட அம்மூவரும் ஆறுநாள் பரீட்சையில் இருந்தார்கள். அவ் வாறுதினங்களுள் முதல் இரண்டுதினங்களும் சேனுவீரர்கள் தங்கள் காலைப்போசனத்தைச் சாப்பிட்டு ஒய்வில்லாமலும் மத்தியில் வேறு ஆகாரம் புசியாமலும் $14\frac{1}{2}$ மைல் தூரம்நடந்து அப்புறம் ஒருமணிநேரம் இளைப்பாறியபின் மதுபானம் சிறிது குடித்துப் பிறகு 41/4-மைல் நடந்து சற்றுக் களைப்புமாறியபின்னர் திரும்பவும் மதுபானமருந்தி மீளவும் 3 மைல் நடந்து இந்தவிதமாய் தினத்திற்கு $21\frac{3}{4}$ மைல் நடந்தார்கள். மேற் சொன்ன தினங்களிற் கொண்ட மதுபானத்திற்குப் பதிலாக மற்ற இரண்டு தினங்களும் இடைக்கிடையே காப்பிக் கஷாயத்தை அருந்தி முன்கூறியபடி நாள் ஒன்றுக்கு 213/4 மைல் நடந்தார்கள். கடைசி இரண்டு நாட்களிலும் முன் சொன்னபடியே நடந்தார்களாயினும் இவ்விரண்டு தினங்களுங்காப்பிக்குப்பதிலாக இடைக்கிடையே இறைச்சி ஸூப் உபயோகித்தார்கள். இப்படியாக ஆறுதினமும் கழிந்தபின் சோதனையின் முடிவைத் தெரிந்துகொள்ள வெகு ஆவலோடு காத்திருந்த வைத்திய சாஸ்திரிக்குத் தளபதிகள் கொடுத்த தீர்மானத்திற் களைப்பைத் தீர்க்கிறதாய்க்கொண்ட வஸ்துக்களில் மிகச்சிறந்தது இறைச்சி "ஸூப்" என்றும் இரண்டாவதாகக் "காப்பி" என்றும் சொன்னபிற்பாடு மதுபானத்தையிட்டு இசைக்கப் புகுந்

ததில் மதுவைச்சாப்பிட்டதும் அது ஏதோசிறிது களைப்பைத் தவி ர்த்ததுபோலத் தெரிந்தாலும் நேரம் போகப்போக அதாவது ஒன் றிரண்டு மைல் கடந்தவுடனே மதுவைச்சாப்பிடாமுன் அவர்களு க்கு எவ்வளவு அசதியிருந்ததோ அதைவிட அதிகமான அசதியை யும் நடையில் அரோசிகத்தையும் உடையவராய் அவ்விருதினங்களை யும் கழிக்க நேர்ந்ததெனை அம்மூவரும் ஒருகண்டசிராய் உரை வழங்கினார்கள்.

1800-ம் வருடம் "எகிப்து" தேசத்தில் "பிரான்சியரை" எதிர்க்க நடமித்திய துறையிலிருந்து ஆங்கிலேய பட்டாளம் ஒன்று அனுப்பப்பட்டது. இவ்விராணுவம் அதிக அவசரமாய்ப் புறப் படவேண்டியிருந்ததால் வழிக்குத் தேவையான குடிவகைகள் சேக ரித்துக்கொள்ளச் சமையம் வாய்க்கவில்லை. சேனை பாைறப்பாங்கான நெடியவழிகளை ஊடுருவிச்செல்ல நேரிட்டிருந்ததாலும் வீரர்கள் முன்னொருகாலத்திலும் இல்லாத ஊக்கத்தோடும் உற்சாகத்துட னும் சீர்கேடாயிருந்த அந்த நீண்டபாதையனைத்தையும் கடந்து சென்றார்களென்றும் இதற்கு அதிர்ஷ்டவசமாய்த் தங்களிடத்தில் மதுபானம் இல்லாமற்போனதே பிரதான காரணமென்றும் சே னாதிபதியாகிய ஸர். "ஜாண் மெகிரீகர்" என்பவர் எழுதியிருக்கி றார். மேலும் ஆங்கிலேய இராணுவ வயித்தியர் ஸர். "ஜாண் ஹால்" என்பவர் 1852-ம் வருடக் "காப்பிரி" யுத்தத்திலும் 1851—1855-ம் வரு நடந்த "கிரிமியன்" போரிலும் போர்வீர ருள் மதுபானம் உபயோகியாதவரே சேனைச் செருக்களத்துள் சிங் கக்குட்டிகள்போல், திரிந்து ஜெயங்கொணர்ந்தாரென்றும், அவர்களே தருணங்கண்டு வேலை செய்யத் தக்கவர்களா யிருந்தார்களென்றும், அவர்களே குண்டுகளாற்பட்ட இரணங்களை மனச் சோர்வில்லாமல் தாங்கி நின்றார்களென்றும் கண்கண்ட சாட்சியாய்க் கடாவுகிறது மேலே கூறிய "மெகிரீகர்" வாக்கு மூலத்தையுறுதிப் படுத்துகிறது.

சபதத்தின்மேல் நீந்துதல் ஓடுதல் சவாரிபோதல் முதலிய வி ளையாட்டுகளிற் பந்தயங்கெலித்துக் கீர்த்தி பெற்றவராயிருந்த "தாம ஸ் சாயர்" என்பவர் மதுபானப் பழக்கத்தைவிட்டுத்தமது அபிப்பி ராயம் தருவதில் அவர் தாம் சபதம்பண்ணிக்கொண்ட நீந்துவார்,

ஓடுவார், சவாரிபோவார் முதலானவர்களை ஒவ்வொரு தடவையும், ஜெயித்ததற்கு அவர்கள் எல்லாரும் அந்நேரங்களில் மதுபானமே மிகுதியான பெலனைத் தந்து விடுமென, அப்பாழும் பானத்தைப் பருகி ஏமாந்ததும் தாம் சுத்தஜலத்தையன்றி மதுபானத்தை அணுவளவும் தொடாதிருந்ததுமே காரணம் என்கிறார். இஃதோடு, நீந்துதொழில் வல்லுநராயிருந்த "கவில்" என்பவர் தாம் தமக்கு அவ்விளையாட்டில் சமமில்லாதிருந்த "வெப்" என்பவரால் ஒருநாள் இங்கிலீஷ்கால்வாயில் அபஜெயப்பட்டதற்கு அத்தருணத்தில் மதியீனமாய்த் தாம் உட்கொண்டிருந்த மதுபானமே காரணமென்று தம்மைத் தாமே மனநொந்து கொள்ளுகிறதும இங்கு அறியத் தக்கது.

1883-ம்வருடமாரிகாலத்தில் "வெஸ்டன்" என்பவர் நூறுநாளைக்குள் (ஓய்வுநாளில் இளைப்பாறியும் இடைக்கிடையே மதுவிலக்குப் பிரசங்கம்செய்துகொண்டும்) ஐயாயிரம்மைல்நடந்ததற்கும், 1891-ம் வருடமாகிய தமது 60 வயதில் ஒருதடவை, 24-மணிநேரத்தில் 103 மைல் பிரயாணம் பண்ணியதற்கும் தமக்கு மதுபானப் பழக்கம் இல்லாததேகாரணம் என்கிறார். "டப்ளியூ. ஜி. கிரேஸ்" என்னும் கீர்த்திபெற்ற "கிரிக்கெட்" நிபுணர் அவ்விளையாட்டுகளில் ஒருவரிடத்தும் இல்லாத மனத்திடனும் வலிமையும் உடைத்தாய் இருந்ததற்கும், 1897-ம் வருடம் நியூயார்க் பட்டணத்தில் "சைக்கிள்" பந்தயத்தில் "எட்வார்ட் ஹால்" என்பவர் 142 மணிநேரத்தில் 1911 மைல் கடந்தவராய் மற்றவரினும் 300 மைல் அதிகமாய்த் தமதுவண்டியைச் செலுத்திக் கண்டார் கேட்டார் யாவரும் கரக்கம்பம் சிரக்கம்பம் செய்து கனப்படுத்தி நின்றதற்கும் (மேற்சொன்ன இருவருக்கும்) மதுபானப் பழக்கமில்லாதிருந்ததே காரணமாய்த் தெரிகிறது.

செப்பியதனைத்தும் செவ்வனே தெரிந்ததா சகோதரரே! ஆம்! தெரிகிறது தெரிகிறது தான், புரிகிறது புரிகிறது தான். தெரிகிறதொன்றும் புரிகிறது மற்றொன்றுமாய் இருந்தால் தான் என்னை? மதுபானம், நீங்கள் நினைக்கிறதுபோலப் பெலத்தைக் கொடுக்கிறதென்பது உறுதியாகப் போகிறதா? ஆனால் பெலனைக் கெடுக்

கிறதென்பது உறுதியாவதில் தடையில்லை. ஒருவேளை மதுபா னத்தையுண்டபாத்திரத்திலேயே மனக்கிளர்ச்சி யொன்று ஏற்படு கிறதே அஃதென்னவென்பீர்களாக்கும் சகஜந்தான்; அக்கிளர்ச்சி பெலனை ஆதாரமாய்க் கொண்டதல்ல; துணிவை ஆதாரமாய்க் கொண்டது. பெலனுக்கும் துணிவிற்கும் பாரதூர வித்தியாசம். மதுபான உபயோகத்தாலுண்டாகிற கிளர்ச்சி ஒருபங்கிற்குத் தளர் ச்சி இருமடங்கு மும்மடங்கு உண்டாகாமல் தீராது. மதுபானி களின் எண்ணமெல்லாம் கிளர்ச்சியிலேயே நிற்பதால் கிளர்ச்சிதான் முதன் முதல் தெரியக்கூடும். புத்தியுள்ளவரோ அதனால் வருகிற தளர்ச்சியையும் கவனிப்பார்கள். ஒரு சிறிது நேரத்தில் மாறிப் போகக் கூடிய ஒரு பங்குக் கிளர்ச்சிக்காக ஆயுள், குறைவிற்கே அத் திவாரமாகிய முப்பங்குத் தளர்ச்சிக் குள்ளாவது அற்ப அணிலைப் பிடிக்கும் பொருட்டு அழகிய ஆரணியத்தை அழிப்பது போலாம். இது மெய்யோ பொய்யோ என்பதை பகிரங்க மதுபாணிகளிடத் தில் அந்தரங்கமாய்க் கேட்கின் அவர்கள் அநுபவசாலிகளாதலால் ஒரு பங்குக் கிளர்ச்சிக்காக எத்தனை பங்குத் தளர்ச்சிக்குள்ளாக வேண்டுமென்று திட்டநுட்பமாய்ச் சொல்லுவார்கள். கேட்கிறது மாத்திரம் இரகசியமாய்க் கேளுங்கள். ஏன்? இது காசைக் கொடு த்து நோயைக் கொள்ளுகிற வியாபாரமானதால் பகிரங்கமாய்ச் சொ ல்லமாட்டார்கள். உலோகோபகாரமான சங்கதியாகையால் நீங்க ளும் உடனுக்குடன் கேட்டுக் கொள்வது உசிதமேயாம். கிளர்ச்சி பெலனையல்ல, துணிவையே ஆதாரமாய்க் கொண்டதென்றேன். அத்துணிவு எத்தன்மைத் தென்கிறீர்கள்? அது கடிவாளமில்லாத குதிரையின் துணிவு. கண்டபடிபாயும் குரங்கின் துணிவு. கண் கெட்ட முரட்டுத் துணிவு என்பேன்.

சகோதரரே! கருணைப்பிரகாச வள்ளலாகிய நமது கர்த்தர் மிக நல்லவர் என்பதூஉம் அவரைப்போலும் நல்லவர் முக்காலத்தி லும் இல்லையென்பதூஉம் ஸ்பஷ்டம். அந்நன்மைச் சொரூபியான வர் நாம் விஷயங்களை அறிவதற்கு நமக்கு ஒருகாதே போதுமென் றெண்ணாமல் இருகாதுகளைக் கொடுத்தருளியது நாம் ஒரு காதினாற்

கேட்ட நல்விஷயங்களை மற்றொரு காதினால் வெளிப்போக்கி விடுவ தற்கல்ல, ஆனால் "எனைத்தானும் நல்லவை கேட்க" என்னும் முதுமொழியின்படி கேட்கிறது சுகிர்தவர்த்தமானங்களே யென்றால் இருகாதுகளாலும் நிறையவுண்ணுதல் அவசியமென்னும் அன்பு பற்றியே யென்றும், கேட்பதொன்றுமாத்திரமல்ல "நிற்க அதற்குத்தக" என்றவிதமாய்க் கேட்டுள்ள சன்மார்க்கத்தின்படி ஒழுக வேண்டியது அத்யாவசியமென்றும் நான் சொல்லாமுன்னரே தாங்கள் அறிந்துகொள்வதாயிருந்தும், அவ்வநுசாரங்களின்படி இன்றுகாறும் தாங்கள் நடவாமலும் நடப்பியாமலும் இருப்பது எனக்கே புதுமையாயிருக்குமாகில் அறிவுள்ளாருக்கு ஆச்சரியத்தை விளைவிக்காமலிருக்குமா? விளைவிக்கவே செய்யும்.

ஆகையால் மதுபானம் பெலத்தைக் கெடுக்கிறதொழிய பெலத்தைக் கொடுக்கிறதில்லையென மேல் ஆதாரம் பலவற்றால் நன்குணர்ந்தபிற்பாடு இன்னமும் பெலத்திற்காக மதுபானத்தை அருந்த நினைப்பது விளக்கைப்பிடித்துக் கொண்டு கிணற்றில் இறங்குவதை யொக்குமென அறிக.

சாவை வாவென்றழைப்பதும் தரித்திரத்தைச் சலாஞ்செய்து கூப்பிடுவதும் சனியனைத் தாம்பூலம் வைத்து ஏற்றுக்கொள்வதுமான மதுபானமானது அதனை உபயோகிப்பார் எவருக்கேனும் பெலனை ஒழிவிக்கிறதேயொழிய பெலனை வருவிக்கிறதில்லையென்று பேலே இயம்பலாயிற்று.

இப்பொழுதோவெனில், மதுபானப் பழக்கமுடையவருடைய ஈரலானவை பெருகியோ கருகியோ அவர்கள் தம்மை நாளாவட்டத்திற் சடுதிமரணத்துக்குத் தயார்பண்ணியும் அவர்களில் அநேகர் அவ்வக்காலமுடிவிற்கு ஆளாகிவருகிறதையும் பயங்கரத்துடன் பார்த்துவருகின்றார் சிலர். அம்மதுபானத்திற்கும் நமது ஈரலுக்கும் இருக்கிற சம்பந்தத்தைச் சிறிது சீர்தூக்கிக் காட்டவேண்டியது அவசியமோவென அபிப்பிராயப்படுவதால் அவ்வபிப்பிராயத்திற்கிசைந்து மதுபானத்திற்கும் மானிட ஈரலுக்கும் மத்தியிலிருக்கிற பற்றுவரவை எட்டினமட்டும் விவரிக்கின்றேன்.

வேண்டியதை விவரிப்பதற்குமுன்னால், நமது சகோதரரிற் சிலர் இரண்டொரு உபகேள்விகளும் ஈங்கு பிறப்பிக்கின்றனராதலால் முதலில் அவற்றிற்கு விடைகூறுதல் வினவினருக்கும் வினவு நினைப்பாருக்கும் விருப்பமானதே. அவாது கேள்வி வருமாறு:— 'குடிகாரனுடைய வாயில்சூடுபோட்டாலுங்கூட அவன்குடிக்கிறதை விடுகிறதில்லை " என்று ஓர் பழமொழியே உள்ளதாகையால் மதுபானிமை மனந்திருப்ப மாளுமா? நாம் அறியத்தோன்றி ஆங்கோர் மூலையில் ஆரம்பசூரத்துடன் நின்ற மதுவிலக்கு சபையொன்று பிணியாளர் பெற்றபிள்ளையைப்போற் பிறந்த சிறிது நாளிலேயே இறந்து படவில்லையா? " சகோதராது வண்ணமுற்றகேள்வி நன்றாயிருந்தது. அதற்கு மதுவிலக்கின் பதில் யாண்டையதென்றாலோ? "களித்தானைக் காரணங்காட்டுதல் கீழ்நீர்க்குளித்தானைத் தீத்துரீஇயற்று" என்ற திருவள்ளுவர் கூற்றின் படி மதுபானத்தை நிறைய உண்ணும் பேர்வழிகளைத் திருப்பிவிடுவது அருமையேயென்றாலும் துஷ்டரைச் சிட்சிப்பது மற்றையோர் பயனுங் கருதியபோலவும், பானத்திற்கு வெட்டிய நீர் ஸ்நானத்திற்கும் உபயோகமாவதுபோலவும், மதுவிலக்குப் போதித்ததும் போதிக்கிறதும் போதிப்பதுமான போதனையெல்லாம் ஆசையின் காரணத்தால் குடிகாரப்பட்டதாரிகளைத் திருப்பவேண்டுமென்று மாத்திரமல்லாமல் இந்தமட்டும் குடியாதிருப்பவராகிலும் இறுதிவரை குடியாதிருப்பதற்கேயென்றும், மதுவிலக்குச் சபைகள் மதுபானப் பழக்கமில்லாதார்கூடி மதுபானத்தை மருந்திற்கேனும் வழங்குகிறதில்லையென்னும் பிரமாணிக்கத்தின் மேல் ஸ்தாபிக்கப்பெறுவனவாகையால் அன்னைய பிரதிக்கினையை அநுசரிப்பாரன்றி" அடடா! "கடல்முழுவதும்தான் மதுபானமாயிருந்ததா! நினைத்தநேரமெல்லாம் விழுந்துமுழுகலாமே" யென ஏக்கமுற்றுக்கிடக்கும் பாக்கியசாலிகள் சிலரால்ஏற்படுத்தப்பட்டதுதான், செப்பியசபையின் சிதைவிற்கும் சின்னாபின்னத்திற்குங் காரணமாயிருந்ததென்றும், நமது பின்சந்ததிகளாகிலும் மதுபானப்பழக்கம் பண்ணிக்கொள்ளாமல் இருந்தாலொழிய நம் கஷ்டநஷ்ட நிவிர்த்திக்கு வேறுவழியில்லையென்பது உச்சிப்பகலைப்போல் வெளிப்படையாதல் காண்க. இனி, எடுத்தவிஷயத்தை இனிது தொடங்குகின்றேன்.

நமது உண்டியின் ஜீரணசக்திக்கு ஆஸ்பதமாயிருக்கிற ஈரலையிட்டுப் பேசுவோமாயின், அவ்வீரல் பித்தமென்று பேசப்படாநின்ற ஒருவகைச் சாற்றினை உண்டாக்குகின்ற சிறு பிண்டமாகத் தேகத்துள் வலதுபாகத்தை உறைவிடமாகக்கொண்டதெனச் சொல்லலாகும். இப்பித்தம் நம் இரைப்பைக்குள்ளிருந்து வெளிப்படுகின்ற உணவை வேற்றுருவாக்கி அங்ஙனம் மாறுபட்டசாரத்தை இரத்தத்துடன் கலப்பித்து பற்றுமுண்டான குடர்களிலெல்லாம் பரப்புதற்கு அவசியமாயிருப்பதால் இதுவும் நமது சரீரத்திற்கு முக்கியமாய் வேண்டிய கருவிகளில் ஒன்றேயாம். பித்தம் சுரக்கவேண்டிய அளவிற்குக் குறைவுபடுமாயின் அப்போதுதான் நமது சரீரத்திற்கு அசௌகரியம் ஏற்படுகிறது. தலையிடியுண்டாகிறது. தேகத்தின் கிரமவரிசை முழுவதும் தாறுமாறுகிறது. ரோகங்கள் அதிகரிக்கிறது. உடலைப்பிரித்து உயிரைக் கொள்ளைகொண்டு போகின்ற கூற்றுவனும் கொக்கரித்துக்கொண்டு வருகின்றான்.

பித்தத்திற்கு உற்பத்திஸ்தானம் ஈரலேயென்றேன். அப்பித்தத்தை அவ்வண்ணம் உற்பத்திபண்ணும்பொருட்டு ஈரலானது உதிரநாளத்தின்வழியாய் அப்போதைக்கப்போது ஜீரணாசயத்திலிருந்து இரத்தத்தின் ஓர்பாகத்தைக் கிரகித்துக்கொள்ளுதல் தேவையாயிருக்கிறது. ஈரலானது உதிரத்தைப்பெற வேண்டிய நேரங்களுள் இரைப்பைக்குள் ஏதேனும் மதுசாரமுமிருக்கும்பட்சத்தில் மேற்கூறிய இரத்தநாளத்தின் மார்க்கமாய் இழுக்கப்படுகிற உதிரத்துடன் அம்மதுசாரமும் ஈரலைச் சேரவேண்டியதாயிருக்கிறது. தண்ணீரில் விடப்பட்ட எண்ணெய் எப்படித் தண்ணீரோடு கலவாமல் பிரத்தியேகமாய் நிற்கிறதோ அப்படியே மதுசாரமும் இரத்தத்துடன் கலவாமல் பிரத்தியேகமாய் நிற்கும் இயல்புடைத்தாதலால் மதுசாரம் மற்ற ஆகாரங்களைப்போல் மாறுபடுகிறதில்லையென்று வெகுமுன்னமே விளம்பியிருக்கின்றேன். ஆகவே போஜனாசயத்தினின்று இரத்தம் ஈரலைநோக்கிச் செல்லுந்தோறும் ஆங்கிருக்கும் மதுசாரமும் இரத்தத்துடன் சென்று ஈரலையடையவேண்டியதாயிருக்கிறதென்று சற்றுமுன் கூறியது வெளியாகிறது.

அப்படி அவ்வீரலையடைந்த மதுசாரம் ஈரலை எவ்வித அந்தஸ்துக்குள்ளாக்கி வைக்கிறதென்றாலோ, மதுசாரத்தின்கொடுமை, ஈர

வில் நாளடைவிலேயே பலவித துவாரங்களைத்தோற்றுவிக்கிறது. இப்படி ஈரலிலுள்ள குழிகளைத் துவக்கத்திலேயே மதுசாரம் விரிவாகவும் வழுவழுப்புள்ளதாகவும் செய்துவிடுகிறதால் ஈரலானது இருக்கவேண்டிய இயற்கையளவிற்குப் பெருத்துப் பிணிக்குள்ளாவது பற்றி அவ்வீரல் கிரமந்தவறாது பித்தத்தை யுற்பத்திபண்ணச் சக்தியற்றுப் போய்விடுகிறது. இவ்வித வியாதியைத்தான் ஈரல்வீக்கமென்பார்கள். மதுசாரம் ஈரலில் தொடர்ச்சியாக இருந்துவரநேரிடுமாயின் ஈரல் கொஞ்சங்கொஞ்சமாய்ச் சுருங்கிக்கடினமாகி அதன்மேற்புறத்தில் குடைபாணிதைத்த பாதரட்சையைப்போல் திரள்திரளாய்க் கொப்புளம் உடைத்தாகி அதுவே "குமிழ் ஆணி ஈரல்" என்று சொல்லப்படுகிறது. இவ்விந்தைவிந்தையான வியாதிகளுக்கெல்லாம் மதுபானமே ஆதிமூலமாகையால் அவ்வீரல்களை மதுபாணி அதாவது குடிகாரஈரலென்றும் அழைப்பதுவழக்கம்.

(இன்னும் வரும்.)

M. P. மாஸ்கரன்ஹாஸ்.

உ

# இந்தியாவின் சங்கீதம்.

பசும்பொன்னெனச்சிறந்து விளங்கும் பத்திரிகாரத்நமே! சென்ற பத்துவருஷங்களாக இந்தியாவின் சங்கீத மூலாதார இரகசியங்களை அறியவிரும்பி விசாரித்துக்கொண்டிருக்குமெனக்கு, உன் அங்கத்தில் இந்தியாவின் சங்கீதமென்ற முகப்புடன் விளங்கிய வியாசம், மிகவும் சந்தோஷத்தையும் உற்சாகத்தையும் தந்தது. நீ அனேக சிறந்தவித்வான்களாலும் இராஜஇராஜர்களாலும்போற்றப்பட்டுப் பல அரியவிஷயங்களுடன் ஒவ்வொருநாளும் புதிதுபுதிதாய்ப் பிரகாசிப்பதைக்கொண்டு இதையுனக் கெழுதுகிறேன்.

உலகில் தோன்றிய மானிடவர்க்கமும், மிருகபக்ஷி ஊர்வனவர்க்கமும், தங்கள் தங்களுக்குத்தகுந்தபடி இன்பதுன்பங்களை விளக்கும்

ஓசையுடையனவாகவும், இன்னிசையில் அதிகப்பிரியமுடையனவா கவும் விளங்குவது யாவரும் அறிந்த விஷயம். ஓரறிவுள்ள புல் பூண்டு விருக்ஷஜாதிகளும், தென்றலினால் பூக்கும் மா பலா ஈந்து புளி நெல்லி வேம்பு சண்பகம் மகிழ் முதலிய விருக்ஷங்களும், மல்லிகை குடமல்லிகை முதலிய செடியினங்களும், மேல்காற்றினால் மலரும் மலை விருக்ஷங்களும், தாழை இனங்களும், வடந்தையினால் புஷ்பிக்கும் பாரிசாதம் பிச்சி முல்லை சாமந்தி ரோஜா தாமரை முதலிய செடிவகைகளும், சம்பங்கி ஜிமிக்கி முதலிய கொடி வகைகளும், மரமல்லிகை பன்னீர் முதலிய விருக்ஷவகைகளும், எல்லாப் புல்லினங்களும் காற்றிற் கலந்த சாந்தமானதொனியினால் வசியப் பட்டுப் புஷ்பிக்க ஆரம்பிக்குமானால் ஆறறிவுள்ள மனிதர் இன்னிசைக்கு இரங்காதிரார். மெல்லிய மந்தமான நாதத்தில் தெய்வமே இருந்து ஒரு சிறந்த பக்தனோடு பேசியதென்பதைக் கவனிக்கையில், அத் தெய்வந் தானே நாதசொரூபியாயிருந்து, தன் நாத வேற்றுமையினால் அண்டபுவன சராசரங்கள் யாவற்றையும் நடத்திக்கொண்டு வருகிறதென்று நாமறியவேண்டும்.

தொட்டிற்பிள்ளைப்பருவமுதல் தூங்குகிழம்வரையும் தொடர்ந்து இன்பந்தரத்தக்கது நாதமும் கீதமுமே. இவ்வின்பத்திலும் என்றுமழியாத பேரின்பத்திற்கு மனதைப்பக்குவப்படுத்துவதும், பக்குவமடைந்தவரைப் பரவசப்படுத்துவதும், பரவசமடைந்தவர் ஆநந்தத்தையறிவிப்பதும், நாதமும் கீதமுமே. ஓமென்றநாதத்தால் உலகெல்லாம் படைத்து அவற்றுக்குயிர்வடிவாகநின்ற முதல்வனே நாதமென்றும், வார்த்தையென்றும் அழைக்கப்பெறுவானானால் நாதத்தின் உயர்வை நோக்கவேறெதைக்கொண்டு உவமைசொல்லலாம். காணப்படுமெல்லாமாயும், ஜீவர்களின் ஜீவனாயும், ஜீவர்களின் ஊக்கமாயும், ஊக்கத்தில் உணர்வாயும், உணர்வில் அறிவாயும், அறிவில் ஆநந்தமாயும், ஆநந்தத்தில் நாதமாகி ஏழுவகைத் தோற்றத்திற்கெல்லையாய நின்ற அவனையே ஏழுசுரங்களாக அமைத்து அவற்றின் உட்பிரிவுகள் அல்லது அலைவுகளையே சுருதிகளாக்கி இன்னிசை கொண்டு இன்னிசைக்காதாரமூர்த்தியைத் துதித்து நல்லிசைபெற்றார்கள் பெரியோர்.

இவ்வருமையுணராத சிற்றறிவுடையோர் தாம்பெரிதெனமதிக்கும், லௌகிக கருமங்களில் கீதத்தை உபயோகித்தும், அதிலும் நாடியதையடைந்தார்கள். இப்படி இம்மை மறுமையென இரு நிலைகளிலும் உதவியாயிருக்கும் நாத கீதத்தை ஏற்றபடி கற்றறிந்துகொள்வதும், அறிந்தபடி சாதிப்பதும், சாதித்தபடி மற்றவர்க்கு அறிவிப்பதும், அறிவித்துத்தானும் பிறரும் ஆனந்திப்பதும், ஜீவர்களின் இயல்பான பிரியம். ஆனால் விரும்பியபடி யாவரும் அறியவும் சாதிக்கவுமுடியாமல் அரைகுறையாய் நின்றுவிடுகிறார்கள். அப்படி நின்றுவிட்டாலும் இன்னிசையில் ஈடுபடுமியல்பு அதிகமுடையவர்களாயிருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களில் நானுமொருவன். இதைப்பார்க்கும் சங்கீதவித்துவ சிரோமணிகளே! என்னில் தோன்றும் சில சந்தேகங்களை நிவர்த்தித்து இன்னிசை வளர்ந்தோங்கக் கிருபை செய்வீர்களென்று தங்களை மிகவும் பிரார்த்திக்கிறேன்.

1. சப்தசுரங்களும் எப்படி ஆதியிற் கண்டுபிடிக்கப்பட்டன? அவைகளுண்டான கிரமமாவது அல்லது இப்போதுண்டாகும் கிரமமாவது நானறியத் தயவாய்த் தெரிவிப்பீர்களா?

2. சப்தசுரமுள்ள அல்லது C–C வரையுள்ள ஒரு ஸ்தாயியில் இருபத்திரண்டு சுருதிகளுண்டென்கிறார்களே; அவைகள் அப்படித்தானா? அப்படியானால் அவைகளின் பெயரென்ன? சங்கீதத்தில் தேர்ந்த சாரங்கதேவர், மதங்கரிஷி முதலியவர்களின் அபிப்பிராயமெப்படி? அவர்கள் இருபத்திரண்டு சுருதிக்கு இட்டுவழங்கிய தீவிரகுமாரவதி, மந்த சந்தோவதி முதலிய இருபத்திரண்டுபேர்களும தீப்த, ஆயுத, ம்ருது, மத்திய, கருணை முதலிய ஐந்து ஜாதிகளும் இப்போது வழங்கி வருகிறதா? வழங்காதிருக்குமானால் வேறு இருபத்திரண்டு பெயர்களேனும் வழங்கிவருகின்றனவா? என்று நானறியலாமா? 4 ஷட்ஜம், 4 மத்தியம், 4 பஞ்சமம், 3 ரிஷபம், 3 தய்வதம், 2 காந்தாரம், 2 நிஷாதமென்கிறார்களே அவைகளின் ஸ்தானமும், பெயரும், பிரயோகமு மின்னதென்று அநுக்கிரகிக்கலாமா?

3. நேதசுருதி ஷட்ஜமம், பஞ்சமம் நீங்கலாக மற்ற சுரங்களின் சுருதிபேதத்தாலுண்டாகக்கூடிய இராகங்கள், இப்போது

வழங்கிவரும் ஆயிரத்தெட்டுத்தானா? அல்லது வேறு இராகங்களுண்டாக இடமுண்டா?

4. சுருதி பேதங்களினாலுண்டாகும் ஆயிரத் தெட்டுக்குட்பட்ட அல்லது மேற்பட்ட ஒரு இராகத்தை அதற்குரிய சுருதியில் சஞ்சாரக் கிரமப்படி வக்கிர, வர்ஜிய விதிப்படி பாடுவதற்கு யாவரும் சுலபமாய்ப் பார்க்கக்கூடிய வழியுண்டா? அல்லது பாடப்படுகிற ஒரு இராகம் சரிதப்பென்று சொல்வதற்குத் தகுந்த ஆதாரப்பிரமாணமுண்டா?

5. ஒவ்வொரு இராகங்களின் சஞ்சாரக்கிரமமறிவதற்குக் கீதம் ஆதாரமென்கிறார்களே, அப்படிப்பட்ட கீதம், இப்போதுண்டாக்கக் கூடியவர்கள் இருப்பாரானால் பின்வரும் சுருதியுள்ள சுரங்களில் தமக்குப்பிரியமான ஒரு தாளத்தில் கீதம் அமைத்து கீதம் அமைக்கும் விதத்தையும் என் சொற்ப அறிவுக்குத் தெளிவாக விதியுடன் சொல்ல அநுக்கிரகிப்பார்களா? 24-வது மேளம் வருணப்பிரியையில் ஜன்னியமான நவநீத பஞ்சமம், சகமதபதநிச||சநிபமரிசத, நி, ஆறாவது சுருதி, க. ரி நான்காவது சுருதி, சுத்தமத்திமம்.

6. சில காலமுன்னுள்ள தெலுங்குநாட்டு க்ஷேத்திரியரவர்கள், திருவாரூர் முத்துசாமி தீட்சிதரவர்கள், தஞ்சாவூர் சாமா சாஸ்திரிகள், திருவையாறு சுப்ரமணிய ஐயரவர்கள், மைசூர் சதாசிவ ராயரவர்கள், திருவையாறு தியாகராஜ ஐயரவர்கள் முதலியோர் செய்த கீர்த்தனங்கள் மிகவும் அருமையுள்ளனவென்று எல்லாரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். அவர்கள் எந்த ஆதாரத்தைக்கொண்டு கீர்த்தனங்களுண்டுபண்ணுகிறார்கள்? அவர்களுக்காதாரமாயிருந்த இரகசிய முறைகளைப் பின்னுள்ளயாருக்காவது உபதேசித்தார்களா? இராமபக்தரான தியாகராஜ ஐயரவர்கள், தெய்வ சந்நிதியில், புதிது புதிதான கீர்த்தனம் செய்து பகவானைத் துதித்துக்கொண்டு வருகையில் பழக்கமான இராகங்களிற் பலகீர்த்தனங்கள் செய்வதைப் பார்க்கிலும் அபூர்வமான வெவ்வேறு இராகங்களில் பகவானைத்துதிக்க வேண்டுமென்று விரும்பி இராகங்களடங்கியதும் பாடக்கூடிய விதத்தைத் தெரிவிப்பதுமான ஒரு சுவடியைநாரதர் கொடுத்தா

றென்று பரம்பரையாய்ச் சொல்லப்பட்டுவருகிறது. இதைக் கொண்டும் உலகெல்லாம் மதிக்கத்தகுந்த சங்கீதஞானத்தின் உயர்வு, ஒவ்வொரு கீர்த்தனங்களிலும் அமைந்திருப்பதைக்கொண்டும், இராகங்களைச் சுலபத்திற் பாடக்கூடிய ஒரு உத்தமமும் சுலபமுமான முறை இருக்கவேண்டுமென்று நானினைத்தது தப்பாக மாட்டாதென்று துணிவுடன் தங்கள் சமூகத்தில் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அந்தக் கிரந்தம் இப்போதிருக்கிறதா? யாரிடமிருக்கிறது?

7. மனிதர் நினைக்கக்கூடிய வெவ்வேறு சுருதிபேதமுள்ள எல்லா இராகங்களையும் தெரிவிக்கும் தாய் இராகங்களடங்கிய மேளகர்த்தா இப்போதிருக்கிறதா?

8. சுத்தரிஷபமும் சாதாரண காந்தாரமுமுள்ள அநுமத்தோடி யென்னும் 8-வது தாய் இராகத்தில், இரண்டாவது சுருதி ரிஷபமும், மூன்றாவது சுருதி காந்தாரமுமுள்ள தோடியும், மூன்றாவது ரிஷபமும், ஐந்தாவது காந்தாரமுமுள்ள பூபாளமும், முதலாவது ரிஷபமும் மூன்றாவது காந்தாரமுமுள்ள அசாவேரியும் ஜன்னிய இராகங்களாக வரலாமா? ஒருவேளை வேறு மார்க்கமின்றி இரண்டின் கீழ் மூன்றையும், நாலின் கீழ் ஐந்தையும் சேர்த்துக்கொண்டு பூபாள முண்டாக்கினார்களென்று வைத்துக்கொள்வோம், இரண்டின் கீழ் ஒன்றையும் நாலின் கீழ் மூன்றையும் வைத்து அசாவேரி குறிப்பதற்கென்ன நியாயம்? இரண்டிலொன்று தப்பாயிருக்க வேண்டுமே, சரி தப்பான இரண்டு பேதங்களை ஒரே மேளத்திற் குறிக்கும் வழக்கம் மிகுந்திருப்பதினால் முறைப்படி கற்க விரும்புவோர்க்கு முரண்படாதா? மயக்கமுண்டாக்காத வேறுமுறை மகான்களாற் சொல்லப்பட்டிருக்குமென்பதே என் துணிபு. அப்படி இருக்குமானால் சுருதி தவறுதலின்றி ஒவ்வொரு இராகங்களையும் யாவரும் சுலபமாயறிந்துகொள்ள ஏதுவாகுமென்றே இதைக் கேட்கிறேன்.

9. ஒரு ஸ்தாயியிலுள்ள பன்னிரண்டு அரைச்சுரங்களில் நேத சுருதி ஷட்ஜமம், பஞ்சமம் நீங்கலாக மற்ற சுருதிகள் சரியான அளவில்லை யென்றும், அளவு கணக்கின்படி மாத்திரம் வைக்கப்பட்ட சுருதிகள் சரியல்ல வென்றும் தற்காலத்தில் விவாதம் நடந்து கொ

ண்டிருக்கிறது. இதோடு சுருதி தப்பாயிருப்பதி னிமித்தம் ஆர்மோனியம் பியானு முதலியவாத்தியங்களில் இந்தியாவின் இராகங்களை வாசிக்க முடியாதென்று சொல்லும் ஆக்ஷேபணையும் கலந்து பெருங் கூச்சலாகின்றன. இவைகளில் பன்னிரண்டு அரைச்சுரங்களாகிய 72-மேளகர்த்தா இராகங்களை ஆர்மோனியம், பியானுவிற் பாடுவதில் அபசுரமுண்டாகா தென்பது என் நிச்சயம். அரை அரையாயமைந்த இந்தப்பன்னிரண்டு சுருதிகளில் கால் காலாயமைந்த * 22 சுருதியுள்ள இராகங்களைப்பாடுவது கூடியதல்ல. எந்தச் சுருதியுள்ள சுரங்களைப் பாடுவதில் உபயோகிக்கிறோ மென்று தெரியாமையினுல் இப்படிச் சொல்லுகிறார்களோ வென்று நான் சந்தேகிக்கிறேன். திருஷ்டாந்தமாகச் சதுர் சுருதி ரிஷபமும் தய்வதமுமுள்ள தீர் சங்கராபரண இராகத்தை ஆர்மோனியம் பியானுவில் வாசிக்கலாமே யொழிய, பஞ்ச சுருதி ரிஷபமும் தய்வதமுமுடைய சங்கராபரண இராகத்தை அதனெல்லா அழகோடும் படிக்க முடியுமா? அந்த இராகத்திற்கு ஜீவனுக விளங்கும் பஞ்ச சுருதி ரிஷபமும் தைவதமும் நீங்கினுல் மற்றெல்லா அம்சத்திலும் ஒத்திருந்தும், ஜீவனற்ற உடல்போலவே இருக்குமென்று எண்ணுகிறேன். இதுதவிர வேறு காரணமிருக்குமானுலும், அல்லது நான் கேட்பது தப்பாயிருக்குமானுலும், தயவாகமன்னித்து வீணையிற் காணப்படும் சுரங்களுக்கும் ஆர்மோனியத்திற் காணப்படும் அரைச்சுரங்களுக்கும் பேதமின்னதென்று தெளிவாகச் சொல்லக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

10. முன்னுள்ள பிரபல வித்துவான்களில் அநேகர் ஒரு இராகத்தைப் பத்து நாள் இருபது நாட்களாக முன்வந்த சங்கதிகள் திரும்பவராமல் பாடினர்களென்று சொல்லிக் கொள்ளுகிறார்களே, ஆனுல் தற்கால வித்துவான்கள் ஒரு மணி இரண்டு மணி நேரம் பாடுவது அபூர்வமாக இருக்கிறதே, முன்னுள்ள பெரியோர்கள் விரிவாகப்பாடுவதற்கு உதவியாயிருக்கும் அநேக வகையான பிரஸ்தாரங்களை மனனம் பண்ணிப் பின் மனுேதர்மமுண்டாகி யிருக்கலா

* (22 சுருதிகளைப்பற்றியும் கால் சுருதிகளைப்பற்றியும் என்னுடைய அபிப்பிராயம் சற்று வித்தியாசப் பட்டிருந்தாலும், தற்காலத்தில் பிரஸ்தாரத்திலிருப்பதை அநுசரித்துச் சொல்லுகிறேன்.)

மென்று ஊகிக்க இடமிருக்கிறது. எத்தனை வகையான பிரஸ்தாரங்களுண்டு? அவைகளிப்போது எங்கே கிடைக்கும் என்பதைத் தாங்கள் தயவாய்த் தெரியப்படுத்துவீர்களா?

இந்தியாவின் கீதத்தை உள்ளபடியே கேட்டு ஆநந்திக்கும் அதிபுத்தி சூட்சுமமுள்ள சில கனவான்கள், அரைச் சுரங்கள் நீங்கலாக வரும் சுருதிகளின் நிச்சயம் தெரிய விசாரிக்கும்பொழுது, சிறந்த வித்துவான்களுங்கூட அவைகள் கமகமென்றும் அவைகள் பத்து வகைப்படுமென்றும், கமகத்துக்கு அர்த்தம் மறைபொருளென்றும், எங்கள் பெரியோர் இப்படி எங்களுக்குச் சொல்லிவைத்தார்களென்றும், அதை எழுதிக்காட்ட முடியாதென்றும், நெடுநாள் கேள்வியினாலேயே அது வரவேண்டுமென்றும் சொல்லுகிறதைப் பலதடவைகளிலும் கேட்டிருக்கிறேன். தானறிந்த பல நலமுள்ள கலைகளையும் உள்ளது உள்ளபடியே பிறர் அறிந்துகொள்ளப் போதுமான மறைப்பற்ற நூல்களும், உபகரணங்களுமுண்டாக்கிக் கலாசாலைகளை ஏற்படுத்திக் கற்றுக்கொடுத்துத் தம் காருண்யத்தையும், திறமையையும், பலவகையிலும் நிலைநாட்டும் மறைப்பற்ற ஆங்கிலேயர் அரசாட்சிசெய்யும் இக்காலத்திலாவது இந்தியாவின் சங்கீத இரகசியங்களையும், மூலாதாரப்பாடங்களையும் விதிகளையும் தெளிவாக யாவருக்கும் விளங்கும்படி செய்தால் இந்தியாவின் சங்கீதத்திற்கு இப்போதிருக்கும் பெருமையினும்பன்மடங்கு பெருமைவிளங்குமென்று நினைத்து இவைகளைக்கேட்டுக்கொண்டேன். கற்றறிந்த தங்கள்முன் தகுதியற்ற இச்சிறு சந்தேகவினாக்களைக் கேட்டதற்காக என்மேல் வருத்தமடையாமல் மன்னித்துச்சரியான சமாதானம் சொல்வீர்களென்று நம்பி இவ்விண்ணப்பம் தங்களுக்குச் செய்துகொண்டேன்.

M. ஆபிரகாம் பண்டிதர்.

# நமது பூர்வகாலக் கப்பற்றொழில்.

(கச-ம் பக்கத்தொடர்ச்சி.)

இதுவரையில் சீனதேசத்துடன் செய்துவந்த கப்பல்யாத்திரைகளைப்பற்றி எழுதினோம். இனிச் சில வடநாட்டு மேன்மைகளைக்கூறிப் பின் தென்னாட்டின் போக்குவரவை விவரிப்போம்.

வடக்கில் இப்பொழுது கீழ்வங்காளமென்று சொல்லப்படும் பாகத்தில் வங்காளக்குடாக்கடல் ஓரமாக சிட்டகாங்கு என ஒரு துறைமுகமிருக்கிறது. காலஞ்சென்ற டாக்டர் ப. ஹண்டர் வங்காளமாகாணத்துத் தொழில்களைப்பற்றிப் பேசும்பொழுது "1873-ம் வருஷம் வரையில் கப்பல் நிருமாணித்தல் இந்தத்துறைமுகத்தில் நடந்துவந்தது" என்றும் "1860–61-ல் 2036-டன் சுமையேற்றக்கூடிய 16-கப்பல்கள் கட்டப்பட்டன" வென்றும் "1870—71-ல் 1028-டன் நிறை சுமக்கக்கூடிய 6-மரக்கலங்களும்" "1873—74-ல் நான்கும், 1874—75-ல் 286-டன்னில் ஒன்றும் செய்யப்பட்டன என்று எழுதுகிறார். இன்னும் 1853-ல் ரெனினியூபோர்டைச்சேர்ந்தமிஸ்டர் கர்ரி அந்தத்துறைமுகம் ஒருபெரிய வியாபாரஸ்தலமென்பதைக் காட்டிலும் பெரிய கப்பற்காரர்கள் ஊர்என்று சொல்லலா"மென்கிறார். 16-வது நூற்றாண்டில், முதன்முதலாக போர்த்துக்கேசியர்கள் இந்நாடுவந்து பார்த்தபோது, இதன் நிலைமையைக் கவனித்து இதற்குப் "பெருந்துறை" எனப்பொருள்படும் Porto Girarreto எனப்பெயரிட்டனர்.

சென்ற பதினைந்தாம் நூற்றாண்டில் யுங்-லோ (Yung-lo) என்ற சீனசக்ரவர்த்தியின் காலத்தில், மேல்நாடுகளோடு வியாபாரத்தை விருத்திசெய்யவேண்டுமென்ற நோக்கத்தோடு செங்ஹோ (Cheng-ho) என்பவரைத் தூதனுப்பியபோது, அவருக்கு அரபிதெரிந்த துவிபாஷியாக மாகுவன் என்னும் சீன துருக்கர் அனுப்பப்பட்டார்.

சுமத்ராதீவுவழியாய் வந்த அந்தத்துறை வழியில் சிட்டகாங்கில் தங்கிற்று. அதன் வளங்களைக்கண்ட பாருவன் "வங்காளத்திலுள்ள பெருந்தனிகர்கள் சொந்தமாகக் கப்பல்கள் தயாரித்து அதனிற் பல புறதேசங்களோடு வியாபாரம் செய்கின்றனர். பலர் வியவசாயத்திலும், சிலர் வியாபாரத்திலும், மற்றையோர் தொழிலாளிகளாயுமிருக்கின்றனர்' அரசனும் கப்பல்களிற் சரக்கேற்றி அந்நியதேச வியாபாரத்திற்கு அனுப்புகின்றான். முத்து இரத்தினங்களும் சீனாவிற்கு காணிக்கையாக அனுப்பப்பட்டிருக்கின்றன" என்றெழுதியிருக்கிறார். இதற்கு 60-வருடங்களுக்கு முன்னர் வந்த பெரும் தேசசஞ்சாரியான இபன் படோ (Ibn Batuta) மால்தீவுகளிலிருந்து சிட்டகாங்கு துறைமுகத்திற்கு வந்தபோது "வங்காளஜனங்கள் அநேக கப்பற்படைவைத்து லக்ஷணவதி (Modern Cour) பட்டினத்து ஜனங்களுடன் போராடுகின்றனர்" என்றும், மால்தீவுகளிலிருந்து சோழிகள் கொண்டுவரப்பட்டு அவை அரிசிமுதலியவற்றிற்கு மாறப்படுகின்றன வென்று மெழுதுகிறார். இவரையும் இவரது யாத்திரைகளைப்பற்றியும் எழுதும் புரொபெஸர் கிரிஸ்டியன் லாசன் என்னும் ஜர்மன் நிபுணர் தமது (Inctische Altertumskunde) என்னும் புஸ்தகத்தில் "அவர்சொல்லுகிற அடுத்தவூர் வங்காளம். நமது யாத்திரிகர்கள் அதனை 1346-ல் பார்த்தபோது அதற்கும் தெக்ஷிணத்திலுள்ள ஒரு துறைமுகம் வரையிலும் வெகுமும்மரமாய் வியாபாரம் நடந்ததெனத் தெரிவிக்கின்றார். அதைப்போலவே சீனாவுக்கும் நடந்தது.'' படோபோனவழி எப்படியென்னில் "நாங்கள் மால்தீவுகளிலிருந்து பாய்விரித்து 43-நாள் கடலிலோடி வங்காளம்சேர்ந்தோம். நாங்கள்போன முதல்பட்டினம் சமுத்திரக்கரையோரமுள்ள சிட்டகாங்கு என்னும் ஒரு பெரியவூர் என எழுதுகிறார். (Vide voyages d' gbn Batontal Texte Arabe accompagni d'une traduction by M. M. DEPREMER AND SANGAINETTI-PARIS 1853).

பாஹியனின் சரித்திரங்கூட சீனாவிற்கும் வங்காளத்திற்கும் இடைவிடாது வியாபாரம் நடந்துவந்ததாகச் சொல்லுகிறது. அவர் வந்தகாலத்தில் பழைய துறைமுகமான தாமிரிலிப்பட்டி அழிந்துபோக சிட்டகாங்கே மேலோங்கி வந்தது. "வங்காளத்திற்கு சுமத்

ராவிலிருந்துவர மௌஷான், நிக்கபார்தீவுகளுக்குச் செல்லவேண்டியிருக்கிறது; அங்கிருந்து வடமேற்காக 21-நாளைக்கு நல்லகாற்றின் உதவியால் ஓடினால் சிட்டகாங்குசெல்லுகிறோம். அங்கே நங்கூரம்பாய்ச்சிச் சிறு சிறு கப்பல்களிலேறி 166-மைல் ஆற்றிலோடினால் சுவர்ணகிராமமடைகிறோம். அங்கிருந்து தென்மேற்காக 105 மைல் செல்லுவோமானால் வங்காளத்தையடைவோ" மென்றெழுதுகிறார். இதே மாதிரியாக ஐத்ஸிங்கும் எழுதுவது இங்கு கவனிக்கத்தக்கது.

## தாமிரிலிப்பட்டி.

நீலிலே தாமிரிலிப்பட்டியென ஒரு ஊர் குறிப்பிட்டோம். அஃது இப்போது 'தாமசாக்' என்று சொல்லப்படும் பூர்வீக தாமிரிலிப்பட்டியாம். ஊக்ளிநதி முகத்துவாரத்திலிருக்கிறது. இதுதான் அநாதிகாலந்தொட்டு சீனமுதலிய விடங்களுக்குப் போக்குவரத்தான துறைமுகம். A. D. 411-ல் பாஹியான் என்னும் சீனயாத்திரிகன் இந்தியாவந்து திரும்பியபோது 14-தினங்களில் இலங்கைத்தீவுசென்றதாகக் குறித்திருக்கிறோம். இவருக்கு இரண்டு நூற்றாண்டுகட்குப்பின்னர் வந்த ஐத்ஸிங்கும் 673-ல் ஸ்ரீபோஜராஜனது கப்பலில் வந்து தாமிரிலிப்பட்டியிலிறங்கித் திரும்பும்போது, ஒருவியாபாரமரக்கலத்தில் சீனபாஷையில் மொழிபெயர்ப்பின் ஆயிரம் பிரிவுகளுக்கு மேலாகக்கூடிய 5-இலக்ஷம் கிரந்தசுலோகங்களுடன் திரும்பிச்சென்றனர். (Vide memories by Chavannes p. 10). இந்தத் துறைமுகத்தைப்பற்றி அவர்பின்வருமாறு எழுதுகிறார்.

"இந்தியாவின் கீழ்பாகத்திலிருந்து 40-யோஜனை தெற்கில் தாமிரிலிப்பட்டி இருக்கிறது. அதனில் ஐந்தாறுமடங்களிருக்கின்றன; ஜனங்கள் தனவந்தர்கள். அந்தப்பாகம் இந்தியாவின் கீழ்பாகமாயும், மஹாபோதி, ஸ்ரீநாளாந்தத்தினின்றும் 60-யோஜனையிலுள்ளதுமானது. நாம் சீனவிற்குத்திரும்பும் இடம் இதுதான். இரண்டுமாதகாலம் தென்கீழ்த்திசையில் இங்கிருந்து ஓடுவோமானால் காசா (Kacha) வையடைவோம். அதற்குள் போஜதேசத்திலிருந்து ஒரு மரக்கலம் தயாராகவிருக்கும். இஃது இப்படிச் சாதாரணமாக வருஷாரம்பம் அல்லது இரண்டாவது மாதத்தில் தயாராயிருக்கும். சிம்மளத்

திற்குச் செல்லவேண்டியவர்கள் தென்மேற்கே செல்லவேண்டும். சாதாரணமாக 700-யோஜனை தூரமிருக்குமெனச் சொல்லிக்கொள்ளுகிறார்கள். நாம் சாதாரணமாக மாரிகாலத்தைக் காசாவிற் கழித்துவிட்டுப்பிறகுதெற்குநோக்கி ஒருமாதகாலம்பிரயாணமானால் மலேய தேச மடைவோம்; அதுதான் இப்பொழுதுபோஜராஜனுக்குச் சொந்தம்; இந்த அரசாட்சியின் கீழ்ப்பல சிறுநாடுகளுண்டு. சாதாரணமாக வருஷாரம்பமுதல் ஒன்றிரண்டு மாதங்களில்தான் செல்வது வழக்கம். வசந்தகாலம்வரையில் அங்கேதங்கிப் பிறகுவடக்கே புறப்படுகிறோம். ஒருமாதத்திற்குள் (சீனாவிலுள்ள) க்வாங்குப என்ற ஊரையடைகிறோம். இதற்குள் 6-மாதமாகிவிடும். நமக்கு நல்வினைப்பயனுண்டாயின், யாத்திரைகள் கடைக்குச்சென்று பண்டங்கள் கொள்வதுபோல் இனிதுநிறைவேறத், தீவினைகூடியிருக்குமாயின் கஷ்டப்படவேண்டியது தான். இதனின்றும் அறிந்த பெரியோர்கள் தங்கள் முதிர்ந்த அறிவால் வேண்டியதைக் கொள்வார்களாக - (vide Mr Takakusu's Introduction to his translation of I-T Sings Records ppxxxiii - XXXIV).

இவருக்கு முந்தியும் பிந்தியும் அநேகர் தாமிரிலிப்பட்டி வந்து சென்றிருக்கின்றனர். நீதியிற் றேர்ந்த டாவோலின், சாவகம், நிக்கபார் தீவுகளின் வழியாக தாமிரிலிப்பட்டி சேர்ந்து 3 வருடகாலம் சம்ஸ்கிருத பாஷைபயின்று வந்தார். ஐத்ஸிங்கின் சிநேகரான டாட்சேங்டெங் விகாரமடத்தில் பன்னிரண்டு வருஷம் பயின்று வந்தார். இவர் சிம்மளம்வந்து, பின் தாமிரிலிப்பட்டி யடைந்தார். கொரியாவினின்றும் வந்த ஹவீலுன் என்பார், சீனத்திற்கும் கீழ்நடுகளுக்கும் பிரயாணமாகும் துறைமுகமென்றெழுதுகிறார். இன்னும் இதுமாதிரி வந்தோர் பலராவர்.

சிட்டகாங்கு துறைமுகத்துக்கு அணித்தான சாந்த்வீபத்தில் இப்பொழுது நோவாகாலி ஜில்லாவுடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. கப்பல் நிர்மாணிக்கவேண்டிய சாமக்கிரிகைகளும் குடிகளும் அதிகமிருந்து, அவ்விடத்திலுள்ளவர்களுக்கு மாத்திரமன்று, அந்நிய நாட்டு இராசாக்களுக்கும் கப்பல்கள் கட்டுப்பட்டு வந்தன. ஐரோப்பா கண்டத்திலுள்ள இட்டலி தேசத்து வெனிஸ் நகரத்தானுை சீசர்

பிரடரிக் (CEASAR FREDERICK) என்பவன் பர்மாதேசத்திலுள்ள பெகுவிலிருந்து சிட்டகாங்கிற்கு வரும்போது பெரும் புயலில் அகப்பட்டுக் கப்பல் கரைதட்டி இந்தச் சாந்த்வீபத்தில் வந்தபோது, இதனைப்பற்றி "இருநூறு மரக்கலங்கள் நிறைய உப்பு ஏற்றி வருஷாவருஷம் வெளிப்போவதுடன், இந்தப்பாகங்களில் மரக்கலங்களுக்கு ஏற்கும் சாமான்கள் மிதமிஞ்சிக் காணப்படுவதால் துருக்கி சுல்தானவர்கள் தமக்குவேண்டிய மரக்கலங்களை அலெக்ஸாந்திரியாவிற் கட்டுவதைவிட, இங்கு செய்துகொண்டு போதல் சகாயமென நினைத்துச் செய்தார்" என்று எழுதுகிறார். இதற்குப்பின் 80 ஆண்டு கழித்துவந்த ஹெர்பர்ட்டும் "இந்தியா முழுமையிலும் இது ஒரு நேர்த்தியான பட்டினமென்று கூறுகிறார். (Vide A sketch of the Jopography of and Statistico of Dacca by Dr. J. Taylor Col· 1840 p. 70—71).

இவைகளைத்தவிர்த்து பூர்வத்தில் "பங்காளா" என்ற துறைமுகம் ஒன்று இருந்திருக்கிறது. 1503-1508ல் பெகுவினின்றும் இப்பட்டினத்திற்கு யாத்திரைபோன லூடோவிக்கோடிவர்த்தேமாவென்னும் இத்தாலியன் * "தென்னசிரீமிலிருந்து பங்காளாவை நோக்கிப் புறப்பட்டுப் பதினொரு தினத்தில் நாங்கள் அந்த ஊர் சேர்ந்தோம். நான் பார்த்த ஊர்களுக்குள் இது முதல்தரமானது. இங்கே கோடீசுவரர்களான வியாபாரிகள் வசிக்கின்றனர். இந்தவிடமிருந்து வருஷமொன்றுக்கு ஐம்பது மரக்கலங்கள் நிறையப் பருத்தி, பட்டுவஸ்திரங்கள் அனுப்பப்படுகின்றன. இந்த சாமான்கள்தான், துருக்கி, சிரியா, பெர்ஷியா, அரேபியா, பெலிச்ஸ், இதோபியா முதலானவிடங்களிலெல்லாம் வியாபாரம செய்யப்படுகின்றது. அந்நிய தேசங்களினின்றும் வருகிற இரத்தினங்களைக்கொண்டு ஆபரணாதிகளில் வியாபாரஞ் செய்வோர் அனேகரிருக்கின்றனர்". என்றெழுதுகிறார். அதேகாலத்திற் சஞ்சாரம் செய்த பார்போஸாவென்ற வெள்ளைக்காரரொருவர் "கடல் ஒரு குடாவாகும்படி வடக்கே சென்றுவளைய அந்த இடத்தில் ஒரு பெரிய பட்டினமிருக்கிறது; அதனைப் பங்காளாவென்று சொல்லுகின்றனர். தேசம் பெரிதாயும் சீதோஷ்ணம் சௌக்கியமானதாயு மிருப்பதால் வெகு வியாபாரிகள் இவ்விடம் வந்துபோக இங்கிருக்கும் வியாபாரிகளும் பெரும் பிரபு

*தென்னசிரீம் என்பது பர்மாவுக்குக் கீழ்புறமுள்ளது.

க்களாய் மெக்காவிலுள்ள துபோல் வெகு சாமான்கள் நிரம்பக்கூடிய ஜங்கஸ் என்று சொல்லும் கப்பல்களிற் பண்டங்களை ஏற்றிச் சோழ மண்டலம், மலையாளம், பம்பாய், தென்னசிரீம், சுமத்ரா, (சுமந்த கூடம்) செய்லம், மலாக்கா முதலியவிடங்களிற் கொண்டுபோய்ப் பலவகைப்பண்டங்களையும் வியாபாரம் செய்கின்றனர் " என்கிறார். பூகோளசாஸ்திரமொன்றில் பங்காளா பட்டினத்தில் 40000 வீடுகள் இருந்ததாகக் கணக்கிடப்பட்டிருக்கின்றது. இந்தப்பட்டினம் கங்கைநதி (மெக்னுகிளை) விழுமிடத்திற் சமுத்திரக்கரையிலிருந்ததாக அநேகர் அபிப்பிராயப்பட, டாக்டர் டெய்லர் டக்கா பட்டினத்தில் "பங்காளாபசார்," என்பது பழைய பங்காளத்தைக் குறித்ததென்றும், மற்றவை கடலாற் கொள்ளப்பட்டதென்றும் அபிப்பிராயப்படுகிறார்.

இவைகளைத்தவிர்த்து 1669-79ல் இந்தப்பாகங்களில் நீகாமனாகவிருந்த மிஸ்டர் தாமஸ் பௌரி என்னும் ஆங்கிலேயர் ஹுக்ளி, பிப்லி, பலஸோரா என்னும் துறைமுகங்களில் வங்காளத்து நவாபும், மற்ற வியாபாரிகளும் யானைகள் இலங்கையினின்றும் கொண்டு வரும்படியான பெருப் கப்பல்கள் வைத்திருந்ததாக எழுதுகிறார். மாஸ்டர் ஜான்டேவில் என்றொருவர் சுமத்ரா தீவில் இவர்களே யொருபாக முழுமையும் குடியிருந்து வருகின்றனர் என்கிறார்.

பம்பாய்ப் பக்கத்திலும் கப்பல்வேலை செய்வதில் இந்தியர்கள் பேர்போனவர்களாயிருந்தார்களென்பது 1840-ம் வருஷத்தில் பிரசுரம் செய்யப்பட்ட "இந்தியாவில் கப்பல் நிருமாணிக்கும் தொழிலைப்பற்றிய நிரூபங்கள்" (A collection of papers relating to the shop Building in India) என்ற புத்தகத்திலிருந்து ஒரு சிறுபாகம் மொழி பெயர்க்கிறோம் :—

"பம்பாயிலுள்ள கப்பல் கட்டுமிடத்தைப்பற்றிய சரித்திரம் வெகு விசித்திரமானது. 1735-ம் ஆண்டுக்கு முன்னர் இந்த இடத்தில் மரக்கலச்சாலை ஒன்றுமில்லை. அக்காலம் வரையிற் சூரத்துத்தான் முக்கியமரக்கலச் சாலையாக விருந்தது. 1673 வரையில் (ஈஸ்டு இந்தியா) கம்பெனி மலையாளதேசத்து சமுத்திரக்கொள்ளைக்காரரினின்றும் தங்களைக்காப்பாற்றிக்கொள்ளக்கப்பற்காப்பும், படைக்கு

யுத்தக்கப்பல்களும் தயாரிக்க வேண்டியிருந்தது. 1735-ல் ஒரு மரக்கலம் சூரத்தில் லோஜீநசர்வான்ஜியின் மேற்பார்வையின் கீழ்க் கட்டப்படுவதைப் பார்த்த கம்பெனி ஏஜண்டு, அவரை பம்பாய்க்கு வரும்படி வேண்டினர். இராசாங்கத்தில் அங்கே ஒரு மரக்கலச் சாலையமைக்க விரும்பினர். தன் எஜமானிடத்தில் வைத்த நம்பிக் கையாலும் பிரியத்தாலும், அந்த பார்சிக்கு (லோஜிநசர்வான்ஜி) எவ்விதமாய்ப் போதித்தும் தன் எஜமான் உத்தரவளிக்கும் வரை யிற் போகமனமில்லை. இதற்குச் சிறிதுகாலம் கழித்து, லோஜி இன்னும் சிலவேலைக்காரர்களுடன் வந்து இப்பொழுது மரக்கலச் சாலையிருக்கும் இடத்தில் ஒரு பாகத்தைச் செப்பனிட்டார். மரத் தட்டால் லோஜியை வடக்கேபோய் வனங்களிற் பார்த்து அதனையு டையவர்களிடம் தரகு செய்ய அனுப்பினார்கள். திரும்பி வரும் போது தன் குடும்பத்தோடுவந்து பம்பாயிற் குடியேறினர்.

" மகாராஜாவின் மரக்கலங்கள் அடிக்கடி சாலையில் வந்து தங்க நேரிட்டதால் 1767-க்குப் பிறகு சாலையை விஸ்தரிக்க வேண்டியதா யிற்று. 1771-ல் பிராம்ஜி மன்ஸக்ஜி, ஜம்ஸட்ஜிபோமாஜி என்ற தனது இரண்டு பேரன்மார்களையும் தொழிற்சாலையில் அமர்த் தினர்; ஆயினும் அவர்கள் தொழிலை ஆரம்பமுதற் பயிலவேண்டு மென்கிறதாயுத்தேசித்து மாதம் 12 ரூபா சம்பளத்தில் தச்சர்க ளாக நியமித்தார்.

" 1774-ல் 3000 பவுனுக்கு மேற்படாமலும் ஒரு வீட்டையும் தவிர்த்து வேறொன்றுமில்லாமல் லோஜிநசர்வான்ஜி பரகதியடைந் தார். இருந்தாலும் தன் சாமர்த்தியத்தைப் பேரன்மார்களுக்குப் புக ட்டியிருந்த படியால் அவருக்குப்பிறகு மன்ஜுக்ஜி மரக்கலச் சாலை த்தலைவராயும் அவரது இளவல் போமாஜி உதவியாயு நியமிக்கப்பட் டார். 1776-ல் இந்த மரக்கலச்சாலை பெருங்கீர்த்தியடையவே, இந்தியாவில் நடந்த அதனைச் சமீபித்த யுத்தங்களிலும் முக்கியமாக சர் எட்வார்டு ஹியூசுக்கும் அட்மிரல் அபிரினுக்கும் நடந்த போர்க ளிலும் மரக்கலங்கள் முழுமையும் இங்கேயே திருத்தப்பட்டன; இந்தப் பேர்போன இரண்டு இந்தியர்களும் கூடி 900 டன்னில் இரண்டு கப்பல்கள் நிருமாணித்தனர்.

"1790-ல் போமாஜி கடனாளியாயும், 1792-ல்மன்சக்ஜியொன்று மில்லாமலும் காலம் செல்லவே, அவரது புத்திரர்கள் பிராம்ஜிமன் சக்ஜி, ஜம்ஸட்ஜிபோமாஜி என்ற இருவரும் தகப்பனது வேலை களிலமர்ந்தனர். இவர்கள் 1802-ல் ஈஸ்டு இந்தியா கம்பெனியாருக் காகக்கட்டிய "கார்ன்வாலிஸ்" என்ற யுத்தமரக்கலம்பெற்ற வெற்றி யையும் பெலத்தையுங் கண்டு, ஆங்கிலேய யுத்தமந்திரம் தங்கட்குவே ண்டிய மரக்கலங்களை இந்த இடத்திலேயே நிருமாணிக்க உத்தரவ ளித்தனர். முதலில் ஐரோப்பியத் தலைவன் ஒருவனை அனுப்ப மந் திரிகள் உத்தேசித்தனராயினும், ஜம்சட்ஜியின் வல்லமையை யறிந்த பிறகு, அவரையே தலைவராகக்கொண்டு கப்பல்கள் கட்டும்படி உத் தரவிட்டார்கள். இரண்டுபோர்க்கப்பல்களும், ஒருவரிசைமரக்கலங் களும் கட்டிச்செல்லவே இவர்கள்பெயர் இங்கிலாந்து முழுதும் பர விற்று. இராசாங்கத்தின் நம்பிக்கையும் லக்ஷியமும் ஒருநாளும் தவிர வேயில்லை.

"இப்பொழுதும் ஜம்சட்ஜியின் புத்திரர்களும் பேரன்களும் மரக்கலச்சாலையிலிருக்கின்றனர். சென்ற ஐந்துதலைமுறையாக இவ ர்கள் இந்த உத்தியோகத்திலமர்ந்திருப்பதுடன் இவருடைய (ஜம் சட்ஜி) குமாரனும் முன்னோர்களது பெயரை ஒருநாளும் தாழ்த்தமா ட்டாரென்று வெகு சந்தோஷத்துடன் தெரிவிக்கிறேன். இந்த மரக் கலச் சாலையின் பூர்வோத்தரம் இப்படியிருப்பதால், முதலிலிருந்து இவர்கள் எஜமானத்துரோகமென்பது சிறிதுமின்றி நடந்தாலும் ஒருவரும் தனவந்தர்களாகவேயில்லை.

1839-ம் ஆண்டு "பாம்பேடயம்ஸ் பம்பாய்மரக்கலச்சாலை கப் பல் நிருமாணத்தலைவர்களைப்பற்றிப் பின்வருமாறு சொல்லுகிறது." பின்வரும் ஜாப்தா பம்பாய்க் கப்பல்கட்டும் சாலையில் தலைமைவகித் தோரைக் குறிக்கின்றது.

1. லோஜி 1736—1774.
2. மானக்ஜிபோமாஜி 1774—1793.
3. பிராம்ஜியும் ஜம்ஸட்ஜியும் 1793—1805.
4. ஜம்சட்ஜியும் ரட்டம்ஜியும் 1805—1811.
5. ஜம்சட்ஜியும் நௌரோஜியும் 1811—1821.
6. நௌரோஜியும் சர்சட்ஜியும் 1821—1837.

1839-மார்ச்சில் போர்ட்ஸ்மத் மரக்கலச்சாலையிலிருந்து ஒரு ஐரோப்பியன் 700-பவுன் சம்பளத்தில் தலைமைஸ்தானத்திற்கு நியமிக்கப்பட்டான்."

இந்த மரக்கலச்சாலை ஏற்பட்ட நாள்முதல் (1736) 1840 வரையில் 1000 டன் சுமைக்குமேல் எடுக்கக்கூடியதாக 9 மரக்கலங்களும், 800 டன்னுக்குமேல் 56-ம், 700 டன்னில் 6ம், 600 டன்னில் 5ம், இன்னும் 35 சிறு கப்பல்களும் கட்டப்பட்டன. 1802-1818க்குள் இராசாங்க மரக்கலப்படைக்கு நான்கு 74களும் (அதாவது 74 பீரங்கிகளுடையது), இரண்டு 38களும், இரண்டு 36-ம், இரண்டு 18-ம், இரண்டு 10களும் செய்தனுப்பப்பட்டதோடு, மலபார் என்ற 74-பீரங்கிகளுடைய தொன்றும், 38 பீரங்கிகளுடையதொன்றும் வேலையாகிக்கொண்டிருக்கிறதென்றுலெப்டினண்டு கர்னல் பிட்ஸ்கிளாரன்சு எழுதுகிறார்.

இந்த வம்சத்திற் கடைசியாகவிருந்தவர் 1909 ஆலவல் காலஞ்சென்ற நௌரோஜிமானக்ஜிவாடியா C. I. E. என்னும் கோடீசுவரர். இவர் மரண அறிக்கையைக்குறிக்கும்போது, "இவர் 1710ல் சூரத்து நகரத்திற் பிறந்த சேத்லோஜிநசர்வான்ஜிவாடியா என்னும் கப்பல் நிருமாணியின் வம்சத்தினர். இவர் (சேத்லோஜி) வயதாகக் காலக்கிரமத்தில் தலைமை நிருமாணிகர் ஸ்தானத்தைப்பெற்றுப்பரம்பரையாகத்தகப்பனிடம்பிள்ளை அவ்வித்தையைக்கற்று,அத்துறை இந்நாட்டிலும் இங்கிலாந்திலும் பெரும் பெயர்பெற்று வந்தனர். அதற்காகத் தங்கப்பதக்கமொன்றும் சால்சத்தியில பெரும் மானியமும் அடைந்திருக்கின்றனர். ஒன்றரை நூற்றாண்டுகளுக்குள் இந்த வாடியாக்கள் 350-போர்க்கப்பல்களும் மற்ற மரக்கலங்களும்கட்டியிருக்கின்றனர். சேத்லோஜிநசர்வான்ஜிவாடியா தமது வன்மையாலும் சாமர்த்தியத்தாலும் பிரஞ்சு கவர்ண்மெண்டுக்குச் செய்த ஒத்தாசைக்குப் பெருமை பெற்றதுமன்றி நெப்போலியன் போனபார்த்திடமிருந்து Legiond honneur பிராஞ்சிய பட்டத்திலொருவரிசையும் பெற்றார். N. M. வாடியாவுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்து, சிறுவயதிலிறந்தன என்றெழுதுகிறார்கள்.

---

ஒற்றன்.

# சாக்ரடீஸ்.

இவர் கிரீஸ் தேசத்தில் ஆதன்ஸ் என்னும் நகரத்தில் இற்றைக்கு 2370-வருஷங்கட்குமுன் சிறந்துவிளங்கிய மகான்களிலொருவர். கல்வியில் மகாநிபுணர். ஒழுக்கத்திற் சிறந்தவர். சீரிய கூரிய அறிவுடையோர். சாந்தகுணசீலர். யதார்த்தவாதி. மிகுந்த சொல்வன்மை பொருந்தியவர். உண்மையைநாடித் தூருவிச்செல்வதில் அதிக ஊக்கமுடையவர். கல்விச்செருக்குச் சிறிதுங் கொள்ளாதவர். பிறரிடத்திற் கண்டசெருக்கைக்கண்டித்து வாதத்தாலவரை யடக்கி அவர் அஞ்ஞானத்தை அவர்க்குப் புலப்படுத்தி யவரைச் சீர்திருத்துவதிற்றம் வாழ்நாளைக் கழித்தவர். தொன்றுதொட்டு இன்றுவரைப் பல்தேயத்துப் பல்லோராலும் போற்றப்படுபவர். இவ்வண்ணஞ் சிறந்துவிளங்கிய சாக்ரடீஸைப்பற்றிச்சிறிது நந் தமிழ்மக்களு முணருமாறு "செந்தமிழ்"வாயிலாக என்சிற்றறிவிற்கெட்டியவாறு மொழிபெயர்த்துத் தமிழ்நடைக்கேற்றவாறு சிலமாறுதலுடன் வெளியிடத்துணிந்தேன்.

இவருடைய ஜீவசரித்திரத்தைப்பற்றி ஒரு சிறிதே நமக்குக் கிடைத்திருக்கிறதன்றி முற்றுங்கிடைக்க வழியில்லை. பொதுவாய்ப் பெரியோர்களுடைய சரித்திரங்களெல்லாமிவ்விதந்தான். வயதில் கீர்த்தியுடன் விளங்கினால் அப்பொழுதுதான் அவர்களின் வாலிபப் பருவத்தின் விஷயங்களை ஜனங்கள் அறியவிரும்புவதுவழக்கம். அவ்வித விருப்பமேற்பட்டும் உண்மை யவரவர் வாயால் வெளிப்படுமேயன்றி ஜனங்களால் ஊகித்தறியப்படமாட்டாது. ஊகமெல்லாம் கற்பனையாய் முடியும். அக்காலத்தில் தன்சரிதம் தானுணர்த்தும் வழக்கம் கிடையாது. ஒருவர் சரித்திரத்தை அச்சுவாயிலாகப்பரவச்செய்த லிக்காலத்திற்கேயுரியது. ஆதலின் கர்ணபரம்பரையாகவேனும் உடனிருந்தோர் எழுதிவைத்தேனும் வந்தாலன்றி நாம் ஒரு சிறிதுமவர்களைப் பற்றியுணரவல்லேமல்லேம்.

இப்பொதுவிதிக்கு உட்பட்டதுதான் சாக்ரடீஸ் சரித்திரமும். இவரைப்பற்றிப் பலகதைகள் வழங்குகின்றன. இவை பின்னுள்

ளோராற் புனைந்துரைக்கப்பட்டவை. இவரைப்பற்றியவுண்மை விஷயங்கள் பிளேடோ (Plato) ஸெனபன் (Sanophon) என்பவர்கள் வாயிலாக அறியப்படுவன. இருவரும் சாக்ரடீஸ் என்பவருடைய சிடர்கள். இவர்கள் சாக்ரடீஸ் முதுமையை யுணர்த்தினரேயன்றி இளமையை யுணர்த்திலர். ஆதலின் சாக்ரடீஸ் இளமையைப்பற்றி விசேஷமாயொன்று முணரக்கூடவில்லை. சாக்ரடீஸ் கி. மு. 469-ம் வருஷத்திற்குச் சற்றுமுன்பிறந்தவர். இவர் பிதா ஸொபிரானிஸ்கஸ் (Sopronicus) என்ற ஒருசிற்பி. இவர்தாய் பானரீட் (Phaenarete) என்ற ஒரு மருத்துவச்சி. இவருடைய அறிவொழுக்கமுதிர்ச்சியின் விவரங்கள் சிறிதும் நமக்குக்கிடைத்தில. இவரது 40-ம் ஆண்டுவரை இவரைப்பற்றிய விஷயங்கள் ஒருவராலுமெழுதப்படவில்லை. முதன்முதல் இவரைப்பற்றி எழுத்துமூலமாய் நாம் அறிவது பாட்டிடேயா (Potidaea) என்னுங்கோட்டையை அதீனியர்கள் (Athenious) முற்றுகைபோட்டபொழுது இவர் அங்கு உடன் சென்று கடும்போர் புரிந்தனரென்பதே.

இப்படி 40-வயதுவரை இவரைப்பற்றி யொன்றுமறியக்கிடைத்திலதேனு மக்காலத்தில் ஆதன்ஸ் நகரமுற்றிருந்த சிறப்பையும் அந்நகரத்தாரின் மேன்மையையும் நாகரீகத்தையும் ஞானத்தையுமுற்று நோக்கின், இவர் குழந்தைமுதல் மனிதனாகும்வரை நல்லாசிரியரிடங் கற்று நன்மக்களுடன் பழகி, அறிவு முதிர்ச்சிக்குக்காரணமான பற்பலகருவிகளாற் சூழப்பெற்றிருத்தல் வேண்டுமென்பது திண்ணம். அக்காலத்திற்றான் ஆதன்ஸ் நகரம் கிரீஸ் தேசத்திற்கோர் திலகம் போல் விளங்கியது. எலிஸபெத், (Elizabeth) விக்டோரியா (Victoria) காலத்து இங்கிலாந்துபோலும், அகஸ்டஸ் (Augustus) காலத்து உரோமாபுரிபோலும், பாண்டியர் காலத்துச் செந்தமிழ் நாடுபோலும் பலதுறைகளினும் பலவுத்தம பண்டிதர்கள் நின்றுநிலவி நீள்புகழ்பரப்பியது. அப்பொழுதுதான் கவிபாடுதல் படிமைவனைதல் கட்டிடமமைத்தல் சரித்திரமெழுதுதல் இராஜாங்கம் நடத்தல் பிரசங்கஞ்செய்தல் முதலிய வரியபெரிய விஷயங்கட்கு இன்னுமவரே நமக்குத்தலையானவர். உலகத்தில் அவ்வத்துறைகளில் அவரிட்ட பிச்சைதான் இன்றும்நின்று நிலவுகிறது. இவ்விதமேன்மக்கள் ஒருங்கே வசித்தகாலத்திற்றான் சாக்ரடீஸென்ற மகானுமிருந்

தது. ஏககாலத்தில் இன்னோரன்ன பலருமொருங்கு குழீஇயிருந்த தையுற்று நோக்கின் இவர் அவருட்பலருடன் பழகியுறவாடியிருத்தல் வேண்டும். ஏனெனில் ஆதன்ஸ் நகரமிகப்பெரிதல்ல. அந்நகரவாசிகளும் தங்கள் பொழுதை வீட்டிற்குள்ளிருந்து கழிப்பதில்லை. இவ்வகைச்சிறப்புற்றோங்கிய நகரத்தின்கண் வசித்தலே எவர்க்கும் உள்ளக்கிளர்ச்சியை யூட்டுவதோடு அறிவையும் பெருக்குமென்பதற்கு ஐயமின்று.

ஆதன்ஸ் நகரவாசிகட்கு மற்றொருவிதமாகவும் அறிவு வளர்ச்சியுண்டாயிற்று. அஃது அவர்களின் அரசாக்ஷிமுறையே பிறிதில்லை. அந்நாளில் ஆதன்ஸ்நகரம் பல நாடுகளைக் கீழ்ப்படுத்திப் பெரிய இராஜாங்கமாக விளங்கிற்று. ஆயினுமிப்பெரியவரசை ஆளுவோர் குடிகளே. குடிகள் ஒருங்கு கூடியசபையிற்றான் இராசாங்கவிஷயங்கள் தீர்மானிக்கப்பெறும். ஒவ்வொருவரும் கட்டாயமாய்ச் சபைக்கு வரவேண்டும். அச்சபைக்கு மந்திரியுமில்லை. குடிகளால் தெரிந்தெடுக்கப்பட்டவர்களால் ஆளப்பெறுவதுமில்லை. இவ்வித ஏற்பாட்டால் ஒவ்வொருவனும் இராஜாங்கவிஷயமான பெரிய காரியங்களில் தலையிடும்படி நேரிடுகிறது. அவனுடைய அதிகாரத்திற்கும் இராஜ்யப்பொறுப்பிற்குமளவில்லை. சுதேச இராஜ்யவிஷயங்கள் (Domestic administratiod) சட்டவிஷயங்கள் சமாதான சண்டை விவரங்கள், உடன்படிக்கைகள், பிறதேசகுடியேற்றநாடு சம்பந்தங்கள் (Foreign and colorial policy) முதலியவற்றைப்பற்றி ஜனங்கள் தம்முள்மாறுபட்டுச் சபையில் தாங்கொண்டகருத்துக்களை நிலைநிறுத்திப்பேசுவதை நாள்தோறும் கேட்கலாம். இன்னும் ஒருதிறத்தாரின்கொள்கைகளை மறுத்து அதிக சாமர்த்தியத்துடன் கேட்போர் வியக்கும்படி மற்றொரு சாரார் பேசுவதையுங்காணலாம். இதைக்கேட்போன் ஒவ்வொருவனு மிருவர்கூற்றையுஞ் சீர்தூக்கி யுண்மையீதென வுய்த்துணர்தல் அவசியம். இதுபோலவே அதீனியரின் நியாயஸ்தலமும் வேறொருவிதமாய் அவரறிவை வளர்த்தது. ஒவ்வொருநகரவாசியும் வேண்டப்படும்போது நியாயாதிபதியாய் நின்று வழக்கைத் தீர்மானிக்கக் கடமைப்பட்டவர்கள். இத்தகைய காரணங்களினால் ஆதன்ஸ் நகரவாசிகள் அதிகபுத்திசாலிகளாயிருந்தார்கள். அவர்களுட்

சமானமாக இப்பொழுது எத்தேசத்திலும் சாதாரணமாகச் சாமானியரில் ஆய்ந்தெடுக்க முடியாது. ஆதலின் ஜனசபையிலும் நியாய சபையிலும் நடந்த சம்பாஷணைகளைக் கேட்டும், சிந்தித்தும் சாக்ரடீஸ் பிறர்போலியுரைகளைத் துருவி உண்மையை நாடவல்லவரானாரென்று சொல்ல என்னசந்தேகம்.

இவ்விதமாக சாக்ரடீஸின் 50-வயது காலங்கழிந்தது. அக்காலங்களில் அறிவுப்பெருக்கிற்குக் காரணமான பலவிஷயங்கள் அவற்கமைந்துள்ளனவென்பது சொல்லாமலேயமையும். ஆயினு மவரின்னது படித்தார், பாலியத்திலிவ்வித வுணர்ச்சியுடனிருந்தார் பின் எவ்விதமது வளர்ந்தது என்பனவெல்லாம் ஊகத்தின்கண் அமைந்தனவேயன்றி யுண்மையாய்த்தெரிதல் கூடாதாயிற்று. அதீனியர் குழந்தைகள் ஒவ்வொருவரும் வழக்கமாகக் கற்கவேண்டிய தேகப்பயிற்சியும் சங்கீதசாஸ்திரமும் இவர் நன்குகற்றார்.

இவர்க்கு இதிகாச நிபுணரான ஹோமர் (Homer) முதலிய அக்காலத்துக் கவிகள் எழுதிவைத்த புத்தகங்களில் அதிபாண்டித்தியமுண்டு. அவர்கள் புத்தகங்களிலிருந்து மேற்கோள்கள் அதிகப் பிரியத்துடன் அடிக்கடி எடுத்துச் சொல்லுவார்.

பழைய பண்டிதர் எழுவரால் ஏட்டிலமைக்கப்பட்ட கவிரத்னங்களைத் தன் நண்பர்களுடன் படித்துக்களிப்பது வழக்கமென்று அவரே சொல்லுவர். 'உன்னை நீ உணர்தல்வேண்டும்' முதலிய அரிய வாக்கியங்கள் அவர் தம் நாவிலுதித்தனவே. இவை சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல் முதலிய அழகுகள் பொருந்திக் கேட்டவர் மனத்தைக்கவரும். சாக்ரடீஸும் அவற்றில் ஈடுபட்டவர் தான். அவர் சித்தாந்தத்திற்கு மூலமே இவ்வாக்கியந்தான். இன்னுமிவற்குக் கொஞ்சம் கணிதமும், அக்காலத்தார் உணர்ந்தவரை இயற்கைச்சாஸ்திரங்களும் தெரியும். வானசாஸ்திரம், (Advanced Geometry) இவர் நன்கு உணர்ந்திருந்தார். தத்துவசாஸ்திரத்திலும் அக்காலத்தாரறிந்தவரை இவற்குப் பயிற்சியுண்டு. ஆயினும் தத்துவ சாஸ்திரநுட்பங்களைமுற்றும்விஜாரிப்பதுசரியல்லவென்பது இவரது கொள்கை. மனிதர் நல்வாழ்க்கைக்கு எவ்வளவு கற்கவேண்டுமோ அம்மட்டே அவர் கற்றது. தத்துவசாஸ்திரிகளெல்லாம் பயித்தியக்

காரர்கள். அவர் கொள்கைகள் ஒன்றற்கொன்று மாறுபாடுடையன. அவர் சாஸ்திரமே பயனற்றது நிலைத்திராதது. மதக்கோட்பாட்டிற்கு மாறுபட்டது. கடவுளால் விரிக்கப்படாத மறைபொருள்களை ஆய்ந்துதேடுவது கடவுளுக்கு அதிருப்தியைக்கொடுக்கும். இவ்வகைத் தொழில்களிற் சென்ற காலத்தை நல்வழியிற் செலுத்துவது உத்தமம் என்பது அவர் கருத்து.

அவரது நாற்பதாம் ஆண்டுவரை இவ்விதப்பொதுவான விஷயங்கள் நமக்குத்தெரிகின்றன. இவைகளும் எழுத்துமூலமாக வந்தனவல்ல. இதற்கு முன்னால் இவர் பாட்டிடேயா (Potidaea) முற்றுகையில் கடும்போர்புரிந்தார் என்று முன்னமே சொன்னோம். 'பாட்டிடேயா' என்பது ஆதன்ஸ் ராஜ்யத்திற்குக் கீழ்ப்பட்ட ஒரு நகரம். சிலகாரணங்களினால் அதுகலகம் செய்து சுயராச்சியைநாட 'அதீனியர்கள்' அதை முற்றுகைபோட்டார்கள். (கி. மு.-432—429) இம்முற்றுகையில் சாக்ரடீஸ் பசிதாகம் முதலியவற்றைச் சற்றேனும் பாராது மற்ற 'அதீனியர்கள்' கண்டுவியக்கும்படி நடந்துகொண்டார். இந்த முற்றுகையில் 'ஆல்கிபியாடிஸ்' (Alcibiades) என்ற ஒருபெயர்பெற்ற ஆதன்ஸ்வாசியைச்சண்டையிற் பகைவராற் கொல்லப்படாது காப்பாற்றி மிகவும் கருணையுடன் வெற்றிப்புகழை அவற்கே கிடைக்கும்வண்ணம் செய்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. கி. மு. 431-ல் 'அதீனியர்களுக்கும்' லக்கிடிமோனியர்களுக்கும் (Lacedaemonious) பெரும்போர் நிகழ்ந்தது. கி. மு. 424-ல் அதீனியர்கள் டீலியம் (Delium) என்றவிடத்தில் நடந்த போரிற்றோல்வியடைந்து பின்னிட்டார்கள். இந்தப்போரில் சாக்ரடீஸ், லாக்கஸ் (Loches) என்ற இருவரும் சிறிதும் அச்சமின்றிப் பகைவர்களும் திகிலடையும்படி தங்கள் வீரத்தை வெளிப்படுத்தினரென்றும், இவர்போல் ஏனையோரும் நடந்திருப்பின் அதீனியர்களுக்குத் தோல்வியின்றி ஜெயம் கிடைத்திருக்குமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. சாக்ரடீஸ் மூன்று முறையும் 'ஆம்பிபாலிஸ்' (Amphipolis) என்ற சண்டையில் மகாவீராவேசத்தோடு சத்துருக்களை எதிர்த்தார்.

இவ்விதமாகத்தன் பிறந்த நாட்டிற்காக அதிக உற்சாகத்துடனும் தைரியத்துடனும் தன்னுயிரையுமொரு பொருட்டாக எண்ணாது உழைத்த சமயத்தில் 'அரிஸ்டோபானஸ்' (Aristophanes) என்ற நாடகக்கவி ஒருநாடகம் வரைந்து அதில் 'சாக்ரடீஸை'ப்பற்றி யேளனமாகக்கூறிப் பிறர் அவரை வெறுக்குமாறு சில குற்றங்களைக் கற்பித்தார். அவர் அவ்விதம் செய்வதற்குக் காரணம் அவருடைய அறியாமையே. கி. மு. 5-ம் நூற்றாண்டின் மத்தியில் ஜனங்கட்குள் ஒரு புதிய மனக்கிளர்ச்சியுண்டாயிற்று. அவர்கள் முன்னோர்களின் ஒழுக்கங்களையும் மதக்கொள்கைகளையும் கண்மூடித்தனமாக ஒப்புக் கொள்ளாது அவற்றைத் துருவிநாடித் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைக் கூசாமல் வெளிப்படுத்தினார்கள். இவர்கட்கு (Sophists) சோபிஸ்ட்ஸ்-என்று பெயர். இவ்விதக்கிளர்ச்சியை மனப்பூர்வமாக 'அரிஸ்டோபானஸ்' வெறுத்ததோடு முற்றும் இதுதீயஒழுக்கமென்றும் கடவுளை அவதூறு செய்ததாகுமென்றும் எண்ணங்கொண்டார்.

இவர் தம்முன்னோர்களுடைய சிறந்த ஒழுக்கங்களையும் அவர் தம் வீரச்செயல்களையும் மறுவார்த்தை கூறாது தம்முன்னோர்களிட்ட கட்டளையைச் செய்ததையும் நினைந்து இவைகள் இப்போது இலவாயினவே என்று பரிதபித்தார். இவற்றைக்கண்டிப்பதற்குத் தான் அவர் நாடகமெழுதியது. (The Clouds) சாக்ரடீஸை எல்லோரும் உணர்வார்கள். அவர் தம் அவலக்ஷணத்தோற்றமும் தட்டைமூக்கும் வெருண்ட பார்வையும் வெறியன்போன்ற முகமும்

.................................................................

இழிந்த உடையும் பிறர் கண்ணுக்குத் தோன்றுதிரா. ஆதலின் இவரை நடுநாயகமாக வைத்து நாடகம் வரைந்தார். ஆனால் சாக்ரடீஸ் தம் வாழ்நாள் முழுவதும் புதிதாகக்கிளம்பின (Sophist) 'சோபிஸ்டு' கூட்டத்தாருடைய கொள்கைகளை மறுத்துப் பேசினாரென்பதை அவர் சிறிதும் கவனிக்கவில்லை. சாக்ரடீஸ் முன்னோர் கொள்கைகளை ஒப்புக்கொள்ளவில்லை என்பதைமட்டும் போதுமென்று கொண்டு நாடகத்திற்குத் தகுந்த பாத்திரமானதினால் அவரை அவ்வாறு சிறுமைப்படுத்தினர். அந்த நாடகத்தில் சாக்ரடீஸை ஒரு சாமானிய சந்நியாசியாகவமைத்துக் கேட்டோர் நகைக்

கும்படி இயற்கைத்தத்துவசாஸ்திரத்தைப்பற்றி (Physics) உளரும் படி செய்யப்பட்டிருக்கிறது. இன்னுமுலக ரக்ஷகரென்று கிரேக்கியர்களால் மேன்மையாகக் கொண்டாடப்பட்ட தெய்வமாகிய ஸீயஸிற்கு (Zeus)ப்பதிலாக வேறுதெய்வங்களாகிய வாயுசுதர் (Ether) மேகம், வாக்கு (Zongne) முதலியவற்றைக் கொண்டாடவும் ஜனங்கள் இப்பண்டிதர்கள் நாஸ்திகர்களென்று அபிப்பிராயப்படவும் சாக்ரடீஸ் செய்ததாகச் சொல்லப்படுவதோடு கடன்காரன் தன் கடனைக் கொடுக்காது ஏமாற்றவும், மகன் தகப்பனை யடிக்கவும், தாயையடிப்பேனென்று பயமுறுத்தவும், தகப்பன் மகனை யடிப்பதுபோலவே மகனுந்தகப்பனை யடிப்பது நியாயமென்று சமாதானமுரைக்கவும் இவர் சொல்லிக்கொடுத்ததாக அந்நாடகத்தில் வரையப்பட்டிருக்கிறது. நாடகமுடிவில் சாக்ரடீஸ் சுவாமியை வேணுமென்றே பழித்ததாகக் குற்றஞ்சாட்டப்படுகிறார். ஆதன்ஸ் நகரத்தார்க்கு இயற்கைத்தத்துவஞானிகளின்பேரில் (Natural Philopopher) மதக் கொள்கைகாரணமாக நல்ல அபிப்பிராயங்கிடையாது. அவரை நாஸ்திகரென்றே கொண்டார்கள். சோபிஸ்ட்ஸ் என்று அழைக்கப்பட்டவர்களின் ஒழுக்கங்காரணமாக ஜனங்கள் வெறுத்தார்கள். இவர்கள் ஆதன்ஸ்வாஸிபர்களை நல்வழிப்படுத்தாது கெடுத்துப்பொய்யை மெய்போற்றோற்றுவித்துப் பிறரையுந் தம்போல் நடப்பவறிவினராக்கவல்லவர்க ளென்றுங்கொள்ளப்பட்டார்கள். இயற்கைத் தத்துவஞானிகள் சோபிஸ்ட்ஸ் அல்ல. சோபிஸ்ட்ஸ் இயற்கைத் தத்துவஞானிகளல்ல. ஆயினும் அரிஸ்டோபானஸ் இவ்விருவருடைய கொள்கைகளையும் சாக்ரடீஸ் பேரிலேற்றி ஒரு பெரிய அபராதத்தை வகித்துக்கொண்டார். அரிஸ்டோபானஸ் கற்பித்ததெல்லாம் எண்ணவுங்கூடாத கொடிய அபவாதம். இவ்வபவாதமே சாக்ரடீஸ் அந்தியகாலம்வரை அநியாயமாய் நிலைத்தது. சாக்ரடீஸ் ஜனசபையோர் முன், பின்னால் குற்றஞ்சாட்டப்பட்டபோது மேற்கூறிய அபவாதங்களைத்தான் அவர் மறுத்துரைக்கவேண்டியிருந்தது. அவையாவன :— சாக்ரடீஸ் மிகவும் தீயவர். எப்பொழுதும் தரைக்குள்ளும் ஆகாயத்திலுமுள்ள பொருள்களைத் துருவியறிவது இவற்குப் பொழுதுபோக்காகவுள்ளது. இவர் கெட்டதை மேன்மையுள்ளதாக மாற்ற வல்லவர். இவற்றைப் பிறர்க்குமிவர் போதிக்

கிறார் என்பன இந்நாடகத்தால் கி. மு. 423-க்கு முன்னரே சாக்ரடீஸ் பலகற்றோரும் யாமென்று கொர்வங்கொண்டவர்களைக் கேள்விகளால் மடக்கி அவரறியாமையைப் புலப்படுத்தி யாவர்க்கும் மேன்மையாக விளங்கினுரென்ற வுண்மையை யறியலாம்.

ஆம்பிபாலிஸ், (Amphipolis) சண்டைக்குப்பிறகு 16 வருஷ காலம் சாக்ரடீஸைப்பற்றி நமக்கு யாதொன்றுந் தெரியாது. இதன் மேல் இவரைப்பற்றிய விஷயங்கள் இவர்மூலமாகவே வெளியாகின்றன. அவை இவருடைய சகிக்காத தைரியத்தைக் குறிப்பதோடு கோபிக்கும் ஜனசபையோராயினும், கொலைபுரியுஞ் செல்வர்களாயினும் (Oligarchy) எவருமவரைத் தீயவழியிலொழுகச்செய்ய வல்லவர்களல்ல ரென்றும் தெரிவிக்கின்றன. கி. மு. 406-ல் அதீனியர்களின் கப்பற்படை பகைவரை (Landaemorrions) ஆர்கினுஸே (Arginusah)என்னுமிடத்திற் புறமிடத்தாக்கிய போர்முடிந்தவுடன் தளகர்த்தர்கள் சில காரணங்களினால் இறந்தவர்களினுடலைக்கொணரத் தவறினர். காயத்தாற் குற்றுயிராய்க் கிடந்தவர்களையுங் காப்பாற்ற வழிதேடவில்லை. இதைக்கேட்ட ஆதன்ஸ் வாசிகள், கடுங்கோபமுற்றனர். கிரேக்கியர்கட்குள் உத்தரக்கிரியை முக்கியமான கடமைகளுளொன்று. ஆதலின் தண்ணீருக் கிறையாகும்படி விடப்பட்ட சிநேகிதர்களையும் உறவினர்களையும் நினைந்து அநேகர் மிகவுந் துக்கித்தனர். இதற்குக் காரணமாகவிருந்த தளகர்த்தர் எண்மரையும் உடனே வரவழைத்து அவரை ஜனசபையோர் முன்பாகக் குற்றஞ்சாட்டினர். தளகர்த்தரும் தம்பேரில் யாதொருபிழையுமில்லையென்றும், தாங்கள் கீழுத்தியோகஸ்தர்களை அவ்விதஞ்செய்யும்படி ஏவினதாகவும், அத்தருணம்புயல்வீசி எண்ணியவண்ணம்நிறைவேறாது தடுத்துவிட்டதென்றுஞ் சொன்னர். அதனால் விசாரணை தள்ளிவைக்கப்பட்டது. தளகர்த்தர்கள்,முதற்சபையோரால்(senate) விசாரிக்கப்படவேண்டுமென்று முடிக்கப்பட்டது. ஆயினும், முதற்சபையார் குறித்தபடி விசாரியாது ஜனங்களே நேரிற் குற்றத்தையு மறுப்பையுங் கேட்டதனல், அவர்களே தளகர்த்தர்களை ஒருங்கே விட்டுவிடவேண்டும்; அன்றித் தண்டித்தல்வேண்டுமென்று முடிவு செய்தார்கள். இவ்விதமுடிவு மிகவும் பிழையானது. குற்றஞ்

சாட்டப்பட்டவர்க ளொவ்வொருவருந் தனித்தனியே தண்டிக்கப் படவேண்டுமென்பது அதீனியர் சட்டம்.

இச்சமயத்தில் சாக்ரடீஸ் முதற்சபையிலோர் அங்கத்தினராயி ருந்தார். இந்த உத்தியோகந்தான் இவர் தன் ஆயுளிற் பார்த்தது. இச்சபைக்கு 500 அங்கத்தினர் உண்டு. 10 வகைக்கூட்டத்தாருள் (Tribes) அடங்கிய அதீனியர்கள் கூட்டத்திற்கு 50பேராக இச் சபைக்கு நியமிப்பது வழக்கம். இந்த ஐந்நூற்றுவரும் ஒரு வரு டத்திற்கு வேலைவகிக்கக் கடமைப்பட்டவர்கள். ஒவ்வொரு கூட் டத்தாரைச் சேர்ந்த அங்கத்தினர் ஐம்பதின்மரும் ஏழுநாளைக்குப் பத்துப்பெயராக அடுத்தடுத்துக் காரிய நிர்வாகம் வகிப்பார் கள். ஜனசபைக்குக் கொணரப்பட்ட வழக்கின் ஒவ்வொரு முடி வும் சில உத்தியோகஸ்தர்களால் (Praedri) சட்டப்படியிருக்கிறதா வென்று சோதிக்கப்படும். அவ்விதமில்லாதவற்றை நீக்கிவிடுவார் கள். இவ்வுத்தியோகஸ்தரிலொருவர் ஒருநாளைக்கு முதற்சபையி லும் ஜனசபையிலும் அக்கிராசனம் வகிப்பார். இவர்தான் சபை யோர்முன் வியவகாரங்களைச்சொல்லிச்சபையோர் அபிப்பிராயத்தை வினவுவார். தளகர்த்தர் எண்மருமொருங்கே உடனே தண்டிக்கப் படவேண்டும் அல்லது விடப்படவேண்டுமென்ற விவகாரத்தைச் சபையோர்முன் னெடுத்துரைத்தபோது சாக்ரடீஸ் அக்கிராசனம் வகித்தார். நாம் இவ்விதமுடிவே சட்டத்திற்கு விரோதமானதென்று முன்னமே சொன்னோம். ஆயினும் ஜனங்கள் குற்றஞ்செய்த கொடி யோர்பேரிற்கொண்ட கோபத்தால் அந்தத்தீர்மானத்தி லதிகப் பற்றுக்கொண்டார்கள். சாக்ரடீஸ்மாத்திரம் அதற்கு இடங்கொடுக்க வில்லை. நியாயத்திற்கு விரோதமென்று தானுணர்ந்த தீர்மானத்தைச் சபையோரி னங்கீகாரத்திற்கு விடமாட்டேனென்று முடிவாகவே சொல்லிவிட்டார். அதுகாரணமாக வேலையைவிட்டு நீக்கிவிடுவோ மென்றார்கள். சிறைசெய்வோமென்றார்கள். கடிந்து கோபித்தார் கள். அவர் சிறைச்சாலையிலிருப்பதற்கும், இறப்பதற்கும் அஞ்ச வில்லை. ஒன்றற்கு மசையாமல் சத்தியத்திலேயே நின்றார். நியாய வழியில் நிற்பதால் என்னகெடுதி வந்தபோதிலும் அதைத் தைரிய மாய் ஏற்றுக்கொள்வது தன் கடமையென்றும், தான் ஒருபோதும்

ஏனையோரின் அநியாயவழிக்கு ஆளாகமாட்டேனென்றுஞ் சொல்லி விட்டார். இவர் அதிகாரமெல்லாம் மேற்சொன்னபடி ஒருநாளளவேயாம். தீர்மானம் மறுநாள் தள்ளிவைக்கப்பட்டது. அன்று வேறொருவர் அக்கிராசனம் வகித்தார். தளகர்த்தர்களும் தூக்கிற் போடப்பட்டார்கள்.

இரண்டு வருஷங்கள்சென்றன. சாக்ரடீஸ் தன்னுறுதிப்பாட்டை மற்றுமோர்தடவை நாண்பித்தார். கி. மு. 404-ல் பகைவர்கள் (Lacedaemonians) ஆதன்ஸைப்பிடித்துக் கோட்டை மதிலையிடித்து விட்டார்கள். ஆதன்ஸ்நகரத்தார்குடியரசு தொலைந்துபோயிற்று. இதற்குப்பதில் முப்பதுசெல்வர்கள் (Obgorcly) அரசாக்ஷிசெய்தார்கள். இதுவுமொரு வருஷங்கூட நிலைக்கவில்லை. மறுபடியுங் குடியரசு ஏற்பட்டது. நாட்டிற்குமட்டுங்க்ஷேமமில்லை; அப்பொழுது பிரபலராயிருந்த சில தர்ம விரோதிகளைக் கொன்றார்கள். யோக்கியர்கள் செல்வவான்கள் இவர்களுமவர்கையால் மடியவேண்டியதாயிற்று. எங்குங்கொலையாளிகள் நிரம்பினார்கள். எப்போதுங் கொலைநடந்து கொண்டே யிருந்தது. இந்தச்சமயத்தில் இவர் சாக்ரடீஸையும் வேறுநால்வரையுமழைத்து நீவிர் சலாமீஸ் (Salamis) சென்று லியோனென்பானை (Leon) இங்கு கொலைபுரியக்கொணர்மினெனப் பணித்தார்கள். மற்றநால்வரும்தங்களுயிர்க்கபாயம் வருமென்று பயந்து சலாமீஸ்சென்று லியோனைக் கொணர்ந்தார்கள். சாக்ரடீஸோ அவர் உத்தரவைச் சிறிதும் மதிக்காது அதனால் விளையும் ஆபத்தையுமோராது வீடுசென்றார். வார்த்தையாலல்லாது செய்கையாலுமவர்சாவுக்கு ஒரு சிறிதுமஞ்சவில்லை யென்பதை இதுகுறிக்கும். இதற்குமுன்னமே அதிகாரிகள்செய்த கொலைகளைப்பற்றித் தூஷித்துப்பேசினதற்காக அவர் சாக்ரடீஸை அழைத்து இனி நீர் சிறுவர்களோடு முன்போலவே சம்பாஷித்தால் உயிரிழக்கவேண்டிவருமென்று சூசிப்பித்தார்கள்.

இவருடைய மனைவி சாந்தீப் என்று முன்னமே கூறப்பட்டது. இவளை மணந்த வருஷம் நமக்குத்தெரியாது. இவள் வயிற்றில் 3-ஆண்குழந்தைகள் பிறந்தன. இவள் மிகவுங்கெட்டவள். பிடாரி. புருஷனையுங் குழந்தைகளையுங் கடிந்துபேசுவாள். திட்டுவாள். வீட்டிலெப்போதுஞ் சண்டையிடுவாள். ஆயினும் சாக்ரடீஸ் அவள்

செய்வதெல்லாம் நன்மையென்றே தன் குழந்தைகட்கு நிரூபித்துத் தாயைப்போற்றும்படி வேண்டுவார். இவர் உயிரிழக்க விதிக்கப்பட்ட சமயத்திலும் அவள் சிறிதும் மனமிரங்கினளில்லை. இவருடைய அந்தியகாலில் மனைவி பக்கத்திலில்லை. சிநேகிதரே சூழ்ந்திருந்தார்கள். இவரிறக்குஞ்சமயத்திலும் மனைவி உடனிருக்கவில்லை. பொதுவாகவே இவருடைய இல்வாழ்க்கை அதிக வருத்தத்தைத் தந்ததென்றும் வீட்டிற்குப்போவதற்கே அவர்க்கு அருவருப்புண்டென்றுஞ் சொல்லலாம். இவர் பிறரைக்கேள்வியால் மடக்கி அவர் அஞ்ஞானத்தை வெளிப்படுத்தினரென்று சொன்னோம். அதற்குக்காரணம் பின் வருமாறு கூறப்பட்டுள்ளது. கிரீஸ்தேசத்தில் டெல்பி (Dalphi) யென்ற பிரசித்தமான ஊருண்டு. முன்னாளில் அவ்விடத்துக் கோவிலிலிருந்த பூசாரிப்பெண் (Priestess) நல்ல குறிகள் சொல்லுவாள். ஒருவன் அவிடஞ்சென்று (Chaere-phon) சாக்ரடீஸைவிடப் புத்திமான்கள் கிரீஸிலுண்டாவென வினவினன். அதற்கு அவள் ஒருவருமில்லையென விடைபகர்ந்தனள். இதனைக்கேட்ட சாக்ரடீஸ் அவ்வாக்கினுண்மையைப் பரீக்ஷிக்க எண்ணி அன்று முதல் தம்மெதிர்ப்பட்டோர் யாவரையும் பரீக்ஷிக்க வேண்டியது தங்கடமை யென்று கொண்டார். இக்கதை உண்மையென்று தோற்றவில்லை. குறிசொன்னது சரியாகலாம். சாக்ரடீஸ் புத்திமானாக விளங்கினதால் தான் அவ்விதமான குறியைக்கேட்டிருத்தல்வேண்டும். குறியினுண்மையைக் கண்டறிய அவர் பிறரைப் பரீக்ஷிக்கவில்லை. அக்காலத்துக்கல்வியின் சிறுமையை வெளிப்படுத்தி உண்மை ஞானத்தைச் சாஸ்திரோக்தமாய் நிறுத்த அவர் பிரயாசைப்பட்டார். ஆயினும், குறிகளினாலும் சொப்பனத்தினாலும் வேறு பலவகைகளாலும் கடவுள் கட்டளையிட்டபடி ஜனங்களைப் பரீக்ஷிப்பது அவசியந்தானென்றும், அப்படிச்செய்யத் தவறினால் கடவுளுக்கு அபராதஞ்செய்வதாகுமென்றும் அவர் வெளிப்படையாகச் சொன்னார். கல்விச்செருக்கால் தம்மை யாவரினுஞ் சிறந்தோரென மதித்திருப்போர்களை ஒன்றுமறியாதமூடரெனப் பலவினாக்கள் வினவி நிரூபிக்கும் சாக்ரடீஸை அவ்வகங்காரிகள்தாம் மதிப்பரோ. பல்லோரவரை வெறுத்தார்களென்று சொல்லவேண்டுவது அவசியமின்று.

எந்த வயது முதலிவ்விதம் ஜனங்களின் அஞ்ஞானத்தை இவ வாறு வெளிப்படுத்தத் தொடங்கினாரென்று நிச்சயமாய்க்கூற ஏது வில்லை. நமக்குத்தெரிந்தமட்டில் கி. மு. 423-ம் வருஷத்திலேயே இவரை எல்லாருமறிந்தார்கள். இதனாற்றான் அரிஸ்டோபானஸ் இவரை நாடகநாயகனாக வமைத்துப் புதிதாகக் கிளம்பிய கூட்டத் தாரைக் கேலிசெய்தது. ஆதலின், கி. மு. 423-க்கு முன்னரே இவர் ஜனங்களைப்பரீக்ஷித்திருத்தல் வேண்டும். அதுமுதல் தம்வாழ் நாளை அக்காரியத்திலேயேயிவர் செலுத்தினார். இவர்க்கும் சோபிஸ் டஸ் என்ற கூட்டத்தார்க்கும் சில வித்தியாசங்களுண்டு. இவற்குச் சம்பளங்கிடையாது. பள்ளிக்கூடமுமிவர் வைக்கவில்லை. நிலையாக வொன்றும் சித்தாந்தஞ் செய்யவுமில்லை. இவர் ஆயுள் முழுதும் தன்னையும் பிறரையும் பரீக்ஷைசெய்வதிற் கழிந்தது. இவர் குறுக் குக்கேள்வி கேட்பதில் (Cross-Examine) மிகவல்லவர். எவ ரையுங் கேள்வி கேட்பார். கேட்போரிருந்தால் எவருடனும் பேசுவார். அவர் வாழ்க்கைக்கும் சம்பாஷணைக்கும் ரகசியம் என் பதில்லை. ஒரு சமயம் ஆல்கிபியாடிஸ் (Alcibiades) ஜார்ஜியஸ் (Georgias) ப்ரோடோகோராஸ் (Protogoros) போன்ற அதிநிபு ணர்களுடன் வார்த்தையாடுவார். மற்றோர் சமயம் சாதாரணக் கூலியாட்களுடன் பேசுவார். காலையில் ஜனங்கள் உலாவுகிற இடத் திலும் தேகப்பயிற்சிச்சாலையிலும் அவரைக்காணலாம். சந்தை கூடும் போது அவர் அங்கு வருவார். ஜனங்கள் எங்கெங்கே கூடுவார்களோ அவ்விடமெல்லாமவர் வராமற் போகார். அவர் நகருக்கு வெளியே போவதேயில்லை. "நான் அறிவைத் தேடுபவன். நகரத்தில் மனிதர் களிடத்தில் என்னை அறிந்துகொள்ளலாம். வயல்களும் மரங்களும் எனக்கு ஒன்றுங்கற்பியாது" என்று அவர் சொல்லுவார். அவர் தன் சொந்தக் காரியங்களைக் கவனியாது நாள் முழுவதையுந் தியா னத்திலே செலவழித்ததால் அந்தியத்தில் வறுமையிலுழக்கவேண்டி யதாயிற்று. இவர் இறக்கவேண்டுமென்று விதிக்கப்பட்டபோது மரணதண்டனையைவிலக்கக் (one mina of silver) கொஞ்சம்வெள் ளிதான் அவர் கொடுத்தார். அவர் சித்தாந்தம் யாதொன்றுஞ்செ ய்யாதபோதினும் அவருடைய அறிவைமெச்சிப்பலர் அவரைவிடா துசூழ்ந்து அவருடனுண்டு களித்து அவரைக்

இவருடைய மரணம் (கி. மு. 399) யாவர்க்கும் துக்கத்தைக் கொடுக்கக்கூடியது; அத்தருணத்தில் நண்பர் பலரிவரைச் சூழ்ந்திருந்தார்கள். மரணதண்டனை விதித்தபிறகு திருவிழாவொன்று குறுக்கிட்டகால் கண்டனையை நிறைவேற்ற 30-நாட்களாயின. ...

சாக்ரடீஸ்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 94 | 2 | Sanophon | Xenophon |
| ,, | 8 | Sopronisсus | Sophroniscus |
| ,, | 14 | Athenious | Athenians |
| ,, | 27 | . அப்பொழுதுதான் | அப்பொழுதுதான். |
| 95 | 19 | Administratiod | Administration |
| 96 | 26 | வானசாஸ்திரம், | வானசாஸ்திரம், இரேகாகணிதம் |
| 97 | 21 | Lacedaemonious | Lacedaemonians |
| 98 | 19 | .(The Clouds) | (The Clouds). |
| 99 | 5 | Zongne | Tongue |
| 100 | 12 | (Landaemorrions) | (Lacedaemonians) |
| 102 | 10 | (Obgorcly) | (Oligarchy) |
| 104 | 24 | என்னை | நான் ஏதேனும் |

னும் துதிக்கையையுடைய விநாயகக்கடவுள் தோன்றலானும் நினைத்தற்கரிய சிவபிரானுடைய இடப்பாகத்தில் அமர்தலானும் உமாதேவியை நிகர்க்கும்; மலைக்கியையக்கூறுங்கால் நிலையான பெருமை பொருந்திய, தடாகங்கள் பல நெருங்குதலினாலும் யானை தோன்றலானும் சிவன் தன்னிடத்தில் உயர்தலினாலும் எனக்கொள்க.

எந்த வயது முதலிவ்விதம் ஜனங்களின் அஞ்ஞானத்தை இவ்வாறு வெளிப்படுத்தத் தொடங்கினாரென்று நிச்சயமாய்க்கூற ஏதுவில்லை. நமக்குத்தெரிந்தமட்டில் கி. மு. 423-ம் வருஷத்திலேயே

ணத்திலே செலவழித்ததால் அந்தியத்தில் வறுமையிலுழக்கவேண்டியதாயிற்று. இவர் இறக்கவேண்டுமென்று விதிக்கப்பட்டபோது மரணதண்டனையைவிலக்கக் (one mina of silver) கொஞ்சம்வெள்ளிதான் அவர் கொடுத்தார். அவர் சித்தாந்தம் யாதொன்றுஞ்செய்யாதபோதினும் அவருடைய அறிவைமெச்சிப்பலர் அவரைவிடாதுசூழ்ந்து அவருடனுண்டு களித்து அவரைக் கொண்டாடினார்கள்.

இவருடைய மரணம் (கி. மு. 399) யாவர்க்கும் துக்கத்தைக் கொடுக்கக்கூடியது; அத்தருணத்தில் நண்பர் பலரிவரைச் சூழ்ந்திருந்தார்கள். மரணதண்டனை விதித்தபிறகு திருவிழாவொன்று குறுக்கிட்டதால் தண்டனையை நிறைவேற்ற 30-நாட்களாயின. அதுவரை அவர் சிறையிலிருக்கவேண்டியதாயிற்று. இவர் சிநேகிதரெல்லாம் இவரைத் தப்பியோடி அயல்தேயம்போய்ப் பிழைக்கப் பன்முறை வேண்டியும் அவர் பிடிவாதமாக அவ்விதமானகொடிய காரியத்தைச்செய்யமாட்டேனென்றார். 30-நாட்களாயின. அவரைக்கொல்வதற்கு விஷங்கொண்டுவரப்பட்டது. தன்னைச்சுற்றிலுமாற்றும் நண்பர்களைத்தேற்றி வேண்டிய புத்திமதிகள்கூறித் தானும் விடைபெற்று விஷத்தையுற்சாகத்துடனுண்டு அடங்கினார்.

சிறைச்சாலையில் இவற்கும் இவர் நண்பர்கட்கும் நடந்த சம்பாஷணைகள் மிகவுமுயர்ந்தவை. யாவர்க்கும் நற்போதகமாம். சமயநேர்ந்துழி வெளியிடுவேன்.

R. ரெங்காசாரியர்.

சிவமயம்.

# சேதுபுராண அரும்பத விளக்கம்.

(அ-ம் தோத்திரம்: சு௫௭-ம் பக்கத்தொடர்ச்சி.)

கo. நிலையான மிருந்த ஆன்மா தன்னிடத்தே பலபிறத்தலானும் துதிக்கையையுடைய விநாயகக்கடவுள் தோன்றலானும் நினைத்தற்கரிய சிவபிரானுடைய இடப்பாகத்தில் அமர்தலானும் உமாதேவியை நிகர்க்கும்; மலைக்கியையக்கூறுங்கால் நிலையான பெருமை பொருந்திய, தடாகங்கள் பல நெருங்குதலினாலும் யானை தோன்றலானும் சிவன் தன்னிடத்தில் உயர்தலினாலும் எனக்கொள்க.

௧௧. கரிய நிறத்தையுடைய விஷ்ணுவைச் சர்ப்பசயனத்திற் சேருதலினாலும் மிகுந்த நல்ல சிவந்த பொன்போலும் மேனியாலும் அழியாத மன்மதனைப்புதல்வனகப் பெறுதலினாலும் இலக்குமியை நிகர்த்தது; மலைக்கியையக்கூறுங்கால் கரியமுகில்படியும் ஒளியையுடைய முனிவர் இருப்பிடங்களினாலும், மிகுந்த நல்லசெங்கல்மலையாகக்கொண்ட மேனியினாலும் குறைதலில்லாத மதத்தால் நனைந்த யானைகளைப் பொருந்தலாலுமெனக்கொள்க.

௧௨. அலர்ந்த வெண்டாமரையின்கண் வாழ்வதாய் நிலவுகின்ற மெய்ம்மையாகிய வெண்மை நிறமும்நீடி நாடோறும் உலகு உணர்வுறலைச் சிறந்து ஞானத்திற்கு முதலாய்ச் சரஸ்வதியை நிகர்ப்பது; மலைக்கியையக் கூறுங்கால் அலர்ந்த வெண்டாமரை தன்கண் வாழ்வதாய் விளங்குகின்ற மெய்ம்மையாகிய வளங்களும் மிக்குமித் தமுமுலகுணர்வுறலைச் சிறந்து மலைகளுக்கு முதலாய் எனக்கொள்க.

௧௪. கோடுறீஇ — கொம்புகளுறுதலால். புனிதவிண் உடுத்திடும் - சுவர்க்கமுடுத்த.

௧௫. அருவிவாசுகி — அருவியாகிய வாசுகி. கூலம் — கரை. அருகுறீஇ - அருகுறலால்.

௧௬. மூங்கினிரைகளின் முனைபொருந்திய தலை சுவர்க்கத்தைத்துவாரம் பொருந்தச்செருகிப் பொருந்தி நிற்றலினால்.

௧௭. ஆதிமீன் - அச்சுவினி, தோணி - இரேவதி, நாள் - நக்ஷத்திரம், சோதிநூலறிஞர் - சோதிடர். எனவே நக்ஷத்திரத்தின் வண்ணமாய் முத்துக்கள் தோன்றலால் நக்ஷத்திரம் கணக்கிறந்து விளங்குதற்கேது என்னென்று சோதிடர் அச்சங்கொள்வர் என்பதாம்.

௧௮. தள்ளும்படி வெடித்த வாயிலுள்ள முத்தை வீழ்த்திடாத மூங்கில்கள்.

௧௯. குணம்பொருந்திய வளைந்த விடத்தையுடைய கோடுகளில் மின்னொடுகரியமுகில்கவ்வித் தொங்குதல், முயற்சி பொருந்திய

குரக்குப்படை தடிந்து அரக்கர்களுடைய கைவாளோடு தூக்குகின்ற பரிசைகள்போலும். கார் - பரிசை.

உ0. கார்காலமுகிற் கூட்டங்கள், வேகத்தையுடைய வாடைக் காற்றினால் அழகுநிறைந்த சிகரங்களைநீங்கிஒலித்தாகாயத்திற் செல்லுதல், நஞ்சையூணாகவுடைய சிவனுடையபவருளால் இராமசுவாமியிடத்தினின்றும் இராவணனுடைய பிரமகத்திதோஷம் நீங்கல் போலாம்.

உக. விள்ளுறுபாழி - வெடித்தமுழைஞ்சு. ளள்ளுறை - மலையின் நடுவிலிருக்கின்ற. மின்னியுடனே யம்மின்னல் உள்ளேபொருந்த வாயைமூடி யொடுங்குகின்ற முகிற்கூட்டங்கள் காளியினது கோயிலின் நடுவேபொருந்திய கொள்ளிவாய்ப் பேய்க்கூட்டத்தை யொக்கும்.

உஉ. நெருங்கிய திண்ணிய மூங்கிற்றாண்கள் எங்கும் நிறைந்தமலையிட முழுவதும் நிரம்பிய நீலமுகிலானது இராமநாதசுவாமியுடைய திருமேனியில் வெயில்படாது ஸ்ரீராமன் முன்னாளில் கரிய வஸ்திரத்தாலமைத்த கூடாரம்போலும்.

உ௩. வண்டுகளொலிக்கின்ற மதத்தால் நனைந்த கதுப்பையுடைய யானைகள் பக்கங்களிலெல்லாம் விளங்குகின்ற நிழலெதிர்ப்படவுருத்து நெருங்கி யழகிய குளிர்ந்த பளிக்கறை கிலங்குளியும்படி குத்தி விளங்குகின்ற நிழல் கீழிற் பொருந்த யானைவீழ்ந்ததென்று திரும்பும்.

உ௫. தடித்துருது - மின்னுது. அடித்தலையவர் கீழிற் பொருந்தினோர் யானைகள் இடி - பிளிற்றொலி. ஆலாங்கட்டி - நரை. துளியாகிய மழை - துளியாகிய மதநீர்.

உ௬. வெள்ளிய சருப்பமானது நிறம்பொருந்திய மலைநீரோடு ஒருசேர அம்மலையிற் பற்றித்தொங்குதலை.

உ௭. திரண்ட ஞாற்சியின் அந்நாகம் - திரண்ட தொங்குதலையுடைய அந்த வெள்ளிய சருப்பமானது. இளங்கால் - தென்றல். பாற்செறி பின்னலின்படலை - பால்போன்ற செறிந்த பின்னற் சடை.

௩௦. பச்சிலையுரைப்புறம் - பசியஇலை உரோஞ்சலால் பொருந்தும்.

௩௧. வனி-தொகுத்தல் விகாரமாய் அக்கினிக்காயிற்று. மணியின் மேல்விழும் மது - முனிவர்தம் சாலையில் அபிமுகத்தில்முளைக்கும் மிகுந்த மாதுளம் வித்துக்குப் பெய்யுங்குடநாரம் போலும் என்க.

௩௨. தலைமுகில் - முடியிலுள்ள முகில்.

௩௪. அகலியாலுவ - கூலியாடுதல். வேழம்பமாதர் - கழைக்கூத்தியர்.

௩௫. பொருந்திய குரங்குகள் குதித்தலால் நடுவேசித்திரிக்கப்பட்ட கொடியால் பக்கத்தின் மேலாசப்படரப்பெற்ற குளிர்ந்த இலைகளுங் கொம்புகளும் இல்லாத்தருக்கள் கூத்தாடுபவர்கள் நிறுவியகம்பம்போலத் தோன்றும்.

௩௬. நீரவர் - நீராகிய அவர் எனவும், நீர்மையையுடையவர் எனவுங் கொள்க. சூரியன் குளிர்ந்த நீரிலேகுளித்தும் தனதுவெப்பந்தணியாமையால் இங்ஙனங்கூறினார்.

௩௭. வாசனைபொருந்திய அழகிய சோலையானது குயில்களும் வண்டுகளும் செழுமையாகிய அழகிய கிளிகளும் மயில்களும் நெருங்கலால் மன்மதன் முனிவர்மீது படையிறங்கிய மதில்பொருந்தியபாடிவீட்டின் அழகைப்பொருந்தும்; மன்மதனுக்குக் குயில் எக்காளமும், வண்டு நாணியும், கிளிவாகனமும், மயிலஞ்சாயலையுடையபெண்கள் சைனியங்களுமாதலின் இவ்வாறு கூறினார்.

௩௮. வல்லை - பொய்கை. இலேகமாதர் - அரம்பையர்.

௩௯. முண்டகக்கன்னி காந்தனும் இரவிமருக - தாமரையாகிய கன்னிக்கு நாயகனாகிய சூரியனாகிய மருகன்.

௪௦. வேந்தன் - இந்திரன். இதனை "வேந்தன் மேயதீம்புனலுலகமும்" என்பதனாலும், "வேந்தனும் வெந்துகெடும்" என்பதனானுமறிக.

௪௧. கலர் - கீழ்மக்கள்.

௪௨. நோக்கல் செய்வதோ எனக்கூட்டுக. நோக்கல் செய்யா தென்பது கருத்து.

௪௪. வாழைப்பழத்தின் றேனும், காலையுடைய மாம்பழத்தின் றேனும் கலந்துவழிகளில் நிறைந்துசேர முதிர்ந்த பலாப்பழத்தேன் முற்பட்டுத் திக்குகளதிரவரும் பெருநதிகளாம்.

௪௫. பக்கத்திற்பொருந்திய திரண்ட கற்களின்மீது பொருந்திய விருக்ஷங்களிற் றாங்குமிருல் மதுத்துளியை அவ்வுலத்தின் மீது சொரிதலால் மலையின்மீது வாழும் சிவபிரானுடைய திருமுடியிற் றங்குகின்றபொன்னாலாகிய குளிர்ந்த குடத்தைப்போலாகும்.

௪௬. வரைசெய் வெண்பளிக்கறைவட்டம் - வரையிற் செய்யப்பட்ட வெள்ளிய பளிக்கறை வட்டமானது.

இரசதகோடிகம் - வெள்ளியாலாகிய பூந்தட்டு.

மலரின் சாய்கை பளிங்கிற்படுதலால் இவ்வாறு கூறினர்.

௪௭. கந்தமாதன மேவுதண்டலை அளிதேவருர் அணித்துச் சென்றங் கற்பகக்காவினில் வீழ்ந்திடா. அவைகளில் செறிமிக் கில்லையாம். பின்கற்பகப்பூவில் வண்டுறுதென்கை பொய்ம்மையே.

௪௮. ஆராயப்படும் அரம்பையரை வரையரமகளிர் சேர்ந்துழ் அவர் கூந்தலிலொலிக்கும் வண்டினம் இதழ்பொருந்திய மலர்வைத்து முடித்த கூந்தலில் தேனுண்ணுதல் கூடாது அவம்போடு இவர்களது கூந்தலின் நலத்தைக் கூறுதல்போலும்.

௪௯. ஐந்துவாய் - சிங்கம். முன்செய்தகுறைகளினாலே எங்கள் தோலையுரித்தனை எம்பெருமானே இனிக்கிருபை செய்தருளல் வேண்டுமென்றதுபோல மானும் யானையுமாகிய இவைகள் மலையடிவாரத்தைச் சாருமென்க.

(தொடரும்.)

ஆ. மு. சோமாஸ்கந்தபிள்ளை.

# கல்வி நலங்கூறல்.

இந்நிலவுலகத்து மக்களாகப் பிறந்தாரனைத்தார்க்கும் கல்வி ஆவசியகமுடையதென்பது பல்லாரானுந் தேறக்கிடக்கின்றதாகும். அக்கல்வி பலதிறப்பட்ட பலபாடைகளாகப்பரவி அவ்வத்தேயங் கட்கமைவுபெற நிலவுகின்றன. இறைவனானும் அவனருள் வழிப் பட்டோரானுமாக்கப்பட்ட அரும்பெரும்பாடைகள் சிலவன்றி இக் காலத்துத்தாமாக வரம்பின்றி விளங்கும் பாடைகளுஞ்சிலவுள. எவ் வெப்பாடைகளாயினும் புருடார்த்தத்துட் பொருட்களைக்காட்டி ஓர் முடிபுகாட்டி நிற்குமேல் அவைசீரியவெனச் சென்னிமேலேற்றத் தக்கதாகும். அன்றித் தோற்றுவாய்மட்டும் அகலமுடைத்தாய்ப் பின்னர் வீடுபேறு முதலிய நன்னிலை தெரிக்காது நிலவும் பாடைகள் இவ்வுலகநடிப்புக்குமட்டுமன்றி வேறெத்துணையானும் பயனிலவாய் முடியும் என்க. ஈண்டைக்கு வடமொழிநிற்க, தெய்வத்தன்மை பெற்றுச்சீரியதாய் இகபரத்தன்மைகொடுத்து உயர்நிலைகள் இன்ன வின்ன வெனத்தெரித்து முதிர்ந்த நல்லுணர்வைப்புகட்டி முடிபு மிவையெனவறுதியிட்டுக் கொண்டுபோவதும் நமதரிய செந்தமிழ்ப் பாடையாம். மூதறிஞர்களது காலத்திற்றானே மிகப்பெருமைபாரா ட்டக்கிடந்ததென்பது தெளிய விளங்கும். ஓர் பாடையினின்று மற் றோர் பாடையை மொழிபெயர்த்தல்போல இப்பாடை வந்ததன்று. எல்லாம் வல்ல முழுமுதலிடத்தினின்று தோன்றியதேயாகும். இத ன்வழித்தான பலகுதர்க்கவியைபுகாட்டி நியாயங்கூறி இறைவன் வயினதே என விரித்து வரைவானெண்ணின், நலங்கூறலென்னுந் தொடர்முற்றாகாகலின் அதனை ஈண்டு விரிக்காது சுருக்கியதாகும். வடமொழியினின்று வந்ததென்பது சிலர்கொள்கை. அங்ஙனமாயின் ஆலவாயவிர்சடைப் பெருங்கடவுள் இறையனாரகப்பொருள் திரு வாய் மலர்ந்தருளியமைக்கு யாது யூகிப்பதோ? உண்மையினோக்கு வார் நம் அரும்பெருந்தமிழ் மூலந்தொட்டதென்பதை அறியாமற் போகார். சங்கம் மருவிய காவியங்களினது கற்பனை, அதிசயம், யுக்தி யென்பவைகளை ஒருகால்படித்தபினன்றோ, நந்தமிழிருந்த

அருமை பெருமை விளங்கும். ஒவ்வொரு பகுப்பை வரையறுத்து நிலைநாட்டிக் கூறிப்போமிடத்து, விகற்பித்துக்காட்டாது குலாலன் மட்கலங்களைத் திரிகையினின்றுமிறக்கித் தரையில் அமைதியாகவைத் திருத்தலைப்போல, சுவைமுதலிய வொழுகச் சொன்னலப்பொருளும் பொருணலப்போக்கும் ஒன்றோடொன்று தழுவி உயர்பதம்பெற்று, அவ்வவ்வுவமையும் பொருளும் கண்ணுற்காண்பதுபோலத் தெரிகின்றது. இன்னும் ஆழ்ந்த பொருளையுடையவென நாம் மேன்மேலும் புனைந்துகூறல் பெரும்பயனில்லாத சொல்லாய் முடியும். அருமைப் புலமையெய்திவிளங்கிய கம்பர், பம்பைப்பொய்கை வருணனை கூறுமிடத்தும் அப்பொய்கைமிக்க ஆழமுடைத்தாதலை உவமித்தற்கு

> கற்பக மனையவக் கவிஞர் நாட்டிய
> சொற்பொரு ளாமெனத் தோன்றல் சான்றது.

என்கின்றனர். எவரெவர் எவ்வெவைகளைக் கேட்கினுமளவிற் குத் தகத்தரும், கற்பகமனையகவிஞர்நாட்டிய சொல்லும்பொருளும் எங்ஙனம் ஒன்றையொன்று தொடர்ந்து நோக்கநோக்கப் பொருள் கொடுத்துக்கொண்டேபோகுமோ, அவைபோல ஆழ்தலமைந்துள்ள தென்னுங் கருத்தமைந்திருக்கின்றதாகும். பற்பல பெரியோர்களும் புலவர்சிகாமணிகளும் நம்பாடையில் இயற்றிவைத்திருக்கும் நூல் கள் கணக்கில்லாதன. அவற்றில், திட்பமும் நுட்பமுஞ் செறிந்து கரம்பிடித்த கண்ணாடியைப் போலப் பொருள் பயந்து நிற்கும்நூல் கள் சில. கற்கத் தொடங்குமுன்னரே போதுமான அளவு கற்றற் குரியன இன்ன இன்னவென ஐயமறவுய்த்துணர்ந்து கொள்ளவேண் டுவது பெரியகாரியமாகும். அங்ஙனந்தெரிந்து ஒருவாறு ஊகி த்துக், கல்வியின்சுவை கண்டதும் பின்னர் அறிவு விசாலித்து எந்நூல்களினது உள்ளக்கிடக்கைமுதலியன இலேசாகவிரைவிலறிய முடியும். நாம் ஒருதொழிலைப் பிழைத்தலாதியவைக்கு இடைவிடாது செய்து கொண்டிருத்தலைப்போல, கல்வியையும் இடைவிடாது பயி ன்று கொண்டுவருதலையே அறிவைப் பிழைக்கவைத்துக் கொண்டி ருக்குந் தொழில்போல நாம் மேற்கொள்ளல்வேண்டும். கல்வி என் பதே தொழிற்பெயராக விருத்தலையும் நாம் ஒருவாறு யூகிக்கத்தக் கதே. சிறுபோது இடையிடின் அதன் நலங்குன்றிச்சுவை காட்டா தொழித்தலைச்செய்யும்.

"என்னொருவன் சாந்துணையுங் கல்லாத வாறு."

என்ற நாவலப்பெருந்தகையார், எவ்வளவோ அருமபெருந்திரண்டபொருள்களை ஒருசிறு தொடர்பால் சுருங்க விளக்குவதையும் நாம் அதிசயிக்கத் தக்கதென்க. ஆராய்ச்சிசெய்யச்செய்ய இனிமையும் புதுமையும் பயந்து ஆராய்வாரைத் தன்மயமாக்கிக்கொள்வதூஉம் நம் தமிழ்நூல்களே. அன்றி நில்லாவுலகத்துநிலைமைகளை ஐயந்திரிபறக்காட்டு வித்து நின்றொளிர்வதுமாகும்.

எம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன்
மம்ம ரறுக்கு மருந்து.

என்பதையுமுணர்க. பெரும் பான்மையாகச் சித்திமுத்திப்பேறடைந்தவை யெல்லாம் நம் பாடையிலுள்ளவே. இக்காலத்துச் சிறிது குன்றுதலடைந்து கிடப்பினும்.—(மாசுபடினு மணிதன் சீர் குன்றுவாம்) என்பதுபோல, நிற்றலையுடையதாக விருக்கின்றது. ஏனைய பாடைகளை யொப்ப பற்பலமுரண்களும் வன்மையும் இன்றிக்கற்கக்கற்க ஊற்றுக்கேணி யென்னப் பொருள்சுரந்து காட்டுதலையுமேற்கொண்டொழுகுகின்றது. தமிழ் வளர்த்த பெருந்தகைமன்னர்களிருந்து இதுகாறும் இப்பாடையைப் போற்றிவருவார்களாயின், நூல்களின் நாமங்களே, இறந்தாரை யெண்ணிக் கணக்கிடவெத்தனித்ததைப்போலமுடிந்து விடும். புலமை நிரப்பச் செய்து ஊக்கமுறச்செய்தலையுடையதிஃதென பிறதேயப்பாடையுளாரும், எவ்வளவு அருமை பாராட்டிப்பேசுவதையும் படிப்பதையும் நாம் கண்ணாரக்கண்டு வருகின்றோம்.

இவ்வண்ணமாய்ச் சுதந்தரபாடையைக் கைக்கொள்ளப்பெற்ற நாம் போற்றிவளர்க்காது கைவிடுவோமாயின்—(தன்மனையிருக்கப் பிறர்மனைக்கேகும்பேதைபோல்) ஆகுவமன்றிவேறென்னை. இது தெய்வத்தன்மை பெற்றதென்பதும் கற்பத்தலையிட்டுக் கொள்ளின் அருள் வழிக்கூட்டற் காற்றலுடைத்தென்பதுமான ஓர்முழுப்பெருநம்பிக்கை நம்மவர்களிற் சிலர்களுக்கில்லாதிருக்கின்றது. அஃதென்னையென வாராயின் நம் நூல்களிற்கண்படாதபார்வையன்றி வேறொன்றுமின்று.

நா- இராமசாமி பிள்ளை.

சிவமயம்.

# திருக்குறளாராய்ச்சி.

யான் கொழும்பு அரசினராசிரிய கல்லூரித்தமிழ்ப்பரீக்ஷைக்காகப்படிக்கும்பொழுது பாரதத்தைப்போலவே திருவள்ளுவர் குறளையும் ஆராய்ச்சியோடு படித்தேன். அது வேறு சில ஆராய்ச்சிக்கு மாறுபடுதலின் அதனை இப்பொழுது வெளியிடுகின்றேன்.

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்.

இக்குறளைக்குறித்து எ-ம் தொகுதிச் 'செந்தமிழி'ன் கக-ம் பகுதியிற்றோற்றிய ஆராய்ச்சி வருமாறு:—

[illegible]ல் "பண்பிற்குப்பண்பியில்லையேனும்" என்பது பண்பிற்குப்பண்பில்லையேனும் என்று சில ஏடுகளிற்காணப்படுகிறது. இக்குறளில் அழுக்காறென்னும் உடல்கொளுயிர்க்குணத்தைப்பாவமென்னும் மற்றொரு குணமுடையதுபோலப் பாவியென்றது, 'பண்பிற்குப் பண்புகோடல் பொருந்தாது' என்னும் தருக்கநூற்கருத்துடன் மாறுபட்டு வழுவாதல்நோக்கி, அதனை அமைப்பான் "தன்னையாக்கினானை இருமையுங்கெடுத்தற் கொடுமைபற்றி அழுக்காற்றினைப் பாவியென்றார் கொடியானைப்பாவியென்னும் வழக்குண்மையின்" என்று ஆசிரியர் கூறுதலின், இதற்கேற்ப "பண்பிற்குப்பண்பில்லையேனும்" என்பதே பொருத்தமுடைத்தாம்."

ஆசிரியர் கூறிய 'பண்பிற்குப்பண்பியில்லையேனும்' என்பது பண்புதானே பண்பியாயிருத்தல் கூடாதாயினும் என்னும் பொருள்பட்டுக்கிடக்கின்றது. இவ்வாறன்றி, பண்புக்குப்பண்புடைய பொருள் இல்லையேனும் எனப்பொருள்கொள்ளல் தவறு; பண்பியின்றிப்பண்பில்லையாதலின்.

இக்குறளில், அழுக்காறு பண்பு; அதனைப்பாவியென்றது பண்பைப்பண்பியாக்கியது. அது வழு; பண்பு பண்பியாகாதாகலின்.

அவ்வழுவையமைத்தற்பொருட்டே ஆசிரியர், "பண்பிற்குப்பண்பி யில்லையேனும்,......வழக்குண்மையின்" எனக்கூறினர்.

இனி 'பண்பிற்குப் பண்பில்லையேனும்' என்பது திருத்தம். இதற்கு, பண்புக்கு மற்றோர் பண்பில்லையென்பது பொருளாகின்றது; ஆகவே, நூலாசிரியர் அழுக்காறென்னும் பண்பிற்கு வேறோர் பண்பமைத்தாரென்னும் வழுவுண்டாகும். அவ்வாறு பண்புக்குப் பண்புகொள்ளும் வழு இதில் அமையவில்லை என்பதை ஆராய்குக.

அழுக்காறென்னும் பண்புடையான் இருமையுங்கெடுவன்; அவனைக்கெடுப்பது அழுக்காறு; ஆதலின் அழுக்காறு கொடியது; கொடியானைப்பாவியென்னும் வழக்குண்மையின் அழுக்காறு பாவியெனப்பட்டது. பாவி, பண்பி. பாவம், பண்பு. ஈண்டுப்பாவம் என்பது அழுக்காற்றையே உணர்த்தும். கொலையாளியைப்பாவியென்புழிப் பாவம் கொலையை உணர்த்தும். பிறரைக்கெடுப்பானைப் பாவியென்புழி, பாவம், பிறரைக்கெடுத்தலை உணர்த்தும். இன்னா செய்வானைப் பாவியென்புழி, பாவம் இன்னாமையை உணர்த்தும். ஆதலின், பாவம் என்பது, பொறுமை என்பதுபோல் ஓர் பண்பையுணர்த்தாது, இடம் நோக்கி ஒவ்வோர் பண்பை உணர்த்தும். எனவே, பாவம் ஈண்டு அழுக்காற்றின் வேறாய ஓர் பண்பல்லவென்பது தெளியத்தக்கது. ஆதலின் பண்பிற்குப்பண்புகோடல் ஈண்டில்லை.

இனி, இருமையுங்கெடுத்தற்கொடுமைபற்றிப் பாவியென்றாராகலின் அக்கொடுமைதான் பாவம் என்பது குறிக்கும் வேறோர் குணமெனின், அது பொருந்தாது. என்னை, "நடுவின்றிநன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக், குற்றமு மாங்கே தரும்." "அஞ்சுவதஞ்சாமை பேதைமை" என வருங்கால் குடிபொன்றிக்குற்றமுந்தருதல் வெஃகலின் வேறோர் குணமாகவும், அஞ்சாமை பேதைமையின் வேறோர் குணமாகவும்படுமாதலின், குடிபொன்றலும் குற்றமுண்டாதலும் வெஃகலின் பயனேயன்றி வேறு குணமன்றென்பது நன்று தெளியத்தக்கது. அவ்வாறு, இருமையுங்கெடுதல் அழுக்காற்றின் பயனேயன்றிவேறோர் குணமன்று.

ஆகவே நூலாசிரியர் பண்பிற்குப் பண்பு கொள்ளாது பண்பையே பண்பியாக்க உரையாசிரியர் அதற்கு அமைதி உரைத்தாராதலின் 'பண்பிற்குப் பண்பியில்லையேனும்' என்றிருத்தலே பொருத்தமுடைத்தாம். அன்றி, 'பண்பிற்குப்பண்பில்லை' யெனப்பாடம் திருத்திப் 'பாவம் என்பது அழுக்காற்றின் வேறுயகுணமெனத் திரித்துப் பண்பிற்குப் பண்புகோடல் என்னும் வழுவை விரித்தல் விபரீதவாராய்ச்சியாகும்.

ஆராய்ச்சிக்காரர் கருத்தின்படி ஆசிரியர், 'அழுக்காறென்னும் உடல்கொளுயிர்க்குணத்தைப் பாவமென்னும் மற்றொருகுணமுடைய' தாக்கவில்லை யென்பதூஉம், அதனால் 'பண்பிற்குப் பண்புகோடல்' என்னும்வழு அமையவில்லையென்பதூஉம், பண்பிற்குப்பண்பில்லையென்ற பாடத்திற்றான் அவ்வழுவுண்டாகின்ற தென்பதூஉம் மேலே காட்டப்பட்டன. ஆதலின், 'பண்பிற்குப் பண்பில்லையேனும்' என்னும் பாடம் பொருத்தமின்றாம். 'பண்பிற்குப் பண்பியில்லையேனும்' என்னும் பாடமே பொருத்தமுடையதும் உரையாசிரியர் கருத்துக்குடன்பாடானதுமாம்.

௯0௪. நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற.

"இதன் விசேடவுரையிலே 'துறவாற்புறப்பகையிலராயினும்' என்பதிலுள்ள 'துறவால்' என்பது ஏடுகளில் 'துறவியால்' என்றே காணப்படுகின்றது. திருக்கோவையார் "அளவிலை யார்க்கும் அறிவரியோன்" என்னும் ௯0-வது செய்யுளின் விசேடவுரையில் 'துறவு துறவியென நின்றாற்போல அளவு அளவியென நின்றது' என்னும் வாக்கியம் காணப்படுதலின் 'துறவியாற் புறப்பகையிலராயினும்' என்றிருத்தல் கூடுமென்பது."

இதுவும் ஷெ "செந்தமிழ்"த்தொகுதியிற் றோற்றியது. இவ்வாராய்ச்சி தருக்கநூலாராய்ச்சி சிறிதுமின்மையால் வந்ததென்னலாம். "ஏடுகளில்"என எல்லாஏடுகளையும் உள்ளடக்கியதும்,'திருக்கோவையார் விசேடவுரையில், 'துறவுதுறவியென நின்றாற்போல' எனக்கா

ணப்படுதலின் பரிமேலழகர் விசேட வுரையிலும் 'துறவியால்' என்றி ருத்தல் கூடுமென்பதும் தருக்கமுறைக்குப் பொருத்தமானவல்ல.

> அளவியை யார்க்கு மறிவரியோன் றில்லையம்பலம் போல்
> வளவியவான் கொங்கை வாட்டடங் கண்ணுதன் மாமதியின்
> பிளவியன் மின்னிடை பேரமைதோளிது பெற்றியென்றுற்
> றிளவியை யென்னோ வினிக்கிள்ளை யார்வயிற் கேட்கின்றதே.

என்பது திருக்கோவையார். இங்கே அளவு அளவியென வந்தது செய்யுள்நோக்கியென்பது நன்கு புலப்படுகின்றது. துறவு துறவி யென நின்றதூஉம் யாண்டாயினும் செய்யுளிற் காணப்பட்டிருத்தல் கூடும். வாக்கியத்தில் துறவு துறவியென நின்றதனாலாம்பயனொன் றுமின்மையாலும், துறவியால் என்பதுபோல மயங்கவையாது பொ ருளை விளங்கவைத்தலாலும் துறவால் என்பதே பொருத்தமாயபாட மென்க.

அ. க. இளையதம்பி.

உ

# *செந்தமிழ்ச்சங்கம்.

தமிழ்ச்சங்கமெனவே இனிய கூட்டமெனினும் தமிழுணர் ச்சி யுளாரின் சபையெனினு மொக்கும்; இத்தமிழ் மற்றுள பாடை யினு மினிமையுடைத்தாதலா லிதனைச் செந்தமி ழென்றடைகொடுத் தோதினை ரான்றோர்; இத்தமிழ் முதற்கடவுளாயு மெல்லாம் வல்ல இறையாயு முள்ளகம்பரசிவத்தின் றிருவாக்கினின் றெழுந்தமையா னினிமையு மாழமுமுடைமையும் பல விலக்கணவரம்பு மமைந்துளது நோக்கியே,

---

* 1910-ஞு மேமீ 25உ காலையில், தஞ்சையிற்கூடிய மதுரைத் தமி ழ்ச்சங்கத்து ஒன்பதாம் வருஷக்கூட்டத்தில் ஸ்ரீமத்-ரா ம. பழனிவேலுப் பிள்ளையவர்களாற் படிக்கப்பெற்றது.

கம்பரும்,

> உழக்குமறை நாலினு முயர்ந்துலக மோதும்
> வழக்கினு மதிக்கவினி னும்மாபி னாடி
> யிழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கண்
> தழற்புரை சுடர்க்கடவு ளந்ததமிழ் தந்தான்.

என்றோதினர்.

> கண்ணுதற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
> பண்ணுறத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
> மண்ணிடைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோ
> லெண்ணிடைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ

என்றோதினார் பரஞ்சோதி முனிவரும்.

> வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
> தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
> குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
> கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்.

என்று ஓதற்கினியர்தார் சிவஞான முனிவரரும்.

பரசிவந் தமது திருவாக்கிற்றோன்றிய விந்நறுந் தமிழினுண் டாய பேரன்பினால் தாமே முதற்சங்கத்தின் றமிழ்ப்புலவராய்த் தோன்றித் தமது திருவாக்கா லிறையனாரகப் பொருளெனு மோர் நூலைப் பிற்றொகுத்தமையானும் மற்றுங் குறுமுனி குரவரு மெமது துணைத் தெய்வமுமாய வறுமுகக் கடவுளருந் தமிழ்ச்சங்கப் புல வரா யமைந்தமையானும் பின்னர்ப் பரசிவத்தின் றிருவாக்கிற்றோன் றிய இவ்வருந்தமிழை யியலிசை நாடகமெனப் பகுத்துலகின் நிலை நாட்டிய தமிழ்முனியெனப் பெயர்வாய்ந்த வகத்தியனாரும், அவர் மாணாக்கராய தொல்காப்பியனார் முதலியோரும் கடைச்சங்கத்திற் றோன்றிய பொய்யடிமையில்லாப் புலவர் முதலியவியற்கையறிவாள ரும், அறம்பொருளின்பம் வீடெனும் நாற்பயனுந் தழுவிய பற்பல நூற்களைத் தொகுத்தாரெனின், இத்தமிழின் பெரும்புகழை யெவ் வாறு அளவமைத்துக் கூறப்பெறும். மற்றும் புறச்சமயவிருளகல வரு ஞானசூரியன்போற் றோன்றிய நம் சைவசமய குரவராய நால் வரு மித்தமிழ்வலியாற் புறச்சமயந் தலையெடாவண்ணந் தடிந்து

செயற்கரிய வற்புதங்களை யிவ்வுலகின்கண் நடாத்தியதாய்த் திருத்தொண்டர்புராண வாயிலாகத் தெற்றென வுணருமாறமைந்துளது பற்றியே,

> தொண்டர்நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
> யுண்டபாலனை யழைத்தது மென்புபெண் ணுருவாய்க்
> கண்டது மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
> தண்டமிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

எனக் கூறுவாராயினர்.

ஆகவே, இத்தமிழாற்றல் கூறப்புகின் விரியும். அதுநிற்க, இச்செந்தமிழ் வழங்குவது, குணகடல் குமரி குடகம் வேங்கடமெனு மெல்லையளவெனப் பனம்பாரனார் கூறினாரேனும் இமயமுதல் கன்னியாகுமரிக்குத் தெற்கினுள்ள கடலிடைப்பட்ட அநேகதீவினும் தமிழ்பரந்து கிடந்ததெனக் கூறுவர் சரித ஆராய்ச்சியுடையார். இத்தமிழ்நாட்டைச் சேர சோழ பாண்டியரென மூவேந்தரும் நீண்ட காலம் ஆண்டும் இத்தமிழை மிகவுமினிதாகக் கொண்டாடியுந் தமிழுணர்ந்த புலவர்சிகாமணிகளை,

> மன்னனும் மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
> மன்னனிற் கற்றோன் சிறப்புடையோன்,

என்பதற்கியையத் தம்மினுஞ் சிறப்பமையப் பேணியு மவர்களுக்குக் கணக்கமையா நிதியமளித்து மவரையொப்பப் புலமையிற் சிறந்துந் தமிழ்ப்பயிர்க்கு வேலிபோன்று விளங்குவாராயினர்.

இந்நாடு மூன்றினும் மிகுந்த தமிழ்ச்சிறப்பமைந்து நம் பரசிவங் கப்புவிட்டோங்கிய கடப்பின்கட் டோன்றி யற்புதத் திருவிளையாடல் புரிந்த பாண்டிநாடென்பது,

> சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியுஞ்
> சவுந்தர பாண்டிய னெனுந்தமிழ் நாடனுஞ்
> சங்கப் புலவருந் தழைத்தினி திருந்த
> மங்கலப் பாண்டி வளநாடென்ப.

என்பதால் தெள்ளிதில் விளங்கும்.

இச்சிறப்பமைந்த பாண்டிநாட்டில் மதுரை கபாடபுரம் வடமதுரை யென்னும் மூவிடத்தும் முதலிடைகடை யெனுந் தமிழ்ச்சங்க முறையே கூடி யெவ்வயினுந் தமிழ் நிறுவியதாகத் தெரியவருகின்றது.

அவ்வரசரது வாணாளும் வம்சமுங் குறையவே தமிழூக்கங் குறைந்ததாகத் தெரியவருகின்றது. மற்றுமித் தமிழ்நாடு தெலுங்கரசராய நாயக்கர்வயத்ததாகவே, மணமமைந்த பொருட்செறிவுற்ற பெட்டகம் அப்பொருள் நீங்கினும் மணநீங்காவாறுபோல் தமிழ்மணம் வீசிக்கொண்டிருந்ததாகத் தெரியவருகிறது. பின்னரிந்நாடு ஆங்கிலேயதேயத்தரசர் வயத்ததாகவே நம்நாட்டார் தம் தாய் பரிதபிக்கப் பிறதாயைப்போஷிப்பார்போன்று இம்மையிற்புகழும் முடிவிற்பேரின்பவீடுபேறுய பெருஞ்செல்வமுமளிக்குமிச்செந்தமிழ்விருப்பிலாதிதனைப் பற்றறத்துறந்து பிறபாடையினூக்கமுடையராகவே இத்தமிழெடுத்தாள்வாரற்றுத் தாயிலாச்சேய்போலும் வானிலாப் பயிர்போலுஞ் சோர்வுற்று முதியோராற் செய்த பற்பல நூற்கள் தலையெடாதொழிந்தும் சிதலுண்ணற்குணவாயுஞ் சிலநூற்களெவ்வயினுங் காணாது கரந்தனவற்றைக் கண்ணுற்ற நம் சேதுபதியரசர் குலத்தவருளொருவராய கனம்-பாண்டித்துரைசாமித் தேவரவர்களித்தமிழைத் தாய்போல் வளர்ப்பானெண்ணித் துணிந்ததிந்நாட்டின் றவப்பயனேயாம்.

இப்பெருந்தகையாரின் முன்னோரடைந்த நீங்காப்பெரும்புகழ் போலெவராலு மடைதலருமையினு மருமையேயாம். இக்குல திலகம்போற்றோன்றிய நம் கனம்-பாண்டித்துரைசாமித் தேவரவர்கள் தம் மனவெயிற்றோன்றிப் பிரகாசித்துக் கொண்டிருக்கு மித்தமிழ் மணியினொளி தமிழ்நாடு முற்றும்பரவுவானெண்ணி ஆன்றோரால் முற்சங்கங்கூடிய மதுரைமாநகரின்கண் தமிழ்ச்சங்கமென நான்காமுறை தொகுத்துச் சங்கக் கலாசாலைநிறுவிச் சங்கநூற்களைப் பயிற்றுவித்துப் பயிலுமாணாக்கருக்கு உடையுணவு முதலியனவுதவியும் அவரைப் பரீக்ஷித்து வுணர்ச்சிக்குத்தக்க பரிசளித்தும் மற்றுள ஆங்கிலேய பாடசாலையினுந் தமிழ்ச்சங்கப் பரீக்ஷையொன்றமைத்து அதிற்றேறியார்க்கு மவ்வாறே பரிசளித்தும் முதியோராற்செய்துள்ள பல

னூற்கள் கரந்து பிராமபாணவாய்ப்பட்டுழுளதைத் தமது தோலாமுய ற்சியாலாங்காங்கு நாடி யொருங்கமைத்துந் தம்முணர்ச்சியாலதனை யாராய்ச்சிசெய்துஞ் சீர்திருத்தி யச்சிட்டுவெளியாக்கியும் தம்மரிய திருமேனிவருந்தப் பலவிடங்கடோறுஞ்சென்று ஆங்காங்குத் தமிழ ருமையை யாவரு முணருமாறு வரியபெரிய உபந்நியாசங்களைக்கேட் டார் பலரும் பேரானந்தமுறுமாறு செய்தும்வருகிற நீர்மையான்,

தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

என நாயனாரோதியவாறு இப்பூதவுடம்புகொடுபுகழுடம்பெய்தற் கமைந்தார் இத்தமிழெனும் வித்தைக்கைக்கொடு தமிழ்நாடெல்லை யளவினும் விதைத்துவிட்டார்போலும் அதுமுளைத்துத் தழைத்துச் செழித்துக் கொடியோடும் பருவமமைந்ததாலினிப் பூத்துக்காய்த் துக் கனிந்திடுமென்பது திண்ணமேயாம்; இத்தமிழிற் பேரன்புபூண் டு மனோவாக்குக் காயமெனுந் திரிகரணங்களுமிதுவயத்ததாக்கி யுழை த்துவரும் பெருந்தகைப் போற்றலுடைமைபூண்ட நம் கனம்- பாண்டித்துரைசாமித் தேவரவர்களது வம்சமும் வாணாளும் நீடூழி வாழுமாறு பரசிவத்தை யிடையறாச் சிந்தனையுடையனாயிருக்கின் றேன். மற்றுமறிவிற் சிறந்தாருமவ்வாறே சிந்தித்திருப்பார்களெ ன்பதற்கையமில்லை. சுபம்.

ராம. பழனிவேலுப்பிள்ளை.

# சிறுவர்க்குரிய உபந்நியாசங்கள்.

(தொகுதி அ: சளசுஃம் பக்கத்தொடர்ச்சி.)

## புத்திரவாத்ஸல்யம்.

"அன்னையும்பிதாவும் முன்னறிதெய்வம்" தாய்தந்தையரிடத்து நாம் காட்டவேண்டிய விசுவாசத்தைக் காட்டிலுஞ் சிறந்ததும் தூய துமானதொன்று இந்நிலவுலகத்திலில்லையென்னலாம். தாய்தந்தையர்களுடைய வாக்கினைக்காட்டிலுஞ் சிறந்தவொன்று குழந்தை.

"தந்தைசொன்மிக்க மந்திரமில்லை" தந்தை தாயரைப் பணிதலே சிறந்ததோர் தருமமென்று மேலான வேதசாஸ்திரங்களுங் கூறுகின்றன. பண்டைக்காலத்து நல்லோர்களில் எத்தனையோ பேர் தம் தாய்தந்தையருக்குக் கீழ்ப்படிந்து நடந்தார்கள் என்பதைப்பற்றி அநேக சரித்திரங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஒரு வேடன் தன் தாய்தந்தைகளை நன்கு பணிந்தொழுகித் தன் நற்றன்மையிலும், ஞானத்திலும் சிறந்துவிளங்கினனென்பது அவனைப் பற்றிய கதையொன்றினால் நன்கு அறியக்கிடக்கின்றது.

"ஒருகாலத்தில் கானிஷ்கா என்னும் பெயரிய விப்ரனொருவனிருந்தான். அன்னோன் வேதத்தில் கரைகண்டவனாய், அநேக யாகங்களை நன்கியற்றினவனாயினும், ஆசாரமின்னதென்பதையவன் எட்டுணையேனும் அறியான். மிதிலா நகரஞ்செல்லின் அங்கு ஒரு வேடனுளன் என்றும், அவன் ஆசாரத்திற்சிறந்து விளங்குபவனென்றும், அன்னோனிடமிருந்து ஆசார தருமத்தைக் கேட்கலாமென்றும் அவ் வந்தணன் கேள்விப்பட்டான். பிறகு அவ்வாறே அவன் அந்நகரஞ் சென்று ஆண்டுள்ள உன்னதமான மாடமாளிகை கூடகோபுரங்களையும் அரமனைகளையும் செல்வத்திற் சிறந்த பிரபுக்களையும் பார்த்தான். ஒழுங்கான பாதைகளும், கடைவீதிகளும், யானைகளும், இரதங்க

ளும் மற்றும்பல பொருள்களும்சகல ஐசுவரியங்களும் நிறைந்துவிளங்கும் மிதிலாபுரியை ஜனகமஹாராஜன் ஆண்டுவந்தனன். அங்குச் சென்ற காளிஷ்காவோ ஆசாரத்திற்சிறந்த வேடனைப்பற்றிவினவலும் வேடனிருக்குமிடமும் அவனுக்கு அறிவிக்கப்பட்டது. கடைசியில் மான், எருமை முதலிய மிருகங்களின் இறைச்சிகளைக் கடைவீதியில் விற்பனைசெய்துவரும் வேடனைக்கண்டனன். அவனைச்சுற்றிலும் அநேக மனிதர் கூட்டங்கூடி நிற்றலும், அவ்வந்தணன் சிறிது தூரத்திற்கப்புறத்தில் விலகியே நின்றான்.

அந்தணன் றன்னைப்பார்க்கவந்துளன் என்பதை யறிந்துகொண்ட வேடன் உடனே காளிஷ்காவினிடம் வந்துசேர்ந்து ஏ! தூயோனே! நீவந்தகார்யமின்ன தென்பதை யுணர்ந்தேன். இவ்விடம் அக்காரியத்திற்குரிய இடமன்று; நீவிர் என்னுடன் என்னகத்திற்கு வருவீராக என்றான்.

தான் வந்தகாரியத்தைத் தான்சொல்லாமலே யுணர்ந்துசொன்ன வேடன்வார்த்தையைக்கேட்டமாத்திரத்திலேயே மிகுதியும் ஆச்சரியமடைந்தவனாய் மிகவும் சந்தோஷித்ததோடு அவனுடன் அவனகம் நோக்கிச்சென்றான். ஆங்குச்சென்றதும், வேடன் அவ்விப்ரனுக்கு அர்க்யபாத்யாசமனங்களும்வழங்கிஒரிருக்கையுமீந்தான். பிராமணனும், வேடன் அவ்வாறானவிஷயத்தில் ஏற்படுவதன் காரணம் அத்துணைச்சரியானதாகக்காணப்படவில்லையென்று கூறினன். பிறகு வேடன் இவ்வழக்கமானது பரம்பரைப்பாத்தியத்தில் எனக்கு வந்துள்ளது. என்னுடைய இந்த வழக்கத்தை எனது தாய் தந்தையர் இதற்குமுன் செய்துவந்தார்கள். எனது ஜாதித்தொழில் இது; நான் வெகு சாக்கிரதையாகப் பெரியோர்களுக்குக் கீழ்ப்படிந்து ஸத்தியஸந்தனுகப் பொய்ம்மையென்பது எள்ளளவும் பேசாமல் ஒழுகி மாற்றானைக்கண்டு பொறாமைப்படாமலு மிருந்து வாணாளைக்கழிக்கின்றேன்.

"ஊனைத்தின்றூனைப் பெருக்காமை முன்னினதே" என்றபடி நான்புலால்உண்பதில்லை. நான் பூர்வஜன்மாந்திர கர்மபெலத்தினல் இக்கொடியகார்யத்தைச் செய்யப்பிறந்துளேன். ஆகையால் எவரும்

ஜாதித் தொழிலை விடல்தகாது என்று கூறினான். பிறகு வேடன் ஆசாரமின்னதென்பதைப்பற்றி அந்தணனுக்கு விரிவாகக்கூறினான்.

"நான் சொல்லுஞ்சிறந்த ஆசாரத்தை நீவிர் நுமது கண்களால் பார்க்க விரும்பினாலும், இவ்விதமான நல்ல தெசையை நான் அடைந்தவிதத்தைக் கேட்க விரும்பினாலும், என்னகத்தின் உள்ளறைக்கு வாருமென்றுசொல்லி அந்தணனையழைத்துச் சென்றான். வேடன் அந்தணனைத் தன்னகத்திலுள்ள அழகானதோர் பாகத்திற்கழைத்துச் சேரலும், ஆங்கு மனங்கவரும்படியான அழகிய அணிகளும், ஆசனங்களும், புஷ்பங்களும், வாஸனைத்திரவியங்களும் நிறைந்திருந்தன. ஆங்குத்துல்யமான வெள்ளை வஸ்திரந்தரித்து அவனுடைய பெற்றோர்கள் சௌகரியமாக வீற்றிருந்தார்கள். வேடன் அவர்களைக் கண்டதும் சாஷ்டாங்கமாய்ப் பூமியில்விழுந்து நமஸ்கரித்து அவர்களுக்குப்பாதசேவை புரிந்தான். மஹாராஜமதக்னி குமாரனாகிய பரசுராமன் தன் தாய்தந்தையர்களுக்கு எள்ளளவேனும் குறைவில்லாது உபசரிக்கப் பாடுபட்டதைக்காட்டிலும்மேலாகப் பாடு படுகிற ஏ! திருக்குமாரா!! "உனக்கு விசேஷமான மங்களாசீர்வாதம்! தீர்க்காயுஷ்மான்பவா! புத்திரோத்ராபிவிருத்திரஸ்து" என்று அவனுக்கு ஆசீர்வசனம் கூறினார்கள்.

பின்னர், வேடன் அந்தணனைத் தன் தாய் தந்தையர்களுக்குக் காண்பித்தலும் அவர்கள் அந்தணனுக்கு விதிப்படி வந்தனைபுரிந்து உபசாரவார்த்தைகள் கூறலும் அந்தணன் அவர்களது யோகக்ஷேமங்களைப்பற்றிக் குசலப்ரசினம் செய்தான். ஓ! அறிவிற் சிறந்த அந்தணனே! "இவர்கள்தான் என்னுடைய பெற்றோர்கள்; இவர்களை நான் தெய்வம்போலப் பூஜியாநிற்கின்றேன். யான் கடவுளர்க்குரிய எக்காரியத்தையும், இவர்களுக்கு அர்ப்பணம் செய்கிறேன். பத்திரபுஷ்பம் பலம் மணிகள் தேடி இவர்களுக்கு அர்ப்பணம் செய்து சந்தோஷிப்பிக்கிறேன். காருகபத்யம், ஆகவனீயம், தக்ஷிணாக்கினி என மூன்று அக்னி, யாகம், வேதங்கள்போலும் இவர்களை நான் கருதுகிறேன். என்னிடத்திலுள்ள சகல பொருள்களும் அவர்களுக்குரிய கடமைகளைச் செய்வதற்காகவேயிருக்கின்றன; அவர்களுக்கு முறைப்படி அர்க்யபாத்யாசமனம் வழங்கி

அவர்களுக்கு ஆகாரமளிக்கிறேன். எனக்கு அவர்கள் மஹா குரு போல் விளங்கிவருகிறார்கள். அவர்களைக் கடவுள்போலவே போற்றிவருகின்றேன்.

“ ஸதாசிவாபராபரா தயாநிதே மஹா குரோ
சிதானவாஸ-காகரா இவாகராப்ரகாசனே
உதாரமாகுணாத்மனே உகாரரூபையேயுனைச்
சதாமனத்திருத்துதும்சபாபதியுமேசனே.”

என்று கடவுளைப்போல் அவர்களைச் சர்வகாலத்தும் என்னுள்ளத்திருத்தியே வைத்துக்கொண்டிருக்கிறேன். சிறந்த இவ்வாசாரத்தினாற்றான் நான் சிறந்த ஞானத்தை யடைந்தேன். மதம் என்பதற்கும் பொருள் இதுதான். மிதிலாநகர வேடனாகிய என்னிடமிருந்து நீவிர் அறியக்கூடியதும் இதுதான். ஆதலின், உம்முடைய தந்தைதாயரிடத்திற்கு நீவிர் விரைந்து செல்லுவீர்; அவர்கள் மிகுதியும் விருத்தாப்பியர்கள்; அவர்கள் ஏறக்குறைய நயன ஒளி கெட்டவர்கள் என்னலாம். உம்முடைய பிரிவினால் மிகுதியும் வருத்தமுறுகின்றனர். நீவிர் அவர்களை இக்காலத்திற் பிரிந்து வந்திருத்தலும் அடாது; ஆதலின் நீவிர் காலதாமதமின்றி யவர்களிடஞ் சென்று அவர்களைத்தேற்றுவீர். உம்முடைய தந்தை தாயர்களைக் கௌரவப்படுத்துவதற்காகவும், உபசரிப்பதற்காகவும் விரைந்துசெல்வீர்களாக; ஏனெனில், இதைக்காட்டிலும் சிறந்த ஆசாரம் எவ்வித கிருகஸ்தனுக்கும் இல்லையென்றும், இதுதான் எவ்வில்லறத்தானுக்கும் நித்திய கடமையென்றும் சொல்லப்பட்டிருக்கிறது என்று கூறினான். பிராமணன் வேடன் புத்திமதிகளுக்காக வந்தனமளித்து அவனிடமிருந்து விடைபெற்றுத் தன்னகம் சென்றது முதல் தன்னுடைய தாய்தந்தையர்களை மிகவும் உபசாரத்தோடும், உண்மையான பக்தி விசுவாசத்துடனும் போற்றிப்புரப்பதானான்” என்று மஹாபாரதம் வனபர்வம் கூறுகின்றது.

“ தாயினிற் சிறந்த தெய்வ மிலையுயர் தந்தை தன்னின்
ஏயநற் குருவுமில்லை யென்னின் மற்றிவர்க டாளில்
தூய்மலர் தூவிநாளுந் தொழுதிடு மறிஞர் தாமே
யாய் கதிர் பாப்பும் பொன்னாட் டமராயினிது வாழ்வார்.”

**வீ. சுப்பிரமணிய ஐயர்.**

# இராமநாதபுரம் ஜில்லா பாலயம்பட்டி
# வித்தியா காட்சி சாலை.

நாளது வருஷம் ஏப்ரல்மாதம் 6௳, 7௳, 8௳ ஆகியமூன்று தினங்களில், பாலயம்பட்டி பாலசுப்பிரமணிய பிரதம வித்தியாசாலை உபாத்திமைச் சங்கத்தின் சம்பந்தமாக ஒரு வித்தியா காட்சிசாலை திறக்கப்பட்டு நடத்தப்பெறும். அக்காலத்தில் இராமநாதபுரம் டிஸ்டிரிக்டு ஜட்ஜி துரையவர்கள் அக்கிராசனாதிபதியாக இருப்பார்கள். 7-வது சர்க்கில் ஸ்கூல் பெரிய இன்ஸ்பெக்டரவர்கள் காட்சிசாலையைத் திறப்பதற்குமுந்தி ஓர் உபந்நியாசம் செய்வார்கள். அநேக உபந்நியாசங்களும், இரவில் பூதக்கண்ணாடிக் காட்சிகளும் ஏற்பாடாயிருக்கின்றன.

இந்தக் காட்சிசாலை நன்கு நிறைவேறும்பொருட்டு எல்லாக் கனவான்களுடைய உதவியும் வேண்டியிருக்கிறது. ஆகையால் கனவான்கள் அடியிற்கண்ட காட்சிப்பொருள்களை தங்களாற்கூடியவளவு 1911ஞு மார்ச்சுமீ 25௳-க்கு முந்தி அனுப்பும்படியும், மேற்கண்ட விசேஷத்துக்கு வந்து விஜயம் செய்யும்படியும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

## வேண்டி அழைக்கப்படும் சாமான்கள்.

1. வித்தியா பிரிவு:—

1. பிள்ளைகளின் கையெழுத்து.

2. உபாத்திமார்களாலும், மாணாக்கர்களாலும், வேலையில்தேர்ந்தவர்களாலும், கடிதத்தில் தயார்செய்யப்பட்ட பலவித சித்திரங்கள், பூகோள தேசபடங்கள், பூகோள உருண்டைகள், பூகோள சம்பந்தமான படங்கள், தேசசரித்திர படங்கள், களிமண் உருண்டைகள், கடிதமடிப்பு வேலைகள், கடித வெட்டு வேலைகள், மணி வேலைகள், பாசி வேலைகள், கூடை முடைதல் முதலிய வேலைகள், பட்டாணி வேலைகள், குத்தித்தைத்த வேலைகள், சரிகை வேலைகள், சடைவேலைகள், நூல் வேலைகள், கம்பளிநூல் வேலைகள்.

3. போதனைக்கென்று உபாத்திமார்களாற் செய்யப்பட்டபோதனு உபகரணங்கள். (ஒவ்வொரு உபகரணத்தையும் விவரித்து எழுதவேண்டும்).

4. உபாத்திமார்களாலும், மாணுக்கர்களாலும், இதரர்களாலும் செய்யப்பட்ட கைத்தொழில் வேலைகள்.

5. உபாத்திமார்களாலும், மாணுக்கர்களாலும், இதரர்களாலும் சேர்க்கப்பட்ட போஸ்டு ஸ்டாம்புகள், நாணயங்கள், பூச்சிகள், முதலியவை.

6. கீர்த்திபெற்ற உபாத்திமார்கள், பண்டிதர்கள், அரசர்கள், மந்திரிகள்முதலிய பிரபல கனவான்களின் படங்கள்.

7. ஸ்கூல் கட்டிடங்கள், வேலைச்சாலைகள், இயந்திரங்கள், காட்சிசாலைகளின் படங்கள்.

8. காட்சிசாலைக்குச் சௌகரியமாய் அனுப்பக்கூடிய உள்ளூர் விளைபொருள்கள், அல்லது தாதுவர்க்கப்பொருள்கள், அல்லது சுரங்கத்தில் உண்டாகும் உலோகங்கள்.

9. காட்சிசாலைக்குச் சிறந்ததாகத்தோன்றும் வேறு சாமான்கள்.

II. விவசாயப் பிரிவு.

1. உலகத்தாருக்கு அருமையாக உபயோகப்படுந் தன்மையால், பொதுஜனங்கள் அவசியமாய்ப் பார்க்கவேண்டிய விளைபொருள்கள்.

2. தற்கால நவீனமுறைகளாலோ, விசேஷ பயிர்த்திறமையினாலோ உண்டாக்கப்பட்ட விளைபொருள்கள்.

3. புராதனமாய் வழங்கிவந்த விவசாயக் கருவிகளைத் தோற்கடிக்கும் நவீன விவசாயக் கருவிகள், உபகரணங்கள், இயந்திரங்கள்.

III. கைத்தொழிற் பிரிவு:—

1. பொதுஜனங்களுக்கு விசேஷ உபயோகத்துக்குதவும் கைத்தொழிற் சாமான்கள், சுவர்க் கருப்புப் பலகைக்கும், மரக் கருப்புப் பலகைக்கும் பூசக்கூடிய மை செய்யும்விதம். செலவு சுருக்கமானதாயும், சிறந்ததாயுமிருக்கவேண்டும். செங்கல், மரத்துண்டில் மை பூசி மாதிரி அனுப்பவேண்டும்.

2. விசேஷித்த வேலைத்திறமையையும், கைச் சாமர்த்தியத்தையும் காட்டக்கூடிய கைத்தொழில் வேலைகள்.

3. புராதனமாய் வழங்கிவரும் கைத்தொழிற் கருவிகளைத் தோற்கடிக்கும் நவீனக்கைத்தொழிற் கருவிகள், உபகரணங்கள், இயந்திரங்கள்.

IV. சங்கீதப் பிரிவு.—சுதேச மேளம், நரம்புக்கருவிகள் (பிடில் வீணை முதலிய) இவைகளை உபயோகித்துக்காட்டல். இந்த வாத்தியக்காரர்கள் தாங்கள்செய்யும் கச்சேரிகளுக்குப் பணம் கேட்கக்கூடாது. தாசிகள் கச்சேரிக்கு உத்தரவுகொடுக்கமாட்டோம்.

V. தேகப்பயிற்சிப் பிரிவு:—சுதேச கசரத்து; இதைச்செய்து காட்டுகிறவர்களும் தங்கள் ஆட்டங்களுக்குப் பணம்கேட்கக்கூடாது. சங்கீதப் பிரிவும் தேகப்பயிர்ச்சிப்பிரிவும், மதுரை இராமநாதபுரம் ஜில்லாவில் உள்ளவர்களுக்குமட்டுந்தான் ஏற்பட்டிருக்கிறது. இந்த இரண்டு பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் மார்ச்சமீ 15உக்குள் தெரிவித்து உத்தரவுபெறவேண்டும்.

முக்கிய குறிப்புகள்:—

1. காட்சிசாலைக்கு அனுப்பப்படும் எல்லாச் சாமான்களையும் சொந்தக்காரர்களுடைய செலவில்தான் அனுப்பவேண்டும். திருப்பியனுப்பப்படும் சாமான்களும் அவர்கள் செலவில்தான் அனுப்பப்படும்.

2. ஒவ்வொரு சாமானையும் அனுப்புகிறவர், சாமான் செய்தவர் அல்லது சொந்தக்காரருடைய பெயர், தொழில், வயது, சாமானின் விவரம் ஆகிய விஷயங்களைக் குறித்து எழுதியனுப்பவேண்டும். உபாத்திமார்களாலும், மாணுக்கர்களாலும், செய்யப்பட்ட சாமான்களாயிருந்தால், ஸ்கூல், ரேஞ்சு, வகுப்பின் பெயரையும் குறிக்கவேண்டும்.

முக்கியமாய்க் கவனிக்க.

3. மாணுக்கர்கள், உபாத்திமார்கள், இதரர்கள் செய்த சாமான்களுக்கும், வேலைத்திறமைக்குந் தக்கபடி ஜட்சுகள் நிதானிக்கும் வண்ணம் பதக்கங்களும் (மெடல்கள்) சேர்டிபிகேட்டுகளும் கொடுக்கப்படும்.

4. பதக்கங்களும், சேர்டிபிகேட்டுகளும் பெறவேண்டுமென்று அனுப்பப்படும் சாமான்களை அவ்வாறுகுறித்து அனுப்பவேண்டும். அவைகளின் விவரத்தையும் பூர்த்தியாய் எழுதியனுப்பவேண்டும்.

5. விலைமதிப்புள்ள சாமான்களைச் சாமான்களின் சொந்தக்காரர்களாவது அவர்களுடைய ஏஜண்டுகளாவது பாதுகாத்துக்கொள்ளவேண்டும். கூடியமட்டும் சாமான்கள் களவுபோகாதபடிக்கு பந்தோபஸ்துச் செய்வோம். ஆனால், இந்தவிதி காட்சிசாலைக்கென்று கடனாய்க் கமிட்டியார் பொறுப்பில் வாங்கும் சாமான்களுக்குப் பொருந்தாது.

6. 1911-ஆ பிப்ரவரிமீ கடைசிக்குள் இன்ன சாமான்கள் அனுப்பப்போகிறோமென்று தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறது.

பொதுஜன நன்மையைக்கருதி மேற்கண்ட விஷயங்களைப்பற்றிச் சிரத்தை எடுப்பீர்களென்று நம்புவதுடன் எங்கள் வந்தனத்தையும் செலுத்துகிறோம். இப்படிக்கு,

1. ப. பார்த்தசாரதி நாயக்கர், B.A. L.T.,
மேற்கண்ட உபாத்திமைச் சங்கத்தின் அக்கிராசனாதிபதியும்,
திருச்சுளி ரேஞ்சு ஸ்கூல் சப் அசிஸ்டண்டு இன்ஸ்பெக்டரும்.

2. Rev. F. E. JEFFERY, M.A. B.D.,

3. அ. பெ. அல்லிமுத்து நாடார்.

காட்சிசாலைக் கமிட்டியின் அக்கிராசனாதிபதிகள்.

*N.B.*—கடிதங்கள் எழுதுவோர் முதல் கையொப்பமிட்டிருக்கிறவருக்கு எழுதவும்.

தபாலாபீஸ் அறுப்புக்கோட்டை; ரயில்வேஸ்டேஷன் விருதுபட்டி; அறுப்புக்கோட்டையிலிருந்து 11-மயில்; ரயில் மார்க்கமாய் அனுப்பப்படும்சாமான்களை விருதுபட்டி க்ஷத்திரிய வித்தியாசாலைத் தலைமை உபாத்தியாயர் மகா-ள-ள-ஸ்ரீ மாணிக்கவாசகம் நாடார், B.A. அவர்களுக்கு அனுப்பி முதல் கையொப்பமிட்டிருக்கிறவருக்குத் தெரிவிக்கவேண்டும்.

வர்த்தகர்கள் கொண்டுவரும் சாமான்களை ஜட்சுகள் பார்வையிட்டபின்பு சரியான விலைக்கு விற்கலாம். மார்ச்சுமீ 15உ-க்குள் தெரிவித்து உத்தரவு பெறவேண்டும்.

# 1910-ஸு நவம்பர்மீ 1௨ முதல் 30௨ முடிவு வரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு. | தொகை. ரூ | அ | ப | செலவு. | தொகை. ரூ | அ | ப |
|---|---|---|---|---|---|---|---|
| 1910-ஸு அக்டோபர்மீ த்துக்குரிய புதுக்கோட்டை சமஸ்தானம் மாதச் சந்தாவரவு ... | 50 | 0 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு 1910ஸு அக்டோபர்மீ த்திய சம்பளபட்டுவாடா ரிஜிஸ்டர்ப்படி செல்லாக்கியது ... | 334 | 12 | 2 |
| செந்தமிழ்ச் சந்தாவரவு ... | 64 | 3 | 0 | | | | |
| பிரிண்டிங் ஆபீஸ் அச்சுக்கூலி வரவு ... | 171 | 15 | 3 | | | | |
| பைண்டிங் ஆபீசு வரவு ... | 5 | 15 | 0 | | | | |
| புத்தகவிற்பனை வரவு ... | 103 | 0 | 0 | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு ஆகாராதி போஷணைக்காக ஷை அக்டோபர்மீ தத்துக்குச் செல்லாக்கியது ... | 82 | 4 | 1 |
| சங்கம்காலிநிலம் மரக்கடைவாடகை நாளது சாதாரணஸு ஐப்பசிமீ த்துக்கு வரவு ... | 35 | 0 | 0 | கலாசாலை உபயோகத்துக்கு வாங்கிய புத்தகங்கள் ... | 11 | 8 | 6 |
| (விளம்பரம்) அட்வர்ட்டைஸ்மெண்ட் வரவு ... | 7 | 15 | 0 | பைண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு 7 14 0 | | | |
| | | | | ஷை ஆபீஸ் ரயில்வேசார்ஜ் செலவு 0 8 0 | | | |
| தனித்தமிழ்ப் பரீக்ஷைக் கட்டணம் வரவு ... | 1 | 0 | 0 | ஷை ஆபீஸ் கண்டிஜென்சிச் செலவு 31 6 1 | | | |
| சில்லரை வரவு ... | 1 | 4 | 0 | | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக பைண்டிங் ஆபீசுச் செலவு ... | | | | 39 | 12 | 1 |
| பிரிண்டிங் ஆபீசு ஸ்டேஷனரிச் செலவு | 26 | 4 | 1 | | | |
| ஷை ஆபீசு எஞ்சின் சம்மந்தமாய் எண்ணெய்ச் செலவு | 15 | 3 | 1 | | | |
| ஷை ஆபீஸ் கண்டின்ஜன்சி செலவு | 2 | 0 | 7 | | | |
| ஆக பிரிண்டிங் ஆபீசுச் செலவு ... | | | | 43 | 7 | 9 |
| போஸ்டேஜ் செலவு ... | | | | 21 | 0 | 0 |
| ரிப்பேர் வகையிற் செலவு ... | | | | | 3 | 0 |
| சங்கமாபீசுயிருக்கிற கட்டிடத்துக்கு 1319-20 பசலிகளுக்கு நிலவரி செல்லாக்கியது | 5 | 9 | 8 | | | |
| சங்கம் 'உபயோகத்துக்கு வாங்கி மாற்றிக்கொண்டிருக்கிற பங்களாவுக்கு நாளது சாதாரண ஹு சித்திரைமீ முதல் ஆவணிமீ முடிய மீ 5-க்குவாடகை தண்ணீர் வரி செல்லாக்கியது ரூ. | 112 | 0 | 0 | | | |
| ஆக வாடகை வரிச்செலவு ... | | | | 117 | 9 | 8 |
| லைபிரேரி உபயோகத்துக்கு வாங்கிய புத்தகங்கள் ... | | | | 1 | 5 | 0 |

| வரவு | ரூ. | அ. | பை. | செலவு | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | சென்னை சு-மி. பத்திரிகைக்கு 1910ஸ் டிசம்பர் முடியசப்ஸ் க்ரிப்ஷன், எக்ஸ்சேஞ்ஜ் போக பாக்கிசெல்லாக்கியது ரூ. | 2 | 8 | 0 | | | |
| | | | | சென்னை கா. நாகலிங்கமுதலியாரவர்களிடமிருந்துவந்தபெரிய புராணம் வகையரா வடுகள் 13-க்கு ரயில்வே சார்ஜ்செலுத்தியது ரூ. | 1 | 4 | 0 | | | |
| | | | | மெஷின்மான்களுக்கு எக்ஸ்ட்ரா சார்ஜ் கொடுத்தது | 2 | 0 | 0 | | | |
| | | | | தனித்தமிழ்ப்பரீக்ஷை விண்ணப்ப பாரங்கள் அச்சிட பேபர்வாங்கியது ரூ. | 1 | 11 | 0 | | | |
| | | | | மணியார்டர் கமிஷன் .. செலவு | 0 | 3 | 0 | | | |
| ஆக வரவு ... | 440 | 4 | 3 | வண்டிவாடகை சுமைகூலி மற்ற இதர சில்லரைச்செலவு | 1 | 5 | 0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படிசெலவு ... | | | | 8 | 15 | 0 |
| சென்ற அக்டோபர்மீ த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ... | 733 | 6 | 10 | ஆகமொத்தம் செலவு ... | | | | 660 | 13 | 3 |
| ஆக மொத்தம் வரவு .. | 1173 | 11 | 1 | போகபாக்கி இருப்பு ... | | | | 512 | 13 | 10 |
| ஆக மொத்தம் ... | 1173 | 11 | 1 | ஆகமொத்தம் . | | | | 1713 | 11 | 1 |

திரு. நாராயணையங்கார், மானேஜர். }
5—2—11

*Audited and found correct*
S. GOPALASAWMY IYENGAR,
18—2—11. *Auditor.*

## 1910-ஞு டிசம்பர்மீ 1உ முதல் 31உ முடிவு வரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு. | தொகை. ரூ. | அ. | ப. | செலவு. | தொகை. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| 1910 ஞு நவம்பர் மீ த்துக்குரிய புதுக்கோட்டை சமஸ்தானம் மாதச் சந்தா வரவு ... | 50 | 0 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு 1910 ஞு நவம்பர் மீ த்திய சம்பளப் பட்டுவாடா ரிஜிஸ்டர்ப் படி செல்லாக்கியது ... | 347 | 10 | 8 |
| 1910ஞு ஜனவரிமீ முதல் அக்டோபர்மீ முடிய மீ 10-க்கு எட்டையபுரம் சமஸ்தானம் மாதச்சந்தா வரவு ... | 100 | 0 | 0 | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு ஆகாராதி போஷணைக்காக ஷை நவம்பர்மீ த்திற்குச் செல்லாக்கியது ... | 78 | 11 | 9 |
| செந்தமிழ்ச்சந்தா வரவு ... | 36 | 1 | 0 | கலாசாலை உபயோகத்துக்கு வாங்கிய புத்தகங்கள் ... | 4 | 0 | 0 |
| பிரிண்டிங் ஆபீஸ் அச்சுக்கூலி வரவு ... | 128 | 5 | 6 | | | | |
| பைண்டிங் ஆபீசு வரவு ... | 25 | 12 | 0 | பைண்டிங் ஆபீஸ் கண்டின்ஜன்சிச் செலவு ... | 8 | 9 | 6 |
| புத்தகவிற்பனை வரவு ... | 81 | 4 | 0 | | | | |
| சங்கம் காலிநிலம் மரக்கடைவாடகை நாளது சாதாரணஞு கார்த்திகை மீ த்துக்குவரவு ... | 35 | 0 | 0 | பிரிண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு 60 7 6<br>ஷை ஆபீசு எஞ்சின் சம்மந்தமாய் எண்ணெய்ச் செலவு 7 8 10<br>ஷை ஆபீசு கண்டின்ஜன்சி செலவு 25 4 8 | | | |
| தனித்தமிழ்ப் பரீக்ஷைக் கட்டணம் வரவு ... | 5 | 0 | 0 | ஆக பிரிண்டிங் ஆபீசுச் செலவு ... | 93 | 5 | 0 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| போஸ்டேஜ் செலவு ... | | | | 17 | 0 | 0 |
| ரிப்பேர் வகையிற் செலவு ... | | | | 3 | 8 | 6 |
| சங்கம் ஆபீசுயிருக்கிற கட்டிடம், சங்கம் காலி நிலம், பிரீவி முதலியவைகளுக்கு முனிசிபல் வரிசெலுத்தியது ... | | | | 136 | 3 | 8 |
| ஆபீசு உபயோகத்துக்கு வாங்கிய பூட்டுவகையரா சாமான்களின் ஸ்டாக் செலவு ... | | | | 1 | 4 | 6 |
| சங்கம் அக்கிராசனாதிபதியவர்கள் இவ்விடம் வந்த புதுக்கோட்டை மஹாராஜா அவர்களைப் பார்ப்பதற்காக வாங்கிய ஜரிகை ஹாரம்வகையரா செலவு | 7 | 13 | 0 | | | |
| பிரிண்டிங் மெஷினைக் கையால் சுற்ற கூலி கொடுத்தது | 1 | 12 | 0 | | | |
| ரூலிங், கட்டிங்சார்ஜ்கொடுத்தது | 1 | 2 | 0 | | | |
| வண்டிவாடகை சுமைகூலி கொடுத்தது | 0 | 4 | 0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படிசெலவு ... | | | | 10 | 15 | 0 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஆக வரவு ... | 461 | 6 | 6 | | | | |
| சென்ற நவம்பர்மீ"த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித் தொகை ... | 512 | 13 | 10 | ஆகமொத்தம் செலவு ... | 701 | 4 | |
| ஆகமொத்தம் வரவு ... | 974 | 4 | 4 | போக பாக்கி யிருப்பு ... | 272 | 15 | |
| ஆகமொத்தம் ... | 974 | 4 | 4 | ஆகமொத்தம் ... | 974 | 4 | |

*Audited and found correct.*

திரு. நாராயணையங்கார், மானேஜர்.
5—2—11.

S. GOPALASAWMY IYENGAR,
19—3—11, *Auditor*

## 1911ஆண்டு ஜனவரிமீ 1உ முதல் 31உ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு. | தொகை. ரூ. | அ. | ப. | செலவு | ரூ. | அ. | ப. | தொகை. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1910 ஆண்டு டிசம்பர் மீ த்துக்குரிய புதுக்கோட்டை சமஸ்தானம் மாதச்சந்தாவரவு ... | 50 | 0 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு 1910ஆண்டு டிசம்பர்மீ த்திய பட்டுவாடா ரிஜிஸ்டர்ப்படி சம்பளம் செல்லாக்கியது | | | | 356 | 12 | 2 |
| 1911 ஆண்டு ஜனவரி மீ த்துக்குரிய புதுக்கோட்டை சமஸ்தானம் மாதச்சந்தா வரவு ... | 50 | 0 | 0 | பைண்டிங் ஆபீசு ஸ்டேஷனரிச் செலவு | 0 | 5 | 0 | | | |
| | | | | ஷை ஆபீசு கண்டின்ஜன்சி செலவு | 11 | 15 | 0 | | | |
| செந்தமிழ்ச்சந்தா வரவு ... | 40 | 8 | 0 | ஆக பைண்டிங் ஆபீசுச் செலவு ... | | | | 12 | 4 | 0 |
| பிரிண்டிங் ஆபீசு அச்சுக்கூலி வரவு ... | 218 | 12 | 0 | பிரிண்டிங் ஆபீசு ஸ்டேஷனரிச் செலவு | 62 | 2 | 3 | | | |
| பைண்டிங் ஆபீசு வரவு ... | 20 | 14 | 0 | ஷை ஆபீசு ரயில்வே சார்ஜ் | 0 | 8 | 0 | | | |
| புத்தகவிற்பனை வரவு ... | 92 | 8 | 0 | ஷை ஆபீசு எஞ்சின் சம்பந்தமாய் எண்ணெய்ச் செலவு | 16 | 11 | 4 | | | |
| சங்கம் காலிநிலம் மரக்கடைவாடகை நாளது சாதாரணஆண்டு மார்கழி மீ த்துக்கு வரவு ... | 35 | 0 | 0 | ஷை ஆபீசு கண்டின்ஜன்சி செலவு | 13 | 6 | 0 | | | |
| | | | | ஆக பிரிண்டிங் ஆபீசுச் செலவு ... | | | | 92 | 11 | 7 |
| | | | | போஸ்டேஜ் செலவு ... | | | | 23 | 0 | 0 |
| | | | | ரிப்பேர் வகையிற் செலவு ... | | | | 0 | 11 | 0 |
| தனித்தமிழ்ப் பரீக்ஷை செலவிற்காக சென்னை சென்டருக் கனுப்பிய மணியார்டர், பரீக்ஷை நடவாததால் திரும்ப வாபஸ் வரவு ... | 1 | 0 | 0 | தனித்தமிழ்ப் பரீக்ஷை சம்பந்தமாய்ச்செலவு | 5 | 8 | 6 | | | |

| வரவு | ரூ | அ | பை | செலவு | ரூ | அ | பை | ரூ | அ | பை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | மணியார்டர் கமிஷன் முதலிய சில்லரைச் செலவு | 1 | 2 | 6 | | | |
| | | | | கலாசாலை உபயோகத்துக்குவாங்கிய மண்ணெண்ணெய் டின் ஒன்றுக்கு கிரயம் | 1 | 14 | 6 | | | |
| | | | | 9-வது ஹுக்கூட்டபுரோசீடிங்ஸ் தஞ்சைத் தமிழ்ச்சங்கம் மகா-ா-ா-ஸ்ரீ சாம்பசிவநாயுடுவரவர்களுக்கனுப்ப ரயில்சார்ஜ் | 0 | 12 | 0 | | | |
| | | | | வண்டிவாடகை முதலிய செலவு | 0 | 3 | 6 | | | |
| | | | | ஆபீஸ்உபயோகத்துக்கு வாங்கிய ஸ்டேஷனரி, பிரௌன் பேபர் முதலியவாங்கிய வகையிற் செலவு | 5 | 4 | 9 | | | |
| ஆக வரவு ... | 508 | 10 | 0 | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | | | | 14 | 13 | 9 |
| சென்ற டிசம்சர்மீ த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித் தொகை ... | 272 | 15 | 9 | ஆக மொத்தம் செலவு ... | | | | 500 | 4 | 6 |
| ஆக மொத்தம் வரவு ... | 781 | 9 | 9 | போக பாக்கி இருப்பு ... | | | | 281 | 5 | 3 |
| ஆக மொத்தம். ... | 781 | 9 | 9 | ஆக மொத்தம் ... | | | | 781 | 9 | 9 |

*Audited and found correct,*

S. GOPALASAMY IYENGAR,

19—2—11. *Auditor.*

திரு· நாராயணையங்கார்,
மானேஜர்.

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௧.] சாதாரண-௵ தைமீ. [பகுதி-௩.



திருச்சிற்றம்பலம்.

## நூலாராய்ச்சி.

(கம்பராமாயணம்.)

உலகில் வழங்கும் பாஷைகள் பல. அவ்வப்பாஷைக்குரியராகப்பல சான்றோர் பற்பல காலங்களில் தோன்றிக் கடவுளின் றிருவருட்பேறுடையராய்த் தந்நுண்ணறிவின் பயனாய நூல்களியற்றி அதனால் அப்பாஷைக்கும் தமக்கும் மிக்க சிறப்புண்டாக்கியுள்ளாரென்பது யாவரும் நன்கறிந்ததேயாம். அவராலியற்றப்பட்ட நூல்கள் பல்வகை நயங்களும் பொருந்தி நீண்டகாலமாய்ப்பல்லோராலும் புகழ்ந்து பாராட்டப்படுகின்றன. அந்நூல்களே "நவில்தொறும் நூனயம்போலும்" என்னும் வாக்கிற்கிலக்கியமாய்ப்பலமுறையாராயப்புகினும் ஒவ்வொருமுறையினும் புதியபுதிய விஷயங்களை அறிதற்கிடனாயுள்ளன. இவ்வாறாய சிறந்த மொழிகளுள் நம் தமிழ்மொழியும் ஒன்றே. இம்மொழிக்குரியருள் எண்ணில் பல சான்றோர்கள் அவ்வப்போதவதரித்துச் சிறிய பெரிய நூல்கள் பல இயற்றி நம் தமிழ்மொழியை வளப்படுத்தியுள்ளார். அந்நூல்களுட் சிலவற்றையேனும் பலகால் நுணுகியறியப்புகுங் கருமத்தை மேற்கோடற்கு நம் ஆயுட்பிரமாணம் பற்றாததாகும். ஆயினும் அச்சான்றோர்களது நூற்பொருள் ஆராய்ச்சியில் மனத்திற்குண்டாம் இன்பம்போல் இவ்வுலகில் வேறெக்கருமத்தினும் உண்டாவதில்லையென்பது கற்றோர்களது அநுபவசித்தமே. இவ்வகையாய நூலா

ராய்ச்சியையும் ஓர் விஷயமாகத் தம்முட்கொண்டு நம் "செந்தமிழ்" விளங்கவேண்டுமெனவும் அவ்விஷயதானஞ் செய்பவருள் யானும் ஒருவனுயிருத்தல்வேண்டுமெனவும் சில வித்துவான்களும் எனது நண்பருட்சிலரும் விரும்பியதனால் மிக்க கல்விமான்களால் இயற்றற்குரிய இவ்வரும்பெருஞ்செயற்குச் சிற்றறிவினனுயை யான் அவராணையை மறுத்தறகஞ்சி ஒருப்பட்டேன்.

சான்றோர் நூல்களுள் செம்பொருளேயன்றிக் குறிப்பிற்றரு பொருள் மிகுதியும் உள்ளன. அவை நுணுகியறிவார்க்கே புலப்படற்குரியன. இத்துணைச் சிறப்புவாய்ந்த நூல் பல நம் தமிழ் மொழியிடத்து உளவேனும் யான் இதுபோது "கம்பராமாயணம்" என்னும் நூலாராய்ச்சியை விஷயமாகக்கொண்டு என் சிற்றறிவிற் கெட்டிய துணையும் நம் "செந்தமிழ்" வாயிலாய் விரிப்பான்றொடங்கு

## சுந்தரகாண்டம்; திருவடிதொழுதபடலம்.

### (58-வது செய்யுள்.)

கண்டனன்கற்பினுக்கணியைக்கண்களால்
தெண்டிரையலைகடலிலங்கைத்தென்னகர்
அண்டர்நாயகவினித்துறத்தியையமும்
பண்டுளதுயருமென் றனுமன்பன்னுவான்.

இச்செய்யுள் அநுமன் சீதையைக்கண்டு பின்னர் ஸ்ரீராமரிடம் வந்து அவர் திருவடிதொழுது பிராட்டியின் விருத்தாந்தம் கூறு

இதில் கண்டனன் எனப்பயனில்லை முன்னர்க்கூறியது என் னையோவெனின்? ஸ்ரீராமன் சீதையைத்தேடிக்கண்டுவருதற்கு அநுமனுக்கு ஆணை தந்தவராதலின் அநுமன் காண்டற்குரிய பொருள் சீதையென்பது ஸ்ரீராமனுக்குத் துணிந்தபொருளேயாம். அநுமன் கண்டனனோ வில்லையோ என்பதே ஐயப். ஐயத்தை நீக்கலே வாக்கியம் எழுவதன் முக்கியப் பயனாதலின், கண்டனன் என்னும்

தை நீக்குஞ்சொல்லை இங்ஙனம் முன்னர்ப்புணர்த்திக்கூறினர் எனக்கோடல் ஒன்று. அன்றியும், சீதையைக்கண்டனன் எனக்கூறின் சீதையென்ற சொல்லைக்கேட்ட துணையானே பயனில்லை கண்டதாகவோ காணாததாகவோ எவ்வாறு முடியுமோ என்று ஐயத்தை விளைத்துப் பயனில்லை முடியுந்துணையும் ஸ்ரீராமனை அவாவியவுள்ளத்தனாக்குமாதலின் அத்துணைச் சிறுபோதும் அந்நிகழ்ச்சியுருவண்ணம் துணிபொருளைக்கூறிக் காலத்தை நீட்டியாது ஐயத்தை விரைவினீக்கற்பொருட்டு கண்டனன் என்ற சொல்லை முதற்கட்பொருத்திக் கூறினாரெனக்கோடலும் ஒன்று.

இனிச் சீதைக்குரிய இயற்பெயராற்கூறாது கற்பினுக்கணி என ஒரு புனைபெயராற்கூறியது என்னெனில்? கற்பென்ற துணையானே பெண்ணென்பதும் அவள் தன்மையும் ஒருங்கே அறியக்கிடத்தலானும் கற்பென்ற சொல்லால் குறிக்கப்படும் பெண்பால் சீதை என்பது முன்னரே ஸ்ரீராமனுக்குத் துணியப்பட்டபொருளாதலானும் சொற்பல்காமை என்னும் நயம்பற்றிக்கூறியதெனலாம். கற்பினைச் சீதை அணியாகக்கொண்டனள் எனக்கூறல் மரபாயிருக்க, கற்புச் சீதையை அணியாகக்கொண்டதெனப்பொருள்பட, "கற்பினுக்கணியை" என்று கூறியது என்னையோவெனின்? சீதை கற்புக்குணம் உடையாள் என்பது ஸ்ரீராமன் நன்கறிந்ததே ஆயினும் அவளைக்கொண்டு சென்றான் அரக்கனாதலின் அவன் ஆக்கிரமித்துக் கற்புக்கழிவுசெய்தனனோ என ஐயுறற்குக்காரணமுண்டாதலின், கற்புச் சீதையாற்போற்றப்பட்டும் பிறர் ஆக்கிரமத்தால் அழிவுபெறாது வனப்புற்றிருக்கின்றதெனக்குறித்தற்பொருட்டே கற்பு சீதையை அணியாகப்பூண்டு விளங்கியதெனச்சீதையின் கற்பின் வவ்வகை ஐயமும் ஒரு சிறிதும் நிகழாவண்ணம் கூறியதெனக்கொள்க. அன்றியும் கற்பென்பது பொதுவகையால் மகளிர் யாவரும இன்றியமையாது போற்றற்குரிய குணமாம். அன்பென்னுங்குணத்தைத் தம் பதிமாட்டேயன்றி வேறெப்பொருளினும் செல்லற்கிடங்கொடாது போற்றுதலே கற்பெனத்தகும். கற்புக்குணம்பூண்ட மங்கையர் பல்லோரும் தம் பதிமாட்டே செல்லற்குரிய அன்பைப்பிரித்துத்தம் பதிமாட்டும், பரமபதியான ஈசன்மாட்டும் செலுத்தலும், அவ்வாறு இருவகைப்பட அன்பு செலுத்தினும் அவரைக்கற்பு

டைமங்கையராகவே உலகங்கொள்ளலும் இயற்கை. ஆயினும் ஒரு திறப்பட்ட அன்பு இருவகைப்பட்ட துணையானே அக்கற்பின் சிறப்புச்சிறிது குன்றியதாகவே கொள்ளலாம். சீதையின் விஷயத்தில் பதியும், பரமபதியும் ஒருவரான ஸ்ரீ ராமபிரானேயாதலால் சீதையின் கற்பில் ஒரு சிறு குறையும் இன்றாகி விளங்குதலின், கற்புக்குச்சீதை அணியாகிக் கற்பின் இயற்கையில் அமைந்த சிறிய குறையையும் மாற்றிக் கற்பை வனப்புறச்செய்தாள் எனக்கோடற்கே கற்பினுக்கணியை எனக்கூறியதெனக்கொள்க.

இனி, கண்டனன் என்ற துணையானே காண்டற்குரியவுறுப்புக் கண் என்பது தெளிவாயிருக்க கண்களால் என மிகுத்துக்கூறியது எதுபற்றியோ எனின்? ஒரு பொருளை நிச்சயித்தற்குப் பிரத்தியட்சம், அநுமானம், சாப்தம் எனப் பிரமாணங்கள் மூன்றுள்ளன. இவற்றுள் அநுமான சாப்தப்பிரமாணங்களால் தெளிந்தபொருளையும் பிரத்தியட்சம்போற்கொண்டு வியவகரிப்பது உலகவழக்கில் உண்டு. அதுபோல் சம்பாதி உயர்ந்து பறந்து சீதையை இலங்கையிற்கண்டு சொல்லிய ஆப்தவாக்கியப்பிரமாணத்தோடு அமையாது தானே கடலைத்தாவிச்சென்று சீதையைத்தன்கண்கொண்டு கண்ட பிரத்தியட்சம்பற்றிக் கூறியதென வலியுறுத்தற்கே கண்களால் என அநுமன் சொல்லியதெனக்கோடற்கென்க. அற்றாயின், கண்டனன் என்ற சொல்லை அடுத்தே கண்களால் என்ற கருவிப்பொருளையும் உடன்கூறாது கற்பினுக்கணியை என்ற சொற்குப்பின்னர் கண்களால் எனக்கூறியது என்னையோவெனின்? கற்பென்பது உள்ளத்தினிகழும் ஓர் நெகிழ்ச்சியாய குணமேயன்றிக் காண்டற்குரியபொருள் அன்றாயினும் அசோகவனத்திடை இராவணன் வந்து பிராட்டியாரோடு சம்பாஷித்தகாலத்து வெளிப்பட்ட சீதையின் கற்புத்திறத்தை அநுமன் மரத்தில் மறைந்து நின்று கண்கூடாகக்கண்டானாதலின் சீதையையேயன்றி அவள் கற்புத்திறனையும் தன் கண்ணாற்கண்ட பிரத்தியட்சம் பற்றிக் கூறியதெனக் கோடற்கு, கற்பினுக்கணியென்ற சொற்குப்பின்னர் கண்களால் எனக்கருவிப்பொருளை வைத்ததென்க.

இனி, "தெண்டிரையலைகடல் இலங்கைத்தென்னகர்" என்றதனால் அநுமன் சீதையைக்கண்ட இடங்கூறியவாறாயிற்று. இலங்

கையென்ற இடப்பெயரோடு அந்நகர்நின்ற திசையையும் உணர்த்
துவான்தென்னகர் எனக்கூறியதாகக்கொள்ளலுமாம். அன்றியும்
சீதையைக்காண்டலே காரணமாக அநுமன் இலங்கை சென்றிருப்
பினும் மாற்றான்வயிற்சென்றுழி அவன் வலிமுதலியன ஆய்ந்தறி
ந்து தம் நாயகற்குணர்த்தல் உத்தமத்தூதின் கடனாதலால் அம்மு
றைபற்றி அநுமன் இலங்கையின் தன்மையை நன்காராய்ந்து ஸ்ரீ
ராமனுக்குக்கூறியதாகப் பொருள்கோடற்கும் இடந்தந்துளது. அஃ
தெங்ஙனம் எனின்? தென்னகர் என்பது அழகுபொருந்திய நகர்
எனப்பொருள்படும். இதனால் அழகு முதலியன பொருந்திநிற்ற
ற்கு உரிய புண்ணியம் அமைந்து நின்றதென்பது உய்த்துணரக்கி
டந்தது. இதனால் இராவணன் முன்னர்ச்செய்த தவம் முதலிய
நற்கருமத்தின் பயனாய் இத்திருவெய்தினனென்பது தெளிவாம்.
ஆயினும் அலைகடலிலங்கையென இலங்கைக்குக்கொடுத்த அடை
யால் கடல்சூழ்ந்த இலங்கை எனப்பொருள்பட்டு கடல் கரியநிற
த்தைக்குறிக்க கரியநிறம் பாவத்தைக்குறிக்க பாவத்தாற் சூழப்ப
ட்ட இலங்கையெனக்குறிப்பிற்றருபொருளாய்க்கொள்ளற்கு இடந்
தந்துள்ளது. இதனால் முன்னர் இலங்கைக்கு அரசனான இராவ
ணன் புண்ணியப்பேறுற்றிருந்தும் பின்னர் அவன் செய்த பாவம்
மிகுத்துச் சூழ்ந்துவிட்டமையால் விரைவில்அவன் அழிதற்குரிய
னென அநுமன் உய்த்துணர்ந்து ஸ்ரீராமனுக்கு அக்கருத்துந்தோ
ன்றக்கூறினான் எனவும் கொள்ளலாம். அன்றியும் கடல் தாழிட
மாதலின் அதனை அடுத்த இலங்கையும் தாழ்வடைந்திருக்கின்றதெ
னக் குறித்ததாகவுங்கொள்ளலாம். இதுவன்றியும் வானரவீரர்க்
குச்சீதையைத் தேடிவரும்படி குறித்தகாலத்து அநுமன் வாராது
காலந்தாழ்த்தமைபற்றி ஸ்ரீ ராமன் தன்னை அபராதியாய் மதித்தல்
கூடுமாதலின் அவ்வாறெண்ணாதிருக்கக் கடலைக்கடந்து சீதையைக்
காணவேண்டியிருந்த தாமேற்கொண்ட செயலின் அருமைதோன்
றத் 'தெண்டிரை அலைகடலிலங்கை' எனக்கூறித்தன் அபராதத்தை
க்ஷமித்தற்குக் காரணமுளதெனக் கூறினான் என்றலுமாம்.

இனி, அண்டர்நாயக என இராமனை ஓர் புனைபெயர்கொண்டு
அநுமன் விளித்தவாறென் எனின், கடல்சூழ்ந்த இலங்கை என்
றதனால் சத்துரு பக்கல் தாழ்வு குறித்தானாகலின் அதனின் மா

ருய்த் தன் நாயகன்மாட்டுள்ள உயர்வுகுறிப்பான் அண்டர்நாயக எனக்கூறினுருகும். அன்றியும் அண்டர் யாவரும் இராவணன்மாட்டு ஏவற்றொழில் புரியக்கண்ட அநுமன் இராவணனினும் சிறப்புடைமை இராமனிடைக்கண்டாளுதலின் அண்டர்நாயகன் என்ற பெயர்புனைந்தான் எனக்கொள்க. அன்றியும் கடல்சூழ்ந்த இலங்கை என்றதனுல் பாவஞ்சூழ்ந்த இலங்கை எனக்கொண்டு அதற்கு இறைவனும் சத்துருவுமான இராவணன் பாவியெனத்துணிந்தான்; அதற்கு மாருய்ப் புண்ணியபூமியில் உறைபவர் அண்டர் ஆதலின் அவர்க்கு நாயகன் என்றதனுல் ஸ்ரீ ராமனைப் புண்ணியமூர்த்தியெனக்கொண்டு விளித்தானென்க. இதனுல் பாவந்தோற்பதும் புண்ணியம் வெல்லுவதும் ஒருதலையாகலின் பாவியாகிய இராவணனுக்குத் தோல்வியும், ஸ்ரீராமனுக்கு வெற்றியும் உளவாதல்குறித்துக் கூறினுன் எனக்கோடலும் அமையும். அன்றியும் இராவணன் அண்டர்கட்கு இடுக்கண் செய்வதால் தம் அடியார்க்குறும் இடையூறு நீக்கல் ஆண்டான் கடமையாதலின், ஸ்ரீராமன் இராவண ஸம்ஹாரம் செய்வதற்குக் காரணமுண்டெனத் தோற்றுவான் 'அண்டர் நாயக' என விளித்தான் என்பதுமாம்.

இதனையடுத்த இனியென்னும் பதப்பிரயோசனம் யாதோ என்னின்? நான் இதுகாறும் உணர்ந்து கூறிய யாவும் மெய்யுணர்ச்சியேயன்றி ஒரு சிறிதும் பொய்யுணர்வில்லை எனத் தன் துணிபின் வன்மை தோற்றற்கென்க.

இனித் துறத்தி என்றார்: துறத்தல், நீக்கல், ஒழித்தல், தவிர்தல் முதலிய சொற்கள் பிற்காலதரில் பொருள்வேற்றுமை சிறிதுமற்ற ஒரு பொருள் குறித்த பலவினைத் திரிசொல்லாகக்கொள்ளும் வழக்கு உளவேயன்றி முற்காலத்துச்சான்றோராய நூலாசிரியர் உரையாசிரியர் முதலினோர் இச்சொற்களைச் சிறிது பொருள்வேற்றுமையுடையனவாகவே கொண்டு அவ்வவ்விடத்திற்கேற்ப அவற்றைப் பிரயோகிக்கும் கொள்கையுடையாரென்பது பண்டைநூல் உரையாராய்ச்சியுடையாரது துணிபு. இவ்வாறு பலசொற்களையும் அவ்வவற்றிற்குரிய பொருளாற்றலை நன்குணராது பிரயோகிக்கும் வழக்கை எடுத்து விளக்கப்புகின் மிகவிரியுமாதலால்

இங்குப் பிரயோகிக்கப்பெற்ற துறத்தல் என்னும் சொற்பொருளா ற்றல் ஒன்றே ஆராய்வாம். ஒரு காலத்துத்தான் நீக்கியபொருள் தன்வயின் பிற்காலத்து வந்து அடையவுங்கூடும். அவ்வாறன்றி ஒருகாலத்துத்தாம் நீக்கியது பின்னர் எக்காலத்தும் தம்மை அடையாது விடுதலென்ற பொருள்பற்றியே துறத்தல் என்னும் பதம் பிரயோகிக்கப்படுவது. இதனை ஒருகாலத்து இல்லறவின்பத்துப் பொருந்திநின்று பின்னரவ்வின்பம் ஒரு சிறிதும் தம்மை வந்து அடையாது அறவே ஒழித்தவரைத் துறந்தார் எனக்கூறும் வழக்குப்பற்றியுணர்க. இதனால் இங்குத் "துறத்தி ஐயமும்பண்டுளதுயரும்" என்ற இடத்தும் ஐயமுந் துயரும் இனி எக்காலத்தும் ஒரு சிறிதும் ஸ்ரீ ராமனை வந்தடையாவென்னுந் துணிபுபற்றி அப்பொருட்குரிய "துறத்தி" என்னுஞ்சொல்லாற் கூறியதென்க.

இனி, ஐயமும் என்று பல்வகை ஐயங்களையும் உளப்படுத்தற்கு ஜாதி ஒருமையாற்கூறினார். பல்வகை ஐயமாவன:—சீதையிருக்குமிடம், அவள் கற்பின் நிலை, மாற்றான்வலி, தன்வலி, போரில் வெற்றி முதலியன. இவையாவும் தாம் நன்காராய்ந்த துணிபுரை முன்னர்க்கூறினராதலால் அதுபற்றிய ஐயம் ஸ்ரீராமனுக்கு இனி நிகழுன்முறையன்றென்பான் இனித்துறத்தி ஐயமும் என்றார்.

இனி, பண்டுளதுயரும் என்றது எற்றுக்கெனின், ஐயம் பல்வகையாயவாறுபோல் துயரும் பல்வகைக் காரணம்பற்றி எழுந்தனவாகும். துயரெனக்கூறியமையாது பண்டுளதுயர் என்றதனால் சீதையின் பிரிவால் உண்டாய துயர் நீங்குங்காலம் கிட்டியதனால் துயரைப் பண்டுளதெனக் கொண்டாரென்க அன்றியும் ஸ்ரீ ராமனுக்குச் சீதையின் பிரிவு நீண்டகாலம் உண்டாயதெனக்காலத்தின் நீடிய தன்மை குறிப்பான் பண்டெனக்கூறியதுமாம். அல்லதூஉம் ஸ்ரீராமன் நாடுவிட்டுக் காடடைந்ததனால் தாயர் தம்பியர் முதலியோரை விட்டு நீங்கிய துன்பமும் இராவணவதம் விரைவில் முடிந்து நாடடையத் திருமாதலின் அத்துயரும் நீக்கற்குரிய என்றற்குப் பண்டுளதுயரும் துறத்தியென்றதென்க. மற்றும் பாற்கடலில் தேவர்கட்கும் தண்டகவனத்தின் முனிவர்களுக்கும் கண்டக

னை இராவணனை வதைத்து அவர்கட்கு இன்பம் நல்குவதாக வாக்களித்தபடி அது நிறைவேறாது தாங்கூறிய துஷ்டநிக்ரகஞ்செய்து சிஷ்டபரிபாலனம் செய்யக் காலந்தாழ்த்தமையான் ஸ்ரீராமனுக்குண்டாய துயரும் குறித்தற்குப் பண்டுள துயரும் எனக் கூறியதெனினும் பொருந்தும்.

இனி, "அநுமன் பன்னுவான்" என முடித்தமையின் இச்செய்யுள் அநுமனது கூற்றெனவுணர்க. இதில் பயனிலையை இறந்தகாலத்தாற்கூறன் மரபாயிருக்கப்பன்னுவான் என எதிர்காலத்தாற்கூறியது என்னையோ எனின், தாம் கருதிய விஷயங்களைத்தொகுத்து இச்செய்யுளிற் கூறியதேயன்றிப் பின்னரும் சில செய்யுட்களால் வகுத்துரைப்பான்புகின்றாராதலின் என்க.

(இன்னும் வரும்.)

பொ. பாண்டித்துரை.

# தொல்காப்பியப்பரீக்ஷை.

க. ஏனை வினையெச்சம் வினைமுத லானும்
ஆன்வந் தியையும் பிறவினை யானும்
தாமியன் மருங்கின் முடியு மென்ப. (வினை-நஉ.)

(இ-ள்) செய்து, செய்யூ, செய்பு என்னும்வாய்பாடுகள் மூன்றுமல்லாத மற்றைய வாய்பாட்டு வினையெச்சங்கள் வினைமுதலுக்குரிய வினைகொண்டும், அங்கே வந்துபொருந்தும் பிற வினைமுதலுக்குரிய வினைகொண்டும் (வரையறையின்றித்) தாமியலுமாற்றான் முடியும் என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

"செய்தென, செய்யியர்" முதலிய வாய்பாட்டு வினையெச்சங்களாகிய ஏனை வினையெச்சம், தன்கருத்தாவின்வினை, பிறகருத்தாவின்வினை என்னும் இருவகை வினையுங்கொண்டு முடியும் என்பது இதன் தாற்பரியம்.

ஏனை என்பது முன்னர்ச்சுட்டப்பட்டதனைத் தவிர்த்து அதன் இனத்தைக்கருதி நிற்பதோரிடைச்சொல். "முதனிலை மூன்றும்" என்பதனாற் கொள்ளப்பட்ட "செய்து, செய்யூ, செய்பு" என்னும் வாய்பாடுகள் மூன்றுமே முன்னர்ச்சுட்டப்பட்டது எனக்கொள்க. வினைமுதல் - முடிக்கும் வினையின் கர்த்தா. இது தன்கர்த்தா எனவுங் கூறப்படும்.

"ஆன்வந்தியையும்" என்புழி "ஆன்" என்பது அவ்விடம் என்னும் பொருளை உணர்த்தும். இது "ஆன்வழிக்கொள்ளும்வேதனவன்றனைப் பற்றி வல்லே—யீன்வருகென்ன" (விராட்ட) என்னுந் தணிகைப்புராணத்தினானுந் துணியப்படும். சிவஞானபோதத்திலே எட்டாஞ்சூத்திரத்திலே "பசித்துண்டு" என்னும் வெண்பாவிலே "தவத்தான் மருவு" என்புழி "ஆன்" என்பதற்குச் சிவஞானசுவாமிகளும் "அவ்விடம்" என்று பொருள்கூறி "ஆன்வந்தியையும்" என்னும் இச்சூத்திரபாகத்தையும் எடுத்துக்காட்டினர். இலக்கணவிளக்கத்திலும் இச்சொற்கு இப்பொருள் கூறப்பட்டிருக்கின்றது.

இவ்வாறு கூறப்பட்ட "ஆன்" என்பது அச்சிடப்பட்ட தொல்காப்பியவுரைகளிலும், நேமிநாதவுரையிலும் ஆன என னகார வுயிர்மெய்யீறுகி வேறுபட்டுப் போயிற்று. அவ்வுரைகளிலே "ஆன வந்து" என்றிருத்தலை நோக்குக. "ஆண்டுவந்து" என்னும் அதனுரையையும் நோக்குக. இவ்வுரைக்கு "ஆன" என்னும் அச்சொல்லின்கண் ஆற்றல் இல்லை.

"பிறவினையானும்" என்புழிப் "பிறவினை" என்பது பிறகருத்தாவின்வினை எனப்பொருள்படும். பிறகருத்தாவைப் பிறவினை முதல் எனவுங் கூறுவர் "பிறவினையானும்" என்னும் பாடம் மேலே கூறப்பட்ட தொல்காப்பிய நேமிநாத வுரைகளிலும், சிவஞானபோதமாபாடியத்திலும் "வினைநிலையானும்" என்று வேறுபட்டுப் போயிற்று. "வினைநிலையானும்" என்பதற்கு நச்சினார்க்கினியத்திலுஞ் சேனாவரையத்திலுங் காணப்படும் உரை "பிறவினையானும்" என்பது. இவ்வுரைக்கு "வினைநிலையானும்" என்பது இயையுமாறு எங்ஙனம்! இதற்கேற்ற ஆற்றலையுங்காணேம்! ஆதலின் "பிறவினையானும்" என்னும் பாடமே பெரிதும் பொருந்துமாறுடையது. இப்பாடம் அச்சிடாப்பிரதி ஒன்றில் இருந்தது. அதுநிற்க. அப்பாற் செல்லுதும்.

உ. அளபெடை மிகூஉ மிகர விறுபெயர்
இயற்கைய வாகுஞ் செயற்கைய வென்ப. (விளி-அ.)

(இ-ள்.) அளபெடை தன்னியல்பின் மிக்குமாத்திரைபெற்று நிற்கும் இகரவீற்றுப்பெயர் இயற்கையவாய் விளிகொள்ளுஞ் செயற்கையையுடைய என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

உரைகாரர் தன்னியல்பின் மிக்கொலிக்குங்கால் நான்குமாத்திரையும் ஐந்துமாத்திரையும் பெறும் என்பதும், இகரம் ஈகாரமாகாமையின்; இயற்கையவாகும் என்றும், மாத்திரை மிகுதலாகியசெயற்கையுடைமையாற் செயற்கைஎன்றுங் கூறினர் என்பதுங் கூறுவர்.

இதன் உதாரணத்தையும் பரீக்ஷிப்பாம். "தொழிஇஇஇஇ" என்பதே இதற்கு உதாரணமாகும். இவ்வுதாரணம் கலித்தொகையிலே முல்லைக்கலியிலே மூன்றாவதிலே அடியின் முதலிலே நின்ற கூன் என்னுந் தனிச்சொல். இதற்கு நச்சினார்க்கினியர் "காண்டற்றொழிலையுடையவளே" என்று பொருள்கூறி "இஃது அளபெடை மிகூஉ மிகரவிறுபெயர்" என்று இச்சூத்திரத்தையும் எடுத்துக்காட்டினர். "இது தொழில் செய்கின்றவளே! என்னும் பொருடந்து நிற்பதோர்சொல்" என்று தொல்காப்பிய வுரையிலுங் கூறினர்.

இங்ஙனங் கூறப்பட்ட பொருட்கு மூலமாய்நின்ற "தோழிஇ இஇஇ"என்னும் இப்பாடம் அச்சிடப்பட்ட தொல்காப்பியவுரைகளிலே "தோழீஇஇஇ" என்று வேறுபட்டுப்போயிற்று. "தோழீஇஇஇ" என்னும் பாடத்திலே நச்சினார்க்கினியர் கூறிய பொருளுக்கேற்ற ஆற்றல் ஒருசிறிதும் இல்லை.

ஆதலின் "தொழீஇஇஇ" என்னும் பாடமே கொள்ளற்பாலது என்று கொள்ளுதும், அன்றிக் கலித்தொகையச்சிலும் அளபெடையின் அறிகுறியாகிய இகாரங்கள் இரண்டு வழுவிற்றென்று கொள்ளுதும். இக்குமங்குஞ் சேரநோக்கி இன்னும் பரீக்ஷித்து நிலைபெறுத்துதல் கலைத்துறையின் முறைசென்ற அறிஞர் கடன்.

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

# The Luminaries of the Sky.

# சோதிமண்டலங்கள்.

ஆகாயம் நிர்மலமாயிருக்குமொருநாளிரவில் வானத்தையுற்று நோக்கின் அதன்கண் பலவகைநக்ஷத்திரங்களகப்படுகின்றன. அவை உருவத்திலும் ஒளியிலும் வேற்றுமையுற்று விளங்குகின்றன. சோதிடநூன்முறை யறியாதார் அவையனைத்தும் நக்ஷத்திரங்களே யெனப் பொதுப்படக் கூறுவரெனினும், உண்மையிலவை 1. ஸ்திர நக்ஷத்திரங்கள், 2. கிரஹங்கள், 3. உபகிரஹங்கள், 4. உற்கைகள், 5. தூமகேது என ஐவகைப்படுவனவாம். ஸ்திரநக்ஷத்திரமென்பது ஒரேநிலையில் மினுக்கு மினுக்கெனப்பிரகாசிக்கும் தன்மையது. கிரஹமென்பது மேற்கூறிய நக்ஷத்திரங்களினிடையே மேற்றிசையினின்று கீழ்த்திசையை நோக்கியாதேனுமொரு ஸ்திரநக்ஷத்திரத்தைச் சுற்றிச் சஞ்சரித்துக்கொண்டிருப்பதாம். உபக்ரஹமென்பது ஒருகிரஹத்தைச்சுற்றிச் சஞ்சரிப்பதேயல்லாது அந்தக்கிரஹம் செல்லுமிடத்திற்கெல்லாம் தானும் கூடவேசெல்லுவது. வால்போன்ற சோதிவாய்ந்து எரிந்துகொண்டு ஆகாயத்தினின்றுதிரும் நக்ஷத்திரத்திற்கு உற்கை (எரிகொள்ளி) என்றுபெயராம். தூமகேதுவெனப் படுவது ஏறக்குறைய பெரியவாலுடன் கூடி ஓரோர்காலத்தில்மாத்திரம் ஆகாயத்தில் தோன்றிமறையும்.

இத்தகைய சோதிமண்டலங்கள் எவ்விதமான ஆதாரத்தினால் ஆகாயத்திற்பரந்து நிற்கின்றன? அவையொன்றுக்கொன்று அமையப்பெற்றுள்ள அந்நியோந்நியாகர்ஷணசக்தி (Universal gravitation) யினால் தாங்கப்பெற்றுத் தத்தம் மார்க்கங்களில் தவறாது ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்றன. இந்தச்சக்தியின் விசேஷத்தினாலேயே நக்ஷத்திரங்கள் தம்மைத்தாமே சுற்றிக்கொள்ளவும் (பிரமணம் செய்யவும், rotation), ஏனைய நக்ஷத்திரங்களைச் சுற்றிவரவும் (பரிவர்த்தனம் செய்யவும், revolution) கூடியவைகளாயிருக்கின்றன.

மேற்கூறிய ஸ்திர நக்ஷத்திரங்களுள் நமது சூரியனுமொன்றாகும். ஏனையஸ்திரநக்ஷத்திரங்களுள் சூரியனுக்குள்ள பரிமாணமமை

ந்தவை பல;' அதனினுமதிக பரிமாணமுற்றவை சில—எனினும் அவையனைத்தும் வெகு தூரத்திலிருக்கின்றமையின் சிற்றுருவம் வாய்ந்தவைகளாய்த் தோற்றுகின்றன. பூமிக்குமிக்க அருகிலுள்ள நக்ஷத்திரம் மிருகவியாதன் (Sirius or Dogstar) எனப்படும். ஒளி (தேஜஸ்) யானது ஒரு விகலை (Second) யில் ஏறக்குறைய இரண்டு லக்ஷம்மைல்தூரம் யாத்திரைசெய்யும் (வியாபிக்கும்) தன்மையது. மிருகவியாதனது ஒளி பூமிக்குவந்துசேருவதற்கு மூன்றரை வருஷமாகின்றதெனின், பூமிக்கும், அந்த நக்ஷத்திரத்திற்குமுள்ள தூரமெவ்வளவென்பதை இதனையோதுவோரே கணக்கிட்டுக்கொள்வாராக. மிருகவியாதனென்னும் நக்ஷத்திரமானது சூரியமண்டலத்தைவிட ஐம்பத்திரண்டரைமடங்கு பெரியதாகும்; ஆனபோதிலும் அது வெகுதூரத்திலிருப்பதனால் நமதுகண்ணுக்கு அஃதொரு பிரதமவர்க்க நக்ஷத்திரமாய் (Star of the first magnitude) க்காணப்படுகின்றது. சூரியன், அதனைச்சுற்றிவரும் கிரஹங்கள், அந்தக்கிரஹங்களையடுத்து ஸஞ்சரிக்கும் உபக்ரஹங்கள், அதனைச்சேர்ந்த உற்கைகள், தூமகேதுக்கள் ஆகிய இவையனைத்தும் சேர்ந்து ஸௌரகணம் (Solar system) எனப்பெயர்பெறும்.

ஸ்திரநக்ஷத்திரங்களுட்சில தனித்தும், சில ஒன்றுகூடியுமமைந்திருக்கின்றன. திரளாயொன்றுகூடிய ஸ்திரநக்ஷத்திரங்களுக்குத் தாராகணம் (Constellation) என்று பெயராம். இரவில் நாம் வடபுறம்நோக்கி நின்றுகொண்டு நிர்மலமான ஆகாயத்தையுற்றுப்பார்க்கின் மேற்றிசையினின்று கீழ்த்திசையாய் இருபத்தேழு தாராகணங்களமைந்திருப்பதைக் காணலாம். இவையே அசுவதிமுதலியனவாகும்.

கணிதசாஸ்திரத்தின்படி ஆகாயவலயமானது 360° பாகமாகவும், ஒவ்வொருபாகமும் 60'-கலைகளாகவும், ஒவ்வொருகலையும் 60'' விகலைகளாகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அதே ஆகாசவலயமானது மேற்கூறிய இருபத்தேழு தாராகணங்களாகவும் பிரிக்கப்பட்டுளது. இதுவன்றி, இரண்டேகால் நக்ஷத்திரமடங்கியதும் மேஷம் முதலிய பெயர்பெற்றவையுமான பன்னிரு ராசிகளாகவும் அவ் ஆகாயவலயம் பிரிக்கப்பட்டுளது. இதுவே ராசிச்சக்கரமெனப்பெயர் பெறும்.

ரேவதிநக்ஷத்திரத்தினிறுதியும் அசுவதி நக்ஷத்திரத்தின் துவக்கமுமாகுமிடத்தினின்று மேஷராசி கணிக்கப்படுகின்றது. இவ்விடத்திற் குறிகுறியாய் நின்றதொரு ஸ்திரநக்ஷத்திரம் இப்போது நமக்குக் காணாமற் போனமையின் மேஷராசியின் ஆதியை நிச்சயமாய்ச்சொல்ல முடியாதாயிற்று. ஆகவே, மீனராசியைக் காட்டும் தாராகணத்திலுள்ள ஜேடாபிஸ்ஸியம் (Zeta Piscium) என்னும் நக்ஷத்திரத்தை ஸ்தூலக்குறியாய்வைத்துக்கொண்டு இப்பொழுது கணக்கிட்டு வருகின்றனர். இந்தக்காரணத்தைக்கொண்டே "மீனமேஷம் பார்க்கிறான்" என்னும் பழமொழி வழங்கப்பெற்றது; அஃதாவது, 'கண்டிதமாய் (நிச்சயமாய்) ச்சொல்லமாட்டாமல் விழிக்கிறான்' என்பதாம்.

நமது ஸௌரகணத்தில் (Solar system) சேர்ந்த கிரஹங்கள் தம்மைத்தாமே சுற்றிப்பிரமணம் செய்வதன்றி (rotate), சூரியனைச் சுற்றி மேற்றிசையினின்று கீழ்த்திசையாய்ப் பரிவர்த்தனம் செய்கின்றன. (Revolve round the Sun) இப்படிப் பரிவர்த்தனஞ்செய்வது மேஷாதி பன்னிருராசிகளின் வழியேயாம். அவை பரிவர்த்தனம் செய்யும் கிரமமோவெனின்,—1. புதன் (Mercury), 2. வெள்ளி (Venus), 3. பூமி (Earth), 4. செவ்வாய் (Mars), 5. வியாழன் (Jupiter), 6. சனி (Saturn) 7. விமந்தன் (Uranus), 8 பிரமந்தன் (Neptune)—என்னும் வரிசையில் முறையே சுற்றிவருகின்றன. இவையல்லாது இன்னுமநேககிரஹங்களைச் சோதிடசாஸ்திரிகள் நூற்றுக்கணக்காய்க் கண்டுபிடித்திருக்கிறார்கள். அவை இவ்வளவு முக்கியமானவையல்ல. சூரியனைச்சுற்றிவரும் எட்டுமுக்கியமான கிரஹங்களுள் பூமிக்கும் சூரியனுக்குமிடையே சுற்றிவருவன புதனும் வெள்ளியுமாம்; இவை *நீசக்கிரஹங்கள் (Inferior or Interior Planets) எனப்படும். பூமிக்குப்புறம்பாய்ச் சுற்றிவருவன செவ்வாய், வியாழன், மந்தன், விமந்தன், பிரமந்தன் என்னும் ஐந்துகிரஹங்களாம்; இவை உச்சக்கிரஹங்கள் (Superior or Exterior Planets) எனப்படும். பூமியிலிருந்து பார்க்கிறவனுக்கு நீசக்கிரஹங்களெனப்படுபவை சந்திரனைப்போல வளர்பிறையும் தேய்பிறையும் (கலாவிருத்தியும க்ஷயமும், Phases) உள்ளவையெனத்தோற்றும். மேற்கூறிய எட்டுக்கிரஹங்களுள் எந்தக்கிரஹத்தினின்று பார்க்கின்றேமோ

* இங்கு நீசக்கிரகங்கள் என்பதற்குக் கீழிடத்துள்ள கிரகங்களென்றும் உச்சக்கிரகங்கள் என்பதற்கு மேலிடத்துள்ள கிரகங்கள் என்றும் பொருள் கொள்ள வேண்டும். பூமியிலிருந்து சூரியனை நோக்குமிடம் கீழ் எனவும் அதன் மறுதலை மேல் எனவும் கொள்வது கெணிதநூல்வழக்கு.

அந்தக்கிரஹத்தையொட்டியமையும் நீசக்கிரஹங்கள் கலாவிருத்தியும் க்ஷயமும் உள்ளனவாய்த்தோற்றும். சோதிடசாஸ்திரத்தின் பலாத்தியாயத்திற் சொல்லப்பட்டவை ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது என்னும் ஒன்பது கிரஹங்களாம். இவற்றுள் பூமிக்கு உபக்கிரஹமாகிய சந்திரனையும், சாயா கிரஹங்களாகிய ராகு கேதுக்களையும் நீக்கி, கிரஹமாகிய பூமியையும், விமந்தனையும், பிரமந்தனையும் சேர்த்துக்கொள்ளின்,—சூரியனும் அதனைச்சுற்றிவரும் எட்டு முக்கியமான கிரஹங்களும் அமையும். இவையே கணிதாத்தியாயத்தின்படி ஏற்பட்ட நவகிரஹங்களாம். பூமிக்கும் செவ்வாய்க்கும் இடையே முன்னர் ஒருகால் ஒரு கிரஹமிருந்தது. பூகம்பத்தினால் பூமியிற் சிலபாகங்கள் உடைந்து போவதுபோல, ஒரு சமயத்தில் உத்பாதம் நேரிட்டு அந்த (இடை)க் கிரஹம் முற்றிலும் உடைந்து கிரஹத்துண்டுகளாயிற்று. (சகலங்களாயிற்று, Asteroids) இந்தத்துண்டுகளும் சூரியனைச்சுற்றிவருகின்றன.

மேற்குறித்த முக்கியமான கிரஹங்களுளொன்றாகிய நம் பூமியின் வடிவம் கிச்சிலிப்பழம்போன்று இரண்டுகோடிகளிலும் தட்டையாயுள்ளதோருருண்டையாம். இஃது உபயகிம்னகோளம் (Oblate Spheroid) எனப்பெயர்பெறும். பூகர்ப்பத்தினூடே சென்று மேற்கூறிய தட்டையான ஸ்தலங்களிரண்டிலும் பூதலத்தைச் சந்திப்பது ஓர் அநுமானரேகை (Imaginary line) ஆகும்; இருபத்துநான்குமணிக்கொருமுறை ஏற்படுகிற பூமியின் சுழற்சியால் பகலிரவெனும் பேதங்கள் அமைவதற்கு நிதானமாய் (காரணமாய்) நிற்பது இந்த அநுமான ரேகையேயாம். இவ்வநுமான ரேகையே அக்ஷரேகை (Axis) எனப்படும். இந்த ரேகையின் இருகோடிகளும் முறையே உத்தரத்துருவம் (North Pole) தக்ஷிணத்துருவம் (South Pole) எனப்படும். உத்தரத்துருவத்திற்கு மேலேயிருக்கும் ஸ்திரநக்ஷத்திரமே துருவநக்ஷத்திரமாகும். அதனையடுத்துச் சுற்றிவரும் ஏழுநக்ஷத்திரங்களடங்கிய தாரகணமே ஸப்தரிஷிமண்டலம் (The Great Bear, Ursa Major, Charles' Wagon) எனப்படும். இந்த ஸப்தரிஷிமண்டலத்தில் அருந்ததி எனும்பெயர் வாய்ந்து, யந்திரஸகாயமில்லாத வெறுங்கண்ணுக்குப் புலப்படாதி

ருக்கிற நக்ஷத்திரமொன்றுளது; இந்த அருந்ததியையடுத்து நிற்கும் யுக்மநக்ஷத்திரம் (Double Star) வஸிஷ்டர் எனப்படும். இரு துருவங்களுக்கும் ஸமாந்தரமாய்ப் (Middle) பூமண்டலத்தைச்சுற்றி அரைஞாண் கட்டியதுபோல வரையப்படும் அநுமானரேகை நிரக்ஷ ரேகை (Equator) எனப்படும்.

பூமியானது 365¼ நாளில் ஒருமுறை சூரியனைச்சுற்றி வருகின்றது. இதனாலேயே இரண்டு அயனங்கள், ஆறுருதுக்கள் அல்லது பன்னிரண்டு மாதங்களடங்கிய வருஷம் ஏற்படுகின்றது. இங்ஙனம் பரிவர்த்தனம் செய்வதில் (Revolving), பூமியின் அக்ஷரேகையானது (Axis) தனது சலனதலத்திற்கு (to the plane of the motion) லம்பரேகையைப்போல் (perpendicular) நில்லாமல் 23½ பாகம் சாய்ந்து நிற்பதனால், ருதுக்களின் சீதோஷ்ணபேதங்களும் பகலிரவு (அஹோராத்திர) பரிமாணங்களின் பேதங்களும் அமைகின்றன. இந்தக்காரணத்தினாலேயே, நிரக்ஷரேகையும் (Equator) சூரியகதி ரேகையும் (Ecliptic) ஒன்றாகாமல் இரண்டு தனிவலயங்களாகி, 23½ பாகம் பரிமாணமுள்ள கோணத்துடன், இரண்டு எதிர்த்த பிந்துக்களில் ஒன்றையொன்று வெட்டிநிற்கும். இவ்விரண்டு பிந்துக்களும் விஷுக்கள் (Equinoxes) எனப்படும். இந்த பிந்துக்களுக்கு மேலாக சூரியன் வருங்காலத்தில் பூமண்டலத்தின் அநேக பாகங்களில் பன்னிரண்டுமணி பகலும் பன்னிரண்டுமணி இரவுமாயிருக்கும். இப்படியிருக்கும் தினங்களுக்கே "ஸமாஹோராத்ரதினங்கள்" என்று பெயராம்.

சூரியகதிவலயமானது, மேற்கண்டவாறு வெட்டியபின், மூலைச்சாய்வாக (தெற்கு-வடக்காய்)ச் சென்று, நிரக்ஷரேகையினின்று முறையே தெற்கிலும் வடக்கிலும் 23½ பாகம் வரையிற்சென்று திரும்பிவிடும். அவ்விரண்டு ஸ்தானங்களும் அயனங்களெனப்படும். இங்ஙனமாக, பூபரிவர்த்தனத்தில் (அல்லது, சூரியகதியில்) நான்கு முக்கியமான ஸ்தானங்களும், அந்த ஸ்தானங்களேற்படுகிற நான்கு முக்கியமான தினங்களும் அமைகின்றன. அவையாவன:—

1. சைத்ரவிஷு, Vernal Equinox, ஏறக்குறைய மார்ச்சு மாதம் 21-ஆந்தேதி அமைவது.

2. கடகாயனம், Summer Solstice, ஏறக்குறைய ஜூன் மாதம் 21-ஆந்தேதி அமைவது.

3. துலாவிஷு, Autumnal Equinox, ஏறக்குறைய செப்டம்பர் மாதம் 22-ஆந்தேதி அமைவது.

4. மகராயனம், Winter Solstice, ஏறக்குறைய டிசம்பர் மாதம் 21-ஆந்தேதி அமைவது.

ஒவ்வொரு வருஷத்துப் பஞ்சாங்கத்திலும் பங்குனி, ஆனி, புரட்டாசி, மார்கழி ஆகிய இம்மாதங்களில் எட்டாந்தேதிவாக்கில், முறையே மேஷாயனம், கடகாயனம், துலாயனம், மகராயனம் எனக்குறித்திருப்பதைக் காணலாம். ஆயினும், அநுஷ்டானத்திலோ, அந்த விசேஷ ஸம்பவங்களை மேற்கூறிய தினங்களிற் கொண்டாடாமல், முறையே சித்திரை, ஆடி, ஐப்பசி, தை ஆகிய இம்மாதங்களின் முதல் தேதிகளிற் கொண்டாடுகின்றோம். இதன் காரணத்தை எட்டியமட்டில் விவரிப்போம்.

நிரக்ஷரேகையும் சூரியகதிரேகையாகிய காந்திவலயமும் ஒன்றையொன்று இரண்டுபிந்துக்களில் வெட்டுகின்றன என்றோம். அவ்விரண்டு பிந்துக்களும் வஸந்தவிஷு (Vernal Equinox), சரத்விஷு (Autumnal Equinox) என்பவைகளாம். இவ்விரண்டனுள் வஸந்தவிஷுவே உண்மையான மேஷாதி (First point of Aries) ஆகும். இதில் சூரியன்பிரவேசிக்கும் ஸமயமே மேஷாயனகாலம் எனப்படும். இந்தமேஷாதியானது எப்பொழுதும் ஒரேநிலையிலிராமல் வருஷமொன்றுக்கு நான்குவிகலைபரிமாணமுள்ள தேசம் பின்னோக்கிச்செல்கின்றது. இதுவே விஷுஅபஸரணம் (Precession of the Equinoxes) எனப்படுவது. முன்னரொரு சமயத்தில் மேஷாதியானது ரேவதியினிறுதியில் (அஃதாவது, அசுவினியின் ஆதியில்) இருந்து, மேற்கூறியவாறு வருஷந்தோறும் கொஞ்சங் கொஞ்சமாய்ப் பின்சென்று, இப்போது ஏறக்குறைய இருபத்துமூன்று பாகம் பிந்தியது.

ரேவதியின் அந்தத்திற்கும் உண்மையான மேஷாதிக்குமுள்ள இடையே (அந்தராளமே) அயனாம்சம் எனப்படுவது. ரேவதியின் முடிவுக்கு அறிகுறியாய் நின்றநக்ஷத்திரம் காணமற்போனமையின், அயனாம்ச பரிமாணத்தை நிச்சயமாய் அமைத்துக்கொள்வது இயலாததாயிற்று. ஆதலின் சோதிடப்புலவர்கள் சிறிது வேற்றுமையுள்ள வெவ்வேறு அயனாம்சங்களைத் தத்தம் கணிதங்களில் உபயோகித்து வருகின்றனர். பயன்புகலும் சோதிடநூற்பாகத்தின்படி (பலசாஸ்திரத்தின்படி) சரியான காலத்தில் அநுபவமேற்படாதிருப்பதற்கு இஃதொரு முக்கியமான காரணமாகும். சுத்த அயனாம்சம் நிலையாமற் போனமையினாலும், உண்மையான மேஷாதியானது பின்னோக்கிச் சென்றுகொண்டிருப்பதைச் சரியாய்க்கணித்தறிந்துகொள்வது ஜ்யோதிஷஸூக்ஷ்மதர்சிகளுக்கே ஸாத்தியமாதலானும், பாமரர்க்கும் புலப்படுமாறு அசுவினியின் ஆதியையே நிலையான மேஷாதியாக்கொண்டு சைத்ரவிஷு முதலிய ஸங்கிரமணகாலங்களையும், திதி நக்ஷத்திராதிகளையும், அதனையொட்டிவரும் பல (பயன்) சாஸ்திரத்தையும் சோதிடசாஸ்திரிகள் அமைத்துவிட்டனர். இத்தகைய கணிதம் ஸாயனஸ்புடம் எனப்படும். ஆங்கிலேயர் முதலிய விதேசி சோதிடபண்டிதர்கள், கிரஹணம் முதலிய கிரஹஸஞ்சாரங்களே முக்கியமெனக்கொண்டு, அயனாம்சத்தைக் கவனியாது, உண்மையான மேஷாதியினின்று கணித்து வருகின்றனர். இவ்வகைக்கணிதமானது நிரயனஸ்புடம் எனப்படும். நட் சாஸ்திரத்தின்படியும் கிரஹணாதிகணனங்கள் நிரயனஸ்புடத்தினாலேயே அமைகின்றன. நமது சோதிடநூல்கள் பெரும்பான்மையும் ஸாயனரீதியாகவே எழுதப்பட்டுள. துருவநாடி முதலிய சில கிரந்தங்கள் நிரயனரீதியாகவே எழுதப்பட்டுள.

ருதுபேதங்கள் ஏற்படுவது உண்மையான மேஷாதியிலிருந்தாகும். உண்மையான மேஷாதியின் காலமோ பங்குனிமாதம் எட்டாந்தேதியாகின்றது. ஆனால், நாம் சைத்ரவிஷு கொண்டாடுவதோ சித்திரைமாதம் முதல்தேதியிலாம். இவ்விரண்டு தேதிகளுக்குமிடையிலுள்ள இருபத்திரண்டுநாள் வித்தியாசத்தை நாம் இப்பொழுது பொருட்படுத்தாவிடினும், இன்னும் வெகுகாலத்திற்குப்பிறகு இந்த

வித்தியாஸம் மிகவதிகமாகும். உண்மையான ருதுக்கள் (இப்பொழுது இருபத்திரண்டுநாள் பின்னடைந்திருக்கின்றன) பலமாதங்கள் பின்னுதைந்துபோம். அப்போது "சைத்திரமும் வைசாகமும் வஸந்தருது" என்பதாதிய ருதுலக்ஷணவாக்கியங்கள் அர்த்தமில்லாதனவாகும். "சைத்ரமும் வைசாகமும் வஸந்தருது" என்று சொல்லவேண்டியதை "சித்திரையும் வைகாசியும் வஸந்தருது" என்று சொல்வது அறியாமையினைமைந்ததாம்.

பஞ்சாங்கத்திலேற்படுகிற மேஷாதிமாஸங்களுக்கும் உண்மையான ருதுக்களுக்கும் வித்தியாசம் வராவண்ணம், சைத்ரவிஷு என்னும் மேஷசங்கிரமணபுண்ணியகாலத்தை நிரயனரீதியாகவே உண்மையான மேஷாயனகாலத்திலமையுமாறு கணிதமுறையைச்சீர் திருத்திக்கொள்வது அவசியமாகும். ஆரியமதசம்பந்தமான கர்மானுஷ்டானங்களுக்கு அவசியமாயுள்ள பஞ்சாங்கத்தைச்சோதித்துச் சீர்திருத்துவது வைதிகாபிமானமுள்ள மகாஜனசமூகத்தாராலாகுமேயன்றி ஏனையோரால் ஆகாது. அவர்களிதனைக் கவனிக்காமையால் நமதுகணிதம் திரிசங்குஸ்வர்க்கத்தில் நிற்கின்றது. விவேகிகளான மகாஜனங்கள் தத்தம் விருப்புவெறுப்புக்களை யொழித்து ஒன்றுகூடி இந்த முக்கியமான சீர்திருத்தத்தைச் செய்துகொள்வது நன்றுமென்பதை இங்குக்குறிப்போம். இதையே எமது விண்ணப்பமாக மகாஜனங்கள் ஏற்பார்களாக.

ஸௌரம், சாந்திரம், ஸௌரசாந்திரம், பார்ஹஸ்பத்யம், கேரளம், கிரைஸ்தவம் முதலிய பற்பல பஞ்சாங்கங்களின் ரீதியாக ஏற்பட்டிருக்கும் வருஷங்கள் பலவுள. ராஜகீயமுறையிலேற்பட்ட பஸ்லி முதலிய வருஷங்கள்வேறுள. வகைவகையாக ஏற்பட்டிருக்கும் இத்தனைவருஷங்களுள் ஒன்றிலேனும் மேஷாயனகாலத்திலிருந்து வருஷாதி ஏற்படாதிருப்பது வியஸனிக்கத்தக்கதேயாம்.

சூரியன் மகரராசியிற் பிரவேசிப்பதே உண்மையான மகரஸங்கிரமணமாகும். நிரயனரீதியாக வருஷந்தோறும் மார்கழிமாதம் எட்டாந்தேதியன்று மகரராசியில் சூரியன் பிரவேசமாகும். அதுகாறுஞ் சூரியன் தெற்குநோக்கிச்சென்று, அன்றையதினத்தில் வடக்குமுகமாய்த் திரும்புவதாகக்காணப்படும். அதுவே தக்ஷிணாயனத்

தின் கடைசி எல்லை (பரமாவதி) யாம். இந்தப்பரமாவதி விரக்ஷ ரே
கையினின்று $23\frac{1}{2}$-பாகத்திலிருக்கின்றது. சூரியன் தக்ஷிணாயனத்
திலிருந்தபொழுது பூமியின் உத்தரகோளார்த்த வாஸிகளுக்குப் பனி
காலம் ஏற்பட்டிருந்தது. சூரியன்வடக்குமுகமாய்த்திரும்பவே இந்
தப்பனி நீங்கியது. பல்வகையான சுபகாரியங்கள், யஜ்ஞம்முதலிய
புண்ணிய காரியங்கள் ஆகிய இவைகளைச்செய்வதற்கு உற்றதாகிய
உத்தராயணம்தொடங்கியது. இதற்குமுன் சூரியசக்தியினாலேற்பட்
டிருந்தமழை, பனி ஆகிய இவைகளினாலுண்டான அநுகூலங்களையநு
பவித்ததற்கு நாம் நன்றிசெலுத்தவேண்டியதருணம் இதுவேயாகும்.
இனி அடுத்துவரும் வஸந்தம், கிரீஷ்மம் முதலிய ருதுக்களில் சூரிய
வெப்பமிகுந்து பிறகுமழை ஏராளமாய்ப்பொழியவேண்டுமென நாம்
பிரார்த்திக்கத் தக்கதருணமும் இதுவேயாகும். சூரியனது கருணையி
னால் நமது கைக்குக்கிட்டிய கிருஷிப்பயன்களை (மஹஸூல்) நாம்
அநுபவிக்கப் புகுங்காலமும் இதுவேயாம். இவ்வளவு விசேஷமான
தருணத்தில் சூரியனை ஆராதித்து, அந்தக்கிருஷிப்பயன்களைச்சர்க்க
ரைப்பொங்கல் முதலிய சித்திரான்னங்களாகச்செய்து சூரியனுக்கு
நிவேதனஞ்செய்து, உற்றுருறவினருடன் கூடியிருந்து விருந்தருந்
துங் கொண்டாட்டமே மகரஸங்கிராந்திப்பண்டிகையாம். கிருஷித்
தொழிலுக்கு இன்றியமையாததாகிய காளைமாடுகளின் க்ஷேமத்தை
க்கருதி, அவைகளின் ஆதிமாதாவாகிய காமதேனுவுக்கும், பால்பொ
ழியும் இக்காமதேனுவையும் மழைபொழியுமேகங்களாகிய காராம்
பசுக்களையும் பரிபாலிக்கின்ற இந்திரனுக்கு, மகரஸங்கிரமணத்திற்கு
அடுத்த தினமாகிய "மாட்டுப்பொங்கல்" என்னும் கோபூஜாதினத்
தில், பூஜைசெய்வது வழக்கமாம். இப்படிப்பூஜைசெய்யுங் காலமா
னது நிரயனஸ்புடத்தினால் டிசம்பர்மாதம் 22-ஆந்தேதியினின்று
ஜனவரிமாதம் 13-ஆந்தேதிக்கு மாறிவிட்டது.

மேஷாதி பன்னிரண்டு ராசிகளில ஸஞ்சரிக்கும சூரியநாராயண
ரே பன்னிரண்டு அபோஸ்தலர்கள் (Apostles) என்னும் சீடர்களு
டன் கூடிய கிரிஸ்துவாவர். அவர் தக்ஷிணாயனத்தினின்று திரும்பும்
காலமே நாராயணரென்ற கிரிஸ்துவின் ஜனனகாலமாகும். இங்ஙன
மாகப் பூர்வத்துக் கிரிஸ்தவர்கள் ஆராதித்துவந்திருக்க, இக்காலத்

துக் கிரிஸ்தவர்களோ உண்மையான கிரிஸ்துவையும் அவர்தம் சிஷர் களையுமறந்து, அவரது ஜனனதினப்பண்டிகை கொண்டாடவேண் டிய டிசம்பர்மாதம் 22-ஆந்தேதியைக் கைவிட்டனர். இப்பொழுது கிரிஸ்தவஜயந்தியை டிசம்பர் 25-ஆந்தேதி கொண்டாடுவோர் சிலர்; ஜனவரி 6-ஆந்தேதியிற்கொண்டாடுவார்சிலர். இங்ஙனமாக ஒருவழி யையும் சாராது ஜனவரி முதல்தேதியை இற்றைநாட்கிரிஸ்தவர்வரு ஷாதிப்பண்டிகைத்தினமாய்க் கொண்டாடுவது இவர்கள் சோதிட முறையை முற்றிலும் மறந்ததனாலேயேயாமென்பது திண்ணம்

தென்றிசையில் யாத்திரைபோயிருந்த சூரியன் மீண்டுவரும் ஸமயத்தை மகரஸங்கிரமண புண்ணியகாலமென்றேனும், கிரிஸ்தவ ஜயந்தி என்றேனும் கொண்டாடுங்கடமை உத்தரகோளார்த்தவாஸி களுக்கே அமைந்தது. தக்ஷிணகோளார்த்தவாஸிகளும் இத்தகைய சூரியபூஜைசெய்யக் கடமைப்பட்டிருப்பதனால் அவர்கள் இந்தப்பண் டிகையை ஜூன்மாதம் 22-ஆந்தேதியிற் கொண்டாடுவது ஏற்ற தாகும்.

காளைமாடுகளைக்கொண்டு உழவுதொழில் செய்வோர் கோ பூஜை செய்வது சரியேயா மெனினும், குதிரை, கழுதை, நீராவியந்திரங் கள் முதலியவற்றைக்கொண்டு உழுவோர் பூஜிக்கவேண்டியதும் அந் தக் கோவேயோ எனின், அதற்கு ஐயமில்லை. காமதேனுவின் பூஜை யானது அது காளைமாடுகளுக்குத்தாய் என்பதனுன் மாத்திரமே யன்று. அன்னம், கந்தமூலம் முதலிய உணவுகள் தேஹஸம்ரக்ஷணத் திற்கு (உடல்வளர்ப்பதற்கு) இன்றியமையாதனவாவதுபோலவே, நெய், பால், தயிர், மோர், வெண்ணெய் ஆகிய இவையும் அவசியமான வைகளாகும். அன்றியும், நெய், பால் முதலிய பொருள்கள் யஜ்ஞம் முதலிய புண்யகாரியங்களுக்கு முக்கியமானவைகளாம். ஆதலின், அப்பொருள்களை நமக்குத்தந்துதவும் கோஜாதியைப்பெற்ற காமதே னுவை ஆராதிப்பது எல்லோர்க்குங் கடமையேயாம். பால்தரக்கூ டிய பிராணிகளாகிய குதிரை, கழுதை, ஒட்டை, ஆடு, பன்றிமுதலிய வைகளை வைத்துவளர்க்கும் தேசங்களிலும் பால், பாற்கட்டி, பாற் பொடி, வெண்ணெய், நெய்முதலியவைகளைப் பசுவின் பாலிலிருந்தே எடுத்துபயோகிக்கின்றனர். மற்றப் பிராணிகளின் பாலானது அவை

களின் குட்டிகளுக்கு உணவாகவே பெரும்பாலும் உபயோகப்படுகின்றது. இதனாலேயே பசுவின் பெருமை நன்கு விளங்கும்.

மகரஸங்கிராந்தியென்னும் சுபகாலத்தில் நமதீசன் அருள்செய்து அளித்திருக்கும் உணவுப்பொருள்களை நாம்மாத்திரமே ஏகதேசத்தில் அநுபவியாது, "மருந்தேயாயினும் விருந்தோடுண்" என்னும் நீதிவாக்கியத்தை யநுசரித்து, உற்றார், உறவினர், நண்பர் ஆகிய இவர்களுக்கு அந்தப்பண்டங்களைச் சீராக அனுப்பும்வழக்கம் அநாதியாய் ஏற்பட்டுளது. இவ் அரியவழக்கமும் இதைப்போன்ற பிறவும் இக்காலத்து நாகரிகவெள்ளத்தின் மூழ்கி அழுகிப்போகாவண்ணம் அவற்றைப்பரிபாலித்துவருவது ஆரியதர்மாபிமானிகளனைவர்க்கும் ஏற்கும்.—சுபம்.

தி. அ. ஸ்வாமிநாத ஐயர்.

---

உ

## சாக்ரடீஸ்.

* ஸாக்ரடீஸ் சிறைச்சாலையில் இருந்தகாலத்து அவர்க்கும் கிரைட்டோவுக்கும் நடந்த சம்பாஷணை.

ஸாக்ரடீஸ்—இவ்வேளை யேன் இங்குவந்தாய், கிரைடோ? இப்போது அதிகாலையல்லவா?

கிரைடோ—ஆம், அதிகாலைதான்.

ஸாக்—இப்போது மணி என்ன விருக்கும்.

கிரை—விடிகிற சமயந்தான்.

ஸாக்—சிறைகாவலன் உன்னை உள்ளேவரவிட்டது ஆச்சரியமாயிருக்கிறது

---

* (The present dialogue and the previous article about Socrates were translations from "The trial and death of Socrates" in English by F. J. Church. M. A.)

கிரை—நான் பன்முறை இங்குவருவதால் என்னை அவன் நன்று யறிவான்; இதுவன்றி அவனுக்குச்சிறிது உதவியுஞ்செய்துள்ளேன்.

ஸாக்—நீவந்து நாழிகையாகிவிட்டதோ?

கிரை—ஆம் சிறிது நேரமாயிற்று.

ஸாக்—ஆயின் ஏன் பேசாது வீற்றிருந்தது? ஏன் என்னை உடனே யெழுப்பலாகாது?

கிரை—உண்மையாகவே யான் இப்பொழுது அடைந்திருக்கும் துயிலின்மையையும், துக்கத்தையும் ஒழித்தல் எனக்கு விருப்பமே; ஆயினும் தாங்கள் எவ்வளவு அமைதியோடு துயிலுகின்றீர் என்பதை உற்றுநோக்கி வியந்துகொண்டிருந்தேன். தங்கள் தூக்கத்தைக்கெடுக்க மனமின்றித், தங்களையெழுப்பாது வாளா இருந்தேன். இதற்கு முன்பும் பன்முறை தங்கட்கு வாழ்நாள்முழுதும் மனவமைதி தீர்க்கமாயுள்ள தென்பதை உணர்ந்திருக்கிறேன். இப்போது தங்களுக்கு நேரிட்டிருக்கிற கொடுந்துயரை எவ்வளவுலேசாயும் அமைதியுடனுந் தாங்குகிறீரென்பதைப்பார்க்க, முன்னிலும் அதிகமாகத் தங்களை மதிக்கிறேன்

ஸாக்—அப்படியில்லை கிரைடோ,—என்னுடைய வயதில் சாவதற்கு வருந்தினால் மிகவும் கேவலமாயிருக்கும்.

கிரை—ஸாக்ரடீஸ், உம்மைப்போல் முதியவர்கள் கேட்டையடைந்ததுண்டு; ஆயினும் அவர் முதுமை (சாவுக்கு வருந்தி) விதியைக்கடிந்து கூறுதலினின்றும் அவரைத் தடுக்கவில்லை.

ஸாக்—சரிதான்; அது அப்படியிருக்கலாம். நீ ஏன் இவ்வளவு சீக்கிரம் இங்குவந்தாய், சொல்?

கிரை—நான் ஒரு துக்ககரமான செய்தியைக் கொணர்ந்திருக்கிறேன். உமக்கு அது துக்ககரமாகத் தோற்றாது. எனக்கும், உம்முடைய நண்பரனைவருக்கும் அதுமிகுந்த துக்கத்தையும் மனவருத்தத்தையும் தருகின்றது. எனக்குக்கொடுப்பதுபோல மற்றெவருக்கும் மிகுந்தவருத்தத்தை அது கொடாதென்பது என் துணிபு.

ஸாக்—அது என்ன? டீலாஸ் நகரத்திலிருந்து கப்பல்வந்ததும் நான் இறக்கவேண்டுமென்று சொன்னார்களே, அது வந்துவிட்டதோ?

கிரை—இல்லை; அது இன்னும் இங்கு வந்துசேரவில்லை. சூனியம் (Sunium) என்ற நகரில் அக்கப்பலைவிட்டுவந்த சிலர் கூற்றால் அது இன்றுவருமென்று எண்ணுகிறேன். அவர்மொழியால், அது இன்று இங்குவந்து சேருவது நிச்சயமென்று தெரிகிறது. நாளை உமது ஆயுள்முடிய வேண்டிவரும்.

ஸாக்—சரி, கிரைடோ தெய்வானுகூலத்தால் முடியட்டும். தெய்வங்கட்கு மனதிருந்தால் அப்படியே நடக்கட்டும். ஆயினும் கப்பல் இன்று இங்குவருமென்று எனக்குத்தோற்றவில்லை.

கிரை—ஏன் வராதென்று நினைக்கிறீர்?

ஸாக்—சொல்லுகிறேன்; நான் கப்பல்வந்துசேர்ந்த மறுநாள் இறக்கவேண்டுமல்லவா?

கிரை—அதிகாரிகள் அப்படித்தான் சொல்லுகிறார்கள்.

ஸாக்—அப்படியாயின் கப்பல் இன்றுவருமென்று எனக்குத் தோன்றவில்லை நாளைத்தான்வரும். இரவில் சற்றுமுன்பு நான் கண்ட கனவால் எனக்கு அப்படித்தெரிகிறது. நீ என்னை யெழுப்பாதது நன்மையென்றே நினைக்கிறேன்.

கிரை—நீர்கண்ட கனவென்ன?

ஸாக்—வெள்ளையுடைதரித்த மிக்க அழகிய ஒருஸ்த்ரீ என்னிடம் வந்து "சாக்ரடீஸ், நாள்மூன்றில் நீர் வானகம்புகுவீர்." என்று சொன்னதாகத் தோற்றிற்று.

கிரை—என்ன ஆச்சரியமான கனவு, ஸாக்ரடீஸ்!

ஸாக்—ஆயினும் அக்கனவின்பொருள் என்மட்டில் நன்கு விளங்குகிறது.

கிரை—ஆம், தெளிவாக எனக்கும் தோற்றுகிறது. ஆதலின் ஸாக்ரடீஸ்! உத்தம! கடைசிமுறை என்வார்த்தையைக்கேட்டு உமது உயிரைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டுகிறேன். எனக்கு உம்முடைய இறப்பு ஒருதுயராகாது பலதுயராகவே முடியும். எங்கும் காணுதற்கரிய ஒருநண்பரையிழத்தலோடு, உம்மையும் என்னையும் அறியாதபலர் பணத்தைச்செலவுசெய்யச் சித்தமாயிருந்தால் உம்மைக் காப்பாற்றியிருக்கலாம்; நான் அப்படிச்செய்யாது ஒழிந்தேனென்று என்னைப்பற்றி விபரீதமாக எண்ணும் எண்ணங்களுக்கும் ஆளாவேன். நண்பர்களை மதியாது பணத்தையே போற்றும் குணத்தைவிட இழிந்ததெது? உம்மைக்காப்பாற்ற மிருந்த ஆவல் எங்கட்கு இருந்து முயன்றும் நீரே சிறையைவிட்டுத் தப்பியோட மறுத்தீர் என்பதை உலகம் ஒருபோதும் நம்பாது.

ஸாக்—உயர்குணத்தோனே, கிரைடோ, உலகத்தார் அபிப்பிராயத்தை நாம் ஏன் அவ்வளவு மதிக்கவேண்டும்? நாம் யாருடைய அபிப்பிராயத்தைப்போற்ற வேண்டுமோ அம்மேன்மக்களெல்லாம், நாம் சரியானவழியில் நடந்தோமென்றே ஒப்புக்கொள்வார்கள்.

கிரை—ஆயினும் ஸாக்ரடீஸ், உலகத்தின் அபிப்பிராயத்தைக் கவனித்தல் அவசியம் என்பது உமக்குத்தெரிந்ததுதான். ஜனக்கூட்டத்தின்முன் சாட்டப்பட்ட பொய்க்குற்றமும் ஒருவனுக்குச் சிறியதன்றிப் பெரியதீங்கையும் விளைவிக்கும் என்பதை உமது விஷயமே மெய்ப்பிக்கின்றது.

ஸாக்—கிரைடோ, ஜனக்கூட்டத்தினது அபிப்பிராயம் ஒருவனுக்கு மிக்கதீங்கை விளைவிக்கக்கூடுமாயின், அவ்வபிப்பிராயமே ஒருவனுக்கு மிக்கநன்மையையும் விளைவிக்கக்கூடுமென்பது எனதெண்ணம்; இது சிலாக்கியமே. ஆனால் அவர்களால் இரண்டும் ஆவனவல்ல. ஒருமனிதனைப் புத்திசாலியாக்குதல் அல்லது முட்டாள் ஆக்குதல் அவரால் இயலாது. மனதிற்குத்தோன்றியவாறு அவர்கள் நடக்கிறார்கள்.

கிரை—சரி, அப்படியாயின் இருக்கட்டும். எனக்கு இதைச் சொல்லும்; உண்மையாகவே என்னைப்பற்றியும் உம்முடைய பிற

நண்பர்களைப்பற்றியும் உமக்கு விசாரமில்லை. ஆயினும் ஒற்றர்கள், நாங்கள் உம்மைத் திருட்டுத்தனமாக வெளியேற்றிவிட்டோமென்று அறிவிப்பார்கள்; அதனால் எங்களுக்கு விபத்து நேரிடும்; பணச்செலவு வரும்; ஒருவேளையெங்கள் ஆஸ்தியெல்லாமிழக்கவேண்டி வரினும் வரும்; பின்னும் அத்துடன் வேறு தண்டனைகளுள்ளானாலும் ஆவோம் என்று பயப்படுகிறீரல்லவா? அவ்வித அச்சமிருப்பின் அதனை ஒழித்துவிடும். அவ்விதமான கஷ்டங்கட்கு உள்ளாகக் கடமைப்பட்டிருக்கிறோம். அவசியமானால் உம்மைக்காப்பாற்றுவதில் இன்னும் பெரியதுன்பங்கட்கும் உள்ளாகத் தயாராயிருக்கிறோம். ஆதலின் என்வார்த்தையைக்கேட்க மறுக்காதீர்.

ஸாக்—எனக்கு இதுவிஷயமாகவும் துக்கமுண்டு; கிரைடோ, வேறுவிஷயம்பற்றி இதினுமதிகத் துக்கமுண்டு.

கிரை—இருந்தால் அதைப்பற்றிப் பயப்படாதீர். அதிகப்பணம் கேளாமல் உம்மைச் சிறையினின்றும் வெளியேற்றிக்கொணர மனிதர் சித்தமாயிருக்கிறார்கள். வெளியேறியபிறகு ஒற்றர்களை இலகுவாகப் பணத்தைக்கொடுத்து நம்பக்கல் சேர்த்துவிடலாம். பின் அவர்களால் பணச்செலவுக்குக் காரணமில்லை. என் ஆஸ்தியெல்லாம் நும்பொருட்டிருக்கிறது. அதுபோதுமென்றே நினைக்கிறேன். என் பணத்தைச்செலவிடுவதில் தங்கட்கு ஏதேனும் மனமொவ்வாதாயின் இவ்வாதன்ஸ் நகரில் தங்கட்குத்தெரிந்த அந்நியவாசிகள் தங்களுடைய பணத்தைச் செலவிடத்தயாராயிருக்கிறார்கள். அவருள் தீப்ஸ்நகரத்து "ஸிம்மியாஸ்" என்றவொருவர் இதற்காகவே போதுமான பணம்கொணர்ந்திருக்கிறார். இன்னும் "கீப்ஸ்" முதலிய பல்லோரும் சித்தமாயிருக்கிறார். ஆதலின் மேற்சொல்லிய காரணத்தைக்கொண்டு உம்மைக்காப்பாற்றிக்கொள்வதினின்றும் பின் வாங்காதீர். "நாட்டைவிட்டுப் போகச்சொன்னால் நான் என்னசெய்வது என்பது எனக்கேதெரியாது" என்று நியாயாதிபதிமுன் தாங்கள் முன்புசொன்னது தங்களைத்தடைசெய்யாதொழிக. ஏனெனில் தாங்கள் செல்வதற்கு எத்தனையோ இடங்கள் இருக்கின்றன. அவ்விடத்தாரெல்லாம் தங்களை நல்வரவேற்று ஆதரிப்பார்கள். "தெஸலே" யென்னும் நகர்க்குப்போகச் சம்மதித்தால் அங்கு என் நண்பர்

பலர் இருக்கிறார்கள். அவர்கள் உம்மை நன்குபாராட்டிக்கொண் டாடுவார்கள். அவ்விடத்துச் சனங்களால் உமக்குத்துன்பம்வராது காப்பாற்றுவார்கள். ஸாக்ரடீஸ், இன்னும் உம்முயிரைக்காப்பாற்ற வழியிருப்பவும் அதைத்துறப்பது, நீரே தீமைசெய்வதாகுமென்று எண்ணுகின்றேன். உம்முடைய விரோதிகளின் வழியைப்பற்றியே நீர் நடக்கின்றீர். நீர் செல்லும்வழி உம்மைக்கெடுக்கநினைக்கிறவர்க ளின் வழியே. இதுமாத்திரமல்ல; உம்முடைய குழந்தைகளை நீர் கைவிடுபவராகக் காணப்படுகிறீர். நீர் குழந்தைகளை வளர்த்துப் படிப்பிக்கவேண்டியிருக்க அவர்களை விதிவசம் ஒப்பிக்கின்றீர். அவர் தலைவிதி, பெற்றோரில்லாத அநாதைக்குழந்தைகளின் கதியைப்போ லவே முடியும். குழந்தைகளைப்பாடுபட்டு வளர்த்துப்படிப்பிக்கத் தயாராயிருந்தாலொழிய நீர் குழந்தைகளைப்பெற்றிருத்தல்கூடாது. உமது வாழ்நாள் முழுதும் நன்னடை (Virtue) யைப்பற்றி மிகுத் துக் கூறியும் நீரே நல்வழியிற்செல்லும் திடங்கொண்ட புருஷன் போகும்வழியைப்பற்றாதுவிடுத்து, இலேசான ஒருவழியைத் தேடு கிறீரென்று எனக்குத்தோன்றுகிறது. நான் சம்பந்தப்பட்டமட்டில் உமக்காகவும் உமது நண்பர்களான எங்கட்காகவும் வெட்கப்படுகி றேன். விசாரணைக்குவரவேண்டியதே அவசியமில்லாததாயிருக்க, நீர் நியாயஸ்தலத்துக்குவந்தது, விசாரணை நடந்தவிதம், கடைசி யாக எல்லாவற்றிற்கும் கேவலமான உம்முடைய தற்காலநிலைமை ஆகிய (உமக்கு நேர்ந்த) இவையெல்லாம் எமது அச்சத்தால் உண் டானதென்று சனங்கள் நினைப்பார்கள். கொடுந்துன்பத்தை விலக் காமல் நாங்கள்கேவலம் அச்சத்தினால் பின்வாங்கியதாகப் பிறர்க் குக்காணப்படும். ஏனெனில், நாங்கள் உம்மைக்காப்பாற்றக் கூட வில்லை; எங்களால் முடிந்தவரை எங்களைக்கொண்டு உம்மைக்காப் பாற்றிக்கொள்ள வழியிருக்க நீரும் அப்படிச்செய்யாது ஒழிகிறீர். ஸாக்ரடீஸ், ஜாக்கிரதை ; இவை தீமைவிளைத்தலோடு உமக்கும் எமக்கும் அவமரியாதையுங்கொணரும்; ஆதலின், செவ்வனே ஓர்ந்து பாரும்: இல்லை, யோசித்துப்பார்க்கும்வேளை சென்றுவிட்டது. நாம் இப்போது ஒருமுடிவுக்குவருதல் அவசியம். ஒரேவழிதான் நமக்கு இப்போது உளது. அவ்வழியைப்பற்றிய எல்லாம் இன்றிரவே செய்தல்வேண்டும். இனித்தாமதித்தால் நமக்குக் குடிமுழுகிப்போ

கும். ஸாக்ரடீஸ், என்சொற்படி நடப்பதை மறுக்காதிருக்க உம்மைவருந்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஸாக்—என் அன்பிற்குரியநண்ப, கிரைடோ, என்னைக்காப்பாற்றுவதிலுள்ள உன்விசாரம் நல்வழியதாயின் மிகச்சிறந்ததே. நல்வழியல்லதாயின் பின்னும் பெரியகெடுதலை விளைக்கும். ஆதலின் நீ சொல்வதுபோலச்செய்தல் வேண்டுமோ, வேண்டாவோ என்பதைப்பற்றி உசாவுவோம். இதுவரையிருந்ததுபோலவே இப்பொழுதும் நான் என்மனச்சாட்சிப்படி நடப்பேனேயன்றி வேறொருவர் வார்த்தையையும் கேட்பேனல்லேன். யோசித்துப்பார்த்தால் அதுவே நல்வழியென்று எனக்குப்படுகிறது. எனக்கு இந்த ஆபத்துவந்ததனால் நான் முன்கொண்டகொள்கைகளைத் தள்ளமாட்டேன். அவை முன்தோன்றியவாறே இன்றும் உண்மையான வழிகளென எனக்குத் தோற்றுவதால் நான் அவைகளை நன்குமதித்துப்போற்றுகின்றேன். குழந்தைகளைப் பேய்கள் வெருட்டுவதுபோல, ஜனக்கூட்டம் தம் அதிகாரத்தால் நூதன பயங்கள்காட்டி நம்மைவெருட்டி, நமக்குப்புதிய அபராதங்கள் விதித்து, நம்மைச்சிறைப்படுத்தி, மரணதண்டனைக்குள்ளாக்கினும் நான்கொண்ட கொள்கையை மாற்றுவதற்குத் தக்ககாரணம் ஏற்பட்டாலொழிய உண்மையாகவே உன்னுடைய ஆலோசனையை ஒருபோதும் ஏற்கேன். இந்தநிலைமையில், இப்பொழுது நம்மிருவருக்கும் உள்ள வியவகாரத்தைப்பற்றி ஆராய்வது எங்ஙனம்? ஆயினும் மனிதரின் அபிப்பிராயபேதங்களைப்பற்றிச் சற்று முன்புநீ கூறியதை முதலில் எடுத்துக்கொள்வோம். அவர்களுடைய அபிப்பிராயங்களுள், சிலவற்றைக் கவனிக்கவேண்டுமேயன்றி மற்றவைகளைக்கவனித்தல் அநாவசியம் என்று நாமிருவரும் முன்கொண்டிருந்தகொள்கை சரியா என்று ஆராய்வோம். எனக்கு மரணதண்டனை விதிக்கப்படுமுன் நாம் அப்படிக்கொண்டது சரியாக இருந்ததே! இப்போது மனதுக்குத்தோன்றியவாறுபேசி, வழக்குக்காக வாதாடவேண்டுமேயென்று வாதாடி முன்கூறியதெல்லாம் விளையாட்டினுரைத்த வெற்றுரையென்றால் அது நமக்கு அடுக்குமோ? கிரைடோ, உன்னுடைய உதவியைக்கொண்டு, நமதுபழைய கொள்கைகளையெல்லாம் ஆராய்ந்து, என் தற்காலநிலையெவ்விதத்

திலேனும் அவற்றின் உண்மையை மாற்றினதாகத் தோற்றுகிறதோ என்று பார்த்து, அவற்றைநாம் முற்றிலும் நீக்கவேண்டுமா, அல்லது கைக்கொள்ளவேண்டுமா என்று கவனிக்க அவாவுகின்றேன். ஆராய்ச்சியிற்சிறந்த நம்மவர்கள், நான் சற்றுமுன்புசொல்லியபடியே, மனிதர்கள் மேன்மையாகக்கொண்டாடும் சில அபிப்பிராயங்களைப் பாராட்டவேண்டுமேயன்றி மற்றவைகளைப் பாராட்டவேண்டுவதில்லையென்று சொல்லுவது என்றுமுள்ளவழக்கம். கிரைடோ, தயவுசெய்து நீயே சொல். அவர்கள் சொல்வது உண்மையல்லவா? மனுஷ்யயத்தனப்படி நீ நாளைச்சாகவேண்டிய நிலையில் இல்லை ஆதலால் உன்னுடைய தீர்மானம் ஒருசார்புடையதாகாது. ஆதலின் நன்றாக நிதானித்துப்பார். நாம் மனிதருடைய எல்லாக்கொள்கைகளையும் மதிக்கவேண்டுவதில்லை; சிலவற்றையே மதிக்கவேண்டும். அன்றியும் எல்லா மனிதருடைய கொள்கைகளையும் மதிக்கவேண்டுவதில்லை; (மேதாவிகளான) சிலருடைய கொள்கைகளையே மதிக்கவேண்டும்: என்று தீர்மானித்துச்சொல்வது உனக்கு நியாயமாகத்தோற்றவில்லையா? நீ யென்ன நினைக்கிறாய்? (நான் சொன்ன) இது உண்மையல்லவா?

கிரை—ஆம் உண்மைதான்.

(இன்னும் வரும்.)

R அரங்காசாரியர்.

உ

# மகாசிவராத்திரி மகிமை.

ஆதிகாலத்தில் பரசிவனால் தோற்றுவிக்கப்பட்ட பாயவுலகமனைத்து மொடுங்கிய கற்பமுடிவினிரவிலே நான்குயாமத்தும் சர்வலோகமாதாவாகிய உமாதேவியார் பரமேசுரபிரபுவை ஆகமவிதிப்படி அர்ச்சனைபுரிந்து அவ்வுகாந்தத்திருட்பொழுதகன்றபின் அப்பரமேசுரபிரபுவின் திருவடிகளிற் பணிந்து தமியேன் பூசித்த இரவை வானும்புவியு மநுஷ்டிக்கவும், அவ்வாறநுஷ்டித்தோர்க்குப்

புத்திமுத்தியையளித்தல்வேண்டு மெனப்பிரார்த்திக்க அங்ஙனமே யளிப்போமென் றநுக்கிரகித்தனர். அவ்விரவே சிவராத்திரியென வழங்கலாயிற்று.

## சிவராத்திரிபுராணம்.

"பெற்றுயர்சற்பவீற்றுலகின் றபிதாமகனுலந்துபேருலக
முற்றுமற்றொருங்கிப்பிரளயத்துயிர்கண்முடிந்திடுங்கங்குலினுளத்தன்
புற்றுமாமறையாகமவிதிப்படிவண்டுழுதேனுண்டுபாட்டயரும்
பொற்றுணர்க்கடுக்கைத்தொடைமிடைசடிலப்புனிதனையருச்சனைபுரிந்தாள்

"யாமமோர்நான்குஞ்சென்றகன்றுகாந்தத்திருட்பொழுதகன்றபினிதழித்
தாமமார்புனைந்தசோமசேகரன்பொற்றாளிணைபணிந்தவன்றனது
வாமமாரிமயவல்லியின்றுனைநான்வழிபடுகங்குல்வானவரு
நாமநீர்வேலியுலகுளோரெவருஞ்சிவநிசியெனநவின்றிடவும்."

"இச்சிவநிசிநோற்றியாவராயினுமுன்னிணையடித்தாமரைகருதிப்
பச்சிமத்தடைந்தபரிதிபூருவத்திற்பருப்பதத்துதித்திடுமளவு
நச்சிநற்பூசைபுரிந்தவர்முத்திநண்ணவும்வேண்டுமென்றிரப்ப
வுச்சியின்மணிசேருரகபூடணனுமுமையவட்கவ்வரமளித்தான்."

இஃதன்றியும் பின்னோர்காலத்து இருபத்தர்கள்மூலமாய் இவ்வுலகிற்கு இச்சிவராத்திரியின்மகிமையை விளக்குவான்வேண்டிச் செஞ்சுடராகிநின்றபின்னர் போகத்தானமாகிய நிட்களசகளமென்னுமவ்வருவுருவத்தினின்று அதிகாரத்தானமாகிய சகளமென்னுமுருவத்தைத் தாங்கியருளினார். அவ்விருபத்தர்களும் அத்திருவுருவைக்கண்டின்புற்றுக்களிப்பெனுங்கடலினுக்கெல்லை காண்கிலராகித் தோத்திரஞ்செய்தனர்.

## சிவராத்திரிபுராணம்.

" மாசிமாதத்திற்றேன்றுமதிக்கலைகுறைந்துதேயு
மாசில்பன்னான்காம்பக்கத்தரையிருளியாமந்தன்னிற்
றேசினுல்விளங்குஞ்சோதிச்செஞ்சுடராகிநின்ற
காசிலாநுதற்கட்பெம்மான்றனதுருக்காட்டிநின்றான் "

" நீலகண்டமுமெண்டோளுநெற்றியிற்கண்ணுநீறுங்
காலனைக்காய்ந்தகாலுங்கையின்மான்மழுவுங்கண்டு
மாலவன்வாமந்தன்னின்மலரயன்வலப்பானின்று
சூலபாணியனைநோக்கித்துதிபலசொல்லலுற்றார்."

பசுக்கள் பதியை வணங்கியுய்யும்பொருட்டே அகம் மொழி தனுவென்னும் முக்காரணங்களும் ஏற்பட்டுள்ளன. அவற்றுள் அகம் அவருடைய வடிவைத்தியானஞ்செய்ய உதவுகின்றது. வாக்கு அவருடைய மந்திரங்களைச்செபிக்க உதவுகின்றது. காயம் அவரையருச்சித்தற்கும் அவரை வழிபடுதற்குமுதவுகின்றது. ஆனால் அவர் இம்மூன்றுக்கும் எட்டுபவரல்லர் அதீதமானவஸ்துவாயிருக்கிறார். அவர் ஒன்றுக்குமெட்டாதவருமல்லர். அறிவுக்கு எட்டுவர் ஆதலால் ஞானிகள் அவரை அறிவினாலடைந்து ஆனந்தமடைகிறார்கள். அதனால் அவ்வணக்கங்களும் புறத்தொழில் அகத்தொழில் அறிவுத்தொழில் என முத்திறப்படுகின்றன. அதனால் கடவுள் இலக்கணமும்

சொரூபம்=தடத்தம்
காரணம்=காரியம்
மெய்=பொய்
இயற்கை=செயற்கை
அநாதி=ஆதி

என்றிருவகையாய்க் காணப்படுகின்றன. அக்கடவுள் தோற்றநாசங்களில்லாதவராதலினாலே, அவருக்கு ஓர் உருவமிருக்குமென்று சொல்ல இடமில்லை. உருவமில்லாமையினாலே ஒரு பெயருண்டென்னவுமிடமில்லை. உருவும் பெயருமில்லாமையினாலே அவருக்கென ஓர் ஊர் உண்டென்று கூறவுமிடமில்லை இவை இல்லாமையினாலே அவருக்கென ஒரு தொழிலிருக்குமென்று சொல்லவுமிடமில்லை. அவர் அங்ஙனந் தமக்கென ஓர் ஊரும் பேரும் உருவுந் தொழிலும் இல்லாதவராயினும் ஆன்மாக்களிடத்துவைத்த பெருங்கருணையினாலே அவ்வான்மாக்களைப் பந்தித்த பாசத்தை யொழித்து உய்வித்தல் ஏதுவாக ஊரும் பேரும் உருவுந் தொழிலுங்கொண்டருளுவர். அதனால் அவருடையநிலை சொரூபமென்றுந் தடத்தமென்றும் இருவேறுவகைப்படுவதாயிற்று.

நமது ஸ்ரீ கச்சியப்பசிவாசாரியர் கந்தபுராணத்தில் சிவவணக்கங் கூறியவிடத்து சொரூபநிலையையும், தடத்த நிலையிலுள்ள இலயபோகவதிகாரத்தையும் முறையே ஆறு செய்யுட்களாலும் அமைத்துள்ளனவற்றை அறிஞர்கள் யாருமறியற்பாலதே."

### கந்தபுராணம்.

"திருவந்ததொல்லைப் புவனத்தொடு தேவர்போற்றிப்
பெருவந்தனை செய்தறிதற்கரும் பெற்றியெய்தி
யருவந்தனையு முருவத்தையு மன்றிநின்ற
வொருவன்றனது பதந்தன்னை யுளத்துள்வைப்பாம்."

அருவந்தனையும் — இலயத்தானமாகிய நிட்களமென்னும் அருவத்தையும்.

உருவத்தையும் — அதிகாரத்தானமாகிய சகளமென்னும் உருவத்தையும் என்று கூறினமையால் இவ்விரண்டிற்கும் நடுநின்றபோகத்தானமாகிய, நிட்கள சகளமென்னும் அருவுருவத்தையும், அமைத்துக்கூறினாரென்க.

அன்றி நின்றானென்றமையால் இதற்கப்பாற்பட்டுள்ள சொரூபநிலையின் வணக்கத்தையுணர்த்திற்று. இன்னும் இதன் பின்னுள்ள செய்யுள்களில் நீள்கழற்கன்புசெய்வாம் என்றும், அரனடிசென்னிசேர்த்துவா மென்றும், பூங்கழல்கள்போற்றுவாமென்றும், மலரடிபோற்றி செய்துவாமென்றும், திருநடச்செயலையேத்துவாமென்றும் கூறியதுபோலாகாமல் பதந்தன்னை யுளத்துள் வைப்பாம் என்றமையாலுந்தெற்றன விளங்கும்.

ஆதலால் சர்வகருணாநிதியாகிய பரமேசுரபிரபுவானவர் தான் இவ்வாறு திருவுருக்கொண்டு சிருட்டியாதி பஞ்சகிருத்தியங்களையுஞ் செய்து அளத்தற்கரிய சிவவிரதங்களுள் அம்பிகைபூசித்த மகாசிவராத்திரியின் மகிமையை நந்திதேவருக்கருளிப் பாவச்செய்தனர்.

## மகா சிவராத்திரி விரதபலன்.

### சிவராத்திரிபுராணம்.

"ஆதியிலம்பிகைநோற்றவிரதமிதன்பெருமையெவராளக்கவல்லார்
சாதிமுறைநெறிதவறுஞ்சண்டாளர்நோற்றிடினுந்தக்கோராகி
மோதிவருங்கடல்புடைசூழுலகில்விரும்பியபோகமுற்றிப்பின்னர்ப்
பூதிதரும்பெரும்பாவக்கடல்கடந்துமுத்திநெறிபொருந்துவாரால்."

ஆவிந்தமறையவர்கட்களித்தாலும்புரவிமகமாற்றினாலு
மேவிந்தசிவநிசிபோற்பலன்றாராவெனவியந்துவிண்ணிரேங்கு
மாவிந்தநடைபயின்றுவந்தனையகரியுரித்தவரதன்வாமக்
கோவிந்தனரவிந்தன்கோவிந்தன்முகநோக்கிக்கூறிப்போனான்."

(இன்னும் வரும்).

சு. நடேசதேசிகன்.

தமிழ்ப்பண்டிதன்.

# பசுவைப்பற்றிய ஆராய்ச்சி.

உலகில் அநேகர்கள் எல்லாமிருகங்களைப்போலவே பசுக்களு மொருவகை மிருகமெனக் குறித்திருக்கின்றார்களாதலால், அப்பசுக் களின் மகத்துவத்தை யியன்றமட்டும் ஆராய்ச்சிசெய்து எழுதியி ருக்கிறது.

பசுக்களைப்பாதுகாத்துப் பூசிப்பது சிவதருமங்களுளொன்றுமெ ன்று அகத்தியமகாமுனிவருக்குக் குமரக்கடவுள் உபதேசித்தருளிய தாகச் சிவதருமோத்தரத்திற் கூறியிருக்கிறது. அதனையிங்கே பின் னர் விரித்தெழுதப்படும்.

பசுக்களின் சாணமும் நீருமே உலகிற்பயிர்கள் விருத்தியாய் விளைவதற்குச் சிறந்தவுபகரணமாயிருக்கின்றன. திருவள்ளுவநாய னாரும், "ஏரினுநன்றாலெருவிடுதல்" எனக்கூறியருளினர். விளைநிலங் களிலே பசுக்கள் சுவாசத்தைவிடுதலும், படுத்துக்கிடப்பதும், நீருஞ் சாணமும்போல மிகப்பயன்தருமென உழவர்களுங் கூறுகின்றார்கள். இவைகளின் பஞ்சகௌவியங்கள், ஆலயங்கட்கும், யாகமுதலியகிரி யைகட்கும், பரிசுத்தஞ்செய்வதற்கும், வைத்தியநூல்களிற்கூறிய படி அநேகவிதமருந்துகள் செய்வதற்கும் உபயோகமாயிருக்கின்றன. இவைகளன்றிக் கோரோசனையும் ஆலயங்கட்குபயோகமாகுவதன்றி அநேகவித மருந்துகட்கும் உபயோகமாகின்றது. "பாலுநெய்யு முணலுற்றார் பாரிற்கொடிய பிணியற்றார்" என்றபடி அவைகளை யுண்போர்க்குப் பிணியில்லையென்பது, யாவருமறிந்தவிஷயமே. நெய் யும்பாலுஞ்சேராத போஜனமும் பலகாரமும் பிரயோசனமில்லை; ஔ வையாரும்;—"நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லாவுண்டிபாழ்" எனக் கூறியிருக்கின்றார்.

இன்னும் பஞ்சகௌவியங்கூட்டும் விதிப்படி அவைகட்குரியதே வதைகளை யவைகளில் மந்திரங்களினால் ஆவாகனஞ்செய்து பூஜித்துக் -டியருந்தினாற் பாவநீங்குமென்று நூல்களிற் கூறியிருக்கின்ற

னர். திருவிளையாடற்புராணம், வரகுணனுக்குச் சிவலோகங்காட்டிய படலத்தில், "ஆனைந்தாவின மைமணிக்கோடுதோய்த்த நளிர்புனல்குடித்தும்" எனக்கூறியிருத்தல் காண்க. பஞ்சகௌவியங்கூட்டும் விதியைத் தணிகைப்புராணம், அகத்தியனருள்பெறுபடலத்தில் சஉஎ, சஉஅ, சஉக, சநO-ஆங் கவிகளிற்காண்க.

இனி, "ஆபயன்குன்றுமறுதொழிலோர் நூன்மறப்பர்-காவலன் காவானெனின்." எனக்கூறிய குறளுரையிற் பசுக்கள் பால்குன்றிய வழித் தேவர்கட்கு வேள்விசெய்து அவிகொடுப்பதில்லை யென்பதும், அதுகொடுத்தற்குரியவர் மந்திரம், கற்பம் முதலிய நூல்களையோத மாட்டாரென்பதும், வேள்வியில்லையாகவே மழையும் பெய்யாதென்பதும் விளங்கக்கூறியிருக்கின்றார்; இதனால், உலகில் மழைபெய்வதற்குப் பசுக்கள் இன்றியமையாச் சிறந்தகாரணமாயிருக்கின்றன வென்பது கருத்தாயிற்று.

இன்னும் இப்பசுக்களின் மகிமையைக்கூறுங்கால், பெரியபுராணத்திலே சண்டேசுரநாயனார், சேய்ஞலூர்ப்பசுக்களைமேய்க்கின்ற ஓரிடையன் ஒருபசுவைக் கோல்கொண்டடிக்கக்கண்டு, "ஆவின்பெருமையுள்ளபடியறிந்தார்" ஆகிய அந்நாயனார் அவ்விடையன்மீது கோபமுற்று அவனைவிலக்கிப் பசுக்களின் அங்கங்களிலே தீர்த்தங்கள், முனிவர்கள், தேவர்களெல்லாரும் வசித்திருக்கின்றார்கள் ; அன்றியுஞ், சிவபிரான் திருமஞ்சனங்கொள்வதற்குப் பஞ்சகௌவியங் கொடுப்பனவாயும், சிவபிரானணிதற்குத் * திருநீறுண்டாகுஞ் சாணத்தைக் கொடுப்பனவாயும், சிவபிரான் உமாதேவியுடனெழுந்தருளும் வாகனமாகிய ரிஷபதேவர் குலமுள்ளனவாயு மிருப்பனவாகும்; இம்மகிமையுள்ள பசுக்களைமேய்க்குந்தொழிலை நீ இனி விட்டுவிடுவாய்! நானே மேய்க்கின்றேனென்று கூறி யவனைவிலக்கி, அவ்வூர் மறையோர் இசைவுபெற்றுக்கொண்டு, கோலுங்கயிறுங்கொண்டு புறப்பட்டு, நல்லபுல்லுள்ள தானங்களிலே கொண்டுபோய் மேய்த்து, நல்லதண்ணீரூட்டி நல்லநிழலிலேதங்குவித்து, மாலைப்போழ்தில் வீடு

* திருநீற்றின் மகத்துவத்தைத் திருஞானசம்பந்தநாயனார் திருநீற்றுப் பதிகத்திலே விரித்துக்கூறியருளியிருக்கின்றது காண்க.

தோறுங் கொண்டுசேர்ப்பாராயினர். இவர் மேய்ப்பதற்குத்தொடங்கிய நாண்முதலாக "ஆயநிரையின் குலமெல்லாமழகின் விளங்கி மிகப்பல்கி - மேயவினியபுல்லுணவும் விரும்புபுனலுமார்தலின்-மேலயமனங்கொள் பெருமகிழ்ச்சி யெய்தியிரவு நண்பகலுந்-தூயதீம்பால் மடிபெருகிச் சொரியமுலைகள் சுரந்தனவால்." என்றபடி கறவாமலே தாமேபால் சொரியக்கண்டு, அதனைச் சிவபிரானுக்குத் திருமஞ்சனமாகும்படிசெய்து சிவபூசை செய்தருளினாரென்றும், "இறையோனடிக்கீழ் மறையவனு மெடுத்துத் திருமஞ்சனமாட்டு - நிறைபூசனைக்குக் குடங்கள்பா னிரம்பச் சொரிந்து நிரைக்குலங்கள் - குறைபாடின்றி மடிபெருகக் குவிந்தமுலைப்பால் குறைவின்றி - மறையோர் மனையின் முன்புதரும் வளங்கள்பொலியவைகுமால்." என்றபடி அப்பசுக்களிருந்தனவென்றுங் கூறியிருக்கின்றது.

இவர்மாத்திரமோ! ஸ்ரீகைலாயத்திலே நந்திபெருமான நுள்பெற்றிருந்த ஒரு சிவயோகியார் அகத்தியமகாமுனிவரைக் காண்பதற்காகத் தென்றிசைநோக்கிப் புறப்பட்டுக் கேதாரமுதலிய தலங்களைத் தெரிசித்துத் திருவாவடுதுறையிலும்வந்து சுவாமிதெரிசனஞ்செய்து காவிரிக்கரைவழி செல்லும்போது, அவ்வாற்றங்கரைக்கருகிலிருக்கின்ற வனத்திலே மேய்ந்துகொண்டிருந்த பசுக்கள் தங்களை மேய்ப்பவனாகிய சாத்தனூரிடையன் மூலன் என்பவன் இறந்துகிடக்கக் கண்டு, அவன் சரீரத்தைச்சுற்றிவந்தணைந்து சுழன்று கதறியழுவதைக்கண்டு, அச்சிவயோகியார் அப்பசுக்களின் மகிமையறிந்தவராதலால் அவைகளின் துயரத்தை நீக்கவேண்டுமென்று ஆலோசித்து, இவ்விடையனுயிர்பெற்றெழுந்தாலன்றி யிப்பசுக்கள் துயரநீங்காவென்று திருவுளங்கொண்டு, தம்முடைய திருமேனிக்குக் காவல்செய்து, தாம் அவனுடைய சரீரத்திலே பிரவேசித்துத் திருமூலராயெழுந்தார். உடனே பசுக்களெல்லா மிகமகிழ்ந்து நாத்தழும்ப நக்கி மோந்து கனைத்துவாலெடுத்துத் துள்ளிமேய்ந்தன; பின்பு அத்திருமூலநாயனார்கண்டு திருவுளமகிழ்ந்து, "ஆவினிரைமகிழ்வுறக் கண்டணிகூர்ந்த வருளினராய் - மேவியவை மேய்விடத்துப்பின்சென்றுமேய்ந்தவைதாங் -காவிரிமுன் றுறைத்தண்ணீர் கலந்துண்டு கறையேறப்-பூவிரிதண் புறவினிழ லினிதாகப் புறங்காத்தார்." என்றபடி, அவை

கள் மேயுமிடத்திற் சென்று மேய்த்துக்காத்து அந்திக்காலத்திலே அவைகளைச் சாத்தனூரிலே வீடுகடோறும் புகச்செலுத்தினாரெனத் திருமூலநாயனாரும் பசுக்களின் மகிமையை வெளிப்படுத்தியிருக்கின்றார். இதனைப்பெரியபுராணத்தில், திருமூலநாயனார் புராணத்திற் காண்க.

இனிச், சிவதருமோத்தரத்திற் கூறியவாறு பசுக்களினுற்பத்தியும், அவைகளின் மகிமையும், அவைகளாலெய்தும் பயனும் வருமாறு:—

திருக்கைலாயமலையிற் சிவபெருமான் சந்நிதியிலே ரிஷபமிருக்கின்றது. அதன்பக்கத்தே, நந்தை, சுபத்திரை, சுரபி, சுசீலை, சுமனை யென ஐவகைப் பசுக்களிருக்கின்றன; அவைகளைச் சிவபெருமான், உயிர்கட்கிரங்கிப் பூவுலகிற்பிறக்கும்படி செய்தலால், அவைகள் பாற்கடலிற்பிறந்துவந்து, இவ்வுலகில் வாழ்வார்க்குத் துன்பங்களை நீக்கி வரங்களைக்கொடுக்கின்றன. நந்தை கபிலநிறமும, சுபத்திரை கருமைநிறமும், சுரபி வெண்மைநிறமும், சுசீலை தூமநிறமும், சுமனை தாமிரநிறமும பெற்றிருக்கும்.

இவ்வைவகைப்பசுக்களின் பெயரைக்கூறிப் பூசைசெய்து அவற்றினுண்டாகிய, பால், தயிர், நெய், கோமயம், கோசலம், கோரோசனையாகிய அறுவகைப் பொருளையுஞ் சிவபெருமானுக்கு எப்பொழுதும் அபிடேகஞ்செய்யவேண்டும. (கோரோசனை எப்பொழுதுங் கிடைத்தலருமை நோக்கி யதனைவிடுத்துப் பெரும்பான்மையாகப் பஞ்சகௌவியம் எப்பொழுதுங்கிடைப்பதால் தேவாரத்தில், "ஆவினுக் கருங்கலமரனஞ்சாடுதல்" எனக்கூறியருளினர்.)

பசுக்களின் கொம்பினடியிலே பிரமனும், திருமாலுமிருப்பார். கொம்பினுனியிலே கோதாவிரி முதலிய தீர்த்தங்களுஞ் சராசரமாகிய உயிர்களுமிருப்பன. சிரத்திற் சிவபிரானிருப்பார்; நெற்றியிற் சத்தியிருப்பாள், மூக்குநுனியிற் குமரக்கடவுளிருப்பார்; மூக்கினுள்ளே இந்திரன்முதலிய தேவர்களிருப்பார்; இரண்டு காதுகளினடுவில் அச்சுவினிதேவர்களுங், கண்களிடத்துச் சூரியனுஞ் சந்திரனுங்,

தந்தத்தில் வாயுவும், நாவில் வருணனும், நெஞ்சிற் கலைமகளும், மணிகளினிடத்தில் இயமனுமியக்கரு மிருப்பார்கள். உதட்டில் உதையாத்தமனத்துக்குரிய சந்திதேவதையும், கழுத்தில் இந்திரனும், முரிப்பில் அருக்கரும், மார்பிலே சாத்தியரும், நான்கு கால்களில் வாயுவும், முழந்தாளிலே மருத்துவருமிருப்பார்கள்; காற்குளம்பு நுனியில் நாகர்களும், குளம்புநடுவிற் கந்திருவரும், குளம்பின்மேலிடத்தில் அரம்பையரும், முதுகில்உருத்திரரும், சந்துகளில்அட்டவசுக்களும், அரையிற் பிதிரர்களும், யோனியிற் சத்தமாதர்களுமிருப்பார்கள். அபானத்தில் இலக்குமியும், அடிவாலில் நாகாதிபருமிருப்பார்; வாலு ரோமத்தில் சூரிய னொளியும், நீரில் ஆகாயகங்கையும், கோமயத்தில் யமுநாநதியுமிருக்கும்; உரோமங்களில் மாதவர்களிருப்பார்; வயிற்றிற் பூமிதேவியிருப்பாள்; கொங்கையில் எல்லாக்கடல்களுமிருக்கும்; வயிற்றிற் காருகபத்தியமும், இருதையத்தில் ஆகவநீயமும், முகத்திலே தக்ஷிணாக்கினியும், எலும்பினிடத்துஞ் சுக்கிலத்தினிடத்தும் யாகத்திற் பொருந்திய கிரியைமுழுதும் பொருந்தும். எல்லாவங்கத்திலுங் கற்புடை மடவார்களிருப்பார்கள்.

இவ்வாறு தெய்வங்களெல்லாம் ஒவ்வொரு அவயவத்திலும் வசிப்பதனால் அப்பசுக்களைத் தேவாலயமென்றே கொள்ளல்வேண்டும். இம்மகிமைபெற்ற பசுக்களைமேய்த்தாலும், நடத்தினாலுங் கையிற் புனமுருக்கங்கோல்கொண்டு மெல்லமெல்ல வொற்றியொற்றிக் கெச்ச கெச்ச வென்று செலுத்தவேண்டும்; இவ்வாறுசெய்வார் சிவலோகத்தில் வாழ்வார். இரக்கமில்லாமற் கோபித்து வன்சொல்லால் அதட்டியடித்து வருத்துகின்ற அறிவில்லார் தீக்குழியாகிய நரகில் வாழ்வார்கள்.

இப்பசுக்களைப் பூசைசெய்வார்கள் மேலான பதவியடைவார்கள். பூசைசெய்யாமலும், வணங்காமலுமிருப்பவர்கள் தீவாய்நரகில் வாழ்வார்கள். புல்லைநாவிற்கொடுத்து வணங்கி வாழ்த்துவோரும் இருவினைநீங்கிச் சிவலோகத்திற் சுற்றத்தோடு வாழ்ந்திருப்பார்; திருமந்திரத்தும், "யாவர்க்குமாம் பசுவிற் கொருவாயுறை" என்றருளியிருக்கின்றார்.

பால், தயிர் முதலியவைகளைச் சிவபிரானுக் குபயோகமாகச் செய்தோர் சிவலோகம்பெறுவார். தாங்களே புசிப்போர் தீவாய்நர கஞ் சேர்வார்கள். இவைகளைக் கையாற்றொட்டாற் சகலபாவமுஞ்

இனிப், பசுக்கள்வசிக்குங் கொட்டிலைக் கூறப்படும்:—கீழ்த்திசை யிற் பொருந்தவைத்துச் சுவர்ப்புறத்தே நான்குதிசையிலும் தேவர் கட்கிசைந்த இடஞ்செய்யவேண்டும். கீழ்த்திசையிலே துர்க்கைக் கும், தென்றிசையிலே பஞ்சகௌவியங்கட்கும், மேற்றிசையிலே கணபதிக்கும், வடதிசையிலே சந்திரனுக்கும், நந்திக்குங் கோயில் செய்யவேண்டும்.

கீழ்த்திசைவாயிலிருபக்கத்திலும் நந்தி மாகாளரென்றுசொல் லப்படுமிருவரையும் பிரதிட்டைசெய்யவேண்டும். மதிலின்மேல் இடபங்களையமைத்து வைக்கவேண்டும். சுண்ணச்சாந்தின்றி மண் சாந்தாற் செய்வதாயிருந்தால், நதிக்கரைமண், தடாகக்கரைமண்,வில் வத்தடிமண், புற்றுமண், அரசடிமண் இவைகளைப் பஞ்சகௌவியத் துடன் குழைத்துச் சேர்த்துக்கொள்க.

கொட்டிலைச்செய்தபின் அயனரியரனார் மூவர்க்கும் அவரவர்க் குரியபடி இடஞ்செய்து தாபிக்கவேண்டும். முதிர்ந்தகன்றுகள் தங் குமிடமும், இளங்கன்றுகள் தங்குமிடங்களும், நோய்நீக்குமிடங்க ளுஞ் செய்யவேண்டும். நோயுற்றபசுக்களை நோய்நீக்குமிடத்திற் புகு வித்து அவசரப்படாமலே மருந்துகொடுத்து நோய்தீர்க்கவேண்டும். நாற்றிசையிலும் வாயில்செய்து பின்பு சுண்ணாம்பினாற்றீற்றி யழ காகச் செய்யவேண்டும்; கொதுகுகள் பொருந்தாமற் கோமய கோச லங்களைத் தினந்தோறுஞ் சுத்திசெய்யவேண்டும் ; கொட்டிலுள்ளே அகிற்புகை முதலிய தூபங்களையுந் தீபங்களையும், நிறைத்துவைத்து மலர்மாலைதூக்கி யலங்கரித்துப் பசுக்களை யுள்ளே புகச்செய்யவே ண்டும்.

புகச்செய்யும்போது சுவஸ்தி என்றசொல்லைச் சொல்லிப் பை யப் பையப் புகச்செய்யவேண்டும். வள்ளைக்கொடியாற்செய்த பாய்

விரித்திருக்கவேண்டும். நல்லபுல்லையு முணவாகச் செய்திருக்கவேண்டும். அட்டமிதோறு நீராட்டிப் பூவாலருச்சித்துத் தூபதீபங்காட்டி அன்னமுதலிய நிவேதனஞ்செய்து தண்ணீரூமூட்டிப் பசுக்களை மகிழ்ச்சியுறச் செய்யவேண்டும். பசுக்களுக்குக் கொட்டிலைச் செய்தவர்கள் சூரியனுள்ளவரையுஞ் சிவலோகத்தில் எல்லாப்போகத்தையு மநுபவித்திருப்பார்கள். சிவபிரான் றிருமுடிக்குப்பான் முதலியவற்றையபிடேகம் செய்பவரும் அடியார்களுக்குப் பாயசத்துடன் அமுதூட்டினவர்களும் சஞ்சிதமுதலிய வினைகணீங்கச் சிவசாயுச்சியம் பெறுவார். பசுக்களை விதிப்படி உலகத்தார் காக்கக்கடவர். காவாதவர்களை அரசன் கோபித்துக் காக்கும்படிசெய்தாற் சிவலோகத்தை யடைவான். அப்படிக்காக்கும்படிசெய்யாத அரசன் நரகத்தையடைவான். முதுவேனிற்காலமுதலிய காலங்களிற்குளிர்ச்சியுள்ள மலைப்பக்கமுள்ள வனமுதலியதானங்களின் மேய்த்துக்கொல்லவரும் புலியையுங் கொல்லவேண்டும். பசுக்கள் தினவுநீங்க உரிஞ்சுதற்குரிய கற்றூணாகிய † ஆவுரிஞ்சுதறியை மந்தைமுதலிய இடங்களிலே நாட்டினவர்களும், பசுக்களைச் சிவபிரானுக்குத் தானங்கொடுத்தவர்களுஞ் சிவலோகத்தி னெடுங்காலமுறைவார். பசுக்களை ஆசிரியனுக்குதவியவர்களு மிப்பலனை யடைவார். சிவபிரானுக்குக்குற்றமற்ற இடபத்தைத் தானஞ்செய்தவர் அவ்விடபத்தின் உரோமமொன்றுக்கு ஆயிரந் தேவவருடஞ் சிவலோகத்திற் புத்திர பௌத்திரருடன் போகநுதுய்ப்பார்கள். இடபத்தை வாகனமாகவேறிச் செலுத்துவோர் நரகத்தையடைவார்; அதனைத்தடுக்காத மன்னவனு நரகத்தை யடைவான். இடபத்தினையு மலட்டுப்பசுக்களையும் பாரமான பண்டங்களைச் சுமக்கும்படிசெய்தவர்களை அரசன்றண்டிக்கவேண்டும். பாரங்களைச் சுமததினோர் அப்பாவநீங்கச் சிவபிரானுக்குப்பதினொருவெள்ளை யிஷபத்தைத் தானஞ்செய்து ஒருவருடம் பசுக்களை மேய்க்கவேண்டும். சிவபிரானாலயப்பணிக்காக இடபங்களைத் தானஞ்செய்தவரும், இளைத்தபசுக்களை வளர்த்தவருஞ் சிவலோகமபெற்று

† ஆவுரிஞ்சுதறிநடுதலை, ௩உ-தருமங்களுளொன்றாகவும், ஆக்களுக்கு இரைகொடுத்தலையும், ௬௨-தருமங்களுளொன்றாகவும்,காஞ்சிப்புராணம்-கழுவாய்ப்படலம் உ௬அ, உ௬௬-ஆஞ்செய்யுட்களிற் கூறியிருக்கின்றார்.

வாழ்வார். கன்றுகள் வயிறுநிறையக் குடித்தபின் பாலைக்கறந்தவர்களும் சிவபுரஞ்சேர்வர். கன்றுக்குக் குறைவாகும்படி பால்கறந்தவர்கள் பசியிருந்துழைளப் பற்றொன்றுமில்லாமல் நரகடைவார்கள்; பின்பு பூமியிற்பிறந்து கடும்பசியுடன் வீடுகடோறுமிரப்பார்கள். சண்டாளர்கள் பசுக்கொட்டிலிற் புகுந்தால் அளவில்லாதகால நரகடைவார்; அவர்க்குப் பரிகாரமில்லை. பகைவர்வந்து பசுக்களைத்திருடவரின் விரைந்துகாக்கவேண்டும்; (இதனைப் பாரதத்தில் நிரைமீட்சிச் சருக்கத்திற் காண்க.) அஃது அரிதாயின் உயிரைக்கொடுத்தாயினும் காத்தவர் சிவலோகஞ்சேர்வர். இவ்வாறே திருத்தணிகைப்புராணம் அகத்தியனருள்பெறுபடலத்திலுங் கூறியிருக்கின்றார். நிரைமீட்சியை மறநிலைபறமெனக் கூறியிருக்கின்றார். பிங்கலநிகண்டு-எசுஉ-ஆஞ்செய்யுளிற் காண்க.

இம்மகிமைபொருந்திய ஒரு பசுக்கன்றின்செய்தி பெரியபுராணத்திற் கூறியவாறுவருமாறு:—திருவாரூரிலே மநுச்சோழமகாராசன் மைந்தன் திருவீதியிற் பவனிவருங்காலத்தில் ஒருபசுக்கன்றுதுள்ளி அவன் றேர்க்காலடியில் வீழ்ந்திறந்துபோயிற்று; அதனைக்கண்ட தாய்ப்பசுக் கதறிவருந்திச்சென்று அரண்மனைவாயிலிற் கட்டியிருக்கின்ற மணியைக்கொம்பினாலடித்தது; உடனே அம்மணியினோசையை மநுச்சோழமகாராசன் கேட்டு வெளிவந்து நடந்ததை விசாரித்துப் பசுவின் வருத்தத்தைநோக்கித் தானும் பெருந்துயாமுற்றான்; அது கண்டு மந்திரிகள்வணங்கி நூல்களில்விதித்தபடி பிராயச்சித்தஞ்செய்யலாகும்; திருவுளந்தளர வேண்டாவென்றுகூறினார்கள். அவ்வரசன் கேட்டு நீங்கள்சொல்லும் பிராயச்சித்தம் இப்பசுவுறுநோய்க்கு மருந்தாகுமா? "மாநிலங்காவலனாவான் மன்னுயிர்காக்குங்காலைத்-தானதனுக் கிடையூறு தன்னாற்றன்பரிசனத்தா-லூனமுறுபகைத்திறத்தாற்கள்வரா லுயிர்தம்மா - லானபயமைந்துந்தீர்த்தறங்காவானல்லனோ." எனக்கூறியிப்பசுவுற்ற துயரத்தையானுமுறவேண்டுமென்று ஒருமந்திரியைநோக்கி இம்மைந்தனை அவ்வீதியிலே கிடத்தித் தேர்ச்சக்கரத்தை யவன்மீதுசெலுத்துவாயென்றுகூற அம்மந்திரி அஞ்சி அவ்வாறுசெய்யாது தன்னுயிரைநீக்கினான்; உடனே "ஒருமைந்தன் றன் குலத்துக்குள்ளானென்பது முணரான் - றருமந்தன்

வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்-பருமந்தன்றேராழியுறவூர்ந்தான்மநுவேந்த - னருமந்தவரசாட்சியரிதோமற்றெளிதோதான் ” என்றபடி தன்மைந்தனைத் தானேகொண்டுசென்றுவீதியிற் கிடத்தித் தன்றேர்ச்சக்கரம் அவன்மேலே செல்லநடத்தினன். இதனைக்கண்ட “ மண்ணவர்கண்மழைபொழிந்தார் வானவர்பூமழைபொழிந்தார்” சிவபிரானும் இடபாரூடராய்க் காட்சிகொடுத்தருளினர். “அந்நிலையே யுயிர்பிரிந்தவான்கன்றுமவ்வரசன் - மன்னுரிமைத்தனிக்கன்றுமந்திரியுமுடனெழலு-மின்னபரிசானெனென் றறிந்திலன் வேந்தனும் யார்க்கு - முன்னவனே முன்னின்றான் முடியாதபொருளுளதோ” என்றபடி சுங்கன்றும், அரசன்மைந்தனும், மந்திரியுமுயிர்பெற்றெழுந்தார்கள்.

சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர்,

சைவநூற் பரிசோதகர்.

# புத்தகக்குறிப்பு.

**சிவரகசியம்:**—இந்நூல் முதலிரண்டு அம்சங்களும் மூன்றாவது அம்சத்தின் முதற்பாகமும் பிர்மஸ்ரீ மருவூர்-கணேசசாஸ்திரியாரவர்களால், வடமொழியினின்றும் தமிழ்நடையில் மொழிபெயர்க்கப்பெற்று, கயப்பாக்கம் ஸ்ரீமாந்-சதாசிவ செட்டியாரவர்களால் அச்சிடப்பெற்று வெளிவந்திருக்கிறது. இது சைவசமய சம்பிரதாயங்களையும், சிவஸ்தோத்திரங்களையும், ஸ்தலாரண்ய தீர்த்தமாகாத்மியங்களையும், சிவபூஜைமகிமை முதலியவற்றையும் கதைப்போக்காக யாவருமுணரும்படி யெளியநடையில் எழுதப்பெற்றிருப்பதால், சைவசமயசம்பிரதாயங்களை யறியவிரும்பும் சிவநேசச்செல்வர்களால் மிகவும் பாராட்டத்தக்கது. இதன் விலைவிவரம் வேண்டுவோர், கயப்பாக்கம் ஸ்ரீமாந்-சதாசிவ செட்டியாரவர்களுக்கு, சென்னை தங்கசாலைத்தெரு, 497-நெம்பர் சிவரகசிய மந்திரத்துக்கு எழுதிக்கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்.

**ஸ்ரீமத்-சுந்தரமூர்த்திஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத்திருப்பதிகங்கள்:**—காஞ்சீபுரம் மஹாவித்வான் ஸ்ரீமத்-இராமாநந்த யோகிகள் எழுதியபதவுரை, பொழிப்புரை, கருத்துரை, விசேடவுரைகளுடன், ஸ்ரீமாந்-பு. சண்முகமுதலியாரவர்களால் சஞ்சிகை ரூபமாக அச்சிடப்பட்டு முதலிரண்டு சஞ்சிகை வெளிவந்திருக்கின்றன. பிரிண்டிங் 32-பக்கங்கொண்ட சஞ்சிகை1-க்கு விலை அணா-2. வேண்டுவோர், ஸ்ரீமத்-பு. சண்முகமுதலியாரவர்கள், நெ. 51-ஆறுமுகம் தெரு, ஜார்ஜ்டவுண், சென்னை என்ற விலாசத்துக்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

**இளைஞர்தாவரநூல்:**—இது, ஆல்காட்ப்ரீஸ்கூல் டிரெயினிங் வகுப்புகளுக்கு டைரெக்டராயிருந்து தற்காலம் வோரீஸ்காலேஜ் லோயர்ஸ்கூல் சூப்பர்வைசராயிருக்கும் Mr. ம. சி. இராஜா அவர்களால் எளிய தமிழ்நடையில் எழுதப்பெற்றது. இது தாவரநூலுணர்ச்

சிக்கு முதலில் வேண்டிய இன்றியமையாத விஷயங்களை இளைஞர்க ளுக்கு இனிது விளங்கும்படி சுருக்கமாகவும் தெளிவாகவும் எழுதி, 48-பக்கமடங்கிய சிறிய புத்தகமாக அச்சிடப்பட்டு வெளிவந்திருக் கிறது. இதில், 1. பிரவேசம், 2. விதைமுளைத்தல், 3. வேர், 4. அடி மரம், 5. இலை, 6. புஷ்பம், 7. கனியும்வித்தும், 8. விதைகள் ஆங் காங்குப் பரவிமுளைக்கும் விதம், 9. மற்றைமரங்களில் தோன்றிவ ளர்கின்ற செடிகள் முதலிய, 10. செடிகளின் வகைஎன்னும் விஷ யங்கள் அடங்கியுள்ளன. இதன்விலை அணு-6.

**வேதாந்ததீபிகை என்னும் மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகை:**—இது ஸ்ரீ அகோபிலமடத்தின் சிஷ்யசபையாரால் டிம்மிநாற்பதுபக்கமடங் கிய சஞ்சிகையாக வெளியிடப்பெற்று முதலிரண்டு சஞ்சிகைகள் வெளிவந்திருக்கின்றன. தற்காலம் வெளிவராமலிருக்கும் சம்ஸ்கி ருத நூல்களிலும், தமிழ்நூல்களிலும் அழுந்திக்கிடக்கும் விசிஷ்டா த்வைத மதத்தின் விசேஷதத்வார்த்தங்களை அந்யமத தூஷணமில் லாமல் வெளியிடுவது இதன்நோக்கமெனத்தெரிகிறது. இதில் விசிஷ் டாத்வைதமத சம்பந்தமான உபந்யாசங்களும், வேதாந்தார்த்த விசேஷ விசாரங்களும் புராணகதைகளும் ஆசார்யசரித்திரங்கள்முத லிய சபைக்கு வேண்டுவனபிறவும் வெளியிடப்படுகின்றன. இதற்கு விஷயப்ரதானம் செய்பவர்கள் உபயவேதாந்த பாரங்கதர்களாகவும் சாஸ்த்ரசம்பந்நர்களாகவும் காணப்படுதலால் பாரலௌகிக புருஷா ர்த்தங்கள் ப்ரமாணங்களைக்கொண்டு இதில் நன்கு விவகரிக்கப்படு மென்று தோன்றுகின்றது. வேண்டுமிடங்களில் சம்ஸ்கிருதவசனங் கள் கிரந்தாக்ஷரங்களால் எழுதப்பெற்றிருப்பதால் ஸம்ஸ்கிருதம்வல் லவர்களுக்கு எளிதிற் பொருள்விளங்குவதாகவும், அதுவல்லாதார் க்கு நாளடைவில் அவ்வன்மையுண்டாதற்கேதுவாகிய வாக்வல்ல பத்தை யுண்டாக்கவல்லதாகவுமிருக்கிறது. இது மதசம்பந்தமான கல்வியறிவையும் ஒழுக்கத்தையும் வளர்த்தற்கு ஏதுவாயுள்ளது. இத ன் வருஷசந்தா ரூ 2. தனிப்பிரதி அணு-3. வேண்டுபவர்கள் **வே தாந்ததீபிகைமானேஜர், மயிலாப்பூர், சென்னை** என்னும் விலாசத்து க்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

**ஸ்தோத்ரமஞ்சரி:**—இது யாழ்ப்பாணத்து நல்லூர் உபயவேதா கமபண்டிதர் ஸ்ரீமாந்-ந. வே. கனகசபாபதி ஐயரவர்களால் தொகுக்

கப்பெற்றது. இது நித்திய நியமமாகவேனும் புண்ணியகாலங்களி லேனும் ஆலயதர்சனம் செய்யுங்கால் விநாயகக்கடவுள் முதலிய மூர்த்திகளைத் துதித்தற்குரிய தோத்திரச்செய்யுள்களைத் தொகுத்தும் சிவாலயதரிசனவிதியும், சிவபூசைக்குறுப்பாகிய சிவ புண்ணியங்களும் பிறவும் விளங்குமாறு மேற்கோள் காட்டிச் செவ்வியநடையி லெழுதியும் முடிக்கப்பெற்றிருக்கிறபடியால் சைவசமய சம்பிரதாய நித்யகர்மாநுஷ்டான விதிகளையறிய விரும்புவோர்க்கு மிகவும் பயன்படத் தக்கது.

1 மாறன்கோவை, 2. ஸ்ரீஆண்டாள்பிள்ளைத்தமிழ், 3. திருவேங்கடவுலா, 4. அழகர்கிள்ளைவிடுதூது, 5. ஆண்டாள்சந்திரகலாமாலை என்னும் இப்புத்தகங்கள் ஐந்தும் கோயம்புத்தூர் பூளைமேடு ஸ்ரீமாந்-மு. வேணுகோபாலசாமி நாயுடு அவர்களால் பிழையறப்பரிசோதித்து அச்சிற் பதிப்பிக்கப்பெற்று வெளிவந்துள்ளன. இவை தமிழிலக்கியங்கற்குமாணவர்களுக்குப் பயன்படத்தகுவன.

இராமாநுஜதாசர்சரிதை:-இது 1028-செய்யுளடங்கிய 18-சருக்கங்களாக அரியக்குடி,சா. கி. அரங்கநாதச்செட்டியாரால் இயற்றப்பட்டு ஷெயார் குமாரர் ஸ்ரீமாந்-சா. கி. ரெ. இலக்குமணச்செட்டியாரவர்களால் பதிப்பிக்கப்பெற்று வெளிவந்திருக்கிறது. இதனால் சரித்திரநாயகராகிய ராமாநுஜதாசர் வைஷ்ணவசமய சம்பிரதாயப்படியொழுகி நற்கதியடைந்தாரென்பதும் வேண்டும்பிறவும் சொல்லப்பட்டிருக்கின்றன.

சித்தாந்தசிகாமணி:—இது வீரசைவசித்தாந்த மிணிதுவிளங்குமாறு துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகளால் வடமொழியினின்று தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. இதற்கு அச்சமயவுண்மைகளை நன்குணர்ந்த ஸ்ரீமாந்-செ. நாகிசெட்டியாரவர்களா லெழுதப்பெற்ற பதவுரை விசேடவுரைகளுடன் விஷயசூசனம் சிவப்பிரகாசசுவாமிகள் வரலாறுமுதலிய பிறவும்சேர்த்து நன்குபதிப்பிக்கப்பட்டு வெளிவந்திருக்கிறது. இது வீரசைவ சித்தாந்த தத்வார்த்தங்களைப்பற்றியறியவிரும்புவோர்க்கு மிகவும் பயன்படத்தக்கது. இதன்விலை ரூ 2.

பத்திராதிபர்.

# மதுரைத் தமிழ்ச்சங்கம்.

## இச்சங்கத்தார் 1911-ஆம் சாதாரண ஆம் தைமீ 10, 11, 12-தேதிகளில் நடாத்திய தனித்தமிழ்ப் பரீட்சைகளில் தேறிப் பரிசும், யோக்கியதா பத்திரமும் பெறும் மாணாக்கர்களின் விவரம்.

### பிரவேசபண்டித பரீக்ஷை.

### II-வது வகுப்பு.

1. 1. K. *இராமானுஜையங்கார், சேதுபதி செந்தமிழ்க் கலாசாலை மதுரை.*

2. 5. *சே. ரா. திம்மப்பையர், சமயசங்கிலிகிராமம், சேலம்.*

3. 2. K. S. *வெங்கட்டராவ், சேதுபதி செந்தமிழ்க் கலாசாலை மதுரை.*

4. 3. *வி. சிங்காரவேலங்கராயர், இளங்காடு, தஞ்சை.*

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௧.] சாதாரண-ஹு மாசிமீ [பகுதி-௪.

## ஸ்ரீராமவருணனை

சீதாபிராட்டியைத்தேடி இலங்கையிற் சென்ற அநுமார் இலங்கையிலுள்ள ஊர்கடோறுஞ் சென்று சென்று தேடியும் அப்பிராட்டியைக் கண்டிலராய் அயலிலுள்ள சோலை யொன்றிற் புகுந்தார் புகுந்து பலதிசைகளிலுந் தேடிப்பார்த்தார். பார்த்தபோது உடலும் மெலிந்து துயரும் மிகுந்து வருந்தியிருந்த பிராட்டியைக் கண்டார். கண்டு பெருமகிழ்ச்சி கொண்டார். பிராட்டி தம்மை இராமருடைய தூதர் என்று நம்புமாறு தம்முருவத்தையுங் காட்டி ஸ்ரீராமருடைய சுவரூபம் முதலியவைகளையும் வேறுவேறாகக் கூறினார். கூறுமாறு சொன்ன தூதுரைகளையுங் கூறினார்.

அவர் கூறியவைகளையெல்லாம் வான்மீகிமுனிவர் தமது இராமாயணத்திலே விஸ்தாரமாக விரித்துக்கூறினர். கம்பநாடரோ அவற்றுள்ளே சிலவற்றை எடுத்துக்கொண்டு தாமுஞ் சிலவற்றைச்சேர்த்துத் தமிழ்நாட்டிற்குந் தமிழ்க்காப்பிய நடைக்கும் ஏற்குமாறு ஸ்ரீராமரைப் பாதாதிகேசமாக வர்ணிப்பாராயினர். பெரும்பாலும் அவ்வருணனைகளெல்லாம் உவமாலங்காரபேதமாய் விளங்கும்.

### உபநியாசம்.

படியெடுத் துரைத்துக் காட்டும் படித்தன்று படிவம் பண்பின்
முடிவுள வுவமைக்கெல்லா மிலக்கண மொழியு முன்னர்த்
துடியிடை யடையாளத்தின் றொடர்வையே தொடர்தியென்று
அடிமுதன் முடியீறாக வறிவுற வநுமன் சொல்வான். (உருக்காட்டு படலம்.)

படி=உவமை. துடியிடை=விளி. அடையாளத்தின் தொடர்வையே தொடர்தி என்று=அடையாளத்தின் தொடர்ச்சியை விடாமல் அநுசரித்து நினைதி என்று. தொடர்வையே என்பது நாம் வைத்திருக்கும் அச்சுப்பிரதியிலே தொடரவை என்று வேறுபட்டிருக்கின்றது. கம்பநாடர் இந்த உபநியாசத்தின் பின் பாதந்தொடங்கி வருணிப்பர்.

பாதவருணனை.

*சேயிதழ்த் தாமரை யென்று சேணுளோர்*
*ஏயின ரதன்றனை யெளிய தில்லையால்*
*நாயகன் றிருவடி குறித்து நாட்டிறிற்*
*பாய்திரைப் பவளமுங் குவளைப் பண்பிற்றால்.*

சேணுளோர் ஏயினர்=தூரத்துள்ளார் கூறினர். ஒருகாலுங் காணுதவர் என்பது போதரச்சேணுளோர் என்றார். அதன்றனை=அதனை ஒத்ததாய்.

வான்மீகி முனிவரோ ஸ்ரீராமரைப் பாதாதிகேசமாக வர்ணித்துச் சென்றாரல்லர். அவர் ஸ்ரீராமருடைய பேரழகு, குணம், பிரதாபம் முதலியவைகளை முன்னர்க்கூறி அப்பால் அவயவங்களினுஞ் செல்வர். எப்படியெனிற் கூறுதும்.

ஸ்ரீராமபிரானே எவர்மனத்தையும் வலிந்து கவர்ந்திழுக்கும் பேரழகுடையவர். நாகரிகமும் நல்லுருவமுமுடையவர். மேனியின் காந்தியாற் சூரியனை ஒப்பவர். பொறுமையினாற் பூமியை ஒப்பவர். புத்தியினாற் பிருகற்பதியை ஒப்பவர். எங்கும்பரந்த பெருங் கீர்த்தியினால் இந்திரனை ஒப்பவர். தமது குலாசாரங்களைத் தவறாது காக்கும் பெருவிரதசீலர். தமது பந்துசனங்கள்போலச் சகலசனங்களையும் பரிந்தோம்பும் பெருங்கருணையாளர். பகைவரைவாட்டும் பண்புடையவர்.

பிராமணர் முதலிய வருணத்தார் நால்வரும் ஒருவரோடொருவர் கலந்து பிறழாவண்ணம் அவரவர்க்கியைந்த ஆசாரங்களை ஆஞ்ஞாபித்துப் பின்னர் அவைகளைப் பரிபாலனஞ்செய்யுந் தருமகர்த்தர். நீதிநெறிகளை நியமித்து அந்நெறிகளிலே செல்லுமாறு யாவ

மையும் நடாத்தும் இறைமாட்சியுடையவர். பெரியோரெல்லாம் பொன்போலப்பேணும் பெருந்தகையாளர். ஏகபத்தினிவிரதத்தை என்றும் மறவாதவர். நன்றி மறவாதவர். எந்தக்காரியங்களையும் இனிது முடிக்குந் தந்திரவழிகளை நன்கறிந்தவர். அந்தணரை வழி பட்டு அரசநீதிகளைக் கேட்டறிந்தவர். இருக்கு முதலிய வேதங்களையும், வியாகரணம் முதலிய வேதாங்கங்களையும் மற்றைச் சாத்திரங்களையும் நன்கு கற்றவர். இன்சொல்லுந் தாழ்நடையும் இழுக்காவொழுக்கமும் என்றும் பெரிதுடையவர்.

விசாலமான புயங்களுடையவர். நீண்ட கரங்களுடையவர். சங்கு போன்ற கழுத்துடையவர். மலர்ந்து விரிந்த முகமுடையவர். தசையினால் எலும்பு மறைந்த மணிக்கட்டுடையவர். பேரிகைத்தொனி போன்ற கம்பீரமான பேச்சுடையவர். கை, கால் முதலிய இரட்டையவயவங்களெல்லாம் ஒன்றுக்கொன்று உயர்வுதாழ்வில்லாதவர். பச்சைப் புல்லுப்போன்ற கருநிறமுடையவர்:

வான்மீகிமுனிவரால் இங்ஙனம் வருணிக்கப்பட்ட உறுப்புக்களுள்ளே புயம், கரம், கழுத்து என்னும் உறுப்புக்களின் வருணனைகளிலே கம்பநாடரும் பெரும்பான்மை ஒத்துச்செல்லுகின்றனர். வான்மீகிமுனிவர் விசாலமான புயம் என்பர். கம்பநாடர் பொருப்பையும் வென்றதென்பர். எனவே அதுவும் அதன் விசாலத்தையே அறிவிக்கும்.

புயவருணனை.

திரண்டில வொளியில திருவின் சேர்வில
முரண்டரு மேருவின் முரிய மூரிநாண்
புரண்டில புகழில பொருப்பொன் றென்றுபோன்
றிரண்டில புயங்களுக் குவம மேற்குமோ. (உருக்காட்டு படலம்.)

இங்கே பொருப்பு என்பதனை எழுவாயாக எடுத்துக்கொண்டு திரண்டில, ஒளியில, சேர்வில, புரண்டில, புகழில, இரண்டில ஏற்குமோ என்னும் பயனிலைகளோடுமுடிக்க. உபமேயமாகிய புயங்களுக்கு உயர்ச்சி தோன்றுமாறு உபமானமாகிய பொருப்பிலே திரண்டிருத்தல், ஒளியுடைமையாதல் முதலியன இல்லை என்று விலக்குதலால் இது விலக்குவமை என்னும் அணியாகும். இவ்விலக்கினாலே திரண்

டிருத்தல், ஒளியுடைமையாதல் முதலியனவெல்லாம் புயங்கண்மாட்டுள என்பது தானே பெறப்படும்.

ஒளி - பிரதாபம். திருவின் சேர்வில - வீரலக்குமியின் வாசமுமில்லாதன. சேர்வு - சேர்ந்திருத்தல், வீடு. மேருவில் - மேருமலைபோன்ற திரியம்பகம் என்னும் வில்லு. இவ்வில்லின் வரலாற்றையும், இவ்வில்லினை, ஸ்ரீராமபிரான் முரித்த செய்தியையுங் கார்முகப் படலத்திற் காண்க. நாண்புரளுதல் - நாணழுந்துதல். ஒன்று ஒன்று போன்று இரண்டில - தம்முள்ளே ஒன்றினை ஒன்றொத்து இரண்டுமலை இல. உவமம் ஏற்குமோ - உவமையாதல் பொருந்துமோ ?

இக்கவியிலே "பொருப்பொன்றொன்றுபோன்றிரண்டில" என்பது அச்சுப்பிரதியிலே "பொருப்பென்றொன்றுபொன்றிரண்டில" என வேறுபாடமாய்ப் போயிற்று. இதற்குரைகூறி முடித்தல் யாவர்க்கும் அரிது.

கரவருணனை.

நீடுறு கீழ்த்திசை நின்ற யானையின்
கோடுறு காமெனச் சிறிது கூறலாம்
தோடுறு மலரெனச் சுரும்பு சுற்றறாத்
தாடுறு தடக்கைவே றுவமை சாலுமோ.

வான்மீகி "நீண்டகை" என்றதைக் கம்பநாடர் அநுசரித்துத் "தாடுறுதடக்கை" என்றார். தாடுறு தடக்கை - முழந்தாளிற் பொருந்திய வளைந்தகை. தாள்+துறு - தாடுறு. தட - வளைவு. கீழ்த்திசை நின்றயானை - ஐராவதயானை. கோடு - கொம்பு. கூறலாம் - (உவமை) சொல்லலாம்.

இக்கவியிலே தாடுறு என்பது "தாடொடு" என்றும், சாலுமோ என்பது "சாலுமே" என்றும் அச்சிற்பாடம் வேறாதலாயிற்று.

களவருணனை.

களம் - கழுத்து.

கடற்படுபணிலமுங் கன்னிப் பூகமும்
மிடற்றினுக் குவமையென் றுரைப்பர் மெல்லியோர்
உடற்பட வொண்ணுமோ வுரகப் பள்ளியான்
இடத்துறை சங்கமொன் றிருக்க வெங்களால்.

மெல்லியோர் உவமை என்றுரைப்பர் எனவும், சங்கம் ஒன்றிருக்க எங்களால் (அஃது) உடற்பட ஒண்ணுமோ எனவும் முடிக்க. "சங்குபோன்ற கழுத்துடையவர்" என்று வான்மீகி கூறியதை இக் கவியும் அநுசரிக்கின்றது.

பணிலம் - சங்கு. பூகம் - கமுகு. மெல்லியோர் - மெல்லிய அறிவாளர். உடற்பட - உடன்பட. ஒண்ணுமோ - இயலுமோ. உரகப்பள்ளியான் - விட்டுணு. உரகப்பள்ளியானிடத்துறை சங்கம் - பாஞ்சசன்னியம். உரைப்பர் என்பது அச்சிலே உரைக்கும் என வேறுபயிற்று.

ஸ்ரீராமபிரானுக்கு மார்பு, மணிக்கட்டு, முட்டி என்னும் மூன்றவயவங்களும் கடினமாயிருக்கும். புருவம், கை, அண்டம் என்னும் மூன்றவயவங்களுந் தாழ்வுடையனவாயிருக்கும். தலைமயிர்நுனி, முழங்கால், அண்டம் என்னும் மூன்றவயவங்களும் உயர்வுதாழ்வற்றிருக்கும். நாபி, மார்பு, வயிறு என்னும் மூன்றவயவங்களும் உயர்ந்திருக்கும். கடைக்கண், விரல், பாதம் என்னும் மூன்றவயவங்களும் சிவந்திருக்கும். பாதரேகைகள், தலையின்மயிர், இலிங்கம் என்பன மூன்றும் மிருதுவாயிருக்கும். குரல், நடை, நாபி என்னும் மூன்றும் கெம்பீரமாயிருக்கும்.

முகத்திலுங் கழுத்திலும் மூன்றுமடிப்புண்டு. புருவம், மூக்கு, கண், காது, உதடு, முலைக்கண், முழங்கை, மணிக்கட்டு, முழந்தாள், அண்டம், மருங்கு, கை, கால், கடிதடம் என்னுமிந்தப் பதினைன்கவயவங்களும் உயர்வு தாழ்வின்றி ஒப்புடையனவாயிருக்கும். உதடுகள் கொவ்வம்பழம்போலச் சிவந்திருக்கும். கன்னங்களிரண்டும் திண்ணியனவாயிருக்கும். மூக்கு உயர்ந்து நீண்டு சுந்தரமாயிருக்கும். கண்கள், பல்லுகள், பாதம், மயிர் தோல் என்னும் ஐந்தும் மிருதுவாயும் ஆனந்தமாயுமிருக்கும். சரீரம், கை, கைத்தலம், கால், விரல், மூக்கு, கண், காது என்னும் எட்டும் நீண்டிருக்கும். நடை யானை, புலி, இடபம் என்பவைகளைப்போல அதிககம்பீரமாயிருக்கும்.

இங்கே ஸ்ரீராமபிரானுடைய நடைக்கு உவமையாகக் கூறிய யானை, புலி, இடபம் என்னும் மூன்றுள்ளே யானையையும் இடபத்தையுங் கம்பநாடரும் அநுசரித்தனர்.

### நடைவருணனை.

புல்ல லேற்ற திருமகளும் பூவும் பொருந்தப் புவியேழும்
எல்லை யேற்ற நெடுஞ்செல்வ மெதிர்ந்த ஞான்று மஃதின்றி
அல்ல லேற்ற கானகத்து மழியா நடையை யிழிவான
மல்ல லேற்றி னுளதென்றான் மத்தயானை வருந்தாதோ.

இங்கே யானையும் இடபமும் ஸ்ரீராமபிரானுடைய நடைக்கு உவமானமாகத் தோன்றுமாறு கூறிய சித்திரம் அறிக.

ஸ்ரீராமபிரானுக்கு முகம், வாய், கரம், பதம் முதலிய அவயவங்கள் செந்தாமரை மலர்போன்று சிறந்திருக்கும். கம்பநாடரோ ஸ்ரீராமபிரானுடைய முகவருணனையிலே தாமரை மலரையும் மறுத்தனர். சந்திரனையும் மறுத்தனர்.

### முகவருணனை.

அண்ணறன் றிருமுகங் கமல மாமெனின்
கண்ணினுக் குவமைவே றியாது காட்டுகேன்
தண்மதி யெதிரென வுரைக்கத் தக்கதோ
விண்ணுடல் பொலிந்தது மெலிந்து தேயுமால்.

இக்கவியிலே விண்ணுடல் என்னும் பாடம் அச்சுப்பிரதியிலே "வெண்மதி" என்று வேறுபட்டுப் போயிற்று.

ஸ்ரீராமர் எங்கும் பரந்த பெருங்கீர்த்தியுடையவர். குற்றமற்ற தந்தை தாயரையுடையவர். சத்தியந்தவறாதவர். இக்குணங்களெல்லாம் இலக்குமணரிடத்திலும் உண்டு.

இதுகாறும் இங்கே கூறிய ஸ்ரீராமபிரானுடைய வருணனைகளெல்லாம் வான்மீகிராமாயணத்திலே சுந்தரகாண்டத்திலே முப்பத்தைந்தாம் சருக்கம் நோக்கியும் வேறே உரைநோக்கியும் எழுதியது எனக்கொள்க. சில விலக்கப்பட்டன.

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

உ

சிவமயம்.

# இராமாவதாரச்செய்யுட் பாடாந்தரம்.

## பாசப்படலம்.

(முற்றொடர்ச்சி.)

தாருகன் குருதி யன்ன குருதியிற் றனிமாச் சீயங்
கூருகிர் கிளைத்த கொற்றக் கனகன்மெய்க் குழம்பிற் றோன்றத்
தேருகக் கையின் வீரச் சிலையுக வயிரச் செங்கண்
நீருகக் குருதிசிந்த நெருப்புக வயிர்த்து நின்றான்.

என்னும் உக-ம் செய்யுளில், "அயிர்த்து நின்றான்" என்பது "உயிர்த்துச் சொல்வான்" எனக் காணப்படுகின்றது. இதன்பின் வரும் செய்யுள் தம்பியை விளித்துக் கூறுவதாகலிற் பின்னையதே பொருத்தமுடைத்து.

வேறு

வென்றே னிதன்முன் சிலவீரரை யென்னும் வெம்மை
யன்றே முடிஇக் கடிதெய்த வழைத்த தம்மா
வொன்றே யினிவெல் லுதறோற்ப தடுத்த துள்ளத்
தின்றே சமையு மிவணிந்திர சித்து வென்பான்.

என்னும் உரு-ம் செய்யுளில், "ஒன்றேயினிவெல்லுத றோற்பதடுத்த துள்ளத்—தின்றேசமையும்" என்பது "ஒன்றேயினிவெல்லுதறோற்ற லடுப்பதுள்ள—தின்றேயமையும்" எனக்காணப்படுகின்றது. இனிவெல்லுதலுந்தோற்றலுமாகிய இரண்டனுளொன்றே நம்மைப் பொருந்துவது. அடையவேண்டியதாய் உள்ளது இப்பொழுதே பொருந்தும். எனப்பொருள் கொள்ளுமிடத்துச் சிறந்துகாட்டலிற் பின்னையதே பொருத்தமுடைத்து.

## பிணிவீட்டு படலம்.

—:(o):—

ஒளிவரு நாகத்துக் கொல்கி யன்றுத
னிளிவர வின்றுபி னெண்ணம் வேறெனுக்
களிவரு சிந்தையாற் காண்டி நங்களைச்
சுளிகலை யாமெனத் தொழுகின்றார் சிலர்.

என்னும் ககம் செய்யுளில், "ஒளிவருநாகத்துக்கொல்கியன்றுத—னிளிவரலின்றுபினெண்ணம் வேறெனு" என்பது "ஒளிவருநாகத்திற் கொல்கிற்றில்லையா—லெளிதரவன்றித னெண்ணம் வேறெனு" எனக் காணப்படுகின்றது. நாகபாசத்திற்கு இது ஒடுங்குதலடைந்திருக்கவில்லை. இதோ எளியதன்று. இதன் மனக்கருத்துப் பிறிதேயாகுமென்று கூறி, எனப்பொருள் கொள்ளுமிடத்து சிறந்துகாட்டலிற் பின்னையதே பொருத்தமுடைத்தென்க.

௯௪

எந்தைய தருளினு மிராமன் சேவடி
சிந்தைசெய் நலத்தினுஞ் சீதை வானவர்
தந்துள வரத்தினுந் தறுகட் பாசமுஞ்
சிந்துவெ னயர்வுறு சிந்தை சீரிதால்.

என்னும் உ௦-ம் செய்யுளில், "சிந்துவெ னயர்வுறு சிந்தை சீரிதால்" என்பது "சிந்துவென்றேருகிற் சீரிதல்லவால்" எனக்காணப்படுகின்றது. முன்னையது பொருட்பொருத்த மின்றாதலிற் பின்னையதே பொருத்தமுடைத்து. "சிந்துவெனுய்வுறுசிந்தை சீரிதால்" எனவும் பாடம்.

௯௫

கடவுளர்க் கரசனைக் கடந்த தோன்றலும்
புடைவரும் பெரும்படைப் புணரி போர்த்தெழ
விடைபிணிப் புண்டது போலும் வீரனைக்
குடைகெழு மன்னனிற் கொண்டு போயினன்.

என்னும் உ௫-ம் செய்யுளில் "விடைபிணிப்புண்டது போலும் வீரனை" என்பது "விடையினிற் சடையவன்போலும் வீரனை" எனக் காணப்படுகின்றது. அநுமனுக்கு விடையை உவமைகூறல் சிறப்பின்மையானும் நாகபாசத்தாற் கட்டுண்டமையானே சிவனைக்கூறல் பொருத்தமாதலானும் பின்னையதே பொருத்தமுடைத்து. நாகமணிந்திருத்தலின் சிவனை ஈண்டு உவமைகூறல் சிறப்புடைத்தென்க.

இன்னும் கஉ௩-ம் செய்யுளில் "வேந்தன் கோயில்வாயிலொடு விரைவிற்கடந்து" என்பது "வேந்தன்கோயினெடுவாயில் விரைவிற்

கடந்து" எனக்காணப்படுகின்றது. பொருட்சிறப்பானே இதுவும் பொருத்தமாதல் காண்க.

## இலங்கையெரியூட்டு படலம்.

——:(×):——

பொன்றி ருத்திய தாதலி லிராவணன் புனைதிர்
குன்ற மொத்துயர் தடநெடு மாளிலைக் கோயி
னின்ற துற்றெரி பருகிட நெரிவுற வுருகித்
தென்றிசைக்குமோர் மேருவுண் டாமெனத் தெரிந்த.

என்னும் சஉ-ம் செய்யுளில், "நின்றதுற்றெரிபருகிடநெரிவுற வுருகி" என்பது "நின்றுசுற்றெரி பருகிடநெறியுறவுருகி" எனக் காணப் படுகின்றது. பொருட்சிறப்புடைமையிற் பின்னையதே பொருத்த முடைத்து.

சி. கணேசையர்.

உ

# மகாசிவராத்திரி மகிமை.

(கருஉ-ம் பக்கத்தொடர்ச்சி.)

சிவராத்திரியானது பல்வகைப்பட்டிலங்குவன. அவற்றுள் மாசி மாதத்துத் தேய்பிறைச் சதுர்த்தசி தினத்தில் மாகசிவராத்திரி ஒன்றே வருஷசிவராத்திரியென்றும், மகாசிவராத்திரியென்றும் பெயர் பெறும். சோமவாரத்தன்று பகலிரவுசேர்ந்த அறுபது நாழிகையும் அமாவாசையிருக்குந்தினமும் சோமவாரத்தன்று சூரியன் அஸ்தமித்ததுமுதல் அன்றிரவு நான்கு சாமமுந்தேய்பிறைச் சதுர்த்தசியிருக்குந்தினமும், சோமவாரத்தன்று இரவின் நான்காஞ்சாமத்தில் அமாவாசை அரைக்கன்னலிருக்குந்தினமும்,சோமவாரத்தன்று இரவின் நான்காஞ்சாமத்தில் தேய்பிறைச் சதுர்த்தசி அரைக்கன்னலிருக்குந்தினமும் ஆகிய நான்குதினங்களுமே யோகசிவராத்திரியெனப்பெயர்பெறும். வருடத்தின் பன்னிரண்டு மாதங்களிலும்வரும்

இருபிறைகளின் சதுர்த்தசி விரவிய இருபத்துநான்கு நாட்களும் நித்தியசிவராத்திரியெனப் பெயர்பெறும். தைமாதத்தின் தேய்பிறைப் பிரதமையன்று தொடங்கிப் பதின்மூன்று நாள்வரையில் பிரதிதினமும் நியமத்துடன் ஒருபொழுதுணவேற்றுப் பன்னுன்காந்தினமாகிய சதுர்த்தசியன்று விதிப்படி விரதம் நோற்பது பட்சசிவராத்திரியெனப் பெயர்பெறும்.

மாசிமாதத்துத் தேய்பிறைச் சதுர்த்தசி
பைங்குனிமாதத்து வளர்பிறைத் திருதியை
சித்திரைமாதத்துத் தேய்பிறை அட்டமி
வைகாசிமாதத்து வளர்பிறை அட்டமி
ஆனிமாதத்து வளர்பிறைச் சதுர்த்தசி
ஆடிமாதத்துத் தேய்பிறைப் பஞ்சமி
ஆவணிமாதத்து வளர்பிறை யட்டமி
புரட்டாசிமாதத்து வளர்பிறைத் திரயோதசி
ஐப்பசிமாதத்து வளர்பிறைத் துவாதசி
கார்த்திகைமாதத்து வளர்பிறைச் சப்தமி தேய்பிறை யட்டமி
மார்கழிமாதத்து வளர்பிறைச் சதுர்த்தசி தேய்பிறைச் சதுர்த்தசி.

தைமாதத்து வளர்பிறைத் திருதியை என்னுந் திதிகள் கூடிய பன்னுன்கு நாட்களும் மாதசிவராத்திரியெனப் பெயர்பெறும். எனவே, மகாசிவராத்திரி, யோகசிவராத்திரி, நித்தியசிவராத்திரி, பட்சசிவராத்திரி, மாதசிவராத்திரி, என்றை வகைப்படுமென்முராயிற்று.

இத்தகைய சிவராத்திரி உத்தமத்திலுத்தமம். உத்தமம், மத்திமம், அதமம் எனநான்குவகைப்படுமென்பதற்குப் பின்வருஞ்செய்யுட்களால் தெற்றனக் கிடந்ததே.

" விரித்தசெழுங் கதிர்ப்பரிதி மேற்றிசைபோ யந்திவந்து மேவுங் காறுந்
தெரித்ததிர யோதசியாந் திதிநின்று பின்புசதுர்த் தசிதான் கூடித்
தரித்தவிரா வன்றிமற்றைப் பகன்முழுதுந் தங்கியிடிற் றறுகட் டந்தி
யுரித்தபிரா னிரசனிக்கு ளுத்தமத்தி லுத்தமமா யுரைப்பர் மன்னே."

" உதித்தகதி ரத்தமித்த பின்கூடுஞ் சதுர்த்தசியுத் தமமா மென்பர்
துதித்தவுத யாதியுத யாந்தமதாய்ப் பகலிரவு தோய்ந்து நிற்குங்

கதித்தசதுர்த் தசிகதிரத் தமிக்குமுன்சேர் சதுர்த்தசிகற் கங்குற் போதின் மதித்தபத்து நாழிகையிற் பின்கூடுஞ் சதுர்த்தசிமத் திமமா மன்றே.”

“அல்லினிரு பதுகடிகை யளவுசதுர்த் தசிதானின் றதற்குப் பின்னர்ச்
சொல்லினுயர் மதிபரிதி யுடன்கூடு மமாவாசை தொட்டத் தோடு
புல்லியிடி னதமசிவ ராத்திரியா மெனவெடுத்துப் புகல்வ ரல்லி
னல்லியல்சேர் பதின்மூன்றாந் திதிதொட்ட சதுர்த்தசியே நன்ற தாமால்.”

திரயோதசியும் சதுர்த்தசியுங் கூடிய இரவே சிவலிங்கசொரூபமா மென்பதற்கும் பிரமாணம்.

“கங்குறனிற் பதின்மூன்றாந் திதியுடனே சதுர்த்தசியோர் கலைதான் கூடி
லங்கதுவே சிவநிசியாக் கொளல்வேண்டுஞ் சிவரூப மாகு மேன்மை
தங்குசதுர்த் தசிதிரயோ தசிசத்தி ரூபமிவை தாமொன் றாகித்
துங்கமுறக் கூடுமிராச் சிவலிங்கா காரமெனச் சொல்வர் மன்னே.”

ஆகையாலத்தகைய சிவநிசியன்று புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து தனதில்லத்தில் தோரணமுதலியவைகளால் அலங்காரஞ் செய்து, பின்னர் பரமேசுரப்பிரபுவைப் பீடத்திலாவாகித்து, சிவாகம விதிதவறாது நான்குயாமத்தும் பிற்கூறும் முறையே உபகரணங் களைக்கொண்டு பூசையியற்றவேண்டும்.

| சாமம். | உபகரணம். | | | | நைவேத்தியம். |
|---|---|---|---|---|---|
| க. | பஞ்சகௌவியம் | சந்தனம் | வில்வம் | தாமரை | பருப்பன்னம் |
| உ. | பஞ்சாமிர்தம் | அகிற்குழம்பு | தாமரை | துளசி | பாயசம் |
| ௩. | தேன் | பச்சைக்கருப்பூரம் | சாதிமலர் | வில்வம | திலான்னம் |
| ௪. | கருப்பஞ்சாறு | குங்குமப்பூ | நந்தியாவர்த்தம் | நீலோற்பலம் | சுத்தான்னம் |

இம்முறையே யியற்றவேண்டுமென்பதற்குப் பிரமாணம்.

“முன்னமுதற் சாமத்தி லானினைந்தா லாட்டிடுக முறைமை யாகப்
பின்னரிரண் டாஞ்சாமத் தைந்தமிர்தா லாட்டிடுக பிரசந் தன்றொ
டன்னயஞ்சேர் மூன்றாய சாமத்தி லாட்டிடுக நாலாஞ் சாமங்
கன்னலின்சாற் றினிலாட்டக் காரணவா கமமெடுத்துக் கழறிற் றன்றே.”

“ சந்தமுதற் சாமமதி லகிலிரண்டாஞ் சாமமதிற் சாம மூன்றிற்
கந்தமிகுங் கருப்பூரங் கடைச்சாமங் குங்குமஞ்செங் கமலப் போதில்
வந்தருணன் முகன்முகுந்தன் மகபதிவா னவரெவரும் வணங்கி யேத்து
மந்தமிலா முழுமுதல்வன் றிருமேனி குளிரமிகு மன்பிற் சாத்தி.”

“முற்சாமம் வில்வமதிற் பிற்சாம முளரிமலர் மூன்றாஞ் சாம
நற்சாதி மலர்நாலாஞ் சாமமதி னந்தியா வர்த்தப் பூக்கொண்
டற்சாருங் களத்திறைக்குச் சாத்துகவென் றாகமத்து ளதிக மான
சொற்சார முள்ளசித்தத் தந்திரநூ லுருத்திதனைச் சொன்ன தாமால். ”

“ முண்டகமுற் சாமமதிற் றுளசியிரண் டாஞ்சாம மூன்றாஞ் சாமங்
கண்டகஞ்சேர் கூவிளைமுத் தளக்கினைநான் கெனப்பகுத்த கடையிற் சாமம்
விண்டலர்ந்து மதுத்துளிக்கு முற்பலத்தின் மலர்சாத்த வேண்டு மென்றே
யண்டரெலாம் புகழ்ந்தேத்துஞ் சிந்தியமா மாகமநூ லறைந்த தன்றே.”

“ஏதமின்முற் சாமமுற்கப் பருப்பொடன்ன மாகுமற்றை யிரண்டாஞ் சாமந்
தீதகல்பா யசமாகுஞ் சாமமொரு மூன்றதனிற் றிலஞ்சே ரன்ன
மோதவரு சாமமொரு நான்கதனிற் சுத்தான்ன முரைத்தார் பூத
நாதனிவேத் தியந்தனக்குச் சுத்தான்ன மாஞ்சாம நான்கிற் கும்மே.”

இஃதன்றிப் பஞ்சவில்வத்தாலும் நான்குயாமத்தும் அர்ச்சிக்க லாம்.

(பஞ்சவில்வம்.)

க. வில்வம்.
உ. நொச்சி.
ங. மாவிலங்கை.
ச. முட்கிளுவை.
ரு. விளா.

இப்படிச் சிவபூசைசெய்யச் சத்தியற்றவயோதிகரும், ஸ்திரீகளும், நோயாளரும் சிவராத்திரித்தினத்தில் ஊணுறக்கமொழித்து அன்றிரவு நான்குசாமத்தும் சிவபுராணங்கேட்டேனும் ஜெபங்கள் செய்தேனும் சிவாலயத்துட்சென்று,பரமேசுரப்பிரபுவைத் தெரிசித்தேனும் அவ்விரவையகற்றி மறுநாட்காலையில் மேற்சொன்னபடி பாரயணஞ்செய்தல் வேண்டும்.

'இத்தகையசிவார்ச்சனைசெய்திடமாட்டார்விருத்தர்கொடியிடையார்நோய
ருத்தமநற் சிவசிசியி னூனோடு துயினீத்துச் சாம நான்குஞ்
சித்தமிகக் களிகூர்ந்து சிவபுரா ணங்கேட்டுச் செபங்கள் பண்ணி
முத்தனுறை சினகரத்திற் சென்றரனைச் சேவித்தன் முறைமை யாமே.'

"அசிக்கணுமை பங்கனைமுற் சாமத்தி லருச்சித்தாங் கதற்குப் பின்னர்ப்
பசிக்கழிந்தோர் நீர்சிறிது பால்சிறிது பருகவன்றேற் பழங்கள் சற்றே
புசிக்கசல பானநன்று மத்திமம்பால் பழமதமம் பொருவில் கந்தஞ்
சுசிக்கொளப்பக் தோசைபிட்டு மாந்தலத மத்ததமஞ் சொல்லுங் காலே."

சு. நடேசதேசிகன்.

ஸ்ரீ:

ஸ்ரீ ஜகந்நாதாயநம:

# * திருப்புல்லாணி மான்மியம்.

## முகவுரை.

உலகத்திலுள்ள ஜீவராசிகள்யாவற்றுள்ளும் மானிடப்பிறவியே சிறந்தது. அதையடைதலே ஆன்மகோடிகட்குக் கிட்டுதற்கரிய பெரும்பேறு. இப்பிறவியைப்பெற்றதின் பயன் யாதெனின், வேதங்கள் கூறும் அன்பு, அருள், வாய்மை, அடக்கம் முதலியநற்குணங்கள் பொருந்தப்பெற்று, பெரியோர்களிடத்தில் வணக்கம் பாராட்டி, பகவானிடத்தில் இடையறாத அன்புசெலுத்தி, வேதசாஸ்திரங்களோதிப் பரஞானம்பெற்றுக் கருமபாசத்தினின்றும் ஜன்மபந்தத்தினின்றும் விடுபட்டு, எம்பெருமான் திருவடி நீழலையடைவதையே நோக்கி மனத்தூய்மையுடன் முத்திமார்க்கத்தில் நடப்பதேயாம். இவ்வொழுக்கங்களைக் கைக்கொண்டு ஒருவன் சரியாய் நடப்பதற்கும், எவ்வித இடையூறுநேரிடினும் சற்றேனும் நழுவவிடாமல் அவற்றைக் கடைப்பிடிப்பதற்கும், தூண்டுகோலாயிருப்பதும் முடிவில் என்றுமழியாப் பேரின்பவீட்டைக் கொடுப்பதும் சர்வேஸ்வரனுடைய தியானமும் வழிபாடுமே.

*இது மதுரைத்தமிழ்ச்சங்கம் கௌரவ காரியதரிசியும், ஹைகோர்ட்டு வக்கீலுமாகிய மகா-ா-ா-ஸ்ரீ டி. வி. ஸ்ரீநிவாஸையங்காரவர்களாற் செய்யப்பட்ட திருப்புல்லாணி மான்மியத்தின் முகவுரையிலிருந்தெடுத்துச் சேர்க்கப்பெற்றது.

ஜகதீசனுக்குப் பரம் வியூகம் விபவம் அந்தரியாமி அர்ச்சை யென்னும் ஐந்து சொரூபங்களுண்டென்று நூல்கள் கூறுகின்றன. அவற்றுள் எல்லாவுலகங்களினுஞ் சிறந்த ஸ்ரீ வைகுண்டத்தில் விரஜா நதிக்கரையில் செம்பொன்செய் கோயிலில், திருமாமணி மண்டபத்தில், ஸ்ரீ பூமி நீளாசமேதராய்த் திருவனந்தாழ்வான்மீது இனிது வீற்றிருக்கும் பரஸ்வரூபத்தைத் தெரிசித்துத் துதிக்கும் அந்தமிலின்பத்தை யடைபவர் திவ்விய சரீரம்பெற்ற நித்தியரும் முக்தருமே யாவர். வாசுதேவன், சங்கருஷணன், பிரத்திபும்னன், அநிருத்தன் என்ற நான்கு வியூகரூபங்களையுங் காணப்பெறும் பேரின்பந்தேவர்களுக்கேயுரியது. இராம கிருஷ்ணாதி யவதாரங்களாகிய விபவரூபங்களைச் சேவித்தற்கு, அக்காலத்தில் மானிடப்பிறவியெடுக்கவும், எடுத்து அப்பரமபுருஷர்களைக் கண்ணாரக்கண்டு பெரும்பேறடையவும், முற்பிறப்பிற்செய்த அரியதவப்பயனாலன்றி மற்றெதனாலும் கைகூடாது. எல்லாம்வல்ல முழுமுதற்கடவுள் பிரபஞ்சத்தையே தன்னுடைய சரீரமாகக்கொண்டு அந்தரியாமியாய் எங்கும் நீக்கமறவியாபித்து நிற்கின்றார். இவ்வுண்மை வேதாந்தங்கற்றுத் தெளிவடைந்த ஞானிகளுக்குத் தெரியுமேயல்லாது, சாமானியர்களுக்குத் தெரிதல் மிகவுங்கஷ்டம். இவையாவற்றையுந் திருவுள்ளத்திற்கொண்டே யாவரும் தம்மைவெளிதில் வழிபட்டுய்யுமாறு சுயம் வியக்தமானதும், தேவ ருஷி முதலானவர்கள் தவம்புரிந்து சித்தியடைந்ததுமான அநேக தலங்களில் ஜீவர்களிடத்துண்டாகும் நிர்ஹேதுககிருபையால் திவ்வியமங்களவிக்கிரஹ விசிஷ்டனாய், எழுந்தருளியிருக்கின்றார்.

இவ்வுண்மைகளை நாடியே பரத்வத்தைச் சக்கரவாளகிரியைச் சூழ்ந்திருக்கும் நன்னீர்நிறைந்த பெரும்புறக்கடலுக்கும்; வியூகத்தைத் திருப்பாற் கடலுக்கும்; விபவத்தை மழைபொழியுங்காலத்தில் நீர்புரண்டோடும் நதிகளுக்கும்; அந்தரியாமியைப்பொழிந்த ஜலம் நிலத்துடன் சார்ந்து ஆங்காங்கு சுரந்திருப்பதற்கும்; அர்ச்சையை மழைபெய்தகாலத்திற் பலவழிகளாலும் எக்காலத்திலும் பயன்படும்படி தேக்கிவைத்த நீர்நிலைகளுக்கும் பெரியோர்கள் உவமித்திருக்கிறார்கள்.

மேற்கூறியவாறு உலகரக்ஷணத்தின்பொருட்டு எம்பெருமான் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய பலதலங்களிலும், ஆழ்வார்கள்

# திருப்புல்லாணி மான்மியம்.

மங்களாசாஸநம்பெற்ற நூற்றெட்டுத் திருப்பதிகள் சிறந்தன. அவற்றுள்ளும் மேன்மையுற்றது, பாண்டிநன்னாட்டில், தெற்குச்சமுத்திரக்கரையிலிருப்பதும், ஆதிசேது, தெர்ப்பசயனம், திருப்புல்லாணி என்ற பல திருநாமங்களால் விளங்குவதும்,

> "வள்ளல்மாயவன் மணிவண்ண னெம்மான் மருவுமிடம்
> கள்ளவிழும் மலர்க்காவியும் தூமடற் கைதையும்
> புள்ளுமள்ளற் பழனங்களுஞ் சூழ்ந்த புல்லாணியே."

என்று திருமங்கையாழ்வாரால் துதிக்கப்பெற்றதுமான புல்லாரண்ணிய க்ஷேத்திரம். இவ்விடத்தில் புல்லர், கண்ணுவர், காலவர் என்னும் முனிபுங்கவர்கள் தவம்புரிந்து முத்திபெற்றார்கள். இழிவான யக்ஷஸ்திரீகளாகும்படி சாபமடைந்த தேவகன்னியரெழுவர் சாபவிமோசனம் பெற்று இயற்கைவடிவுற்றார்கள். இத்தலத்தில் சக்கரவர்த்தித் திருமகனும், தெர்ப்பாசனத்திற் பள்ளிகொண்டருளினார்; ஜகந்நாதனையே எப்போதும்வணங்கிக்கொண்டும்,அவனது திவ்விய நாமங்களையே நாவாரத்துதித்துக்கொண்டுமிருந்த புல்லர்முதலான ருஷிகள் ஜகந்நாதனைச்சரணமடைந்து பரமபதம்பெற்றார்கள்; இராவணன் தம்பி விபீஷணன் இராகவனைச் சரணம்புகுந்து, இலங்கையரசுக்குரியவனாகி, நெடுங்காலமாகத்தனது இஷ்டங்களையெல்லாமனுபவித்துக்கொண்டு செங்கோற்செல்வனாய் விளங்கிவருகிறான்; இராமரும் வருணனுதவியாற் சேதுபந்தனஞ்செய்தார்; அம்போநிதியும், கருணைவாரிதியான தாசரதியைச் சரணமடைந்து, அவருடைய கிருபைக்குப் பாத்திரனாகி, தான்செய்தகுற்றத்தை மன்னிக்கப்பெற்றுத்தனது சுபாவத்தையடைந்தான். ஆகையால் இங்கேசரணாகதித் தருமத்தை யனுஷ்டிக்கிறவர்கள் நான்கு புருஷார்த்தங்களையும் அடைவார்கள்.

பார்த்தமாத்திரத்தில் பாவங்களனைத்தையும் போக்கவல்ல சேதுவும், தங்களில் நீராடுவோரது மேலழுக்கைப்போ லுள்மாசையும் நீக்கவல்ல தூய்மையுடைய தர்மதீர்த்தம், பிரம்மதீர்த்தம், ஹம்ஸதீர்த்தம், சக்கரதீர்த்தம், வருணதீர்த்தம், அகஸ்தியதீர்த்தம், இராமதீர்த்தம், கண்வநதி, க்ஷீரநதி, ஹிரண்யநதிஎன்ற தீர்த்தங்களும் இங்கிருக்கின்றன. நாராயணனது சொரூபமேயென்று சாஸ்திரங்களாற்

கூறப்படுவதும், தம்மைக்குறித்துத் தவம்புரிந்த புல்லர்முதலிய விருஷிகளுக்கும், பிரம்மனுக்கும் தன்னுடைய மூலத்தில் பரமாத்துமா பிரசன்னராகும் பாக்கியம்பெற்றதும், உலகெலாம் தம்மைத்தெரிசித்துக் கடைத்தேறும் பொருட்டுப் பரமகருணையால் பகவான் தனதடியில் அர்ச்சாரூபியாய், எழுந்தருளியிருக்கப்பெற்றதும், தன்னீழலில் நாகப்பிரதிஷ்டை செய்வோர்க்கு மக்கட்பேறுண்டாக்கும் சக்தியையுடையதும், மிக்கபரிசுத்தம்பொருந்தியதுமான அசுவத்தவிருக்ஷம் இக்ஷேத்திரத்திலிருக்கிறது. இவையாவற்றையுங் கருதியே இத்தலத்தை முத்திப்பிரதம், திரிவர்க்கப்பிரதம் என்று ஆன்றோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

இத்தகைய சிறப்பும் தூய்மையும்வாய்ந்த இத்தலத்தின் மான்மியம், சகல கல்யாணகுண கணபரிபூர்ணனை எம்பெருமான், இவ்வுலகத்திலுள்ள உயிர்கள்யாவும், பிறந்தும், இறந்தும், பல்வேறுஜன்மங்களையெடுத்தும், துக்கத்துளாழ்ந்து உழலுவதை நோக்கி அவர்கள் அழிவில்லாத வீட்டின்பத்தை யனுபவிக்கவேண்டும் என்றவியல்பாயெழும் பெருங்கருணையால், உயிர்கள் நல்வழிதீவழிகளைப் பகுத்தறிந்து சுசீலர்களாய் நடந்துகொள்ளும்பொருட்டுப் பிரம்மனுக்குபதேசித்தருளிய அநாதியான வேதத்தின் வழிநூல்களாகவும், யாவரும் எளிதிலுணர்தற்கேற்றதாகவும், ஸ்ரீ வேதவியாசமுனிவராற் செய்யப்பட்ட பதினெண் புராணங்களிலொன்றாகிய ஆக்கினேயபுராணத்தில் புவனகோசவருணனையில், கூ-அத்தியாயங்களில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

உ

# பசுபரிபாலனம்.

பசுக்களின் பெருமையையும் அவை யிம்மை மறுமைப்பயனளித்தலையும் பற்றி ஸ்ரீமத்-சுப்பிரமணியக்கவிராயரவர்கள் சென்ற தைமாதச் "செந்தமிழிற்" "பசுவைப்பற்றிய ஆராய்ச்சி" என்னும் வியாசத்திற் பற்பல மேற்கோள்களுடன் விரிவாகச்சொல்லி முடித்தமையால் அவை நன்கு புலப்படுகின்றன.

அத்தகைய பசுக்களைப் பரிபாலித்தல் என்னும் கருமத்தைப் புண்ணியகருமமாகக் கருதுவோர்மாத்திரம் செய்யவேண்டுமென்பதன்றியே மக்கட் பிறப்புடைய எல்லோருமே செய்யக்கடன்பட்டிருக்கிறோம்.

கடனென்பது ஒருவரிடத்துப்பெற்ற தொன்றினைவிற் குறையாது மறித்தும் அவர்க்குக் கொடுத்துத் தீர்த்தற்குரியது. அதனை அவ்வாறு கொடுத்துத் தீர்க்காதவர்களை இருணபாதகரென்று பழிக்கப்படுகிறார்கள்.

பசுக்களிடத்து நாம் பெற்றகடன் என்னவென்று பார்ப்போமானால் அவற்றால் நாம் உயிர்வாழ்ந்து வருகிறோமென்பது பின்வருவனவற்றால் நன்குவிளங்கும். ஆதலால் அவற்றின் உயிரோம்பல் மக்கட்பிறப்புடைய நம்மெல்லோராலும் இறுக்கத்தகும் கடனெனவே கருதவேண்டும்.

பசுக்கள் மக்களாயுள்ள நம்மைக்குழவிப்பருவந்தொட்டுத் தாயினுஞ்சாலப் பால்கொடுத்துவளர்த்துக் காப்பாற்றுகின்றன. இது பற்றிப்போலும்; பசுவினை "என்னம்மைவந்தாள்" என்பதுதகுமென இலக்கணநூலார் திணைவழுவமைக்கின்றனர். பசுமேய்ப்பாரை ஆயர் என்பதனால் அப்பசுக்களும் ஒருவாறு தாயின்றிரி சொல்லாகிய ஆயென்னும் பெயரால் வழங்கப்பட்டனபோலவும் விளங்குகின்றன. இச் சொற்குறிப்புகளாற் பசுக்களும் நாமும் தொன்றுதொட்டுத் தாயும் மக்களுமாகிய தொடர்பு பெற்றிருத்தல் விளங்குகின்றது.

நாம் வளரவளர அவற்றின்பால் நம் வயிற்றுப்பசிக்காற்றாமை பற்றிப் பசுக்கள் தம் ஆண்கன்றுகளை வளர்த்து உழவுமாடுகளாகவும், கமலையெருதுகளாகவும், வண்டிக்காளைகளாகவும் உதவி உழுதொழிலை நடத்தி நமக்கு அன்னமிட்டுவருகின்றன. அவ்வன்னத்துக்குபகாரமாக "வைத்தநெய்யும் காய்ந்தபாலும் வடிதயிரும் நறுவெண்ணெயும்" படைத்து நம்மை வயிறாரவூட்டி வளர்த்துவருகின்றன.

அவை அரும்பாடுபட்டு விளைவித்த சாரமுள்ள தானியராசிகளை நாம் கவர்ந்துகொண்டு, சாரமற்ற பட்டதட்டைகளையும் க

வைக்குப்பைகளையும் அவற்றிற்கு இரையாகக்கொடுப்பினும் அவற்றையும் பசிதீர உண்பனபோல் அவை மென்றுதின்று தண்ணீர்குடித்து விரைவில் மட்கவைத்து எருக்குப்பையாக்கிக் கிருஷிக்கு உபகரிக்கும்படி மறித்தும் நமக்கே கொடுத்துவிடுகின்றன.

இம்மட்டில் அமையாது அவை உயிர்நீத்தபின்னும் அவற்றின் உறுப்பாகிய தோல்கள் "எந்தை நல்கூர்ந்தாணிரப்பார்க் கீந்தென்றவன், மைந்தர்தம் மீகை மறுப்பரோ" வென்னும்படி உழவுவடமாகி ஏரிழுத்தும், கமலைவடமாகிச் சாலிழுத்தும், தோற்புரைகளாகித் தண்ணீரிறைத்தும், சாட்டைவார்களாகி மாட்டையோட்டியும், கிளிகடிபறையாகிப் புள்ளோப்பியும் கிருஷித்தொழிலுக்குதவி புரிந்து நம்பசிப்பிணி யகற்றுகின்றன.

அன்றியும், நம் காலிற்றைக்கும் முள்ளைத் தம்மேலிற்றைக்கும்படி பாதுகையாகித்தாங்கி நம்மைப் பாதுகாக்கின்றன.

"அன்பிலாரெல்லாந் தமக்குரிய ரன்புடையா, ரென்பு முரியர் பிறர்க்கு" என்னுந் திருக்குறளுக்கிலக்கியமாகப் பசுக்கள் என்பானும் நமக்கு உணவு மிகுமாறு பயிர்க்குணவாகின்றன;

அன்றியும் துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத் துப்பாகியும் அமையும் மழையேபோலப் பசுக்களும் மக்களுக்கு வேண்டும் நல்லுணவுகளையாக்கி யளிப்பதோடமையாது தம்மையுண்ணவிரும்பியவர்க்கும் இன்சுவையுணவாகி யவருடம்பை வளர்க்கத் தம்முடம்பை யிழக்கின்றன.

இங்ஙனம் "உள்ளியுள்ளவெலாமுவந்தீயுமவ், வள்ளியோரின் வழங்கு" மியல்புடைமையானன்றே, "வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளற்பெரும் பசுக்கள்" என்றும் "மாற்றாதே பால்சொரியும் வள்ளற் பெரும்பசுக்கள்" என்றும் ஸ்ரீ ஆண்டாள் திவ்யசூக்திகளாலும் பசுக்களின் வள்ளற்றன்மை கொண்டாடப்பட்டிருக்கிறது.

இவ்வாறு தனக்கெனவாழாப் பிறர்க்குரிமை பூண்ட பெருந்தகைமையுடைமையாலும், மக்கட்கு உலகவாழ்க்கைக் கின்றியமையாத கிருஷித்தொழிலுக்குதவிபுரிந்து மக்கட்டொகுதியைப் பாதுகாத்து

இம்மைப் பயனளித்தலாலும், தூய்மையுடைமையாலும், புண்ணிய கருமங்களுக்கு உறுப்பாயமைந்து மறுமைப்பயனளித்தலாலும் பசுக்களிடத்துத் தெய்வத்தன்மையிருப்பதாகவே கொண்டு அவை நம் முன்னோரால் அன்புபாராட்டிப் போற்றி வளர்க்கப்பட்டிருக்கின்றன

இன்னும் ஆன்றோரால் "வாழ்கவந்தணர் வானவர் ஆனினம்" என அந்தணரின்மிக்க வானவரின் மேலாகவும், "ஆவுமானியற் பார்ப்பனமாக்களும் பெண்டிரும் பிணியுடையீரும்." எனப் பெண்டிரின் மிக்க பார்ப்பனமாக்களின் முற்படவும்வைத்துக் கூறப்பட்டமையால் பசுக்கள் மக்களினும் தேவரினும் மேலாகவே மதிக்கப்பட்டனவாகவுங் காணப்படுகின்றன.

இவற்றை யறிந்திருந்தும் நம்மவரிற் சிலர் பசுக்களைப்போற்றுவது மூடபக்தியென்றும், அவற்றைத் தெய்வமாகக் கருதி மனிதர் சுதந்தரங்களையிழந்துவிடுதல் அவிவேகமென்றுஞ்சொல்லிப் பரிகசிக்கத்தலைப்பட்டுவருகின்றனர். அவர்க்கு நாமிப்போது சொல்வதொன்றும் அவர் காதிலேறப்போவதில்லை; ஏறுவிட்டாலும், பசுபரிபாலன விஷயமாக நமக்குத்தோன்றும் இன்றியமையாத சில சொல்லவேண்டிய விஷயங்களைச் சொல்லிமுடிப்போம்.

அவரை, மூடபக்தியாவதென்ன? என்று கேட்போமாகில், உண்மையாக நமக்கு உதவிசெய்யாததொன்றை யுதவிசெய்ததாகக்கருதி அதனிடத்து அன்புபாராட்டல் என்று சொல்லுகிறார்கள். பசுக்களால் நாம் உதவிபெறவில்லையென்பது உண்மையாகுமா? என்று கேட்போமானால் உதவிபெறுவது உண்மையானாலும் அது மனதுடன் கூடிய செயலில்லை யென்கிறார்கள். பழகியவர் அருகிலிருக்க பசு அவர் தினவுதீர நாவினால் வருடலும், பால்கறக்குங்கால் மடிசுரந்து நிற்றலும் மனதுடன்கூடிய செயலன்றோவென்று கேட்டால், மனதுடன்கூடியதானாலும் அது சுவைவிருப்பமும் பரிசவின்பமுமாகிய தன்னயங்கருதியசெயலென்று சொல்லுகிறார்கள். அங்ஙனமாயின் தாய்தந்தையர் மைந்தரை வளர்த்தலும் தாம் தளர்ந்தகாலத்திலுதவுதலென்னும் தன்னயங்கருதிய செயலாய் முடிதலால் அவர்களிடத்து நன்றியறிதலோடுகூடிய அன்புபாராட்டலும் அவர்க்கு மூட

பக்தியாகும். இம்மட்டிலொழியாது, மனைவாழ்க்கை நலனுகர்ச்சி யும், காதலரிருவர்க்கும் இன்பமாகிய சுயநயச்செயலாதல்பற்றி அவ் விருவரதன்புமகூடபக்தியாக முடியுமாதலால் அவர்காணும் மெய் யன்பு யாங்குளதோ. இதுநிற்க,

அவற்றைத் தெய்வமாகக்கருதி மனிதர் சுதந்தரத்தையிழத்தல் அவிவேகமென்று சொல்லுகின்றார்களே? அது என்ன சுதந்தரம்? என்று விசாரிப்போமானால், வேண்டியவிடத்துப் பசுக்களைத் தமக்கு உணவாகவும் பயன்படுத்தல்தான் என்கிறார்கள். ஐயோபாவம்; இந்நாட்டில் இந்த பசுத்தசையுணவி லுரிமையிழவாத சிறுபான் மையோரடைந்த பெருமையென்ன? அதிலுரிமையிழந்த பெரும் பாலோரெய்திய சிறுமையென்ன? இதெப்படியாயினுமாகுக.

ஒத்தபிறப்பினையுடைய மக்கட்கெல்லாம் இயற்கையினமைந்து ள்ள இவ்வுரிமையை இந்நாட்டிற் பெரும்பாலோர் இழந்திருக்கின்ற மை உண்மையே. அவர்தாம ஏனிழக்கவேண்டும்? என்று கேட்டால் ஊனுண்ணல் பாவம்என்று முன்னோரெழுதிவைத்த சுவடிகளைநம்பி யிழந்திருப்பதாகச் சிலர்சொல்வருகிறார்கள். அகாரணமாக நம்முரி மையையிழக்கச்சொல்லுஞ் சுவடிகளிருந்தால் அவற்றை நம்பி நாம் மோசம்போகவேண்டாம். அச்சுவடிகளைக் கட்டிவைத்துக்கொண் டே பேசுவோம். ஒருனுமுண்ணுதவர்கள் சிலர்வேண்டுமானால் அச் சுவடிகளைநம்பி யிழந்திருப்பதாகவைத்துக்கொண்டாலும், ஆடுமுத லிய பிறமிருகங்களையுண்ணும் பெரும்பாலோரும் இதையிழந்திருப் பதற்கு இது காரணமாகமாட்டாது. ஏதேனும் ஒருகாரணம் பற்றியே நாம் இவ்வுரிமையிழந்திருக்கவேண்டும். அது இன்னதென் பதுதான் இப்போது ஆராயவேண்டியது. அதை நாம ஆராய்ந்தறி யாது சும்மாவிடப்படாது. அகாரணமாகத்தம் உரிமையையிழப்ப தற்கு யார்தான் சம்மதிப்பார்?

இனி நாம் உரிமையிழந்த மிடங்களையாராய்வோம்.

1. விலைக்குவிற்றபொருளினுரிமையிழக்கிறோம்.
2. வலியோரால் கவரப்பட்டபொருளை மீட்கவலியில்லையா யின் அப்பொருளினுரிமையிழக்கிறோம்.
3. மனமுவந்து பிறர்க்குக் கொடுத்துவிட்டபொருளினுரிமை யிழக்கிறோம்.

4. பயன்படாதபொருளில் அநாதரவா லுரிமையிழக்கிறோம்.
5. ஒன்றன் உரிமை கேடுபயக்குமாயின் அக்கேட்டில் நீங்க வேண்டி அவ் உரிமையிழக்கிறோம்.

இத்தகைய உரிமைக்கேடுகளுள் எடுத்துக்கொண்ட பசுத்தசையுணவின் உரிமைக்கேடு எதுபற்றியதென ஆராய்வோம். இவ்வுரிமையிழந்தோர்க்கெல்லாம் ஒத்த விலைப்பொருள் பிறரொருவராலுங்கொடுக்கப்படாமையால் விலைபெற்றிழந்ததன்று. இழந்தார்மீட்டும் துய்ப்பின் அநுபவமுடையார் தடைசெய்யாமையால் வலியோரால் கவரப்பட்டிழந்ததுமன்று. இழந்தார் துய்ப்பாரை அருவருத்தலான் மனமுவந்து கொடுத்திழந்ததுமன்று. துய்ப்பதற்குரியதாதலாற் பயன்படாமையா லிழந்ததுமன்று. ஆகவே எஞ்சியகேடுபயத்தல்பற்றியே பெரும்பான்மையோர் பசுத்தசையுணவி னுரிமையிழந்திருக்கவேண்டும். அக்கேடு இன்னதென்பதும் நம் நாட்டிலுள்ள அநுபவங்களைக்கொண்டே யறியலாம்.

இற்றைக்கு முப்பது வருடங்கட்குமுன்பிருந்ததைவிட இப்பொழுது எருத்தின்விலை இரண்டுபங்கு அதிகப்பட்டிருக்கிறதென்பது யாராலும் மறுக்கமுடியாது. அதற்குக்காரணம் என்னவென்றால் மற்றைப் பொருள்களுக்கெல்லாம் விலையதிகப்பட்டிருப்பதுபோல இதற்கும் இக்காலத்தில் விலையதிகப்பட்டிருக்கிறதென்று சொல்லுகிறார்கள். அப்படியானால் நாய்விலை, கழுதைவிலைகளும் அதிகப்பட்டிருக்கவேண்டுமே! அவையேன் அதிகப்படவில்லை யென்பதைக் கவனிக்கவேண்டும். அவை எருதுகள்போல வேலைக்குப் பயன்படாமையால் விலையதிகப்படவில்லையென்று தோன்றலாம். அதை உண்மையாகவே வைத்துக்கொள்வோமாயினும் பண்டைக்காலத்தைவிட இக்காலத்திற் பதின்மடங்கு மிகுதியாய் உபயோகிக்கப்பட்டு வருகிற குதிரைவிலையும் மாட்டுவிலைபோல இரண்டுபங்கு மேற்பட்டிருப்பதாகக்காணப்படவில்லை. வேலைக்குப்பயன்படாத ஆட்டுவிலையும் மாட்டுவிலைபோலதிகப்பட்டுவருகிறது. காட்டப்பட்ட ஐந்துவகை மிருகங்களில் உண்ணப்படாத நாய் கழுதை குதிரையென்னும் மூன்றுவகை மிருகங்கள்மட்டும் பண்டைக்காலத்துவிலையின்மிக உயராமலும், உண்ணப்படும் ஆடுமாடுகளிரண்டும் பண்டைக்கால விலையினதிகப்பட்டும் வருகின்றன. இவைபோலவே மற்றையுணவுப்பொருள்களின் விலையுமதிகப்பட்டிருக்கின்றன.

பொதுவாக விலையுயர்தற்குக்காரணம் கொள்பவரின் வேட்கை மிகுதியும், கொள்ளப்படுபொருளின் கிடைத்தற்கருமையுமாகிய இவ்விரண்டன் கூட்டமேயல்லது பிறிதில்லை. இதற்குத்தான் "கிராக்கி" என்றுபெயரிட்டு வழங்குகிறார்கள். நாளடைவில் உழுங்குடிகள் மிகுந்துவருவதுபற்றிக் கொள்பவரின் வேட்கைமிகுதியால் கிராக்கியுண்டாய் மாட்டுவிலையுயர்ந்துவிட்டதோவென்று பார்ப்போம். கொள்பவர்களாகிய மனிதர்தொகை நாளடைவில் மிகுவதுபோலக் கொள்ளப்படும் எருத்தின்றொகையும் அதின்மும்மடங்கு மிகுந்து வரவேண்டுவது இயல்பு. அப்படி மிகுந்திருக்குமாகில் கிராக்கியுண்டாகமாட்டாது. அன்றியும், கிராமங்கள்தோறும் ஜனத்தொகையும் பட்டாதம்பர்களும் மிகுந்துவருவது உண்மையே. அதுபோலஉழப்படும் நிலப்பரப்பும், உழுமெருதுகளின் தொகையும் மிகுந்துவிடவில்லை. அநாதிதரிசு நிலங்களின் பற்றடைப்புகளால் பயிரிடும் நிலங்கள் சொற்பம் மிகுந்திருந்தாலும் புகைவண்டிப்பாதைமுதலிய உபயோகங்களுக்குவிடப்பட்ட பயிரிடும் நிலங்களின் கழிவு அதற்கு ஈடாயிருக்கிறது. கிணறுகள் அதிகப்பட்டுவருவதால் இறைவைமாடுகளதிகம் வேண்டுதலாற் கிராக்கியுண்டாயிற்றென்று யோசிப்போமாகில் கிணறில்லாதநிலங்களுக்கு வேண்டிய உழவுமாடுகளைக்கொண்டே மழையில்லாதகாலங்களில் கிணற்றுநீரிறைக்கிறார்களாகையால் அதனாலும் கிராக்கியுண்டாகவில்லையென்று தோன்றுகிறது. ஒருவாறு கிணற்றிறைவைமிகுதியாற் கிராக்கியுண்டாகிறதென்று வைத்துக்கொண்டாலும், புகைவண்டிப்பாதைகள் மிகுந்துவருவதால் வண்டிவேலை யிழந்த மாடுகளும் கரும்பாலைமுதலியவைகளின் எந்திரசகாயத்தால் அவ்வவ்வேலையொழிந்தமாடுகளும் அக்கிராக்கிக்குக் கண்டுமிகும்படி ஈடாகிருக்கின்றன. ஆதலால் கொள்பவரின் மிகுதியாற்கிராக்கி ஏற்பட்டதாகக் காணப்படவில்லை.

இனி, கொள்ளப்படும் எருதுகளின் ஜனனக்குறைவால் கிராக்கி ஏற்பட்டிருக்கக்கூடுமாவென்று பார்ப்போம். "எருமை எட்டீற்று பசுப் பத்தீற்று" எனவழங்கும் பழமொழியாலும், அநுபவத்தாலும் மனிதர் ஈற்றுத்தொகையில் மாட்டின் ஈற்றுத்தொகை ஒத்திருப்பதாகவே காணப்படுகிறது. சிறிதுகுறையுமென்று வைத்துக்

கொண்டாலும் மனிதரைப்போல மாடுகளுக்கு விவாகமின்மை வைதவ்வியம் முதலிய ஈற்றின் இடையூறுகளில்லாமையால் ஈற்றின் பிரக்குமொத்தத்தொகை யொத்திருக்கலாமென்றே தோன்றுகின்றது. மேலும் மனிதர்தலைமுறை ஒன்றுக்குள் மாட்டின்தலைமுறை மூன்றின் மேற்பட்டுவிர்த்தியடைகிறபடியால் அம்மூன்றுதலைமுறை ஈற்றையும் கூட்டிக்கணக்கிட்டுப்பார்க்க மனிதர் அதிகப்பட்டுவரும் தொகையின் ஈவுப்படி மூன்றுபங்குக்குமேல் அதிகப்பட்டு வரவேண்டும். அதாவது முப்பது வருஷத்தில் மனிதர்தொகை 100-க்கு 10-அதிகமானால் மாட்டின்தொகை அதேகாலத்தில் 100-க்கு 30-க்கு மேல் அதிகப்பட்டு வரவேண்டுமென்பதாம். மனிதரளவாக 100-க்கு 10-அதிகப்பட்டு வந்திருந்தாலும் கிராக்கியுண்டாயிருக்கமாட்டாது. கிராக்கியுண்டாயிருப்பதால் மனிதர் மிகுந்துவரும் தொகையிலும் மாடுகள் மிகுந்தொகை குறைவுடையதாகக் காணப்படுகிறது. அதாவது 130-க்கு மேலிருக்கவேண்டிய பசுக்களின் தொகை 110-க்கும் குறைந்துவருகிறதென்பதாம்.

இவ்வாறவை குறைந்துவருதற்குக் காரணமென்னவென்று பார்த்தால் சிலர் அவற்றைக் கொன்றுதின்று வருதலின்றிப் பிறி தொன்றுமில்லை என்று நன்குவிளங்குகின்றது.

இது நம்மாலின்று கண்டுகொண்டதன்று. பண்டைக்காலத் தோரே கண்டதென்பதை "உண்ணாமையுள்ளதுயிர்நிலை" எனத்தெய்வப்புலமைத் திருவள்ளுவர்பொய்யாமொழி வெளியிடுகின்றது. இத் திருக்குறளுக்கு, உரையெழுதிய பரிமேலழகர் "ஒருசாருயிர் உடம்பின் கண்ணேநிற்றல் ஊனுண்ணாமையென்கின்ற அறத்தின்கண்ணது" என்று உரையெழுதி, "உண்ணப்படும்விலங்குகள் சிலவாக ஏனையபல வாய்*வருதலின் உண்ணாமையுள்ளதுயிர் நிலையென்றார்" என்று விசேடவுரையுமெழுதிப் போந்தார்.

இதனாலும் உண்ணப்படும் விலங்குகளாகிய ஆடுமாடுகள் குறைந்து வருகிறதென்றும், உண்ணப்படாத விலங்குகளாகிய கழுதை, குதிரை, நாய்கள் குறைவில்லையென்றும் விளங்குகின்றது. இவ்வாறு குறைவதால் மாட்டுவிலை யேற்றம் பெற்றிருக்கிறது. மாட்டு

விலையேற்றம்பற்றி மட்டும் இப்பொழுது அம்சகவிலை நூற்றுக்கு முப்பது ஏற்றம் பெற்றிருப்பதாகவும் ஒருவாறு கணக்கிடப்பட்டிருக்கிறது.

அது வருமாறு:—முப்பது வருடங்கட்குமுன்பு ஓர் ஏர்மாட்டின் விலை 30-ரூ. முதல் 150 ரூ. வரை யிருந்தபடியால் அதன் நிரவல் (average)விலை ஏர் 1-க்கு ரூ. 90 ஆக இருந்தது. இப்பொழுது ஏர் 1-க்குரூ. 60-முதல் ரூ. 300-வரை விலையேறியிருப்பதால் இதன் நிரவல்விலை ஏர் ஒன்றுக்கு ரூ. 180-ஆகிறது. ஆகவே ஏர் 1-க்குரூ. 90 அதிகப்பட்டிருக்கிறது. எருதுகள் வேலைக்குதவாத கன்றுப்பருவமுங் கிழப்பருவமும் ஒழிந்த வேலைசெய்யும் வருடம் பத்துக்குள் நோய்முதலியவற்றால் அகாலமரணங்களுமிருப்பதால் ஏர் 1-க்கு 5-வருடமே வேலைசெய்யுங் காலநிரவல் ஏற்படுகிறது.

இந்த ஐந்து வருடத்திலுங்கூடி ஓர் ஏர் எருத்தின்விலை யேற்றத்திற் கூடிய ரூ. 90-ம் நஷ்டமாய்விடுவதுபற்றி வருஷம் 1-க்கு ஏர் 1-க்கு 18ரூ. அதிகச்செலவேற்பட்டிருக்கிறது. இந்த அதிகச்செலவுரூ. 18-ம் அவ்வேராலே ஒருவருடத்தில் விளைவிக்கப்படும் தானியங்களில் கிருஷிகர்களின் குடும்பவுணவுக்குப்பாதியும் உரமிடல் விதைப்பு களைபறி முதலிய கூலியில் தானியமாகச்செலவாகும் காற்பங்கும்போக மீந்தகாற்பங்கு(நிரவல் 600-பட்டணம்படி) தானியத்தின்விலையை ஏற்றிவிற்றே கிருஷிகர்கள் முதலெடுக்கவேண்டியிருப்பதால் மாட்டுவிலை யேற்றத்தால்மட்டும் கோட்டை1-க்கு (பட்டணம் படி 96-க்கு) 3-ரூ. கூட்டி விற்கப்படுகிறதென்பது நன்குபுலப்படுகின்றது.

ஆகையால் விலைக்குவாங்கி யுண்பவர்கள் நாளொன்றுக்கு ஆள் ஒன்றுக்கு அரைப்படிக்கு காலணாவீதம் இப்பொழுது அதிகவிலை கொடுத்து வருகிறார்கள். இன்னும் பசுத்தசையுணவு வளர வளர அம்சவிலையேற்றமும் வளருமென்பதிற் றடையில்லை. இதுநிற்க,

இந்நாட்டிலுள்ள ஜனங்களிற் சற்றேறக்குறைய ஐந்திலொரு பங்கு ஜனங்களே பசுக்களையுண்ணு முரிமையுடையவராயிருக்கிறார்கள். இந்த 5-லொருபங்கு ஜனங்களால் 30-௵த்தில் சுமார் 100-க்கு 20-வீதம் பசுக்கள் உண்ணப்பட்டுக் குறைந்து வருகிறபடியால் மற்

றற நாலுபங்கு ஜனங்களும் இந்தச் சுதந்தரத்தை இழவாது கைக்கொண்டிருந்தால் மொத்தம்பங்கு ஐந்துக்குமாக 100-க்கு 100-ம் உண்ணப்பட்டுத் தொலைந்திருக்குமென்பதிற் றடையொன்றுமில்லை. இப்படியாகப் பசுக்கள் தொலையத்தலைப்படுங்கால் உழவு எருதுகள் குறையும்; எருதுகள் குறையவே கிருஷித்தொழில் குன்றும்; கிருஷித்தொழில்குன்ற உணவுப்பொருள் குன்றும். உணவுப்பொருள் குன்றப் பசிப்பிணிவளரும். பசிப்பிணி வளரவே "மானம், குலம், கல்வி, வண்மை, அறிவுடைமை, தானம், தவம், முயற்சி, தாளாண்மை........பசிவந்திடப் பறந்துபோம்" என்றபடி மக்கட்டொகுதியிலுள்ள நற்குண நற்செயல்களெல்லாம் அழியும். அவையழியவே அதன்கண் தீக்குணம் தீச்செய்கை தோன்றிக் களவு, ஆறலைத்தல், சூறைகோள், கொலைமுதலியவற்றால் மக்கட்டொகுதிக்குக் கேடுபிறக்கும். பசுத்தசையுணவு இத்தகைய கேடுவிளைத்தலையுணர்ந்து இக்கேட்டினின்றும் நீங்கவேண்டியே நம்மவரிற் பெரும்பாலோர் பண்டைக்காலத்தே அதனுரிமை யிழந்திருக்கவேண்டுமென்பது நன்கு விளங்குகின்றது. பசுக்களைப்டுத்து எருமையும் சில இடங்களில் கிருஷிக்குப்பயன் படுதல்பற்றி அவையும் குறையாது பெருகவேண்டுமென்னுங்கருத்தாலன்றே அவற்றினூனுண்ணலையும் இதனோடொப்ப விலக்கியிருக்கின்றனர்.

இந்நாட்டிற் பெரும்பாலோர் இவ்வாறு பசுத்தசைநசையை யொழித்திராவிட்டால் இதுவரைஜனசமூகம் எப்படி நிலைத்திருக்கும்? இவர்கள் அவற்றையுண்ணாமைபற்றியே பசுக்களும் ஜனசமூகமும் நிலைத்திருக்கிறபடியால் இவர்களே பசுக்களையும் ஜனசமூகத்தையும் பாதுகாப்பாராகிறார்கள்.

இவ்வாறு பசுத்தசையுணவு ஜனவாழ்க்கைக்கு விரோதமாதல் பற்றி இந்நாட்டுப்பழங்குடிகளில் உயர்குலத்தினரெல்லாம் அதனை யொழித்திருக்கின்றமையால் அந்நெறிகடந்துண்பவர்கள் இழிகுலத்தினராகப் பிரிக்கப்பட்டு வேறுபட்டிருக்கிறார்கள். இங்ஙனம் வேறுபாடிருந்தாலும் ஒருவர்க்கொருவர் மாறுபாடின்றி யிருபாலாரும் கூடிவாழ்ந்து வருகின்றனர்.

அவ்வாறவரமைவுற்றிருப்பவும் புதிய சீர்திருத்தம்புரியவிரும்புவார்சிலர்சாதிவேறுபாடுகருதுவது தீதென்றும், அது ஜனங்களுக்குள்

மாற்சரியத்தை விளைவிக்குமென்றும் நினைந்து, அதுதீரச் சாதிவேற்றுமையின்றி யொன்றுசேர்ந்துண்டு கொண்டுகொடுத்து ஒன்றாய்விட வேண்டுமென்றெண்ணுகிறார்கள். சாதிவேற்றுமைகளைப்பற்றி யிப்பொழுது பேசுவது சாத்தியமாகமாட்டாது. அது சமயம் வாய்த்தபொழுது தனியே பேசவேண்டிய பெரியவிஷயம். அதுநிற்க, ஒன்றாகக்கூடியுண்பவர்களெல்லாம மாற்சரியமற்றிருக்கிறார்களா? ஒரு குலத்திற்பிறந்து ஒன்றாயுண்டுவளர்ந்த கௌரவ பாண்டவர்களின் பகைமையும், ஒன்றாயுண்ணாத இராமபிரானிடம் குகவிபீஷணர்களின் ஆர்வமும் இதிகாசங்களால் விளங்கவில்லையா? இவை கதையென்றாலும் ஒரு வயிற்றிற்பிறந்து ஒன்றாயுண்டுவளர்ந்தவர்கள் ஒருவர்க்கொருவர் மாற்சரியங்கொண்டு நியாயஸ்தலங்களிற் சென்று பொருட்செலவுசெய்து வழக்கிட்டுப் பகைகொள்ளக் காண்டலால் ஒன்றாயுண்ணலே யொற்றுமையுண்டாக்குமென்றெப்படிச் சொல்லலாம்? ஒன்றாயுண்ணாத நாயும் நாயுடையோனும் அந்நியோந்நியம் ஒற்றுமையுடன் அன்புபாராட்டவும் காண்டலால் ஒன்றாயுண்ணாமையால் மாற்சரியமுண்டாகுமென்றெப்படிச்சொல்லலாம். ஒன்றாயுண்ணுதலே ஒற்றுமையை உண்டாக்கிவிடவில்லை; பரஸ்பராபிமானமே யொற்றுமையை யுண்டாக்குகின்றது.

இதனால் அவர்கள் ஒன்றாகக்கூடி யுண்ணவேண்டாமென்று சொல்லித் தடுக்கவந்ததாக நினைக்கவேண்டாம். அதனால் தீமைவிளையுமென்பதையவர்க் குணர்த்தவந்ததாக நினைக்கவேண்டும். ஒன்றாயுண்ணலால் என்ன தீமைவிளையுமென்று கேட்கக்கூடும். உண்டியில் அவர்களுக்கு விருப்பமுள்ள பசுத்தசையை யிவர்களும் உண்டுதீரவேண்டுமல்லவா? உண்ணவிட்டால் வேற்றுமையெப்படிஒழியும்? வேற்றுமையொழியத்தாமும் உண்பாராயின் அவரைப்பற்றிய பிறரும், அவரைப்பற்றி மற்றவருஞ்சேர்ந்து பெருங்கூட்டமாக எல்லோரும் பசுத்தசையுண்ணத் தலைப்பட்டுவிடுவார்கள். அதனால் பசுத்தொகைகுன்றிக் கிருஷித்தொழிலின்றி ஜனசமூகத்துக்குக் கேடுவரக்கூடுமென்பதை அவர்கள் கவனிக்கவேண்டும்.

நாளடைவில் வளர்ந்துவருகிற அறிவின் முதிர்ச்சியால் இந்நாட்டில் இழிந்தவர்களும் ஜாதிவேறுபாட்டையழித்து உயர்வடைய

முயல்கின்றனர். அவ்வாறுயரவிரும்புவோர் தாம் இழிந்ததற்கேதுவாகிய பசுத்தசைபுணவையொழித்துப் பசுபரிபாலனஞ்செய்யக் கருதுவாராயின் அதிசீக்கிரத்தில் உயர்வடைவார்களென்பதிற் றடையில்லை. இழிந்தவர்கள் உயர்வடைவதற்குப் பசுபரிபாலனம் மேலான உபாயமாகக் காணப்படுகிறது.

பிர்ம்மகத்தி முதலிய கொலைப்பாவங்களுக்கெல்லாம் பசுபரிபாலனம் முதன்மையான பிராயச்சித்தமாக விதிக்கப்பட்டிருக்கிறது. அவற்றோடொத்த பசுவதைக்கும் பசுபரிபாலனங் கழுவாயாகுமென்பதிற்றடையென்ன? பசுபரிபாலனம் ஜனசமூகத்துக்கு நன்மை விளைப்பதுபற்றிப் புண்ணியகருமங்களிலெல்லாம் மேலானதாக விளங்குகின்றது. ஆதலால் அதற்கு மறுதலையான பசுவதை பாப கருமமாகின்றது.

மனிதருக்கு உபயோகப்படுவனவெல்லாம் கொள்ளத்தகுவனவென்றும் ஆதலால்,பசுக்களை உணவுக்குவதைத்தல் பாவமில்லையென்றும் வேறுசிலர் சொல்லுகிறார்கள். அவர்கள் சொல்லுகிறபடி பாவமில்லையென்றே வைத்துக்கொள்ளட்டும். ஊருணி நீர் கால்கழுவவும், அழுக்காடைதுவைத்துக் குளிக்கவும் மனிதர்க்கு உபயோகப்படுமாறுலும், அவ்வாறு செய்தலால் குடிதண்ணீர் கெட்டு ஜன வாழ்க்கைக்கு விரோதமாதல்பற்றி அதனுட் குளித்தல் முதலியவற்றை யொழிக்கமுயல்வது போலவே, பசுவதையால் பசுக்கள் கெட்டு ஜனவாழ்க்கைக்கு விரோதமாதல்பற்றி அதனையொழித்துப் பசுபரிபாலனம் செய்யவேண்டுமென்பதை அவருணரவேண்டும்.

பசுபரிபாலனம் செய்வது அரியகாரியமென்று கருதவேண்டாம். பசுக்களுக்குத் தீங்குசெய்யாது சும்மாவிருத்தலும் பசுபரிபாலனத்துள் முதலாவதாக வைத்தெண்ணப்படுகிறது. ஒருவன் பசிக்குண்ணும் பாலே அவன் பிணிக்கும் மருந்தாறற்போலவும், பட்டினிவிட்டுண்ணு முணவுபாரணையாகிப் பயனளிப்பதுபோலவும் ஒருவன் தற்காத்தற்பொருட்டுத் தானேவிழைந்துசெய்யும் பசுரக்ஷணமும் புண்ணியகர்மமாகி நற்கதிகொடுக்கின்றது. மற்றைப்புண்ணிய கர்மங்களைப்போல் வர்ணாச்சிரமதேசகால நிபந்தனை யொன்றுமின்றியேபசுபரிபாலனம் உயர்ந்தோர் இழிந்தோர் எல்லோராலும் எங்கும் எக்காலத்தும் செய்யத்தக்க எளிமையுடையதாயுமிருக்கிறது.

தன்னை யிளைப்பாறவைத்துப் பசுக்கள் ஜனசம்ரக்ஷணம் செய்வதுபற்றியே லோகரக்ஷகனான சர்வேஸ்வரன் கிருஷ்ணாவதாரத்தில் "குன்றெடுத்தானிரை காத்தபிரான் கோவலனாய்க் குழலூதியூதிக் கன்றுகள்மேய்த்துத் தன்றோழரோடுகலந் துடன்வருவான்" எனப் பெரியாழ்வார் புறப்பாட்டு விருதுபாடும்படி கோக்களைரக்ஷித்துக் கோபாலனெனப் பெயர்பெற விரும்பினானென்றால் பசுபரிபாலனத்தின்பெருமை எவ்வளவிற்றென்று கணக்கிடலாம். அன்றியும் "பெற்றம்மேய்த்துண்ணுங் குலத்துட்பிறந்துநீ குற்றேவலெங்களைக் கொள்ளாமற் போகாதி" என ஸ்ரீ ஆண்டாள் திவ்யசூக்தி பெற்றம்மேய்த்தல்பற்றி லோகரக்ஷகனுக்கு ஏற்றம் சொல்லுகிறது. இதில் உண்பதற்குத் தேவபூஜை பூர்வாங்கமாகச் செய்யப்படுவது போலப் பெற்றம் மேய்த்தலும் உண்பதற்குப் பூர்வாங்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதனைக்கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந்துண்போம். என்றதனாலுமறியலாம்

இதனால்,பசுபரிபாலனம் தேவபூஜையோடொப்பாகுமென்பது விளங்குகின்றது. இதையாவருஞ்செய்துதீரவேண்டுமென்பது 'ஆவிற்குநீரென்றிரப்பினும்' என்னும் திருவள்ளுவர்குறிப்பால் நன்கு விளங்குகின்றது. விலங்காய்ப் பிறந்த பசுக்கள் தம்மின்மிக்க மக்களைப்பாதுகாப்பது கண்டும்,மக்களாய்ப்பிறந்த நாம் அவற்றைப்பாதுகாவாது செல்வது நமக்கே வெட்கந்தரத்தக்கது. புண்ணியகருமமென்றெண்ணிப் பசுபரிபாலனம் செய்பவர்களுக்கு நாமொன்றும் சொல்லவேண்டுவதில்லை; புண்ணியகர்மமென்று கருதாதவர்களும் ஜனவாழ்க்கைக்குத் தீங்குவிளையுமுன்னமே காலந்தாழ்க்காது பசுபரிபாலனம் செய்யத்தொடங்க வேண்டுமென்பதுதான் இப்பொழுது சொல்லிமுடித்த விஷயம்.

ஆகையால் ஜனசம்ரக்ஷணத்தில் கண்ணும் கருத்துமுள்ள அறிவுடையோர்கள் இவற்றையாராய்ந்தறிந்து பசுக்கள்குன்றுதலின்றி வளர்ந்தோங்குமாறு பலவழிகளாலும் வேண்டியமுறைகளைக் கற்பித்துப்பாதுகாக்குமாறு வேண்டுவோமாக.

பத்திராதிபர்.

# சாக்ரடீஸ்.

(கஙஉ-ம் பக்கத்தொடர்ச்சி.)

சாக்—நாம் நல்ல அபிப்பிராயங்களைக் கைக்கொண்டு உபயோகமற்றதைத் தள்ளவேண்டுமல்லவா ?

கிரை—ஆம்.

சாக்—அறிவுடையோரது அபிப்பிராயங்கள் நல்லவையாயும் அறிவிலோரது அபிப்பிராயங்கள் பயனற்றனவாயுமிருக்கின்றனவல்லவா ?

கிரை—உண்மைதான்.

சாக்—அதைப்பற்றி நாம் முன் என்ன சொல்லிக்கொண்டிருந்தோம் (தேகப்பயிற்சியிற்) பயில்வோனொருவன், தன் காரியத்தில் கண்ணுள்ளவனுயின் எல்லாமனிதரின் புகழ்ச்சி இகழ்ச்சிக் கருத்துக்களைக் கவனிப்பானோ, அன்றித் தன்னைப் பயிலுவிப்போனொருவனுடைய புகழ்ச்சி, இகழ்ச்சிக் கருத்துக்களைக் கவனிப்பானோ ?

கிரை—அந்த ஒருவனுடைய கருத்தைத்தான் கவனிப்பான்.

சாக்—அது உண்மையாயின், பிறர் கூற்றைக்கவனியாது இவ்வொருவனுடைய குற்றஞ்சாட்டுதற்குப் பயந்து, அவனுடைய புகழ்ச்சியைப் பரிவுடன் ஏற்கவேண்டுமல்லவா ?

கிரை—அது வெளிப்படை.

சாக்—பின்பு, பிறர் கட்டளைப்படி நடக்காது தன் யஜமானனும் விஷயங்களை நன்குணர்ந்தவனுமாகிய அவ்வொருவன் கட்டளைப்படி நடக்கவும், பயிற்சிக்கவும், உண்ணவும், குடிக்கவும் வேண்டுமல்லவா ?

கிரை—அப்படிச்செய்யவேண்டியதுதான்.

சாக்—நல்லது. இந்த வொருவனுக்குக் கீழ்ப்படியாது, அவனுடைய கருத்து புகழ்ச்சிகளைக் கவனியாது, விஷயமொன்றையு முணராத பல்லோர் கூறுவதைப்போற்றுவதால் அவன்கெடு தலுக்குள்ளாவானல்லவா?

கிரை—ஆம. உளளாவான.

சாக்—அவன் எவ்விதம் துன்புறுவான்? எந்த வழியில், தன்னு டைய எந்தப்பாகத்தில்?

கிரை—ஏன் சரீரத்தில் தான், சரீரம் கெட்டுப்போகும்.

சாக்—நீசொல்வது சரியே. சுருங்கச்சொல்லின், இது போலன்றோ மற்றெவ்வொன்றிலும்? ஆதலின் எதுசரி, எது பிழை; எது ஈனம், எது கண்ணியம்; எது நல்லது, எது கெட்ட தென்ற விசாரங்களில், நாம் பல்லோரின் அபிப்பிராயத்தைத் தழுவி அதற்குப் பயப்படுதல்வேண்டுமோ; அல்லது இவற் றையெல்லாம் நன்குணர்ந்த ஒருவன் நமக்குக்கிடைக்குமா யின் அவனது அபிப்பிராயத்தைப் போற்றி, பிறர் முன்னி லையிலும், அவன் முன்னிலையிலும் வெட்கமும் பயமும் காண் பிக்கவேண்டுமோ? இவ்வாறு அவ்வொருவன் வழியிற் செல் லாவிடின், நாம் சொல்லுகிறபடி நல்லவற்றால் விருத்தியும், தீயவற்றால் விருத்திக்குறைவும் ஆகிற நம்முடைய பாகத்தை ஊறு செய்து, முடமாக்குவதாகும். இது சரியன்றோ?

கிரை—சரிதான், சாக்ரடீஸ், நீர் சொல்வது எனக்குமுடன்பாடே.

சாக்—ஒன்றுந்தெரியாதவர்களின் அபிப்பிராயங்களைக் கவனிப்ப தால், ஆரோக்கியத்தால் விருத்தியும், வியாதியால் விருத்திக் குறைவும் ஆகிற நம்முடைய பாகத்தை ஊறுசெய்வதாகு மென்றால் ஊறு அடைந்தபின் உயிர்வாழ்தல் தகுதியோ? ஊறடைவது சரீரமல்லவா?

கிரை—ஆம்.

சாக்—சரீரம் ஊனமாகிக் கெட்டநிலையிலிருக்க உயிர்வாழ்வது தகு தியோ?

கிரை—இல்லை, ஒருபோதுமில்லை.

சாக்—அப்படியாகில் தீயவற்றால் ஊறும், நல்லவற்றால் ஆரோக்கிய மும் அடைகிற நம்முடையபாகம் ஊனமாகிவிட நாம் உயிர் வாழ்தல் தகுதியோ? அல்லது அது எதுவாயிருந்தாலுஞ்சரி, நன்மைதீமையோடு சம்பந்தப்பட்ட நம்முடையபாகத்தைச் சரீரத்தைவிடப் பயனற்றதென்று கருதுகின்றாயோ?

கிரை—இல்லை, ஒருபோதுமில்லை.

சாக்—அன்றி அதிகப்பயனுள்ளதென்று கருதுகிறாயோ?

கிரை—ஆம், அதிகமாகவே பயனுள்ளதாகத்தான் கருதுகிறேன்.

சாக்—அப்படியாகில் என் உயர்நண்ப, பலர்நம்மைப்பற்றிச் சொல் வதை நாம் அவ்வளவு கவனிக்கவேண்டுவதில்லை. நன்மை, தீமையை யறிந்த ஒவ்வொருவனும், சத்தியமும் நம்மைப் பற்றிச் சொல்வதை நாம் கவனித்தல் முக்கியம். ஆதலின், நியாயம், கண்ணியதை நன்மை இவற்றிற்கு எதிரிடை, இவை களைப்பற்றி ஜனக்கூட்டத்தார் கொள்ளும் அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்ளும்படி என்னை நீ அழைத்ததில் ஆரம்பத்தி லேயே பிழைபட்டாய். இன்னும், ஜனக்கூட்டத்தார் நம்மை க்கொன்றுவிடலாமென்று சொல்லலாமல்லவா?

கிரை—ஆம், அது வெளிப்படை, அப்படிச்சொல்லலாம், சாக்ரடீஸ்.

சாக்—உண்மைதான். ஆயினும் என் உயர்நண்ப, இப்போது சற்று முன் நாம்கொண்ட முடிவும், முற்காலங்களில் நாம்கொண்ட முடிவும் ஒன்றென்றே எனக்குத்தோற்றுகின்றது. கேவலம் வாழ்க்கைமட்டும் நன்குமதிக்கப்படுவதன்று. நல்வாழ்க்கை யே யாவற்றிற்கும் உயர்ந்ததாக நாம் மதிக்கவேண்டும், என் று நாம்முன்கொண்ட கொள்கையை இன்னும் கடைப்பிடிக் கிறோமோ என்பதைக் கவனித்துப்பார்.

கிரை—ஆம், நாம் கடைப்பிடிக்கிறோம்.

சாக்—நன்றாய்வாழ்தல், கண்ணியமையாய் வாழ்தல், நியாயவழியில் வாழ்தல் எல்லாம் ஒன்றுதான்; நாமிதைக்கைக்கொள்ளுகிறோமோ இல்லையோ?

கிரை—நாம் கைக்கொள்ளுகிறோம்.

சாக்—இவற்றை அடிப்படையாக வைத்துக்கொண்டு, அதீனியர்கள் சம்மதமின்றிச் சிறையினின்றுந்தப்பியோட முயலுதல் எனக்குச் சரியா? அல்லது தவறா? வென்பதைப்பற்றி விசாரிப்போம். அது சரியென்று கண்டால் நாம் அப்படிச்செய்ய முயற்சிப்போம். அன்றேல், அவ்விதஞ்செய்யாதொழிவோம். நீ கூறிய பணவிரயம் கீர்த்தி மகவுவளர்த்தல் முதலிய காரணங்களெல்லாம் பலராகிய நம்முடைய நண்பர்களின் மனதிலுதித்தனவேயாம். அவரோ மனிதரை இலேசாய் வதைப்பவர். அவரால் கூடுமாயின், யோசனையின்றி அவ்வளவு இலேசாய் மனிதரை உயிர்ப்பிக்கவுஞ் செய்வார். ஆனால் நமக்கு வழிகாட்டியாயிருக்கும் பகுத்தறிவோ, நான் சற்று முன்கேட்ட கேள்வியைத் தவிர யாதொன்றையுங் கவனிக்கவேண்டியதில்லையென்று எனக்கு அறிவிக்கின்றது. என்னைத் தப்புவிப்பதில் உடந்தையாயிருக்கும் மனிதருக்குப் பொருளும் வந்தனமுமளிப்பதாலும், நாம் தப்பியோடுவதில் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் வேலையைச்செய்வதாலும் நாம் நல்லதைச் செய்தவராவோமோ; அன்றி இவையெல்லாஞ் செய்வதால் நாம் தீயதைச் செய்தவராவோமோ? என்று பார்ப்போம். தீயதைச் செய்வதாக நாம் கண்டால் அதை விலக்குதலை நாம் கவனிக்கவேண்டுமேயன்றி, எனக்கு நேரிட்டிருக்கும் இறப்பையும் நான் இங்கு வாளாவிருப்பதால் விளையும் எவ்விதக் கெடுதலையும் கவனிக்கவேண்டியதவசியமன்று.

கிரை—நீர்சொல்வது சரிதான், சாக்ரடீஸ், ஆயினும் நாமிப்பொழுது என்ன செய்வது?

சாக்—ஐயா, நாமிருவருமதைப்பற்றி யோசிப்போம். நான்சொல்வதை நீர் மறுத்துக்கூறக்கூடுமாகில் நான் அதை ஒப்புக்கொ

ள்வேன். உன்னால் கூடாதாகில், என் அருமைநண்ப, அதீனியர்களின் சம்மதமின்றித் தப்பியோடும்படி இனிமேல் என்னிடத்தில் வற்புறுத்திச்சொல்லாதே. உன் சம்மதத்தின்படி நடக்க எனக்கு ஆவலிருக்கிறது. நான்பிழைபட்டேனென்று நீ நினைக்க எனக்குச்சம்மதமில்லை. இப்போதுநான் எடுத்துக்கொண்ட கொள்கையை ஒப்புக்கொள்ளுகிறாயோ? உன்மனதிற்கு நன்றாய்ப்புலப்பட்டவரை என்னுடையகேள்விகட்கு விடைபகர முயற்சிப்பாயோ சொல்?

கிரை—நான் முயற்சிப்பேன்.

சாக்—நாம்வேணுமென்று ஒருபோதும் கெடுதலைச்செய்யக்கூடாதல்லவா? சிலவழிகளில் நாம் கெடுதலைச்செய்யலாம், மற்றவழிகளில் அதைச்செய்யக்கூடாதென்பாயோ? அன்றி, இதற்குமுன் நாம் பன்முறை ஒப்புக்கொண்டபடி, கெடுதலைச்செய்தல் ஒருபோதும் நன்மையேனும் யோக்கியதையேனுமல்லவென்று கூறுவாயோ? இந்தச் சொற்பநாட்களில், நாம் முன்கொண்ட கொள்கைகளெல்லாம் மறந்துபோயினவோ? கிரைடோ, நாம் இப்போது வயதில் முதிர்ந்தவராயினும், முன்னாளில் ஒருவரோடொருவர் மிகுந்த ஊக்கத்துடன் சம்பாஷித்துக்கொண்டிருந்தபோது அறிவில் குழந்தைகட்கு மேலானவர்களல்லவென்று காணவில்லையோ? உலகம் நம்மோடொவ்வினும் ஒவ்வாதாயினும் நாம்சொல்வதெல்லாஞ்சிறிதும் ஐயமின்றி உண்மையன்றோ? நல்லது செய்வதால் சாதலைவிடக் கொடுந்தண்டனை அல்லது இலேசான தண்டனை விளையினும், கெடுதல்செய்தல் அதைச்செய்வோனுக்கு ஒவ்வொருவழியிலும் தீமையும் அவமானமும் விளைக்குமன்றோ? நாமிதை இப்போது நம்புகிறோமோ?

கிரை—ஆம், நம்புகிறோம்.

சாக்—ஆயின், ஒருபோதும் கெட்டதை நாம் செய்யக்கூடாதல்லவா?

கிரை—ஆம், உண்மையாகக்கூடாது.

சாக்—இதுவன்றி, கெடுதலையே நாம் செய்யக்கூடாதென்றால், உலகம் நாம்செய்யலாமென்று நினைக்கிறபடி, கெடுதலுக்குக்கெடுதலைப் பிரதியளித்தல் கூடுமோ?

கிரை—தெளிவாய்க்கூடாது.

சாக்—நல்லது அப்படியாகில், கிரைடோ, நாமயாவர்க்காயினும் கெடுதல் செய்யலாமோ?

கிரை—உண்மையாகவே நான் அப்படி நினைக்கவில்லை; சாக்ரடீஸ்.

சாக்—உலகம் நினைக்கிறபடி தீமைக்குத் தீமையையே பிரதியளித்தல், நன்றோ, நன்றன்றோ?

கிரை—உண்மையாகவே நன்றன்று.

சாக்—ஒருவனுக்குத் தீமை யிழைத்தலுக்கும் அவனைக் கெடுத்தற்கும் வித்தியாசமில்லை. ஏதாவது இருக்கிறதோ நீசொல்?

கிரை—உண்மைதான், வித்தியாசமில்லை.

சாக்—அப்படியாயின் ஒருவன்கையில் நாம் என்ன அவஸ்தைப்பட்டிருந்தபோதிலும் தீமைக்குப்பதிலாகத் தீமையை யவற்கிழைத்தலும் வேறுகெடுதல் செய்தலுங்கூடாது. இதை ஒப்புக்கொள்வதில், கிரைடோ, நீ கருதுவதற்கு அதிகமாகஇடங்கொடுக்காமற் பார்த்துக்கொள். ஏனெனிற் சிலரே இக்கொள்கையைக் கடைப்பிடிக்கிறார்கள், அன்றேல் என்றுங்கடைப்பிடிப்பார்கள், என்பதை நானறிவேன். ஆதலின் அதைக் கடைப்பிடிப்போர்க்கும், பிடியாதோர்க்கும் பொதுவான பக்ஷங்கிடையாது; ஒருவர் கொள்கையை மற்றொருவர் அவமதித்து நோக்குவது அவர்கட்கு இயல்பு. ஆதலின் என்னோடொத்து என்கொள்கையை அங்கீகரிக்கிறாயோவென்று நீ தீர்க்கமாய் ஆலோசித்துப்பார். தீயதுசெய்தலும், தீயதைத்தீயதால் திருப்பிக்கொடுத்தலும், நமக்குக்கெடுதல்செய்த ஒருவனுக்குப் பதிற்கெடுதல்செய்து பழிக்குப்பழிவாங்கிக்

கொள்வதும் ஒருபோதும் சரியல்லவென்ற கொள்கையில் நின்று நாம் நமது ஆராய்ச்சியைத்தொடங்கலாமோ? அன்றி நீ என்னுடன் மாறுபட்டு நான்கொண்ட கொள்கையை மறுக்கிறாயோ? நான்வெகுகாலமாக அதை நம்பியிருக்கிறேன். இன்னுமதை நம்புகிறேன். நீ எவ்விதமேனும் மாறுதலான அபிப்பிராயங்கொண்டால் எனக்கு அதைவிளக்கிச் சொல். நீ இன்னும் நமதுபூர்வக் கொள்கையைக் கடைப்பிடித்தால், நான்சொல்லுகிற அடுத்த விஷயத்தைக்கேள்.

கிரை—ஆம், நான் அதைக்கடைப்பிடிக்கிறேன். நீர்சொல்வதை ஒப்புக்கொள்ளுகிறேன். மேலேசொல்லும்.

சாக்—ஆயின், என்னுடைய அடுத்த விஷயம், அதாவது அடுத்தகேள்வி இதுதான். ஒருமனிதன் தான் நியாயமென்று ஒப்புக்கொண்டவைகளைச் செய்யவேண்டுமோ, அல்லது அவைகளினின்றும் நழுவியோடவேண்டுமோ?

கிரை—அவன் அவைகளைக் கட்டாயஞ்செய்யவேண்டும்.

சாக்—ஆயின் நிதானித்துப்பார். அரசுபுரிவோர் சம்மதமின்றி நான் தப்பியோடினால், நான் யாருக்குச்சிறிதும் தீங்கிழைத்தல் கூடாதோ அவர்க்குத்தீங்கு விளைத்தலாகுமல்லவா? அவ்விதஞ்செய்யின் நான் நியாயமென்று ஒப்புக்கொண்டவைகளைச் செய்வதாகுமோ?

கிரை—உம்முடைய கேள்விக்குப் பதிலளிக்க என்னால் முடியாது; சாக்ரடீஸ், நீர் சொல்வது எனக்கு விளங்கவில்லை.

சாக்—விளங்காவிடின், இவ்வழியிலிதைப்பற்றி யோசித்துப்பார். நானுடையத்தனிக்கையில் நாட்டுச்சட்டங்களும், குடியரசும் என் முன்னிலையிற் றோன்றிப்பின்வருமாறு என்னைக்கேட்பதாக வைத்துக்கொள்வோம். "சாக்ரடீஸ், உன்மனதிற்செய்ய நினைத்திருப்பதைச் சொல், தப்பியோடப்பார்ப்பதால், உன்னாற் கூடியவரை சட்டமாகிய எங்களையும், நாட்டையும் அழிப்பதைத்தவிரவேறு என்ன எண்ணினாய்? சட்டத்தின்

தீர்மானங்கள் வலிகுன்றி, நாட்டிலுள்ளவர்களால் அவமதித்துத் தள்ளப்பட்டால் அந்நாடு அடியோடுதொலைந்து போகாது நிலைத்துநிற்குமென்று நினைக்கிறாயோ?" இதுபோன்ற கேள்விகட்கு நாம் என்னவிடை பகர்வது, கிரைடோ? நியாயஸ்தலத்தின் தீர்மானங்களையாவற்றிற்கும் மேலாக்குகின்ற சட்டத்திற்குப் பரிந்து (முக்கியமாய்) நாவலர்களால் அநேக விஷயங்கள் சொல்லப்படலாம். அதற்குநான் "ஆனாலும் நாடுஎனக்குத் தீங்கிழைத்தது, என்விஷயத்தில் அது பிழைபடத்தீர்மானித்தது" என்று பிரதிகூறலாமோ? நாம் அவ்விதம் சொல்வது சரியோ?

கிரை—நிச்சயமாய் நாம் அப்படிச்சொல்லலாம், சாக்ரடீஸ்.

சாக்—"அவ்விதம் சொல்வது நமது உடன்படிக்கைக்கு அழகோ? நாடுசெய்யும் எவ்விதத்தீர்மானத்திற்கும் நீர் கட்டுப்படவேண்டியதில்லையோ" என்று சட்டங்கள் நமக்கு விடைபகருவதாக வைத்துக்கொள்வோம். இம்மொழிகளைக்கேட்டு நாம் வியந்தால் ஒருவேளை அவைபின்வருமாறுசொல்லும். "சாக்ரடீஸ், எங்கள்வார்த்தைகளை நோக்கி வியக்காதீர். எங்கட்குப் பதிலுரையும், கேள்விகேட்பதும் விடைபகருவதும் உமக்கு வழக்கந்தானே, எங்கள்பேரிலும், நகரத்தின்பேரிலும் நீர் என்ன புகார்செய்கிறீர்? ஏன் எங்களை வேரறுக்கப்பார்க்கிறீர்? முதலில், நாங்கள் உமக்குத் தாய்தந்தையரல்லவோ? எங்கள் மூலமாய்த்தானே உமதுபிதா உமதுமாதாவை மணந்து உம்மைப்பெற்றது. மணவிஷயங்கட்குச் சட்டமாயிருக்கின்ற எம்மவரில் யாரிடத்திலேனும் நீர் குற்றங்காண்கிறீரோ?" இதற்குநான் "ஒருவரிடத்திலுங் காணவில்லை" என்று சொல்லவேண்டும். "அன்றி மற்றவர்களைப்போல நீரும் பெற்றுக்கொண்ட குழந்தையின் இயற்கைச்சுபாவத்தையும் படிப்பையும் ஒழுங்குபடுத்தும் எம்மவரில்யாரையேனும் நீர்குறைகூறுகிறீரோ? உம்மைச் சங்கீதசாஸ்திரத்திலும் தேகப்பயிற்சியிலும் நன்றாய்ப் பயிற்றும்படி உமது தந்தை பணித்ததில் நாங்கள் சரியாக நடந்துகொள்ளவில்

லையோ?" என்றுகேட்டால் "நீங்கள் சரியாய் நடந்து கொண்டீர்கள்" என்று நான் சொல்லவேண்டும். "சரி, அப்படியானால், எங்களால் உலகத்திற்குக்கொண்டுவரப்பட்டும், வளர்க்கப்பட்டும், படிப்பிக்கப்பட்டுமிருக்க, உமது முன்னோரிருந்ததுபோல நீரும் எங்கள் குழந்தை, எங்கள் அடிமையென்பதை எவ்விதம் முதலில் மறுக்கலாம்? இது உண்மையாகில், உமது உரிமைகள் எங்களுடைய உரிமைகட்குச்சமானமானதென்று எப்படி எண்ணலாம்? நாங்கள் யாதேனுமொன்றை உமக்குச்செய்யமுயன்றால் எங்கள்பேரில், அதற்குப் பிரதிசெய்ய உமக்கு உரிமையிருப்பதாக நினைக்கிறீரோ? உமது தந்தைக்கிருந்த உரிமையும், நீரடிமையாகில் உமது எஜமானனுக்கிருக்குமுரிமையும் உமக்கில்லை. அவர் உம்மை வருத்தினால் அவரைத் திரும்பவருத்தவும், உம்மைவைதால் அவர்க்குப்பதிற் கூறவும், உம்மையடித்தால் அவரைத்திருப்பியடிக்கவும், வேறெவ்விதத்திலேனும் கெடுதலுக்குக் கெடுதலைத் திருப்பிக்கொடுக்கவும் உமக்கு அதிகாரங்கிடையாது. (இது இவ்வாறாக) உமது தேசத்தின் பேரிலும் அதன் சட்டங்களின் பேரிலும் பதிலுக்குப்பதில் செய்யலாமென்று நினைக்கிறீரோ? நாங்கள்செய்வது சரியென்றுநம்பி, உம்மைத்தொலைக்க முயன்றால், உண்மையாகவே சன்மார்க்கத்தில் கருத்துள்ளநீர், சட்டமும் தேசமுமாகிய எங்களைத்திரும்பித் தொலைக்கக்கூடியவரை முயன்று, அப்படிச்செய்வது நியாயமென்று கூறுவீரோ? தாய், தகப்பன்முன்னோரைவிட உமதுதேசம் மேலானது; மாக்ஷியுள்ளது; பரிசுத்தமுள்ளது; தூயது; தேவராலும் அறிவுடையோராலுமிகவும் நன்குமதிக்கப்படுவது; அதன்மேல் பயபக்திபாராட்டி அதற்குக் கீழ்ப்படிந்து அது உம்மைக்கோபித்தால், தகப்பனிடம் எப்படித்தாழ்ந்து நெருங்குவீரோ அதைவிட அதிகமாகவே தாழ்ந்து அதனிடம் நெருங்குவது உமதுகடமை. அதுயாதேனுமொன்றைச் செய்யும்படி உம்மைப்பணித்தால், நீரதைச்செய்தல் வேண்டும், அன்றி அப்படிச்செய்வதினின்றும் உம்மை மன்னிக்கக் கேட்டுக்கொள்ளவேண்டும். அடி

களைத் தாங்கவும் சிறைச்சாலைக்குப்போகவும் கட்டளையிடி னும், அன்றிக்காயப்படவும் இறக்கவும் போருக்கு அனுப்பி னும் பதில்பேசாது கீழ்ப்படிதல்வேண்டும். நீர் இவற்றை உணரக்கூடாத அவ்வளவு அறிவிலியோ? இதுதான் உமது கடமை. நீர் ஒன்றற்குமிடங்கொடுக்காதீர் பின்வாங்கா தீர், உமது இடத்தைவிட்டு ஓடாதீர். யுத்தகளத்திலும், நியாயஸ்தலத்திலும் வேறெவ்விடத்திலும் உமதுநகரம், உமது தேசம் சொல்லுகிறபடி நீர் செய்யவேண்டும். அன்றி அவையிடம் உத்தரவு அநியாயமென அவர்க்கறிவுறுத்தல் வேண்டும். உமதுதாய்க்கேனும் தந்தைக்கேனுங் கொடுமை யிழைத்தல் கடவுளின் ஆக்ஞைக்குவிரோதமானது; உமது தேசத்திற்குக் கொடுமையிழைத்தலோ கடவுளின் ஆக்ஞை க்கு இன்னும் அதிகவிரோதமானது;நாமிதற்கு என்ன பதிற் சொல்வது, கிரைடோ? நாம், சட்டங்கள் நியாயத்தைக்கூறு கின்றன என்போமோ, அல்லது இல்லையென்போமோ?

கிரை—அவை நியாயத்தையே கூறுகின்றனவென்று நினைக்கிறேன்.

சாக்—இன்னுமவை கூறும். "சாக்ரடீஸ், நீர் தப்பியோட முயற்சிப் பதில், எங்களைவருத்த முயற்சிப்பதாக நாங்கள் கொள்வது சரியோ? நாமும்மை உலகிற்கொணர்ந்தோம், உம்மை வளர் த்தோம். உம்மைப்படிப்பித்தோம். உமக்கும் ஒவ்வொரு நகரவாசிக்கும் நாம் தரக்கூடிய நல்லவற்றிலெல்லாம் ஒரு பகுதிகொடுத்திருக்கிறோம். அப்படியிருந்தும், அதீனியரில் யாரேனுமொருவர் எங்கள்பேரில் அதிருப்தியடைந்தால், அவர் தம் ஆஸ்தியையெடுத்துக்கொண்டு எங்கேபோகலாமெ ன்று நினைக்கிறாரோ, அவ்விடம் செல்லலாமென்று நாங்கள் வெளிப்படையாய் அறிவிக்கிறோம். பருவம்வந்து சட்டங்க ளையும், நகர அரசாக்ஷியையும் கவனிக்கத்தகுதியடைந்தபோ தே ஒவ்வொருவரும் மேற்சொல்லிய அனுமதியைப்பயன் படுத்திக்கொள்ளலாம். அவர் எங்கள்பேரிலும் நகரத்தின் பேரிலும் அதிருப்தியடைந்தால் அதீனியர் குடியேற்ற நா டாயினுஞ்சரி, அல்லது வேறெந்த அயல்தேயமாயினுஞ்சரி

எங்குப்போகவிரும்புகிறரோ அங்கு அவர் தமது ஆஸ்தியை
யெடுத்துக்கொண்டு செல்கையில் நாங்கள் குறுக்கிடுவதுமி
ல்லை. தடைசெய்வதுமில்லை. ஆனல் நியாயத்தை நாங்கள்
எவ்விதம்தீர்க்கிறேம் மற்றவழிகளில் நகரத்தை எவ்வாறு
நடத்துகிறேமென்று பார்த்தும் இங்குத்தங்குகிற உங்களி
லொவ்வொருவனையும், இங்குத்தங்குகிற ஒருகாரணம் பற்றி
யே நாங்களிட்டதைச்செய்யச் சம்மதித்ததாகக் கூறுவோம்.
எங்கட்குக் கீழ்ப்படியாத ஒவ்வொருவனும், மூன்றுவிதக்
குற்றங்கட்குள்ளாகிறன். தாய்தந்தையாகிய எங்கட்குக்
கீழ்படியாததொன்று. அவனைப்பேணி வளர்த்த எங்கட்குக்
கீழ்ப்படியாதது இரண்டு. எங்கட்குக்கீழ்ப்படிவதாக முன்
ஒப்புக்கொண்டிருந்தும் நாங்கள்செய்வது பிழையென்று எங்
கட்கு அறிவுறுத்தாமல், ஒப்புக்கொண்டவண்ணம் செய்யா
தொழிதல் மூன்று. இதுநிற்க, நாங்கள்சொல்வதை எல்லாம்
செய்யும்படி ஒருவரையுங் கட்டாயப்படுத்துகிறதில்லை. அவ
ற்கு வேறொருவழியுங் காட்டுகிறேம். எங்கட்குக் கீழ்ப்படி
யவாவது அல்லது நாங்கள் பிழைபட்டோமென்று எங்களை
அறிவுறுத்தவாவது சொன்னேம். ஆயினும் அவன் ஒன்
றுஞ் செய்கிறனில்லை.

'சாக்ரடீஸ், நீர்நினைத்ததைச் செய்வதாயிருந்தால் இக்குற்றங்
கட்கெல்லாமுடன்படவேண்டியிருக்கும், இன்னுமற்ற அதீனி
யரைவிடக் குறைந்தபடியாகவன்றி அதிகமாகவே நீர் உட
ன்படவேண்டியிருக்கும். "அது ஏன்"? என்று நான்கேட்
டால், மற்ற அதீனியருக்குமேலாகவே உடன்படிக்கையால்
நான் கட்டுப்பட்டிருக்கிறேனென்று நியாயத்தோடு அவை
பதிலுரைக்கும் அவைசொல்லும். 'சாக்ரடீஸ், நீர் எங்களி
டத்திலும் நகரத்தினிடத்திலும், மிகுந்த திருப்தியடைந்திரு
க்கிறீர். என்பதற்குப்பலமான சாக்ஷியங்களிருக்கின்றன.
மற்ற அதீனியரைவிட நீர் அதிகமாகத் திருப்தியடைந்திருந்
தாலொழிய அவரைவிட அதிகமாக நீர் இந்நகரத்திலிருக்கச்

சம்மதித்திருக்கமாட்டீர். * இஸ்திமியன் பந்தயத்திற்கு ஒரு தரம் சென்றதைத்தவிர வேறுவிழாக்களை உத்தேசித்து ஆதன்ஸ் நகரைவிட்டுச்சென்றதேயில்லை. வேறெவ்விடத்திற்கும் இராணுவ சம்பந்தமாயன்றி நீர் செல்லவில்லை. மற்றவர்களைப்போல் நீர் யாத்திரைசென்றதுமில்லை. உமக்கு மற்றநகரங்களைப் பார்க்கவும் மற்றச்சட்டங்களை உற்றுநோக்கவும் எண்ணங்கிடையாது. எங்களிடத்திலும் நமது நகரத்தினிடத்திலுமுமக்கு மனப்பூர்வமாகத்திருப்தியுண்டு. நீர் அதிக விருப்பத்தோடு எங்களையேற்றுக்கொண்டீர். எங்களால் ஆளப்படச் சம்மதித்தீர். இன்னும் இந்நகரத்தில் நீர் குழந்தைகளைப்பெற்றீர். அது உமக்குமிகவும் ரம்மியமாயிருந்தது. இதுவன்றி நியாயஸ்தலத்தில் உம்மை விசாரிக்கும்போது உமக்கு இஷ்டமிருந்தால் அந்நியதேசம் போய்விடுகிறேனென்று நீர் சொல்லியிருக்கலாம். நாட்டின் உத்தரவன்றி இப்போதுசெய்ய உத்தேசித்திருக்கிறதை, அக்காலத்தில் நாட்டின் சம்மதத்துடனே செய்திருக்கலாம். ஆனால் அப்போது சாகச்சம்மதித்திருப்பதாக வீண்பெருமை சொல்லிக்கொண்டீர். தேசத்தைவிட்டு நீங்கிப்போவதைக் காட்டிலும் சாவது உத்தமமென்றுசொன்னீர். அவ்வார்த்தைகளைக்கூறியதற்கு இப்போது நீர் சிறிதும் வெட்கமுறவில்லை. நீர் சட்டமாகிய எங்களைப் பாராட்டவில்லை. எங்களை அடியோடுதொலைக்க உத்தேசித்திருக்கிறீர். எங்களுடைய ஆளுகைக்குக் கீழ்ப்படிவதாகச் சம்மதித்திருந்தும், கேவலமான ஒரு அடிமைசெய்வதுபோல நீரும் எங்களுடன் செய்துகொண்ட ஒப்பந்த உடன்படிக்கைகளை மீறிக்கொண்டு ஓடப்பார்க்கிறீர்.

---

* இஸ்திமியன் பந்தயம். இது கிரீஸ்தேசத்தில் காரிந்த் பூசந்தில் (Isthmus of Corinth) 2-வருஷத்திற்கொருதடவை நடக்கும் பெரியபந்தயம். இப்பந்தயத்தில் ஜெயம்பெற்றுக் கீர்த்தியடையகிரீஸ் எல்லாப்பாகத்திலிருந்தும் மனிதர்கள் வருவதுண்டு. தரையில் வேகமாயோடுவதிலும், இரதசாரத்தியத்திலும், குஸ்திமுதலிய தொந்த யுத்தங்களிலும் தங்கள் சாமர்த்தியத்தைக காட்டுவார்கள். பந்தயத்தில் ஜெயித்தவர்களுக்கு ஒரு இலைமாலை (Lansel Wreathe) தலையிலணியக்கொடுப்பது வழக்கம். இவ்விதமாலையணிந்தவர்களை வெகுமரியாதையுடன் ஜனங்கள் உபசரிப்பதுண்டு. இதுபோலவே கிரீஸில் ஒலிம்பியா என்றவூரில் இன்னுமதிகவிமரிசையாக 4-வருடத்திற் கொருமுறை ஒருபந்தயம் நடக்கும். (Olympic games)

ஆதலின், இந்தக்கேள்விக்கு முதலில் விடைபகரும், நீர் எமது ஆளுகைக்குள் வசிக்க, வார்த்தையாலன்றிச் செய்கையாலும் சம்மதித்திருக்கிறீரென்று நாங்கள்கொள்வது சரியோ, சரியன்றோ, கிரைடோ, இதற்கு நாம் என்னசொல்வது? அது உண்மைதானென்று ஒப்புக்கொள்ளவேண்டாமோ?

(இன்னும் வரும்).

R. அரங்காசாரியர்.

# DEPARTMENT OF AGRICULTURE, MADRAS.

## A DIALOGUE SINGLE PLANTING OF PADDY.

*தென்னார்க்காடு ஜில்லா விவசாயத்தொழில் செய்யும் மிராஸ்தாராரும் விவசாயசங்க மெம்பருமாகிய ஒருவருக்கும், விவசாயத்தொழில் செய்யும் கிராமவாசியாகிய ரெட்டியாருக்கும் ஒற்றை நாற்றுப் பயிர்செய்யும் விஷயமாய் நடந்த சம்பாஷணை:—*

*மெம்பர்.—ஐயா ரெட்டியாரே, இந்த நன்செய் நிலம் சாகுபடிக்காகத்தழைபோட்டுத் தயார்செய்துவைத்திருப்பது உம்முடையதா?*

*ரெட்டியார்.—ஆமாம்; ஏன்?*

*மெம்பர்.—இந்த நிலத்தில் என்ன செய்யப்போகிறீர்?*

*ரெட்டியார்.—நெல் விதைக்கப்போகிறேன்.*

*மெம்பர்.—(1) இந்தநிலம் எவ்வளவு விஸ்தீரணம்? (2) இதற்கு எவ்வளவு நெல் விதைக்கப்போகிறீர்? (3) நாற்றுவிட்டால் எவ்வளவு விடுவீர்?*

*ரெட்டியார்.—(1) இது ஒருகாணி; (2) இதற்குக் கலநெல்; அதாவது, பட்டணம் 30 படி விதைக்கப்போகிறேன்; (3) நாற்றுவிட்டால் 2 கலம், அதாவது, பட்டணம் 60 படி செல்லும்.*

மெம்பர்.—ரெட்டியாரே, நான் சொல்லும் எனது அநுபவத்தை நம்பி அந்தப்படி செய்வீராணல் உமக்கு நல்ல லாபமும் சௌக்கியமுமிருக்கிறது, அந்தப்படி செய்கிறீரா?

ரெட்டியார்.—இலாபமிருந்தாற் செய்கிறேன்.

மெம்பர்.—இந்த நிலத்தில் நெல் விதைப்பதை நிறுத்தி, ஒரு தளையில், அதாவது 8 செண்டு நிலத்தில், 8 படி நெல்லை நாற்றாக விட்டு 30 நாளைக்குள் ஒவ்வொரு பயிராக வழக்கம்போல இடம் விட்டு நட்டுவிடும்.

ரெட்டியார்.—என்ன ஐயா; நான் வழக்கமாக 30 படி நெல்லை விதைக்காலாக விதைத்துக் களைபறித்துக் கலப்பைபோட்டாற் சில வருஷத்திற் பயிர்கரைந்து காணாமற்போகிறதே. அது எப்படி 7-8-படி நெல் ஒரு காணிக்குப் போதும்?

மெம்பர்.—அது உண்மைதான், அதற்குக் காரணம் சொல்லுகிறேன்; ஒரு காணி நிலத்தில் 30 படி நெல்லை விதைத்தால் அந்த நிலம் முழுவதும் பரம்படித்து நாற்றுவிடும் நிலத்தைப்போலல்லாமல் மேடுபள்ளமாக விருப்பதால் பள்ளநிலத்தில் விழுந்த முளைநெல் அழுகியும், மேட்டில் விழுந்தது காய்ந்து முளையாமற்போயும், சில நெல் மிதிபடாமலிருந்துத் தழையின்மேல் விழுந்து முளையாமலும், அந்த நிலத்தில் விதைப்பதற்குத் தண்ணீர் நிறுத்தி விதைத்தபின் ஜலம் வடியவிடுங் காலத்தில் நெல்விதையை ஜலத்தோடு அடித்துக் கொண்டுபோயும் இப்படிக்கு நெல் விதைக்கும்போதே நஷ்டமாகிறது. அதாவது நாற்றுவிடவேண்டுமானல் அவைகள் ஒன்றோடொன்று சமீபத்தில் முளைத்து அதன் போஷணைகளின் அனுகூலத்தாற் பயிர்கெடாமல் நாற்றுப்பலிதமாகும்; அப்படிக்கில்லாமல், ஒருகாணியில் 30 படி நெல்லை விதைப்பதால், அந்த முளைப்பயிருக்கு இடைவெளி அதிகப்பட்டு அதிற் களைமுளைத்துப் பயிரையும் மூடி சாரல் காற்றினல் நோய்கள் கண்டு பயிர் கரைந்தும் கெட்டுப்போய், இப்படிப்பலவித இடைஞ்சல்களினுற் பயிர் நஷ்டமடைந்து போகிறதால் 30 படி ஒரு காணிக்கு நடாமலும் போகிறது.

ரெட்டியார்.—இப்படி விதைத்தாற்றான் பயிர் நஷ்டமாகப் போகிறதென்கிறீரே. நாங்கள் நாற்றுவிட்டால் கொஞ்ச நிலத்தில் அடர்த்தியாய் விட்டுவைக்கிறோமே, அந்த நாற்றுவன் 60 படி நெல் நாற்று ஒரு காணிக்குக் காணமற் போகிறது.

மெம்பர்—அதற்குங் காரணம் சொல்லுகிறேன்; நீங்கள் விதை நெல்லை நாற்றங்காலில் அளவிற்குமிஞ்சி அதிக அடர்த்தியாக ஒன்றின்மேல் ஒன்றாக நெல் ஏறிக்கொண்டிருக்கும்படி விதைத்து, அந்த நெல்முளைகள் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டு செழிப்பாய் வளர்வதற்கில்லாமல் நெருக்கத்தால் சிறுமையடைந்தும், அந்தப்பயிரைச் சீக்கிரத்தில் வளரவொட்டாமலும் தடிக்க ஒட்டாமலும் நாற்றங்காலைக் காயப்போட்டும் அந்தப்பயிரை 40, 50 நாள்வரையில் வைத்து அதைப்பிடுங்கி 10, 15 பயிராகச்சேர்த்து நடுவதால் ஒரு காணிக்கு 60 படி நெற்பயிர் காணமற்போகிறது.

ரெட்டியார்.—நாங்கள் வழக்கமாய் 10, 15 பயிருக்குமேற் பிடித்து நட்டு அந்தப்பயிரிலேயே 7, 8 கதிர் தானே காணுகிறது; ஒற்றைப்பயிராக நட்டால் ஒன்றிரண்டு கதிர்கள் தானே காணும்?

மெம்பர்.— அப்படிக்கல்ல, ஒற்றைப்பயிர் நடும்வழக்கம் நமக்கு ஏற்றதாயிருப்பதை நாம் கவனிக்கவில்லை; விதைத்தபயிரைக் களை போகும்போது ஒன்றிரண்டு பயிர்தான் சேர்த்து நடுவது வழக்கம்; அதில் 10, 15 கதிர்காணுகிறதைப் பார்த்திருக்கிறோம்; அடர்ந்த நாற்றுவிடுவதில், நாற்றங்காலிலேயே அந்தப்பயிர் தழைக்க வளர ஆரம்பிக்கும் பருவகாலத்தையெல்லாம் சிறுமையோடு வளர்ந்து அதைப்பிடுங்கும்போதும் கழிகொண்டு அடித்துக் கரக்கி அதை நடும்போதும் தனித்தனியாகப் பயிர் வேரூன்றிச் செழித்து வருவதற்கில்லாமல் 10, 15 பயிர்களைச்சேர்த்து நட்டுவிடுவதால் அதன் வேர்கள் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டுஞ் சேர்த்துநட்ட பயிர்கள் ஒன்றோடொன்று பிடித்துக்கொண்டு மட்கியும் கெட்டுப் போய்ப் பூமியின் கொழுமையால் 10, 15 நாட்கழித்துப் பசுமைகண்டு சிறுமையோடும் மழையின் உதவியாலும் பூமியின் குணத்தாலும் வளர்ந்து கதிர்காணுகிறது. இந்த ஒற்றைநாற்

றாக்காகத் தயார்செய்யும் நாற்றங்காற்பயிரானது ஜாஸ்தி அடர்த்தியில்லாமலும் விதைக்கால்போல இடைவெளியிற் பயிர்நஷ்டமில்லாமலும், மூளைத்து இடைஞ்சலில்லாமற் செழிப்பாய் வளருகிறது. அந்தப்பயிர் 25 நாளைக்கெல்லாம் நடத்தகுந்த வளர்ச்சியடைகிறது; அதைப்பிடுங்கிக் கழியால் அடித்துக் கசக்காமல் மண்ணை அலம்பிவிட்டு ஒவ்வொரு பயிராக நட்டால் அந்தப்பயிர் நட்டதினமுதல் வளரவும் பக்கக்கிளைகள் கிளைக்கவும் ஆரம்பித்து நாளுக்குநாள் வளர்ந்து 10, 15 நாட்களுக்கெல்லாம் 15, 20 பயிர்கள் செழித்து வளருகிறது. இந்தப்பயிர் செழிப்பாய் ஆரம்பமுதல் சிறுமையில்லாமல் வளருவதால் ஒவ்வொருபயிரும் கதிர்காணுகிறது அடர்ந்த நாற்றுப்பயிர்கள் கதிர்காணும்போது பொந்தை கட்டிவிட்டதென்று சில கதிர்கள்மாத்திரம் விட்டு மற்றைப்பயிர்கள் கட்டையாக நின்றுவிடுகிறது.

ரெட்டியார்.—ஒற்றை ஒற்றையாக நடுவதற்கு மிகுதியான ஆள்கள் பிடிக்கும், அதுவும் பழக்கமில்லை, அப்படிச்செய்ய முடியாது.

மெம்பர்.—அப்படியல்ல, நீர் ஒற்றை நடவுநட்டுப்பாரும்: வழக்கமாய் ஒரு காணி நடவேணுமானால் 15 ஆட்கள் செல்லும்; இந்த ஒற்றை நாற்று நடுவதற்குக் கூலிஆட்களுக்குச் சுலபமாயும் கஷ்டமில்லாமலுமிருப்பதால் 10 ஆட்கட்குமேற் செல்லாது.

ரெட்டியார்.—விதைக்கால் சாகுபடியும் ஒற்றை நடவுக்கொப்பாகவிருக்கிறது, அந்தப்படியே விதைத்துவிடுகிறேன்.

மெம்பர்—அப்படி விதைப்பதால் உண்டாகும் விதை நஷ்டங்களை முன்னமேயே சொல்லியிருக்கிறேன்; அதைப்பாராவிட்டாலும் அந்தப்பூராநிலத்திலும் விதைத்ததுமுதல் முளைக்கும் களைகளைப் பிடுங்குஞ் செலவு அந்தப்பயிரைக் கலப்பை போடுவதென்று அடர்ந்த பயிரைப்பிடுங்கி இல்லாத இடத்தில் நடுவதின் செலவு நாற்று நடும் செலவைவிட 3 மடங்கு அதிகப்படுகிறது; அது தவிர அந்தப்பயிர் வளர 30 நாளைக்கு ஒரு காணி நிலத்திற்குத் தண்ணீர் பாய்ச்சிப் பாதுகாப்பதைவிட 8 செண்டு நிலத்தில் வேலைசெய்து பாதுகாப்பது சுலபம். அந்த ஒரு காணி நிலத்தில் எரு தழை

போட்டு விதைத்த பயிரும் முளைத்த களைகளும் ஒரு மாதத்தில் அந்த எருவின் சாரத்தை உட்கொண்டு குறைத்துவிடுகிறது. இதனால் விதைத்துப் பயிர் செய்வதைவிட ஒற்றை நாற்றாகவிட்டு நடுவதே குறைந்த செலவும் உயர்ந்த வருமானமும் உள்ளதாக விருப்பதைக் காணலாம்.

ரெட்டியார்.—நாற்றுவிடும் 8 செண்டு நிலத்திற்குக்களை பிடுங்க வேண்டாமோ?

மெம்பர்.—நாற்று நிலத்தைச் சமப்படுத்திக் கொஞ்சம் விதைக் காலைவிட அடர்ந்த பயிராகவிடுவதால் மிகுதியாகக்களைகளும் முளையாது. கொஞ்சமுளைத்திருந்தாலும் அதை எடுக்கவேணுமென்று தோற்றினால் எடுக்கலாம், இல்லாவிட்டால் அப்படியே நாற்றுப் பிடுங்கும்போது அந்தக் களைகள் கழிந்துவிடும்.

ரெட்டியார்.—அப்படியானால் அந்த விதைநெல்லைக் கொஞ்சம் காட்டினால் பார்க்கிறேன்.

மெம்பர்.—வேறு நெற்கிடையாது; நாம் சாகுபடி செய்யும் நெருடன் சம்பா, சடைச்சம்பா, பெருஞ்சம்பா முதலியவைதான் விதைக்கிறது.

ரெட்டியார்.—அது எப்படி; இத்தனை நாளாய் ஏன் இந்த மாதிரி செய்யவில்லை; அது வேறு நெல்லாகத்தான் இருக்கும்.

மெம்பர்.—அப்படி வேறு நெல்லாகவிருந்தால் நான் அதைச் சொல்லுகிறேன்; இதே நெல்லுதான்.

ரெட்டியார்.—இந்த நெல்லுகளை யாராவது ஒற்றைநாற்றாக விட்டு நட்டுப்பார்த்திருக்கிறார்களா?

மெம்பர்.—ஆம்: நான் என்னுடைய பண்ணையிற் சென்ற வருஷத்தில் 5 ஏகருக்கு 20 படி நெல்விட்டு நடப்பட்டு 225 கலம் நெற் கிடைத்ததைப்பார்த்திருக்கிறேன்.

ரெட்டியார்—அப்படியிருந்தால் உங்கள்நிலம் நல்ல கொழுமையுள்ளது, அதிகமாகத் தழைபோட்டுப் பார்த்திருப்பீர்கள்

மெம்பர்.—அப்படி அவசியமேயில்லை: என் பண்ணையில் 5 ஏகர் நிலங்களில் நல்ல மணற்பாங்கு நிலம், தண்ணீர் அடிக்கக்கூடிய சவர்கால் நிலம், கீழ் கலிச்சல் உள்ள நிலம் எல்லாவிதப் பூமியிலும் நடப்பட்டு மாதிரி பார்த்திருக்கிறது. எந்த நிலத்திலும் அவைகள் பின்வாங்கவில்லை; இப்படிச் செழித்துவளருவதற்குக் காரணம் முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது.

ரெட்டியார்.—இந்த ஒற்றைநாற்றுப்பயிர் தண்ணீர் அடிக்கும் வெள்ளச்சாய்கால் நிலத்தில் நட்டால் இந்த ஒற்றைப்பயிரையும் அடித்துக்கொண்டு போய்விடும், அதில் செய்யமுடியாது.

மெம்பர்.—அப்படிப்பட்ட நிலத்திற்றான் அவசியம் இந்த ஒற்றை நாற்றை நடவேண்டும். அந்த நிலத்தில் அடர்ந்த நாற்று நட்டால் அவைகள் வேறான்றி நிலைத்து நிற்க 15, 20 நாள் செல்லும்; அதற்குள் வெள்ளமடித்தால் அந்த நடவுகள் சாய்ந்து நஷ்டமடைந்து விடும். இந்த ஒற்றை நாற்றுகள் நட்டதினமுதல் நிலைத்து வேறான்றிக் கிளைக்கத்தொடங்குவதால் அந்தப்பயிரை வெள்ளமடித்துக் கெடுதிசெய்யாது.

ரெட்டியார்.—இந்தமாதிரிச் செய்வதென்று உங்களுக்கு யார் சொல்லிச் செய்தது?

மெம்பர்.—நான் மஞ்சக்குப்பத்தில் கலெக்டர்துரையவர்கள் கச்சேரியிற் கூடும் டிஸ்திரிக்டு விவசாய சங்கத்தில் மெம்பராக விருக்கிறேன்.

அந்தச்சங்கத்தில் இதன்நன்மையைப் பிரஸ்தாபித்ததில் தெரிந்தும் பாலூர்க் கவர்ன்மெண்ட் பாரம் மானேஜர் சுப்பிரமண்ணிய ஐயரவர்களால் தெளிவாய்ப் போதிக்கப்பட்டு ஷை பாரத்தில் எல்லா நன்செய் நிலங்களும் ஒற்றையாக நட்டிருந்து அதன் உற்பத்தியும் பார்த்துத் தெரிந்துகொண்டேன்.

ரெட்டியார்.—சரி, அப்படியானால் நானும் நேரிற் பார்க்க வேண்டும; எங்கள் ஊரிலும் எல்லாரும் நட்டால்தான் நானும் நடுவேன், அப்படிக்கில்லாவிட்டால் முடியாது.

மெம்பர்—அப்படியானால் எங்கள் ஊரில் என்பண்ணையிலும் இதைப்பார்த்த குடித்தனக்காரர்களும் நட்டிருக்கிறார்கள், அதைப் பார்த்துத் தெரிந்துகொண்டு செய்யலாம்.

ரெட்டியார்.—எனக்கு இப்போது ஒழிவு இல்லை, யாராவது முந்திப்பார்த்து விட்டுவந்து நடட்டும், பார்க்கிறேன்?

மெம்பர்.—இதைப்போல் எல்லாரும் சொன்னால் யார்தான் தைரியமாகச்செய்கிறது, உம்மைப்போற் பெரிய பட்டாதார்களும் தெரிந்தவர்களும் தானே அதைப்பார்த்துச்செய்து மற்றவர்களுக்குக் காண்பிக்கவேண்டும்.

ரெட்டியார்.—உங்கள் ஊரில் உங்களைப்பார்த்து எல்லாரும் இந்தப்படி செய்கிறார்களா?

மெம்பர்.— ஆம், இதைப்பார்த்து எங்கள் ஊரிலும் பக்கத்துக் கிராமத்திலும் இந்தப்படி ஒற்றை நாற்றுப்பயிர்செய்யத் துவக்கிவிட்டார்கள்.

ரெட்டியார்.—இந்தப்படிநடுவதால் என்னலாபம் கிடைக்கிறது?

மெம்பர்.—விதை நெல்லில் மாத்திரம் தவறாமல் நாற்றாகவிடுவதில் ஏகர் 1க்கு 4, 5 ரூபாய்க்குக் குறையாமற் கிடைக்கும்; பிறகு விளைச்சலும் காலத்திற்குத் தகுந்தபடி கிடைக்கும்; விதைக்கால் விதைப்பதிலும், களைபறிப்பது கலப்பைபோடுவது முதலிய கூலிச் செலவுகளிலும் விதையாலும் 4, 5 ரூபாய்க்கு மேற்பட்டே இலாபமிருக்கிறது; வழக்கமாகநட்ட நாற்று அறுவடைக்கு 20 நாளைக்கு முன் அறுவடையாகும். தடித்த பயிரானதாற் கொஞ்சம் காய்ச்சலுந் தாங்கும், நோயாற் பிடிக்காது.

ரெட்டியார்.—நீங்கள் சொன்னது எனக்கு இன்னும் சந்தேகமாயிருக்கிறது; நான் யோஜனைசெய்து எங்கள் குடித்தெய்வக் கோவிற் பூசாரியைக்கணிகேட்டுப் புதிதாகவிருப்பதால் அடுத்தவருஷமாவது கொஞ்சம் பார்க்கிறேன்.

## கோவிற்பட்டிப் பண்ணையில் நடத்திய விவசாய விஷயமான சோதனைகளாலறிந்துகொண்ட உபயோகமுள்ள விஷயங்கள்.

### தோட்ட நிலங்கள்.

இவைகள் அற்பமண்கண்டமுள்ள கடைசித்தரமான செவற் பூமியை உரமும் ஏராளமான கரம்பையும் (குளத்துவண்டல்) அடித்துத் திருத்தியனவாயிருக்கின்றன. ஐந்துவருஷகாலமாய்க் கேப்பையை (ராகியை) (மழை) காலத்திற் பார்போட்டுப் பாரின் இருபக்கத்திலும் நட்டுப் பார்களுக்கு ஊடே (மத்தியில்) இருக்கும் வாய்க்கால்களில் தண்ணீர் பாய்ச்சிவந்ததிற் சாதாரணமாய்ப் பாத்தியில் நட்டுச் சாகுபடி செய்வதைக்காட்டிலும் குறைந்த தண்ணீர் செல்லுவதோடு விளைவும் அதிகமாய்க் கண்டுவருகிறது.

பெரிய அகன்ற நாட்டுக்கலப்பையைவைத்து முழத்துக்கு ஒரு சாலடித்துத் திரும்பவும் சாலை ஒட்டியே மடக்கிப் பார்போட்டுவிடலாம். இவைகளை மண்வெட்டியை வைத்துந் திருத்திக்கொண்டு குறுக்கே 20 அடிக்கு ஒரு பொழி தண்டுகளும் வாய்க்கால்களும் போட்டுக்கொள்ளலாம். இப்படிக்கில்லாமல் அதிக நீளமாய்ப் போனால தண்ணீர் செவ்வையாய் ஏறிப்பாயாது.

பாத்திகளில் நடுவதைக்காட்டிலும் பார்மேல் நட்டால் வெங்காயம் மிகவும் நன்றாய் உண்டாகிறது. வெங்காயம் நட பூமி இறுகியிருக்கும்படி தண்ணீர்விட்டு நடுமுன் பாரின் உச்சியைச் செவ்வையாய் அமுக்கிவிடவேண்டும். வெங்காயம் நன்றாய்க் கிழங்குவைக்க வேண்டுமானால் தாராளமாய் வேரடிக்க விடக்கூடாது. இதற்குப் பாரின் உச்சியில் மிதித்துவிடலாம். ஒவ்வொரு பாரிலும் வெங்காயம் மூன்றுவரிசை நடலாம். கிழங்குநட்டு உண்டாக்குவதைவிட விதைபோட்டு உண்டாக்கும் வெங்காயம் திறமையான கிழங்காயிருப்பதோடுகூட ஏறக்குறைய இரட்டிப்பு மாசூலுங் கிடைக்கும். திருநெல்வேலி ஜில்லாவில் இந்தப்படி இதுவரை யாரும் செய்யாது போனாலும் இவ்விராஜதானியில் மற்றைப்பாகங்களிற் சாதாரணமாய் இது வழக்கத்திலிருக்கிறது.

### கரிசல் நிலம்.

கோடையில் நிலம் செவ்வையாய்க் காய்ந்திருக்குஞ் சமயத்திற் கரிசற் கலப்பை (cotton soil plough) என்னும் பெரிய இருப்புக் கலப்பையால் ஆழ உழுதுவிட்டால் கடப்பாரைவைத்து அறுகைப் பேர்த்தெடுப்பதைப்போலவே அறுகை ஒழித்துவிடலாம். (கலப்பைக்கு எட்டாதபடி) ஆழத்தில் அறுகு இருக்கும சில புன்செய்களுக்கு மட்டும் இந்தக் கலப்பை உதவாது. நாட்டுக்கலப்பையால் உழுத நிலங்களில் அருங்கோடையிற் பயிர்கள் தீய்ந்து போகும் போதும் ஆழ உழுத நிலத்திலுள்ள பயிர்கள் காய்ச்சலைத் தாங்கிக் கொண்டு நல்ல மாசூலும் தரும். இந்தக் கலப்பைக்கு நாலேர் மாடு பூட்டி உழுதால் நாளொன்றுக்கு அரை ஏக்கர் உழலாம். விதைக் கலப்பையைக்கொண்டு சால்சாலாய் விதைத்தால் விதைப்புக்காலத்தில் வெகுசீக்கிரம் வேலையாவதோடுகூடப் பின்னாற்பயிரும் ஒரே நிதானமாய் இருக்கும். பின்பு நிலத்தை மாட்டுக் களைவெட்டியால் கொத்திக்கொடுக்கலாம். இதனால் ஈரங் காய்ந்துபோகாமற் பயிர்கள் காய்ச்சலையும் தாங்கிக்கொள்ளும். நெருங்கிய பயிரையும் செடிகள் ஒவ்வொன்றும் தக்கபடி உண்டாகும்படி இடம்விட்டு வேண்டியபடி இலகுவாய்க் கலைப்பிவித்து விடலாம்.

கம்பையும் இதேமாதிரியாய் (சால்) விதைக்கலப்பையால் விதைத்துப் பின்பு நாட்டுக் கலப்பையாற் பயிரடிப்பதற்குப்பதிலாக மாட்டுக் களைவெட்டியாற் பயிரடித்துவிடலாம்.

எச். ஸி. சாம்ப்சன்,

டிப்டி டைரக்டர் ஆப் அக்ரிகல்சர்.

கள் ; அவ்வேலைகளுக்கெல்லாம் தொட்டதற்கும் பட்டதற்கும் இப்போது பணமே வேண்டியிருக்கிறது. அப்படியிருக்க மேற்சொன்ன வீண்செயல்காரணமாக வந்ததையெல்லாம் விரயஞ்செய்துவிடுவோமேயானால் நாம் தொட்டுநடாத்தும் வேலையின்கதி என்னவாகும்.

நமதுகதிதான் என்னமாய்ப் போகுமென்று நினைக்கிறீர்கள். இதுவிஷயத்தை நம்மைப்பார்க்கிலும் நமதுபெண்பகுதியாரே அதிகமாகக்கவனிக்கவேண்டியது. ஏனென்றால், அவர்களே மானிடஜென்மத்திற்கு உடையேற்பட்டதெல்லாம் நிர்வாணத்தை மூடிக்கொள்வதற்கும் குளிர் வெப்பம் தாங்குவதற்குமே யென்பதையுணராமல், நாம்சேர்த்துவைக்கும் திரவியத்தை பட்டென்ன பீதாம்பரமென்ன இவைகளில் விரயமாக்குகிறவர்கள். இரண்டொரு ரூபாவில் முடிவாகிப் போகிறகலியாண முதலிய உற்சவங்களை நாம் அவர்களுடைய பவிசுக்கும் சொகுசுக்குமாகவே இரண்டாயிரம் மூவாயிரம்வரை செலவழித்துத் திக்குமுக்காடுகிறோம். மேலும், உலகத்தில் எல்லாவிதமான பயித்தியத்திற்கும் மருந்திருக்கிறது. ஆனால் நமதுபெண்மகளுக்கு ஏற்பட்டிருக்கும் நகைப்பயித்தியத்திற்போ நம்மொருவரிடத்திலும் மருந்தில்லாமற்போனது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது.

நகை அழகுக்காக ஏற்பட்டதென்று சிலர்சாதிக்கிறார்கள். இதுதான் அழகு, இன்னநகைதான் சிறப்பு என்று இதுவரையொன்றும் தீர்மானப்படவில்லையாகச்சே அழகிற்காக நகையேற்பட்டதென்பதில் எனக்குவிசுவாசமில்லை. நம்மிடையில் நகைவந்ததற்கு நம்மைப்பார்க்கிலும் நம்மை ஆண்டுவந்த மகம்மதியர்களே காரணமாயிருக்கிறார்கள். இதற்கு இன்றைக்கும் நம்மில் ஊடாடும் நகைகள் அநேகமாய் இந்துஸ்தான் பெயர்கொண்டிருப்பதே சாட்சி.

சகோதரர்களே ! நமது சுய அரசாட்சியை இழந்து ஆயிரக்கணக்கான வருடங்களாகப் பல்வேறு அரசாட்சிகளால் நமது முன்னோர்கள் நெருக்கப்பட்டார்கள். அநேக தினங்களிற் காலையில் ஓர் அரசாட்சியும் மாலையிலோர் அரசாட்சியுமாக விருந்தது. இன்னும் கொஞ்சநேரத்தில் எந்த அரசாட்சி வரப்போகிறதோ வென அவர்களுக்குத் தெரியாததால் அரசாட்சியாரின் நாணயங்கள்மேல் நம் முன்னையோருக்கு நம்பிக்கையில்லாமற் போனது. வாழையடி

வாமையாய் வசித்துவந்த இல்லிடங்களை முதலாகச் சிலவேளைகளில் இழக்கவேண்டி யிருந்ததால் தமது கையிலுள்ள திரவியத்தைக் கொண்டு நிலங்களைவாங்குவதும் நியாயமில்லாமல் தீர்ந்தது. நாணய மாக வைத்திருந்தாலோ காலையிற் செல்மணியாயிருந்த நாணயம் மாலையிற் செலாமணியாயது. ஆகவே, நம்முன்னோர்கள் என்னசெய் தார்கள் என்றால், அவையனைத்தையும் வார்த்தோ உருக்கியோ காதி லும் கழுத்திலும் கள்ளங்கபடில்லாமல் அணிந்துகொண்டார்கள் காலாந்தரத்தில் இது அநுசாரத்திற்கு வந்தது. இதுவே, நம்மிடை யில் வழங்கிய நாணயங்களிற் பல நகையாய் மாறிய வரலாறு. இத ற்குமுன் நகையில்லையோ வென்பார்க்கு நகைக்காக நாணயத்தை ஒருக்காலும் உருக்கியதில்லையென நாணயமாகச் சொல்லுகிறேன்.

இப்படித்தோன்றி, இப்போது இந்தியாவிலிருக்கும் நகைகளை யெல்லாம் விற்றால் நாம்வசித்துவரும் இவ்விந்தியாவைப்போல இன் னொரு இந்தியா வாங்கலாமென்பது பொய்யல்ல. ஆகவே, இவ்விந் தியாவைக்கொண்டு நமது அரசாட்சியாருக்குக் கிடைக்கிற வரும்படி நமது நகைகளைக்கொண்டு நமக்குக் கிடைக்கக்கூடுமானதென்று சொல்லுதல் நிரம்பவும் பொருந்தும். ஆகையால், இப்பெருத்த வரும் படியைத் தனியே நகையின்மூலமாய் இழந்துகொண்டுவருகிற நாம் மற்ற வீண் செலவுகளின் வழியாயும் அநேகமான திரவியங்களைப் போக்கடித்துக்கொண்டு வருதல் ஒழுங்கல்ல என்பதே நான் இப் போது சொலவந்தது; நல்லது போனதுபோகட்டும்; இனியாவது நமது வீண்செலவுகளையிட்டு நாம் எச்சரிக்கையா யிருக்கவேண்டு மென்பது இவ்வம்சத்தின் தீர்மானம்.

எடுத்துக்கொண்ட ஐந்து அம்சங்களையும் இயன்றவரை ஒருவா று கூறிமுடித்தேன். இதற்கு விஸ்தாரமான ஓர் முடிவுரை கூறவேண் டும். எளியேன்மேற் கிருபைகூர்ந்து இவ்வளவு சாவதானமாகக்கேட் டுக்கொண்டதே நிரம்பவும் போதுமானது. தங்கள் காருண்ய சமூ கங்களை இன்னமும் என்பால் தாமதிக்கவைப்பது மிகவும் அநுசித மான காரியம். ஆகையால், கனவான்களே! இறுதியாய் நான் இன் னும் இரண்டொருவார்த்தையிற் கேட்டுக்கொள்வதேதென்றால் தேச ங்களெல்லாம் ஆவலுடனும் ஆர்ப்பரிப்போடும் முன்னேறிக்கொண்டு

போகின்றன. போகும் வழியில் தட்டுப்படக்கூடிய பெருந்தடைகளைப்பொருட்படுத்தாமலோ உடைத்தெறிந்தோ செல்லுகின்றன. தமது குறிப்பையும் நன்னோக்கத்தையும் விட்டு அப்புறம் இப்புறம் ஒதுங்காமல் ஒரேமுகமாக நடந்துபோகின்றன. அநேகந்தடவைகளில் அவைகள் சித்திபெறுகின்றன. ஏதோ நமது இந்தியாவும் அவ்வத்தேசங்களைக் கண்டுபாவிக்கக் கங்கணங்கட்டி முன்னிற்பதுபோலத் தெரிகிறது. கொடுங்கோல் அரசாட்சிகளில் நெடுங்காலம் இருந்துவிட்டதால் நம் பூர்வசங்கடத்தின் காரணம் நமக்கு மறைவிட்டும் தூவான் விடவில்லை யென்றதுபோல் இருக்கிறது. நமது தற்காலத்திய அரசாட்சியோ காருண்யம்பொருந்திய பிரிட்டிஷ் அரசாட்சி. நமது எல்லாவிதச் செல்வங்களையும் இந்த நல்லரசாட்சியிடத்தேயே நாம் பெற்றுக்கொள்ளவேண்டியிருக்கிறது. அதற்கு மேற்சொன்ன ஜாதிவித்தியாசமுதல் வீண்செலவு வரையுமுள்ள காரியாட்சங்கள் போன்றவையே பல்காலும் தடையாயிருக்கின்றன. அவ்விடைஞ்சல்களைக் கூடியவண்ணம் விலக்கவேண்டியதே நமது தற்காலத்திய பிரதானவேலை. ஆகையால் எவ்வளவுதூரம் நமது புராதன ஆசாரங்களை ஒதுக்கவேண்டுமோ அவ்வளவுதூரம் ஒதுக்கிவைத்துங் காரண ஆசாரத்திற் சிறிதும் வடுப்படவிடாமலும் மேற்சொன்ன விக்கினங்களுக்கும் இன்னும் இவைபோலொத்த மற்றைத்தடங்கல்களுக்கும்இலக்காகாத சீர்திருத்தமொன்றைக் கைக்கொண்டு அன்னவைய ஆசாரச்சீர்திருத்தத்தால் நமது ஜனசமூகத்தை ஈடேற்றுவோமாக ; ஈஸ்வரனும் இதற்கு இணங்குவானென்பதே எனது துணிபு.

உ

திருச்சிற்றம்பலம்

# சோடசகலா பிராசாதயோகம்

## முன்னுரை

சிவபெருமானது பஞ்சாக்ஷரமஹிமையைக்கூறும் யோகநூல்களில் திரிகலா, பஞ்சகலா, அஷ்டகலா, நவகலா, துவாதசகலா, ஷோடசகலா பேதங்கள் ஏற்பட்டிருப்பது அறிஞர்பலர் அறிந்த

விஷயம்; அதனுட்கடைசியான ஷோடசகலா பிராசாதயோகத்தைப், பிராசாதமென்றுங்கூறுவதுண்டு. ஞானாமிர்தத்தின்கண் பாயிரம் கடைசி அகவலில் அதன் உரையாசிரியர் 'உன்மனாந்த' மெனச்சுட்டிப் போந்ததற்குப், பதிப்பாசிரியரான சே. ரா. சுப்பிரமணியக் கவிராயரவர்கள், தங்குறிப்பில் ஷோடச கலைகளிவையென்றும், அதன் விரிவை பௌஷ்கரத்திற் காண்கவெனக் குறிப்பிட்டிருக்கின்றார்கள். பௌஷ்கரம் சம்ஸ்கிருதம் கற்றாருக்கே பயன்படுவதன்றி ஏனையோருக்குப் பயன்படாமையானும், அதன் தமிழ்ப்பிரதியொன்று எம்மிடம் இருந்ததைப் பலருங்கண்டுகளிக்குமாறு, தரங்கன்பாடியிலிருக்குஞ்சங்கவித்துவான் ஸ்ரீ-ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்களுடன் சோதித்துச் 'செந்தமிழ்' வாயிலாக வெளியிடலானேன்.

உ

# நூல்

## காப்பு

*அருள்வளர் தில்லை மூதூ ரழகிய மன்று ளாடன்*
*மருவிய பெருமா னீன்ற மழவிளங் களிறு காப்ப*
*விரவிய சிவாக மத்தின் விதிவழி கலையீ ரெட்டுந்*
*திருமலி தமிழி னாலே தெரிந்துரை செப்ப லுற்றாம்.* (க)

*மேதையருக் கீசம்விட கலைமேல் விந்து*
*விரவுமர்த்த சந்திரன்மேல் நிரோதி நாத*
*மோதியநா தாந்தமொடு சத்திவியா பினியே*
*யுயர்சமனை யுன்மனைபன் னிருகலையா யோங்கு*
*மீதிலகு சமனைக்கும் வியாபினிக்கும் நடுவே*
*விமோமரூ பிணியநந்தை யனாதையனா சிருதை*
*யேதமற வேபொருந்திக் கலைபதினா றாகு*
*மீசனணி யம்பலத்தா னிணையடிக்கீ ழிவையே.* (உ)

*முன்னுரைத்த பன்னிரண்டு மாத்திரைகள் பெறுங்கால்*
*மூன்றாகு மேதையிரண் டருக்கீச முறையே*

பண்ணும்விட கலையொன்றும் விந்துவின்பா லரையாம்
பரவுமர்த்த சந்திரன்கால் நிரோதிபடு மரைக்கா
லுன்னியமா காணிபெறு நாதநா தாந்த
மொருபதுமுந் திரையைந்து சத்திவியா பினியா
மன்னுமிரண் டரைசமனை யொன்றே காலுன்
மனைமணமாத் திரையிவைகள் வருங்கோட கலைக்கே. (௩)

மூலமுதல் நாபியந்தங் கோடகலை நாபி
முதலிதையாந் தம்மேதை யிதயமுதற் கண்டத்
தேனுமருக் கீசம்விடங் கண்டமுதற் றாலு
விரந்தரத்துட் புருவநடு விந்துநடு முதலாச்
சால்பிரம ரந்திரமட் டர்த்தசந்திரன் நிரோதி
தருநாத நாதாந்தந் தானுரு பிவைமேற்
கோலமுதற் றுவாதசாந் தத்தளவுஞ் சத்தி
குலவும்வியா பினிசமனை யுன்மனையுங் குறிப்பாம். (௪)

பண்புறுமூ லாதார முதல்நாபி யந்தம்
பயில்கோட கலைத்தானம் பன்னிரண்டங் குலமே
நண்புதரு நாபிமுத லிதையாந்த மேதை
நவிலுவிரற் பன்னிரண்டா நல்லிதைய முதலாச்
கண்டாந்த மருக்கீச மங்குலமேழ் காட்டுங்
கண்டமுதற் றாலுவிரங் திரவந்தங் காணிற்
கொண்டவிட கலைத்தான மங்குலநா லாகுங்
கொடும்புருவ நடுவிந்துத் தானமோரங் குலமே. (௫)

புருவநடு முதற்பிரம ரந்திர மட்டாகப்
பொருந்துமர்த்த சந்திரனே முதற்புகல்நா லினுக்கும்
பெருகிடுமோவ் வொன்றுக்கு மும்மூன் றாகப்
பேசும்விரற் பன்னிரண்டாம் பிரமரந் திரத்துக்
குரியசத்தி யங்குலமொன் றுயர்ந்தவியா பினிக்கா
மொருமூன்று சமனைக்கு மொருநான்கு மனைக்கே

வருநான்கங் குலமாகத் தானமிவை யொன்பான்
மதித்திடு மங்குலமறுபான் வழூத்துங் காலே. (௬)

மேதைமுதன் மூன்றுகலை முடிவினிலொன் றாகும்
விந்துமுதன் மூன்றுகலை முடிவினிலொன் றாகும்
நாதமுதன் மூன்றுகலை முடிவினிலொன் றாகும்
நண்ணும்வியா பினிக்குமொன்று நான்காவ திதுவே
யோதுசம னைக்குரிய சூனியமொன் றாகு
முறைப்பதுமைந் தாவதெனு முன்மனைக்கு மொன்றாம்
பேதமறு சூனியமா றாகுமதன் மீதே
பெரியபர மிருக்குமெனப் பேசுவர்நல் லோரே. (௭)

மிகுமகரத் தோடுகர மகாரம் வட்டம்
வெண்மதியி னொருபாதி திரிகோண மிவைமேற்
பகருமிரு மருங்குசுழி நடுக்கலப்பை யொன்று
பயில்வலத்து விந்துவொரு கலப்பைப்பா லொன்றாம்
நிகரில்விந்து விடம்படைத்த நல்வலமு மொன்றே
நிலையில்வலம் படைத்தவிந்து திரிசூல நிகழுந்
திகழுமிரு விந்துநடு விரண்டு ரேகை
செறிகுடிலங் கலைவடிவந் தெரிபன்னிரண் டினுக்கே. (அ

செங்கமலத் தயன்மேதைக் கருக்கீச கலைக்குத்
திருமாலாம் விடகலைக்குத் தெய்வ முருத்திரனும்
பங்கமிலா விந்துவுக்கு மகேசுரனே யாகும்
பரவுமர்த்த சந்திரனை முதற்புகல்நா லினுக்குந்
தங்குசதா சிவன்றெய்வஞ் சத்திமுத லாகத்
தருங்கலைக்குச் சிவனெனவே சாற்றுவர்நல் லறிஞர்
மங்குல்படி பொன்முகட்டு மணிமாடஞ் செறியு
மன்றுடையான் நின்றதிரு மலரடிக்கீ ழிவையே.

மண்முதலாய்ப் பிரகிருதி பரியந்த மேதை
வருமருக்கீ சம்படரு மாயைதவி ராறி

லெண்ணுமிட கலைமாயை பொருந்தியிடும் விந்து
விலகுசுத்த வித்தையுட னீச்சுரயட் டிருக்கும்
நண்ணுமர்த்த சந்திரனே முதலொருநான் கினுக்கு
நாட்டுசதா சிவஞ்சத்தி சத்திமுதல் நான்காங்
கண்ணுகலை நாலினுக்குஞ் சிவதிறந்தத் துவமாங்
கனகமணி யம்பலத்தான் கழலிணைக்கீ ழிவையே. (௧0)

சொரிதழலொன் றிந்திரவி கூடுமொளி யொன்று
தோன்றிய மின்னொளியொன்று சுடர்த்தீப மொன்று
பரவியவா ளொளியொன்று பிறைநிறமொன் றாகும்
படர்நாத மாணிக்க வொளியொன்று பார்க்கில்
வருமிரண்டு மின்னொளியாம் நாதாந்த மொன்று
வருமிரவி நூறுசத்தி வியாபினியா யிரமா
மருள்சமனை யொருகோடி யாதவர்போ லெரிக்கு
மனந்தகூ ரியரொளிபோ லணிதருமுன் மனையே. (௧௧)

விளங்குகலைக் காரியங்க ளத்தனையு மின்றும்
வியோமரூ பிணியநந்தை யனுதையனு சிருதை
வளங்குலவு வடிவிந்து நான்கினுக்கு மொக்கும்
வழுத்தியனா துகாயம் வளர்ஞான வாரி
துளங்கிய சின்மயவாடி தூயமதி கோடி
சோதியிவை தியானமென வுன்மனைக்குச் சொல்வாம்
களங்கசம னந்தமலந் துவாதசாந்தத் தளவுங்
கருதுநிரா தாரமா முன்மனையுங் கடந்தே. (௧௨)

இலக்கணவிளக்க பரம்பரை,

திருவாரூர், சோமசுந்தரதேசிகன்.

# தருக்க சூத்திர பரீக்கை

தருக்கசூத்திரம் என்பது தருக்க விஷயத்தைச் சுருக்கமாய சொற்களாலே விளக்குஞ் சூத்திரவடிவமான ஒருநூல் எனப்பொருள் படும். தருக்கம் என்பது சாத்திரவிரோதமின்றிப் பொருள்களை நிச்சயிப்பது எனப் பொருள்படும். சூத்திரம் என்பது சொற்பொருள்களை சுருக்கமுறத் தன்மாட்டுப் பிணித்திருப்பது எனப் பொருள் படும். இது தமிழ்ப்பாஷையில் "நூற்பா" என்று வழங்கப்படும். பரீக்கை என்பது குணங்களையுங் குற்றங்களையும் ஆராய்வது எனப் பொருள்படும். இவைகொண்டு "தருக்கசூத்திர பரீக்கை" என்பதற்குப் பொருளுரைத்துக்கொள்ளுக.

வடமொழியிலுள்ள தருக்கம், வியாகரணம் முதலிய சாத்திரங் களெல்லாம் சூத்திரரூபமாகவே செய்யப்பட்டிருக்கின்றன. செய்து வைத்த அறிஞர்களும் சாமானிய புருடரல்லர்; பின் யாவரோ வெனின்; தவத்தான் மனந்தூயராய் முக்குணமுங் கடந்து இறைவனருள் பெற்று முறையறிந்தொழுகும் முனிவர் முதலிய புண்ணிய புருடர்கள். அவர் சூத்திரங்களெல்லாம் அரிதுணர்தற்பாலன. மந்தபுத்திமான்களால் ஒருகாலும் உணரப்படா. சொற்பொருட் சுருக்கமுந் திட்பநுட்பங்களுஞ் சூத்திரத்திற்போல மற்றொன்றில் அமைவதில்லை. தென்மொழியிலே சூத்திரரூபமாகச் செய்யப்பட்டிருக்கும் நூல்கள்பெரும்பாலும் இலக்கணநூல்களேயாம். அவை:- நன்னூல், தொல்காப்பியம் முதலியன. சித்தாந்த நூல்களுள்ளே சிவஞான போதமுஞ் சூத்திரவடிவமாகச் செய்யப்பட்டிருக்கின்றன. இன்னுஞ் சிலவுள.

இச்சூத்திரங்களையெல்லாம் கற்றுணர்தற்கஞ்சிய இக்காலமாணவர்களுள்ளே சிலர், சூத்திரவடிவமாயுள்ள நூல்களெல்லாம் அறிதற்கரிய கர்க்கசம் என்றும் அவற்றாற் பயனில்லை என்றும், அவையெல்லாம் வசனரூபமாயிருத்தல் வேண்டும் என்றும் வாதிப்பர். இவர் கூறும் வார்த்தைகளும் இணங்குமா? இவரெல்லாம் இவ்வாறுட

சூத்திரங்களைப் பிரயாசமுற்றேனும் படித்துக்கொண்டால் என்னை? படித்துக்கொள்ளுதல் அருஞ்செயலா? பண்டுள்ளார் பலர் படித்துக்கொள்ளவில்லையா? பயனடையவில்லையா? பழித்ததும் உண்டா? எத்தனையோ வாக்கியங்களிலே விஸ்தாரமாக எழுதவேண்டிய பரந்த பொருள்களெல்லாம் எழுத்துக்களாற் சுருங்கிய ஒரு சிறு சூத்திரத்தில் அடங்குகின்றனவல்லவா? சூத்திரம்போலச் சொற்பொருள்களைச் சுருக்கி விளக்குதற்கும், விரைந்து பாடம்பண்ணி நினைந்திருத்தற்கும், விவேகத்தை விளக்குதற்கும் வசனமும் வாய்ப்புடையதாகுமா? ஒரு சிறு சூத்திரத்தை வசனமாக வரைதற்கு ஒன்பது பக்கம் வேண்டாமா? ஒன்பது பக்கஞ்சென்றாலும் அவையெல்லாம் அச்சூத்திரம்போல அறிஞர்க்குச்சுவைக்குமா? ஆராய்ந்து வாதிக்க.

[illegible]ள்ள தருக்க நூல்களுள்ளுஞ் சூத்திரவடிவமாய ஒரு நூலிருக்கின்றது. இது செய்தார் அகத்தியர் என்பர். இதன் பெயர் "தருக்கசூத்திரம்" என்பது. இது தருக்கபரிபாஷையின் முகத்தும் வேறிடத்தும் அச்சிடப்பட்டிருக்கின்றது. இதிலே அகப்பட்டதும் இருபது சூத்திரம் மாத்திரமாம். இதனை யாமும் படித்துப் பார்த்தோம். யாவருந் தருக்கவிஷயத்தைச் சுருக்கமாய் மனனஞ்செய்து மனத்திலே வைத்திருத்தற்கு வாய்ப்புடையது.

இத் தருக்கசூத்திரம் பிராசீன தருக்கமன்று. நவீன தருக்கம் என்றே நாம் கொள்ளுகின்றோம். நவீன தர்க்கநூலாகிய தருக்க சங்கிரகம் முதலியனபோலுத் திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் என்னும் ஏழு பதார்த்தங்களையுங் கூறுகின்றது.

### சூத்திரம்

பொருள்குணங் கருமம் பொதுச்சிறப் பொற்றுமை
இன்மை யுடன்பொரு ளேழென மொழிப.

இச்சூத்திரத்திலே திரவியம், குணம் முதலிய ஏழுபதார்த்தங்களும் முறையே சொல்லப்பட்டிருத்தல் அறிக. மற்றைச் சூத்திரங்

களிலும் தர்க்க சங்கிரகத்திற் கூறிய விஷயங்களே கூறப்பட்டிருக்கின்றன. சில சூத்திரங்களிலே சிலபாகங்கள் வேறுபட்டனபோலவுங் காணப்படுகின்றன. மூன்றுஞ் சூத்திரத்திலே சிக்கெனவோசை என்பது சிக்கெனலோசை என வேறுயிற்று. சிக்கெனவு - இறுகிய சம்பந்தம்; சிநேகம் என்றவாறு.

நீரிறை வரைப்பின் கட்டுநீ ருடம்பு
சுவைத்திறங் கவர்வது நாவி னுனியே
கடல்யா றாதி விடைய மாகும்,

நீருடம்பு நீரிறை வரைப்பின் கட்டு=நீருக்குச் சரீரம் வருணலோகத்தின் கண்ணது. வரைப்பு=இடம். கட்டு என்பது கண் என்னும் சினையடியாற் பிறந்த குறிப்புவினைமுற்று. இப்பொருளுடைய "வரைப்பின்கட்டு" என்பது இதன் பின்வருஞ் சூத்திரங்களிரண்டிலும் "வரைப்பிற்கட்டு" என வேறுபட்டுப்போயிற்று.

## காலம்

இறப்புமுதல் வழக்கிற் கேது காலம்,

இச்சூத்திரத்திற் சொல்லப்பட்டது "காலமாவது இறப்பு முதலிய வழக்கிற்கு ஏதுவாயிருப்பது" என்று தருக்க சங்கிரகத்திற் சொல்லப்பட்ட காலத்தி னிலக்கணமேயாம். இதில் காலம் என்பது எழுவாய். ஏது என்பது பயனிலை. ஆதலின் "ஏதுக்காலம்" என அச்சிற்கொண்டது இயையுமாறில்லை.

கிழக்குமுதல் வழக்கிற் கேது திசையே.

இதில் திசை என்பது எழுவாய். ஏது என்பது பயனிலை. ஆதலின் "ஏதுத்திசை" என்னும் பாடம் இயையுமாறில்லை.

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

உ

சிவமயம்.

# கந்தபுராண அருஞ்செய்யுள்விளக்கம்

கந்தபுராணத்து வள்ளியம்மை திருமணப்படலத்திலுள்ள "நாற்றமுந் தோற்றமும்" என்னும் கஉஉ-ம் செய்யுளுக்கு நமது நாட்டிலுள்ள வித்துவான்கள் பலரும் பலவாறு பொருள் கூறுகின்றார்கள். வல்வை, இயற்றமிழ்ப் போதகாசிரியர், வயித்தியலிங்கபிள்ளை அவர்களும், உடுப்பிட்டி, அ. சிவசம்புப்புலவரவர்களும் உரையுஞ்செய்திருக்கின்றார்கள். அவற்றையெல்லாம் நாம் கேட்டும், படித்துமிருக்கின்றேம்., "நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியுஞ் - செய்வினைமறைப்பினுஞ் செலவினும் பயில்வினும் - புணர்ச்சி யெதிர்ப்பாடுள்ளுறுத்துவரூஉ - முணர்ச்சி யேழினு முணர்ந்தபின்றை" என்னும் (கள-உ௩) தொல்காப்பியச் சூத்திரவிதிக்கு ஒத்துவாராமையினாலே அவைகளொன்றும் பொருத்தமுடையனவாகக் காணப்படவில்லை. ஆதலால் அதனுண்மைப் பொருளை மேற்காட்டிய தொல்காப்பியச் சூத்திரவிதிக்கு ஒக்குமாறு எமது சிற்றறிவிற்குத் தெரிந்தவரையில், 'செந்தமிழ்'கற்போர் பலர்க்கும் பயன்படுமாறு ஈண்டு விளக்கிக் காட்டுதும்.

> நாற்றமுந் தோற்றமு நவிலொ ழுக்கமு
> மாற்றமுஞ் செய்கையு மனமு மற்றதும்
> வேற்றுமை யாதலும் விளைவு நோக்கியே
> தேற்றமொ டிகுளையங் கினைய செப்புவாள்.

இ-ள். நாற்றமும்—(வள்ளியம்மையாரிடத்துப் பண்டுள்ள) நறுமணமும்,—தோற்றமும்—(உறுப்புகளின்) றோற்றமும்,—நவில் ஒழுக்கமும்—பயின்ற ஒழுக்கமும்,—மாற்றமும் செய்கையும் மனமும்—வாக்குஞ்செயலும் மனமுமாகிய மூன்றும்,—மற்றதும் வேற்றுமையாதலும்—ஏனையவும் வேற்றுமைப்படுதலையும்,—விளைவும்நோக்கி—மற்றைய நிகழ்ச்சியையும் பார்த்து,--தேற்றமொடு இகுளை அங்கு இனைய செப்புவாள்—(புணர்ச்சி உண்டென்னுந்) தெளிவோடுந் தோழி அங்கே இவற்றைச் சொல்வாள். எ-று.

ஏ-அசை. வேற்றுமையாதலும என்பதை நாற்றமுதலியவற்றோடு தனித்தனி கூட்டிப்பொருள்கொள்க. நவில் - முதனிலைத்தொழிற்பெயர். நவிலல் ஈண்டுப்பயிறல். இப்பொருட்டாதலை "கொன்னவில் குறவர் மாதர்" என இப்படலத்துப் பின்னர்க்கூறப்படுதலானும், "கடிமனைச்சிறார்க் கடுங்கட்கறவை வடிநவில்வேலோன் மறுத்தோம்பல்வேட்டோன்" எனப்பிறர் கூறுமாற்றானும் அறியப்படும். தொல்காப்பியனார் "செய்வினைமறைத்தல்" எனத்தொகுத்துக் கூறியதை இந்நூலாசிரியர் 'மாற்றமுஞ்செய்கையு மனமும்' எனவிரித்துக் கூறினார் எனக்கொள்க. மற்றதுஎன்பதில் து-சாரியை. "ஆயதொருபோழ்துதனில்" என்பதிற்போல. மற்றவும் என்றது. உண்டியையும் செலவையும் பயில்வையும், "மற்றவும்" எனவும் பாடம். செய்யுளாதலின் முறைபிறழக் கூறினார். நாற்றமுதலிய ஏழனையும் நச்சினார்க்கினியர் விளக்கி அச்சூத்திரத்தின்கட் கூறியவற்றை அநுசரித்து நாமும் இங்கு விளக்கிக்காட்டுதும். நாற்றம்வேறுபடுதலாவது:—"ஓதியுநுதலும் பேதைப்பருவத்துக்குத்தக நாறுது தலைவனுடைய கூட்டத்தினால் மான்மதச்சாந்து முதலியனவும் பலபூக்களும் விரவிநாறுதல்." வள்ளியம்மையாரும் தலைவராகிய சுப்பிரமணியப் பெருமானைக் கூடினாராதலின் அவர்கண்ணும் முன்னுள்ள மணம் வேறுபட்டுத் தெய்வமணங்கமழ்ந்ததென்பது. தோற்றம் வேறுபடலாவது:—"நீண்டும் பிறழ்ந்தும் பிள்ளைப்பருவத்து வெள்ளைநோக்கின்றி உள்ளொன்றுகொள்ள நோக்குங்கண்ணும் தந்நிலைதிரிந்து துணைத்து மெல்கிப்பணைத்துக்காட்டும் தோளுமுலையு மென்றின்னோரன்ன." வள்ளியம்மையாரிடத்தும் இவ்வேறுபாடுகள் காணப்பட்டன என்பது. ஒழுக்கம் வேறுபடலாவது:—"பண்ணை ஆயத்தோடுமுற்றிலான் மணற்கொழித்துச் சோறமைத்தன் முதலியன முனிந்தகுறிப்பினளாய்ப் பெண்டன்மைக்கேற்ப ஒழுகல்." இங்குத் தோழி, வள்ளியம்மையார் இதற்குமுன் தன்னுடனிகழ்த்தும் விளையாட்டைமுனிந்தவராய்ப் பெண்டன்மைக்கேற்ப ஒழுகலால் புணர்ச்சி உண்டென அறிந்தாளென ஈண்டைக்கேற்பமொழிந்து கொள்க. உண்டிவேறுபடுதலாவது:—பண்டு பான்முதலியன கொண்டு ஒறுத்து ஊட்ட உண்டுவருகின்றாள் இப்பொழுது ஆசாரமுநாணும் காதலுமீதூர அதன்மேலுவப்பு ஆண்டு இன்றிமிக ஒறுத்த உள்ளத்தனாதல். இங்

குத் தோழி தான் கொடுக்கும் உணவுப்பொருள்களை வள்ளியம்மை யார் பண்டுபோல உண்ணாது வெறுத்தலாலறிந்தாளென்பது. செய்வினைமறைத்தலாவது:—முன்புபோலாது இக்காலத்து நினைவுஞ்செயலுந் தலைவனோடுபட்டனவேயாகலின் அவை பிறர்க்குப் புலனாகாமை மறைத்தல். அஃது ஆயத்தோடுகூடாது இடந்தலைப்பாட்டிற் கேதுவாக நீங்கிநிற்றலாம். ஈண்டுத் தோழியும் தன்னுடன் கூடாது வேறிடத்து நீங்கி நிற்றலாலறிந்தாளென்பது, நச்சினார்க்கினியர் நினைவுஞ்செயலும் எனக்கூறியவற்றோடு மாற்றமும் என ஒன்றுகூட்டித் திரிகரணமும் என இவ்வாசிரியர்கொண்டனரெனக்கொள்க. செலவுவேறுபடுதலாவது:—பண்டுபோல வேண்டியவாறு நடவாது சீர்பெறநடந்து ஓரிடத்திற்சேறல், வள்ளியம்மையாரிடத்தும் இது காணப்பட்டதென்பது. பயில்வுவேறுபடுதலாவது:- "செவிலி முலையிடைத்துயிறல்வேண்டாது பெயர்த்து வேறோரிடத்துப் பயிறல்." இங்குத் தோழிவள்ளியம்மையார் தன்னிடத்திற்றுயிறலைவேண்டாது வேறோரிடத்திற் பயிறலால் அறிந்தாளென்பது. இவ்வாறே இவ்வேழனது வேறுபாட்டானும் முன்னுறுபுணர்ச்சி உண்டெனத்தெளியுமென்பது. நிகழ்ச்சி, தினையழிதன் முதலாயின. இதனானும் புணர்ச்சி உண்டெனத் தெளியுமென்பது அஃது "இப்புனமழிதரவெங்ஙனே கினை" எனவிருவுதலானே அறியப்படும். இனைய என்றது வருஞ் செய்யுளிற் கூறுவனவற்றை. இதனால் தோழியுணர்ச்சியுள் முன்னுறவுணர்தல் கூறப்பட்டது.

> "முன்னுறவுணர்தல் குறையுற வுணர்த
> லிருவரு முள்வழி யவன்வர வுணர்தலென்
> றம்மூன் றென்ப தோழிக் குணர்ச்சி." என்பது சூத்திரம்.

சி. கணேசையர்.

௨

# சாக்ரடீஸ்

(உ௦௧-ம் பக்கத்தொடர்ச்சி)

கிரை—ஆம் ஒப்புக்கொள்ளவேண்டியதுதான், சாக்ரடீஸ்.

சாக்—அப்படியாகில் அவை சொல்லும் "நீர் எங்களோடு செய்துகொண்ட ஒப்பந்த உடன்படிக்கைகளை முறித்துக்கொள்ளு

கிறீரல்லவா? பலாத்காரமாகவாவது ஏமாற்றியாவது உம்மைக் கட்டுப்படும்படி நாங்கள் செய்யவில்லை. நீரும் அவசரமாகத் தீர்மானிக்கவேண்டியதில்லை. எங்களிடத்திலுமக்கு அதிருப்தியிருந்தபோதிலும் நாம் செய்துகொண்ட உடன்படிக்கை அநியாயமானதென் றுமக்குத்தோற்றினும் இந்த 70-வருடங்களில் நீர் ஊரைவிட்டு நீங்கியிருக்கலாம். லக்கிடேமன், கிரீட் நகரங்கள் நன்றாயாளப்படுவதாக அடிக்கடி பிரியமுடன் சொன்னாலும் நீர் அவற்றிற்குப்போகவில்லை. நம்மவருடைய வேறெந்த நகரங்கட்கேனும், அல்லது அந்நிய நகரங்கட்கேனும் நீர் போனதில்லை. நொண்டி, குருடு, முடம் இவர்கட்கும் குறைவாகவே நீர் ஆதன்ஸ் நகருக்கு வெளியே போயிருக்கிறீர். இதனால், நகரத்தினிடத்திலும், அதன் சட்டங்களாகிய எங்களிடத்திலும், மற்ற அதீனியரைவிட அதிகமாகவே திருப்தியடைந்திருக்கிறீரென்பது வெளிப்படை. ஏனெனில், சட்டங்களில்லாத நகரத்தின்பேரில் யார் திருப்தியடைவார்கள். நீர் செய்துகொண்ட உடன்படிக்கைப்படி இப்போது நடக்கமாட்டீரோ? எங்கள் வார்த்தையை நீர் கேட்கும்பக்ஷத்தில் கட்டாயம் அவ்விதம் நடந்துகொள்ளக் கடவீர். ஆதன்ஸ் நகரைவிட்டு ஓடி உம்மைக்கேவலப்படுத்திக் கொள்ளமாட்டீர். நன்றாயோசித்துப் பாரும். உமது உடன்படிக்கைக்கு மீறிநடப்பதால் உமக்காவது உமது நண்பர்கட்காவது என்னநன்மை விளையப்போகிறது. உமது நண்பர்கள் சம்பந்தப்பட்டவரையில் அவர்கள் தேசத்தைவிட்டுநீக்கப்பட்டுச் சுதந்திரம், ஆஸ்திமுதலியவைகளை இழப்பது அநேகமாக நிச்சயம். நீர் சம்பந்தப்பட்டவரையில் அயல் நகரங்களாகிய தீப்ஸ், மகாரா இவைகளில் யாதேனுமொன்றற்குப் போகலாம். இரண்டும் நன்றாயாளப்படுகின்றன. ஆயினும் சாக்ரடீஸ், இக்குடியரசுநாடுகட்கு நீர் ஒரு சத்துருப்போன்று கருதப்படுவீர். நகரத்தின் நன்மையைக்கருதுகிற ஒவ்வொருவரும் உம்மை நன்குமதிக்காது சட்டத்தைக்கெடுப்பவரென்றே எண்ணுவர். நீரும் நியாயாதிபதிகள்கொண்ட கருத்தை ஸ்திரப்படுத்தி அவருடைய தீர்

மானஞ் சரியானதென்று காணப்படுமாறு செய்வீர். ஏனெனிற் சட்டத்தைக்கெடுக்குமொருவன் * வாலிபர்களையும் யோசனையற்றவர்களையும் தீயவழியுய்ப்பவனென்றே கருதப்படலாம். இவ்வாறாயின், நன்றாயாளப்பட்ட நகரங்களையும், நாகரீகம்பெற்ற மனிதர்களையும் நெருங்காதுசெல்வீரோ? அப்படிச்செய்யின், உயிர்தரித்தல் நல்லதாகுமோ? அன்றி அவ்விதமனிதரோடு கூடி வெட்கமின்றிச்சம்பாஷிப்பீரோ? எதைப்பற்றிச் சம்பாஷிப்பீர்? நீர் இங்குப்பேசுகிறவைகளைப் பற்றியோ? தர்மமும், நியாயமும், இராஜாங்க அங்கங்களும், சட்டமும் மனிதற்குவேண்டியவைவயிற் சிறந்தவையென்று கூறுவீரோ? அப்படிச்சொல்லுதல் சாக்ரடீஸுக்கு மிகுந்த அவமானம் விளைவிக்குமென்று நீர் நினைக்கவில்லையோ? நீர் கட்டாயம் அப்படி நினைக்கவேண்டும். அவ்விதஞ்செய்யாது நீரிவ்விடத்தைவிட்டுப் போவீர்; தெசலேயிலுள்ள, கிரைடோவின் நண்பரிடஞ்செல்வீர், அவ்விடத்தில் ஒழுங்கின்மையும், தோன்றியபடி செய்தலும் மனிதரிடமுண்டு. தப்பியோடுகிறவர்கள் தரித்துக்கொள்ளும் குடியானவன்போர்வை அல்லது யாதேனுமொரு உடைதரித்து மாறுவேடம் பூண்டு நீர் சிறையினின்றுந்தப்பி யோடிவந்ததைக்கேட்க அவர்கள் மிகவும் சந்தோஷப்படுவார்கள். ஆயினுமவர்களில் யாரேனுமொருவர், என்ன உமக்குவயதாகிவிட்டது. இன்னுஞ் சிறிதுகாலந்தான் வசிப்பீர், யாவற்றிற்குமேலான சட்டங்களைக்கடந்தொழுகும்படியாகவுமக்கேன் இவ்வாழ்க்கையிலிவ்வளவு பற்று என்று கேளாரோ? அவர்களுக்குத் திருப்தியாய் நீர் நடந்தால் ஒருவேளை அவர்கள் உம்மை அவ்விதங்கேளார். உம்மை வெறுக்கும்படிசெய்துகொண்டீரானால், நீர் தலைகுனிந்து நாணும்படியான சொற்கள் பல கேட்பீர். ஆதலின் யாவரையுந் தோத்திரஞ்செய்து அவர்க்கடிமையாய் நீர் உம்முடைய வாழ்நாளைக் கழிப்பீர். இன்னும், தெசலேயில் விருந்துண்பதைத்தவிர நீர் என்னசெய்யப்போகிறீர். ஆதலின் விருந்தை உத்தேசித்து தெசலேநகரத்திற்கு

---

* சாக்ரடீஸின் மேற்காட்டிய குற்றங்களு ளிதுவொன்று.

யாத்திரை சென்றதாக முடியும். அவ்வாறாயின், நியாயத்
தைப்பற்றியும் தருமத்தைப்பற்றியும், நாம் முன்கூறியவை
யெல்லாம் எங்கேநிற்கும்?

இதுநிற்க, நீர், உமதுகுழந்தைகட்காக உயிர்வாழ விரும்புகிறீ
ரல்லவா? அவர்களை வளர்த்துப் படிப்பிக்க நினைக்கிறீரல்ல
வா? என்ன? அவர்களை உம்மோடு தெசலே நகர்க்குக்கூட
வழைத்துச்சென்று அவ்விடத்திலவர்களை வளர்த்துப் படிப்
பிப்பீரோ? இவ்வித நன்மையை அவர்கட்குச் செய்யும்பொ
ருட்டு, நீர் அவரைத்தன் நாட்டிற்கு அன்னியராக்குவீரோ?
அன்றி ஆதன்ஸிலேயே யவரைவிட்டு நீர் செல்வதாகவைத்
துக்கொண்டாலும், நீர் அவருடனில்லாமற் போயினும் உயி
ருடனிருப்பின் அவர்கள் நன்று வளர்க்கப்பட்டுப் படிப்பிக்
கப்படுவாரென்று நினைக்கலாமோ? சரிதான், ஒருவேளை உன்
நண்பர் அவர்களைக்கவனித்துப் பார்த்துக்கொள்வரென்று
எண்ணலாம். நீர் தெசலே நகர்க்குயாத்திரைசென்றால் பார்
த்துக்கொள்ளும் நண்பர் நீர் * யமபுரத்திற்கு யாத்திரையா
கச்சென்றால் பார்த்துக்கொள்ளாரோ? உம்முடைய சிநேகி
தரென்று அழைத்துக்கொள்ளுகிறவர்களால் யாதேனுமுமக்
குப் பலனிருப்பின் நீர் இதைநிச்சயமாக நம்பவேண்டும்.

சாக்ரடீஸ், உம்மைப்பேணிவளர்த்த எங்கள் சொல்லைக்கேளும்.
உமது குழந்தைகளைப்பற்றி நினையீர், உமதுயிரைப்பற்றி
நினையீர். நியாயத்திற்கு முன்னொன்றையும் வைக்காதீர்.
அப்போதுதான் நீர் வானுலகஞ்செல்லுகையில் அங்கு உமது
செய்கைகளைப்பற்றி விசாரிப்பவரின் முன்னிலையில் நீர் அவ
ற்றிற்கு நன்றாய் உத்திரவாதஞ்சொல்லலாம். நீர் இப்பொ
ழுது எண்ணியதைச் செய்தால் இவ்வுலகத்திலுமக்கேனும்
உமது நண்பர்கட்கேனு மதிகமான சந்தோஷமும், நியாயமும்,
பரிசுத்தமுங்கிடையாது. நீர் இறந்தபின்பும் உமக்குச்சுகங்
கிடையாது. இது நிச்சயம். இப்போது சட்டங்களாகிய

* மனிதர் இறந்தபின் அவருடைய ஆத்மா Hades என்னுமிடத்திற்குச் செல்வதாக அவர் கொள்கை.

எங்களால் தீமையிழைக்கப்படாது மனிதராலிழைக்கப்பட்டு நீர் வெளியேறினதாக முடியும். இவ்வித அவமானவழியில், தீமைக்குத்தீமையைப் பிரதிபாலித்தும், கெடுதிக்குக்கெடுதியைப் பிரதிகொடுத்தும், எங்களுடன்செய்துகொண்ட உடன் படிக்கைகளையும், ஒப்பந்தங்களையும், முறித்துக்கொண்டு நீர் சிறிதுங் கெடுதல் விளைக்கக்கூடாத உமக்கும், உமதுநண்பர்க்கும், உமது தேசத்திற்கும், எங்கட்கும், கெடுதல்விளைத்துத் தப்பியோடினால், நீர் உயிரோடிருக்கையில் நாங்கள் உம்மைக்கோபிப்போம். நீர் இறக்கும்போது எம்முடைய சகோதரரான யமபுரச்சட்டங்கள் உம்மையுபசரித்து ஏற்றுக்கொள்ளா. ஏனெனில், நீர் இங்கு எங்களை இயன்றவரை தொலைக்கமுயன்றீரென்று அவைகள் உணரும். ஆதலின் நாங்கள் சொல்வதைக்கேளும். தான்சொல்வதுபோல உம்மைச் செய்யும்படி கிரைடோவைத் தூண்டவிடாதீர்."

என்னருமை நண்ப, கிரைடோ, ஆவேசம் வந்தவர்கள் குழலோசைகேட்பதாக உணர்வதுபோல நானிதுவரை சொன்னவைகளை நான்கேட்பதாக எனக்குத்தெரியுமென்பதை நன்றாயறிந்துகொள். இவ்வார்த்தைகளின் ஓசை என்காதிலின்னுந் தொனித்துக்கொண்டேயிருக்கிறது. அது மற்ற வார்த்தைகளையெல்லாம் அடக்கிவிடுகிறது. நீ என் மனதைத் திருப்புவதிற் பேசுகிறபேச்செல்லாம் வீணென்றே எனக்கு நிச்சயமாகத்தோற்றுகிறது. ஆயினும் என் மனதைத் திருப்ப உன்னாலாகுமென்று உனக்குத்தோற்றினால், மேற்கொண்டு சொல்லலாம்.

கிரைடோ—இனியொன்றுமென்னாற் சொல்லமுடியாது, சாக்ரடீஸ்.

சாக்ரடீஸ்—அப்படியாயின், கிரைடோ, இருந்தபடியிருக்கட்டும். கடவுள் நம்மை அப்படி நடத்துவதாகத் தெரிவதால் நான் சொல்லுகிறபடி நடப்போம்.

R. அரங்காசாரியர்.

# DEPARTMENT OF AGRICULTURE, MADRAS

## COCOANUT BEETLES

## தென்னைமரத்து வண்டுகள்

இரண்டுவகை வண்டுகள் தென்னைமரங்களையும் மற்றப் பனைவகைகளையும் பிடித்து அம்மரங்களுக்கு மிக நஷ்டத்தை யுண்டாக்குகின்றன. அவைகளில் ஒன்று தமிழில் தென்னம் வண்டென்றும், மலையாளத்திற் செள்ளுவென்றும் பெயர். அது தலையில் ஒரு கொம்புடைய கருப்புவர்ணமுள்ள ஒரு பெரியவண்டு. இது குருத்து ஓலைகளையும் மரத்தின் தலையிலுள்ள மட்டைகளையும் துளைத்து நாசமாக்கும். இளந்தென்னைமரங்களை இவ்வண்டுகள் துளைத்து மிகவும் நாசமாக்குவதைப்போல் முற்றினமரங்களைக் கெடுப்பதில்லை. இவைகள் பட்டுப்போன அடிமரங்களிலாவது அல்லது எருக்குழிகளிலாவது முட்டைகளிட்டு அவைகளிலிருந்து புழுக்களைப்போல் வெளிவந்து, அழுகிய வஸ்துக்களைத்தின்று பெரிதாகி நாளடைவில் வண்டாய் உருமாறுகிறது.

தமிழிற் செவ்வண்டென்று சொல்லப்படுவது முன்சொன்ன கருப்புவண்டைவிடச் சிறிது. இதை அதனுடைய நீண்ட வளைவுள்ள மூக்காற் கண்டறிந்துகொள்ளலாம். இது பனைகளின் உச்சிகளிற் சாதாரணமாய்த் தென்னம் வண்டாலாவது அல்லது பனைமரம் ஏறுகிறவர்களாலாவது செய்த காயங்கள்பட்ட இடங்களில் முட்டைகள்வைக்கும். இதிலிருந்து வெளிப்படும் புழுக்கள் உச்சிமரத்தைத் துளைத்து மரங்களைக்கொன்றுவிடும். இப்புழுக்கள் நார் இழைகளைக் கொண்டு ஒரு கூடுகட்டி அதில் ஸ்தம்பித்திருந்து சுமார் இரண்டு வாரத்திற்குள் உருமாறி வண்டுகளாகின்றன.

### இவைகளின் கேடுதிகளை மாற்றக்கூடிய பிரயத்தனங்கள்

தென்னம்வண்டு மரங்களுக்கு மிகுதியாகக் கெடுதி செய்யாவிட்டாலும், செவ்வண்டினால் உண்டாகும் நஷ்டத்துக்குக் காரணபூத

மாயிருக்கிறது. இந்தத் தென்னம்வண்டை அனேக இடங்களில் தற்காலம் மரங்களிலிருந்து எடுப்பதைப்போல் வெகு சுலபமாய் ஒரு வண்டெடுக்கும் இருப்பு முள் ஊசிகொண்டு எடுத்துவிடலாம்.

2 இவ்வண்டுகளை அப்புறப்படுத்தியபின் அவைகள் துளைத்திருக்கும் துளைகளைத் தாரினால் தடவி மண்கொண்டு மூடிவிடுவதுடன், பனையேறிகள் மரங்களிற் செய்திருக்கும் காயங்களிலும் மேற்சொன்ன தாரைத் தடவவேண்டும். இப்படிச் செய்யாவிட்டாற் செவ்வண்டுகள் மரங்களிலிருக்கும் காயங்களில் முட்டைகளைவைத்து நாசமாக்கிவிடும். இவ்வண்டுகள் முட்டைவைத்தபின் மரங்களை இவைகளின் பிடிப்பிலிருந்து சுலபமாய் நிவர்த்திக்கமுடியாது.

3. பொடிமணலும் உப்பும் சமபாகம் கலந்து ஒரு வருஷத்திற்கு இரண்டுதடவை மரங்களின் உச்சியில் மட்டைகளுக்கிடையே கொஞ்சம் போடலாம். இதனால் தென்னம்வண்டைத் துரத்திவிட ஏதுவுண்டு.

4. செவ்வண்டினாற் பிடிக்கப்பட்டமரங்கள் திரும்பவும் பிழைக்கமாட்டாது. ஆகையால் அவைகளைத் தாமதமின்றி வெட்டிவிட வேண்டும். இந்தப் புழுக்களோடு இந்த மரத்தின் உச்சியை நிர்மூலமாக்கிவிடவேண்டும். இல்லாவிட்டால் இதிலிருக்கும் புழுக்கள் பின்னால் வண்டுகளாகமாறிப் புதுமரங்களையும் நாசமாக்கும்.

5. ஒருதோப்பிற் பட்டுப்போன மரங்களை அப்போதைக்கப்போது வெட்டிக் கீறியுடைத்துக் காயப்போடவேண்டும். அப்படிக் கில்லாமல் அவைகளை அழுக விடவே கூடாது. ஏனென்றால் அழுகும் பதார்த்தங்களிலும் இடங்களிலும் தென்னம்வண்டு பல்கிப் பெருகும். தோட்டத்திற்குள் எவ்விதமான வஸ்துவும் அழுகிக் குவிய இடங்கொடுக்கக்கூடாது.

6. சில இடங்களில் தென்னைமரத்துச் செவ்வண்டின் புழுக்கள் அடிமரத்திலிருந்து உள்ளேசென்று மரத்தைக் கெடுக்கிறதென்கிற அபிப்பிராயமுண்டு. ஆகையால் மேற்றரையிலிருந்து சில அடிகளுக்குமேல் மரத்தைத் துளைக்கும் வழக்கமிருக்கிறது. இவ்வித

அபிப்பிராயம் தப்பானது. மேற்சொன்னபிரகாரம் மரங்களைத் துளை பபது அந்தகஷ்டத்தை யுண்டுபண்ண ஏதுவாகும். ஆகையால அப படிச்செய்யவே கூடாது.

மேற்சொன்ன இரண்டு வண்டுகளின் நாசம் ஒன்றையொன்று பொறுத்ததாயிருக்கிறது. தென்னம்வண்டு நன்றாயிருக்கும் உச்சி மரங்களில் துளைகளையுண்டாக்கிச் செவ்வண்டு அதில் வந்துசேர இடத்தை யுண்டாக்குகிறது. செவ்வண்டுகளிறாற் பட்டுப்போன மரங்கள் தென்னம்வண்டுகள் பல்கிப்பெருக நல்ல வாசஸ்தானமாகிறது. ஆகையால், மேற்சொன்ன முன்ஜாக்கிரதையோடு கவனஞ்செலுத்தாவிட்டால், இவ்வண்டுகளாற் பிடித்த தென்னந்தோப்பில் மரங்கள் நாளடைவில் ஒன்றுக்குப்பின் ஒன்றாக நாசமடைவதைத் தடுக்க முடியாது.

ஸி. ஏ. பார்பர்,

சர்க்கார் தாவர சாஸ்திரி.

# புத்தகக் குறிப்பு

**ஆர்யமத உபாக்யானம் முதற்பாகம்:—**இது திருநெல்வேலி மகா-ா-ா-ஸ்ரீ-ஏ. கிருஷ்ணசாமி ஐயரவர்கள் செய்ததை ஒழுங்கு படுத்தியும் புதியகதைகள் சேர்க்கப்பட்டும் மைலாப்பூர் ஜனரல் சப்ளைஸ் கம்பெனியாரால் பதிப்பிக்கப்பெற்றது. இது நம் இந்திய மாணவர்களுக்கெல்லாம் நல்லொழுக்கமும் நல்லறிவுமுண்டாதற்பொருட்டுத் தப்பாது கற்பிக்கத்தக்க சிறிய உபாக்கியானங்கள் 54 அடங்கியுள்ளது. இடையிடையே கதைகளைக் காட்டத்தக்க படங்களுடன் தெளிவான நடையிலெழுதப் பெற்றிருக்கிறது.

இதன் விலை அணு 4.

ப-ர்.

உ

கடவுள் துணை

# செந்தமிழ்

தொகுதி-௯.] விரோதிகிருது ௵ சித்திரை ௴. [பகுதி-௬.

## யசோதரகாவிய ஆராய்ச்சி

(224-ம் பக்கத் தொடர்ச்சி.)

[ஸ்ரீ: டி. எஸ். குப்புஸாமி சாஸ்திரிகள் எழுதியது.]

(2) [illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥

இதன் பொருள்:—அரசன்றன் வீரவாளை உறையினின்று உருவினவனாய், சண்டகருமன் என்பானை நோக்கிக் கட்டளையிட்டனன். 'நல்ல இலட்சணம்வாய்ந்த மனிதஜாதியரிருவரைத் தேடிக்கொணர்தி. அவ்விருவரையும் என்கையாற் கொன்று நான் தேவிக்குப் பலிகொடுத்த பின்னரே பட்டினத்துக்குடிகள் தமக்குரிய அவ்வவ் விலங்குகளைக் கொன்று பலியிடக்கடவர்'. அரசன் இவ்வாறு கட்டளையிடவே சண்டகருமன் விரைவினிற்றேடிக்கொணரத் தன்னாட்களை ஆங்காங்குச் செலுத்தினன். தானும் சென்றனன்.

"யானிவ் வாளினின் மக்க ளிரட்டையை
யீன மில்பலி யாக வியற்றிய
லேனை மானுடர் தாமிவ் விலங்கினி
லான பூசனை யாற்றுத லாற்றென.

வாட லொன்றிலன் மக்க ளிரட்டையை
யீடி லாத வியல்பினி லிவ்வழி
யேட சண்ட கருமதந் தீகென
நாட வோடின னன்னகர் தன்னுளே." I. 18.

(3) "[illegible] ।
[illegible] ॥"

இதன் பொருள்:—அரசனே! யாதோரறமானது எல்லாவுயிர்களுக்கும் இதமானதோ, எல்லா வுலகத்துக்கும் சுகத்தைக் கொடுப்பதோ அத்தகைய நல்லறத்தைக் கைக்கொண்டு நிலமகட்கு வாய்ந்த நல்லரசனுவாயாக.

"மறவியின் மயங்கி வையத் துயிர்களை வருத்தஞ் செய்யா
தறவியன் மனத்தை யாகி யாருயிர்க் கருள்ப ரப்பிச்
சிறையன பிறவி போக்குந் திருவற மருவிச் சென்று
நிறைபுக ழுலகங் காத்து நீடுவாழ் கென்று நின்றார்." I. 55.

(4) "[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥
[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥"

இதன் பொருள் :— முகமாதிய வனைத்திலும் நெருங்கவியுலாத தீய நாற்றம்; முதுகோ பிறவிக் கூன்; உண்டோ இன்றோ வென்று சந்தேகிக்கத் தக்க கண்கள்; மயிருளதோ வென்ற ஐயப்பாட்டுக்கிடமான புருவங்கள்; நெருங்கிய குறுங் கழுத்து; உதிர்ந்துசிதைந்த தலைமயிர்; காக்கைமூக்குப்போன்று கருத்த வாய்; உள்ளும் வெளியுமாய் வரிசைதப்பிய சில சில பற்கள்; யானையின் சிறுநீரிற் றோய்ந்த கைகள்; கண்கள் கொள்ளாவழிப் புண்ணிறைந்த உடல்.

"நரம்புகள் விசித்த மெய்ய னடையினிற் கழுத ணைந்தே
திரங்கிய விரலன் கையன் சிறுமுகன் சினவு சீறிற்
குரங்கினை யனைய கூனன் குழிந்துபுக் கழிந்த கண்ண
னொருங்கலு நிரலு மன்றி நிமிர்ந்துள விலபல் லென்றாள். I 32.

பூதிகந் தத்தின் மெய்யிற் புண்களுங் கண்கள் கொள்ளாச்
சாதியுந் தக்க தன்றா லவன்வயிற் றளரு முள்ள
நீதவிர்ந் திட்டு நெஞ்சி னிறையினைச் சிறைசெய் கென்றாள்
கோதவிழ்ந் திட்ட வுள்ளக் குணவதி கொம்ப னாளே." I 33.

(5) "[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥
[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥"

இதன் பொருள்:—நல்லுருவம் கட்டழகு காளைப்பருவம் நற்குடி என்றிவைகளைப்பற்றி இப்பொழுது விசாரித்தல் தீய மதியேயாகும். காமதேவனருட்கு ஆட்பட்டான் எவனோ, அவன் மங்கையருக்குக் காமதேவனே யாவான். சிறந்த வடிவழகாலாகிய பயன் யாது? நங்கையர் நெஞ்சகமெனும் நன்மணியைத் தான் பெறுதலேயன்றோ? அப்பயனை அவன் பெற்றானென்றால், பின்னரும் இவ்வித யோசனையினாலென்ன பயன்? காரியம் முடிந்த பின்னர் காரணம் காணல் வேண்டாததே யாகும்.

"என்றலு மிவற்றி னாலென் னிறைவனை யவன்க ளூர்வஞ்
சென்றது சிறந்து முன்னே திருவொடு திறலுந் தேசு
மொன்றிய வழகுங் கல்வி யொளியமை குலத்தோ டெல்லா
நின்றுசெய் பயனு நல்லார் நெஞ்சகம் பெறுத லன்றோ. II 34

காரிய முடிந்த பின்னுங் காரண முடிவு காணல்
காரிய மன்றி தென்றே கருதிடு கடவுள் காமன்
யாருழை யருளைச் செய்யு மவனமக் கனைய னாக
நேரிழை நினைந்து போகி நீடலை முடியி தென்றாள்." II 35

(6) "[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥"

இதன் பொருள்:—பேதையாகிய இப்பாகனே மிகவும் புல்லியன்; ஏது குற்றஞ் செய்தாராயினும் பெண்பாலாரோ வதையினுக் குரியரல்லர்; இவர்களை வதஞ்செய்தல் சிறப்புற்ற க்ஷத்திரிய தர்மத்திற்குற்றதாகாது; நிற்க. இதனால், முத்துமாலை போன்று வெளுத்த புகழ்தானும் நழுவும்; பிறிது மொன்றுண்டு; போர்க்களத்தில் பகைவீரர்களை மடக்கும் இவ்வாளினை இப்புன்சாதியர் மேல் விடுத்தல் எவ்வாறு அடுக்கும்? சிங்கம் யானையின் மத்தகத்தைப் பிளந்து வழக்கப்பட்ட தன் கூரிய பற்களை நரியினிடத்துச் செலுத்தாது.

"மாதரா ரெனைய ரேனும் வதையினுக் குரிய ரல்லர்
பேதைதா னிவனும் பெண்ணி னனையனே பிறிது மொன்றுண்
டேதிலார் மன்னர் சென்னி யிடுதலுக் குரிய வாளிற்
றீதுசெய் சிறுபுன் சாதி சிதைத்தலுந் திறமன் றென்றான்."
II. 46.

(7) "[illegible]
[illegible] ।
[illegible]
[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥"

இதன் பொருள் :— அரசன் வேண்டுமென்றே, அவளுடன் கொஞ்சிக் குலாவிச் சிரித்துவிளையாடினவனாய், அவளது மெல்லிய வுடலின்மேல் தான் விளையாட்டிற்காகக் கையிலேந்தியிருந்த அழகிய கருநெய்தற் பூவினால் வீசினான். அவள் அவ்வடி பொறுக்கமாட்டாதவள்போல் மெய்யை நிலத்தில் வீழ்த்தாள். அரசன் அவளைச் சந்தன நீர் தெளித்துத் தேற்றி, அவளுக்காகத் தான் மனமிரங்கினவன்போல் இவ்வாறு கூறினான்.

"நகைவிளை யாடன் மேவி நரபதி விரகி னின்றே
மிகைவிளை கின்ற நீல மலரினின் வீச லோடும்
புகைகமழ் குழலி சோர்ந்து பொய்யினால் மெய்யை வீழ்த்தாள்
மிகைகமழ் நீரிற் றேற்ற மெல்லிய றேறி னாளே." II. 52.

(8) "[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥"

இதன் பொருள்:—அடி சமர்த்தி! புரை புரை தோறும் நீரைப் பெருக்குவதும் கருத்த வாயையுடையதுமாகிய இதனால் மிகவும் வாதனையடைந்த உனக்கு இன்று நெருங்கி யடுத்துவந்த நமன் ஏதோ தெய்வ வசத்தினா லகன்றான்.

"புரைபுரை தோறு நீர்சேர் பொள்ளலிவ் வுருவிற் றாய
விருநிற மலரி னாலின் றிவளுயி ரேக லுற்ற
தரிதினில் வந்த தின்றென் றவளுட னசதி யாடி
விரகினில் விடுத்து மன்னன் வெய்துயிர்த் தனனிருந்தான்." II. 53

(இன்னும் வரும்).

# ஆறுதாரங்களும் குண்டலினியும்

ஆதாரங்களும் குண்டலினியும் எனப்பெயர் தந்து பிரமஞான சங்கத்தைச் சார்ந்த மிஸ்டர் C. W. லெட்பீடர் என்பார் அவர்களது பத்திரிகையான "தியாஸபிஸ்டு" என்பதிற் பிரசுரித்ததை, சித்தாந்த தீபிகையிற் பிரசுரிக்கப்பட்டிருந்தது. அதனையே சிவ ஞானசித்தியார் இலக்கணவிளக்க பரம்பரை ஸ்ரீ சிதம்பரநாததேசிகரது உரையில் விசேஷமாகச் சொல்லப்பட்டிருப்பதால் ஈண்டு அப்படியே தருகின்றோம்.

"சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி யிரண்டுஞ்
சலிப்பற்று முச்சதுர முதலாதா ரங்க
ளகமார்க்க மறிந்தவற்றி னரும்பொருள்க ளுணர்ந்தங்
கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண் டலத்தின்
முகமார்க்க வமுதுடல முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தன் முதலாக வினைக
ளுகமார்க்க வட்டாங்க யோக முற்று
முழுத்தலுழந் தவர்சிவன்ற னுருவத்தைப் பெறுவர்."

(உரை.) சகமார்க்கமென்றது: யோகபாதமாகிய சகமார்க்கமாவது; புலனொடுக்கி: பத்மமுதலிய வாதனங்களில் ஒன்றிலிருந்து புலன்களின் வழிச்செல்லாதபடி ஆமையானது அவயவங்களை யுள்ளேயடக்குமாறுபோல வடக்கி; தடுத்து வளியிரண்டுஞ்சலிப்பற்று: ரேசகபூரகங்களில் வாயுசலிக்குமதனைத் தடுத்துக் கும்பித்திருந்து பிராணவாயுவைச் சுழுமுனையிலே நிறுத்திப் பிராணாயாமஞ்செய்து ; முச்சதுரமுதலாதாரங்க ளகமார்க்கமறிந்து=தனது சரீரத்தினுள்ளே முக்கோண முதலிய வாறுதாரங்களினதாகிருதியையு மதிருக்குந்தானங்களையும் வடிவு முதலியவற்றையுமதுவதுவாக; அறிந்து அவற்றி னரும்பொருள்களுணர்ந்து = மூலாதார முதலிய வாதாரங்கடோறுமிருக்கும் பத்மதளங்களையும் அவற்றிலிருக்கும் அதிதேவதைகளையும், அக்கரங்களையுமறிந்துதியா

னித்து; அங்கணைந்துபோய் மேலேறியலர்மதிமண்டலத்தின் முக மார்க்கவமுதுடலமுட்டத்தேக்கி—மூலாதாரத்திலிருக்கும் அக்கினி மண்டலத்தினக்கினியைச் சொலிப்பித்து அதனாலே சந்திர மண் டலமாகிய நாபித்தானத்திலிருக்கும் குண்டலினி சத்திசொரூபியா யிருக்கும் அமிர்தத்தை யுருகப்பண்ணி மற்றவாதாரங்கள் அனை த்தினுமடைவே யதோமுகமான பத்மங்களினது முடிச்சுக்களை யடைவே யதனைக்கொண்டு பேதித்து மேலேசென்று விந்துத்தானத் தின் வழியே யிறங்கிப் பெருகாநின்ற வமிர்தத்தாற் றனதுடல் முழு து நிறைந்தவாறே மந்திர பீசாக்கர முச்சரிக்கிறதெல்லாம் விளங் கும்; முழுச்சோதிநினைந்திருத்தல்-எது-தான்முன் தியானம் பண்ணப் படும் பொருளிடத்திலே அடிக்கிற காற்றினது எப்படிச் சலியாமற் பரந்திருக்குமோ அதுபோல பரிபூரணமான பிரகாசானந்தத்தில் அழு ந்தியிருத்தல்சமாதி: இதனாற்பயன் யாதெனில்; முதலாகவினைகள் எது - இம்மைக்கட்கன்மமுதலிய பாசங்களினது வலி கெட்டுப்போ ம்படியு மறுமைக்கண்முத்தி யடைகையின்பொருட்டு; மார்க்க...... உழந்தவர் - எது - சகமார்க்கமாய் யோகபாதத் தட்டாங்கயோகத தை—இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம்—ஆதியுடனொடாறும் வருந்திச் சாதித்தவர்கள்; சிவன்றனுருவத்தைப் பெறுவர்—எது - சிவனது திருமேனியைப் போலத் தாங்களும் வடிவையெடுத்துக்கொண்டு அவனது சமீபத் திலிருப்பார்கள் என்றவாறு. இது பொழிப்பு: இனி அகலம் வரு மாறு:—

மூலாதாரமாவது:— குதத்துக்கு இரண்டங்குலத்துக்குமேல் இலிங்கத்துக்கு இரண்டங்குலத்துக்குக் கீழெனவறிக. இதற்குவடி வம் முக்கோணமாயிருக்கும், செந்தாமரையிதழ்கள் நான்கு; இவற்றி னிற்கு மக்கரங்களாவன வ, ஶ ஷ, ஸ. நான்கிதழ்களுக்கும் தேவ தைகளாவன. விநாயகன், வைரவன், க்ஷேத்திரபாலன், சண்டன் என நான்காம்.

மேல் சுவாதிட்டானமாவது:—இதற்குத் தானம் இலிங்கமூலம். வடிவு அறுகோணம். மிக்கபிரகாசத்தினையுடைய வாறிதழ்த்தாம மக்கரங்கள் ப, ம, ச, ய, ர, ல என்பன.

மேல் மணிபூரகம்:—தானம் நாபி; வடிவு மூலவட்டம். இரத்தினப்பிரகாசம்போன்ற தாமரையிதழ்பத்து, இவற்றினிற்கு மக்கரங்கள் 𑌡, 𑌢, 𑌣, 𑌤, 𑌥, 𑌦, 𑌧, 𑌨, 𑌪, 𑌫 என்பன.

மேல் அநாகதம்:—இதற்குத்தானம் இருதயகமலம்; வடிவுமுக்கோணம். இதற்குப் பொன்னிறத்தினையுடைய விதழ்கள் பன்னிரண்டு. இவற்றினிற்கு மக்கரங்கள் 𑌕, 𑌖, 𑌗, 𑌘, 𑌙, 𑌚, 𑌛, 𑌜, 𑌝, 𑌞; 𑌟, 𑌠 என்பன.

விசுத்தியாவது:—இதற்குத்தானம் கண்டஈடம். வடிவு பதினறு கோணம். வெண்டாமரைத்தளம் பதினறு. இவற்றினிற்கு மக்கரங்கள் 𑌅, 𑌆, 𑌇, 𑌈, 𑌉, 𑌊, 𑌋, 𑍠, 𑌌, 𑍡, 𑌏, 𑌐, 𑌓, 𑌔, 𑌅𑌂, 𑌅𑌃॥ என்பன.

ஆக்கினைக்குத் தானமாவது:—புருவமத்தி, இதற்குப்பத்மதளங்களாவன இரண்டு. இவற்றினிற்கும் அக்கரங்கள் 𑌹, 𑌕𑍍𑌷 என இரண்டு. இதுகூடின பத்மத்தில் பரமசிவனெழுந்தருளியிருப்பர். இது பெரும்பான்மையாதலின், சிறிதாகமங்களிற் சிறுபான்மையாக நவாதாரத்தின் முறைமையைக்கூறிற் பெருகுமாயினுஞ் சிறிது கூறுதும்.

மூலாதாரமுதல் விசுத்தியீறாக முன்புபோலிதற்குங் கிரியாசத்தி இச்சாசத்தி, ஞானசத்தி யிம்மூன்றும் மூன்றுமண்டலம். அஃதொவ்வொன்றுக்கும் பதினறுதளமும், அதில் அகாரமுதலிய எழுத்துப் பதினறும் விந்து நாதங்களுடன்கூடி மேற் பிரமரந்திரத்திற் பத்மதள முன்னூற்றறுபதுடன் கூடினகமலம் பராசத்திமயமாயிருக்கும்; அதிற்பரம சிவனைப்பாவிக்கின் முத்தியடைவார்களென அறிக; இதற்குப் பிரமாணம் சுப்பிரபேதம், மகுடம், சிந்தியம், விசுவத்துங் காண்க.

இலக்கணவிளக்க பரம்பரை,

**திருவாரூர், சோமசுந்தரதேசிகன்.**

திருச்சிற்றம்பலம்

# *சோழநாட்டின் தமிழபிமானம்

## தமிழ்த்தெய்வ வணக்கம்

மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்த வேணி
யிறைவர்தம் பெயரை நாட்டி யிலக்கணஞ் செய்யப் பெற்றே
யறைகடல் வரைப்பிற் பாடை யனைத்தும்வென் றாரி யத்தோ
டுறழ்தரு தமிழ்த்தெய் வத்தையுண்ணினைந் தேத்தல்செய்வாம்.

## அவையடக்கம்

வல்லவியற் புலவர்பல கவிக டோறும்
வழுக்கள்வந்த வகைதேடி மயங்கா வண்ணஞ்
சொல்லினது விதிக்குற்ற மெழுத்தின் குற்றந்
தொடர்நிலைச்செய் யுளின்குற்றந் தொடர்பின் குற்றம்
நல்லதொடை களின்குற்றங் குணத்தின் குற்றம்
நவரசத்தின் குற்றமோ டனந்த குற்ற
மெல்லையற்ற குற்றமெலா மெளிதிற் காண
விலக்கியமா வதற்கிதனை யியம்பு கேனே.

என்று ஒரு புலவர் கூறியபடி சொற்குற்றம், பொருட்குற்றம், அவையஞ்சிமெய்விதிர்ப்பு முதலாகிய குற்றங்களை யேகதேசமாக ஒவ்வோரிடத்திற் காணாமல் ஒருங்கே அடியேனிடத்திலேயே எளிதாக எல்லாரும் காணும்படி யிவ் வுபந்நியாசம் உபந்நியசிக்கப் பெறும்.

நமது தாய்ப்பாஷையாகிய தமிழ்ப்பாஷை பரங்கருணைத்தடங் கடலாகிய பரமசிவன்பாற் றோன்றி ஆசிரியர் அகத்தியமுனிவரால் வளர்க்கப்பட்டதாகும். "தழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்" (ஆரணியகாண்டம், அகத்தியப்படலம்-சக.)

* இவ்வியாசம், மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பத்தாம் வருஷோற்சவ காலத்தில் (26—5—11-ல்) படிக்கப்பெற்றது.

தெய்வத்தோற்றமுடையதாய்த் தெய்வத்தன்மைபொருந்திய மகரிஷியினால் வளர்க்கப்பெற்ற நமது செந்தமிழ்ப்பாஷை "வண் புகழ் மூவர் தண்பொழில் வரைப்பில், நாற்பெய ரெல்லை யகத்தவர் வழங்கும், யாப்பின் வழியது" என ஆசிரியர் தொல்காப்பியனார் பொருளதிகாரச் செய்யுளியலிற் கூறியபடி, சேர சோழ பாண்டியர்களாற் செங்கோல் செலுத்தப்பெற்ற வடவேங்கடம் தென்குமரியென்பவற்றின் இடையிலுள்ள நிலவுலகில் அம் மூவேந்தர்களின் உத்தமோத்தம ஔதாரியங்களாற் பெருந்தமிழ்ப் புலவர்களாற் பெரிதும் நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்ந்தேறிவந்தது. இதனை,

> "மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியு
> மும்முரசு முத்தமிழு முக்கொடியு—மும்மாவுந்
> தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாரன்றோ
> பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்."

என்னுந் திருவள்ளுவமாலை உபோற்காதச் செய்யுள் வலியுறுத்தும். இம் முப்பெரு மூவேந்தரும் இப் புவியைப் படைப்புக்காலந்தொடங்கியே ஆண்டுவந்ததாக ஆன்றோர் கூறுவர். "வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி, பண்பிற் றலைப்பிரித லின்று" என்னுங் குறட்பாவிற்குப் பழங்குடி - தொன்றுதொட்டு வந்த குடியெனவும், தொன்றுதொட்டு வருதல்-சேர சோழ பாண்டியர்போலப் படைப்புக்காலந்தொட்டு மேம்பட்டுவருதல் எனவும் ஆசிரியர் பரிமேலழகர் வரைந்திருப்பது அறிஞர்களறிந்ததாம். இவ் வரசர் மூவரிற் "பிள்ளைக்குந் தொட்டிலுக்குந்தான் பாத்தியம், செட்டிக்கும் தொட்டிலுக்கும் பாத்தியமில்லை." என்று சமீபகாலத்திருந்த கிலேடைபேசுவதிற் சாமர்த்தியசாலியாகிய ஒருவித்துவான் கூறினாற்போலப் பாண்டியரசர்களுக்குந் தமிழ்ச்சங்கங்களுக்குந்தான் வெகுபொருத்தபென்று தெரிகிறது. எப்படியெனில் முதல் மூன்றுசங்கங்களையும், இப்பொழுதைய நான்காஞ் சங்கத்தினையும் உண்டாக்கிப் பரிபாலித்தவர்களும், பரிபாலிப்பவரும் பாண்டியரசர்களும் ஸ்ரீமாந்-பாண்டித்துரைச்சாமியவர்களுமே யென்பது உலகறிந்த விஷயம்.

மூவேந்தர் தமிழ்நாட்டை முறைபுரிந்து மும்முறையு
முதன்மை யான
பாவேய்ந்த தமிழ்ச்சங்கம் பாண்டியரே நிலைநிறுத்தும்
பான்மை பெற்றார்
நாவேய்ந்த விம்முறையு நான்காவ தாஞ்சங்கம்
நாளு மோங்கக்
காவேய்ந்த கரதலத்தெங் காவலன்பாண் டித்துரையே
கருதிச் செய்தான்.

இன்னும், எம் நண்பர் மதுரைத் தேவஸ்தானங் கமிட்டி மெம்பர் ஸ்ரீமாந். அ. இராமநாதன் செட்டியாரவர்கள்,

"பிறந்தசங் கத்தை யெடுத்துயிர் கொடுத்துப்
பின்னுமோர் சிறுதொனி கேட்பா
ரிறந்தசங் கத்தை யெடுத்துயிர் கொடுத்ததி
தெங்கணும் முழங்குறச் செய்தான்"

என்றவற்றால் இனிது விளங்கும். இவை நிற்க,

இனிச் சோழரும், சேரரும் சங்கம் நிறுவா விடினும், பாண்டியரைப்போன்றே தமிழை வளர்த்துவந்திருக்கிறார்களென்ப தொருதலையாம். இவர்களிற் சோழநாட்டின் தமிழபிமானத்தைப்பற்றியே இம் மகாசபையிற் சிறியேன் சிற்றறிவிற்கெட்டிய மட்டில் கூறப் புகுந்தது.

எல்லை

"கடல்கிழக்குத் தெற்குக் கரைபொருவெள் ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம்—வடதிசையி
லேனாட்டுப் பண்ணை யிருபத்து நாற்காதஞ்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல்." (என்பது கம்பர் கவி.)

சோழ அரசர்கள் இந் நாட்டுடன் புறநாடுகளையுங் கைப்பற்றி இராஜராஜர்கள், சக்கரவர்த்திகள் எனப் பெரும்பெயரெய்தி மிக்க வல்லமையோடு செங்கோல் செலுத்தியதாகப் பல நூல்களால் வெளியாகின்றது.

### செந்தமிழ் நிலம்

திராவிடமகாபாஷ்ய கர்த்தாவாகிய ஆசிரியர் ஸ்ரீசிவஞான யோகீஸ்வரர் காஞ்சிப்புராணத்து,

"காசியி னின்றும் போந்து கம்பர்தா மருளப் பெற்று
மாசிலாக் கச்சி மூதூர் மன்னிவீற் றிருந்து பூமே
லாசிலாத் தமிழ் பரப்பி யருந்தமிழ்க் குரவு பூண்ட
தேசிகன் மலைய வெற்பிற் குறுமுனி திருத்தாள் போற்றி."

என்று செந்தமிழ்நிலம் தொண்டைநாட்டுக் காஞ்சிநகர் வரைப்பென்று உணர்த்துகிறார்கள்.

### நன்னூல் விருத்தி உரைகாரர் செந்தமிழ் நிலம்

"சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியுஞ்
சௌந்தர பாண்டிய னெனுந் தமிழ்நாடனுஞ்
சங்கப் புலவருந் தழைத்தினி தோங்கும்
மங்கலப் பாண்டி வளநா டென்ப" என்றுரைப்பர்.

### தொல்காப்பிய உரையாசிரியர்கள் செந்தமிழ்நிலம்

"வையையாற்றின் வடக்கும், மருதயாற்றின் றெற்கும்,
கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்குமாம்" என்பர்.

இதனாற் செந்தமிழ்நிலம் சோழநாடு என்பதாயிற்று. அமிழ்தினுமினிய தமிழ் மொழியைச் செம்மையாக ஆராய்ந்தறியும் ஆன்றோர் நிறைந்த இடமே செந்தமிழ் நிலமாகும் என்பது அறிஞர் கொள்கையாம். இவ்வாறு சோழநாட்டிற் செந்தமிழ்ப் பரிபாலனஞ் செய்துள்ளவர்கள் பல்லாயிரவர்களென்பதே யிங்குக்கூறத் துணிந்தது.

"மன்ற வாணன் மலர்திரு வருளாற்
றென்றமிழ் மகிமை சிவணிய செய்த
வடியவர் கூட்டமு மாதிச் சங்கமும்
படியின்மாப் பெருமை பரவுறு சோழனுஞ்

> சைவமா தவருந் தலைழத்தினி திருக்கு
> மையறு சோழ வளநா டென்ப "

என்ற ஆன்றோரது இச் செய்யுளால் சோழநாட்டில் ஆதியில் ஒரு சங்கமிருந்ததாக வெளியாகிறது. அஃது இன்ன இடத்தில் இன்ன சோழனால் நிறுவப்பெற்று இத்தனைகால மிருந்ததென்றுவிளங்க வில்லை. ஆனாலும் திருவாரூரில் ஒரு சங்கமிருந்ததாக அடியேற் குக் கேள்வி.

சோழ அரசரிற்பலர் "இருவே றுலகத் தியற்கை திருவேறு, தெள்ளிய ராதலும் வேறு" என்னும் பொய்யில் புலவர் திருவாக்குப் பொய்யாகும் வண்ணம் திருவுடையராகவும் தெள்ளியராகவுமிருந் திருப்பது எட்டுத்தொகை, பத்துப்பாட்டு முதலிய சங்கநூல்களால் அறியப்பெறும். சோழன்செங்கணான் என்பவன், சேரமான்கணைக்காலிரும்பொறையுடன் போர்புரிந்து அவனைப்பிடித்துக் கொண்டுபோய்ச்சிறைசெய்திருந்த காலத்திற் பொய்கையார் என்னும் புலவர் பெருமான் களவழிநாற்பதுபாடி மீட்டதும், இன்னுஞ் சோழன் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவன் மலயமான் மக்களை யானைக்கு இட்டகாலத்திற் கோவூர் கிழார் என்னும் வித்துவான் பாடல்பாடிப் பிழைக்கச் செய்ததும் இவ் வரசர்கள் தமிழில் வைத்த பேரன்பைக் காட்டும்.

கடியலூர் உருத்திரங் கண்ணனார் என்னும் பெரும் புலவர் கரிகாற்பெருவளவன் என்னும் சோழன்மேல் பட்டினப்பாலை யென்னும் பிரபந்தம்பாட அவ் வரசன் அப் புலவருக்குப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசளித்துப் பிரபந்தத்தைக் கொண்டான் என்பர். இவற்றைத் திரிபுவன சக்கரவர்த்தியெனப்பட்டந்தரித்து வேங்கை நாடு, சோழநாடு, தொண்டைநாடு, கொங்குநாடு, பாண்டிநாடு என்ற ஐந்து மண்டலங்களுக்கும் அரசனாக இருந்த குலோத்துங்கசோழன் மேல் ஜயங்கொண்டாரென்னும் புலவர்பாடிய கலிங்கத்துப்பரணியில்.

> "தளவழிக்குநகை மெல்லிழி பிலத்தின் வழியே
> தனிநடந்துரகர் தங்கள்பதி கொண்ட வவனும்

களவழிக்கவிதை பொய்கையுரை செய்ய வுதியன்
கால்வழித்தளையை வெட்டியர சிட்ட வவனும்." என்றும்,

"தத்து நீர்வரால் குருமி வென்றதுந்
தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
பத்தொ டாறுநூ றாயிரம் பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்." என்றும்,

கூறியிருப்பன கவனிக்கத் தக்கன.

இன்னும், உறையூரிலிருந் தரசியற்றிய கரிகாற்சோழன் அறு பத்துநான்கு கலைகளையுங் கற்றிருந்தானென்றும், இராஜசேகரனென் னும் பாண்டியன் 63-கலைகள்கற்றிருந்தானென்றும், சோழதேசத் துப் புலவனொருவனாற்றெரிந்து பின்னர் அவ் வொன்றையுந் தெரிந்து கொண்டானென்றுந் திருவிளையாடற் புராணங்கூறும்.

"பொன்னி நாடவன் வாயிலுள் ளானொரு புலவன்வந் தலர்வேம்பின்
கன்னி நாடனைக் கண்டுமுன் பரவுவான் கனைகழற் கரிகாலெம்
மன்ன வற்கறு பத்துநாற் கலைகளும் வரும்வரா தனக்கொன்று
தென்ன ரேறனை யாயது பரதநூல் தெரிந்திலை யெனச்சொன்னான்."

கம்பர் சோழநாட்டுத் திருவழுந்தூரி லவதரித்துச் சோழவரச ராலுந் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலாலும் அன் பும் ஆதரவும்பெற்றுக் கவிச்சக்கர வர்த்தியென் றுலகு கொண்டாட "இராமாயணம்" பாடி "இன்று இவ்வுலகங்கள் இராமன்' பாக்குந் தொல்புகழுமுதினைப்பருகுகின்றனவே" யென்று அவர்கூறியபடி உபகரித்திருப்பது உலகமறிந்தவிஷயம்.

"பெற்று வளர்த்தும் வித்தைதனைப்
　　யேணிக் கொடுத்தும் பெயர்கொடுத்தும்
பற்ற வரும்பா லமுதளித்தும்
　　பகைத்த வறுமைப் பயந்தீர்த்தும்
கற்ற முதனூற் றிருவழுந்தூர்க்
　　கம்பன் றழையக் கருணைசெய்தோர்

டற்றும் புலவோ ரையும்வாழ
வைத்தார் சோழ மண்டலமே."

"குணங்கொள் சடையன் புதுச்சேரிக்
கொடையன் சேதி ராயன்முதற்
கணங்கொள் பெரியோர் பலர்கூடிக்
கம்ப நாடன் களிகூற
விணங்கும் பரிசி லீந்துபுளி
யேழும் புகழே ழெழுபதெனும்
மணங்கொள் பெருங்காப் பியப்பனுவல்
வகித்தார் சோழ மண்டலமே."

என்று கூறியதனாற் கம்பர் ஏரெழுபதென்னும் பிரபந்தம்பாடிச் சடையப்ப வள்ளலுஞ் சேதிராயனும் ஏனைய பெரியோர்களுநிறைந்த சபையில் அரங்கேற்றியது விளக்கமாம்.

இன்னும், சிங்களதேசத்தரசனாகிய பராராஜசிங்கப் பெருமான் என்பவன் ஈழநாடு பஞ்சத்தால் வருந்தியகாலத்திற் சடையவள்ளலைப் பாட்டாற் றுதிக்க இவர் ஆயிரம் (1000) கப்பலில் நெல் நிறைத் தனுப்பி யவன் நாடுமுழுவதையும் பாதுகாத்ததாகவுந் தெரிகிறது.

"தேனார் தொடையார் பராசசிங்கப் பெருமான் செழுந் தமிழ்க்
கானார் நெல்லின் மலைகோடி கண்டி நாடு கரை சேரக் [குக்
கூனார் கப்ப லாயிரத்திற் கொடுபோ யளித்த கொடைத்தடக்கை
மானா கரன்சங் கரன்சடையன் வளஞ்சேர் சோழ மண்டலமே."

மேற் குறிப்பிட்ட பராசசிங்கப் பெருமான் சடையவள்ளலுக் கெழுதிவிட்ட கவி பின்வரும் கவியாயிருக்கலாமென்று ஊகிக்கப்படுகிறது.

"இரவு நண்பக லாகி லென்பக லிருள றாவிர வாகிலென்
இரவி யெண்டிசை மாறி லென்கட லேழு மேறிலென் வற்றிலென்
மரபு தங்கிய முறைமை பேணிய மன்னர் போகிலென் ஆகிலென்
வளமை யின்புறு சோழ மண்டல வாழ்க்கை காரண மாகவே

கருது செம்பொனி னம்ப லத்திலோர் கடவு ணின்று நடிக்குமே
காவி ரித்திரு நதியி லேயொரு கருணை மாமுகில் றுயி லுமே
தருவு யர்ந்திடு புதுவை யம்பதி தங்கு மன்னிய சேகரன்
சங்க ரன்றரு சடைய னென்றொரு தரும தேவதை வாழவே."

தவிரவும், ஒட்டக்கூத்தர் சடையவள்ளலின் தந்தையாகிய சங்கரன் என்பவருக்கு உதவித்தொழில் புரிந்துகொண்டிருந்தாரெனவும், காங்கேயன் என்னும் உபகாரியொருவன் அவருக்குக் கல்வி பயில்வித்து நல்லறிஞராக்கிக் கவிராட்சதன் எனவும் கௌடப்புலவனெனவும் பெயர்கொடுத்துச் சிறப்பித்தானெனவும், அவர் அந் நன்றி பாராட்டிக் காங்கேயன்மேல் நாலாயிரக்கோவை பாடினதாகவுந் தெரிகின்றது. அன்றியும், ஒட்டக்கூத்தர் குலோத்துங்கசோழன் ஆசிரியராகவும், இராஜாங்க நிர்வாகராகவு மிருந்ததும், உத்தரகாண்டம் பாடியதும் பிறவும் யாவரும் நன்கறிந்த விஷயங்களாம்.

"ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெங்கு
நீடுங் கொடையைத் தரித்தபிரா னிந்த நீணிலத்திற்
பாடும் புலவர் புகழொட்டக் கூத்தர் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென்றே யெனைச் சொல்லுவரே."

என்று குலோத்துங்கசோழன் பட்டாபிஷேககாலத்தில் வாழ்த்தாகக் கூத்தர் இரண்டடிகளைப்பாட மற்றிரண்டடிகளை மேற்கூறிய அரசர் பூர்த்திசெய்ததாகச் சொல்லப்படுகிறது. கூத்தர் உத்தரகாண்டம் பாடி அரங்கேற்றியதைப்பற்றிப் பின்வருங்கவி நன்குவிளக்கும்.

"பூணு லாவுங் கம்பனலம் பொலியுந் தமிழாற் புகழுய்த்திக்
காணு மாறு காண்டமுறுங் கதையிற் பெரிய கதையென்னுந்
தாணி லாவுங் கழலபயன் சபையிற் பயிலுத் தரகாண்டம்
வாணி தாச னரங்கேற்ற வைத்தார் சோழ மண்டலமே."

இவை நிற்க, பிறக்க முத்திதரும் திவ்யஸ்தலமாகிய திருவாரூரிலரசியற்றிய ராஜராஜ அபயகுலசேகர சோழமகாராஜாவாற் சமயகுரவர் மூவர் அருளிச்செய்த திராவிடவேதத்திருமுறைகள் வெளியேற்றப்பெற்றுத் தமிழுலகம் இன்றும் என்றும் பிறவிப்பெருநோய்

தீர்க்கும் பேரமுதாகக்கொண்டு வாழ்வது எல்லார்க்கும் அநுபவசித்தமாம். தற்காலம் இம் மூவர் முதலிகளின் தேவாரம்பெற்ற சிவஸ்தலங்கள் இருநூற்றெழுபத்துநான்காம். இந்த இருநூற்று எழுபத்துநான்கிற் சோழநாட்டிற் பாடல்பெற்ற ஸ்தலங்கள் (190) நூற்றுத் தொண்ணூறும்.

"ஈண்டுபுகழ்ச் சோணாட்டி லொருநூற்றுத் தொண்ணூறீ ழத்திரண்டு, பாண்டியிலீ ரேழ்மலைநாட் டொன்றுகொங்கேழ் மகதிருபத்திரண்டு, பூண்டதொண்டை நன்னாட் டெண் ணான்குதுளு வொன்றுவட புலத்தைந் தாகும், ஆண்டசிவஸ் தலமிருநூற் றெழுபத்து நான்குதொகை யாகு மன்றே."

விஷ்ணுமகாஸ்தலங்கள் நூற்றெட்டில் நாற்பது திவ்யதேசங்கள் சோணாட்டில் ஆழ்வார்களால் மங்களாசாஸநம் பெற்றுள்ளன. சமயாசாரியர் மூவரைத்தவிர அறுபத்துமும்மை நாயன்மார்களில் ஒருவராகிய திருமூலநாயனார் திருவாவடுதுறையில் அரச விருட்சத்தின்கீழ் மூவாயிரம் வருஷம் சிவயோகத்தமர்ந்து வருஷம் ஒவ்வொரு திருப்பாடலாக மூவாயிரந் திருப்பாடல்களாற் சைவாகமங்களிலுணர்த்தப்பெற்ற சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களையும் உணர்த்துகின்ற செந்தமிழ்நூலைத் தந்தருளியிருப்பதும், காரைக்காலம்மையார், அற்புதத் திருவந்தாதி முதலிய நூல்களை யருளியிருப்பதும் குறிப்பிடத்தக்கதாம். அம்மட்டோ! இம்மை மறுமை வீடு மூன்றும் பயக்கும் பெரியபுராணத்தை அநபாய சோழமகாராஜாவால் ஸ்ரீ சேக்கிழார் திருவாய்மலர்ந்தருள அது சைவ சிரோபூஷணமாக விளங்கிவருவதும் அறிஞர்களறிந்ததே.

காவிரிப்பூம்பட்டினத்திற் குபேரனார் திருவவதாரமாகத் திருவெண்காடனாரென்னும் பட்டினத்தடிகள் திருவவதாரமாகிப் பெருமான் சந்நிதியில் அன்புபெருக உரைதடுமாறி யுரோமஞ்சிலிர்ப்பக் கரமலர் குவித்துக் கண்ணீர்ததும்ப ஆனந்தபரவசராய் மனங்குழைந்துகுழைந்துருகப்பாடிய பாடற்றிருமுறைகளைப் பதினோராந் திருமுறையிற் படித்துப்படித்துப் பரமானந்தங் கொள்ளநின்று நிலவி வருவதை அறியாதார் யார்? சந்தானாசாரிய பீடமாகவிளங்குந் திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனம், தருமபுரவாதீ

னம், சொர்க்கபுரவாதீனம் முதலிய ஆதீனாதிபதிகளாலும், அவ்வாதீனங்களின் சிஷ்யகோடிகளாலுந் தோன்றிய பைந்தமிழ்ப் பனுவல்களும், உரைகளும் பலவாம். அவற்றில் திருவாவடுதுறையாதீனம் மாதவச் சிவஞானயோகிகள் செய்திருக்கும் பேருபகாரம் பாருள்ளளவும் பாராட்டத்தக்கதேயாம்.

"பேனமார்ந் தொழுகும் பெண்ணைசூழ் வெண்ணைப் பெருநகர் வாழும்மெய் கண்ட, ஞானமார் குரவன் நவின்றிடு நூற்கு நன்மைசேர் பாடிய மியற்றி, யூனமார் பிறவிக் கடலுழல் வோர்கட் குறு புணை யாகவே யளித்த, ஞானயோ கிகடந் திருவடிக் கமல நாஞ் சிரத் தணிந்துவாழ்த் தெடுப்பாம்."

இது திருப்பனந்தாளாதீன கர்த்தாவாயிருந்த காசிவாசி-ஸ்ரீ குமாரசுவாமிச் சுவாமிகள் ஸ்ரீசிவஞானயோகிகள் மேற்செய்த தோத்திரமாம். இவ்வாறே ஸ்ரீ சிவஞானயோகிகள் மேல் நமது சங்கத்தின் அக்கிராசனாதிபதியும் அருங்கலைவிநோதரும் ஆகிய ஸ்ரீமாந்-பாண்டித்துரைச்சாமியவர்கள் இரட்டைமணிமாலை முதலிய பாமாலையணிந்து பாராட்டியிருப்பது பாராட்டத்தக்கதே?

இன்னும் ஸ்ரீ மெய்கண்ட சந்ததியில்வந்து சீகாழியிலிருந்த சிற்றம்பலநாடிகள் என்னும் சிவாநுபூதிச் செல்வரால் துகளறுபோதம், சதமணிக்கோவை, ஞானசாகரவெண்பா முதலிய சைவசித்தாந்த நூல்கள் வெளியேறியிருப்பனவும், பிறவும் கவனிக்கத்தக்கன.

திருவாரூர் ஸ்ரீ வயித்தியநாத நாவலரால் இலக்கண விளக்கம் வெளிப்பட்டுக் "குட்டித்தொல்காப்பியம்" எனப் புகழ்பெற்று விளங்குவதும், ஸ்ரீ தாயுமானசுவாமிகளால் மதுரம்பழுத்துத் தேன்றுளிக்கும் வளச்செம்பாகக் கவிகளாய்த் தோத்திர நூலாகவுஞ் சாத்திர நூலாகவும் அமைந்து கர்த்தாவாகு பெயராய்ச் செகஜோதியாய் விளங்குவதும் எல்லாரும் அறிந்ததாம். திரிசிரபுரத்தில்,

"தேனாட்சி செயுங்கொன்றைச் செஞ்சடையான் றிருவடிக்கே சிந்தை யாவுந், தானாட்சி செயக்கொடுத்த தகைமையினான் றமிழ்த் தெய்வ மாகி வந்த, மீனாட்சி [illegible]தரப்பேர் நாவலன்"

அவர்களால் எத்தனையோ சிறுபிரபந்தங்களும் பெரும்பிரபந்தங்களும் வெளியாகிக் கற்பவர் நெஞ்சைக் காமுறச்செய்து வருவனவற்றை யறியாதார் யார்? அவர்கள் மாணுக்கராகிய,

கலைநாதன் குலநாதன் கற்றவழி நிற்பதற்குக் காட்டாய்க் காட்டும்
நிலைநாதன் குணநாதன் நேயமிகு கலையமுதை நேசித் தூட்டும்
நலநாதன் நயவசன நன்னுதன் நாவலர்க டங்கட் கெல்லாந்
தலைநாதன் தவநாதன் சாமிநா தப்பெயர்கொள் தமிழ்வ லோனே.

என்றபடி ஸ்ரீமத்-மகாமகோபாத்தியாயர் சாமிநாதையரவர்கள்,

"முன்னவர்கள் புதைத்துவைத்த முழுப்பொருளை யெடுத்தீயும் முறைமை போலத், தன்னிகரில் முன்னூலைத் தமிழுலகங் களிதுளும்பத் தந்து." வருவனவற்றையும் அறியாதார் யார்?

ஆகையால், இதுகாறுங் கூறியவாற்றாற் சோழ அரசர்களும், சோழநாட்டுப் பிரபுக்களும் செந்தமிழ்ப் புலவர்பால் அன்பும் அருமையும் பாராட்டிச் செந்தமிழணங்கைச் சுந்தரமாக வளர்த்துவந்திருக்கிறார்களென்பதனையே யிம் மகாசபையில் விண்ணப்பித்துக் கொண்டதென்க. அத்தகைய அன்பும் அருமையும் தளராமல் வளருமேயானால் நமது தமிழணங்கிற்கு எவ்வளவோ அதிகச் சிறப்பாயிருக்கும்.

"அறமுரைத் தானும் புலவன்முப் பாலின்
றிறமுரைத் தானும் புலவன்—குறுமுனி
தானும் புலவன் தரணி பொறுக்குமோ
நானும் புலவ னெனில்."

என்று பொய்யாமொழிப்புலவர் கூறியாங்கு மகாவித்வ ஸிரேஷ்டர்கள் நிறைந்த இம் மகாசபையில் நானும் ஒரு புலவன்போல நடித்துத் தங்கள் நிலையுயர்ந்த மேலானகாலத்தை யிப்புன்மொழிகளாற் கவர்ந்ததற்கு என்னை மன்னிக்கவேண்டுவதுடன் மேலே கூறியவற்றிலுள்ள குற்றங்குறைகளையெல்லாம் மன்னிக்கவும் வேண்டுகிறேன்.

ஜி. சதாசிவம்பிள்ளை.

# RANI BHAVANI

# ராணி பவானி

ஜீவித சரித்திரங்களை உள்ளபடியே எழுதிவைக்காதகுறை இந்
தியர்களுக்கு வெகுகாலமாக உள்ளது. கிரமமான சரித்திரங்களில்லா
ததனால் இத்தேசத்துக்குப் பலவிதங்களில் பலகுறைவுகள் ஏற்பட்
டிருப்பதன்றித் தேசம் அபிவிருத்தியாவதற்கு அனுகூலங்கள் இல்
லாமற் போயின. குணசாலிகளும் புண்ணிய புருஷர்களும் வித்து
வான்களும் ராஜதந்திர நிபுணர்களும் எத்தனையோபேர் இத் தேசத்தி
லிருந்திருக்கிறார்கள். அப்படி அவர்கள் கீர்த்திபெற்றபிறகு அவர்க
ளுடைய காரியங்களிற் சிலவற்றை ஜனங்கள் சொல்லிக்கொள்கிறார்க
ளே தவிர, அவர்களுடைய பூர்வோத்தரத்தையும், இளமைப்பழக்கம்,
இல்வாழ்க்கை, நடையுடைபாவனை முதலியவைகளையும் அவர்கள்
ஜீவித்திருக்கும்பொழுதே விசாரித்துச் சரித்திரமாகக் குறித்துவைப்
பதில்லை. சரித்திரங்களைக் குறித்துவைக்காதிருப்பது பெரியதவறா
கும். நம் முன்னோர்கள் இந்தவிஷயத்தில் தவறினார்களெனினும், இக்
காலத்தில் நாமாவது தவறாமல் சரித்திரங்களைக் குறித்துவைக்கிறோ
மோ? நாமும் அப்படியே தவறிவருகிறோம். இது நன்மையாகாது.
நமது தினசரி விருத்தாந்தங்களை யெழுதிவைக்கும் வழக்கத்தை
நாம் அனுசரிக்கவேண்டும். இந்தத் தினசரிக் குறிப்புக்கள் பிற்
காலத்திற் சரித்திரக்காரருக்கு மிக்க பயன்படும். நமது காலத்தி
லுள்ள பிரசித்த புருஷர்களைப்பற்றி விசாரித்து அவர்களுடைய
ஜீவித சரித்திரத்தைக் குறித்துவைப்பது நமது கடமையாகும். இவ்
விஷயத்திற் சோம்பலாக இருப்பதுகூடாது. கீர்த்திபெற்றவர்களு
டைய நற்குணம், நற்பழக்கம், நற்செய்கை முதலியவற்றை இனிப்
பிறக்கும் சிறுவர்கள் தெரிந்துகொள்வதற்கிடமிருந்தாலன்றி நம்
தேசத்தவர்க்கு நன்னடக்கையும் தேசாபிமானமும் பிடிபடா. இப்
பொழுது நாம் எழுதப்புகுந்த ராணிபவானியின் இளமைப்பரு
வத்து விஷயங்கள் நமக்குத்தெரியவரா. ஆயினும் அவளுடைய சரி
தையும் ஸாஹஸமும் ஆச்சரியப்படத்தக்கனவாக இருக்கின்றமை

யின் அவளுடைய இளமைப்பருவம் இவ் வரியகுணங்கள் வளர்வத ற்கு அனுகூலமாகவே இருந்திருக்கவேண்டுமென்று ஊகிக்கின்றோம்.

## பிறப்பும் வளர்ப்பும்

வங்காளதேசத்தில் ராஜசாயிமாகாணத்தில் சீதாம் என்னுங் கிராமத்தில் ஆத்மாராமச்சௌதரி என்னுமொரு கிருகஸ்தனிருந்தான். அவன்கல்வியிற் சிறந்தவனுமல்லன், தனகனவானுமல்லன். ஆனால், மனிதனுடைய யோக்கிதையும் கௌரவமும் நன்னடக்கையும் சீலமும் சிஷ்டாசாரமும் தெய்வபக்தியும் தேசபக்தியும், கல்வியினாலும் தனத்தினாலுமே அமைவனவல்லவாதலின், பெற்றோரின் புண்ணிய வசத்தினாலும் அவருடைய நற்கருமப்பயனினாலும் அந்த ஆத்மாராமனுக்கு நற்குணங்களும் யோக்கிதையும் அமைந்திருந்தன. அவனுக்குப் பவானி என்னுமொரு பெண்மணியிருந்தனள். அவளை அவன் கிருகதருமத்திற் செவ்வனே பழக்கிச் சீலத்துடன் வளர்த்துவந்தான். சிறுவயதில் அவளுக்கு என்ன என்ன வித்தை கற்பித்தனரோ அவைகளை நாம் விவரித்துச்சொல்வதற்கிடமில்லையெனினும், பிற்காலத்து அவளிடத்து விளங்கிய சாமர்த்திய விசேஷங்களினாலும், புத்தித்திறமையினாலும், பெருங்குணங்களினாலும், அவளுக்கு இளமையிலேயே அவற்றிற்குவேண்டிய அங்குரங்களும் (முளைகளும்) சாதனங்களும் ஏற்பட்டிருக்குமென்று நினைக்கவேண்டியிருக்கிறது. அவளுடைய பிரகாசத்திற்கு முக்கியகாரணமாக இருந்த குணங்கள் மூன்றாகும். அவையாவன, தெய்வபக்தி, தருமபுத்தி, காரியநிர்வாக சக்தி என்பனவாம். இந் நற்குணங்களே அவளுக்குப் பெருங்கீர்த்தி விளைத்தன.

## விவாகம்

காமதேவனென்னும் பிராமணனுக்கு ரகுநந்தன், ராமஜீவன் என்னும் இருவர் குமாரர்கள் இருந்தார்கள். அவர்களிருவரும் தர்ப்பநாராயணனென்னும் சிறியஜமீன்தாரிடத்தில் உத்தியோகத்திலமர்ந்திருந்தனர். அவருடைய வக்கீலாக ரகுநந்தன் மூர்ஷிதாபாத் நவாப்பினுடைய தர்ப்பாரில் விவகரித்து வருநாளில் நவாப்பினுடைய நன்மதிப்புக்கும் நம்பிக்கைக்கும் உரியவனாயினான். அந்த நவாப்பினுடைய தயையினால் ரகுநந்தன் மூர்ஷிதாபாத்துக்குத் திவா(

அம்மாத்திரமேயன்று; நவாப்பின் ஸம்ஸ்தானத்தில் ஸர்வாதிகாரமும் அவனுடைய கையிலேயே இருந்தது. அப்போது தன் தம்பியாகிய ராமஜீவனுக்கு இரண்டுகோடி ரூபா வரும்படியுள்ள ஜமீனை வாங்கிக்கொடுத்து "ராஜா" என்னும் பட்டமும் அந்த நவாப்பினிடத்திலிருந்து வாங்கிக்கொடுத்தான். இன்றைக்கும் அந்த வம்சத்தவருக்கு அந்தப்பட்டமிருக்கின்றது. ராஜாராமஜீவனுக்கு இருவர் குமாரர்களிருந்தனர். அவர்களுள் மூத்தவன் இளம்வயதிலேயே காலகதியடைந்தான். இளையோனாகிய ராமகாந்தன், தகப்பனார் பரகதியடைந்த பின்னர், நாட்டோர் என்னும் அவருடைய ராஜ்யத்திற்கு அதிபதியாக ராஜபதவியைப் பெற்றான். ஆத்மாராமச் சௌதரியின் குமாரியான பவானி என்பவள் ரூபலாவண்ணியத்திற் சிறந்தவளெனக்கேட்டு ராமகாந்தன் அவளை மணந்தான். அப்பொழுது அவனுக்கு வயது பதினெட்டு. பவானிக்கு வயது பதினைந்து. பாரியா பர்த்தாக்கள் இருவரும் மிக்க பிரேமானுராகங்களுடன் கூடிக்குலாவி வந்தார்கள்.

### இளங்கன்று பயமறியவில்லை

மிக்க புத்திக்கூர்மையுள்ள தயாராமன் என்பவன் ராஜா ராமஜீவனுடைய காலத்தில் மந்திரியாக இருந்தான். ராமஜீவன் அவனிடத்து மிக்க பிரேமை பாராட்டி அவனைத்தன் புதல்வனைப்போற் பராமரித்து வந்தான். ராமகாந்தனும் அந்த மந்திரியை "அண்ணா" என்று மரியாதையாகவும் அவனிடத்து விசுவாசமாகவும் நடந்துவந்தான். ஆயினும் அவனுக்கு யௌவனத்து மதமும் ராஜ்யாதிகாரமும் தனகர்வமும் (செல்வச்செருக்கும்) சேர்ந்தமையின் தன் தந்தையின் காலத்தில் ராஜ்யத்தை நடத்திவந்த பெரியோனிடத்து அவனுக்கு மதிப்புக் குறைந்தது. அப்படிப்பட்டவர்கள் இருப்பதனால் அவன் தன்னிஷ்டப்படி விவகரிப்பதற்குத் தடையாக இருந்தது,

> "சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
> வறியபுன் செருக்கு மூடி வாயுள்ளோர் மூக ராவர்
> பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவர்
> குறிபெறுங் கண்ணு ளாருங் குருடராய் முடிவ ரன்றே."

என்றபடி,

இளமையிற் கல்வியும் நல்லசிக்ஷையும் இல்லாதவர்களுக்கு மகத்தான செல்வமும் அதிகாரமும் கிடைத்தால் அவர்கள் செருக்கடையாதிருப்பரோ? யோக்கிதை யில்லாதவர்களுக்கு ராஜ்யத்தைக்கொடுப்பது குரங்கின் கையிற் பூமாலையைக் கொடுப்பதை யொக்கும்.

முறையிற் கற்ற மூதறி வானு
நிறையிற் கொண்ட நேர்மையி னானு
மெல்லா வுயிரு மிறைவன் படைப்பெனு
மொல்லு முணர்வை யுற்றிட லானு
நேரா வருமொரு நீதியின் நிலையை
தேர்தர வறியாத் தீயவ ரிங்ஙன்
அதிகா ரத்துறை யடையவந் துறுதல்
மதிமை சாலா மகவுதன் கரத்திற்
கொள்ளிரு புறத்துங் கூர்மை வாய்ந்த
வொள்ளிய வாளை யுற்றதை மானு
மவ்வா டன்கை யகப்படக் கொண்ட
செவ்விய சேய்க்குஞ் சேர்ந்தார் தமக்குந்
தீமை விளைக்குஞ் செய்கையை
தாமறி வாராற் றாணியுள்ளாரே.

குணசம்பத்தில்லாதவர்களுக்கு அதிகாரத்தைக் கொடுப்பது இருபுறமும் கூர்மையுள்ள கத்தியையுருவி இளம்பிள்ளையின் கையிற் கொடுப்பதை யொக்கும்; அஃதாவது, அதிகாரம் என்னுங்கத்தி அதனையுடையவர்களுக்கும் மற்றவர்களுக்கும் தீமை விளைக்குமென்பதாம். இப்பொழுது நாங்காணும் சிற்றரசர்கள் சிலர் இளங்குமரர்களாகச் சிறிதும் மனக்கவலையேனும் சரீரப்பிரயாசையேனு

"மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலை
தானதனுக் கிடையூறு தன்னாற்றன் பரிஜனத்தா
லூனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மா
லானபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ."

என்னும் பொறுப்பைச் சிறிதுமுணராது சுதந்திரமும்ராஜ்யாதிகாரமும் பெற்றுச் செல்வச்செருக்கினால் மனோராஜ்யம் செய்யத்

தொடங்கி, யௌவனச் சேஷ்டையினுற் சிற்றின்ப வியாபாரங்களி லாழ்ந்தி, அதற்குவேண்டிய விடர்களையும் படர்களையும் கூட்டி அவர்களுடன் தங்காலத்தைக்கழித்து, ராஜ்யத்தின் சீரைக்குலைத்து, குடிகளின் க்ஷேமத்தைக்கெடுத்துத் தாமும் கடைசியில் துன்புறு கிறார்களல்லரோ.? இவ்வாறாக ராமகாந்தனும் ரமாகாந்தனுகி (ஸ்திரீ லோலனுகி), தந்தையாரிட்ட கட்டளையைமீறி, மந்திரியாகிய தயா ராமனை அனுகாதகலவிட்டு, சுவேச்சாவிஹாரியாகி, ராஜ்யத்தைப் பாழாக்கினுன். தயாராமனென்னும் மந்திரி மனந்தளராது பல தடவை அவனுக்குப் புத்திமதிகூறியும் அவனுடைய சொற்கள் வறுவாயின. அதைக்கண்டு தயாராமன் கடிந்து புத்திவாதமுரைக் கவே, அவ்வளவுகாலமாக இருந்த மந்திரியை ராமகாந்தன் வீட்டை விட்டுத் துரத்துவானுயினன். அப்படிப்பட்ட விபரீதபுத்தி வருவது நாசகாலத்திற்கே யன்றோ? அன்னத் துவேஷமும் பிரம்மத்துவேஷ மும் அந்தியகாலத்திற்கேயல்லவோ? மூத்தோர் சொல்லை மீறிநடப் பதும் பெரியோரைப் பழிப்பதும் ஆபத்துக்கும் பாபத்துக்கும் முன் னுரையல்லவோ? இங்ஙனம் துரத்தப்பட்ட தயாராமன் மூர்ஷி தாபாத்துக்குப் போய்ச்சேர்ந்தான்.

## ராஜ்யப்பிரஷ்டம்

தயாராமன் தன்னுடைய புத்திவிசேஷத்தினுல், மூர்ஷிதாபாத்து நவாப்பாகிய அலீவர்த்தீகானுடைய நன்மதிப்பைப்பெற்று அவ னுக்கு ராமகாந்தனுடைய துர்நடவடிக்கைகளைப்பற்றிச்சொன்னுன். "நவாப்புஸம்ஸ்தானம்" என்பது விசாரணையின்றித் தீர்ப்புச்செய் வதற்குப் பழமொழியாக வழங்கும் பதமன்றோ? எருது கன்று ஈன்றதென்றால் 'கொட்டத்திற்கட்டு' என்று கட்டளையிடும் பிரபு வின் இயல்பறிந்து, நாட்டோர்ச் சம்ஸ்தானம் பாழடைந்துவருகிறதென் றும், நவாப்பின் திரவியமெல்லாம் வீண்போகிறதென்றும் சொல் லவே, உடனே நவாப்பு வெகுண்டு ஒரு சேனைப்பகுதியுடன் தயா ராமனையனுப்பி, ராமகாந்தனை யோட்டி அவனுடைய திரவியத்தை யெல்லாம் கைப்பற்றச் சொன்னுன். நவாப்பின் துரைத்தனத்தில் ஒருவன் ஒரு நிமிஷத்தில் லக்ஷாதீசனுகலாம்; மற்றொரு நிமிஷத் தில் பிக்ஷாதீசனுகலாம். அரசனும் அரவமும் ஒன்றாகும். அவ்

கிருவரிடத்தும் வெகு ஜாக்கிரதையாக நடந்துகொள்ளவேண்டும். படைத்திரளோடு தயாராமன் ராமகாந்தனுடைய தனபாண்டாகாரத்திற் பிரவேசித்துத் தனத்தையெல்லாம் கொள்ளையாடினுன். அந்தச் சமயத்தில் ராமகாந்தன் அந்தப்புரத்திலிருந்தான். நவாப்பின் சைன்னியம் பிரவேசித்த சங்கதியைக்கேட்டு, அதை எதிர்க்கச் சக்தியற்றவனுகி ராமகாந்தன் முன்பின் ஒன்றுந் தோன்றுமற் கட்டைபோலசையாமலிருந்தான்.

## பவானியின் பதிபக்தி

அப்படிப்பட்ட ஆபத்துக்காலத்தில் ராமகாந்தன் இன்னும் சிறிதுநேரம் சும்மா இருந்தால் சத்ருருக்கள் அவனைச் சிறைப்படுத்தி விடுவார்கள். அந்த நிலைமையை யறிந்து பவானியானவள், பிரசங்காவதானமுள்ளவளானமையின் (அருஞ்சமயத்தில் அலையுறுமனம் வாய்ந்தவளாதலின்), கணவனது பயத்தையும் துக்கத்தையும் சாந்தப்படுத்தினள். எந்த விதத்திலாவது கணவனது இன்னுயிரைக் காப்பாற்றக் கங்கணங்கட்டினள். அதற்காக எத்தகைய கஷ்டத்தையும் மேற்கொள்ளச் சித்தமாயினள். தன்ருற்சுமக்கக்கூடிய அளவு நகைகளையும் நாணயங்களையும் எடுத்துக்கொண்டு கணவனுடன், எவருமறியாமல், பட்டினத்தைவிட்டு அப்புறமேகினள். அவள் இளமையிலிருந்து இன்னல் அனுபவியாத இந்திராணிபோன்றவள்; பல்லக்கைவிட்டுப் புவிமீது பாதம்வையாத பாக்கியசாலி. அந்தச் சீமாட்டிக்கு அவ்வளவு கஷ்டம் நேர்ந்தகாலத்தில் அவள் எட்டு மாசத்துக் கர்ப்பவதி. அவ்வளவு துக்கம் நேர்ந்தகாலத்தும் அவ்ள் தன் பதியின் பிராணன் மீளுமென்னும் சந்தோஷத்தையே முக்கியமாகக்கொண்டு கால்நடையாகச் செல்லலுற்ருள்.

## விநயமும் விடாமுயற்சியும்

கணவனும் மனைவியும் இவ்விதமாக மிக்க பிரயாசையுடன் நடந்து பதுமாநதித்தீரமடைந்து, அங்கோர் ஓடக்காரனை நயந்துகொண்டு,நதியைக்கடந்து ஶூர்ஷிதாபாத்துப்போய்ச் சேர்ந்தார்கள். அவ்வூரில் எளியவர்களைப்போல இருவரும் ஒருசிறியவீட்டிற் குடியிருந்தார்கள். அந்தத் துரவஸ்தையில் பவானியின்பொறுமையும் தைரிய

மூம் வியத்தற்பாலனவாயின. ராமகாந்தன் தன்னுடைய துராசாரங்களையும் அவற்றின் பயனாகவிளைந்த துர்க்கதியையும் நினைந்து பச்சாத்தாபப்படலுற்றான். தனது பாரியையின் குணத்தையும் புத்திக்கூர்மையையுங்கண்டு வியந்து, அவள்சொல்லியவண்ணம் நடக்கலுற்றான். பவானியானவள் சமயத்திற்குத் தக்கவாறு வேஷமும் வார்த்தைகளும் மேற்கொண்டு, ஸாம, தான, பேத, தண்டம் என்னும் நான்குவித உபாயங்களுள் தானத்தைக் கைக்கொண்டு ஒழுகலாயினள். சின்னாட்கெல்லாம், அவளுடைய தந்திரங்களினால் அவள் நவாப்பின் பொக்கிஷதாரரான ஜகத்ஸேட்டு என்பவனைத் தன் கணவனுக்கு மித்திரனாக்கினாள். அவள், தன்னிடத்திலிருந்த நகைகளுட் சிலவற்றை விற்று வந்தபணத்தை நவாப்பின் உத்தியோகஸ்தர்களுககுப் பரிதானங்கொடுத்து, அவர்களெல்லோரும் தன் கணவனுடைய பக்கமாகப் பரிந்துபேசும்படி செய்தாள். தமக்கு முதலில் மந்திரியாக இருந்து பிறகு தம்மை இந்தக்கதிக்குக் கொண்டுவந்த தயாராமனைவரவழைத்து, அவள் தன் கணவனை அவனுடைய காலில் விழச்செய்து கணவன்செய்த தப்பிதங்களை யெல்லாம் மன்னிக்கும்படி அவனைக்கொண்டே வேண்டச்செய்தாள். அவ்வாறு வேண்டினதன்மீது தயாராமன் மனமிரங்கி, மறுபடி ராமகாந்தனுக்கு எவ்விதத்திலாவது ராஜ்யாதிகாரம் வருமாறு செய்வதாகச் சபதம்பண்ணினான். பின்னர், பவானி தன்னிடமிருந்த நகைகளைவிற்று எழுபதினாயிரம் ரூபாசேர்த்து, அந்தப்பணத்தையெல்லாம் தயாராமனுடைய மூலமாக நவாப்பின் முக்கிய உத்தியோகஸ்தர்களுக்கு லஞ்சங்கொடுப்பித்து, அவர்களெல்லோரையும் தன் கணவனுடைய பக்ஷமாக்கினாள். இவ்விதமாக வசப்பட்ட உத்தியோகஸ்தர்களும் தயாராமனும் ஜகத்ஸேட்டும் கூடி நவாப்பின் மனத்தைத்திருப்பி, மறுபடி ராமகாந்தனுக்கு ராஜ்யத்தைக் கொடுப்பித்தார்கள்.

கையைவிட்டுப்போன ராஜ்யத்தை இவ்வாறு மறுபடி சம்பாதிப்பதில் ராணிபவானி காட்டிய ஒப்பற்ற புத்தி கௌசலமும் பதிபக்தியும் ஆச்சரியப்படத்தக்கன. இப்படிப்பட்ட நிதரிசனங்களிருக்க, "ஸ்திரீ புத்திः பிரளயங்கரீ" என்னும் வார்த்தை எல்லா

விடத்தும் சர்வசாமானியமாகச் செல்லுமோ? மறுபடி ராஜ்யங் கிடைத்தபிறகு ராமகாந்தன் தனது வாலிபத்துத் துர்நடக்கைகளை விட்டொழித்து நற்சகவாசமும் நற்புத்தியும் மேற்கொண்டு தனது பாரியாமணியின் இதவசனங்களையும் மந்திரி புங்கவனுடைய புத்தி வாதங்களையுங் கைக்கொண்டு சுகமாகப் பத்தொன்பது வருஷகாலம் ராஜ்யபாரம் வகித்திருந்தான். அவன் இறந்துபோகும் காலத்திற் பவானிக்கு வயது முப்பத்தைந்து.

## மக்கட் பேறு

ராமகாந்தன் ராஜ்யத்தைப் போக்கடித்துக் கொண்டகாலத்திற் பவானி கர்ப்பவதியாக இருந்தனளல்லளோ? சின்னாட்கெல்லாம் அவளுக்கு ஒரு புத்திரனுண்டாயினன்; பிறகு மற்றொரு குமாரனும் பிறந்தனன். ஆயினும் அந்தப்புத்திரர்களிருவரும் வாலிபத்திலேயே பரகதியடைந்தனர். பின்னர் அவளுக்குத் தாரை என்னுமொரு புத்திரிகாரத்தினம் மாத்திரமே பிறந்தனள். தாரையும் இளம்பருவத்தே விதந்துவானமையின் தாயினிடத்தே இருந்து வந்தாள்.

## ராணிபவானியின் துரைத்தனம்

பர்த்தா பரலோகமடைந்தபின்னர்ப் பவானியானவள் சிங்காதனமேறினள். ராஜ்யத்தை ஆளத்தக்க மக்கள் அவளுக்கு இலராயினர்; வேறு பந்துக்களும் இருந்திலர். அவள் தானே ராஜ்யபாரத்தை நிர்வகிக்கவேண்டிய அவசரம் நேர்ந்தது. பெரிய கஷ்டத்தை ஒருவன் அனுபவிக்கலாம்; பெரிய விபத்துக்களுக்கும் ஈடுகொடுக்கலாம்; ஆனால், பெரிய பொறுப்பை வகிப்பது அவைகளெல்லாவற்றையும்விடக் கஷ்டதரமானது. ராணிபவானிக்கு இந்த விஷயத்தில் முன் அனுபவமில்லை; அதற்கேற்பப் பயிற்சியுமில்லை; படிப்பு இருந்ததோ இல்லையோ தெரியாது; ராஜ்ய தந்திர நுட்பங்கள் போலைகளென அல்லற்படுத்தத்தக்கன; அவள் போர்த்தொழிலுமறியாள். அவளுக்கு இருந்த அடங்காத தேசாபிமானமும் விடாப்பிடியுமே அவளுக்குத் துணையாக இருந்தன. அவையே சமயத்துக்கேற்ற தைரியமும் சாமர்த்தியமும் விளைவித்தன. நல்

லொழுக்கம் ஒன்றிருந்தாலும் அதனைப்பின்பற்றிப் பல நல்லொழுக்கங்கள் வந்து அமையுமன்றோ?

"ஒழுக்கம் விழுப்பந் தரலா லொழுக்க
முயிரினு மோம்பப் படும்."

ஆதலினாலேயே "நன்மைகடைப்பிடி" என்று சொல்கின்றார்கள். நன்மையானதொரு குணத்தைக்கைக்கொண்டால் அது நல்லொழுக்கம் என்னும் ஏணியில் முதற்பழுவின்மீது கால்வைத்தது போலாகும்; அதற்கடுத்த பழுவின்மீது மற்றொருகால் தானாகவே செல்லும்; இவ்விதமாகச் சன்மார்க்கம்பிடிபடும், நற்குணங்கள் ஒவ்வொன்றாக வந்தெய்தும். அந்த நிலைமையில் வேறு சகாயமின்றி, ராணிபவானி சிங்காதனமேறவே, அவளுக்கு அந்தப் பதவிக்கு வேண்டிய தைரிய சௌரியங்களும் புத்தியும் வல்லமையும் தெய்வானுக்கிரகத்தினாற் பிராப்தியாயின.

அந்தச் சமயத்தில் வங்காளதேசத்துக்கு ஸுராஜத்தௌலா என்னும் துருக்கப்பிரபு நவாப்பாக இருந்தான். அவனுடைய அக்கிரமங்களும் அநீதியும் அகிலமெல்லாம் அறிந்தவிஷயங்களாகும். அவன் வியபிசாராதி துஷ்காரியங்களுக்காகத் தன் பொக்கிஷத்துப் பணத்தையெல்லாம் செலவிட்டுத் தன் அதிகாரத்திற்குட்பட்ட மண்டலாதிபதிகளிடத்திருந்து பலாத்காரமாகப் பணம் பறித்து வந்தான்; அப்படிப் பணங்கொடாதவர்களைப் பலவிதங்களில் வருத்தி வந்தான். பரஸ்திரீகளை அக்கிரமமாகச்சிறையெடுப்பதில் அந்தத் துஷ்டன் சற்றும் பின்வாங்காதவன்; நியாயமென்னு மொழி அவனுடைய ராஜ்யத்தில் ஔஷதத்திற்குக்கூட அகப்படாதிருந்தது. அப்படிப்பட்ட துஷ்டனால் தன்னுடைய ராஜ்யத்திற்கு எந்த நிமிஷத்திலாவது கெடுதி வருமெனக்கருதி, ராணிபவானியானவள் தன்னுடைய சைன்னியங்களைச் சரிப்படுத்திக்கொள்ள ஆரம்பித்தாள். போர்புரிவதற்கு அசக்தர்களாக இருந்த வீரர்களை நீக்கி, சமர்த்தர்களைச் சேர்த்துத் தானே சேனாதிபத்தியத்தை மேற்கொண்டு, படைவீரர்களைக்கொண்டு போலிச்சண்டைகள் செய்வித்துச் சேனைகளைப் பலப்படுத்தினாள். இங்ஙனம் முன்யோசனைகொண்டு அவள் செய்த

தனால் இனி விவரிக்கப்பெறும் கஷ்டத்தினின்று அவளுடைய ராஜ்யம் மீந்தது.

## துருக்கர்சேனையைத் துரத்தியடித்தாள்

ராணிபவானியின் இன்புதல்வியும் விதந்துவுமான தாரையென்பவள் வங்காளதேசத்துளெல்லாம் பிரசித்தமான சௌந்தரியவதியாவள். அவளுடைய வண்ணமேனியை வியர்துரைக்கக் கேட்டு நவாப்பானவன் அவளைச்சிறையெடுக்கவேண்டுமென்னும் துர்ப்புத்தி கொண்டவனாயினன். தாரையைத் தனக்கு அளிக்கவேண்டுமென்று அவன் ராணிபவானிக்கு ராயபாரம் (தூதுவர்த்தமானம்) அனுப்பினன். அதைக்கண்டு அவள் சீற்றமிகுந்து, வந்ததூதனை மிக்க அவமானப்படுத்தியனுப்பினள். அதன்மீது நவாப்பு குரோதாவேசபரவசனாகி நாட்டோர் ஸம்ஸ்தானத்தையெல்லாம் பாழ்செய்து தாரையையும் பவானியையும் சிறைபிடித்துக்கொண்டு வருமாறு தன் சேனைகளை யனுப்பினன். இவ்விதமாக நடக்குமென முன்னரே ராணிபவானி யூகித்திருந்தமையின், அவள் பட்டினத்துவாயில்களை மூடுவித்து, தானே சேனாதிபத்தியத்தை வகித்துத் தன்சேனையுடன் ராஜதானியின் வெளிவாயிலண்டை நவாப்பின் சேனைகளை எதிர்க்கலுற்றாள். அவ்விடத்திற் கோரமானதொரு போர் நடந்தது. ராணிபவானியின் முன் நிற்கலாற்றாது துருக்கர்கள் பல திக்குக்களிலும் பறந்தோடினர்; அவர்களுட் சிலர் தமக்குற்ற அபஜயத்தையும் அவமானத்தையும் நவாப்புக்கு உரைக்கப்போயினர்.

## பெண்புத்தி பெரும்புத்தி.

இந்தச் சங்கதியையறிந்த ஏனைய சிற்றரசர்கள் நவாப்பின் சைன்னியங்களைக் கண்டவிடத்தெல்லாம் இம்ஸிக்கலாயினர். வங்க நாட்டு மண்டலாதிபதிகளுக்கெல்லாம் நவாப்பு மிக்க துஷ்டனென்பதும் கொடியனென்பதும் நீதி நியாய மற்றவனென்பதும் தெற்றெனவிளங்கலாயின. அவர்களனைவரும் ஒருங்குகூடி அவனுடைய ராஜ்யாதிகாரத்தைக் கவர்ந்துகொண்டு அவனைப் பிரஷ்டனாக ஓட்டக்கருதி ஜகத்ஸேட்டு என்பவரின் வீட்டில் ஒருநாள் சபைகூடினர். அந்தச் சபையை யலங்கரித்திருந்த கனவான்களுள் முக்

கியமானவர்கள் கிருஷ்ணநகர் ஸம்ஸ்தானாதிபதியான ராஜா கிருஷ்ண சந்திரராயர், டெக்கா ஸம்ஸ்தானாதிபதியான ராஜா ராஜபல்லவர், பாட்னாவென்னும் மறுபெயருடன் வழங்கும் பாடலீபுரத்துச் சம்ஸ்தானாதிபதியான ராஜா ராயதுர்லவர், நாட்டோர் ராஜ்யத்திற்கு அதிகாரிணியான ராணிபவானி ஆகிய இவர்களாவர். அந்தச் சபையில் நடந்த சம்பாஷணையின் விவரத்தைச் சரித்திரக்காரரொருவர் எழுதியவாறு இங்குக் குறிப்போம். அதைக்கவனிக்குமிடத்து, பெரும்புத்தி, பெருந்தகைமை, பெரியயோசனை, ஊக்கம், அபிமானம் முதலியன பெண்பாலாரிடத்து விசேஷமாகப் பிரகாசிக்கின்றனவென்பது விளங்கும். ஆண்மக்களுக்கும் பெண்மக்களுக்கும் உள்ள வித்தியாசம் இத்தன்மையது, பெண்மக்களே மேற்சொல்லிய குணங்களில் விசேஷித்தவர்கள் என்னும் உண்மையை புணர்த்துமாறே ஜகத்ஸேட்டின் கிருகத்தில் அந்த மன்னர் மண்டலம் கூடியது போலும்.

ஜகத்ஸேட்டு:—ஸிராஜத் தௌலாவை நீக்கிவிட்டு அவனுடைய சேனாதிபதியான மீர்ஜாபரை நவாப்பாக்கலாம். அவன் சிற்றரசர்களுக்கும் குடிகளுக்கும் இதமாகநடந்துகொள்வதாகச் சொல்கிறான்.

ராணிபவானி:—வங்காளதேசத்துச் சிங்காதனத்தின்மீது அருக்கனை வைக்காமல் இந்து அரசர்களையே வைக்கக்கூடாதா? இழந்த சுதந்திரத்தை மறுபடி சம்பாதித்துக் கொள்வதற்கு யோக்கியமான சமயம் இதுவேயென்று நினைக்கிறேன்.

ராஜா கிருஷ்ண சந்திரர்:—ராணியவர்கள் சொல்லிய வார்த்தை வெகு யோக்கியமானதே. ஸ்வாதந்தரியம் அனைவருக்கும் பிரியமானதே. ஆனால் நாம் அறுநூறு ஆண்டுகளாகப் பரதந்திரர்களாக இருக்கிறோம். நமது கீர்த்தி நஷ்டமாகி இருக்கின்றது. பரராஷ்டிரங்களையொழித்து நம்மை நாமே ரக்ஷித்துக்கொள்வதற்கு நாம் திறமையற்றிருக்கிறோம். நம்முள் ஒற்றுமையில்லை; பரஸ்பர த்வேஷங்கள் அநேகம் இருக்கின்றன. ஆதலின், இந்து நவாப்பை ஏற்படுத்துமிடத்து, நம்முள் நாம் கலகித்து ஒருவரையொருவர் கொல்வதே ஏற்

படும். இப்படியிருக்கும் நமது உட்கலகங்களைக்கண்டு மகாராஷ்டிரர் நம்மீது தண்டெடுத்துவந்து நம்மை மறுபடி பாதந்திரர்களாக்குவர். அவர்களை நாம் அறியமாட்டோம், ஆகையால் இது வரையிலிருக் கிற துருக்கரே, உத்தமராவர்.

ராணிப்வானி:— ராஜ்யாரூடனைபிறகு (சிங்காதனமேறிய பிறகு) மீர்ஜாபரும் சுராஜத்தௌலாவைப்போலக் குரூரத்துவம் வகி த்தால் நாம் செய்வதென்னை ?

ராஜாராஜபல்லவர்:—அந்த விஷயத்தைப்பற்றி இதுவரையி லேயே ஆலோசித்திருக்கிறோம். மீர்ஜாபரை நம் வசத்தில் வைத்துக் கொள்வதற்கு ஆங்கிலேயரைத் துணையாகக்கொள்ள நினைத்தோம்; அவர்கள் மிக்க பலவான்கள்; கேவலம் வர்த்தகர்கள்; ராஜ்யம் செய்யவேண்டு மென்னும் எண்ணம் அவர்களுக்கு உண்டாகாது; வர்த்தகத்தில் விசேஷ லாபமுண்டாகுமாறு சிலநிபந்தனைகளை அவர் களுக்கு எழுதிக்கொடுக்கும் பக்ஷத்தில் அவர்கள் நமக்கு எப்பொழு தும் துணையாக இருப்பார்கள். அவர்களுடைய சகாயம் நமக்கிருந் தால் நவாப்பு நமக்கு அடங்கியே இருப்பான்.

ஜகத்ஸேட்டு:—இதுவுமன்றிக் கல்கத்தா நகரத்திலுள்ள கம் பெனியாருடைய கிட்டங்கியைச் சுராஜத்தௌலா கொளுத்திச் சுட் டிருக்கிறான். ஆகையால் அவர்கள் அவனை ஓட்டுவதற்கு முயல்கி றார்கள் புதிதாகவரும் நவாப்பு அவர்களுக்குச் சிநேகமாக இருப் பின், அவர்கள் அநுகூலமாக நடந்துகொள்வார்கள். அவர்களோடு சிநேக மில்லையெனின், புதியநவாப்பு வந்தவுடன் அவர்களோடு சண்டை செய்யவேண்டி வரும்.

(இன்னும் வரும்)

சாதுசேவகன்.

உ

# ஆசார விளக்கம்

முற்காலத்தில் மதசம்பந்தமான நிபந்தனைகளும் சுகாதாரவிதிகளும் ஒன்றாகவேபிணைக்கப்பெற்றிருந்தன. மனிதனுடைய லௌகிக வைதிக காரியங்களை ஒழுங்குபடுத்துவதற்கே தர்மசாஸ்திரங்கள் ஏற்பட்டன. வைதிக ஆசாரத்தையும் ஆரோக்கியத்திற்கு ஏதுவான ஆசாரத்தையும் வேறு வேறாக்காததனால், தர்மசாஸ்திரத்திற் கூறிய விதிநிஷேதங்களை யனுசரித்து நடப்பவனுக்கு "சாஸ்திராயசஸாகாயச" என வைதிகானுஷ்டானப்பயனும் தேகாரோக்கியப் பிராப்தியும் உண்டாம் என்பது சித்தாந்தமாக வழங்கலாயிற்று. இஃது அனைவருக்கும் தெரிந்த விஷயமே. அக்காலத்து ஜனசமூகத்தில் ஒவ்வொரு தொழிலும் ஒவ்வொரு ஜாதியாருக்கு ஒப்புவிக்கப்பட்டிருந்த ஒழுங்கின்படி, கல்வித்துறையில் உழைத்து உட்புகுந்து ஆராய்ச்சி செய்து அறிவுமிகுவதும், அதனை மற்றவர்களுக்கு எடுத்துரைப்பதும் ஆசாரியர்களாக விளங்கியவர்களுக்கே அமைந்திருந்தது; ஆதலின் ரோககாரகம் (நோயுண்டாக்குங் காரணம்) ரோகநிவாரணம் (நோயைத்தடுத்தல், போக்கல்) முதலியனவாகிய இவ்விஷயங்களை யறிந்து சொல்லக்கூடியவர்கள் அந்த ஆசாரியர்களே ஆயினர். இதனாற்றான் கிறிஸ்தவர்களுடைய பூர்வமீமாம்ஸை எனத்தகும் ஓல்ட்டெஸ்டமெண்டில் ஸ்பஷ்டமான சுகாதார விதிகள் பல தோன்றலுற்றன. மகம்மதிய வேதமாகிய கொரானிலும் மற்றுமுள்ள துருக்க ஐதிகங்களிலும் அவ்வண்ணமே ஆரோக்கிய விதிகள் அமையப்பெற்றன. மேற்கூறியவாறு முன்னர் இந்தியாவில் ஆரோக்கிய சாஸ்திரவிதிநிஷேதங்கள் பிரிக்கவொண்ணாதவிதமாக நித்திய நைமித்திக வைதிக ஆசாரங்களோடு இயைந்து வழங்கின. இந்த ஆசாரானுஷ்டானக்கிரமத்தை யனுசரித்து ஜனங்கள் வெவ்வேறு வகுப்பினராயினர்; இந்த நிபந்தனையின் விசேஷத்தினாலும் ஆசாரியர்களது அதிகாரத்தை நிலைநிறுத்தக்கருதிச் செய்த சட்டதிட்டங்களினாலும் மகத்தான வர்ணாச்சிரமக்கட்டுப்பாடு ஏற்பட்டது.

இவ்வாறு ஆரோக்கியப்பிராப்திக்கென அமைக்கப்பட்ட அரசாட்சியிற் சட்டதிட்டங்கள் பிரஜைகள் ஒவ்வொருவரையும் தனித்தனியே (வியஷ்டியில்) குறித்து நிற்றலும், பிரஜாசமூகத்தைப் பொதுவில் (ஸமஷ்டியில்) குறியாதிருத்தலும் அவசியமாமன்றோ? ஒவ்வொருவரும் தத்தம் ஆசாரங்களினால் ஆரோக்கியமடையவேண்டியவராவர். ஒவ்வொருவரும் ஆரோக்கியத்தை நாடிநடிக்கின் நாடெங்கும் ஆரோக்கியம் குடிகொள்ளாதோ? செடிகள் ஒவ்வொன்றையும் பாதுகாத்தலின் தோட்டத்தைப் பாதுகாத்ததுபோலாயிற்றன்றோ? ஆனதுபற்றியே பூர்வத்து ஆரியாது கிரந்தங்களில் நகரத்துச் சுகாதாரத்திற்குரிய பொதுவிதி வழக்குக்கள் (நமது முனிசிபல் ஏற்பாடுகள் போல்வன) அரியனவாயின; ஆயினும், அவை ஆங்காங்குக் காணப்படுதலின் அப்படிப்பட்ட கட்டுப்பாடுகளும் இருந்தனவென்பது திண்ணம். இக்காலத்துச் சுகாதார சாஸ்திரங்களில் நன்மையெனக்கூறும் ஒவ்வொரு விஷயத்திற்கும் தக்க காரணம் எடுத்துக்காட்டுவது அவசியமாக இருக்கின்றது. இதனால் கிரந்தம் விரிவுறுகின்றது. நாம் அனுஷ்டிக்கவேண்டிய விதி யாது? ஆசரியாது ஒழிக்கவேண்டிய நிஷேதம் யாது? என்னும் சித்தாந்தத்தைக்கொண்டு தெளியுமுன் நிரம்பப் படிக்கவேண்டும். காரணகாரிய வாதசம்பந்தமான விஷயங்களை அகற்றி நமக்கு வேண்டிய சாராம்சத்தைக் கைக்கொள்ளவேண்டும். ஆரியதர்ம சாஸ்திரக்காரர்களோவெனின், விவரங்களை ஒழித்து முக்கியமான விஷயங்களை மாத்திரம் சூத்திரங்களைப்போலச் சுருங்கச்சொல்லிப் போந்தனர்.

சுத்தம், அசுத்தம், சுத்திகரித்தல் ஆகிய இவைகளின் உண்மையான தத்துவங்களைத் தெளிவாகக் கண்டறிந்து அவற்றிற்குரியவிதி வகைகளை மாத்திரம் கைக்கொண்டு எளிதிற் சாதித்தனர். மேற்கூறிய மூன்று விஷயங்களுமே சுகாதார சாஸ்திரத்திற்கு மூலமான அம்சங்களாகும். ஐம்பது வருஷத்திற்குமுன்னர் நமக்கிருந்த சுகாதார சாஸ்திரப்பயிற்சியைக்கொண்டு பார்க்கின், அந்தச் சாஸ்திரத்தில் முதன்மையான அம்சங்களாகச் சுத்தம், அசுத்தம், சுத்திகரிப்பு என்னும் மூன்றையுங்கொள்வது யுக்தமெனவும் நியாயமெனவும்

மேற்றிசையாருக்குத் தோன்றுதென்று நினைக்கிறேன்; ஆனால் அவ் விதப் பாகுபாடு சுலபமானதாகவும் தெளிவானதாகவும் இருக்கிற தென்றும் சாதாரண ஜனங்கள் அறிந்துகொள்ளத் தக்கதென்றும் மேற்றிசைச் சாஸ்திரிகள் ஒப்புக்கொள்வார்கள். நமது அசாக்கிர தையினால் ஜலம், ரத்தம் முதலியவைகளில் அதிநுட்பமான அங் கக் கட்டுள்ள ஜீவகோடிகள் உற்பத்தியாகி அவற்றை விஷமாக்கு கின்றன என்னும் கொள்கை மேம்பட்டிருக்கும் இக்காலத்திலோ வெனின், சுத்தம், அசுத்தம், சுத்தீகரிப்பு என்னும் மூவகைப் பிரி வினையினுஞ் சிறந்தவிதமாகப் பகிர்ந்து சுகாதார சாஸ்திரமெழுது வது இயலாதென்பது எனது துணிபு; சுத்தாசுத்தங்கள் எனப் படுவன ரோகஜனகமாவுள்ள நுட்பப் பிராணிகளைப் பொறுத்தன வாகும்; சுத்தீகரிப்பு என்பது நோயுண்டாக்கும் நுட்பப்பிராணி களை நசிக்கச்செய்யும் விதமும், விஷத்தை முறிக்கும் மாற்றுமுறை களுமடங்கியதாகும்; சுருங்கச் சொல்லின், சுத்தமாக இருப்பவை களை அங்ஙனே காப்பாற்றுவதற்கும், அசுத்தம் இன்னதென்று அறிந்துகொள்வதற்கும், அசுத்தமானதைச் சுத்தப்படுத்துவதற் குமே விதிகள் ஏற்படுத்தலாகும். பூர்வத்து ஆரியர் அனுஷ்டித்து வந்த சுத்தீகரண முறைகளைக் கவனிக்குமிடத்து, அவை, விசித்திர மான யந்திரசாதனங்களைக்கொண்டு நிலக்கரியிலிருந் தெடுக்கப்பட்ட வஸ்துக்களுக்காக மாதந்தோறும் லக்ஷக்கணக்காய்ப் பணத்தைச் செலவிடக்கூடிய செல்வமிருந்த முனிசிபாலிடிகளுக்காக ஏற்பட்டன வல்ல; அங்ஙனமன்றி, ஆடம்பரமின்றி அநாயாசமாக விவசாயத் தொழில் செய்தும், அல்லாது அவிபாலவிருத்தி (ஆயர்தொழில்) மேற்கொண்டு நாட்டில் ஆங்காங்குச்சிதறுண்டுகாலங்கழித்து வந்த வர்களுக்கென அவ்விதிகள் ஏற்பட்டனவாகும்; இக்காலத்திற் காணப்படுவதுபோல ஜனத்தொகை மிகுந்த நகரத்துப் பிரஜைகளைக் குறித்து அந்த சுத்தீகரணவிதிகள் ஏற்படவில்லையென்பது திண் ணம். ஆதலின், அவர்களுடைய முறைகள்பெரும்பாலும் நாம் தினந் தோறும் உபயோகிக்கத்தக்கவைகளேயாம்; செயற்கைச் சாதனங் களை நாடாமல் அவர்கள் இயற்கைவகையில் தாதுபஞ்சீகரணத் தினாலும் (ரஸாயன சம்பந்தமான சத்துக்கள் ஒன்றோடொன்று கலப்பதனாலும்) சூக்ஷ்மமான பிராணிவர்க்கத்தின் காரியத்தினாலும்

உண்டாகத்தக்கமாறுபாடுகளுக்கேற்ற சுபாவதர்மங்களையே (இயற்கைவிதிகளையே) கைப்பற்றினர்.

மேற்சொல்லிய சித்தாந்தங்களுக்கு உதாரணமாக, இரைக்குடலைக் காப்பாற்றிக்கொள்ளும பொருட்டு ஆரியர்கள் ஏற்படுத்தியுள்ள சாஸ்திரவிதிகளைக் கவனிப்போம். பகலிற்செய்யும் வேலைகளின் சந்தர்ப்ப வசத்தினால் நமது தேகத்திலும் ஆடையிலும் ஒட்டிக்கொண்டிருக்கக்கூடிய நோய்விளைக்கும் நுண்ணிய பிராணிகோடிகளைக் களையக்கருதி நாம் தினந்தோறும் உடம்பைத் தேய்த்துக் குளிக்கவேண்டும்; உணவு புசிக்கும்போது பரிசுத்தமான மடியாடை தரிக்கவேண்டுமென்று அவர்கள் ஏற்படுத்திய பொதுவிதிகள் ஒருவாறிருக்க, நாம் அன்னமெடுத்துப் புசிக்கும் கை நகங்களின் சந்துகளிற் பிணி பயக்கும் பரபிண்டாதிகள் வந்தடையாதிருக்குமாறு ஒரு விதி ஏற்படுத்தியுள்ளார்:—"நகங்களினால் மண்ணைக் கிள்ளலாகாது; மிருத்பிண்டங்களைக் கீறலாகாது. புல்லைக்கிழிக்கலாகாது. மண்ணைக்கிள்ளுகிறவன், நகத்தைக் கடிக்கிறவன் நரகமடைவான்" இந்த விதியை மீறி நடக்கிறவனுக்குத் தண்டனை நரகப்பிராப்தியென்று மிகவும் சுருக்கமாகச் சொல்லிவிட்டார்கள். இது ராஜதண்டனையினும் மிகச் சுறுக்குற்றது; மனத்திற் றிகிலுண்டாக்கத்தக்கது. மரணத்திற்குப்பின்பும் ஜீவயாத்திரை இருக்கிறதென்றும் மறுபிறப்பு உண்டென்றும் போதிக்கும் ஆரியமதத்தின் கொள்கை மனத்தில் நன்றாகக் குடிகொண்டவர்கள் நரகப்பிராப்தியைக் கடுந்தண்டனையெனவே மதிப்பரல்லரோ.

இத்தேசத்தில் வழக்கமாகவுள்ள பிரக்ஷாளன, தாவன, ஸ்நான (கைகால்கழுவுதல், பல்விளக்குதல், உடம்புகுளித்தல்) முறைகளைக் கவனிக்குமிடத்து, நகத்தைக்கடிக்கும் வழக்கமுண்டாயின் அதனாற் பரபிண்டாதி சம்பர்க்கதோஷத்திற்குள்ளாகிப் பீடிக்கப்படுவோம் எனபது நன்கு விளங்குகின்றது. "ஆங்கிலோஸ்தோமம்" என்று ஆங்கிலக்கலைஞர் சொல்லும் குடற்புழு நம்மிடத்துக் குடிகொண்டு பிரபலித்துப் பீடியாதிருக்கும்பொருட்டே மண்ணையும் புல்லையும் நகத்தினாற் கீறலாகாதென்னும் விதியேற்படுத்தினரென்று தோன்றுகிறது. குடற்புழுவென்னும் இந்த நுண்ணிய கிருமிஜாலம் இத்

தேசத்தில் எங்கும் அபரிமிதமாக இருக்கின்றது. சென்னபட்டணத்துக்குடிகளுள் அரைவாசிக்கதிகமாயினோரும், மற்ற இடங்களிலுள்ளவர்களுள் முக்கால்வாசிப்பேரும் இந்தப்புழுவினாற் பீடிக்கப்பட்டிருக்கிறார்களென்று காப்டன் வில்லியம்ஸ் என்னும் இந்திய மருத்துவ நிபுணர் சோதித்தறிந்து வெளியிட்டுள்ளார். இந்தப் புழுவானது மணிக்குடலைச் சார்ந்து அட்டையைப்போல விடாதுபற்றி இரத்தத்தை உறிஞ்சுகின்றது. இப்புழுக்கள் அதிகரிக்குமிடத்து நித்திராணியும் (பலவீனமும்) ரத்தசோஷையினால் விளையும் பலவகை நோய்களும் பிராப்தமாகின்றன.

இந்தப் புழுவின் அண்டங்கள் மனிதருடைய மணிக்குடலினின்று வெளியேறினபிறகு கீடாவஸ்தையில் (மயிர்க்குட்டிக்குஞ்சுகளாக) தரையில் தங்கி இருக்கின்றன ; இதினின்று மறுபடி அந்தக் குடற்புழு பிறந்து பெருகுகின்றது. ஆகையாற்றான், பெரும்பாலும் விவசாயத்தொழிலில் அமர்ந்திருப்பவரான இந்தியர்கள் நகத்தைக் கடிக்கக்கூடாதென்றும் தரையைக் கீறக்கூடாதென்றும் விதித்தது ஆரோக்கியத்திற்கு இன்றியமையாததாகும். உண்பண்டங்களின் சுசியைப்பற்றிச் சொல்லுமிடத்து "சாஸ்திரமறிந்தவரால் நிஷேதிக்கப்பட்ட (தள்ளப்பட்ட) பதார்த்தம் எதையும் புசிக்கலாகாது" என விதித்துள்ளார். இஃது இக்காலத்து ஆரோக்கியாதிகாரியின் கடமையையே எடுத்துச்சொல்லியதாகும். பதார்த்தங்களைப் பழுதாக்கும் கலப்புக்கள் ஆகாவெனத் தெளிவாக நிந்தித்து ஒதுக்கியிருக்கிறார்கள். ஸ்பரிசத்தினால் வியாதியைப் பரவச்செய்யத்தக்க தூஷ்யமான வஸ்துக்களோடு சம்பந்தப்பட்ட ஈ எறும்பு முதலியவைகள் திறந்துவைத்திருக்கும் ஆறின உணவுப்பதார்த்தங்களின்மீது வந்து மொய்ப்பதனால் விஷபேதி, அஸ்திஜ்வரம், மஹாமாரியென்னுங் கொள்ளைநோய் ஆகிய வியாதிகளை யுண்டுபண்ணத்தக்க கீடங்கள் அவற்றில் அமருமென்பது இப்பொழுது எல்லார்க்குந் தெரிந்த விஷயம்.

அல்லாது, அப்படிப்பட்ட அணுப்பிராணிகள் தூசியோடு கலந்து கிடக்கும்; அவை நன்றாகக் காயாதிருக்கின் நசியாமற் பிராணதாதுவுடன் கிடக்கும்; ஈரங்கண்டவிடத்து உயிர்த்தெழுந்து பரவும்;

இம்மாதிரியான பரபிண்டாதிகள் திறந்துகிடக்கும் ஆறின உணவிற் படியலாம். ஆகையால், அன்னமிடும்பொழுது அஃது அதிக உஷ்ணமாக இருக்கவேண்டுமென்று கிருகஸ்தருக்கு விதியேற்பட்டிருக்கிறது; மிகவும் உஷ்ணமாக இருக்கின் பரபிண்டாதிகள் நசித்துப் போம் என்பது கருத்து; ஜீரணானுகூலத்தின் பொருட்டு, உண்பவர் மௌனமாகப் புசிக்கவேண்டும் (மௌநேநபோக்தவ்யம்) என்று விதிக்கப்பட்டிருக்கிறது. இஃது ஐரோப்பிய போஜனசாலையில் வழக்கமாகச் சொல்லப்படும் விதியேயாம். "புளித்துப்போன தின்பண்டங்களையும், ஓரிரவுமுழுமையும் வைத்திருந்து பழமைப்பட்டபதார்த்தங்களையும், மற்றொருவருடைய உச்சிஷ்டத்தையும் புசிக்கக்கூடாதென்று விதித்தது பரபிண்டங்கள் சேராமலும் குடல்களில் உபத்திரவங்கள் உண்டாகாமலும் காக்கும்பொருட்டேயாகும். குடியிருக்கும் வீடுகளில் அடிக்கடிவரும் பறவைகளின் மூக்குகளும் கால்களும் நோயுண்டாக்கத்தக்க அணுக்களுள்ள அசுத்தமான பதார்த்தங்களில் தோய்க்கப்பட்டிருக்கலாம்; அதுபோலவே மனிதருடைய பாதங்களும் அசுத்தங்களை மிதித்திருக்கலாம்; அவைகள் ஆகாராதிகளிற் படுவதினால் தீங்கு நேரிடும்; ஆதலின், உண்பண்டங்களில் மனிதருடைய பாதமாவது பறவைகளின் காலாவது மூக்காவது பட்டால் அப் பண்டங்களை உபயோகிக்கக் கூடாதென்றும் விதியேற்பட்டிருக்கிறது.

ஜலத்தைச் சாக்கிரதையாகச் சேகரித்து அதனை ஆரோக்கியானுகூலமாகக் காப்பாற்றவேண்டுமென்பதை ஆரியர் நன்கறிந்துள்ளார். இக் காலத்து ஆரோக்கியசாஸ்திர வித்தியார்த்திகளுக்கு நீரின் தன்மையை அதற்குள்ள பிரகிருதி சம்பந்தத்தைக்கொண்டு உணர்த்துவதுபோல ஆரியரும் சுத்தஜலத்தின் லக்ஷணத்தை அதன் பிரகிருதி சம்பந்தத்தினாலேயே விளக்கினர். அவர்கள் கூறியபடி சுத்த ஜல லக்ஷணமாவது அது சரியான வாசனையும் வர்ணமும் ருசியும் பொருந்தியிருக்கவேண்டும். ஜலத்தைச் சுத்தமான பிரதேசத்திலிருந்து எடுக்கவேண்டுமென்று கூறியது சுகாதாரத்திற்கு முக்கியமானதாகும். பூமியின் மேற்பரப்பிலுள்ள நீர் நிலையிலிருந்து நாம் நீர் எடுத்துக்கொள்ளும் பிரதேச முழுவதும் மிக்க பரிசுத்தமானதாக

இருக்கவேண்டியது அவசியமென்பதை மேற்குறித்த ஜலலக்ஷண விதி உணர்த்துகின்றது. இதனால், ஜனங்கள் வசிக்கும் பிரதேசத்தி லுள்ள நீர்நிலையிலிருந்து ஜலமெடுத்துக்கொள்ளக் கூடாதென்பது சித்தாந்தமாயிற்று.

இந்த விதியை யனுசரியாததனால் இத்தேசத்தில் அனேக பட்ட ணங்களிலும் கிராமங்களிலும் விஷபேதி, வயிற்றுக்கடுப்பு, அதிசார பேதி, (சிலவிடங்களில்) அஸ்திஜ்வரம் ஆகிய இவ் வியாதிகளுக்கு இரையாகி அனேகர் மாண்டுபோகின்றனர். இக்காலத்து சுகாதார சாஸ்திரிகள் இவ்விதியின் உண்மையை நன்கு கைக்கொண்டுள்ளார். ஐரோப்பா கண்டத்திலுள்ள முனிசிபாலிட்டியார் (ஆரிய தர்மசாஸ் திரத்திற் சொல்லியவாறு) "சுசிப்பிரதேசத்திலிருந்து நீரெடு"த்தற் பொருட்டு லக்ஷக்கணக்காகப் பணத்தைச் செலவிடுகின்றனர். சுத்த ஜலத்தை யெடுத்துவந்தபிறகு அதனைச் சுசிக்குறைவின்றிக் காப் பாற்றும் வழிகாட்டுவது அவசியமன்றோ? இவ் விஷயத்தில், உயர் குலத்தோரும் கல்வியிற் சிறந்தோரும் உபயோகிக்கத்தக்க ஜலத்தை யும் ஜலபாத்திரத்தையும் தாழ்ந்த ஜாதியாரும் கல்விப்பயிற்சியிற் குறைந்த கீழ்மக்களும் தொடக்கூடாதென்னும் ஜாதிக்கட்டுப்பாட்டி னால் தற்செயலாகப் பரபிண்டாதிசம்சர்க்கம் பெரும்பாலும் உண் டாகாதிருக்க வகையேற்பட்டதென்பது நிச்சயம். ஆயினும் பொது வான ஜலாசயங்களின் விஷயத்தில் முனிசிபல் சட்டம் போன்ற தொரு விதி அவசியமேயன்றோ? ஆகையாற்றான், நதிக்கரைகளி லும் நீரிலும் ஜலமலங் கழிக்கக்கூடாதெனத் தடுத்தனர். நதிக்கு அருகில் மலோபாதி தீர்த்துக்கொள்ளவேண்டிவரின் இந்த விதி யை யனுசரித்து நடக்கும் ஜாக்கிரதையுள்ள ஆரியனானவன் நீர் நிலைக்குச்சிறிது தூரத்தில் தனியாக ஒரு பள்ளம் தோண்டிக்கொள் ளவேண்டும். இப்படிச் செய்வதனால் மழைஜலம் வழிந்தோடி அந்த அசுத்தத்தை நதியிற் கொண்டுபோய்ச் சேர்க்காது. இன்னும் நதிக் கரைகளை நன்றாகப்பாதுகாக்கும் பொருட்டேபோலும், அவை பரிசுத்த ஸ்தலங்களெனவும், அங்குப் பிதிர்க்களுக்குக் கிருத்தியங் கள் செய்யலாமெனவும் மதித்துக்கூறியிருக்கின்றார்கள். "மூத்திரம், மலம், எச்சில், அழுக்காடைகள் வேறுவித அசுத்தங்கள், இரத்தம்

விஷபதார்த்தங்கள் ஆகிய இவைகளைத் தண்ணீரிற் போடக்கூடாது" என்னும் விதியைவிட ஜலத்தைச் சுசியாக வைப்பதற்கான ஏற்பாடு வேறொன்று உளதோ ?

இக்காலத்தில் இந்துக்கள் மேற்சொல்லிய தர்மசாஸ்திரவிதிகளை ஆசரியாதிருப்பதைக்கண்டு ஆரோக்கியாதிகாரிகள் மிக்க வெறுப்புறுகிறார்கள். இந்துக்களுக்கு நேரும் தேகோபத்திரவங்கள், சாவு, ஆரோக்கிய ஐசுவரியக்குறைவு முதலியன பெரும்பான்மையும் மேற்சொல்லிய சுகாதாரவிதிகளை அவர்கள் அநுசரித்து நடவாததனாலேயே விளைகின்றனவென்று நான் சொல்லவும் வேண்டுமோ ?

(இன்னும் வரும்)

கர்னல், உ. ஜி. கிங்கு, சி. ஐ. இ., ஐ. எம். எஸ்.,
சானிடரி கமிஷனர்.

# வானசாஸ்திரம்

ஆகாயம் என்பதென்ன ? பரந்த அச் சமுத்திரத்திற்குக் கங்குகரையில்லையா ? அளக்கொணா தாழ்ந்த அப்பாதாளத்திற்கு அடிகிடையாதா ? என ஓர் ஆங்கில வானசாஸ்திரி தாமெழுதிய வானசாஸ்திரத்திற்கு அடிப்படையாகக்கொண்டு வானசாஸ்திரத்தை விளங்கும்படியாக எழுதிச் செல்லுகின்றனர். சாதாரணமாக நாம், அதிகமங்கலும், அதிகப்பிரகாசமும் இல்லாத நாளிரவின் முற்காலத்திலோ பிற்காலத்திலோ ஆகாயத்தை நிமிர்ந்துபார்ப்போமாயின், வெள்ளையுஞ் சற்றுச் செவந்தநிறமும் உள்ள ஒளிப்பொருள்கள்; பல ஒளியிலும், உருவத்திலும் வேற்றுமையுடையனவாயும், சில சலனப்படுவனவாயும், சில அப்படிக்கின்றி ஒரே மாதிரியாகச் சலனமின்றியும் தோன்றக் காண்கின்றோம். அவைகள்யா ? யாரால் அங்கு ஏற்படுத்தப்பட்டன ? பிரயோஜனமின்றி விதைக்கப்பட்டனவா ? அவையெங்குச்செல்கின்றன. அவைகளின் கதி என்ன ? என்ற பற்பல வினாக்களெழுகின்றன. அவற்றிற்கு விடையிறுப்பது அவசியமன்

ரே. இவற்றினைக் கூறும் சாத்திரமான வானசாத்திரம் நமக்கு கிட்டாதாயின் நாம் உழல வேண்டியதா யிருக்குமென்பதிற் றடையில்லை.

இதினின்றும் மானிடப்பிறவி எத்தகைத்து என ஊகித்துப் பாருங்கள்.

"தொல்லைநம் பிறவி யெண்ணிற் றொடுகடன் மணலு மாற்று வெல்லைய," எனச் சிந்தாமணியிற்கூறியபடி நம் வாழ்நாள் அற்பமே யாயினும் அதனை எவ்வளவு விசேஷமான காரியங்களில் உபயோகப் படுத்துகின்றோம். மேலேகூறிய, ஆகாயத்திற்றோன்றும் ஒளிப் பொருள்களைக் கண்டுசொல்வோரைத்தான் வானசாஸ்திரிகளென்கி றோம். இப்படி எத்தனையோ தலைமுறையாக இவ் வானசாத்திரத் தை உற்றுநோக்கி வந்திருக்கின்றனர். நமது பூர்வீகர்கள் வெகு காலமாக வானசாத்திரத்தைப் பயிற்சிசெய்து வந்ததுண்டு. மேனா ட்டிலிருந்து வானசாத்திரம் இந் நாட்டுக்கு வந்ததாகச் சிலரது அபிப் பிராயம். இப்பொழுது சென்னை இராஜதானிக்கு "கோ ஆப்ரேட் டிவ் கிரெடிட் சங்கங்களின் ரிஜிஸ்டிராரான மிஸ்டர் திவான்பகதூர் டி. ர. சுவாமிக்கண்ணுப்பிள்ளையவர்கள் M. A., B. L., LLB. (LOND) சென்னையில் இவ்வருஷம் மார்ச்சுமீ 26, 27, 28-உகளில் நடந்த தென்னிந்திய சங்கத்தாரது வருஷோற்சவத்தின்போது தாஞ்செய்த பிரசங்கத்தில் இந்தியரது சித்தாந்தமே விசேஷமுடையதென்றும், அதனால் யாதொரு தவறுதலும்; இப்போது மேனாட்டார் கையாண்டு வரும் முறைக்கு ஏற்படாதென்றும் வெகு விரிவாகப்பேசி நிரூபணஞ் செய்தார்கள்.

ஆசியாக்கண்டத்தின் மேற்பாகத்தில் ஓடும் யூபரெட்டஸ் நதிக் கரையிலுள்ள கால்டே (Chaldai) ஜாதியாராகிய இடையர்கள் இவ் வானசாத்திரத்தை முதன்முதல் கண்டுபிடித்தனரென்பது மேனாட் டாரது கொள்கை. அவர்கள் ஆடுமாடுமேய்க்குமிடம் மலை, காடு, செடிகளின்றி வெறும் வெட்டவெளியாகவிருந்தது; அவர்களும் வேறுதொழிலில்லாமையால் வானத்தைப் பார்த்தவண்ணமாயிருந்து காலக்கிரமத்தில் இதனை அறிய இடமுண்டாயிற்றென்கின்றனர். அப்படியுமிருக்கலாம். இதைப்பற்றி 'Dravidian Astronomy

and its affinity with the Chaldean திராவிடவானசாத்திரமும் கால்டேயர்களது சரித்திரத்திேனொடொற்றுமையாம்' என ஒரு வியாசம் சோதிடநூலில் வல்லவரான டாக்டர் V. V. இரமணசாஸ்திரிகள் M.A.PHD. F.Z.S. (LON) etc. etc. அவர்களால் எழுதித் தமிழர் தோன்மையாராய்ச்சிச்சங்கத்தாரால், அவர்களது பத்தாவது இலக்கம் புத்தகரூபமாய் வெளியிடப்போவதாக அறிக்கையிட்டிருக்கின்றனர். அதனை வெளிவந்தபிறகு ஆராய்வோம்.

நாம் மேலேகூறியபடி மாசுமப்பில்லா நாளிரவில் ஆகாயத்தைப் பார்ப்போமாயின் மனத்திற்கு எவ்வளவு ரம்மியமாயிருப்பதென்பது பிறர்சொல்லத் தெரிவதல்ல. அதனிலும் மழைபெய்ந்துவிட்ட பிறகு ஆகாயமும் நிர்மலமாயிருக்குமாயின் அப்பொழுதுண்டாகும் ஆநந்தம் அளவிடற்கரியது. ஆயினும் ஒரு சிறுபொழுதுதான் இந்நிகழ்ச்சியுண்டாகின்றது. சற்றுநேரத்திற்கெல்லாம் இவைகளின் கதியென்ன? இவை எப்படிச் சஞ்சரிக்கின்றன? என்ற கருத்து முற்படுகிறது.

முதலிற் பார்க்கும்போது ஆகாயவலயத்தில் நக்ஷத்திரங்கள் நிரந்தரமாயிருப்பதாகக் காணப்படுகிறது. உற்றுநோக்கும்போது ஒரு வெண்மையானபட்டையொன்று ஆகாயத்திற்கே துகிலுடுத்தது போற்றோன்றுகிறது. க்ஷீரவலயம் (Milky way) என்கிற அதனிருபுறங்களையும் உற்றுநோக்குவோமாயின் அநேக தாராகணங்கள் கூடியிருக்கக் காணுவோம். இப்படி ஒரு வெள்ளையாகத் தோற்றுவதே சிறு சிறு நக்ஷத்திரங்களாம். இவற்றை தூரதிருஷ்டிக்கண்ணாடிகொண்டு ஆராய்வோமாயின் நன்குபுலப்படும். இந்த ஆனி அல்லது ஜூன், ஜூலை மாதங்களில் நடுநிசியில் தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச் சென்று பிறகு கிழக்கே செல்லக்காணலாம். இந்தக் கணங்கள் எவ்வளவுதூரம் பரந்திருக்கின்றன? அதன் பரிமாணம் என்ன? என்ற கேள்விகளுக்குப் பதிலளிக்க முயலும்போது நாஞ்சற்றுத் தடுமாறுகிறோம். நாம் இதைப்பற்றிப் பின்னால் விரிவாய்ப்பேசுவோமாகையால், இதனை இங்கு விவகரிக்காது நிறுத்திக்கொண்டு பொதுவாக, நமது கண்களுக்குப் புலப்படும் சூரியனும் இந்த க்ஷீரவலயத்திலொரு நக்ஷத்திரந்தானென்போம். அநேகருக்கு இஃது அதிசயமாகத் தோற்றக்கூடும்.

நாம் ஆகாயத்தை யுற்றுநோக்குவோமாயின் அநேக ஒளியுள்ள நக்ஷத்திரங்கள் சேர்ந்து இந்த க்ஷீரவலயத்தினின்று பிரத்தியேகமாயும், தூரத்திலுந் தோன்றக்காண்போம். இப்படி அநேகமிருக்கின்றன. இவற்றிற்கு வெண்மேகக் கூட்டங்கள் Nebulæ என்பர்.

கண்டுபிடித்தற்கரிய இவ் வாகாயத்தில் தூரதிருஷ்டிகொண்டு பார்க்குங்கால் தோன்றுபவை இன்னும்பல! விசித்திரமானதும், பரந்ததும் அடிமுடியற்றதுமானவிது நமது கண்களுக்கே அநேககோடி சூரியர்களாகப் பிரகாசிக்கின்றது. அஃது எவ்வாறு அமைந்திருக்கிறதெதன அறிய, நாம் மேலே யோசிப்பதைத் தவிர்த்து நமக்குச் சமீபத்திலிருப்பவைகளைக்கொண்டு ஆராயவேண்டும். இவைகளிற் சூரியன் மத்தியமானது. இந்த ஒளியும் உஷ்ணமும் கூடிய பிரதேசத்தைச் சுற்றி அநேக கிரகங்கள்—சில உபக்கிரகங்களுடன் கூடியதாயுஞ் சஞ்சரிக்கின்றன. அவைகளுக்கு இயற்கையாய் ஒளியிருப்பதாக ஏற்படவில்லை. சூரியனது ஒளியைப்பெற்று, அதனது பிரபை இப்பூமியிலும் ஆகாயத்திலுங்காணப்படுகிறது. நமது பூமியும் தூரத்திலிருந்து பார்க்கப்படுமாயின் அப்படியே காணப்படும். இவ்வகைப் பொருள்களையெல்லாஞ் சேர்த்து நடத்துவதற்குச் சௌரகணம் (Solar System) எனப்படும். பொதுவாக நக்ஷத்திரமண்டலம் (Sidereal Universe) என்பது எல்லாவற்றினையுங்கவரக்கூடியதாயினும் நம்மை யடுத்திருப்பதைப்பற்றிப் பேசுவதே நமது முதற்கடமை. இவ் விரண்டு கொள்கைகளாலுண்டாகும் பிரயோஜனங்கள் யாவெனின் நக்ஷத்திரங்கள் மாறுவதாகப்புலப்படுவதில்லை. அவைகளிருக்குமிடம் அதிகத்தூரமாயிருப்பதாலும், அவை சாதாரணமாக இருந்தவிடத்திலேயே இராமல் சஞ்சரிப்பதுண்மையேயாயினும், அவை கண்களுக்குப் புலப்படாமையான் ஸ்திரநக்ஷத்திரங்கள் (Fixed Stars) எனப்பெயர்பெற்றன. நமக்கு அதாவது பூமிக்குச் சமீபத்திலிருப்பதாலும் பூமியைவிடக் கதி அதிகமுடையதாலும், இவற்றிற்குச் சலனராசிகள் அல்லது கிரகங்கள் (Rotation) எனப்பெயரமைந்தது.

இப்பொழுது நாம் ஆகாயத்தைப்பார்க்கும்போது நக்ஷத்திரங்களும் கிரகங்களும் நாங்கண்ட இடம்விட்டுச் செல்லக்காண்கிறோம்.

நாமும் இருந்தவிடத்தைவிட்டுத் தூரஞ்சென்று மறுபடி பார்ப்போமா ஞல் அவைகளை வேறு இடங்களிற் காண்கிறோம். அதனுல் அவைகள் சஞ்சாரஞ் செய்வதோடு நமது பூமியுஞ் சஞ்சரிக்கின்றதென்பது விக சிதமாம். முற்காலத்தில் இப்படிப்பூமி சஞ்சரிப்பது தெரியாது. சூரி யன்சஞ்சரிப்புதாகக்கொண்டு கணக்கிட்டு வந்ததாற்றுன் கொஞ்சம் இடையூறுகள் தோன்றின. ஆயினும் மேனுட்டாரைப்போல் நாங் திண்டாடாது, நமது பூர்வீகர்கள் செவ்வனே யாராய்ந்துபார்த்து வேண்டியகாரியங்களைச் செய்து வைத்திருப்பதால் நமது விதிகள் விசேஷமானவையென்று கொண்டாடப்படுகின்றன.

ஒவ்வொரு கிரகங்களையும்பற்றி வியவகரிக்கும்போது என் னென்ன அற்புதங்கள் காணப்படுகின்றனவென்பது வெளிப்படும். ஒவ்வொன்றுந் தன்னைத்தானே பிரமணம் (Rotation) செய்துகொ ள்ளுவதுமன்றி, மற்றைக்கிரகங்களைச் சுற்றிப் பரிவர்த்தனஞ் செய்வ தும் (Revolution), அவைகளின் நித்தியகதியும், பரிமாணமும், சீதோஷ்ண நிலைகளுங் கூடியவரையிற் சொல்லப்படும். இவை மேனு ட்டுச் சாத்திரங்களையும், இந்து வானசாஸ்திரங்களையுங் கொண்டு ஒற் றுமையாகச் சொல்லப்படுவதோடு பிரத்தியக்ஷமாக ஆகாயத்தில் தோன்றுவதையும் உடன் கூறப்படும். இவைகள் இப்படியாயினும், இவைகளைச்செலுத்தும் கதி எல்லாவற்றிற்கும் ஒருமாதிரியான தேயாம்.

சாதாரணமாக, ஒருவர் ஒருமத்தியஸ்தலத்தில் நிற்பதாக வைத் துக்கொள்வோம். அவருக்கு ஒளிபொருந்திய வஸ்து ஒன்று வர வர அவரிடம் வருவதாகவும், உரு பெரியதாகத் தோற்றுவதாக வுங் காணப்படும். அது தன்னைச்சுற்றிப்பிரமணஞ் செய்வதால் அப் படித்தோற்றுகிறது; அது செகண்டு ஒன்றுக்கு ஒன்பது மைல் செல்லுகிறது. அல்லது ஒரு விகடிகைக்கு ஒரு மைல் வீதஞ்செல்லு கிறது. இதேமாதிரி குரு (வியாழன்) ஓடுகிறது. இதைவிடப் பெரிய தான சூரியன் தனது ஆகர்ஷண சக்தியால் இழுத்துக்கொள்ளா விடில் அதுபோகுமிடந் தெரியாது. இப்படி ஒவ்வொன்றும் நம்முன் வரக்காண்போம். காலமாத்திரம் பற்றுததாயிருக்கும். இவைகளை யெடுத்துக் காட்டும் சாஸ்திரத்தின் பெருமையளவிடற்கரியதன்றோ.

(தொடரும்).

இலக்கணவிளக்க பரம்பரை,

திருவாரூர், சோமசுந்தரதேசிகன்.

# புத்தகக் குறிப்பு

விவேக சந்திரிகை முதற்பாகம்:—இஃது, ஆரியா பத்திராதிபர் ஸ்ரீமத்-தி. அ. ஸ்வாமிநாதையரவர்களால் இயற்றப்பெற்றது. நல்லொழுக்கங்களிற் சிறந்த பற்பல நெறிகளைச் சிறுவர்கள் எளிதிற் கற்றுணருமாறு சிறிய கதைகளைக்காட்டி எளிய நடையில் எழுதி அச்சிடப்பெற்றிருக்கிறது. நந்தமிழ்நாட்டுச் சிறுவர்களுக்கு இத்தகைய புத்தகங்கள் பாடமாகக் கற்பிக்கப்பெறுமாயின் அவர் அறிவொழுக்கங்களால் நல்வழிப்படுவதற் கேதுவாகும்.

'மோஹமுத்கரம்' என்னும் பஜகோவிந்த ஸ்தோத்ரம்:— இதுவும் ஆரியாபத்திராதிபர் ஸ்ரீமத்-தி.அ. ஸ்வாமிநாதையரவர்களால் மொழிபெயர்க்கப் பெற்றது. இது ஸ்ரீமத்-சங்கராசார்ய ஸ்வாமிகளால் வடமொழியிற்செய்யப்பட்ட சுலோகங்களுக்குத் தமிழிற் பொழிப்புரையெழுதி அப்பொருளைப் பற்பலதமிழ்நூல் மேற்கோள்கொண்டு உபந்நியாச ரூபமாகச் செவ்விய நடையில் விரித்தெழுதப்பெற்றிருப்பதுடன் ஆசாரியஸ்வாமிகளின் சிஷ்யர்களாற்செய்யப்பெற்ற சதுர்த்தச மஞ்சரிக்கும் உரையெழுதிச் சேர்க்கப்பெற்றிருக்கிறது; மோகாதிகளை யொழித்து உபசாந்தி யடைதற்குரிய உபதேசங்களடங்கியது.

'அக்ஞாதவாசம்' அல்லது மாண்டவன் மீண்டமாயம் என்னும் நாவல்:— ஸ்ரீமத்-ஆர். எஸ். நாராயணசாமி ஐயர் பி. ஏ., பி. எல்., அவர்களாலியற்றப் பெற்றது. இதை ஆங்காங்குப் படித்துப்பார்த்ததில் நவீன உலகவழக்க நடையைத்தழுவித் தற்கால நிகழ்ச்சியிலுள்ள உலகவிவகாரங்களுக் கிணங்கப் புத்திசாதுரியந்தோன்ற எழுதப்பெற்றிருப்பதாகத்தெரிகிறது. இதன் விலை அணா 8.

ஸ்ரீ வான்மீகி ராமாயண சருக்கார்த்த சங்கிரகம்:— இஃது, அரியக்குடி ஸ்ரீமாந்-சா. கி. அரங்கநாதச் செட்டியாரவர்களால் வடமொழிவான்மீகத்திலுள்ள ஒவ்வொரு சருக்கத்திலுஞ் சொல்லப்படுங் கதைகளைச் சுருக்கிச் சாந்தரஸமுள்ள ஒவ்வொரு செய்யுளிலடக்கி 539 செய்யுளாகப் பாடப்பெற்றிருக்கிறது. இதற்குப் பல வித்வா

ன்களாற் கொடுக்கப்பெற்ற சிறப்புப்பாயிரத்தால் இதன் நயங்கள் விளங்கும். இதன் விலை அணா 8.

திருசியா திருசிய விசார சங்கிரக வினாவிடை:— இது ஸ்ரீமத்-வேதாந்த சிதாகாசசுவாமிகளா லியற்றப்பெற்றது. அத்வைத முறையில் வேதாந்தவிசாரம் செய்யத்தொடங்குபவர்களுக்கு மிகவும் பயன்படும். திருசியாதிருசிய பதார்த்த விசாரங்களைச் சிறுவருமுணரும்படி எளியநடையில் வினாவும் விடையுமாக எழுதி முடிக்கப்பெற்றிருக்கிறது.

ஆரியருடைய சங்கீதசாஸ்திரத்தின் சரித்திர சங்கிரகம்:—இது கோயமுத்தூர் சுதேச தர்மரக்ஷணி ஸபையின் காரியதரிசியும், கலாநிதிப்பத்திராசிரியருமான சேலம் ஸ்ரீமத்- பகடால. நரசிம்மலுநாயடு அவர்களாலியற்றப்பட்டது. இது பழமையான ஆரிய சங்கீத முறைகளைப் பற்பல மேற்கோள்களுடன் தெளிவான தமிழ் நடையில் எழுதி முடிக்கப்பெற்றிருக்கிறது. இதன் விலை அணா 4.

மாறன் வருக்கக் கோவை:—இது திருக்குருகூர் மாறனென்னும் நம்மாழ்வார் மீது, கற்போர் நெஞ்சங் காமுறும் வண்ணஞ் சொன்னயம் பொருணயந் தொடைநயம் பொருந்த, அகப்பொருட்டுறையுள், முக்கியமாகிய சில துறைகளையமைத்தியற்றப்பெற்றது. இதுகாறு மித்தகையநூ லிரண்டொன்றே வெளிவந்துளது. இவ்வரிய நூலியற்றிய புலவர் பெருமானது பெயர், ஜாதி முதலியன தெற்றெனப் புலப்படவில்லை. இத்தகைய நூலைத் தமிழர்க்குப்பயன்படுமாறு பரிசோதித்து அச்சிட்டுதவிய ஸ்ரீமத்—அப்பு, சடகோப ராமாநுஜாசாரியர் இன்னும் இத்தகைய நூல்களைப்பரிசோதித்தச்சிடு மூக்கமுடையராக வேண்டுகின்றேன்.

கண்ணகி கதை:—இஃது அஞ்சொனுண்டேர்ச்சிச் செஞ்சொற் புலவர் பெருமானாகிய, இளங்கோவடிகளாற் செய்யப்பெற்ற சிலப்பதிகாரமென்னுங் காவிய கதையைப் பாலருமெளிதி லுணருமாறு வசனரூபமாகச் சொற்சுவை பொருட்சுவை தோன்றச் சுருக்கிச் சுன்னாகம் ஸ்ரீமத்-அ. குமாரசாமிப்புலவரவர்களா லியற்றப்பெற்றது. பிள்ளையவர்கள், இதுபோன்ற அரும்பெருங் காவியங்களையெல்லாம் வசனரூபமாகவெழுதி யுதவுவர்களேல், தமிழ் மக்கட்கினிது பயன்படுமென்பதெமதுதுணிபு. ப-ர்.

# மதுரைத் தமிழ்ச்சங்கம்.

## இச்சங்கத்தார் 1911ஆ ஏப்ரல்மீ௴த்தில் நடாத்திய பி.ஏ., மெற்றிக் ஆங்கிலகலாசாலைத்தமிழ்ப்பரீக்ஷையிற் றேறிப் பரிசும் யோக்கியதா பத்திரமும் பெறும் மாணாக்கர்களின் விவரம்.

### பி. ஏ. பரீக்ஷை.

#### 1-வது வகுப்பு.

1. 4. B. தாவுத்ஷா, பிரசிடென்ஸி காலேஜ், சென்னை.
(முதற்பரிசு ரூ 50 பெறத்தக்க தங்கப்பதக்கம்)

2. 5. K. சுப்பிரமணியபிள்ளை, ௸ ௸.
(இரண்டாவது பரிசு ரூ 45)

3. 3. S. நரசிம்மன், பச்சையப்பன்காலேஜ், சென்னை.
(மூன்றாவது பரிசு ரூ 40)

#### II-வது வகுப்பு

1. 2. N. C. ஸ்ரீநிவாஸாச்சாரி, பச்சையப்பன் காலேஜ், சென்னை.

2. 1. P. B. முனிசாமி செட்டி, ௸ ௸

### மெற்றிக்குலேஷன் or ஸ்கூல் பைனல் பரீட்சை.

#### 1-வது வகுப்பு.

1. 41. S. இரங்கநாத முதலி, முனிசிபல் காலேஜ், சேலம்.
1-வது பரிசு ரூ 30. (வெள்ளிப்பதக்கமும் மீத ரூபாவும்.)

2. 40. K. வெங்கடசுப்பன், ஷை ஷை
(இரண்டாவது பரிசு ரூ. 25.)

## II-வது வகுப்பு.

1. 195. N. பாலசுந்தரம், பச்சையப்பமுதலியார் ஹைஸ்கூல், காஞ்சீபுரம்.
2. 62. P. குப்புசாமி, அர்ச்சூசையப்பர் கலாசாலை, கூடலூர்.
3. 42. W. V. கோவிந்தசாமி, போர்ட்செகிண்டரி ஸ்கூல், உடுமலைப்பேட்டை.
4. 119. K. உலகநாதன், ஹிந்துஹைஸ்கூல், ஸ்ரீவில்லிபுத்தூர்.
5. 66. S. திருநாவுக்கரசு, அர்ச்சூசையப்பர் கலாசாலை, கூடலூர்.
6. 55. V. வெங்கடநாராயணன், லண்டன்மிஷன் பாடசாலை, கோயம்புத்தூர்.
7. 43. K. A. பழனியப்பன், போர்ட்செகிண்டரி ஸ்கூல், உடுமலைப்பேட்டை.
8. 147. M.A. ஸ்ரீநிவாஸன், வெஸ்லிகாலேஜ், இராயப்பேட்டை.
9. 177. A. சிவராமசுவாமி, வெஸ்லியன்மிஷன் ஹைஸ்கூல், நாகப்பட்டணம்.
10. 24. V. சவரிமுத்து, செண்ட் பிரான்சிஸ் சேவியர்ஸ் ஹைஸ்கூல், பாளையங்கோட்டை.
11. 60. A. நீலகண்டன், அர்ச்சூசையப்பர் கலாசாலை, கூடலூர்.
12. 127. K. வீரராகவன், வூர்ஹிஸ் காலேஜ், வேலூர்.
13. 71. V. இராமசுவாமி, மகாராஜாஸ் காலேஜ், புதுக்கோட்டை.
14. 96. P. சுப்பிரமணியன், கல்யாணசுந்தரம் ஹைஸ்கூல், தஞ்சாவூர்.
15. 191. P. N. வரதாசாரி, பச்சையப்பன் ஹைஸ்கூல், காஞ்சீபுரம்.
16. 182. R. விசுவநாதன், பிண்டிலே காலேஜ், மன்னார்குடி.
17. 58. C. S. சூரியநாராயண சர்மா, அர்ச் சூசையப்பர் கலாசாலை, கூடலூர்.

18. 73. R. இராமஸ்வாமி ஐயங்கார், போர்டு ஹைஸ்கூல், திருவாரூர்.

19. 187. V. S. இராமசாமி, பிண்டிலே காலேஜ், மன்னார்குடி.

20. 137. S. நடேசன், ஸ்ரீ மஹாந்து தேவஸ்தானம் ஹிந்து ஹைஸ்கூல், வேலூர்.

21. 149. N. C. சக்ரவர்த்தி, முத்தியாலுப்பேட்டை ஹைஸ்கூல், சென்னை.

22. 121. S. சித்திரபுத்திரன், ஹிந்து ஹைஸ்கூல், ஸ்ரீவில்லிபுத்தூர்.

23. 50. N. கோவிந்தசாமி, செயின்ட்மிக்கல்ஸ் ஹைஸ்கூல், கோயம்புத்தூர்.

24. 188. K. கிருஷ்ணமாசாரி, (U. F. C. M.) யுனைடட் ப்ரீ சர்ச் மிஷன் ஹைஸ்கூல், காஞ்சீபுரம்.

25. 161. K. N. பஞ்சாபகேசன், முனிசிபல் ஹைஸ்கூல், மாயவரம்.

26. 19. E. முத்துசுவாமி, செண்ட் பிரான்சிஸ்சேவியர்ஸ் ஹைஸ்கூல், பாளையங்கோட்டை.

27. 136. S. அப்பாக்குட்டி முதலியார், ஸ்ரீ மஹாந்து ஹிந்து ஹைஸ்கூல், வேலூர்.

28. 194. K. V. கணபதி, பச்சையப்பன் கலாசாலை, காஞ்சீபுரம்.

29. 38. C. பிள்ளையார், ஹயர் கிரேட் சகிண்டரிஸ்கூல், கோட்டாறு.

30. 67. R. பாலசுப்பிரமணியன், மஹாராஜாஸ் காலேஜ், புதுக்கோட்டை.

31. 99. T. S. ரெங்கநாதன், கல்யாணசுந்தரம் ஹைஸ்கூல், தஞ்சாவூர்.

32. 7. V. இராமஸ்வாமி, ஸேதுபதி ஹைஸ்கூல், மதுரை.

33. 31. Y. A. இராஜமணி, ஸ்காட் கிறிஸ்டியன் காலேஜ், நாகர்கோவில்.

34. 83. N. இராமலிங்கம், செண்ட்பீடர்ஸ் ஹைஸ்கூல், தஞ்சாவூர்.

35. 146. V. M. செல்வராயன், வெஸ்லிகாலேஜ், இராயப்பேட்டை.

உ

கடவுள் துணை

# செந்தமிழ்

தொகுதி-க.] விரோதிகிருது ஆடு வைகாசிமீ. [பகுதி-எ.

## யசோதரகாவிய ஆராய்ச்சி

(உகக-ம் பக்கத் தொடர்ச்சி.)

[ஸ்ரீ: டி. எஸ். குப்புஸாமி சாஸ்திரிகள் எழுதியது.]

மேலேகாட்டிய சுலோகத்தில், அரசன் கருநெய்தற் பூவையும் கள்ள நாயகனையும் சிலேடையிற் சொல்லி, அரசி கள்ள நாயகனாற் புடைபட்டதைக் குறிப்பாற் காட்டுகின்றான். ப்ரதிபக்ஷம்—புரை புரை தோறும்; ஸவ்ரணதா—நீர்சேர் பொள்ளலின் வருவிற்றாய; க்ருஷ்ணமுகேந—கருத்த வாயையுடைய (கருத்த வாயை யுடைய கள்ள நாயகனால்; நீலநிறமான வாயையுடைய கருநெய்தற் பூவினால்). வடமொழியில் "க்ருஷ்ணமுகேந" என்பது ஒன்றன் பாலுக்கும் உயர்திணை ஆண்பாலுக்கும் பொதுவாகிய மொழி; அத்தகைய பொதுமொழி கிடைக்கப்பெறாது இங்கு "இருநிற மலரினால்" என்று ஒன்றன்பாலாகக் கூறினார்.

(9) "ஸத்யவஸாநஸமயேஷி தராத்ரிவ்ருத்தா -
ஸாதாய வாஸம் ப்ருதிவோர்ய ராஜ்ஞ: ।
உத்வமஸமயே ஜநநீஸமீபம்
ஜமாஸ ராஜா ஸ்விதவ்யவஸ்ய: ॥
விநயவிநத்ரஸயமாநம் ஸா நிரீக்ஷ்ய நிஜாத்மஜம்
விவ்ருதநயநத்வந்த்வநாஸாதாம்ஸிஷ்டாஸ்திவாதராக: ।
நிகடவிவ்ருதம்ஸ்யத்ரயாதாய வக்த்ரேதி ததா

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]॥"

இதன்பொருள்:—இவ்வாறு இரவில் நடந்த செய்தியைக்குறிப்புக்காட்டி வார்த்தையாடி, அரசியைத் தெளியச்செய்து, அரசன் தீராத்துக்கத்தினால் ஓரிடத்தும நிலைகொள்ளாளுயத் சமீபமடைந்தான். அப்பொழுது, சந்திரமதி தாழ்ந்து தலைவணங்கிய தன் மகனை விரிந்து மலர்ந்த விரண்டு கண்களால் பருகுபவள் போல அன்புற்றுப் பார்த்து, அவன்றலையைத் தன்முகத்தோடு பொருந்தி உச்சி முகந்து × மிக்க களிப்புற்றாள். அவள் கற்புடைய மங்கையர்களைக்கொண்டு இரத்தின பாத்திரத்தில் புத்தப் புதிய அறுகுகளையும் அக்ஷதைகளையும் எடுத்துவரச்செய்து, அவைகளைத் தன் மகன்றலையில் தூவி, 'நீ கையிலேந்திய உடைவாளினால் பகைவர்களையெல்லாம் அடியோடு மடுத்து, எல்லா வளங்களும் தழைக்க இப்பூவுலகை யாளுவாயாக' வென்று ஆசி கூறினாள்.

"ஆயிடை யரச னுள்ளத் தரசினை விடுப்ப வெண்ணித்
தாயமர் கோயி லெய்திச் சந்திர மதிதன் முன்னர்ச்
சேயிடை யிறைஞ்ச மற்றித் திரைசெய்நீ ருலக மெல்லா
நீயுயர் குடையின் வைகி நெடிதுடன் வாழ்க வென்றாள்." II 54.

(ம) "[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥
[illegible]
[illegible] ।
[illegible]
[illegible]॥"

இதன்பொருள்:—ஆனால், வெண்ணிலவானது கருநெய்தற்பூ வினை (பூவுலகு முழுவதையும்) மலரச்செய்து அதற்குப் பெருஞ் சிறப்பளிக்குஞ் சந்திரனை விட்டகன்று இன்றிரவு இருளுடன் சேர் ந்திருக்கத் தெளிவுறக் கண்டேன். நான் இதுவரையில் இஜ் ஜன்மத் தில் ஒருபொழுதும் இவ்வாறு கனவிலுங் கண்டதில்லை. இஃது என் மனத்தில் நன்றாகத் தைத்து எனக்குச் சகிக்க முடியாத துக்கத்தை

"விண்ணிடை விளங்குங் காந்தி மிகுகதிர் மதியந் தீர்ந்தே
மண்ணிடை மழுங்கச் சென்றோர் மறையிருட் பகுதி சேரக்
கண்ணிடை யிறைவி கங்குற் கனவினிற் கண்ட துண்ட
தென்னுடை யுள்ளந் தன்னு ளீர்ந்திடு கின்ற தென்றான்." II. 56.

இவ்வாறே இவ்விரண்டு காவியங்களிலுமுள்ள ஸம்ஸ்கிருத சுலோகங்களுக்கும் தமிழ்ச்செய்யுட்களுக்கும் பொருளொன்றாயிருப் பதற்கு இன்னும் பல வுதாரணங்கள் எடுத்துக் காட்டல் கூடும். ஆதலின் ஐஞ்சிறு காப்பியத்தொன்றாகிய "யசோதரகாவியம்" வட மொழிக் காவியமாகிய யசோதர சரித்திரத்தை யொட்டி அதற்குப் பின்னர் இயற்றப்பட்டதெனக்கொள்ளல் பிழையாகாதெனத் தெளி தலாகும். அவ்வாறு கொள்ளுதல் தகுதியெனில், யசோதர காவி யத்தின் காலம் ஒருவாறு கண்டறிய வழியுண்டு. அதனைக் கீழே காட்டுவாம்.

"பார்சுவநாத சரித்திர"மியற்றிய தாமே யசோதரசரித்திர மும் எழுதப்புகுவதாக, வடமொழி யசோதர சரித்திரத்தின் றுவக் கத்தில் வாதிராஜமுனிவர் கூறுகின்றார். அச் சுலோகம் அடியில் வருமாறு:—

"ஸ்ரீபார்ஶ்வநாதகாகுத்ஸ்தசரிதம் யேந கீர்திதம் ।
தேந ஸ்ரீவாதிராஜேந த்ருப்தா யாஶோதரீ கதா" ॥

ஆதலின் வடமொழியிலுள்ள "யசோதர சரித்திரம்" பார்சுவநாத சரித்திரத்திற்குக் காலத்தாற் பிற்பட்டதெனப் புலப்படுகின்றது. பார்சுவநாத சரித்திரத்தின்றுவக்கத்தில் வாதிராஜமுனிவர் தமக்கு

முற்பட்ட காலத்தினர்களாகிய பல பெரியோர்களின் பெயர்களையும் அவர்கள் செய்துள்ள நூல்களின் பெயர்களையும் கூறியுள்ளதுமன்றி, நூலினிறுதியில் தமது ஆசிரியர் ஸிம்மபுரத்திற் சாலச்சிறந்து விளங்கின ஸ்ரீபாலமுனிவரின் சீடர், அவர் பெயர் மதிசாகரமுனிவர் என்றும், நூல் முடிவுபெற்ற காலம் சகாப்தம் 947 (கி. பி. 1025) குரோதந வருஷம் கார்த்திகை மாதம் சுக்கிலபக்ஷத்து திரிதீயையும் புதவாரமுங்கூடிய நாளென்றும், அக் காலத்தரசர் மேனாட்டுச்சௌளுக்கிய ஜயசிம்மன் என்றும் தெளிவுறக் கூறியுள்ளார். பார்சுவநாத சரித்திரமும் இதுவரையில் எவராலுமச்சிட்டு வெளிவராததுபற்றி, அதினின்றும் அந்நூலின் காலத்தைக் காட்டும் சுலோகத்தைமட்டுமாவது இங்குக் காட்டுவது கடனெனக்கருதி அச் சுலோகம் அடியில் வரையப்பட்டுளது.

7 4 9 *

𑌶𑌾𑌕𑌾𑌬𑍍𑌦𑍇 𑌨𑌗𑌵𑌾𑌰𑍍𑌧𑌿𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑌗𑌣𑌨𑍇 𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑍇 𑌕𑍍𑌰𑍋𑌧𑌨𑍇
𑌮𑌾𑌸𑍇 𑌕𑌾𑌰𑍍𑌤𑍍𑌤𑌿𑌕𑌨𑌾𑌮𑍍𑌨𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌮𑌹𑌿𑌤𑍇 𑌶𑍁𑌦𑍍𑌧𑍇 𑌤𑍃𑌤𑍀𑌯𑌾𑌦𑌿𑌨𑍇 ।

†

𑌸𑌿𑌂𑌹𑍇 𑌪𑌾𑌤𑌿 𑌜𑌯𑌾𑌦𑌿𑌕𑍇 𑌵𑌸𑍁𑌮𑌤𑍀𑌂 𑌜𑍈𑌨𑍀 𑌕𑌥𑍇𑌯𑌂 𑌮𑌯𑌾
𑌨𑌿𑌷𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌂 𑌗𑌮𑌿𑌤𑌾 𑌸𑌤𑍀 𑌭𑌵𑌤𑍁 𑌵𑌃 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌨𑌿𑌷𑍍𑌪𑌤𑍍𑌤𑌯𑍇 ॥

ஆதலின், இங்கிலீஷ் வருஷம் 1025-ல் வாதிராஜமுனிவர் பார்சுவநாதசரித்திரம் என்ற வடமொழிக் காவியம் இயற்றினர். அதன் பின்னர் அவரே யசோதரசரித்திரம் என்ற வடமொழிக்காவியமும் செய்தனர். அந்த யசோதரசரித்திரத்தையே முதனூலாகக்கொண்டு, அதன் மொழிபெயர்ப்பென்றே பிழையாது நினைக்குமாறு, பின்னாட்களில் ஐஞ்சிறுகாப்பியத்தொன்றாகிய யசோதரகாவியம், அவராலோ எவராலோ ஜைநர் ஒருவரால் தமிழிற் பாடப்பட்டது என்று நன்கு வெளியாகின்றது. ஆயினும் கி. பி. 1025-வது வருஷத்திற்குப் பிறகு இந்நூல் எவரால் எக்காலத்தமைக்கப்பட்டதெ

---

* "𑌅𑌙𑍍𑌕𑌾𑌨𑌾𑌂 𑌵𑌾𑌮𑌤𑍋 𑌗𑌤𑌿𑌃" (இலக்கங்களின் போக்கு இடப்பக்கத்தேயாம்) என்றதினால் 947-என்று கொள்ளவேண்டும்.

† ஜயத்தை ஆதியாகவுடைய சிம்மன், அதாவது ஜயசிம்மன்.

ன்பது இதுகாறும் கண்டறியப்படவில்லை. அஃது நூலின் பழைய ஏட்டுப் பிரதிகள் பல கிடைக்கப்பெறின் அவைக ளாலும், கல்வி கேள்விகளிற் சிறந்த பெரியோர்களாலும் தெளியத் தகும்.

ஸ்ரீபாலமுனிவர்
|
(சீடர்)
மதிசாகரமுனிவர்
|
(சீடர்)
வாதிராஜமுனிவர்
(அவர் செய்த நூல்கள்)

(1)
பார்சுவநாத சரித்திரம்
12-சர்க்கமுடையது
947-சகாப்தம் (கி. பி. 1025)
அக்காலத்தரசன்—ஜயஸிம்மன்
மேனாட்டுச் சௌளுக்கியவம்சத்தான்

(2)
யசோதரசரித்திரம்
(பார்சுவநாத சரித்திரத்திற் குப் பிந்தியகாலத் தெழுதப் பட்டது.)
(பிற்காலத்திய நூல்)

தமிழ் யசோதரகாவியம் (யாரெழுதி யதோ. யசோதர சரித்திரத்தின் ஏறக் குறைய மொழிபெயர்ப்பு.)
கி. பி. 1025-க்குப் பிற்பட்டது.

## யசோதரகாவியத்தின் காலவரையறை

இனி இச் சரித்திர காலத்தையும் பற்றிச் சிறிது ஆராய்வாம். இக் காப்பியத்துக் கதாநாயகனின் தந்தை "அசோகன்" எனப்படுவான். இவ் வசோகன் மகததேசத்தி லரசாண்ட சந்திரகுப்தன் மகனுவனோ வெனில், அல்லன் என்பது துணிபு. (1) சந்திரகுப்தனின் மகனுகிய அசோகன் மகததேசத்தரசன்; இக் காப்பியத்திற் கூறப்படும் அசோகன் அவந்தி நாட்டரசன். (2) அவனது இராஜதானி கங்காநதிக்கரையோரத்துள்ள பாடலீபுரம் எனப்படும்; இவனது இராஜதானி சிருப்பிரையாற்றோரத்துள்ள உஞ்சயினியாகும். (3) அவன் நந்தனின் சந்ததியானுதலின் சந்திரவம்சத்தரசனுவன்; இவன் இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்தானுதலின் சூரியகுலத்தரசனுவன். "தத்ராவந்திஷு விக்யாதா யஸ்யாம்ஸந்தி வாஸ்தவா: அஸ்தி விஸ்வம்பரோத்தம்ஸா நாம்நோஜ்ஜயிநீ புரீ ॥" வ்யா- "யஸ்யாம் யஸோ, ஜகத்ஸ்வாமீ ஸத்ரியவம்ஸேஷு" என்று யசஸ்திலக சம்பு வென்ற வடமொழிக் காவியத்திலும் அதன் வியாக்கியானத்திலும் உளது காண்க. (4) இவனுக்கு, மஹாபுராணம், ஸ்ரீபுராணம், யசஸ்திலகசம்பு, யசோதர சரித்திரம் இந் நூல்களிலொன்றிலேனும் அசோகன் என்ற பெயரே காணப்படவில்லை. அனைத்திலும் யஸோவஹ (யசோகன்) என்னும் பெயரே காணப்படுகின்றது. ஆதலின் தமிழ்க்காப்பியத்துட் காணப்படும் "அசோகன்" என்ற பெயர் வடமொழிச் சிதைவுப்பெயரே யாகும். (5) வாதிராஜமுனிவர் தமது யசோதர சரித்திரத்தில் யஸோவஹ: (யசோகன்) என்னுஞ் சொற்றொடருக்கு அடியில்வருமாறு சொற்பொருளுங்காட்டியிருக்கின்றார். அஃதாவது,

> "ஸ ஸாவஸேத யத்ரைவ ஸர்வதா
> யஸோ திஸாம் ஸித்திஷு ஸம்ப்ருதேஷு।
> தத்ஸூசநார்த்த: ஸ்வயம் யஸோவஹம்
> வ்யதிஷ்டபத்தம் நிஜநாமநாம ஸூரிஜ்ஞா: ॥" II. 3.

இதன் பொருள்:—"இவன் ஆம்பற்பூப்போன்று வெள்ளிய தன் புகழை எண்டிசைகளின் மதில்களிலும் பற்றிப்படிந்திருக்கச் செய்பவனாதலின், (வ்ருஷோடிஸாஜ்) பிரிஷோதராதிகளாகிய சொற்றொடர்களின் வழக்கறிந்த பண்டிதர்கள் இவனை (யஶோவ) யசோகன் என்பார்கள்." மேலேகாட்டிய காரணங்களையெல்லாங்கொண்டு செவ்வனே ஓர்ந்து பார்க்கின் இவ் வசோகன் ஏறக்குறைய 2192வருஷங்களுக்குமுன் மகததேசத்திலரசாண்ட அசோகன் அல்லன் எனத் துணியப்படும்.

இச் சரித்திரம் மகாபுராணத்தின் பிற்பகுதியில்,முனிஸுவிரத தீர்த்தங்கரருடைய அந்தரகாலத்தில் நடந்ததாகக் கூறப்பட்டுளது. ஒரு தீர்த்தங்கரர் இவ் வுலகினில் தோன்றியது முதல் அடுத்த தீர்த்தங்கரர் தோன்றும் வரையிலுமுள்ள காலமெல்லாம், அவ்விருவருள் முந்தியவரின் அந்தரகாலமெனப்படும். ரிஷபர் முதல் வர்த்தமானர் ஈறாக 24-தீர்த்தங்கரருள் முனிஸுவிரத தீர்த்தங்கரர் இருபதாமவர் ஆவர். ஆதலின் முனிஸுவிரததீர்த்தங்கரர் வர்த்தமான தீர்த்தங்கரருக்கு முந்தியவரென்பது சொல்லாமலே விளங்கும். வர்த்தமானதீர்த்தங்கரர் தோன்றி இப்பொழுது 2575-வருஷங்களாகின்றன. ஆதலின், முனிஸுவிரததீர்த்தங்கரருடைய அந்தரகாலத்தில் நடந்ததாகச் சொல்லப்படும் இச்சரித்திரம் இற்றைக்குப் பல்லாயிரம் வருஷங்களுக்கு முந்திய காலத்ததே யாகுமென்பது ஜைநர்களின் கூற்று.

மகாபுராணத்திலுள்ள எல்லாக் கதைகளையும் ஒப்ப இச் சரித்திரமும் சிரேணிகராஜனுக்குக் கணதரர்களாற் கூறப்பட்டதேயாம். சிரேணிகன் மகதநாட்டரசன். இராஜகிரகம் என்பது இவனது இராஜதானி. பிம்பிஸாரன் என்பது இவனுக்கு மற்றொரு பெயர். இவன் சிசுநாகவம்சத்திற் பிறந்தவன். சிசுநாகன் என்பானிலிருந்து ஐந்தாவதாவன். இவன் 28-வருஷம் அரசாண்டு, பிறகு தன்மகனான அஜாதசத்துருவென்பானுக்குத் தன்னரசுரிமையை யளித்துவிட்டுத் துறவறம்பூண்டு தேசசஞ்சாரியானான். இவனது இராஜ்யாரம்பகாலம் ஏறக்குறைய கி. மு. 428-என்று சரித்திரசோதகர்கள் கூறியுள்ளார்கள்.

ஆதலின் இவன் இற்றைக்குச் சற்றேறக்குறைய 2300-வருஷங்களுக்கு முன்னிருந்தவனாவன். இவனுக்குச் சொல்லப்பட்டதான இவ் யசோதரன் சரித்திரம் அக்காலத்திற்கு அஃதாவது 2300-வருஷங்களுக்கு முந்தியதேயாகுமென்பது மறுக்கமுடியாததோருண்மையேயாம்.

---

# ஜீவகாருண்யமும் புலாலுண்ணாமையும்

அநாதிமல முத்தபதியாகிய பரசிவன் தமக்கு ஒரு பிரயோசன முங்குறியாது அநாதிமலபெத்தராகிய ஆன்மாக்களுக்கு மலத்துவ நீக்கமுஞ் சிவத்துவ விளக்கமுஞ் சித்திக்கும்பொருட்டுப் பெருங் கருணையினாலே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் பஞ்சகிருத்தியம் பண்ணுவர்.

(தாயுமான சுவாமிகள்)

"காரிட்ட வாணவக் கருவறையி லறிவற்ற
கண்ணிலாக் குழவி யைப்போற்
கட்டுண் டிருந்தவெமை வெளியில்விட் டல்லலாங்
காப்பிட் டதற் கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவிளை யமுத மூட்டிப்
பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவிளை யாட்ட மைத்திட்
டேரிட்ட தன்சுருதி மொழிதப்பி னமனைவிட்
டிடருற வுறுக்கி யிடர்தீர்த்
திரவுபக லில்லாத பேரின்ப வீட்டினி
லிசைந்து துயில் கொண்மி னென்று
சீரிட்ட வுலகன்னை வடிவான வெந்தையே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே."

என்னும் ஆன்றோர் திருவாக்கானு முணர்க.

* இவ்வியாசம், மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் பத்தாம் வருஷோற்சவ காலத்தில் (26—5—11-ல்) படிக்கப்பெற்றது.

இப் பஞ்சகிருத்திய கர்த்தாவாகிய சிவபெருமானது ஆக்ஞையினாலே அறிவென்பது ஒருசிறிதுந் தோற்றாத அஞ்ஞானமென்னும் பாசாந்தகாரத்தில் நெடுங்காலஞ் சிற்றணுப்பசுவாய் அழுந்திக்கிடந்த ஆன்மாக்களுக்குக் கன்மானுசாரமாக வுண்டாகும் பிறப்பு அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என நான்கு வகைப்படும்.

1. அண்டசமென்பது:—முட்டையிற் றோன்றுவன; அவை பறவை, ஊர்வன, நீர்வாழ்வனவாதிகள்.

2. சுவேதசமென்பது: —வியர்வையிற்றோன்றும் பிராணிகள்; அவை கிருமி, கீடம், பேனாதிகள்.

3. உற்பிச்சமென்பது:—வித்து, வேர், கிழங்குகளை பிளந்து தோன்றும் தாவரவர்க்கங்கள்; அவை செடி, கொடி, விருக்கமாதிகள்.

4. சராயுசமென்பது:—கருப்பையிற் றோன்றும் பிராணிகள்; அவை தேவர், மனிதர், நாற்கால் விலங்காதிகள்.

இந் நால்வகைத் தோற்றத்தா னுதித்திடுமவைகளே தேவர், மனிதர், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்னும் எழுவகைப் பிறப்பினவாயு மிருக்கின்றன.

இங்ஙனம் வகுக்கப்பட்ட ஆன்மாக்கள் பஞ்சகிருத்தியாதிபதியாகிய கடவுளுடைய ஆணையினாலே புண்ணிய பாவ மிசிரகன்மங்கட்கேற்ப மேலாயுள்ள சுவர்க்கத்திலுங் கீழாயுள்ள நரகத்திலும் நடுவாயுள்ள பூமியிலுங் கறங்குபோற் சுழன்றுசுழன்று திரியும். இப்படிப் பிறந்திறந்து மூவுலகத்தும் போக்குவரத்துடைய ஆன்மாக்கள் புண்ணியபரிபாகத்தினாலும் பிராயச்சித்த முதலியவற்றாலுந் தாவரமுதலிய கீழுள்ள யோனிகளனைத்தையுங் கடந்து ஐம்புலவுணர்ச்சியோடு ஆத்ம, அநாத்ம விவேகமமையப்பெற்ற ஆறறிவுடைய மேலாய மானிடப்பிறப்பி லுதிப்பது மிக அருமை! அருமை!! இவை ஆராயுமிடத்து;—

### சிவஞானசித்தியார்

> "அண்டசஞ் சுவேத சங்க ளுற்பிச்சஞ் சராயு சத்தோ
> டெண்டரு நாலெண் பத்து நான்குநூ ருயி ரத்தா
> யுண்டபல் யோனி யெல்லா மொழித்துமா னுடத்து தித்தல்
> கண்டிடிற் கடலைக் கையா னீந்தினன் காரி யங்காண்."

என்றபடி பெறற்கரிய மனிதப்பிறப்பை யெடுப்பினுங் கூன், குருடு, செவிடு, பேடு நீங்கிப் பிறத்தலரிதேயாம். அஃதின்றிப் பிறப்பினுஞ் சாஸ்திரமணுமும் பிசாத மலைகளினும் வனங்களினுங் குறவர் பறையர்களாகப் பிறவாமற் சாஸ்திரம் வழங்குந் தேசங்களிலே பிறப்பது மிகுந்த புண்ணியம்; அதினும் வேதாகமங்கள் வழங்காத மிலேச்சதேசத்தைவிட்டு அவை வழங்கும் ஆரியதேசத்திலே பிறப்பது மிகுந்த புண்ணியம்; அதினும் ஈனசாதிகளாகப் பிறவாமல் பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் முதலிய நான்கு வருணங்களிற் பிறப்பது மிகுந்த புண்ணியபாம்; அதினுங் கல்வி கேள்விகளை யடைதல் மிக அருமை; அதினும் புறப்புறச்சமயம், புறச்சமயம், அகப்புறச் சமயங்களின் ஆழாது அகச்சமயமாகிய சைவசமயத்தைச்சார்ந்து, அதன்வழி அரிய முத்திநிலையைப் பெறுதல் மிக அருமையேயாம்.

### சிவஞானசித்தியார்

> "நார்பயி றேயந் தன்னி லுண்மறை பயிலா நாட்டில்
> விரவுத லொழிந்து தோன்றன் மிக்கபுண் ணியத்தா லுதுந்
> தரையினிற் கீழை விட்டுத் தவஞ்செய்சா தியினில் வந்து
> பரசம யங்கட் செல்லாப் பாக்கியம் பண்ணொ ணாதே."

### சிவஞானவள்ளலார்

> "மக்க ளாக்கையிற் பிறத்தலே யரிதுமற் றதினுந்
> துக்க கூன்குரு டூமையைத் துறத்தலு மரிது
> நற்கு லத்திடை வருதலு மரிதுஞா னத்தான்
> மூக்க ணீசனுக் காட்படல் முற்றினு மரிதே." என

ஏனைய பிறவியினும் இம் மனிதப்பிறவி யருமையென்ப தெதனுலெனின்;—மெய், வாய், கண், மூக்குச், செவியென்னும் ஐம்பொறி வழித்தாய்ச் சத்த, பரிச, ரூப, ரச, கந்தமென்னும் விடயங்களை

யறிதலுடன் இது நன்மை; இது தீமை; இது நித்தியம்; இஃது அநித்தியம்; இஃது ஆத்மா; இஃது அநாத்மா என்னும்பேதங்களைப் பகுத்தறியும் அகக்கரண வாற்றலாகிய ஆறறிவு பொருந்தி விளங்கலால் விசேடமேயாம்.

ஏனைய பிறவிகளினும் தேவப்பிறவி விசேட அறிவுடையதன்றோ? அதினும், மனிதப்பிறவி விசேடமெனக் கூறிய தென்னையோவெனின், தேவப்பிறவி மேலான அறிவுடையதேனும் புண்ணிய பரிபாகத்திற்கேற்பப் போகமொன்றையே அநுபவித்தற் குரியதன்றிக் கன்மம், பக்தி, தவம், தானந், தியானம், ஞானமுதலிய ஆன்ம லாபத்தைத் தேடிக்கொள்வதற் குரியது இவ் வுலகத்திற்குரிய மனிதப் பிறவியேயாம்.

சிவஞானசித்தியார்

"மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காய
மானிடத் தைந்து மாடு மரன்பணிக் காக வன்றோ
வானிடத் தவரு மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்ப
ரூனெடுத் துழலு மூமை ரொன்றையு முணரா ரந்தோ."

என்பவற்றானு முணர்க. இவை நோக்கியன்றோ,

"எண்ணரிய பிறவிதனின் மானுடப் பிறவிதான்
யாதினு மரிதரிது காண்"

எனத் தாயுமானசுவாமிகளருளியதும்; இன்னும்,

"பெறுதற் கரிய பிறப்பீ திதன்போக்
கறிதற் கரிய வவதி—பிறிதொன்றை
நாடுதற்கு நேரமுண்டோ நன்னெஞ்சே முத்திநெறி
கூடுதற்கல் லாதுகுறித் து." திருந்திரட்டு

என ஆன்றோ ரருளியதுங் காண்க. ஆதலாற்பெறற்கரிய இம் மனித தேகத்தைக்கொண்டே, பெறுதற்கரிய பேரானந்தப் பெருஞ்செல்வமாகிய முத்திப்பேற்றைப் பெறுதல்வேண்டும். இதுகுறித்தன்றோ,

"மடல் விரிந்த மரைமலர் வைகுவோன்
சடமனைத் தையுந் தந்து முவந்தில

னிட ரறுக்குமென் றெண்ணிநின் மானுட
வுடல் படைத்ததி ஞேகையுற் றுனரோ." பாகவதம்

என்றதும், ஆன்மாக்கள் அரிய முத்தியடைதற்கு ஏதுவாகத் தாச மார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்னும் சரியை யாதிகளே சோபான மாயினும், முதலில் ஆன்மாக்கள் கைக்கொள்ளவேண்டியவை சீவகாருண்ணியமும் பிறவுயிர்கொல்லாமையும் கொன்றதைத் தின்னாமையுமேயாம்.

பட்டினத்தடிகள்

"கொல்லாமற் கொன்றதைத் தின்னுமற் குத்திரங் கோள்களவு
கல்லாமற் கைதவ ரோடிணங் காமற் கனவினும்பொய்
சொல்லாமற் சொற்களைக் கேளாமற் றோகையர் மாயையிலே
செல்லாமற் செல்வர் தருவாய் சிதம்பர தேசிகனே."

தாயுமானசுவாமிகள்

"கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதா ராரோ வறியேன் பராபரமே."

"கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று."

கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்கும் என்றதும்,

திருவருட்பிரகாசவள்ளலார்

"கலை யிருந்ததோர் திருச்சிற்றம் பலத்திலே கருணை
நிலை யிருந்தது நினைத்தவை யாவையும் பெறலாம்
மலை யிருந்தெனை விருப்பிரேல் வம்மினோ வன்றிக்
கொலை விரும்புவீ ரெனிற்புறத் தேகுமின் குலைந்தே."

"கதி யிருக்கின்ற திருச்சிற்றம் பலத்திலே கருணை
நிதி யிருக்கின்ற தாதலா னீவிர்க ளெல்லாம்
பதிய விங்ஙனே வம்மினோ கொலைபயில் வீரேல்
விதியை நோமினோ போமினோ சமயவெப் பகத்தே."

எனக் கூறியவைகளானு முணர்க. ஆதலால் முற்கூறியவற்றிற் சீவகாருண்ணியமென்பது யாதெனின் சீவர்களுக்குச் சீவர்கள் விஷயமாக வுண்டாகின்ற ஆன்மவுருக்கமேயாம்.

ஜீவர்கள் விஷயமாகச் ஜீவர்களுக்கு ஆன்ம வுருக்கம் எப்பொழுது உண்டாகுமெனின், ஜீவர்கள் பசி, தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம், கொலை இவைகளால் துக்கத்தையனுபவிக்கக் கண்டபோதாயினுங் கேட்டபோதாயினும் இவ்வாறுண்டாகுமென்று அறிந்தபோதாயினும் ஆன்ம வுருக்கமுண்டாகு மென்றறிய வேண்டும்.

ஜீவகாருண்ணிய முண்டாவதற்கு உரிமை எதுவெனின், ஜீவர்களெல்லா மொருதன்மையாகிய இயற்கையுண்மையி னேகதேசங்களாகச் சர்வசத்தியுடைய கடவுளாற் சிருட்டிக்கப்பட்டபடியால் ஒருரிமையுள்ள சகோதரர்களே யாவர். சகோதரருளொருவர், ஒரு ஆபத்தால் துக்கப்படுகின்றபோதுந், துக்கப்படுவாரென்றறிந்த போதும், அவரைத் தமது சகோதரரென் றுகண்ட மற்றொரு சகோதரருக்கு உருக்கமுண்டாவது சகோதர வுரிமையாகலின், ஒரு ஜீவன் துக்கத்தை யனுபவிக்கக்கண்டபோதும் துக்கப்படுமென் றறிந்தபோதும் மற்றொரு ஜீவனுக்கு உருக்கமுண்டாவது பழைய ஆன்ம வுரிமையென்றறியவேண்டும்.

ஜீவர்கள் துக்கப்படுகின்றதைக்கண்டபோதுஞ் சிலர் ஜீவகாருண்ணியமில்லாமற் கடினசித்தர்களா யிருக்கின்றார்கள்; இவர்களுக்குச் சகோதரவுரிமையில்லாமற்போவது ஏனெனின், துக்கப்படுகின்றவரைத் தமது சகோதரரென்றும், துக்கப்படுகின்றாரென்றும், துக்கப்படுவாரென்றும் அறியத்தக்க ஆன்மஅறிவு என்கின்ற கண்ணானது அஞ்ஞானாந்தகாரத்தால் மிகவும் ஒளிமழுங்கினபடியாலும், அவைகளுக் குபகாரமாகக்கொண்ட மனமுதலானவுபநயநங்களாகிய கண்ணாடிகளும் பிரகாசப் பிரதிபலித மில்லாமற் றடிப்புள்ளவைகளாயிருந்தபடியாலுங் கண்டறியக்கூடாமை யாயிற்று. அதனாற் சகோதரவுரிமையிருந்துஞ் ஜீவகாருண்ணிய மில்லாதிருந்ததென் றுணரற்பாலது. விரிவஞ்சி இம்மட்டோடு விடுத்தாம்.

## கொல்லாமை

இனிக் கொல்லாமையாவது யாதெனின்;—எக்காரணம் பற்றியேனும் பிறவுயிர்களை வதைத்தல் கூடாதென்பதேயாம். அதினுந் தன்

சரீரம் வலுவேறிப் பெருக்குமாறு பிறவுயிர்கொன்று அருந்துதல் மிகுந்த பாதகமேயாம். அதுபற்றியே,

"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்" என்றும்,

"எவ்வுயிரும் பராபரன்சந் நிதிய தாகு மிலங்குமுயி ருடலனைத்து மீசன் கோயி, லெவ்வுயிரு மெம்முயிர்போ லென்று நோக்கி யிரங்காது கொன்றரு ந்து மிழிவி னோரை, வவ்வியம தூதருந் தண்டஞ் செய்து வல்லிரும்பை யுருக்கியவர் வாயில் வார்த்து, வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்தி மாறு வே தனைசெய் திடுவரென வோது நூலே" என்றும்,

கூறிய ஆன்றோர் வாக்கியங்களைக்கருதி அத் தீயதொழிலை விட லே அறிஞர் கடமையாம்.

சிலர் பரம்பரையாய் மாம்ச பட்சணமுடையவர்களென்றும் அக் குலத்தில் உற்பவித்ததினால் ஊனருந்துதல் குற்றமாகாதென் றுங் கூறுவதென்னையோவெனின், தங்களுடைய பிதா முதலியோர் வேதாகமங்களையோதியுணர்ந்து புண்ணியத்திற்குள்ளும் பாவத்து க்குப் புறம்புமாகத் தாமும் நடந்து பிறரையும் நடப்பிப்பார் யா வர் அவரையே அறிவுடையோர் பிதாவென அங்கீகரித்து அந் நெறியே நடவாநிற்பர்கள்; அதுவன்றித் தன்னுடைய மாதாபிதா வேதாகம விலக்காகிய தீநெறிச் செல்வார்களாயின், அந் நெறியே முறையென்று புத்திரன் நடப்பது வேதாகம ஒழுக்கமுமன்று; உல கின்கண் அவ்வாறு நடப்போர்களையுங் காணேம்; வேதாகமத்திற் கூறிய விதி நிடேதங்களை யாய்ந்து நிடேதமின்றி விதிவழியொழு குதலே அறிஞர் கடமையாம்.

"தந்தைநடந் துளமுறையே நடப்பதொழுங் கெனினொருவன்
றாணி மீதே
நிந்தைதருந் தொழில்புரிந்து நஞ்சருந்தி யிறந்தனனேல்
நெறியென் றன்னோன்
மைந்தாது புரிவதிலை யெவரேனுந் தருமநெறி
வழுவி லோரே
யந்தமிகு தாதைகண்மற் றவர்நடந்த நெறிநடப்ப
தறிவா மன்றே." எனவும்,

சிவஞானதீபம்

"கொலையாதி நெறியகன்ற ஞானந் தானே
கூறரிய மேலான ஞான மாகுங்
கொலையாதி யகன்றொழுகுந் தவங்க டாமே
குற்றமிலா நற்றவமென் றுரைக்கு நூலுங்
கொலையாதி யகற்றியநல் லறங்க டாமே
குவலயத்தி லொப்பரிய வறங்க ளாகுங்
கொலையாதி யகன்றுபெறுஞ் செல்வந் தானே
கூறிலுயிர்க் கிதமான வாழ்வ தாமே." எனவும்,

கூறியவாற்றானுணர்க.

ஆனால், சிலர் ஞானிகளென்றும் அதிவர்ணாச்சிரமிகளென்றும் அஷ்டசித்திமான்க ளென்றுங் கிடைத்தபோதருந்துதல் தோஷமாகாதென்றுங் கூறுகின்றார்களே யெனின் பின் வருவனவற்றாற் காண்க.

திருவருட்பிரகாச வள்ளலார்

"மருவாணைப் பெண்ணாக்கி யொருகணத்திற் கண்விழித்து வயங்கு மப்பெண், ணுருவாணை யுருவாக்கி யிறந்தவரை யெழுப்புகின்ற வுறுவ னேனுங், கருவாணை யுறவிரங்கா துயிருடம்பைக் கடிந்துண்ணுங் கருத்த னேலெங், குருவாணையெமதுசிவக் கொழுந்தாணை ஞானியெனக்கூறொணாதே."

ஆனாற் பிறவுயிர் வருந்தக் கொலைபுரிந்துண்ணுதல் குற்றமே யெனினும் அஃதின்றிப் பிறரிடம் விலைகொடுத்துவாங்கி யுண்ணல் குற்றமாமோ ; அக்கொலைத் தோஷத்திற்கு அவனே பாத்திரனாகானோ வெனின், கொள்வாரின்றி விற்பாருக்கு எத்தொழில்களும் உலகில் நடைபெறக்காணோம். இதுபற்றியே,

"தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்."

எனக் கூறியிருப்பதாற் கொல்லாமற் றின்னுதலு மக்குற்றமேயாம்; ஆதலால் அச் சீவஜெந்துக்க ளருந்தும் அசுத்த மலாதிகளையேனுங் கண்டுணர்ந்து புலாலுண்ணுதலாகிய கொடிய செய்கையை நீக்குதலே அறிஞர்க் கழகாம்.

(இன்னும் வரும்)

கு. அண்ணாமலைப்பிள்ளை.

# A MANUAL OF INDUSTRY

# கைத்தொழிற் கண்ணாடி

இப்போது சில ஆண்டுகளாக இந்தியன் நாஷனல் காங்க்ரெஸ் மகாசபைகூடுமிடங்களில் 'பொருட்காட்சிச் சந்தை' என்னும் 'வஸ்துப்பிரதரிசன சாலை' ஒன்று அமைத்துவருகின்றார்கள். பற்பல ஊர்களினின்று முக்கியமான விளைபொருள்களையும் அற்புதமான கைத்தொழிற் சாமான்களையும் மிகப் பிரயாசப்பட்டுத் தருவித்துவைத்து, அவற்றை ஜனங்கள் பார்த்து அவைகளின் உபயோகங்களையும் வேலையின் அருமையையும் தெரிந்துகொள்ளும்படி செய்கின்றார்கள் அதனால், எங்கெந்தப்பொருள்கள் எங்கெங்கே கிடைக்கின்றன, அவற்றின் உபயோகங்கள் எத்தன்மையன, பிற நாட்டுச் சாமான்களை விரும்பி வாங்குவதினும் இந்தியாவில் உற்பத்தியாகும் சாமான்களை வாங்கி உள்ளூர்க்கைத்தொழில்களை ஆதரிப்பதனால் இந்தியச் சாமான்களின் விலை இன்னும் குறையும். இந்தியக் கைத்தொழிலாளிகள் அபிவிருத்தியடைந்து மேன்மேலும் ஊக்கத்துடன் உழைப்பர். இந்தியாவில் திரவியோற்பத்தி யாதாரங்கள் பலப்படுவதன்றி யதிகரிக்கும் என்பனவாதிய விஷயங்களை ஜனங்கள் தெரிந்துகொள்வதற்கிடமாகின்றது. ஆனால், இப்படித் தெரிந்துகொள்வது எல்லோர்க்கும் இயலாததாலும், பொருட்காட்சிச்சந்தையைக்கண்ணுற்றசிறுபான்மையோரும் அங்குவந்திருந்த சாமான்களின் விவரங்களையும் அவை உண்டாகுமிடங்களையும்

ஞாபகத் திருத்திக்கொள்வது அசாத்தியமாதலாலும், கைத்தொழிற் சம்பந்தமான பல விஷயங்களை "கைத்தொழிற்கண்ணாடி" என்னும் தலைப்பின் கீழ் இந்தப் பத்திரிகையின் வாயிலாக எழுதிவிடுக்கத் துணிந்தோம். இந்தியாவிற் பற்பலவிடங்களிலும் விளையும் பொருள்களின் விவரங்களும், அவற்றிற்கான வியாபாரவசதிகளும் ஆங்காங்குச் செய்யப்படும் கைத்தொழில்களின் விவரக்குறிப்புக்களும் இங்குத்தொகுக்கப்படும். "கைத்தொழிற்கண்ணாடி"யை அடிக்கடி பார்ப்பதனால், அவரவர்களுக்குத் தேவையான சாமான்கள் எந்த ஊரிற் கிடைக்கும் என்பது முதலான விஷயங்கள் எளிதில் தெரியும்; அந்தச் சாமான்களை வாங்கி ஆதரிப்பதனால், நம் தேசத்திற்பொருள் அபிவிருத்தியாவதற்குக் காரணமாகும். நம் நாட்டுப் பணம் நம் நாட்டிலேயே இருக்கும். பரதேசத்தவருக்கு நாம் பணத்தைக் கொட்டிக்கொடுத்து அவர்களுடைய சாமான்களை வாங்குவதனால் நம் தேசத்திற்கு க்ஷாபமும் அவர்களுக்கு க்ஷேமமும் உண்டாகும்.

## AGRICULTURAL PRODUCTIONS

## விவசாயப்பயிர்கள்

இந்தியாவில் பூமியின் தன்மை பலவிடங்களிற் பலவிதங்களாக வேறுபட்டிருப்பதனாலும், சீதோஷ்ண ஸ்திதிகளும் இடத்திற்குத் தக்கவாறு நானாவிதங்களாக இருப்பதனாலும், இத் தேசத்தில் விளைவிக்க முடியாத பயிரே இல்லை; எந்தப் பயிரையாயினும் இப் பரதகண்டத்தில் எங்கேனும் எக்காலத்திலேனும் விளைவித்தல்கூடும்.

வட இந்தியா:—தினை, சாமை, பயறு, காராமணி, துவரை, கடலை முதலிய நவதானியங்கள், எள்ளு, ஆமணக்கு முதலிய எண்ணெய் வித்துக்கள் ஆகிய இவை இந்தியாவில் எங்கும் சர்வசாமானியமாக விளையும். தேசத்திற்குப் பொதுவான இந்தப் பயிர்கள் நிற்க, வடக்கில் ஸிந்துநதியும் கங்காநதியும் பாயுமிடங்களைக் கவனிக்கின், பஞ்சாப் நதீதீரத்தில் (பாஞ்சால தேசத்தில்) கோதுமை முதலிய ஐரோப்பிய தானியங்களும், வங்காளத்தில் நெல் முதலிய இந்தியத் தானியங்களும் முக்கியமாகப் பயிராகின்றன; இவ்விரண்டிற்

கும் இடையில், அஃதாவது, டில்லியென்னும் ஹஸ்தினபுரமுதல் பட்ண என்னும் பாடலிபுரம் வரையில் மேற்சொல்லிய இருவகைத் தானியங்களும் பயிராகின்றன; ஆயினும் பஞ்சாப் நாட்டின் பயிர்களே விசேஷம். வடமேற்கு மாகாணங்களெனும் அயோத்தியா, பிரயாகை முதலிய ஐக்கிய மாகாணங்களிற் கரும்புப்பயிர் விசேஷம். அவுரி, சணல், பேரிச்சை ஆகிய இவை வங்காளத்திலும், அபினி வடமேற்கு ஐக்கிய மாகாணங்களிலும் மேலே வங்காளத்திலும் பயிராகின்றன.

**மத்திய இந்தியா:**—இஃது இந்தியாவின் மத்தியப்பிரதேசமும், வட பம்பாயும், மத்திய மாகாணங்களெனப்படுவனவும் சேர்ந்ததாகும். இங்குச் சிவப்புக்கோதுமை விளைகின்றது; ஆயினும் பருத்தி விளைதற்கேற்ற கறுப்பு (ரேகட) பூமியே இந்தப் பாகத்தின்விசேஷமாகும்.

**தென் இந்தியா:**—இங்குச் சீதளபூமிக்குரிய தானியங்கள் அருமையாகும். நெல், தெங்கு, கரும்பு, பனை ஆகிய இவை பள்ளத்தாக்குக்களிலும், 'காபி,' 'தேயிலை,' 'ஸிங்கோனா,' (க்வைனச் செடி), வாசனைத்திரவியங்கள் (சம்பார வர்க்கங்கள்) ஆகிய இவை மலைநாடுகளிலும் பயிராகின்றன.

**பண்ணை மிருகங்கள்:**—நீர்ப்பாய்ச்சல் மிகக்குறைவாயிருக்கும் காடாரம்பங்களிலும் ஆடுமாடுகள் செழித்து வளர்கின்றன. இந்தியப் பாலைவனத்தோரமாயுள்ள கச்சுதேசம் (கச்சபதேசம்) முதல் காச்மீரம் வரையிலுள்ள பிரதேசத்தில் ஆடு மாடுகள் கோடிக்கணக்காக இருக்கின்றன; அங்கிருந்து மழையதிகமான நாடுகளுக்கு வர வர, ஆடுமாடுகள் க்ஷீணித்துப்போவதன்றி அவ்வளவு மிகுதியாகவும் இருப்பதில்லை; இப்படிக் கிரமமாகக் குறைந்து, நீர்தாழ்ந்த பூமிகளாகிய கீழ்வங்காளம், பர்மா ஆகியவிடங்களில் ஆடுமாடுகள் மிக அருமையாகின்றன; அவற்றிற்கு ஈரப்பூமி ஒத்துக்கொள்வதில்லை; அவ்விடங்களில் எருமைகள் மட்டு மிருக்கின்றன.

**கோதுமை:**— இஃது ஐரோப்பியப் பயிர். இத்தேசத்தில் வடக்கிலும் மேற்கிலும் மாத்திரம் பயிராகின்றது; பஞ்சாபில்

யிருந்தி; இங்குச் சாகுபடிநிலத்தின் மூன்றிலொருபாகம் கோதுமைப் பயிரே; அயோத்தியா முதலான ஐக்கியமாகாணங்களிற் கோதுமை பயிராகும் நிலம் அதிகமாகவிருக்கினும் பஞ்சாப்பைப்போல் அவ்வளவு இல்லை. மத்தியமாகாணங்களிற் காற்பங்குநிலம் கோதுமை பயிராகின்றது; பம்பாயிலும் ஸிந்துதேசத்திலும் பத்திலொருபங்கு நிலம்; பீகார் (விஹாரபுரம்) என்னும் விராடராச்சியத்திலும், கங்கை நதிக்குத் தென்புறமாயுள்ள வங்காளத்து ஜில்லாக்களிலுங்கூடக் கோதுமை விளைகின்றது. அமெரிக்கா கண்டத்து ஐக்கிய மாகாணங்களிலெவ்வளவு நிலத்திற் கோதுமை பயிராகின்றதோ அவ்வளவு நிலத்தில் இந்தியாவிலும் பயிராகின்றது.

நெல்:—முக்கியமாக இந்தியாவின் மேற்குக்கரையிலும் பெரிய நதிகளின் முகத்துவாரங்களையடுத்த நிலங்களிலும் பயிராகின்றது. பர்மாதேசத்துத் தென்புறத்துப்பள்ளத்தாக்குக்களிலுள்ள விவசாய நிலங்களில் நூற்றுக்குத் தொண்ணூறுபங்கு நெற்பயிரே; வங்காளத்திலும் விசேஷம்; ஆஸாம், ஒரிஸ்ஸா தேசங்களிலும், கோதாவரி, கிருஷ்ணை, பெண்ணை, காவேரியாகிய இந்நதிகள் பாயுமிடங்களிலும், திருவாங்கூர், மலையாளம், கனடா, கொங்கணம் ஆகிய இத்தேசங்களின் பள்ளத்தாக்குக்களிலும் நெற்பயிரே முக்கியமான விளைவு; அயோத்தியா ஐக்கியமாகாணங்களில் விவசாயத்திற்குள்ளான நிலத்தில் ஆறிலொருபங்கு நெற்பயிர்; இந்தியாவின் மற்றைப்பாகங்களில் நெல் அவ்வளவு விசேஷமானதன்று; ஆயினும், சாத்தியமானவிடங்களிலெல்லாம் நெல் பயிர்செய்கின்றார்கள்.

பர்மா அரிசி பழுப்புநிறமானது, பருமனானது; ஆண்டுக்கு ஒருபோகமே விளையும்; ஏகராவுக்குச் சராசரி 25 முதல் 30 மணங்காகும்; அதனைவிட வங்காளத்து அரிசி மேன்மையானது. இது சராசரி 15 மணங்கு காணும்; வங்காளத்திலிருந்து ஏற்றுமதியாவது புழுக்கின நெல்; புழுக்குவதினால் நெல் முளையாதிருப்பதன்றி உமியுமெளிதி லகலும். பட்னா (பாடலிபுரத்து) அரிசி ஐரோப்பாவில் மிக்க மதிப்புப்பெற்றது; அரிசி சிறியமணியாய் வெண்ணிறமாகவிருக்கும். தென் இந்தியாவில் நெல்லூர், தஞ்சாவூர், திருநெல்வேலி ஆகிய இந்த ஜில்லாக்களில் நேர்த்தியான நெல் விளைகின்றது.

எண்ணெய் வித்துக்கள்:—இந்தியாவில் எங்கும் உண்டு; கங்கைநதிக்கரையிலும் பிரம்மபுத்திராநதிக்கரையிலும் மற்றைப்பயிர்களோடு கலப்பாக இடையிடையே இவற்றைப்பயிரிடுகிறார்கள்; வங்காளத்திலும் வடமேற்கிலும் முக்கியமானவை கடுகு, எள்ளு, ஆளிவிதை, குஸும்பா, ஆமணக்கு, நிலக்கடலை; மஞ்சக்குப்பம் ஜில்லாவில் நிலக்கடலை.

கரும்பு:—தேசமெங்கும் விளைகின்றது. அயோத்தியா ஐக்கிய மாகாணங்களி லதிகம்; தென்னிந்தியாவிற் பனஞ்சாற்றினால் சர்க்கரை செய்கிறார்கள்.

காபி:—தென்னிந்தியாவில் மாத்திரம் உண்டு; முக்கியமான இடம் கனடா முதல் திருவாங்கூர் வரையிலுள்ள மேற்குக்கணவாயின் மேற்சரிவு; சேவராயமலையிலும் பழனிமலையிலும் விளைகின்றது. மகம்மதியமதத்தை யவலம்பித்த மலையாளியொருவன் மெக்காவுக்கு யாத்திரைபோய்த் திரும்பிவரும்பொழுது கொண்டுவந்து முதன்முதல் இந்தியாவிற் பயிராக்கினான்; பின்னர் ஆங்கிலேய முதலாளிகள் அபிவிருத்தி செய்தார்கள்.

தேயிலை:—ஆஸாம் தேசத்தில் அபரிமிதமாக விளைகின்றது; முதன்முதல்பயிரானது அவ்விடத்திலேயே; பின்னர், காச்சார், டார்ஜீலிங், (துர்ஜயலிங்கம்) சிட்டகாங், நீலகிரி, சோட்டாநாகப்பூர், பூதான், அரக்கான், திருவாங்கூர் ஆகிய இவ்விடங்களிற் பயிராக்கப்பட்டது; ஆஸாமில் 200,000 ஏகரா பூமியில் இது பயிராகின்றது.

அவுரி:—இன்னும் ஐரோப்பிய முதலாளிகளே விசேஷமாகப் பணச்செலவுசெய்து பயிர் செய்விக்கிறார்கள். வங்காளம், வடமேற்கு ஐக்கியமாகாணங்கள், பஞ்சாப்,சென்னைராஜதானியில் கிருஷ்ணாவுக்கும் வடஆர்க்காட்டுக்கும் இடையிலுள்ள நாடு, கடப்பைஜில்லா, கர்னூல் ஜில்லா—ஆகிய இவை முதலான இடங்களிற் பயிராகின்றது. கல்கத்தாவிலிருந்து ஏற்றுமதியாகும் நீலிமருந்து பெரும்பான்மையும் பீகார்மாகாணத்து வடபாகத்தில் உற்பத்தியாகின்றது.

பருத்தி:—இந்தியாவில் எங்கும் பயிராகின்றது; இஃதொரு முக்கியமான பயிர்; குடகு (கூர்க்) ராச்சியத்திற் பருத்தி விளைவ

தில்லை; அயோத்தியா, மத்திய மாகாணங்கள், பர்மாவின் தென்பாகம், ஆஸாம் ஆகிய இவ் விடங்களில் மிகக்கொஞ்சம். விசேஷமாகப் பருத்தி விளையும் நாடுகளாவன.—குஜராத் (கூர்ஜரம்) முதல் காத்தியாவாட் வரையிலுள்ள சமபூமி, தக்ஷிணத்து மேட்டுப்பூமி, மத்திய மாகாணங்களிலும் பிரோரிலுமுள்ள பள்ளத்தாக்குகள், பல்லாரி, கர்னூல், கிருஷ்ணாவிலும் திருநெல்வேலியிலுமுள்ள பள்ள நிலங்கள். இஃது இந்தியாவிலேயே உற்பத்தியான செடி; ஆதிமுதல் இத்தேசத்தாருக்கு வேண்டிய அளவு பருத்தி இங்கேயே விளைந்துவருகிறது; ஆனால் இந்தியப்பருத்தியின் தொடர்நுனி நீளமாகவராததனால் அமெரிக்கா கண்டத்துப் பருத்திவிதையை இங்குப் பயிரிடத் தொடங்கினார்கள்; இந்த அமெரிக்கா பஞ்சு பம்பாய் ராஜதானியைச் சேர்ந்த தார்வாடா ஜில்லாவில் மாத்திரம் நன்றாகப் பயிராகின்றது.

சணல்:—பருத்திக்கு இரண்டாவதான நார்ப்பயிர் சணல் ஆகும்; இது வங்காளத்தில் மாத்திரம் உண்டாகின்றது; கங்கையின் வடக்கரைமுதல் பிரம்மபுத்திரா நதியின் கீழ்க்கரைவரையிலுள்ள பூமியிலும், பூர்ணியாவுக்கும் கோவால்பாராவுக்கும் இடையிலுள்ள பூமியிலும் பயிராகின்றது; சென்னை ராஜதானியிற் பாலக்கொண்ட, பிமிலிபட்டணம், சிட்டிவால்ஸா என்னுமிடங்களிற் பயிராகின்றது. இதனைப் பயிர்செய்வதற்கும் நார் எடுப்பதற்கும் விசேஷமான பணச்செலவில்லை; கயிறு, துணி, காகிதம் செய்யலாம். இந்தத்துணியே கோணிப்பையென வழங்குவது.

அபினி:—ஏற்றுமதிக்கு இதை இரண்டே இடத்திற் பயிராக்குகிறார்கள்:—1. பட்னாவையும் பனாரிஸையும் சூழ்ந்துள்ள கங்கைப் பள்ளத்தாக்கு, 2. பூர்வத்து மாளவராஜ்யமான மத்திய இந்தியாவிலுள்ள பீடபூமி (இப்பொழுது இந்தியச்சிற்றரசரது ஆளுகையிலிருக்கிறது); வங்காளத்தில் இந்தப் பயிர் ஆங்கிலத் துரைத்தனத்தாரது கையிலிருக்கிறது; பட்னாவிலும் காஜிப்பூரிலும் மாத்திரம் விளைகிறது; வங்காளத்திலுண்டாகிற அவ்வளவு மாளவாவிலுமுண்டாகிறது.

புகையிலை:—ஆங்காங்கு உபயோகத்திற்காக இந்தியாவில் எங்கும் கொல்லைகளிற் பயிர் செய்யப்படுகின்றது. வியாபாரத்திற்காக

வங்காளத்திலுள்ள ரங்கப்பூரிலும், டினஜ்பூரிலும், பம்பாயி லுள்ள கைராவிலும், சென்னையிலுள்ள கோதாவரிக் கழிமுகக் கரையிலும், கோயமுத்தூர், மதுரையென்னும் இரண்டு ஜில்லாக்களி லும் பயிர்செய்யப்படுகின்றது; இதனைப் பதப்படுத்துவதற்கு மிகு ந்த சாமர்த்தியம்வேண்டும்; இந்தியத்தொழிலாளிகள் திறமையுடன் வேலைசெய்யாததனால் ஐரோப்பாவில் வழங்கும் அமெரிக்காகண்டத் துப் புகையிலையுடன் போட்டிபோடமுடியாமலிருக்கிறது. ஐரோப் பாவிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் புகையிலை பதனிடுவதில் தேர்ந்தவர்களை வைத்து இப்போது இங்குப் பதனிட்டு வருவத னால் சிறிது சிறிதாக இந்தியப் புகையிலை ஐரோப்பாவில் ஏற்கின் றது. இனி மேன்மேலும் அதிகமாக ஐரோப்பாவுக்கு ஏற்றுமதி யாகக்கூடிய புகையிலை நமது நாட்டிற் செய்யப்படுமென்று நம்புகி றோம்.

ஸின்கோனா:—நீலகிரிமலைகள், குடகுநாடு, திருவாங்கூர் ஸம் ஸ்தானம், இமாலயபர்வதத்தின் கீழ்த்திசைப் பாகம் (முக்கியமாக டார்ஜீலிங்) ஆகிய இடங்களிற் பயிர்செய்யப்படுகின்றது. இதன் பட்டையிலிருந்து 'க்வினைன்' (க்வைனா) என்னும் ஜ்வரஹாரிமருந்து செய்யப்படுகின்றது.

பட்டு:—இஃது இந்தியாவில் அபிவிருத்தியாகாமலிருப்பதைப் பற்றிச் சிந்திக்கவேண்டியிருக்கிறது; ஆனால் உள்ளது குறைந்துபோ கவில்லையென்று சொல்லலாம்; வங்காளத்திலுஞ் சென்னையிலும் இதனை வளர்ப்பதற்கும் வர்த்தகச்சங்கத்தவர்களும் துரைத்தனத் தாரும் முயன்று வருகிறார்கள். இப்போதுள்ள நிலைமையில் இங் கிருந்து ஏற்றுமதியாகும் பட்டைவிட வெளியூர்களிலிருந்து இறக்கு மதியாகும் பட்டு அதிகமாகவிருக்கின்றது. பட்டுப்பூச்சிக்கு அவசிய மான முசுக்கட்டைச் செடியானது கீழ்வங்காளத்து ஜில்லாக்க ளான ராஜஷாஹி, பர்ட்வான் என்னும் இடங்களில் மாத்திரம் வளர் கின்றது. மைசூர்நாட்டிற் சிலவிடங்களிற் பட்டுப்பூச்சி வளர்த்துப் பட்டு நூலெடுத்து வேலைசெய்து வருகின்றார்கள். சிக்கபள்ளா புரத்தில் அதிகமாக இருக்கிறது. நமது நாட்டிலுள்ள பட்டுநூற்கா ரர் எனப்படுவோர் இந்த வியாபாரத்தை மேற்கொண்டு அபிவிருத்தி

செய்வார்களாக. (டாஸ்ஸர்) பட்டு என்பது வேறுவகைப் பூச்சியினாலுண்டாவது. இதன் இறகிக்கூடுகள் காடுகளில் அகப்படுகின்றன; இந்தநூல் பட்டைப்போலவேயிருக்கின்றது. இதனால் நார்மடி முதலியன செய்து இந்தியாவில் உபயோகிக்கிறார்களேயொழிய வெளித்தேசங்களுக்கு ஏற்றுமதி செய்யத்தக்கவாறு நூலையிழைத்து நெய்வது கஷ்டமாய இருக்கின்றது; வருஷத்திற்கு மூன்றுதடவையே, ஆகஸ்டு, நவம்பர் மாதங்களில் 'டாஸ்ஸர்' பட்டு எடுக்கலாம்; கடைசியிலெடுப்பது நல்ல பட்டாக இருக்கின்றது.

அரக்கு:—இஃது ஒருவகைப் பூச்சியினாலுண்டாகும் செம்மெழுகு; எங்குங் கிடைக்கும்; காட்டுச்சாதியார் பொறுக்கிச் சேர்க்கிறார்கள். சோட்டாநாகப்பூர், ஆஸாம், மீர்ஸாபூர் என்னுமிடங்களிலிருந்து கல்கத்தாவுக் கனுப்பப்படுகின்றது. அங்கிருந்து வெளித்தேசங்கட்கு ஏற்றுமதியாகின்றது; இது சாயத்திற்கும் மெருகெண்ணெய் செய்வதற்கு முபயோகப்படுகின்றது.

## MINERAL PRODUCTIONS

## தாதுவர்க்க விளைவுகள்

லோஹவர்க்கங்கள் விளைவதற் காதாரங்கள் இந்தியாவில் நிரம்ப இருக்கின்றனவென்பது உண்மை. பாடுபட்டுழைக்காத குற்றத்தினால் அவைகளிருக்குமிடந் தெரியாமல் மறைந்து கிடக்கின்றன. அனாதிகாலமாக இந்தியர்கள் லோஹங்களில் வேலைசெய்து சாமான்கள் முதலியன செய்வதிற் கைதேர்ந்தவர்கள். பண்டைநாளில் இவர்கள்உபயோகியாதது நிலக்கரி ஒன்றேயாம். இவர்களெடுத்துக் கையாளாத லோஹம் வேறெதுவுங் காணோம். விசேஷமாகச் சுரங்கங்கள் வெட்டி வேலைசெய்யாததனால் இந்தியாவிலுள்ள லோஹச் செழிப்பு இத்தன்மையதென்று கண்டறியக்கூடவில்லை. இப்பொழுது நவீனமாக ஆங்கிலேய துரைத்தனத்தாரால் வழக்கத்திற்குக் கொண்டுவரப்பட்டிருப்பது 'அலூமினியம்' என்னும் படிக்காரஸத்து ஒன்றேயாகும்.

இரும்பு:—மலைகளுள்ள இடங்களிலெல்லாம் இரும்பு அகப்படுகின்றது. அனுகூலத்திற்குத்தக்கபடி கொஞ்சமாகவாவது அதிகமாக

வாவது வேலைகளுஞ் செய்யப்படுகின்றன. தக்க இருப்புவேலை செய்யும் பட்டடைகள் ஏற்படுவதற்கு இப்பொழுது போதுமான அனுகூலங்களில்லை. முக்கியமான கஷ்டமாவது இரும்புச்சன்னங்கள் அகப்படுமிடங்களில் அவற்றையுருக்கி இரும்பாக்குவதற்கு வேண்டிய நிலக்கரி அகப்படுவதில்லை; சமீபத்திலுங் கிடைப்பதில்லை; ஆயினும், ரெயில்வண்டிகள் அதிகரித்திருக்கின்றமையின் நிலக்கரியைத் தேவையான இடங்களுக்குச் சொற்பச் செலவிற் கொண்டு போகக்கூடுமாதலின் இரும்புப் பட்டடைகளாங்காங்கு ஏற்பட்டுச் செழிக்குமென்று நம்புகிறோம்.

நிலக்கரி:—ஏறக்குறைய நூற்றைம்பது வருஷங்களாக இந்தியாவில் நிலக்கரி வெட்டியெடுக்கப்படுகின்றது; 1881-இல் 58 நிலக்கரிக் கனிகள் இருந்தன; இவற்றிலிருந்து வருஷத்திற்கு ஒருகோடி டன் நிறையுள்ள கரி எடுக்கப்பட்டுவந்தது; இந்தவேலை ரெயில்வே கம்பெனிகளைப் பொறுத்திருக்கின்றது; அவைகளுக்கு நிலக்கரி விசேஷச்செலவிருப்பதன்றி அவையில்லாவிடின் கனிகளினின்று தூரமான இடங்களுக்கு நிலக்கரியைச் சுலபமாகக்கொண்டுபோக முடியாது; பெரிய நிலக்கரிச் சுரங்கம் பர்ட்வானிலுள்ள ராணிகஞ்ஜ் என்னும் பட்டணத்திலிருக்கின்றது. அங்கு ஈஸ்ட் இண்டியன் ரெயில்வே ஓடுகின்றது. மத்திய மாகாணங்களில் இரண்டு நிலக்கரிக் கனிகள் இருக்கின்றன. அவற்றிலிருந்து எடுக்கப்படும் கரி கிரேட் இண்டியன் பெனின்ஸுலா ரெயில்வேக்குஉபயோகப்படுகின்றது; அவை வாரோரா என்னும் இடத்திலொன்றும் மோஹ்பேன் என்னும் இடத்திலொன்றும் ஆக இரண்டு கனிகளிருக்கின்றன. கல்கத்தாவில் உபயோகிக்கப்படும் நிலக்கரியில் முக்காலேவீசம்வாசி இந்தியாவில் விளையுங்கரியே. தெலுங்குஜில்லாக்களிலுள்ள சிங்கரேணி என்னும் ஊரில் நல்ல நிலக்கரிச்சுரங்கங்கள் இருக்கின்றன. அங்கிருந்து பெஜவாடா வழியாகச் சென்னைக்கு நிலக்கரி வரும். மதராஸிலும் பம்பாயிலும் ஆங்கிலத்திலிருந்து நிலக்கரி வரவழைத்து உபயோகிப்பதே வழக்கமாக இருக்கின்றது. இனியாவது இது மட்டுப்படுமென்று நம்புகிறோம். இந்தியநிலக்கரியிற் சாம்பல் அதிகமாக விழுகின்றதாம். 135-பவுன் வாரோரா நிலக்கரி உபயோகிக்குமிடத்து, 100-பவுன் ஆங்கிலக்கரி உபயோகித்தாற் போதுமாம்.

(இன்னும் வரும்)

தேசசஞ்சாரி.

உ

# ஆசார விளக்கம்

(௯௦௯-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆனால் நாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருந்தாலும் அசுத்தமான ஜலத்தை உபயோகிக்கவேண்டிவருமாகையாற் சாஸ்திரங்களிற் சுத்தீகரணமுறைகள் கூறப்பட்டிருக்கின்றன. நதியின் விஷயத்தில், அதன் நீர் "ஓட்டத்தினாற் சுத்தமாகின்றது" என்று கொண்டிருக்கிறார்கள். இஃது இக்காலத்துச் சுகாதார சாஸ்திர ஆராய்ச்சிக்கும் விஷப்புழுசாஸ்திர ஆராய்ச்சிக்கும் ஒத்திருக்கின்றது. ஆனால் இக் காலத்து இந்துக்கள் இவ் விதியை விபரீதமாக அருத்தப்படுத்திக்கொள்வதனாற் பெருந்துன்பம் விளைகின்றது. ஆற்று நீரின் சுத்தத்தைப்பற்றி மேற்சொல்லிய சித்தாந்தம் உண்மையானதே என்பதை எவரும் மறுத்துச்சொல்லார். ஆயினுங் கல்வித் தேர்ச்சியில்லாத இந்துக்களிற் பெரும்பாலார் ஓடுந்தண்ணீரை மிகக் கோரமாக அசுத்தப் படுத்துவதற்கு மேற்சொல்லிய சித்தாந்தத்தையே ஆதாரமாக எடுத்துரைக்கிறார்கள். வழக்கச்சொல்லில் அந்த விதிவாக்கியமானது "ஓடும் நீர் சுத்தமானது" என்று மருவிப்போயிற்று. தவறான இந்தக்கருத்தை மனத்திற்கொண்டு, நீரெடுக்குமிடத்திற்கு அடுத்து மேலேயிருந்து ஊர்வண்ணார்கள் பலவகைச் சாதியாருடைய உடம்புகளிலிருந்து திரட்டியெடுத்த அழுக்கைக் கழுவியனுப்புகிறார்களென்று நன்றாகத் தெரிந்திருந்தும், ஆசாரமிகுந்த பிராமணனுங் கூசாமல் நீரெடுத்துச் செல்கிறான். தண்ணீர் தன் ஓட்டத்தினாற் சுத்தப்படுவது உண்மையே; ஆனால், இருபது மைல் முப்பது மைல் அல்லது இன்னும் அதிகமாக ஓடினாலன்றி அது சுத்தப்படாதென்றும், "ஓடுகிறது" என்னும் மாத்திரத்தினாலேயே தண்ணீர் சுத்தப்பட்டதாகச் சாஸ்திரங்கள் கூறவில்லையென்றும், தினந்தோறும் அழுக்குநீரெடுத்து உபயோகிக்கும் அந்தணன் நினைத்துப் பார்க்கவேண்டும். ஒரு காரணம் எடுத்துக்காட்டுவோம். வருண வித்தியாசமின்றி மனிதர்களுடைய வாந்

ம் மலஜலங்களிலிருந்தும விஷபேதியை உணடாககத

தக்க நுண்ணிய புழுக்கள் பிறக்கக் கூடும். இப்படிப்பட்ட புழுக்கள் காவேரிநதியிற் சேர்ந்து ஆற்றுநீர் சுத்தப்படுமுன் பதினெட்டு மைல்தூரம் ஓடிப் பரவலாமென்பது நிச்சயம்.

இதுவரையில் எடுத்து உதகரிக்கப்பட்ட விதிவிலக்குகள் விஷ்ணுஸ்மிருதியிலிருந்தும் மனுதர்ம சாஸ்திரத்திலிருந்தும் எடுக்கப்பட்டனவாகும். எனக்குச் சம்ஸ்கிருதமும், அரபி பாஷையும் தெரியாததனால் அந்தப் பாஷைகளிலிருந்து மொழிபெயர்க்கப்படாத கிரந்தங்களினின்று இனி எடுத்துரைக்கப்படும் மேற்கோள்களை எனது நண்பர்கள் அப்போதைக்கப்போது அன்புடன் எனக்குச் சேகரித்துக்கொடுத்தனர்.

இயற்கையிற் காய்ச்சி வடிக்கப்பட்டதே மிகவுஞ் சுத்தமான நீரென்றும், அது மழைநீரென்றும், அதனை அசுத்தமாக்கத்தக்க பொருளில்லாத ஏனத்திற் பிடித்துவைக்கவேண்டுமென்றும் அஷ்டாங்கஹிருதயம் எனும் கிரந்தம் கூறுகின்றது. வெள்ளிப்பாத்திரம் அல்லது பொற்பாத்திரத்திற் பிடித்து வைப்பது உத்தமம். அஃது இல்லாவிடிற்சுத்தமான கெட்டித்தரையில் மழைநீரைப் பிடித்து வைக்கலாம். இப்படித் தரையிற் பிடித்துவைக்குமிடத்து அந்தத் தரையின் மீதும் ஜலத்தின் மீதும் தாராளமாக வெயிலுங்காற்றும் அடிக்கவேண்டும். மண், தூசி, பூச்சி, அழுக்கு அல்லது இலைதழைகள் ஆகிய இவற்றினால் அசுத்தப்பட்ட நீரையும், வெயில், நிலவு, காற்று ஆகிய இவை படாத நீரையுங் குடிக்கலாகாதென்று மேற்கூறிய கிரந்தம் விசேஷ விதியாகக் குறிக்கின்றது. பூச்சி புழுக்களினால் அசுத்தப்படுத்தப்பட்ட நீரைக் குடிக்கக்கூடாதென்று சொன்னதனாற் கொசுகு மொய்த்த நீருங் குடிக்கத்தக்கதாகாது. யானைக்கால், விஷசுரம் முதலான ரோகங்களுக்குக் கொசுகு காரணமாதலின் இந்த விதியை முக்கியமாகக் கவனிக்கவேண்டியது. தரையின்மீது வழிந்தோடுந் தண்ணீரைப்பிடித்துவைத்தவுடன் குடிக்கக்கூடாதென்றும் விதிக்கப்பட்டிருக்கிறது. அது புதிதாகப்பிடித்துவைக்கப்பட்டதென்பது அதனுட்காணும் நுரையினால் விளங்கும்.

அந்தத் தண்ணீரைக் குடிக்கவேண்டிய அவசியம் ஏற்படுமாயின் மூன்று நாளாவது அதன்மீது வெயிலுங் காற்றும் அடிக்கவிட்டுப் பிறகு குடிக்கலாமென்று சொல்லுகிறார்கள். இந்த விதி அரோக்கியத்திற்கு மிகவும் முக்கியமானது. ஏனென்றால், நதியில் முதன்முதலில் வரும் பிரவாகத்தில் ஜீவாங்கவஸ்துக்கள் (புல் பூண்டு முதலியன) கலந்தோடிவரக்கூடுமென்றும், ஜனப்பிரதேசத்தில் வரும் வெள்ளத்தில் ரோககாரகமான நுண்ணிய புழுக்கள் ஏராளமாகக் கலக்குமென்றுந் தெளிவாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இக்காலத்திற் கட்டப்படும் நீராசயங்களிலும் பொது நீர்நிலையங்களிலும் கூடுமானவரையில் அப்படிப்பட்ட தண்ணீரைத் தவிர்க்கிறார்கள். வெயிலுங் காற்றும் நன்றாக அடிக்கவேண்டுமென்று மேலே கூறியது வெளிப்பிரதேசமான தரையின்மீது ஓடி வரும் மழைநீரைக் கட்டிவைத்திருப்பதற்கு மாத்திரமேயன்றிக் கிணற்று நீருக்குச் சொல்லப்பட்டதன்று; மழைநீர்த்தேக்கங்களாவன, நதி நீரும் குளத்துநீருமாம். இந்த முக்கியமான விதியையும் இக்காலத்து இந்துக்கள் விபரீதமாக அருத்தஞ்செய்கிறார்கள். எந்த நீரும் வெயில் படுமாறு திறந்திருக்கவேண்டுமென்று கொள்கிறார்கள். இதனால், கிணறுகளை மூடிவைக்கக் கூடாதென்கிறார்கள்: கிணறுகள் திறந்திருப்பதனால் அவற்றின் நீர் கெடுவதற்கு இடமுண்டாகின்றது.

ஆரியர்கள் மேற்சொல்லிய விதியைப் பூர்வத்தில் ஏற்படுத்திய சந்தர்ப்பத்தைக் கவனிக்குமிடத்து அவர்கள் சூக்ஷ்மபுத்தியுடைய ஞானிகளென்று நாம் நமது ஆரோக்கிய சாஸ்திரப்பயிற்சியினாலும் பூச்சிகளினாலுண்டாகும் ரோகவாராய்ச்சியினாலுந் திடமாகச்சொல்லலாம். தரையின்மீதோடுந் தண்ணீரை ஜலாசயங்களில் தேக்கிவைத்துப் பாதுகாப்பதனால் ஜீவாங்கங்களின் சம்பந்தத்தினாலும் புழுப் பூச்சிகளின் சம்பந்தத்தினாலும் உண்டாகிய அசுத்தம் பெரும்பான்மை நீங்குகிறதென்று இக்காலத்திற்கண்டறிந்திருக்கிறோம். இதன் காரணம் என்னவெனின், நீரைத்தேக்கி வைப்பதனால் அதிலுள்ள வண்டல் அடியிற் படிகின்றது. தரையின் மேற்புறத்தில் ஜீவாங்க வஸ்துக்களோடு வழிந்தோடி வரும் ரோக

ஜனகக் கிருமிகள் 'ஆக்ஸிஜன்' என்னும் பிராணவாயு மிருந்திருக் குமிடத்து பஸ்மமாகின்றன. நீர்நிலையின் ஆழத்திற்சிறிதுதூரம் மட்டும் வெயிலின் வேகம தாக்குவதனுல் ரோகஜனகமான கிருமி கள் மாள்கின்றன; இவ்வாறு அவை அற்றுப்போகின்றன. கிணற்று நீரின் விஷயத்திலோவெனின், அதன் சந்தர்ப்பங்கள் வேறு வகைப்படும். கிணற்றுநீரைத்திறந்துவைப்பதனுல் அது மலினப் படுகின்றதென்று கண்டிருக்கிறோம். இதிற் சுத்தமான கீழ்த்தரை யிலிருந்து சேகரிக்கப்பட்ட நீரானது பூச்சி புழுக்களில்லாததாகவும் நிலைமை மாறுந்தன்மையுள்ள ஜீவாங்கவஸ்துக்க ளில்லாததாகவும் இருக்கவேண்டும்; அவைகளை முற்றிலும் போக்கமுடியாவிடினும் கூடியவரையில் இல்லாமற்செய்யவேண்டும். கிணற்றுநீரைத் திறந்து வைப்பதனுல் அதனுட் பூச்சி புழுக்கள் வந்துசேருவதற்கும் அசுத்த மாக்கத்தக்க பதார்த்தங்கள் விழுவதற்கும் இடமுண்டாகின்றது.

நிலத்திற்குட் சூரியவெளிச்சமே படாமலிருக்குங் கீழ்த்தரையி லுள்ள நீரைச் சுத்தமாக எடுத்து உபயோகிப்பதற்கு உத்தமமான சாதனம் நார்ட்டன் என்பவர் செய்துள்ள குழற்கிணறாகும். அந்தக் குழலினுற் றரையின்கீழ் நீரிருக்குமிடத்திலிருந்து சூரியவெளிச்சம் படாமல் இருட்டிலேயே நீரை நேரேயெடுத்து வெளியேற்றலாம். நீரைச் சுத்திகரிப்பதற்குப் பூர்வத்து ஆரியர்கள் நன்கு கண்டறிந்த இன்னுமொருமுறையையும் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அந்த முறையே உத்தமமானதென்று இக்காலத்து அமெரிக்கா தேசத்துக் கிரந்தகர்த்தர்கள் பொதுநீர்நிலையங்களின் விஷயத்தில் வற்புறுத்து கிறார்கள். அந்த முறையாவது: நீரை நன்றாகச் சிதறவடித்து அது தாராளமாக வாயுவுடன் சம்பந்தப்படுவதனுல் ஆக்ஸிஜன் என்னும் பிராணவாயுவை யேற்றுக்கொள்ளுமாறு செய்வதாம். இமாலய பர்வதத்திலிருந்து ஓடி வரும் நதிகள் சுத்தமாக இருப்ப தற்கு இதுவே காரணமென்று அஷ்டாங்கஹிருதயம் என்னுங் கிரந் தத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த நதிகளின் மூலத்தில் நீரா னது கற்பாறைகள்தோறும் மோதுண்டு சிதறுவதனுல் வாயுப்பிர சாரமதிகரித்துப் பிராணவாயுவுடன் கலந்துவருகின்றது. தரையின் மேற்புறத்து நீரைத் தேக்கிவைப்பதனுல் உண்டாகும் நன்மையை

எடுத்துரைக்க, கடந்த மாரிகாலத்து நீர்த்தேக்கத்தினற் குளங்குட்டைகளிற் படிந்திருக்கும் வண்டல்கள் மேன்மேலும் புதியவண்டல்கள் படிந்து அதிகரிக்கவிடுவது கூடாதென்று வைத்தியநூற்புலவரான சரகர் கண்டித்திருக்கிறார். ஒரு வருஷருதுபோய் மற்றொரு வருஷருது வருவதற்குள் சிறிதுகாலம் ஆழமில்லாத சிறுகுட்டைகளாக நிற்கும் சிறிய ஏரிகளும் குளங்களும் மனிதர்களுடைய உபயோகத்திற்குத் தகுதியானவையல்லவென்று அவர் எச்சரித்திருக்கிறார். இது நல்ல யுக்திவாதமென்பதற் கையமில்லை. ஏனெனின், வண்டல் அதிகரித்து நீர் அதிகமாகக் கெடுவதற்கு இடமாவதன்றி, நீரோட்டமில்லாத அப்படிப்பட்ட குட்டைகளில் துர்க்கந்தம் வீசும் புழுக்கள் பெருகிவளர்ந்து புதிதாக வரும் வெள்ளத்தையுங்கெடுத்து அந்தப் புதுநீரில் மேன்மேலும் அபிவிருத்தியடையும்.

செயற்கையினுல் ஜலத்தைச் சுத்தப்படுத்தும் முறைகளுள் தேத்தாங்கொட்டையைப்பற்றிச் சொல்லியிருப்பதன்றி நீரில் மிதந்து நிற்கும்வஸ்துக்களை அகற்றுவதற்காகத் துணியினுல்வடிகட்டிப்பிறகு நீரை வெயிலில் வைக்கவேண்டுமென்றுங் கடைசியில் இரும்பைப் பழுக்கக்காய்ச்சி அதனுள் தோய்க்கவேண்டுமென்றுஞ்சொல்லியிருக்கிறார்கள். ஆதலின், நீரைக்கொதிப்பித்து அதிலுள்ள ரோகஜனகக் கிருமிகளை நசிக்கச்செய்வது முக்கியமான காரியமென முற்காலத்தவர் கொண்டிருந்தாரென்பது விளங்குகின்றது. உடம்பு அசௌக்கியப் பட்டகாலத்து முக்கியமாகச் சுரம்வந்த காலத்தும், கொதிக்கவைத்த வெந்நீரையே உபயோகப்படுத்தவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். பாலக்காட்டுக்குச் சமீபத்தில் விஷக்காற்று வீசும் மலைநாட்டி லுள்ளவர்கள் ஆரோக்கியமான ஜலத்தைத் தெரிந்தெடுத்து அதைத்தவிர வேறெந்த ஜலத்தையும் உபயோகியாமலிருப்பதன்றி அப்படித் தெரிந்தெடுக்கப்பட்ட நல்ல ஜலத்தையுங் காய்ச்சிக் குடிக்கிறார்கள். அப்படிச் செய்வதனுல், அவர்களுக்கு அந்நாடுகளில் சகஜமாக இருக்கும் விஷசுரம் வருவதில்லையென்று அறிகிறோம். இவ்வாறு ஆரோக்கியமான ஜலத்தைத் தெரிந்தெடுப்பதும் அதைக் காய்ச்சிக் குடிப்பதும் அவர்களுக்குப் பரம்பரையாக ஏற்பட்டிருக்கிறது ; இக்காலத்தவர் அந்த முறைப்படியே

நடப்பது அவசியமென்றும் அதனால் விஷசுரத்திற் குள்ளாகாமலி ருக்கலாமென்றும், தங்களுடைய சொந்த அனுபவத்தினால் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். சில வியாதிகள் தண்ணீரைக் கொதிப்பித்து ஆற்றிக்குடிப்பதனால் குணப்படுகின்றனவென்று சவன்சாதிகுணகல் பகம் என்னும் கிரந்தத்திற் சொல்லப்பட்டிருக்கிறது; ஆனால், அப் படிக்காய்ச்சி ஆற்றிய நீரை இரவில் தங்கவைத்திருக்கக் கூடாதென் றும், நாட்படுமாயின் அந்நீர் கெட்டுப்போமென்றும் அதேகிரந் தங் கூறுகின்றது. நீர் கொதித்து ஆறினபிறகு நெடுங்காலம் வைத் திருந்தால் அதனுள் ரோகஜனகக் கிருமிகள் உண்டாகுமென்பது கருத்து. இக்காலத்தில் நம்மவர் இவ்விதியை வெகுவாக மறந்து விடுகிறார்கள்.

தேகாரோக்கிய சாதனையில் முக்கியமானவிஷயம் கசுமலங்க ளைச் சரிவரக் களைந்து அப்புறப்படுத்துவதாம்; அதுவே பெரியகா ரியம்; மனிதனுடைய தேகத்திலிருந்து வெளிப்படுவன கசுமலங்க ளாகும்; அந்த ஆபாசங்களினின்று காத்துக்கொள்வதே முக்கிய மான ஆரோக்கிய சாதனம். மனிதனுக்கு அவனுடைய தேகத்தி லிருந்து வெளியாகுங் கசுமலங்களே மிருத்யுவாகும்; அப்படி யே, சிற்றுடலுடைய புழுவுக்கும் அதன் கசுமலங்களே அதைக் கொல்லும். கசுமலங்களைச் சாக்கிரதையாக அகற்றி அப்புறப் படுத்தத் தவறுவதனால் ரோககாரகக் கிருமிகளின் சேஷ்டை மிகவும் பலப்படுகின்றது. வேறுகாரணங்களினால் இவ்வளவு பிரபலப்படுவ தில்லை. முனிசிபல் சுகாதாரச் சட்டத்திற்கு இதுவே நெடுங்கணக்கு (அரிச்சுவடி) போன்ற மூலமாகும். ரோகத்திற்கு முதற்காரண மான இந்த விஷயத்தை இக்காலத்து முனிசிபல்சபையார் முக்கியமா கக் கவனியாமல் லக்ஷலக்ஷமாகப் பணச்செலவுசெய்யவேண்டிய ஜல வசதியையுஞ் சாக்கடைப் போக்கையும்பற்றி வெகுசப்பிரமாகத் தர்க்கிக்கிறார்களே. ஆரோக்கியத்திற்கு அவசியமானதாகவும் அற் பச் செலவில் நிறைவேற்றக்கூடியதாகவும் இருக்கிற விஷயத்தைக் கவனியாமல், அனாவசியமாகவும் அதிகச்செலவு கொள்ளத்தக்கதாக வும் இருக்கிற காரியங்களைப்பற்றிப் பேச அவர்களுக்குக் காலம் கிடைக்கிறதே என்று விசனிக்கிறேன். மலஜலங்களை எவ்விடங்க

ளிற் கழிக்கலாம், எவ்விடங்களிற் கழிக்கக்கூடாதென்று முன்னோர் நிர்ணயித்துத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள். ஜனங்களுக்கு உபயோகப்படுஞ் சலாதாரங்களுக்குச்சமீபமாக மலஜலங்களைக்கழிப் பதைப்பற்றி இதுவரையிற்கொஞ்சம்எடுத்துச்சொல்லியிருக்கிறேன். அதைத்தவிர,சாலைகளிலும் வீதிகளிலும்ஜனங்கள்நடமாடுமிடங்களி லும் மலஜல விஸர்ஜனஞ் செய்யக்கூடாதென்று மனு விதித்திருக்கி றார்.

இந்தவிதி மிக உபயோகமானது. இந்தவிதியை மீறிநடப் பவருக்குத் தண்டனை மிகத் தகுதியானதாகவும் நியாயமானதாக வும் அவர் ஏற்படுத்தியிருக்கிறார். ஜனங்கள் நடமாடுமிடங்களில் மேற்சொன்ன விதியை மீறி மலஜலங்களைக் கழிப்பவன் அந்த இடத்தை அவனே சுத்திசெய்யவேண்டும்; மிகப் பிரயோஜன மான இந்தச்சட்டம் இக்காலத்தில் நடைபெறுதிருப்பது நிரம்ப வும் விசனிக்கத்தக்கது. கசுமலங்களைக் களைவதற்கும் அழுக்கு நீரை அகற்றுவதற்கும் முனிசிபாலிடியார் இக் காலத்திற்செய்யும் முயற்சியை முன்னிட்டேபோதும், மனுவானவர்— "மூத்திர புரீஷங்களை (ஜலமலங்களை)க் குடியிருக்குமிடங்களுக்கு வெகுதூரத் தில் அகற்றக்கடவன்; கால்கழுவிய நீரையும் உடம்புகுளித்த நீரை யுந் தூரத்திற்கொண்டுபோய் விடக்கடவன்"—என்று விதித்திருக்கி றார். அவர் மிகவும் உபயோகமான முனிசிபல்விதி மற்றொன்று ஏற் படுத்திபிருக்கிறார் அதை இம்மாகாணத்தவர் அனுஷ்டிக்காமலிருப் பது விசனிக்கத்தக்கது. அது கிராமங்களின் எல்லையோரங்களில் பொதுக்காரியங்களுக்காகக் கொஞ்சம் நிலத்தைத் தனியே வைத்தி ருப்பது அவசியமென்பதைக் குறித்துச்சொல்லிய விதியாகும். எப் படியெனில், "கிராமத்தின் நாற்புறத்திலும் நூறு 'தனுசு' கொண்ட நிலமும், பட்டணத்தைச்சுற்றி அதைவிட மூன்றுடங்கு (முன்னூறு 'தனுசு') வெளிநிலமும் ஆடுமாடுகளின் மேய்ச்சலுக்காகத் தனியே வைத்திருக்கவேண்டும்." இக் காலத்தில் தேகயாத்திரைசெய்வதற் குள்ள கஷ்டங்களை யுத்தேசிக்குமிடத்து, மனு சொல்லியபடி அவ்வ ளவு தாராளமாக மேய்ச்சற்றரை வைத்திருப்பது முடியாதெனினும், பயிரிடும் குடியின் குடிசையின் வாசல்வரையில் நீர்பாய்ச்சிப் பயிர்

செய்யவேண்டுமென்று அவ்வளவு விபரீதமாக இக்காலத்து மிராசுதார்கள் ஆசைப்படவேண்டாமே.

வியாதியானது நுண்ணிய உருவுள்ள பூச்சிகளினுலுண்டாகின்றது. அஃதாவது, உயிருள்ள வஸ்துவொன்றிருக்கிறது; அதனால் வியாதியுண்டாகிப் பரவுகின்றது என்னும் சித்தாந்தத்தையனுசரித்தே ஆரியர்கள் சுகாதாரச்சட்டமேற்படுத்தியுள்ளார் என்று இதுவரையிலேயே சொல்லியிருக்கிறேன். அப்படியில்லையென்றால், பின்னர் எடுத்துரைக்கப்படும் சுத்தத்திற்காக ஏற்பட்ட பலவிதிகளுக்குங் காரணம் விளங்காது:—ஆரியன் "அன்னியருடைய குளங்களிற் குளிக்கலாகாது"—மலையாளத்தைத்தவிர இம்மாகாணத்து மற்றைப் பிரதேசங்களில் இந்தவிதி அனுஷ்டானத்திலில்லை; "தர்மசாஸ்திராசரணையில்லாத கிராமத்தில் அவன் வசிக்கலாகாது"—அஃதாவது, ஆரோக்கியாசாரங் குறைவுபட்டிருக்குங் கிராமத்திலென்பதாம்; "வியாதிகள் பரவியிருக்குமிடங்களில் அதிகமாகத் தாமசிக்கலாகாது." தொத்துவியாதிகளைத் தடுக்கும்பொருட்டு, "அன்னியருடைய பாதரக்ஷைகள், ஆடைகள், பூணூல், ஆபரணங்கள், பூமாலை, பான பாத்திரம் ஆகிய இவைகளை" உபயோகிக்கக் கூடாதென்பதும், "பிணம் கிடக்கும் கிராமத்திலுஞ் சூத்திரர்களின் ஆசாரமேற்கொண்டு ஒழுகுகிறவனுக்குச்சமீபத்திலும்"—அஃதாவது, பிராமண நியமத்தின்படியின்றி அனுசாரமாக ஜீவிக்கிறவர்களுக்குச் சமீபத்திலும்—தங்கலாகாதென்பதும், "ஜனங்களின் கூட்டத்தில் நிற்கக்கூடாது" என்பதும் அவசியமான விதிகளென்றே ஏற்படும். "சிராத்தங்"களுக்குப் பிராமணர்களை வரிப்பதில் நோயாளிகளையும் ஸமுதகங்காப்போரையும் நியமிக்கக்கூடாதென்று விதியேற்படுத்தியிருக்கிறார்கள். க்ஷயரோகிகளை நியமிக்கக்கூடாதென்று அவர்கள் நிஷேதித்திருப்பதாகத் தோன்றுகிறது (எனக்குக்கிடைத்தமொழிபெயர்ப்புச்சரியானதாக இருக்குமென்று நம்புகிறேன்). இஃது இக்காலத்துச்சுகாதார சாஸ்திரத்திற்கு மேம்பட்டதாகும். இவ் விஷயமாக அமெரிக்கா தேசத்திலுள்ள நமது சோதரரான சாஸ்திரஜ்ஞர்கள் மிக்க கருத்துடன் வாதித்துள்ளார். வேதங்களை ஓதும் விஷயத்திலும் நல்லவிதியொன்று ஏற்படுத்தியிருக்கிறார்கள். துர்நாற்றம் வீசுகிற கிராமத்தில் வேத

படனஞ் செய்யக்கூடாதென்று கூறியிருக்கிறார்கள். இவ்விதியைத் தவறாமல் அனுஷ்டித்தால் இம் மாகாணத்திலுள்ள பல இடங்களையும் இந்தச் சென்னைமாநகரிற் சிலவிடங்களையும் நன்றாகச் சுத்தப்படுத்தவேண்டிவரும். ராஜப்பிளவை, சுவாஸாசயத்திற் பருக்கள் தோன்றும் க்ஷயரோகம், கொள்ளைநோய், இசிவு ஆகிய இவை விஷப்பூச்சிகளினாலுண்டாகும் ரோகங்களெனவும், அந் நோய்களைத் தேகத்தின்பால் அல்லது நிணநீரினால் மற்றவர்களுக்குத் தொற்ற வைக்கலாமெனவும் நாம் அறிந்திருக்கிறோம்.

(இன்னும் வரும்)

கர்னல், உ. ஜி. கிங்கு, சி. ஐ. இ., ஐ. எம். எஸ்.,
சானிடரி கமிஷனர்.

௨

## RANI BHAVANI
## ராணி பவானி

(உ௩௫-ம் பக்கத்தொடர்ச்சி.)

*ராஜாராயதூர்லவர்:*—தென்னாட்டிலுள்ள நவாப்பை ஆங்கிலேயர் ஜயித்திருக்கிறார்கள்; ஆதலின், அவர்களைச் சிநேகிக்கவேண்டும்; வைரமாகாது.

*ராணிபவானி:*—ஓ நிருபோத்தமர்காள்! நான் பெண்பிள்ளையாதலின் தங்களுக்கு இப்படிப்பட்ட ராஜ்யவியாபாரங்களில் யுக்தி சொல்லச் சக்தியற்றவளாக இருக்கிறேன். ஆயினும், என்னுடைய அற்பப்புத்தியைக்கொண்டு சொல்லும் வார்த்தைகளைச் சற்று உற்றுக்கேண்மின். ஆங்கிலேயர் இப்பொழுது வர்த்தகர்களாக இருப்பினும் நாம் அவர்களுடைய சகாயத்தை விரும்பி அவர்களிடத்து நம்முடைய குடுமியைக்கொடுத்தால், இந்த மகாராஜ்யத்தைப் பார்த்து அவர்களுக்கு ராஜ்யாபிலாஷை உண்டாகாமலிராது. அவர்

கள் வர்த்தகராது தராசுத்தட்டைவிட்டு, ராஜ்யத்தைக் கைக்கொள்வரென நம்பவேண்டியிருக்கின்றது. அப்பொழுது நம் கதி என்னை? மகாராஷ்டிரருடைய குணதருபங்களைக் குறித்து நமக்குக் கொஞ்சமாவது தெரியும்; ஆங்கிலேயருடைய விஷயம் சிறிதுந் தெரியாது. ஆகையால், துருக்கரை ராஜ்யாரூடனுக்கவும், விதேசஸ்தர்களான கம்பெனியாரை நாம் தினைரைப்போற் சகாயம் வேண்டவும் நான் இசையேன்.

இவ்வாறு வெகுநேரம் வரையில் வாத விவாதங்கள் நடந்து, கடைசியில் ஏனைய அரசர்களின் பலவந்தத்தினுல், ஆங்கிலேயரது சகாயத்தைக்கொண்டு மீர்ஜாபருக்குப் பட்டங்கட்டுவதற்கு ராணி பவானி சம்மதித்து இங்ஙனம் உரைப்பாளாயினுள்:—

"மகாராஜர்களே! நீங்களெல்லோருஞ் சம்மதித்து நிச்சயித்த வார்த்தைக்கு விரோதமாக நடத்தல் எனக்குத் தகாது. ஆகையால் உங்களுடைய வார்த்தை எனக்குச் சம்மதமே. ஆயினும், இந்த மாறுபாட்டினுல் நம் தேசத்திற்கு எள்ளளவும் லாபமுண்டாகாதென்று என் மனோதேவதை எனக்குச் சொல்கின்றது. இம் மாறுபாட்டினுல், துருக்கருக்குள்ள சர்வாதிகாரத்தையும் ஆங்கிலேயருக்குக் கொடுக்கின்றோம். துருக்கரை ராஜ்யத்தினின்றெழித்து, இந்துதேசத்தில் இந்து ராஜாவை ஸ்தாபிப்பதற்கான சக்தியுந் தேசாபிமானமும் ஒற்றுமையும் நமக்கு இல்லையெனின், நம் தேசத்தவரான மகாராஷ்டிரரை நாம் நபபமாட்டோமெனின், நாம் நமது நாட்டை ஹூணரது கையில் ஒப்பிப்பதே வெகு யோக்கியமானது. அவர்களே நமக்கு இதகர்த்தர்களாவார்களாக (நன்மையியற்றுவோராவார்களாக)."

இதன் பிறகு, 1757-ஆம் வருஷத்தில் நடந்த பிளாசீ யுத்தத்திற் கம்பெனியாரும் மீர்ஜாபருங்கூடி சுராஜுத்தௌலாவை ஓட்டிய சங்கதி எல்லோருக்கும் தெரிந்ததேயன்றோ?

### சரித்திரசாரம்

மேலே வர்ணித்த காலம் இந்துதேச சரித்திரத்தில் முக்கியமான பாகமாகும். துருக்கருடைய ராஜ்யத்தின் க்ஷயத்திற்கும்

ஆங்கிலப் பிரபுக்களின் அப்பியுதயத்திற்கும் (தலையெடுப்பிற்கும்) இது சந்திகாலமெனத்தகும். பிரபுத்துவம் இவ்வாறு தலைகீழாகுங் காலத்தின் மகத்துவத்தை அப்பொழுது, ராணி பவானியைத் தவிர வேறெவருங் கிரகித்தவர்களல்லரென்பது மேலேகுறித்த சம்பாஷணைத்தினால் விளங்கும விஷயமாகும். ராணியின் வார்த்தையினால் அவளுக்குள்ள ஒப்பற்ற தேசாபிமானம் விளங்குகின்றதன்றோ? ராணிபவானி சொல்லிய ராஜ்ய பவிஷ்யத்துக்களெல்லாம் (பின்வருவனவெல்லாம்) தவறாது நிஜமாயினதைக் கண்டு, அவளுடைய ராஜநீதி நிபுணத்துவத்திற்கும், விவகாரத்திலுள்ள தீர்க்க திருஷ்டிக்கும், மானிடஸ்வபாவத்தின் யதார்த்தஞானத்திற்கும் மிகச் சந்தோஷிக்க வேண்டியிருக்கின்றது. ராஜ்யகாரியங்களின் உண்மையான தத்துவங்களை முழுதுமுணர்ந்த இந்த லலனா ரத்னமானவள் நம் தேசத்திற் காரியநிர்வாகத்திற்கும் தீர்க்க திருஷ்டிக்கும் பெயர் பெற்ற தோடர்மல், நானாபனவிஸ், அக்கன்னா, மாதன்னா முதலானவர்களுக்கும், ஐரோப்பாகண்டத்தில் விவகார வல்லவரென விளங்கிய பிட் (Pitt), பாக்ஸ், (Fox), பர்க்கு (Burke),பிஸ்மார்க்கு(Bismarck),கிளாட்ஸ்டன் (Gladstone) முதலான புருஷபுங்கவர்களுக்கும் சமானமான புத்தியுந் திறமுமுடையவளெனச் சொல்வதற்குச் சந்தேகமும் உண்டோ? நமதுநாட்டு நாரீமணிகள் இப்படிப்பட்ட புத்திக்கூர்மையுடையவர்களாக இருக்க, ஸ்த்ரீகள் புருஷர்களைவிடப் புத்தியீனரென்றும், அவர்களுக்குக் கல்வி கற்பிக்கலாகாதென்றும் சொல்வது விந்தையாமன்றோ? பெண்கல்வி கூடாதென்று மறுப்பவர்கள்,

> "பெண்மகள் கெடுவளென் றஞ்சிப் பெற்றவ
> னுண்மைநூ லவட்குணர்த் தாமை தன்மனைக்
> கண்மறு புருடனைக் காணு மென்றதை
> யெண்மையற் றவன்பறித் தெறித லொக்குமே."

என்னுஞ் செய்யுளைக் கேட்டால் என்னகூறுவார்களோ?

நமது தேசத்திலுள்ள ஸ்த்ரீகளுக்குச் சுவாதந்திரியமில்லையாதலினாலும், அவர்களுக்குக் கல்வி புகட்டாததனாலும், நாம் அனேக ராணிபவானிகளை இழந்தவர்களானோம். இத்தனை நிர்ப்பந்தங்களிருந்தும் அப்போதைக்கப்போது ராணிபவானியைப்போன்ற நாரீ ரத்

நங்கள் நம் தேயத்திலுதிப்பதைக் காணுமிடத்து, இந்த நிர்ப்பந்தங்களில்லாதிருந்து, நம் ஸ்த்ரீகளுக்கு யோக்கியமான சுவாதந்திரியமும் ஸத்வித்தையும் (நற்கல்வியும்) பிராப்தமாயிருக்கின் இங்கு இதுகாறும் அநேக ராணிபவானிகள் தோன்றியிருப்பார்களென்பது அதிசயயோக்தியாகாது (மிகைபடக்கூறுவதாகாது).

## தருமகாரியங்கள்

கணவனுடைய ஜீவியகாலத்திற் பவானி முதலில் அதிகமான தான தருமங்கள் செய்தவளல்லள். பின்பு,

> "அறமே மறங்கண் முழுதழிக்கு மறமே கடவு ளுலகேற்று
> மறமே சிவனுக் கொருவடிவ மாகுஞ் சிவனை வழி படுவோர்க்
> கறமே யெல்லாப் பெரும்பயனு மளிக்கும் யார்க்கு மெவ்விடத்து
> மறமே யச்சந் தவிர்ப்பதென வறைந்தான் சாதா தபமுனிவன்."

என்னுஞ் சத்தியவாக்கியத்தைக் கடைப்பிடித்து, தேவாலயங்கள் கட்டுவித்தல், குளங்களையும் கிணறுகளையும் வெட்டுவித்தல், அன்ன சத்திரங்களை ஸ்தாபித்தல் முதலான லோகோபகாரமானகாரியங்களை அந்தக்காலத்திலுஞ் செய்துவந்தாள். அவளுக்குத் தெய்வபக்தி மிகுதியுமுண்டு. கணவன் இறந்த பிறகு, மருமகனும் இறக்கவே, தனக்குப் புருஷசந்ததி யில்லாததையுத்தேசித்து அவளுக்குத் தான தருமங்களின் மீது நாட்டம் மேம்பட்டு அவைகளில் அவள் அதிகமாகச் செலவிடலாயினள். இப்படி அவள் நிச்சயித்தபிறகு செய்துள்ள தானதருமங்கள் இவ்வளவு அவ்வளவென்று சொல்லி முடியாது. அவைகளின் விவரங்களைக்கேட்டவர் ஆச்சரியப்படாமலிரார். அவள் செய்துள்ள தானதருமங்கள் பலவும் பெரியசக்கரவர்த்திகள் செய்யத்தகுவனவாம். நித்தியாதி தானதருமங்களுக்குமாத்திரம் வருஷம் ஒன்றுக்கு ரூபா இருபத்தையாயிரஞ் செலவிடுவாள். வேதாத்தியயனஞ் செய்வோர்க்கும் யோகாப்பியாசஞ் செய்வோர்க்கும், அதிதிகளுக்கும், அப்பியாகதிகளுக்கும் அன்னமிடுவதற்கு அவள் அநேக சத்திரங்களைக் கங்காதீரத்தில் ஸ்தாபித்திருக்கிறாள். ஸம்ஸ்கிருத வித்தியாத்தியயனம், வேதாத்தியயனம், சாஸ்திராத்தியயனம் முதலியன செய்யும் மாணவர்களுக்கு உபகாரச்சம்பளம் நிமித்தமாக வருஷத்திற்கு இருபத்தையாயிரம் ரூபாவுக்கு ஏற்பாடு செய்தாள்.

அந்த ஏற்பாடு இன்றைக்கும் நடந்துவருகிறதென்கிறார்கள். அநேக கீர்வாண பாடசாலைகளை யேற்படுத்தி, அவைகளிற் பெரியபண்டிதர்களை உபாத்தியாயர்களாக நியமித்து, வித்தியார்த்திகளுக்குப் பாடசாலையிலேயே சாப்பாடு போடுவதற்கும் ஏற்பாடுசெய்து சாஸ்திரங்களில் தேறினவர்களுக்கு அவரவர்களுடைய யோக்கியதைக்குத் தக்கவாறு வெகுமதிக ளளிக்குமாறு திட்டப்படுத்தி இருக்கிறாள். தான் ஏற்படுத்திய நற்காரியங்கள் தனக்குப் பிற்காலத்தும் இடையறாது நடைபெறக்கருதி, ராணிபவானி ஈஸ்ட் இண்டியா கம்பெனியாரிடத்து லக்ஷக்கணக்காக ரூபாவுங் கட்டிவைத்தாள். அதன் வட்டியைக்கொண்டு அந்தப் பாடசாலைகளும், அன்னசத்திரங்களும் நடைபெற்று வருகின்றன. ஆதலின் இன்றைக்கும் அவளுடைய செலவில் அன்னம் உண்டு, கல்விகற்று அவளை வாழ்த்துகிறவர்களனேகருளர்.

ராணிபவானி அநேக பூதானங்கள் செய்தாள். ஏழைக்குடிகளின் நிலத்தீர்வையைத் தள்ளிக்கொடுத்தாள். காசி, கயா, ராஜசாஹி, படாநகர் முதலான பட்டணங்களிற் பெரிய தேவாலயங்களையும் சத்திரங்களையுங் கட்டுவித்தாள். இவற்றுட் காசியிலுள்ள தேவாலயம் மிக ரம்மியமானது. அவள் அநேகநீர்த்துறைகளைக் கல்லினாற் கட்டுவித்தாள். தருமசாலைகள் பலவற்றை ஸ்தாபித்தாள். அநாதைகளுக்கு அன்னமிட்டுக் காப்பாற்றுவதற்கான சாலைகளை நிர்மித்தாள். காசிக்ஷேத்திரத்தில் இவளுடைய சகாயத்தினாற் பிழைத்துவந்தவர்கள் நாலாயிரம்பேர் ஆவர் ராணியின் ஜீவகாருண்ணியம் மனிதர்களோடு நிற்கவில்லை. பசு பக்ஷி கிருமி கீடங்களையுங் காப்பாற்றி வந்தாள். தனது ராஜ்யத்திற்குள் பசு, எருமை முதலானவைகளை வெட்டிக் கொல்லாதவாறு சட்டம் ஏற்படுத்தினாள். பறவைகளுக்காகத் தொட்டிகளில் தானியங்களை இறைத்து வைக்கச் செய்தாள். எறும்புகளுக்குச் சர்க்கரை, மீன்களுக்கு ரொட்டித்துண்டுகள் முதலியன ஏராளமாக அளித்து ஆதரித்து வந்தாள்.

ராணிபவானி தன்னுடைய ராஜ்யத்தில் ஏழைகளான ரோகிகளுக்கு ஔஷதங்கள் கொடுக்கவும், ரோகந்தீரும் வரையில் அவர்

இவ்வாறுய நீதிசாரங்களை அறியாதார் சிலர் தம்பால் யாசிக்கும் பொருளை இல்லை என்று சொல்லுதற்கு நாணித் தருவோம் என்று சம்மதங்காட்டித் தருதற்குமனம் பொருந்தாராய் நாளை, நாளை என்று அலைப்பார்கள். இதுவும் நீதியாகுமா? உடனே இல்லை என்று சொல்லுதல் ஆகாதா? இல்லை என்று சொல்லுதலே நல்லது. காரியென்பவன் பொருட்டு ஆடு ஒன்று கேட்ட ஔவையாருக்கு வாதவன் என்னும் இடையன் பின்னர்த் தருவேன் என்றான். வத்தவன் என்னும் இடையன் நாளைத் தருவேன் என்றான். யாதவன் என்னும் இடையன் யாதொன்றும் இல்லை என்றான். இம் மூவருள்ளே யாதவன் "யாதொன்றும் இல்லை" என்றதையே ஔவையாரும் இனிது என்று பாராட்டினர்.

வெண்பா

*வாதவர்கோன் பின்னையென்றான் வத்தவர்கோ னாளையென்றான்*
*யாதவர்கோன் யாதொன்று மில்லையென்றான்—ஆதலால்*
*வாதவர்கோன் பின்னையினும் வத்தவர்கோ னாளையினும்*
*யாதவர்கோ னில்லை யினிது.* (தமிழ்நாவலர் சரிதை.)

ஈக ஔவையார் கூறிய நீதியும், பரதன் கூறிய நீதியும், பேதமின்றி ஒத்திருக்கின்றன. பரதன் கூறிய நீதிகளுள்ளே சில இவையின்மை நோக்கி இங்கே காட்டப்பட

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

உ

கணபதி துணை

# சன்மார்க்கம்

(ங.எக-ஆம் பக்கத்தொடர்ச்சி)

[ஸ்ரீ-மு. கதிரேசச்செட்டியார் எழுதியது]

எஜுர்வேதத்தில் "அந்நியர்களாற் சாதிக்க முடியாத திரிபுரத்தை வெற்றிகொண்டு உலகத்தைக் காத்தமையாற் பசுபதிநீயே யாமெல்லாம் பசுக்கள் என்று அங்கீகரித்தனர் தேவர்கள்" என்பது

கேட்கப்படுதலானும், "உமாபதிக்கு வணக்கம், பசுபதிக்கு வணக்கம்" என்னுஞ் சுருதியுண்மையானும், ஏனைய தேவர்களெல்லாம் பசுக்களென்பதும், சிவபிரானொருவரே பசுபதியென்பதும் வெள்ளிடைமலைபோல் விளங்குவனவாம். இங்ஙனம் வேதாகமங்களானிச்சயிக்கப்பட்ட பரம்பொருளாகிய சிவபெருமானை அநுமானவளவையானுணர்தலும், அப் பதிப்பொருளோடு பசுபாசங்களினுண்மையைத் தெளிதலும், அத்துவித சப்தத்திலுள்ள அகரத்திற்கு இன்மை மறுதலைப்பொருள்களையொழித்து அன்மைப் பொருள்கோடலும் பிறவுஞ் சைவசித்தாந்தத்திலுள்ள தெளிபொருள்களாகக் காணப்படலான், சைவசமயமே சன்மார்க்க மென்னுஞ்சொல்லாற் கூறுதற்குரிமையுடையதாகும். வீடு என்பது எல்லாப் பொருட் பற்றுக்களையும் விடுதலேயாதலானும், அங்ஙனம் விட்டபின் மீண்டு பிறத்தலின்மையானும், அப்பிறப்பின்மையை யான்மாக்களுக்குதவும் பதிக்குப் பிறப்பிறப்பின்மை யின்றியமையாதென்பது யாவரானும் அங்கீகரிக்கற்பாலதே. இவ் விலக்கணம் "எல்லார் பிறப்பு மிறப்புமியற் பாவலர்தஞ், சொல்லா லறிந்தோநஞ் சோணேசர்—இல்லிற், பிறந்தகதை யுங்கேளோம் பேருலகில் வாழ்ந்துண், டிறந்தகதை யுங்கேட்டிலேம்" என்னும் பிரமாணப்படி சிவபிரானிடத்தன்றிப் பிற தேவரிடத்தின்மையானும், அவரெல்லாம் பிறந்துவாழ்ந்திறந்த கதை புராணங்களிற் கேட்கப்படுதலானும், "எப்பொழுது ஆகாயத்தைத் தோலாகவுரித்து உடுக்கின்றனரோ அப்பொழுது சிவத்தை யறியாது (பிறவித்) துக்கத்தின் முடிபெய்தும்" என்னுஞ் சுருதியாற் சிவபிரானைச் சார்ந்தாலொழியத் துக்க நிவிர்த்திபெற முடியாதென்று தேறப்படுதலானும் அப்பெருமானே மோக்ஷதாதாவென்பது ஐயமின்றியுணரலாம்.

இனி, அச் சிவபராஞ்சுடரைப் பரம்பொருளெனத் தேற்றி, அவரைச் சாரவிரும்பித் தன்னை யடுத்தாரை நேரே கொண்டுசெலுத்தும் உண்மைநெறி சைவசமயமேயாதலின், அதுவே சன்மார்க்கமென்பதி லொருசிறிதும் ஐயமின்று. முனிவர், சித்தர், இந்திராதி தேவர் முதலிய யாவருக்கும் இச் சைவசித்தாந்த சன்மார்க்கமே தாயகமாகவுள்ளதாகும். இவ் வுண்மைகளை நன்கு தெளிந்த ஸ்ரீ தாயுமானசுவாமிகளும், "அந்தோவீ ததிசயமிச் சமயம் போலின்

றறிஞரெலா நடுவறிய வணிமா வாதி, வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம் வைத்திருந்த மாதவர்க்கு மற்று மற்றும், இந்திராதி போக நலம் பெற்றபேர்க்கு மிதுவன்றித் தாயகம்வே றில்லை யில்லை,சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத் தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம்" என்று தம் அநுபவஞானத்தா லாராய்ந்து கூறினர். இன்னும், இம் மார்க்கமானது பிறநெறிகளையெல்லாந் தனக்குச்சோபான மாக ஏற்று அந்நெறிப்பட்டாரை முடிவிற் றன்பாற் சேர்த்துக் கோடலானும், பிறநெறிக ளிங்ஙனமின்றி யொன்றையொன்று வெறுத்தொதுக்குதலானும், இச் சைவசித்தாந்த நன்மார்க்கமே சன் மார்க்கமா மென்பது கரதலாமலகமாகும்; இன்னும், இச் சமயமானது பிருதிவிதத்துவமுதற் சிவதத்துவ மீறாகத் தத்துவங்கள் முப்பத்தாறெனவும், இவைகளைக் கடந்துநிற்றலாற் சிவபிரான் தத்துவாதீதராவரெனவுங் கூறுதலானும்,பிறசமயங்களெல்லாம்பெரும்பாலும் இம் முப்பத்தாறனுள் ஆன்ம தத்துவம் இருபத்துநாலிலடங்கிய தத்துவப் பொருள்களையே பரம்பொருளெனக் கோடலானும், அவையெல்லா மிதனுள் வியாப்பியமாயடங்க இது வியாபகமாயொன்றினுமடங்காமல் அவற்றையெல்லாங் கடந்துநிற்றலான் இதனையே அதீத சமயமெனவும், இந் நெறிச்சென்று பெறும்பொருளே பழம் பொருளாமெனவுந் தெளிந்த ஸ்ரீ தாயுமானசுவாமிகள்,

> "சைவசமயமேசமயஞ்சமயாதீதப்பழம்பொருளைக்
> கைவந்திடவேமன்றுள்வெளிகாட்டுமிந்தக்கருத்தைவிட்டுப்
> பொய்வந்துழலுஞ்சமயநெறிபுகுதவேண்டாமுத்திதருந்
> தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் செகத்தீரே."

என்று திருவாய் மலர்ந்தருளினர்.

இனிச், சன்மார்க்க மென்பதற்கு நல்லொழுக்கமெனப் பொருள் கொண்டு அறநூல்களில் விதித்தனசெய்தலும்,விலக்கியன வொழித்தலுமா மென்பதுமொன்று. கடவுட்பக்தி, அடியார் பக்தி, ஜீவதயை, அன்பு, பரோபகாரம், நடுநிலை, வாய்மை, கொல்லாமை, கள்ளுண்ணாமை முதலியவாகப் பலவாறு விரித்துக்கூறப்பட்ட ஒழுக்கவகைகளெல்லாம் சைவர்க ளின்றியமையாது மேற்கொள்ளவேண்டு மென்று சித்தாந்த நூல்கள் வற்புறுத்திக் கூறுதலானும், இவ்வொ

மூக்கங்களிற் றவறுறுவோர்க்கு மிகுதியான தண்டங் கூறுதலானும், இவைமுற்று மிச் சமயத்து ளடங்குதலானும் இந் நெறி சன்மார்க்க மென்பதி லோரிடர்ப்பாடுமின்று.

இனிச், சன்மார்க்க மென்னுஞ் சொற்குச் சத்தையறிதற்குரிய மார்க்கமென்று பொருள்கோடலு மொன்று. சத்து என்னுஞ் சொற்குப் பொருள் சிவமென்று கூறலாம். 'அஸ' என்னும் பகுதியும் ஶதரு என்னும் விகுதியுங்கொண்டு "உபதேஶேऽஜநுநாஸிக இத்" (1-3-2) என்னும் பாணினி சூத்திரத்தால் விகுதியின் ரு காரமும் "லஶக்வதத்திதே" (1-3-8) என்னுஞ் சூத்திரத்தால் ஶ காரமும் இத் என்னுஞ் சம்ஞைபெற்று "தஸ்யலோப:" (1-3-9) என்னுஞ் சூத்திரத்தால் அவ்விரண்டும் லோபமாகி விகுதி அத் என நின்று "ஸார்வதாதுகமபித்" (1-2-4) என்னுஞ் சூத்திரத்தால் ஙித்வத்தாக "ஶ்நஸோரல்லோப:" (6-4-111) என்னுஞ்சூத்திரத்தால் பகுதிமுதலகாரம் லோபமாக இந்தச் சத்து (ஸத்) என்னும் பத முடிந்தது. இதற்குத் தமிழ்ப்பரியாயம் உள்ளது என்னுஞ் சொல்லாகும். இது, சிவமென்னும் பொருளை யெங்ஙனமுணர்த்து மெனின், "சௌமிய இரண்டாவதற்றதாய் ஏகமாகிய சத்தே முதற் கணிருந்தது" என்று சாந்தோக்கிய உபநிடதமும், அதனைச் சமந்வயப்படுத்தி விளக்கமாக "நான் ஒருவனே முதற்கண் இருந்தனன்" என்று அதர்வசிரசில் உருத்திரவசனமும், "உருத்திரனாகிய சத்து" என்று கண்டோக்தியாக மகோபநிடதமும் விளக்குகின்றமையானும், இச் சுருதிகளையாராய்ந்து சிவனுஞ் சிவனருளுஞ் சத்தாகு மென்று தெளிந்த அபியுக்த ரொருவர் "ஸத்ஶப்தவாச்யௌ ஶிவஶக்தி தத்த்வதோ" என்று கூறுதலானும், சைவசித்தாந்த முதனூலாகிய சிவஞானபோதம் ஆறுஞ் சூத்திரத்தில் "இருதிறனல்லது சிவசத்தாமென" என்று கேட்கப்படுதலானும், அதற்குச் சித்தாந்த பரமாசாரியராகிய ஸ்ரீ மெய்கண்டதேவர் திருவாய்மலர்ந்தருளிய வார்த்திகவுரையில் "இனி யிவ்விரண்டு தன்மையுமின்றி வாக்கு மனதீத கோசரமாய்நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்றுணர்தற்பாற்று" என்று காணப்படுதலானும், இவற்றிற்குச் சித்தாந்தஞானபாநுவா

கிய மாதவச் சிவஞானமுனிவர் "சிவசத்து என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிவு" என்று பண்புத்தொகையாகக் கொண்டு பலவாறு விரித்துவிளக்கிய மாபாடிய வசனங்களானும் சத்து என்னுஞ்சொல் சிவபெருமானையே யுணர்த்துமென்பது ஐயமின்றித் தெளியலாம். இத் தெளிவினாற் சத்தென்பது சிவனையுணர்த்தலானும், சிவனைக்காட்டுமார்க்கஞ் சைவமாதலானும் சைவசமயமே சன்மார்க்கமென்பது நிராக்ஷேபமாக நிச்சயிக்கப்பட்டதொன்றாகும்.

இனி, இச் சமயம் சன்மார்க்கமாகும் உண்மை கருதியன்றே சைவசித்தாந்த நூல்களில் வகுக்கப்பட்ட நால்வகை மார்க்கங்களுண் முடிவாகிய ஞானமார்க்கத்தைச் சன்மார்க்கமென்று கூறியதூஉமென்க. அந் நால்வகை நெறியுள், புறத்தொழின் மாத்திரையானே சிவபிரான் உருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடாகிய சரியை தாதமார்க்கமெனவும், புறத்தொழி லகத்தொழிலென்னுமிரண்டானும் அருவுருவத் திருமேனியைநோக்கிச்செய்யும் வழிபாடாகிய கிரியை சற்புத்திர மார்க்கமெனவும், அகத்தொழின்மாத்திரையானே அருவத்திருமேனியை நோக்கிச்செய்யும் வழிபாடாகிய யோகஞ் சகமார்க்கமெனவும், புறத்தொழிலகத்தொழிலிரண்டுமின்றி அறிவுத்தொழின் மாத்திரையானே அம் மூன்று திருமேனிக்கு மேலாயகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப் பிழம்பாய் நிறைந்து நிற்கின்ற சிவபிரானிடத்துச் செய்யும் வழிபாடாகிய ஞானம் சன்மார்க்கமெனவும், இந்நெறிகளினின்றோர்க்கு முறையே சாலோக சாமீப சாரூபங்களாகிய அபரமுத்தியும், சாயுச்சியமாகிய பரமுத்தியுஞ் சித்திக்குமெனவுங் கூறுப சித்தாந்தப் பெரியார். இந் நால்வகை மார்க்கங்களுள் நான்காவதாகிய சன்மார்க்கமென்னும் ஞானத்தையெய்தியே யொருவன் முத்தி பெறவேண்டுமாயினும், அந் நெறியிற் பரம்பரையாகக் கொண்டுசெலுத்தற்குக் கீழுள்ள மூன்றுஞ் சாதனமாக இருத்தலான், அவையெல்லா முத்திமார்க்கங்களென்றே கூறப்படுவனவாம். விழுச்சுடர்ச் செம்பொன் மேருமால்வரையைத் தலைப்பட லுறுவாராய் நாவலந்தீவிற் பாரதவருடத்தினையெய்தி, ஆண்டு நின்றுநெறிவினவினோர்க்கு அஃதறிந்துள்ளார்

ஆண்டுக்காட்டிய நெறியே சென்னெறியாயினும், அந் நெறி யிமயத்தையிடையிட்டுக் கிம்புருடவருடத்திற்செலுத்த, அஃது ஏமகூடத்தை யிடையிட்டு அரிவருடத்திற் கொண்டுசெலுத்த, அது நிடதத்தை யிடையிட்டு இளாவிருத வருடத்திற் கொண்டுசெலுத்த இவ்வாறு நாற்றிசையுள் யாண்டு நின்றெய்தினும் நாவலந்தீவினைத் தலைப்பட்டு இளாவிருத வருடத்திற் கொண்டுசெல்லுதலும், அஃது இடையீடின்றி மேருமால்வரைக்கே கொண்டுசெலுத்துதலும் போலப் புறச்சமய அகச் சமயங்களினின்று மேற்சென்று சென்றேறிச் சைவத்தையெய்தப்பெற்றோர், ஆசிரியன் காட்டுஞ் சைவாகம நெறியிற் சமயதீக்கையுற்றுச் சரியை நெறியைத் தலைப்பட்டு அது முற்றியபின்னர் விசேட தீக்கையுற்றுக் கிரியைநெறியைத் தலைப்பட்டு யோகநூல் கேட்டு யோகநெறியைத் தலைப்பட்டு இம் மூன்று முறையான் முற்றியபின்னர் நிருவாணதீக்கைபெற்று ஞானநெறியைத் தலைப்பட்டு வீடுபேறடைவர். கீழுள்ளமூன்றும் ஞானத்திற்கு நிமித்தமாதலான் அவை யொவ்வொருவராலும் இன்றியமையாது அநுட்டிக்கற்பாலனவா மென்றுதெளிந்த நம் தாயுமானசுவாமிகள் "விரும்புஞ்சரியைமுதன்மெய்ஞ்ஞானநான்கும், அரும்புமலர்காய்கனிபோ லன்றோ பராபரமே" என்று கட்டளையிட்டருளினர்.

ஈண்டுக்கூறிய சன்மார்க்கத்தையே சைவபரமாசிரியராகிய ஸ்ரீ மெய்கண்டதேவர் "நன்னெறியாகியஞானம்" என்று வார்த்திகத்திற் கூற அதற்கு மாபாடியம் வகுத்த மாதவச்சிவஞானயோகிகள் "நன்னெறி, சன்மார்க்கமென்பன ஒருபொருட் கிளவி" எனவும், "நன்மையெனப் படுவனவெல்லாவற்றுள்ளுஞ் சிறந்த நன்மையெனப்படுவது வீடுபேறென்ப; அதனைத் தலைப்படுத்தற்கு ஏதுவாய்ச் சிறந்தநெறியாதலின் ஞானம் நன்னெறி யெனப்பட்டது" எனவுங் கூறியருளினர். இதனாற் சைவசமயத்தி னங்கங்களாக வகுத்த நால்வகை நெறியுட் சன்மார்க்கமென்பதொன்றாயினும், அச் சமயத்தைச்சார்ந்தார் எய்தற்பாலதாகிய வீட்டின்பத்தைத் தருவது அதுவேயாதலானும், அதனிடத்துச் செலுத்தற்குரிய சோபான மார்க்கங்களாக மற்ற மூன்றுமிருத்தலானும் அந் நான்கனையுந்தன்னுட்பெற்ற சைவசமயத்தைச் சன்மார்க்கமென்று கூறுதல் மிகவும் பொருத்தமாத

லுணர்க. இவ் வுண்மை மேற்காட்டிய ஸ்ரீதாயுமானசுவாமிகள் திருப் பாடலானுந் தெளியப்படும்.

தன்னைச்சார்ந்தாரைப் பசுத்துவநீக்கிப் பதித்துவமீந்து சிவ பிரானோ டிரண்டறக் கலப்பித்து அசைவறு நிலையாகிய பேரானந் தப் பெருவாழ்வைத்தருவது இச் சன்மார்க்கமேயா மென்பதை,

"பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக்
கசியாத நெஞ்சங் கசியக் கசிவித்து
ஒசியாத வுண்மைச் சொரூபோ தயத்துற்
றசைவான தில்லாமை யானசன் மார்க்கமே."

என்று ஸ்ரீ திருமூலதேவர் திருவாய்மலர்ந்தருளிய திருமந்திரத்தா லுணர்க.

இதுகாறுங் கூறியவாற்றாற், பல் பிறப்பினும் மக்கட்பிறப்பே மேலாயதென்பதூஉம், அரிதிற் கிடைக்கப்பெற்ற அப் பிறப்புடை யார் முடிவில் எய்தற்பாலதாகிய வீட்டின்ப மித்தகைத்தென்ப தூஉம், அதுவே யுண்மைநிலையாமென்பதூஉம், அந் நிலையை யெய் தற்குரிய மார்க்கமே சன்மார்க்கம் அல்லது உண்மைநெறியெனப்படு மென்பதூஉம், அந் நெறியின் றன்மைக ளின்னவென்பதூஉம், அவை முற்றுஞ் சைவசமயத்திலடங்கியுள்ளனவாதலின் சைவசமயமேசன் மார்க்கமா மென்பதூஉம், சன்மார்க்கமென்பதற்கு நல்லொழுக்க மென்று பொருள்கொள்ளினுஞ் சைவசமயத்லதை யுணர்த்துதலிற் றட்டின்றென்பதூஉம், சத்தையறிதற்குரிய மார்க்கஞ் சன்மார்க்க மென்று கொண்டு சத்துச் சிவமும் அதனையறிதற்குரியநெறி சைவ முமாதலின், அவ் வகையானுஞ் சைவசமயமே சன்மார்க்கமாமென்ப தூஉம், இவ் வுண்மை தெளிந்தே சைவசித்தாந்த ஆசிரியர்கள் முக்தி மார்க்கங்கள் நான்கனுண்முடிவாகிய ஞானமார்க்கத்தைச் சன்மார்க்க மென்று கூறினரென்பதூஉம், இம் மார்க்கமே யெம்மார்க்கத்தி னும் விழுமியதொரு நன்மார்க்கமாமென்பதூஉம் பிறவும் விளக்கப் பட்ட பொருள்களாம். ஓம்:

# *சீவான்மா

*பிரணவப் பொருளாம் பெருந்தகை யைங்கரன்*
*சரணவற் புதமலர் தலைக்கணி வாமே.*

சங்கங்களும், பிரசங்கங்களும், நம் 'செந்தமிழ்'போன்ற பத்திரிகைகளும் கற்கும் அவாவுடைய மாணாக்கர்கட்குப் பெரும்பயனளிப்பதோடு, கற்றுவல்ல பண்டிதராயினார்க்குச் சிறிது பயனளிப்பனவுமாம். இவ் வியாசமும் ஒரே விஷயத்தைப்பற்றி நூல்களிற் பலவிடங்களிற் கூறப்பட்டுப் பரந்துகிடந்தவற்றை யொருவழித் தொகுத்து மாணாக்கர்க்கே பயன்படுமாறு வசனரூபமா யெழுதப்படுதலாற் பண்டிதசிரோமணிகளா யுள்ளவர்கள் தமக்காவதொன்றின்றெனச் சிறிதுங் குறைகூறார்களென்னும் நம்பிக்கை பெரிதுமுடையேன்.

அநாதி முத்த சித்துருவாகிய சிவபெருமானாலருளிச் செய்யப்பட்ட 'காமிகம்' முதலிய சிவாகமங்களிருபத்தெட்டும் ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் எனத் தனித்தனி நான்கு பாதங்களுடையனவா யிருக்கும். அவற்றுள், ஞானபாதத்திற் பரமசிவனுடைய சொரூபமும், மூவகையான்மாக்களின் சொரூபமும், ஆணவம் முதலிய பாசங்களின் சொரூபமும், தத்துவங்களின் றோற்றமும் பிறவுங் கூறப்படும். அவற்றுள், சீவான்மாவைப்பற்றி முற்கூறிய ஆகமாந்தங்களாகிற சைவசித்தாந்த சாஸ்திரங்களின் வாயிலாகவும், அநுபவமுள்ள ஆன்றோர்வாயிலாகவும் யானுணர்ந்த சிலவற்றுள்ளும் மிகச்சிலவற்றையே யீண்டெழுதலானேன்.

ஆன்மாக்கள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படுவர். விஞ்ஞானகலர், ஆணவமலமொன்றேயுடையவர்கள். பிரளயாகலர் ஆணவம், கன்மம் ஆகிய இரண்டு மலமுடையவர்கள். சகலர் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்றுமலமுடையவர்கள். பின்னெழுதப்படுவன பெரிதுஞ் சகலருக்கே யுரியவை.

* இவ்வியாசம், மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் பத்தாம் வருஷோற்சவ காலத்தில் (26—6—11-ல்) படிக்கப்பெற்றது.

சகலருக்குத் தூலதநுவாவது:—அண்டசம், உற்பிச்சம், சுவேத சம், சராயுசம் என்னும் நால்வகை யோனிகளினும் பிறப்பதாய்த் தேவர், மானுடர், விலங்கு, பறவை, நீர்வாழ்வன, ஊர்வன, தாவரம் என்னும் எழுவகைத் தோற்றத்தையுடைய எண்பத்துநான்கிலக்ஷ யோனிபேதமாயுள்ளது. இவ்வுடல்களையுடைய வுயிர்கள் விஷயங் களையறியும் பேதத்தினால் அறுவகைப்படும். புல், மரம் முதலியவை பரிசம் ஒன்றையே உணரும் ஓரறிவுயிர்கள். நந்து, முரள் முதலிய வை அதனோடு சுவையையுணரும் ஈரறிவுயிர்கள். சிதல், எறும்பு முதலியவை அவற்றோடு கந்தத்தையுணரும் மூவறிவுயிர்கள். நண்டு, தும்பி முதலியவை அவற்றோடுருவத்தையும், அதனோடு சமவாயமா யுள்ள வடிவத்தையுமுணரும் நாலறிவுயிர்கள். மா, மாக்கள் முத லியவை அவற்றோடோசையை யுணரும் ஐயறிவுயிர்கள். மக்க ளெனப்படுவார் ஐம்பொறி யுணர்வேயன்றி மனவுணர்வொன்று முடையர். இவற்றின் விவரங்கள் தொல்காப்பிய மரபியற்கண்ணே "ஒன்றறிவதுவே" என்பது முதலிய சூத்திரங்களானும், அவற்றி னுரையானு முணரத்தக்கவை.

இனி, மெய்கண்டதேவரால் மொழிபெயர்த்தருளிச் செய்யப் பட்ட சிவஞானபோதத்தின் கண் "உளதில தென்றலி னெனதுட லென்றலி, னைம்புலனொடுக்க மறிதலிற் கண்படி, லுண்டிவினை யின் மையி னுணர்த்த வுணர்தலின், மாயா வியந்திர தனுவினு ளான்மா" எனச் சீவான்மாவினுண்மையும், "அந்தக் கரண மவற்றினொன் றன் றவை, சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா, தமைச்சர சேய்ப்ப நின் றஞ்சவத் தைத்தே." என அதனிலக்கணமுங் கூறப்பட்டிருக் கின்றன. அவற்றை யொருவாறு விளக்குதும்.

உடம்போ பல்வகைக்கருவிகளாற் கட்டுண்டியல்வதொருபாவை. உடற்கருவிகள் பலவற்றையுந் தனித்தனியேபேதித்து ஆன்மா இது வன்று, இதுவன்று என்று நீக்கிச் சோதனைசெய்து போதருங் கால் முடிவிற் சோதித்து நீக்கப்படுங்கருவி யாதுமின்றாய்ச் சூனி யந் தலைப்படக் காண்கின்றோம். ஆதலாற், சில ருண்டெனக்கூறும் ஆன்மா உட்பொருளாகமாட்டாது; சூனியமேயாம் என்று சூனி யான்மவாதிகள் கூறுவர். உடல் பொறி முதலிய கருவிகளையெல்

லாஞ் சோதனைசெய்து ஆன்மாவன்றென ஒரோவொன்றாகக்கழித்து நிற்பதாகிய அறிவு ஒன்றிருத்தலினால் அவர் சூனியமென்றுகூறியது பொருந்தாது.

இனி, உடம்பின்கண்ணன்றி அறிவு நிகழக்காணாமையானும், நான் மெலிந்தேன் பருத்தேன் கரியேன் என உடம்பினையே நான் என்று வழங்கக்காண்டலானும் தேகமே ஆன்மாவெனத் தேகான்ம வாதிகள் கூறுவர். அங்ஙனம் உடம்பின் குணவிசேடங்களை உப சாரத்தா லான்மாவுக்கேற்றி வழங்கினும் யானுடம்பு என வழங் காது 'என் பொருள்' முதலியபோல என்னுடம்பெனப் பேதமுற வழங்குதலானும், சிறுபான்மை என்னுயிரென்பது ஆகுபெயராய்ப் பிறிது பொருட்குச் செல்லுதலானும், பிணக்கிடையில் தேகமிருப் பினும் அறிவுநிகழக்காணாமையால் உடம்பு சடமும் ஆன்மாச் சித்து மாகலானும், இவ் வுடம்பிற்குவேறாய் ஆன்மா உண்டென்பது பெறப் படுதலால், அதனையுணராது தேகமே ஆன்மாவென்னுமவர் கூற்றுப் போலி.

இன்னும் பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்னும் நான்கு பூதங் களும் நித்தியமென்றும், அவற்றுள் வாயு சலனகுணத்தையுடைய தாகையால் மற்றுள பூதங்கட்கு அதனோடு கலப்புண்டாகுதலின் இச் சரீராதிகள் தோன்றுமென்றும், பாக்கு வெற்றிலை சுண்ணாம்பு மூன்றுங் கூடியவளவில் முன்பில்லாத சிவப்புத் தோன்றுதல்போ லப் பூதசையோகத்தினால் முன்பில்லாத மனமுந் தோன்றுமென் றும், அறியுந்தன்மை மூளையினதேயாகலின் சரீரத்திற்கு வேறா யொரு ஆன்மா இல்லையென்றும், பிணமான சரீரத்தில் வாயுநீங்குத லால் அக்கினி அவியும்; அப்பொழுது அறிவுங்கெடுமென்றும் பலர் பலவாறு கூறுவர். பூதம் நான்குஞ் சடமாகலின் அவற்றின் கூட் டாவிற் சேதனம் புதுவதாகத்தோன்றுமென்ற லியையாது. பாக்கு வெற்றிலை சுண்ணாம்புகளின் கூட்டத்திற்றோன்றிய செவ்வண்ணம் சடப்பொருட்குணமேயன்றிச் சிற்குணமன்று. அன்றியும் பாக் கின்கண்ணினிது தோன்றாதடங்கி நிற்குஞ் செவ்வண்ணம் விளங் கித் தோன்றியதேயன்றிப் புதிதாகச் செவ்வண்ணந் தோன்றிற் றில்லை. சரீரத்தின்கண் ஒருபகுதியாய்ச் சடமாயுள்ள மூளைக்கு

அறியுந்தன்மை யுண்டென்பதும், பிணமாமவசரத்து வாயு நீங்குத லால் அறிவுகெடுமென்பதும் பொருந்தா. என்னை? உறக்கத்தின்கண் சரீரம், மூளை, வாயு என்பன வெல்லாமிருக்கவும், மூளைக்கும் மற்ற நாடிகட்குமுள்ள சம்பந்தம் நீங்காதாகவும், சூடு குளிர்ச்சி முதலி யவைகட்குக் குறைவின்றாகவும் அக் காலத்தி லறிவின்றாகலால் என் பது. ஆன்மா சரீரத்தின் வேறாகவிருத்தலினாற்றான் பூதாவேசங்களி லும் மற்றுஞ் சில விடங்களிலும் சரீரத்தை முற்றும் மறக்க நேரு கின்றது. யோகிகள் சமாதிகாலத்திற் சரீரத்தை மறந்து சீதோஷ் ணங்களை யறியாதிருக்கின்றார்கள். தாம் உறங்குங்காலத்தில் தம் முடைய கைகால் முதலிய அவயவங்கள் எவ்வமைப்புடனிருந்தன வென்று அறிந்து சொல்பவர் ஒருவருமில்லை.

இனி, இந்திரியான்மவாதிகள், செவி முதலிய பொறிகளே சத் தம் முதலிய விஷயங்களை யறிவனவாதலால் அவையே ஆன்மாவாகு மென்று கூறுவர். இந்திரியங்களுள் ஒன்றறிந்த விஷயத்தை மற் றொன் றறியமாட்டாமையானும், தனித்தனி விஷயங்களையறிவ தன்றி எல்லா விந்திரியங்களும் ஒருங்கே யறிவதின்மையானும், விஷயங்களை யுணருந்தம்மைத் தாமேயுணரமாட்டாமையானும், ஓரிடத்திற் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிந்த விஷயா நுபவங்களை மற்றோரிடத்திருந்து நினைந்து அவ் வண்ணமே நுகர்ச்சி யுறுகின்றமையானும் அவர் கூறியது பொருந்தாது. அவ் விந்திரி யங்களைக்கொண்டறியவல்ல மனமாகிய கருவியையுடைய ஆன்மா வேறுண்டென்பதே தேற்றம்.

இனிப், புரியட்டகமாகிய சூக்கும வுடம்பே ஆன்மாவென்பா ரும், பிராணவாயுவே ஆன்மா வென்பாரும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணமே ஆன்மாவென்பாரும், அனைத் துங்கூடிய சமுதாயமே ஆன்மாவென்பாரும், பிரமமே ஆன்மாவென் பாரு முளர். இவற்றுட் சில மேற்கூறியவைகளானே மறுக்கப்பட் டமையானும், இவற்றையெல்லாம் மறுத்துச் சித்தாந்தமோதுங்கால் மாணாக்கர்க்கு அறிவு தடுமாறுமாகலானும் இவற்றை நிறுத்தி மேற் செல்லுதும்.

இதுகாறுங் கூறிய சூனியம் முதலிய வெல்லாவற்றிற்கும் வேறாயுளதென்று பாரிசேட வளவையாற் பெறப்பட்ட ஆன்மாவா னது உருவப்பொருளென்றும், சூக்குமவுருவென்றும், அருவுரு வென்றும், அருவென்றும், அசித்தென்றும், சித்தசித்தென்றும், சித் தேயென்றும், அணுவென்றும், உடலினினேகதேசியென்றும், உடல் முழுதும் வியாபியென்றும், எங்குந்தான் வியாபியென்றும், சத்தசித் தாயிருந்தே பின்மாயாகாரியத்தால் மறைக்கப்பட்டதென்றும் பலர் பலவாறு கூறுவர். அவையெல்லாம் பொருந்தாவென்பதை முறை யே விளக்குதும்.

உயிர் உருவப்பொருளாயின்: காட்சிப்புலனாதலும் பரிணமித் தழிவெய்தலும் வேண்டும்; அவ்வாறின்மையால் அஃது உருவப்பொ ருளன்று. சூக்குமவுருவாயின்: அது தூலவுருவைத் தோற்றிவிக் குஞ் சடமாதல் வேண்டும்; அவ்வாறின்மையா லுயிர் சூக்குமவுரு வன்று. அருவுருவென்னில்: மறுதலைப்பட்ட விரண்டுதன்மையொரு பொருட்க ணொருங்குநிகழ்தல்கூடாமையான் உயிர் அருவுருவன்று. ஆகாயம்போலருவென்னில்: அஃது உடம்பிற்குப்பல தொழில்களை யும் பல விகாரங்களையுந் தரவற்றன்று; ஆதலா லுயிர் அருவன்று. உயிர் அசித்தே; அது பின்மனத்தோடுங்கூடிச் சித்தாயறியுமென் னில்: சடப்பொருள் சித்தாதலும் சித்துப்பொருள் சடமாதலு முல கத்தின்மையா லது பொருந்தாது. சித்தசித்தென்னில்: மாறுபட்ட விரண்டுதன்மை பொருங்கு நில்லாமையா லது பொருந்தாது. உயிர் சித்தே யென்னில்: அசித்தாகிய கருவியை யின்றியறிதல் செல்லா மையால் அது பொருந்தாது. உயிரினை அணுவென்னில்: ஒரு துவா ரத்தா லோடிப்போவதன்றி, உடம்பிற் கட்டுண்டற்கும் பாரந்தாங் கற்கு மொவ்வாதாகையா லது பொருந்தாது. உயிரினை உடம்பினி னேகதேசி யென்னில்: உரு என்றூர்க்கோதிய குற்றமெய்து மாக லான் அது பொருந்தாது. உடல்முழுதும் வியாபியென்னில்: உடம் பளவிற்குத்தக்க அறிவாத லின்மையாலும், உறக்கமுறாதலானும், ஐம்பொறியினு மொருங்கே யறிவுநிகழாமை யானும் அது பொருந் தாது. உயிரினை முதல்போலெங்கும் வியாபியென்னில்: அவத்தை களும் போக்குவரவுகளு முறுதலானும், எல்லாவற்றையு மொருங்

கே யறியாமையானும், உடம்பிற் கட்டுண்டு நிற்றலானு மது பொருந்தாது. வியாபகமாயிருந்த வுயிரை மாயாகாரியமான தநு, கரணம் முதலியவை பந்தித்து நிற்றலில் அறிவுதடையுற்று ஏகதேசப்பட்டதெனில்: அறிவு விளங்குதற்கேதுவாய மாயாகாரியம் அறிவைத் தடைசெய்தல் கூடாமையானும், முன் சுத்தமாயிருந்தவுயிரை அது பந்தித்ததென்னில் வீடுபெற்றவழியும் உறுமெனப்பட்டு முத்தியென்பதின்றாய் முடியுமாகலானும் அதுபொருந்தாது.

இனி, உயிரினிலக்கணத்தை,

> "அசித்தரு வியாப கம்போல் வியாபக மருவ மின்றாய்
> வசித்திட வரும்வி யாபி யெனும்வழக் குடைய தாகி
> நசித்திடா ஞானச் செய்தி யாதியே மறைத்து நிற்கும்
> பசுத்துவ முடைய தாகிப் பசுவென நிற்கு மான்மா."

என்னுந் திருவாக்கா னுணர்க. இச் செய்யுட்குத் திருவாவடுதுறையி லெழுந்தருளிச் சித்தாந்த பாநுவாய் விளங்கிய ஸ்ரீ சிவஞானமுனிவரர் எழுதிய உரை வருமாறு:—

ஒருவாற்றானும் அசித்தாதலரிய வியாபகப் பொருள்போல ஔபச்சிலேடிக வியாபகமாதலும், அதுபற்றி அதிசூக்குமசித்தாதலுமின்றி அதுவதுவாய் வசிப்புண்ணும் வியாபகமாதலும், அநாதியே பசுத்துவமெனப்படும் ஆணவமலத்தின் மறைப்புண்டு கிடக்கும் இச்சாஞானக் கிரியைகளையுடைத்தாய்ப் பசுவெனப்படுந் தூலசித்தாதலுமுடையது உயிர். எ-ம்.

இங்ஙனங் கூறப்பட்ட ஆன்மா இலக்கத்தாலளவுபடுத்தற்கரியவாய், கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்றவத்தைகளையடைந்து நிற்கும். சீவான்மாக்கள் அளவில்லாதனவென்பதை மாணாக்கர்க்கொருசிறிது விளக்குதும். எழுவகைத்தோற்றமாய்க் காணப்படுகிற சீவவர்க்கங்களில் அறிவின் முதிர்ச்சியைப் பெற்றவைகளைவிட அறிவு முதிராதவைகளே மிகுதிப்பாடுடையனவென் றறிகின்றோம். இப்பொழுது நம் (பிரிட்டிஷ்) ராஜாங்கத்தில் ஜனசங்கியையும், ஆடு, மாடு, குதிரை முதலியவற்றின் சங்கியையும் செய்து வருகின்றார்கள்.

பூர்வகாலத்திலும் அரசர்களுக்குரிய நால்வகைச் சேனைகளாகிற யானை, குதிரை, தேர், காலாள் என்பன கணிக்கப்பட்டு வந்தமையை இதிகாச புராணங்களினு லறிகின்றோம். ஆனால், எறும்பு முதலிய சிறு ஜெந்துக்களைக் கணிக்க விரும்பின் அஃதெவ்வாற்றானு மியலுவதாமோ? அம்மட்டோ? ஒவ்வொரு தூல சரீரங்களையுங் கொண்டுசெலுத்துமுயிர்கள் ஒவ்வொன்றுயிருக்க, ஒவ்வொரு சரீரத்தினுள்ளும் எண்ணிலாத ஜீவஜெந்துக்கள் வசிக்கக் காண்கின்றோம். பரமாத்மாவுக்குச் சரீரமாக வேதத்தின்கட் கூறப்படுகிற பிரபஞ்சமானது நமக்கு வாசஸ்தானமாதல்போல நஞ்சரீரமும் எண்ணிலாத வுயிர்கட்கு வாசஸ்தானமாதல் பெருவியப்பே! அன்றியும் ஒரு சிறு வித்தினின்றுந் தோன்றியதோர் ஆலமரத்திற் கோடிக்கணக்கானவித்துக்கள் உண்டாகின்றன. வித்துக்களெல்லாந் தம்மகத் துயிரையுடையனவாதலின் அவ்வுயிர்களெல்லாம் எவ்வாறம்மரத்தையடைந்தன? மண், நீர், காற்றுக்களின்மூலமாகவே அடைந்தனவாதல் வேண்டும். ஆகவே பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்றபஞ்சபூதங்களினிடமாகவும் கட்புலனாகாத அளவற்ற ஜீவஅணுக்கள் நிறைந்திருக்க வேண்டுமென யூகிக்கப்படுதலால் ஜீவான்மாக்கள் அளவில்லாதனவென்பதில் ஐயமில்லை. இனிச், சீவான்மாக்களுடைய அவத்தைகளில் கேவலமாவது: ஆன்மாக்கள் சர்வசங்காரகாலத்து அசுத்தமாயாகாரணத்திலே யொடுங்கிச் சிருட்டிகாலமளவும் ஒன்றுமறியாமற்கிடப்பது. சகலமாவது: சிருட்டிதொடங்கிச் சர்வசங்காரம்வரை ஆன்மாக்கள் தத்துவங்களோடு எண்பத்துநான்கிலக்ஷயோனி பேதங்களிற் பிறந்திறந் துழல்வது. சுத்தமாவது: கேவலசகலப்பட்டுப் பிறந்திறந்துழலும் ஆன்மாக்கட்கு மலபரிபாகமும், இருவினையொப்பும், சத்திநிபாதமும், குருவருளும் உண்டாக அவை திருவருளைக் கூடுவது இவற்றை,

“கேவல சகல சுத்த மென்றுமூன் றவத்தை யான்மா
மேவுவன் கேவ லந்தன் னுண்மைமெய் பொறிக ளெல்லாங்
காவலன் கொடுத்த போது சகலனு மலங்க ளெல்லா
மோவின போது சுத்த முடையனுற் பவந்து டைத்தே.”

என்பது முதலிய சிவஞானசித்தியார்ச் செய்யுட்களானுணர்க.

இனி, மேற்கூறிய காரணவத்தைக மூன்றன்கண்ணும் தனித் தனி சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னுங் காரியாவஸ்தைகள் ஐவைந்துள. சாக்கிரமாவது : ஆன்மா முப்பத்தைந்து கருவிகளோடு லலாடஸ்தானத்தில் நின்றவவசரம். சொப்பனமாவது : இருபத்தைந்து கருவிகளோடு கண்டத்தில்நின்ற வவசரம். சுழுத்தியாவது : மூன்றுகருவிகளோடு இருதயத்தினின்ற வவசரம். துரியமாவது : இரண்டு கருவிகளோடு நாபியினின்றவவசரம். துரியாதீதமாவது: ஆன்மா புருடனோடு மூலாதாரத்தில் நின்ற வவசரம். இவை ஒவ்வொன்றின்கண்ணும் ஐவைந்தவத்தைகளுள. மேற்கூறிய சாக்கிரம் முதலியவைந்தும் கீழ்நோக்கிச்சென்றொடுங்கு முறையும், மேனோக்கித் தோன்றுமுறையும்பற்றி யிருவகைப்படும். அவற்றுள் ஒடுங்குமுறையது பிறவிக்குவித்தாம். தோன்றுமுறையது பிறவியறுத்தற்குக் காரணமாம். இவற்றின் விவரங்களையெல்லாம் நூல்களிற் கண்டுகொள்க.

இனி, ஆன்மாக்கள் பொருந்துஞ் சரீரங்கள் : காரணசரீரம், கலாதிகளாகிய கஞ்சுகசரீரம், குணசரீரம், சூக்கும சரீரம், தூலசரீரம் என ஐந்து. இவை முறையே ஆனந்தமயகோசம், விஞ்ஞானமயகோசம், மனோமயகோசம், பிராணமயகோசம், அன்னமயகோசம் என்னும் பெயர்களைப் பெறுவனவாம். இவை காரணக்குறியவாதலும் பிறவு முய்த்துணர்க.

இனிச்,சீவான்மாக்கட்குத் தநுகரணம் முதலியவை உண்டாவதெங்ஙனமெனில்: முற்பிறப்பிற்செய்த கன்மங்களுக்கீடாக முதல்வனாலளிக்கப்படுமென்க. கன்மமும் சரீரத்தை யின்றியமையாமையால் தம்முண் முந்தியதியாதெனில்: அவை வித்தினிடத்து மரமும், மரத்தினிடத்து வித்தும்போலத் தம்முட் காரணகாரியமாய்ப் பிரவாகாநாதியாய் வருதலின் அவற்றிற்குத் தம்முண் முற்பிற்பாடு கூறமுடியாது.

இனி, இப்பிறப்பிற்கு முற்செய்த கன்மங் காரணமென்றுகூறுதல் பொருந்தாது. காலதேசங்களி னியற்கையாற் சரீரத்திற்கு வடிவு, நிறம் முதலியவை யுண்டாகின்றன. பெற்றோர்களுடைய வறிவிற்குஞ் சரீரவமைப்புக்குந் தக்கபடி பிள்ளைகள் புத்திசாலிகளா

யும், மூடர்களாயும், சர்வாங்கசுந்தரர்களாயும், அங்கஹீனர்களாயும் பிறக்கின்றார்கள். அவரவர்களுடைய முயற்சிக்கும் சோம்பலுக்கு மேற்பச் செல்வ வறுமைகளையடைகின்றார்கள். இதற்காக மற்றொரு பிறப்புக்கொள்வதென்னை? எனில்: தேசவியற்கைமுதலியன வடிவு முதலியவற்றிற் கொரோவழிக் காரணமாயினும் எல்லாவற்றிற்கும் அவையே காரணமென்றல் பொருந்தாது. யாதோரங்கமுங் குறை வில்லாத சுந்தரர்களுக்கு அங்கஹீனரான பிள்ளைகளும், அங்கஹீனர் கட்குச் சௌந்தர்யமுள்ள பிள்ளைகளும், மூடர்களுக்கு அறிவுள்ள பிள்ளைகளும், அறிவுடையோர்க்கு மூடப்பிள்ளைகளும், நல்லவுணவு ண்பவர்க்குக் கெட்டபிள்ளைகளும், தீயவுணவுண்பவர்க்கு நல்லபிள் ளைகளும், ஒரே தாய்வயிற்றிற் பலவிதமான பிள்ளைகளும் பிறக்கக் காண்டலானும், முயற்சியுள்ளவன் வறுமையையும், சோம்பியிருப் பவன் செல்வத்தையும் அநுபவிப்பதுமுண்டாகலானும், ஒவ்வொரு வருக்கும் ஒவ்வொருவிதமான ஆற்றல் பிறர் கற்பிக்கவேண்டாது இளமையிற்றானே யமைந்துகிடத்தலானும் இவையெல்லாவற்றிற் குங் காரணமாய்க் கன்மமுண்டெனக் கொள்வதே பொருத்தமாம். கன்மமானது சடமாய்ச் செய்தபொழுதே யழிவதாகலாற் பின் னின்று தானே பயன்றருமென்பதொவ்வாது. உயிர், கருவிகளை யின்றி யறியமாட்டாத சிற்றறிவுடையதாகலின் தானே கன்மத்தின் பயனையறிந்தடையு மென்றலு மொவ்வாது. ஆகலாற், சுதந்திர வறிவுடையனாகிய முதல்வனே உயிர்கள் மனவாக்குக்காயங்களாற் செய்கிற இதாகிதங்களையெல்லா மேற்றுக்கொண்டு அநுக்கிரக நிக் கிரகங்களைச்செய்து சுகதுக்கங்களையளிப்பன்.

பெற்றோர்கள், தஞ்சொற்படி நடவாதபிள்ளைகளை யுறுக்கியடித் துத் தண்டித்தல் கருணையானாற்போலவே முதல்வன் செய்யுந் தண் டமும் உயிர்கள் வீடுபேறெய்தற்பொருட்டு வைத்த கருணையானே யாம். மறைகள் ஈசனுடைய சொல்லாகும். நிரயம் அச்சொல் வழி நடவாதாரை வைக்குஞ் சிறைக்களமாகும். உம்பருலகங்கள் சொல்வழி நடப்போரைச் செல்வத்தோடுறையவைக்கும் பதிகளா கும். உயிர்கள் தூலவுடம்பு கழிந்தவழிச் சூக்கும வுடம்பினின் றும் வினைப்பயன்களையநுபவித்தற்குரிய வெவ்வேறுடம்புகளுளவாத

லால் அவ்வுடம்போடு இறைவனாணையாற்சென்று துறக்க நிரயத்தின் பத் துன்பங்களை நுகர்ந்து பின்பு அவ் வினைச்சேட மநுபவித்தற் பொருட்டுச் சூக்குமவுடம்போடு நிலத்திற்சென்று கருப்பாசயத் தைத் தலைப்படும். உயிர்கள் பூதனு சரீரம் போனபின்பு வினைக ளின் வன்மை மென்மைகட்கேற்ப மற்றுமோர் பூதனுசரீரத்தையே எடுத்தலுமுண்டு. யாதனுசரீரம் போனபின் மற்றுமோர் யாதனு சரீரத்தையே யெடுத்தலுமுண்டு. இம்மையிலும் வண்டு முதலிய வை அச்சுமாறுதலால் உயிர் அச்சு மாறிப்பிறக்கு மென்பதி லைய மில்லை. இதற்குப் பிரமாணம்:—

"அகலிகை கல்ல தானா ளரிபல பிறவி யானான்
பகலவன் குலத்திற் றோன்றிப் பாரெலா முழுது மாண்டு
நிகரிலா வரச னுகுஞ் சிலந்திநீ டுலகம் போற்றச்
சகமதி லெலிதா னன்றோ மாவலி யாய்த்துத் தானே."

என்பது (சிவஞானசித்தியார்)

மற்றும் இதுபற்றி யெழுதவேண்டுவன வெல்லா மெழுதின் மிக விரியுமாதலால் வியாசத்தை யிம்மட்டினிறுத்துதும்.

மு. வேங்கடசாமிநாட்டார்.

---

# கங்கைகொண்ட சோழபுரம்

(சo௬-ஆம் பக்கத்தொடர்ச்சி)

"திருமன்னிவளர இருநிலமடந்தையும்
போர்ச்சயப்பாவையும் சீர்த்தனிச்செல்வியுந்
தன்பெருந்தேவியராகி யின்புற
நெடுதியலூழியுளிடைதுறைநாடுந்
துடர்வனவேலிப்படர்வனவாசியுஞ்
சுள்ளிசூழ்மதிள் கொள்ளிப்பாக்கையும்
நண்ணற்கருமரண் மண்ணைக்கடக்கமும்

பொருகடலீழத் தரசர்தமுடியு
மாங்கவர்தேவியர் ஓங்கெழில் முடியும்
முன்னவர்பக்கல் தென்னவர்வைத்த
சுந்தரமுடியும் இந்திரனாரமுந்
தெண்டிரையீழ மண்டலமுழுவதும்
எறிபடைக்கேரளர் முறைமையிற்சூடுங்
குலதனமாகிய பலர்புகழ்முடியுஞ்
செங்கதிர்மாலையுஞ் சங்கதிர்வேலைத்
தொல்பெருங்காவல் பல்பழந்தீவுஞ்
செருவிற்சினவி யிருபத்தொருகால்
அரைசுகளைகட்ட பரசுராமன்
மேவருஞ்சாந்திமத் தீவரண்கருதி
யிருத்தியசெம்பொற் றிருத்தகுமுடியும்
பயங்கொடுபழிமிக முயங்கியில் முதுகிட்
டொளித்தசயசிங்கன் அளப்பரும்புகழொடு
பீடியலிரட்டபாடி ஏழரை
யிலக்கமும்நவநெதிக் குலப்பெருமலைகளும்
விக்கிரமவீரர் சக்கரக் கோட்டமு
முதிர்படவல்லை மதுர : ண்டலமும்
காமிடைவள நாமணைக்கோணையும்
வெஞ்சினவீரர் பஞ்சப்பள்ளியும்
பாசடைப்பழன மாசுணிதேசமும்
அயர்வில்வண்கீர்த்தி ஆதிநகரவையில்
சந்திரன்றொல்குலத் திந்திரதனை
விளையமர்களத்துக் கிளையொடும் பிடித்துப்
பலதனத்தொடுநிறை குலதனக்குவையும்
கிட்டருஞ்செறிமிளை ஒட்டவிஷையமும்
பூசுரர்சேர்நற் கோசலைநாடும்
தன்மபாலனை வெம்முனையழித்து
வண்டுறைசோலைத் தண்ட........புத்தியும்

.த்திக் தக்கணலாடமும்

கோவிந்தசந்தன் மாவிழிந்தோடத்
தாங்காதசாரல் வங்காளதேசமும்
தொடுகழற்சங்கு வொட்டல் மயிபாலனை
வெஞ்சமர்வளாகத் தஞ்சுவித்தருளி
யொண்டிறல்யானையும் பெண்டிர் பண்டாரமும்
நித்திலநெடுங்கட லுத்திரலாடமும்
வெறிமலர்த்தீர்த்தத் தெறிபுனல்கங்கையும்
அலைகடல்நடுவுட் பலகலஞ்செலுத்திச்
சங்கிராமவிசையத் துங்கபன்ம
நாகியகடாரத் தரசனைவாகயம்
பொருகடல்கும்பக் கரியொடு மகப்படுத்
துரிமையில்பிறக்கிய பெருநெதிப் பிறக்கமும்
ஆர்த்தவனகனகர் போர்த்தொழில்வாசலில்
விச்சாதிரத்தோரணமும் மொய்த்தொளிர்
புனைமணிப்புதவமும் கனமணிக்கதவமும்
நிறைசீர்விசயமும் துறைநீர்ப்பன்னையும்
வன்மலையூரெயிற் றொன்மலையூரும்
ஆழ்கடல்சூழகழ் மாயிருடிங்கமும்
கலங்காவல்வினை யிலிங்காசோகமும்
காப்புறுநிறைபுனல் மாப்பப்பாளமும்
காவலம்புரிசை மேவிலிம் பங்கமும்
விளைப்பந்தூருடை வளைப்பந்தூறும்
கலைத்தக்கோர்புகழ் தலைத்தக்கோலமும்
திதமாவல்வினை மாதமாலிங்கமும்
கலாமுதிர்க் கடுந்திறல் இலாமுரிதேசமும்
தேனக்கவார்பொழில் மானக்கவாரமும்
தொடுகடல்காவல் கடுமுரட்கடாரமும்
மாப்பொருதண்டாற் கொண்ட

கொப்பரகேசரிவர்மரான உடையார் ஸ்ரீ ராஜராஜேந்த்ர சோழ தேவர்க்கி யாண்டு கக-ஆவது நாள் இருநூற்று நாற்பத்திரண்டினால் உடையார் ஸ்ரீ ராஜேந்த்ர சோழதேவர் கங்கைகொண்ட சோழபுரத்துக் கோயிலினுள்ளால் முடிகொண்ட சோழன் திருமாளிகையில் வடபக்

கத்து ஷெவாரத்துச் சுற்றுக்கல்லூரியில் இருந்து..........." என்று வெட்டப்பட்டிருக்கிறது. அதாவது மேற்குத்திக்கில் இப்பொழுது மைசூர் என்று சொல்லப்படுந் தேசத்தையும் அதற்கு வடக்கிலுள்ள கொலாப்பூர் நாட்டையும் ஜெயித்தபின், ஈழதேசத்தரசனது முடியுடன் அவன்தேவிமார் கிரீடத்தையும் கவர்ந்ததுமன்றிப் பாண்டியன் பயந்து அவ் வீழதேயத்தரசனிடங் காப்பாக வைக்கப்பட்டிருந்த சுந்தரமுடி என்னும் கிரீடத்தையும் இந்திரனாரம் என்னும் ஆபரணத்தையும், கேரளதேசத்தையும், அதற்கடுத்திருக்கும் பால்தீவுகள் லக்ஷத்தீவுகள் முதலானவற்றையுங் கைப்பற்றி மேலைச்சளுக்கிய அரசனை ஜயசிம்மனைத் தோற்கடித்தும், மைசூரில் ஒருபாகமான இரட்டபாடியும், சக்கரகோட்டமும், மதுராநாடும், சோணதேசமும், பஞ்சப்பள்ளிநாடும், மாசுணி தேசமுங்கொண்டு சந்திரவம்சத்தானை இந்திரதனைஜயித்தும், ஒட்டிரநாட்டையும், கோசலைநாட்டையுங்கவர்ந்து, தக்ஷிணலாடதேசத்தரசனை இரணசூரனைஜயித்தும், கோவிந்தசந்திரன் போர்க்களத்தே யானையினின்றுங் கீழேயிறங்கியோட வென்று வங்காளதேசத்தரசனை மகிபாலனைத்* தோற்கடித்து அவனது பொக்கிஷத்தையும் தேவியரையும் கைப்பற்றி உத்திரலாடத்தை ஜயித்து, அடுத்துள்ள தீர்த்தமான கங்கைக்கரையையடைந்து கீழ்நோக்கிக் கடலிலே பல கப்பல்களைச்செலுத்திக் கடாரத் தரசனை சங்கிராமவிஜய துங்கபத்மனை† ஜயித்துக்கடலாற்சூழப்

---

* மஹிபாலன் வங்காளதேசத்தை கி. பி. 1026-ல் ஆண்டவனென சாரநாத்திலிருக்கும் சாஸனமொன்றால் அறியப்படுகிறது. இவனது பேரனை விக்கிரகபாலனது சாஸனமொன்றில் அவனுடைய பாட்டன் காலத்தில் வங்காளதேசம் அதற்குச் சம்பந்தமில்லாத ஒரு அரசனாற் கைப்பற்றப்பெற்றுத் திரும்பப்பெற்றதாகக் கூறுகின்றது.

† பர்மா தேசத்திலுள்ள பெகுநாட்டிற்குக் கடாரதேசமென்றும், அதனில் அரசாண்ட புத்தவரசனை சூடாமணிவர்மனென்னுமரசன் நாகபட்டினத்தில் புத்த விகாரமொன்று கட்டியதாகவும், அதற்கு அவனது குமாரனை மார விஜயோத்துங்க வர்மனென்பான் சோழ அரசனும் இராஜேந்திர சோழனது முன்னவனுமான ராஜராஜனிடமிருந்து நாகைக்குச்சமீபத்திலிருக்கும் ஆனைமங்கலமென்னு மூரை வாங்கிவிட்டதாகவும் சாசனங் கூறும். இந்தப் புத்தவிகாரமே புதுவெள்ளிக்கோபுரமென வழங்கப்பட்டது. இதனை இப்பொழுது திருச்சிராப்பள்ளியிலுள்ள ஜேசுட் பாதிரிமார்கள்பெற்று, காலேஜாக்கிவைத்திருந்து, இப்பொழுது நாகை சப்கோர்ட்டாக்கப்பட்டிருக்கிறது. அவனது குமாரனே இங்குக் கூறப்பட்டவன்.

பட்டுச் சுவர்ணபூமியெனப்படும் கீழ்ப்பர்மாதேசத்தை ஜயிக்க பான் ஒற்ளேயிங்கு என்னும் பன்னையிலிறங்கி அந்நாட்டை ஜயித்து, எல்லோராலும் புகழப்படுவதும், காலமியால் 'தக்கோலா' என்றழைக்கப்பட்டதும், இப்பொழுது அயேத்தமாவென்னும் பட்டினமாக விருப்பதுமான தக்கோலத்தை ஜயித்து, மோர்மீனுக்கடுத்த மார்ட்டபனென்று*இப்பொழுது சொல்லப்படும்முத்திமாநகரம் அல்லது மாதமாலிங்கமும் வென்று முன்னர் இந்துமகாசமுத்திரத்தில் சுந்தரத்தீவு முதல் ஆசியாகண்டத்துக் கீழ்ப்பாகங்களோடு ஆபிரிக்காவரையில் ஒருதேசமாக விருந்து பிறகு காலஉற்பாதத்தாற் சில ஜலத்திற் சென்றும் சில தங்கியுமிருக்கிறதென டாக்டர் ஸ்கிலேட்டர் (SCLATER) முதலியோர் கூறும் தேசமான லெமூரிய தேசத்தினது பாகமான மலேயநாடுகளை வென்று கீர்த்திபெற்றவருமான கோப்பரகேசரிவர்மன் ராஜேந்திரசோழன் கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து உத்தரவிட்டது எனப்பொருள்படும்.

இப்படி இந்தியாதேச முழுதும் ஜயித்துவந்த சோழனால் உண்டாக்கப்பட்ட இக் கங்கைகொண்ட சோழபுரம் அவனுக்குப் பிறகு வந்த பலவரசர்களாலும் இராஜதானியாகக் கொள்ளப்பட்டதாகத் தெரிகிறது. இவனது பெண்வயிற்றுப் பேரனை முதலாங் குலோத்துங்கன் இங்கிருந்து ஆண்டிருக்கிறான். இத்தகைய பலவரசர்களாண்ட இந்தப்பட்டினத்திற்கு வந்த அழிவு என்னகாரணமோ அறியோம்.

இலக்கணவிளக்க பரம்பரை,

திருவாரூர், சோமசுந்தரதேசிகன்.

உ

சிவமயம்.

# சேதுபுராண அரும்பதவிளக்கம்

(கoக-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

ருo. பொற்குவைமாடு மணிக்குவால்கள் நின்றிலங்கிடும்.

௫௧. ஆகாய மந்தரத்திலிருக்குமா. உவைகள் தூரத்திலிருத்தலினால் கண்களுக்குத் தஞ்சமில்லன போலத்தோன்றுகின்றன. பின் கந்தமாதன மலையிலிருப்பதே யுண்மை.

௫௨. மான்குட்டிகளின் கூட்டம் புலிகளின் முலைப்பாலை யுண்ணும். யானைக்கன்றுகள் சிங்கங்களுடன் றுயிலும். எரிகின்றவெயிலுக்கு இளமையாகிய சருப்பங்கள் இம்மலையில் விஷ்ணுவினது வாகனமாகிய கலுழனின் நிழற்பரப்பி லொதுங்கும்.

௫௫. புல்லோந்த புதலினாற் பொதிந்து மேலெழாத பல்லிலைந்த விடத்தை யுடைய சருப்பங்கள் பாதலத்திற் புகுங்கல்லை.

௫௬. கரியன - நீலமாயின.

௫௮. கோம்பி - ஓந்தி. எட்டிப்பறவை - சரபம். கட்டுடற்றினவு - கட்டுப்பாடான உடலின் றினவு.

௫௯. வேடர்களுக்கஞ்சிச் செல்லுமானை யந்த வேட்டுவப்பெண்கள் செல்லும் வழியிடத்திற் பொருந்திச் சுற்றத்தைப்போலவிருக்கச் செய்கையால் அஃது அயலிடத்தில் அவ்வேடர்விடும் பார்வை மிருகம்போலும்.

௬௩. அம்மலையில் வெயிலால்வாடிய விளங்குகின்ற இளமையாகிய மென்றளிராடுகின்றகொடியும், வெற்றிவிளங்குகின்றயாகாக்கினியில் வல்ல மகத்துவம்பொருந்திய தவத்தையுடைய திருமங்கலிய மிழந்த பெண்களுமில்லை.

௬௪. சுகம் - கிள்ளை.

௬௫. நாடோறுஞ் சூரியன் மறையச்சிவந்து ஆகாயம் சரீரங்கருகலால்.

௬௭. குற்குலுத்தாவமுற்று - குங்குமமரத்திற் காட்டழல் பொருந்தி; குய் - நறும்புகை.

௬௮. வம்பலர் - புதியோர்.

௬௯. அடையபயில் - இலைபொருந்திய.

எ௦. மலர்க்கண்ணிருபகவர் - பிரமவிஷ்ணுக்கள்.

எக. ஏகிமீழ்வது - இறந்து பிறப்பது.

எஉ. அதன் நிலையோ - நிலையாகும்.

எங. இலைத்தொழில் பொருந்திய விசாலமாகிய சூலத்தையுடைய சிவபிரான் காரணமின்றி யெல்லாந் நிலைத்தலை வேண்டிலர். நெடிய மேருமலையும் வில்லாகவளைந்தமையால் உலகத்திற்காதாரமன்று. உலகமலையாது அமைந்தது இம்மலைபோலும்.

எரு. ஒழிதலில்லாத நெடுங்கணக்கை யோதுகின்ற சிறுவர்கள் வாவென்றுவென்று (வா) என்னுமெழுத்தைச் சொல்ல மலையின் பக்கத்தில் வருவர். போவென்றுவென்று (போ) என்னு மெழுத்தைச் சொல்ல யாரோவெம்மைப் போவென்று கூறினரென்று தேருவர். கூவென்றுவென்று (கூ) என்னுமெழுத்தைச்சொல்ல வவ்விடத்திலோ கூப்பிடென்பர்.

எஅ. அசைகின்ற அலை அடிப்பலையிற்றுக்குதல் தோணிகள் விளங்குகின்ற கடலுக்கரசனாகிய வருணன் விளங்குகின்ற பூவையிட்டு ஓசையையுடைய மந்திரங்களை யுச்சரித்துக் கந்தமாதன மலையாகிய சிவனுடைய பாதங்களை யபிஷேகஞ்செய்தல் போலும்.

எக. முறிபடு - முறிக்கப்பட்ட; விற்கோடி - தனுக்கோடி. தெறிகெடவோடல் - தெறித்துக்கெட்டோடல். தெண்டிரை நறுநுதல் - சமுத்திரமாகிய பெண்.

அ௦. வேகம்பொருந்திய பல தோணிகள் தெற்றுமரங்களிற்றுக்குதலும்; கந்தமாதனத்தையடைதல் - பிரமனாற் சிருட்டிக்கப்பட்ட நிலையானவுயிர்களுடைய அகந்தையைச் சிவபெருமான் றிருவருள் வேரறக்கெடுத்தலும் அவைகள் சிவபிரான் றிருவடிகளைச்சேருதல் போலும்.

அக. சமீபமாகவரும் போழ்திற்றெறிகின்ற பல திக்குகடோறும் வருகின்ற தோணிகள்.

அஉ. நான்குதிக்குகளினும் தோணியாற்சேர்ந்து அளவிறந்த வேறானசாதிகள் கலந்துபின வேறாய்நீங்குதல் சங்காரகாலத்தில் ஓரிடத்திற் சகலவுயிர்களுஞ்சேர்ந்து பின் சிருட்டிகாலத்திற் பிரிந்துபோந் தொடர்பைக் காட்டும்.

அங. பனைகள் தம் மேலிடத்தைப் புகலாகவுடைய ஆகாயத்திலுள்ள வுயிர்களைக்காத்தலால் அகன்ற பூமியைத்தாங்கிய சேடனை நிகர்க்கும்.

அச. புன்னைமீது மரகதந் நெருங்கிற்றென்று நல்லமுத்துத்தானரும்பின்வண்ணமாய்த் தோன்றியபோலும் வெண்முகையின் றோற்றம்.

அரு. ஞாழல் - குங்குமமரம்.

அஅ. துறைத்துள்ளிவீழ்ந்து - துறையிற் றுள்ளிவீழ்ந்து.

அகூ. சூள் - சபதம்.

கூo. வந்துபடிகின்ற முகில் தழுவலால்-தீஞ்சுவையை மருவிய ஆற்றுநீர் கடலிற்புகுந்து வரைப்படைத்தன. முன்னரே ஆசாரியர் பாசத்தைக்கெடுக்கத் திருப்பவுஞ் சம்பந்தத்தைப் பொருந்துவோர் அத்தவற்றிற்றீர்வரா ?

கூக. கலவர் - திமிலர்; மீனெறிசாலம் - மீன்வலை; தூநிறக்குருகு - கொக்கு.

கூஉ. காயலின்கூலம் - கழிக்கரை; உவனகம் - பள்ளம்.

கூங. சேதுவாம் - சேதுவிலாகின்ற.

கந்தமாதனச்சிறப்பு முற்றிற்று

## நைமிசாரணியச்சிறப்பு

உ. நான்முகங்கொண்டோரென மாற்றுக.

ங. செயலால் - அச்செயலாலே.

ரு. காமம் வெகுளி மயக்கமென்னு மும்மையுஞ் சொல்லப்படும் இறுதி தோற்றமும் என்னுமிருமையும்.

கக. பனசமாண்கனிமது - பலாவின் மாட்சிமைபொருந்திய கனியின்றேனை; சூதநெட்டிலைக்கொடு-மாவின் நெடிய இலைகொண்டு; சுருதிசூழ் - சுருதியாய்ச்சூழ்ந்த ; தும்பிநின்றிசைப்ப-வண்டுகள்நின் றொலிப்ப ; விட்டு - சொரிந்து.

கஉ. உடசம் - பர்ணசாலை.

கங. தாபதம் - பர்ணசாலை ; என்கூற்று - என்கின்றகூற்று.

கச. முகையைக்கொண்ட கொடி பிறரோடு முல்லைக்கொடிக் கும் விளங்கும். நீரைச்சொரிந்து முனிவர் வளர்த்திடுஞ்செயல் முல்லை மன்மதபாணமாதலின் முனிவர்க்குப் பகையாம்.

கரு. அந் நைமிசத்துள்ள முனிவரிருப்பிடத்தில், வற்கலையை யுடைய முனிவர் மனத்துளிருக்கும் சிவனுடைய சடையிற்கிளர் கின்ற சசிக்கலையும் நான்குவேதங்களாய நாவிற்றொடைகொள்கின்ற சொற்கலையும் மாக்கலையுமுள்ளவென முடிக்க.

கசு. அழகிய நைமிசவனத்து வாழ்கின்ற பெரிய தவத்தலை வர் ஆணவமலத்தைப்போற் கரந்ததென்று அரியகிழங்கையகழ்வர் - குற்றம்பொருந்திய மனத்தைப்போற் கவர்த்ததென்று கொழுமை யாகிய சமித்துக்களை ஒடிப்பர். காணும் ஊழ்வினையைப்போற் கனிந் ததென்று அருங்கனியைக் கவர்வர்.

உ0. நாடல் - தேடல். திருவருளானது கதியைத்தெரிக்க. நாகர் - பிரம விட்டுணுக்கள்.

உக. மனம் வாக்கு காயம் முழுதும் சிவனுடைமையாகவவரறி யினும் சாருவாகனன் முதலியோர் மதங்களைச் சிலர்கூற வேறுசிலர் சார்ந்து புறச்சமயங்களை மறுக்கும் நூல்களைக் கூறலால் வைதிகர் கள் சைவர்களன்றியாரும் வாழ்வர் நைமிசத்தென்று சந்தேகமுறும்.

உஉ. சிவபெருமானலாளப்படுந் தவத்தர்கள் ஸ்நானஞ்செய்த நீர் புலரத் தடாகக்கரையில் நிற்க ஒளிபொருந்திய சடைக்கொழுந் தின் நுனியில்வந்து வீழ்கின்றதுளிகள் உதராக்கினியை முடுக்கலால் மூடப்படும் சுழுமுனை திறந்தவழியால் புருவமத்தியின் மிகும் அரிய வமுதுபொங்கி மேல்வழிய விழுகின்ற நுண்ணிய துணிகளை நிகர்க் கும்.

உச. விட்டுணு, பிரமா, இந்திரன், தேவர்கள், நிலவுலகத்தரசர்கள் என்னுமிவர்களுடைய வாழ்விற்கியைந்த தவத்தைச்செய்து ஒழிந்தவர்கள் ஆகியவவர்களுடைய சீர் சொலற்கரியதாம். அங்ஙனமாகவு மியைந்த மகாதவமேயன்றி வேறொன்றை யறிவால்விரும்பாத முனிவர்விரும்பிச் சுத்தமாய் வாழ்கின்ற நைமிசத்தின்பெருமையை யாவர் சொல்லவல்லர்.

ஆ. மு. சோமாஸ்கந்தபிள்ளை.

## * பள்ளிக்கூடத்துப்பிள்ளைகள் புஸ்தகங்கள் வாசிக்கும்போது கவனிக்கவேண்டிய விதிகள்

அமெரிக்காவிலுள்ள நியூயார்க்குப் பள்ளிக்கூடங்களிற் பின்வரும் விதிகள் அச்சிட்டு ஒட்டப்பட்டிருக்கின்றன.

"மங்கலான வெளிச்சத்தில் எப்பொழுதும் படிக்காதே. படிக்கும்போதெலாம் தலையை நிமிர்த்துக்கொண்டுபடி (குனிந்து படியாதே).

உனக்கு உன் கண்கள் எல்லாப்புஸ்தகங்களைக் காட்டிலும் மேலானவைகள். நீ படிக்கும் புஸ்தகத்தை உன் முகத்தினின்று பதினான்கங்குலதூரத்திற் பிடித்துக்கொண்டு படி. வெளிச்சம் உனக்குப் பின் பக்கத்திலிருந்து புஸ்தகத்தில் விழும்படியாகவிருந்து படி.

உனது பாதுகாப்பும் நீ மேலானநிலைமைக்கு வருவதும் உன் கண்ணைச் சார்ந்திருக்கின்றன; ஆகையால், நீ அவைகளைப்பேணவேண்டும். நீவாசிக்கும்போது இடையிடையே உன் முகத்தைச் சிறிது நேரம் புஸ்தகத்தினின்றுந் திருப்பி இளைப்பாறச்செய். வெயில் நேராகப் புஸ்தகத்தில் விழும்படியாக வைத்து ஒருபொழுதும் வாசிக்காதே.

இராத்திரிப் படுக்கப் போகையிலும், விடியற்காலத்திலுங் கால்களைச்சலத்திலுற்கழுவு. நல்ல தெளிவான வெளிச்சத்திலே படி. படிக்கும்போது வெளிச்சத்தை யெதிர்நோக்கிக்கொண்டு படிக்காதே".

* 1911-ம் ஞு ஜூலைமீ 31உ பிரசுரமான ஹிந்து(Hindu)பத்திரிகை 3-ம் பக்கத்திலிருந்து எடுத்து மொழிபெயர்த்தது.

# ஆசார விளக்கம்

(௩௪௫-ம் பக்கத்தொடர்ச்சி)

ஆதலின், "உடம்புதேய்க்கும் வஸ்துக்கள், ஸ்நானஞ்செய்தநீர், மூத்திரம், மலம், ரத்தம், மூக்குச்சளி, எச்சில், வாந்தி, உமிழ்ந்த வஸ்து ஆகிய இவைகளை மிதிக்கலாகாது" என்று ஆரியர் கூறிய கட்டளையை இக்காலத்தில் நாம் மனத்தில் எப்பொழுதும் ஞாபகமாக வைத்துக்கொள்வது நலமாகும். ஒருவருடைய வியாதி மற்றொருவருக்கு ஒட்டிக்கொண்டு அபாயம் விளைவிக்கக்கூடுமென்பதை வற்புறுத்தும் பொருட்டு, வண்ணான் "ஒருவருடைய ஆடைகளை மற்றொருவருக்குத் தவறாகத் திருப்பிக்கொடுக்கக்கூடாது. ஆடைகளின் சொந்தக்காரரைத் தவிர வேறெவரும் அவைகளை யுபயோகிக்க இடந்தரக்கூடாது" என்று சட்டமிட்டிருக்கிறார்கள். ஆரியாவர்த்தத்திலும் "வண்ணார்விஷயங்கள்" கவலைக்கிடமாக இருந்தனபோலும். அப்பொழுது, ஆண்பிள்ளைகளின் ஆடைகளை அவர்கள் கல்லின்மீது அடித்து அவற்றிற் பலதொளைகள்செய்துகொண்டுவந்து கொடுக்கிறார்கள் என்று வீட்டிலுள்ள ஸ்த்ரீகள் குறைகூறக் காரணமிருந்திருக்கலாம். ஏனெனில், வண்ணான் "தன் யஜமானனுடைய துணிகளை வழுவழுப்பான சால்மலி மரப்பலகையின்மீது மெதுவாகத் துவைக்கவேண்டும்" என்று கட்டளையிட்டிருக்கிறார்கள். வியாதி நேர்ந்த காலத்தில் தனித்தனியே ஒதுங்கியிருப்பது அவசியமென்று ஆரியர் உணர்ந்துள்ளார். ஆகவே, ஆடைகள், ஆஹாரம், ஆசௌசத்திற்கு மூலகாரணமானவர்களுடனும் அவர்களுடன் சம்பந்தப்பட்டவர்களுடனும் விவகார சம்பர்க்கங்களை ஒழித்தல் ஆகிய இவைகளைப் பற்றி விவரமாகக் கட்டளை விதித்திருக்கிறார்கள். அஃதாவது, இக்காலத்து தேகாரோக்கியசாஸ்திரி சொல்லுமாறு, நோய்க்கிடமானவருடனும், நோய்க்கிடமானவர்களென்று அனுமானித்து ஒதுக்கப்பட்டவர்களுடன் சம்பந்தப்பட்டதாக நினைப்பதற்குக் காரணமுள்ளவர்களுடனுஞ் சம்பர்க்கம் ஒழிக்கவேண்டுமென்று விதிகள் செய்திருக்கிறார்கள்.

அன்றியும், தூங்கும்பொழுது ஒருவருக்கொருவர் சிறிது தூரம் இடம்விட்டுப் படுத்துக்கொள்ளவேண்டும் என்று அவ்வளவு கண்டிப்பாக ஆசௌசவிதி ஏற்பட்டிருக்கிறது. ஆசாரவிதிகளைவிட நிஷேத விதிகளில் நமது சித்தாந்தம் நன்றாகவிளங்குகின்றது. பிணங்கள் முதலானவைகளிலிருந்து தொத்துவியாதிக்கிடமான (ஒருவரிடத்திலிருந்து மற்றொருவருக்குப்பற்றக்கூடிய வியாதிகளையுண்டாக்குகிற) வஸ்துக்களுடன் சம்பந்தம் எங்கே நேர்ந்துவிடுமோவென்று ஆரியர்கள்மிகுந்த பயங்கொண்டவர்களாக இருக்கவேண்டும். சிரமசாத்தியமான ஸ்நான விதானங்களும், கழுவிச் சுத்திசெய்யும் முறைகளும், பிறகு காக்கும் ஸூதகமும் பிரயோஜனமில்லாத வெறுஞ் சடங்குமுறைகளாகா. இல்லாவிடில், ஆசௌசக்கிரம நிர்ணயமும் அதற்குக் காலப்பிரமாணமும் ஏற்பட்டிரா. ஓர் உறவினன் வியாதியினால் இறந்தாலும் பலாற்காரத்தினால் இறந்தாலும் வித்தியாசமிராது (கிரமமான மரணத்திற்கு ஓர் ஆசௌசவிதியும் அபமிருத்தியுவுக்கு வேறு ஆசௌசவிதியும் ஏற்பட்டிராது). மரணம் ஒருமாதத்திற்கு முன்நேரிட்டிருந்தாலும்,ஒருவருஷத்திற்குமுன் நேரிட்டிருந்தாலும் ஸூதகங்காப்பதில் வித்தியாசம் சொல்லியிருக்கமாட்டார்கள்; உள்ளூரில் நடந்த மரணத்திற்குந் தூரதேசத்தில் நேர்ந்த மரணத்திற்கும் வேறு வேறாக ஆசௌசவிதி ஏற்படுத்தியிருக்கமாட்டார்கள். இந்த நுட்பமான வித்தியாசங்களையும் ஆசௌச விவரங்களையும் ஏற்படுத்தியது தொத்துவியாதி அணுகாதிருக்குமாறு ஒதுங்கியிருக்குங் காலத்தையும் ஒதுங்கியிருக்கவேண்டிய விதத்தையும் நிர்ணயிக்கும் பொருட்டேயாமென மனுதர்ம சாஸ்திரமும் விஷ்ணுஸ்மிருதியும் தெளிவாக விளக்குகின்றன.

இதுவுமல்லாமல், மரணகாரணம் சந்தேகத்திற் கிடமாக இருக்கின், அதனால் வியாதியணுகுமோவென்று சந்தேகமுண்டாயின், ஸூதகங் காக்கவேண்டிய பத்துநாள் என்னும் காலங்குறுக்கப்பட்டிருக்கிறது; ஸூதகங்காக்கவேண்டியதே யில்லையென்புதுமாத்திரம் இல்லை; ரோகபீடிதமான இடத்திலிருந்து வருகிறவர்களை "நோய்கொண்டவர்களா" எனக் கவனித்துப்பார்ப்பதற்காக நிறுத்திவைத்திருக்கும்பொழுது இக் காலத்து தேகாரோக்கிய சாஸ்திரி விதிப்பதுபோலவே ஆரியரும் விதித்துள்ளார். உதாரணமாக:—

"தூரதேசத்தில் வசிக்கும் உறவினனொருவன் இறந்தான் என, அவன் இறந்து பத்துநாளைக்குள் கேள்விப்படுகிறவன், அந்தப்பத்து நாளில் (ராப்பகல்கள்) பாக்கியிருக்கிற தினங்களில் மாத்திரம் ஸூதகங் காக்கவேண்டும்."

இந்தச் சந்தர்ப்பத்தில் ஸூதகங்காப்பதென்ற ஒழுக்கினைப் பது இழவோலைகொண்டுவரும் ஆள்வந்து சேருங்காலத்தை அனுசரித்திருக்கும். அக் காலத்தில் இப்பொழுதுபோலத் தபால் அனுகூலங்கள் இருந்திரா. இறந்து பத்துநாள் ஆகியிருந்தால் இழவோலை கொண்டுவருகிறவன் மூலமாக வியாதிசம்பந்தமான அணுக்கள் வந்து சேருமோவெனப் பயப்படவேண்டியதில்லை; ஆகையால் பின்வரும் விதிகள் ஏற்படலாயின:—

"இறந்து பத்துநாள் கழிந்திருந்தால் மூன்று பகலும் இரவும் ஸூதகம் காக்கவேண்டும்; இறந்து ஒருவருஷமாகியிருந்தால், தலைமுழுகுவதனால் தீட்டுப்போம்."

தொத்துவியாதியினால் மரணம் சம்பவிக்கவில்லையென்று நிச்சயமாகத் தெரிந்தால், உதாரணமாக, சண்டையிலாவது தற்கொலையினாலாவது இறந்துபோயிருந்தால் அப்படிப்பட்டவனுடைய குடும்பத்தவருக்குத் தீட்டில்லை.

சுத்திகரிப்பதற்கு,—நீரிலுள்ள ரோகஜனகக் கிருமிகளை நசிக்கச் செய்வதற்கும் வியாதி பரவாமற் செய்வதற்கும் இயற்கையிலுள்ள சக்திகளையே ஆரியர் உபயோகித்து வந்தார்களென்று முன்னரே சொல்லியிருக்கிறேன் அப்படி இயற்கைச் சக்திகளை உபயோகிக்கும் விதங்களை அவர்கள் எவ்வளவு நன்றாக அறிந்து அனுஷ்டித்து வந்தார்களென்பது மேலே குறிப்பிட்டுள்ள முறைகளினாலேயே நன்றாக விளங்கும். அம்முறைகளாவன:—வண்டலை அடியில் தங்குவித்தல், அலைசுவதனாற் பிராணவாயு ஊட்டுதல், நீரோட்டம், (ஓடுவதனால் நீரில் க்ஷாரங் கூடுகின்றது, மற்றுமுள்ள மாறுபாடுகளுண்டாகின்றன வென்பது கருத்து), தாராளமாகக் காற்றுவீசுவதனால் நீரிற் பிராணவாயு கலத்தல், சூரியபுடம் ஆகிய இவைகள். இவையனைத்தும் இக் காலத்துத் தேகாரோக்கிய சாஸ்திரக் கிரந்தங்

நூலில் விவரிக்கப்படுவனவே. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களே பரமபாவன சாதனங்களென ஆரியர் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய சுத்தீகரண முறைகளைக் கவனிக்குமிடத்து அவற்றில் பஞ்சபூதங்களொவ்வொன்றும் பிரபல சாதனமாகக் கையாளப்பட்டிருப்பதைக் காணலாம். முத்தமிடுவதனால் தேகாரோக்கிய பங்கம் நேரிடுமோவென முக்கியமாகத் தர்க்கித்துக் கொண்டிருக்கும் இக்காலத்தில், பூர்வத்து ஆரியர்கள் "ஸ்த்ரீயின் வாய் எப்பொழுதும் பரிசுத்தமானது" என்று சித்தாந்தப்படுத்தியிருப்பது நாம் கவனிக்கத்தக்கது.

அன்றியும், அந்தஸ்த்ரீ கிழவி, சிறுபெண், ரூபவதி, அழகில்லாதவள் என்று எவ்வித வித்தியாசமுங் குறிக்காமல் பொதுவாக ஸ்த்ரீயின்வாய் எப்பொழுதும் சுத்தமானதென்று அவர்கள் சொல்லியிருப்பதனால், அவர்கள் ஸ்த்ரீகளுக்கு மரியாதை செய்வதிற் பிரியப்பட்டவர்களே என்பது விளங்குகின்றது. கசுமலங்களைக் காக்கும் விஷயத்தில் தரையில் மண்ணைப்போட்டு அதன்மீது மலங் கழிக்கவேண்டுமென்று அவர்கள் விதித்திருப்பதனால் துர்க்கந்தத்தையுந் துர்வாயுவையும் போக்கும் சக்தி மண்ணுக்கு இருக்கிறதென்று அவர்கள் தெரிந்திருந்தார்களென்று அறிகிறோம்.

"சுத்தப்படுத்தவேண்டியவைகளை மண்ணினாலும் ஜலத்தினாலுஞ் சுத்தப்படுத்தவேண்டும் * * * வீடு பெருக்குவதனாலுஞ் சாணிகொண்டு மெழுகுவதனாலும் அல்லது வெள்ளையடிப்பதனாலுஞ் சுத்தமாகின்றது."

லோஹ பாத்திரங்களைப் புளியினாலாவது காய்ச்சுவதனாலாவது சுத்தப்படுத்தவேண்டும். மற்றுமுள்ள முக்கியமான சுத்தீகரணசாதனங்களுள் வெயிலையுங் காலத்தையும் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இக்காலத்து தேகாரோக்கிய சாஸ்திர சித்தாந்தங்களை அறிந்தவர்கள் மேலே சுலபமாகச்சொல்லிய இரண்டு சாதனவகைகளில் எவ்வளவு விசேஷம் அடங்கியிருக்கிறதென்பதை அறிந்து ஆனந்திப்பார்கள். உண்மையாகவே, துரைத்தனத்தார் ஆமோதித்து இப்போது வழங்கிவருகிற 'கொள்ளைநோய் அணுகாச் சாதன'ங்களுள்

நெருப்பு, சூரியன், காற்று, காலம் ஆகிய இவைகளே முக்கியமானவை களாக இருக்கின்றன. பரவும் வியாதிகளைத் தடுப்பதற்கான ஆரோக்கிய விதிகளுள், அம்மை குத்துவதனால் வியாதிவராமல் தடுப்பதைப் பற்றி ஆயுர்வேத விஜ்ஞான சாஸ்திர காரரான தன்வந்திரி யவர்கள் சொல்லியதைவிட மேலானது மற்றொன்றில்லை. இவ் விஷயத்தில், ஜென்னர் என்பவர் புதிதாகக் கண்டுபிடித்தது அவரளவில் உண்மையே யெனினும், அதை ஆரியர்கள் முன்னரே கண்டறிந்திருந்தார்கள் என்பது தெளிவாகின்றது. அம்மைகுத்தும் நிணநீரானது அம்மைப்பாலேயே பசுவின் உடம்பிலேற்றி அதிலிருந்து எடுக்கப் பட்டதென்று சொல்லியிருக்கிறார்கள். அம்மைகுத்தி வியாதிகளைத் தடுக்கும் வித்தையை முதன்முதற் கண்டுபிடித்த ஆரியர்களின் வமிசத்தவர்களான இக் காலத்து இந்தியர்கள் இப்போது கொள்ளை நோயைத் தடுப்பதற்காக அம்மைகுத்துவதை ஏற்றுக்கொள்ளத் தயங்கக்கூடாதென்று நான் சொல்லவும் வேண்டுமோ? இப்பொழுது அங்குமிங்குந் தோன்றுவதாக நாம் அடிக்கடி கேட்டு விசனிக்கும் கொள்ளைநோயைப்பற்றிச்சொல்லுமிடத்து நாம் இதுவரையில் கண்டுபிடித்தவைகளுள் உத்தமமான பாதுகாப்பு முறையாவது, கொள்ளைநோய் தோன்றியவுடனே அந்த வீடுகளைத் தகனமே ஒழித்துவிட்டுப்போவதுதான். இதேமுறை ஆரியரது மந்திரமொன்றிற் குறிக்கப்பட்டிருக்கிறது. நான் இதைப்பற்றி 1898-ஆம் வருஷம் மார்ச்சு மாதத்தில் வெளியிட்டுச் சொல்லியதுமுதல் இந்த மந்திரத்தை அநேகர் வழங்கிவருகிறார்கள். இந்த மந்திரத்தை முதன் முதலில் எனக்கு எடுத்துச்சொல்லியவர் பல்லாரிஜில்லா ஹொஸபேட்டையிலுள்ள வி. ஹநுமந்தகௌடராவர். அந்த மந்திரத்தின் பொருள்:—

தேவி சொல்லியது:—"சதுர்முகப் பிரஹ்மாவின்கட்டளைப்படி இந்திரனும் நானும் மற்றுமுள்ள தேவதைகளும் பற்பல கிராமங்களிலுள்ள ஜனங்களிடம் போவோம். இவ் விதமாகக் கிராமந்தோறும் சென்று துர்ஜனங்களைக்கொன்று கடைசியில் பிரஹ்மாவினிடம் போய்ச்சேர்வோம். புத்திசாலிகள் என்னுடைய வரவையறிந்து சாஸ்திரங்களை ஓதுவார்கள், வெகுஜாக்கிரதையாக (ஆசாரமாக) இருப்பார்கள், இன்னும் பலபல காரியங்களைச் செய்வார்கள், முக

ட்டியிருந்து எலிகள் விழுந்து குதித்தோடி இறந்த க்ஷணமே அவர்கள் பந்துமித்திர ஸமேதராக வீடுகளைவிட்டு வனத்திற்கேகுவார்கள், அங்கே அவர்கள் சடங்குகளெல்லாம் செய்து மஹாமாரிகா மந்திரங்களை ஜபித்து ஸ்தோத்திர பாடங்களை ஓதுவார்கள்."

"வனத்தில் நீர்வளமிருக்குமிடத்தில் அவர்கள் உட்காருவார்கள். தேவியின் விக்கிரகத்தை எதிரில்வைத்துக்கொண்டு, தூபதீபங்கள் காட்டி, தினந்தோறும் சாஸ்திரத்தின்படி கிரமமாகப் பூஜைசெய்வார்கள். பிராமணர்கள், பந்துக்கள், சிநேகிதர்கள், வேலைக்காரர்கள் எல்லோருங்கூடி அக்கினியை வளர்த்து மஞ்சட்பொடிகலந்த அன்னம்(பொங்கல்),நெய்,சமித்துக்கள் ஆகிய இவைகளைக்கொண்டு ஹோமம் செய்வார்கள்."

"மேற்சொல்லியபடி மிகுந்த பக்தியோடு தேவியைப் பிரார்த்தித்தபிறகு,தேவியின் தியானத்திலேயே எப்பொழுதும் அமர்ந்தவர்களாகி அவர்கள் தங்களுடைய பந்துக்களுடன் போஜனம் செய்வார்கள். சிலநாளைக்குப்பிறகு, அவர்கள் தங்கியிருக்கும் வாஸஸ்தலங்களின்மீது காக்கைகள்வந்து உட்கார்ந்தால், அவர்கள்காகசாந்தி (காக்கைகளுக்கான சடங்கு) செய்து தங்களுடைய சொந்தவீடுகளுக்குப் புறப்பட்டுப்போவார்கள். அவர்கள் திவ்யாலங்கார பூஷிதர்களாகித் தங்களுடைய குடும்பத்தவர்களையும் பிராமணர்களையும் அழைத்துக்கொண்டு சுபதினத்தில் சுபலக்கினத்திற்புறப்படுவார்கள். அவர்களுடைய இல்லங்களில் (வீடுகளில்) பிராமணர்களைக்கொண்டு வேதபாராயணங்களும் சாந்தி ஹோமமும் செய்விப்பார்கள்."

வியாதி பரவுவதற்கு அறிகுறியாக எலிகள் விழுந்திறப்பதைச் சொல்லியிருப்பதனால், அது 'பிளேக்' என்னுங் கொள்ளைநோயாகவே இருக்கவேண்டும். இந்த வியாதியின் பெயர் இன்றைக்கும் கர்வால்தேசத்தில் மஹாமாரி என்றே வழங்குகிறது. அங்கே அநாதி காலமாகக் கொள்ளைநோய் வியாபித்திருந்திருக்கிறதென்பது பிரஸித்தமான விஷயம். பந்துமித்திர பரிஜனங்களுடன் வீடுகளைப்பூர்த்தியாக ஒழித்துவிட்டு, ஜனங்கள் அதுவரையில் வசித்திராத சுத்தமான தரையை நாடிச்சென்று, காலக்கிரமத்தினாலும் புண்ணியாஹவசன ஹோமாதிகளினாலும் வீடுகளைச் சுத்திசெய்தபிறகு அவற்றிற்

குத் திரும்பிவர வேண்டுமென்னும் விதியைக் கவனித்தால், இந்த விதியையே இந்தியாவில் இப்பொழுது ஆங்காங்குள்ள மாகாணத் துரைத்தனத்தார் கொள்ளைநோய் கண்ட கிராமங்களில் நிறைவேற்றப் பிரயத்தனப்படுகிறார்களென்று அறிகிறோம். இந்தவியாதிஅணுகாதிருப்பதற்காக இக்காலத்திற்செய்யும் சிகிச்சைகளும் நிர்ஜீவவஸ்துக்களைச் சுத்திசெய்வதற்குச் சாஸ்திரங்களில்விதித்திருக்கிறபடியே ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன; உதாரணமாக, வீட்டில் தரையைச் சுத்திசெய்யவேண்டுமானால், அதைச் சுரண்டியெறிந்து வேறுமண் பூசவேண்டும், அல்லது வைக்கோல் முதலியனபோட்டுத் தரையைச் சுடவேண்டும்; நோயாளிகள் இருந்த கட்டிடங்களில் மற்றவர்கள் போயிருப்பதனால் அவர்களுக்கு வியாதிவராமற்காக்கும்பொருட்டும் வியாதியை யுண்டாக்கத்தக்க அணுக்கள் கட்டிடங்களில் தங்காமலிருக்கும்பொருட்டும், கட்டிடங்களில் வெயிலும் காற்றும் நன்றாக அடிக்கும்படி செய்யவேண்டும்; வஸ்துக்களுள் (பண்டங்களுள்) எவற்றைபேனும் சுத்தப்படுத்தவேண்டுமானால், சிலவஸ்துக்களைக் காய்ச்சிச் சுத்தப்படுத்தவேண்டும், சிலவற்றை வெந்நீரினாற்கழுவிச் சுத்தப்படுத்த வேண்டும், சிலவற்றைக் காரசாரமுள்ள ரஸாயன பதார்த்தங்களினால் சுத்தப்படுத்தவேண்டும்—என்று விதிகள் ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

உண்மையாகவே, கொள்ளைநோயை (பிளேக்வியாதியை)த்தடுப்பதற்கான சுகாதாரவிதிகள் தர்மஸிந்து என்னுங் கிரந்தத்திற் சுருக்கமாயும் நன்றாயும் எடுத்துரைக்கப் பட்டிருக்கின்றன. இது நவீன கிரந்தமேயெனினும், இக் காலத்துக் கொள்ளைநோய்க்காக நாம் செய்துவரும் காரியங்களை யனுசரித்து எழுதப்பட்டதன்று. இந்தக்கிரந்தத்திற் சொல்லிய விஷய ஸங்கிரஹமாவது: 'குடியிருக்கும் வீடுகளை விட்டு அகல்வதனாலும், ஸ்தோத்திரபாடம், ஜபம் முதலிய பிரார்த்தனைகளினாலும், சுட்டுப்பொசுக்குவதனாலும் கொள்ளைநோய் தணியும்' என்பதாம்.

சுகாதாரவிதி நுட்பங்களைப்பற்றி ஆரியர்களுடைய சாஸ்திரங்களிற் சொல்லியபடி நடத்தாததனால் இக் காலத்து இந்துக்கள் மிகுந்த கஷ்டத்திற்கும் மரணத்திற்கும் உள்ளாகிறார்களென்று சொல்லி

ருக்கிறேன். இதற்குப் பிரத்தியக்ஷமான திருஷ்டாந்தம் வேறொன்றும் வேண்டியதில்லை; துரைத்தன அதிகாரிகளின் புத்திவாதத்தையும் மேற்கொள்ளாமல் தங்களுடைய முன்னோர்களின் அனுபவ சித்தாந்தங்களை யலக்ஷியஞ்செய்வதனால் கிராமம் கிராமமாக நாசமாய்க்கொண்டு வருவதே போதும். இந்த ராஜதானியிற் கொள்ளை நோய்கண்டு இப்பொழுது அநேகநாள் ஆய்விட்டது; அது கண்டவுடனே வீடுகளை விட்டகன்று, மேற்சொல்லிய சாஸ்திரங்களிற் கூறியவாறு, காடுகளிற் சுத்தமான பிரதேசங்களிற் போயிருப்பதனால் மிக்கநற்பயன் விளைவதைக் கண்டிருக்கிறோம்; சுலபமாயும் பிரயோஜன காரியாயுமுள்ள இந்த முன் ஜாக்கிரதையை மேற்கொள்ளாதவிடங்களில் வியாபாரநஷ்டமும் உயிர்ச்சேதமும் உண்டாயிருப்பதையும் கண்டிருக்கிறோம். ஆயினும், ஒவ்வொரு ஹிந்துவும் ஒப்புக்கொள்கிற சாஸ்திரங்களில் ஸ்பஷ்டமாக விதிக்கப்பட்டிருப்பதைவிட அதிகமாக இக்காலத்துச் சுகாதார சாஸ்திரத்தின்படி ஏதாவது, இந்தக்கொள்ளைநோய் ஆபத்தை யுத்தேசித்து, செய்யவேண்டியிருந்தாலும், அது வர்ணாசாரத்திற்கு விரோதமென்று நினைக்கவும், அதனைச்செய்யாமல் தடுக்கவும் தகுந்தகாரணமொன்று மில்லையென்பது எனது துணிபு.

மனுவின் தர்மசாஸ்திர விதிகள் முற்காலத்து (Medes) மீடியர்களுடைய விதிகளையும் பாரஸீகர்களுடைய விதிகளையும் போன்றவையல்ல. ஒருவருடைய அனுகூலத்தின் பொருட்டாவது பொதுவாகப் பலருடைய அனுகூலத்தின்பொருட்டாவது காலவசத்தினால் விதிகளை மாற்றவேண்டி வரக்கூடுமென்பதையுணர்ந்து மனுவானவர் அதற்கும் இடம்வைத்திருக்கிறார். கெட்ட எண்ணங்கொண்டு தர்மசாஸ்திர விதிகளைக் கண்டிக்கக்கூடாதென்று சாற்றினரேயன்றி, "நியாயமுறையினாலும் அனுமானத்தினாலும்" சாஸ்திரங்களின் கொள்கைகளுக்கு விசுவாசபூர்வகமான நல்லெண்ணத்துடன் அருத்தஞ் செய்யலாமென்று மனு உத்தரவு கொடுத்திருக்கிறார்; காலவித்தியாசத்தின்பயனாக "சிஷ்டாசாரத்தை" அனுசரித்து "வழக்க"த்தில் வரும் சாஸ்திரவிதி மாறுபாடுகளையும் ஒப்புக்கொண்டிருக்கிறார். பின் உதகரிக்கப்படும் வாக்கியங்களைக்கவனிக்குமிடத்து, சாஸ் நடக்கவேண்டுமேயன்றி சப்தார்த்

தத்தை முக்கியமாகக் கொள்ளலாகாதென்றும், ஜனங்கள் சுவேச்சை யாகவும் தாராளமாகவும் நினைக்கவும் நடக்கவும் அவர்களுக்குச் சாஸ்திரக்காரர்கள் ஸ்வதந்தர மளித்திருக்கிறார்களென்றும் அறிகிறோம். "மனிதருக்குத் தீங்குவிளைவிக்கக்கூடியகாரியங்களை, அவை சாஸ்திர சம்பந்தமானவையானாலும், கிருகஸ்தன் செய்யாமல் தவிர்க்கவேண்டும்; 'யமம்' என்று சொல்லப்பட்ட முக்கியமான கடமைகளைப் புத்திசாலியானவன் எப்பொழுதும் செய்யவேண்டியதே தவிர 'நியமம்' என்று சொல்லப்பட்ட சில்லறைக் காரியங்களையே எப்பொழுதும் செய்துகொண்டிருக்கக்கூடாது" என்று விஷ்ணுஸ்மிருதி கிருகஸ்ததர்மத்தை யெடுத்துரைக்கின்றது. "தேத்தாங்கொட்டையானது தண்ணீரைத் தெளிவிக்குமாயினும் 'தேத்தாங்கொட்டை' யின் பெயரை உச்சரித்த மாத்திரத்தில் தண்ணீர் தெளிவுபடாது" என்னும் உண்மையைச் சந்நியாசியானவன் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டுமென்று மனுதர்மசாஸ்திரம் கூறுகின்றது.

(இன்னும் வரும்)

கர்னல், உ. ஜி. கிங்கு, சி. ஐ. இ., ஐ. எம். எஸ்.,
சானிடரி கமிஷனர்.

---

## A MANUAL OF INDUSTRY
## கைத்தொழிற் கண்ணாடி

(௩௯௩-ஆம் பக்கத்தொடர்ச்சி)

பேப்பூரிலிருந்தும் கோழிக்கோட்டிலிருந்தும் 'காப்பி' பஞ்சு, மஞ்சள், அரிசி, ஆமணக்கு, எண்ணெய், திரித்த தென்னங்கயிறு, சாயச்சரக்குக்கள் (டிவிடிவி), தேங்காய், கொப்பரை, இஞ்சி, தேக்குமரம் ஆகிய இவை ஏற்றுமதியாகின்றன. பேப்பூரிலிருந்து முக்கியமாகப் பஞ்சு கல்கத்தாவுக்கும் பம்பாய்க்கும் போகின்றது; கோழிக்கோட்டிலிருந்து தேங்காயும் கொப்பரையும் பம்பாய்க்குப்போகின்றன. கோழிக்கோட்டில் இறக்குமதி 'காப்பி' யும் அரிசியுமாம்.

தலைச்சேரியிலிருந்து ஏற்றுமதியாகும் முக்கியமான சரக்குக்கள் மிளகும் ஏலமுமாம்; இறக்குமதி 'காப்பி', பருத்தி நூலாடை, தேங்காயெண்ணெய், உப்பிட்ட மீன், அரிசி.

கோழிக்கோடும் தலைச்சேரியும் பெரிய வியாபாரஸ்தலங்களாதலின் அவைகளில் 'காப்பி' க்கொட்டை இறக்குமதி செய்து சேர்த்து வெளிநாட்டுக்கு அனுப்புகிறார்கள்.

கண்ணனூரிலிருந்து மிளகு விசேஷமாக ஏற்றுமதியாகின்றது; இறக்குமதி புகையிலை.

மங்களூரிலிருந்து அதிகமாகக் 'காப்பி' ஏற்றுமதியாகின்றது. அரிசி, வறட்டுத்தோல்கள், வெற்றிலை ஆகிய இவையும் அங்கிருந்து வெளியேறுகின்றன. இறக்குமதிச் சரக்குக்கள் பருத்திநூற் புரிகளும், இழைகளும், தேங்காயெண்ணெயும், உப்பிட்ட மீனும், உப்புமாம்.

மேற்கண்ட குறிப்புக்களுள் முக்கியமாகவும் அதிகமாகவும் ஏற்றுமதி யிறக்குமதியாகும் சரக்குக்கள் மாத்திரம் சொல்லப்பட்டிருக்கின்றன. எல்லாத்துறைகளிலும் இங்கிலாண்டிலிருந்து பருத்திநூலாடைகளும் நூல்களும் இரும்பும் இறக்குமதியாகின்றன.

## லலித கலைகள்

படமெழுதும் வித்தைகள் இந்தியாவில் அற்புதப்பயிற்சி அடைந்திருந்தன. முற்காலத்து யக்ஷர்களும் நாகர்களும் இதனிற் கைதேர்ந்தவர்கள். அவர்களுக்குப் பிறகு சித்திரக்காரர் என்னும் தொழிலாளிகள் ஏற்பட்டு வமிச பரம்பரையாக அவ் வித்தையைப் பயின்று வந்தனர். அவர்களுடைய வேலைத்திறம் பழைய கிரந்தங்களிற் குறிக்கப்பட்டிருக்கிறது. துஷ்யந்த மகாராஜன் காட்டிற் கண்வமகரிஷியின் ஆச்சிரமத்தில் வளர்ந்துகொண்டிருந்த சகுந்தலைக்கு விலையுயர்ந்த ஆபரணங்களை வெகுமதியாக அனுப்பியபொழுது அவள் அவைகளை யணிந்துகொள்ளும் விதந்தெரியாமல் தியங்கினள். அப்பொழுது தனது குடிசையின் சுவரில் தொங்கிக்கொண்டிருந்த ஒரு ஸ்த்ரீயின்படத்தைக் கண்ணுற்று அதனிற் குறிப்

பிக்கப்பட்டிருந்த பூஷணலங்காரத்தைக் கவனித்துச் சகுந்தலை தனக்கு வந்த நகைகளை அணிந்துகொண்டாள். அஃது ஏறக்குறைய இரண்டாயிரம் வருஷத்திற்கு முந்தின சங்கதி. அப்பொழுதே இந்தியாவில் அவ்வளவு நுட்பமாகப் படமெழுதிவந்தார்களென்பது விளங்குகின்றது. அதற்கு முன்னரும் இந்தியாவிற் பௌத்தமதம் பிரபலமாக இருந்தகாலத்திற் சித்திரமெழுதும் வித்தை செழித்திருந்தது. அப்பொழுது இந்தியாவின் மத்திய ராஷ்டிரத்தில் ஒருவகைச் சித்திரக்காரரும், மேற்கே ராஜபுதனத்தில் மற்றொருவகையாரும், அவைகளுக்குப் பிறகு கிழக்கே வங்காளத்தில் ஒருவகையாரும், வடக்கே நேபாளத்திலும் காச்மீரத்திலும் வெவ்வேறு வகைச் சித்திரவேலைக்காரர்களும் ஏற்பட்டிருந்தனர்; தென் இந்தியாவிலோ சித்திரலேகன நிபுணர்களான ஜயன், பராஜயன், விஜயன் என்பவர்கள் ஜகத்பிரசித்தர்களாக விளங்கினின்றனர். பூர்வத்துச் சித்திரலேகனங்களில் எவையும் இப்போது கிடையா. பம்பாய் ராஜதானியில் (Khandess) காணதேசமென்னும் காடடர்ந்த மலைநாட்டில் கி. மு. 200 முதல் கி. பி. 200 வரையிலுமாக ஓராயிரம் வருஷகாலம் கஷ்டப்பட்டு வெட்டியெடுக்கப்பட்ட அஜந்தம் என்னும் குகைக்கோவில்களின் சுவர்களில் பௌத்தர்களெழுதிய சித்திரங்கள் மாத்திரம் இன்றைக்கும் இருக்கின்றன. இந்தச் சுவர்க் கோலச்சித்திரப்படங்கள் ரூபலாவணியத்திலும் வேலைத்திறமையிலும் இயற்கைத் தன்மைகளையும் செய்கைகளையும் உள்ளபடி விளக்கும். சாதுரியத்திலும் ஒப்புயர்வற்று அவை யாவராலும் புகழ்ப்பெற்றிருக்கின்றன; பூர்வத்து அந்தச்சித்திரக்காரரது கைலாகவத்தையும் சாமர்த்தியத்தையும் கண்ணுற்றுப் பார்ப்போர் பிரமிக்கின்றனர்; சில காலமாக அந்தச் சித்திரங்களும் தேனீ, வௌவால் முதலியவற்றினாலும் காட்டுமிருண்டிகளினாலும் சிறிது சேதமுற்றிருக்கின்றன. ஏனைய இந்திய மகிமைகளைப்போல சித்திரமெழுதுவது என்னும் அரிய வித்தையும் இத் தேசத்தினின்று ஒழிந்தது.

படமெழுதுவது மகம்மதிய மதத்திற்கு விரோதமான காரியம்; ஆதலின், இந்தியாவில் ஆண்டுவந்த மகம்மதிய அரசர்கள் பெரும்பான்மையோர் அந்த வித்தையை நிராதரணை செய்து வந்

தனர்; சிலர் மாத்திரம் ஆதரித்தனர். மொகலாய சக்கரவர்த்தியான ஆக்பர் அவ் வித்தையை மிகப்பராமரித்துவந்தார். அந்த மேன்மையான வித்தையைக்கண்டு தம்மதத்தினர் அசூயைப்படுவது அநியாயமென்பதை அவர் தமது ஆஞ்ஞையாலெழுதுவித்த 'ஐன்-இ-ஆக்பரி' என்னும் ராஜாங்க சரித்திரத்தில் ஸ்பஷ்டமாக வெளியிட்டிருக்கிறார்: "சித்திரலேகனத்தை வெறுப்பவர்கள்மீது எமக்குப் பிரியமில்லை. கடவுளை அதிகமாக அடிக்கடி ஸ்மரித்துக்கொண்டிருக்கக்கூடியவன் சித்திரக்காரனே யென்று அவர்கள் அறியக்கடவர்கள்; எங்ஙனமெனின், அவன் எவ்வளவு உயிர்வடிவமாகப்படமெழுதியபோதிலும் தான் அதற்கு உயிர்கொடுக்க முடியாதென்றும் கடவுளொருவரே அந்தச் சக்திவாய்ந்தவரென்றும் அவனுக்குத்தெரியும்." ஆக்பர் சக்கரவர்த்தியினிடத்திற் கைதேர்ந்த சித்திரக்காரர் பதினறுபேர் இருந்தனர்; 'ரஸம்-நாமா' என்னும் கிரந்தத்தில் அமைக்கப்பட்டுள்ள சிற்றுருவப்படங்களில் அவர்களுடைய வேலைத்திறமையைக்காணலாகும். 'ரஸம்-நாமா' (யுத்தசரித்திரம்) என்பது ஸம்ஸ்கிருதத்திலுள்ள பெரிய இதிஹாஸமாகிய 'மகாபாரத'த்தின் சங்கிரகமாம். இந்துக்களும் மகம்மதியரும் பரஸ்பரம் தெரிந்துகொள்ளாமற் பகைத்து நின்ற நிலைமையை மாற்றும்பொருட்டு அவர் 1582-ஆம் ஆண்டில் அந்தக் கிரந்தத்தை பெர்ஷியன் பாஷையிற்செய்வித்தார். அதன் பிரதியொன்று (மூலப்பிரதியோ என்னவோ) ஜயப்பூர் மகாராஜாவின் புஸ்தகபண்டாரத்திலிருக்கின்றது; அதனுள் 169 சிற்றுருவப்படங்கள் எழுதப்பட்டிருக்கின்றன; அவை பெர்ஷியன் சித்திர முறைப்படி மிக நேர்த்தியாக எழுதப்பெற்று நன்றாக ஜ்வலிக்கின்றன; புஸ்தகத்தின் விலை ரூபா, 600,000 க்கு அதிகமாகின்றது. இந்தியாவின் மேற்புறத்தில் வழங்கிய சித்திரவித்தையிற் பெர்ஷியன்முறை கலப்புற்றது; ஆனதனால், அங்கு எழுதும் படங்களில் விசேஷ சாக்கிரதையும் நுட்பமான அபிசபாவனைகளும் காணலாயின. வழக்கயாக வந்த பொதுக்குறிப்புப் பாவனைகள் ஒழிந்தன; அப்படிக் கலப்புற்ற சித்திரவித்தைக்கு உதாரணமாக லாஹுரிலும் ஜயப்பூரிலும் வழங்குகிற தட்டையான படங்களைக் குறிக்கலாம்.

அஜந்தத்திலுள்ள குகைக்கோவில்களிலிருக்கும் சுவர்ச்சித்திரங்கள் எழுதப்பெற்ற காலத்திற்கும் இப்போதைக்கும் ஒப்பிட்டுப் பார்த்தால், சித்திரவித்தை மிகவும் கெட்டுப்போயிருக்கிறது. இந்தக் காலத்துச் சித்திரக்காரர்கள் எழுதுவது சித்திரங்களெனத்தகா. புராண புருஷர்களின் வீரச்செய்கைகளைக் காட்டுவதற்காக வர்ணங்களைப்பூசி உருவங்களை இப்போது அமைத்துவிடுகிறார்கள். அவை வர்ணப்பூச்சுக்களே யன்றிச் சித்திரங்களாகா. அப்படிப்பட்ட பூச்சுக்களில் அங்கவமைதி, இயல்புக்காட்சி, இருள், வெளிச்சம் (மந்தம், பிரகாசம்) முதலிய சித்திரலக்ஷணங்கள் சிறிதும் அகப்படா.

சித்திரமெழுதும்வித்தை இப்போது இந்தியாவில் மறுபடி கிளைத்துவருகிறதென்று சொல்லலாம். ஆனால், அப்படிக்கிளைப்பது இந்தியாவின் பூர்வத்துச் சித்திரமுறையன்று. இக் காலத்தில் ஐரோப்பியர் சித்திரகலையென்று ஒப்புக்கொண்டு ஆதரிக்கிறமுறையே இங்கே, தலையெடுத்து வருகின்றது. சித்திரங்களைப்பற்றி இந்தியர்களுக்கு இருந்த அபிப்பிராயங்களெல்லாம் மாறிப்போயின. அதற்குக்காரணம் இந்தியாவிலுள்ள ராஜதானிப்பட்டணங்களில் துரைத்தனத்தார் ஏற்படுத்தியிருக்கும் சித்திரகலாசாலைகளேயாகும். அந்தக்கலாசாலைகளை ஜனங்கள் மிகக்கொண்டாடி அங்கே கற்பிக்கப்படும்முறைகளை ஆவலுடன் கற்றுவருகிறார்கள். ஆயினும், ஐரோப்பியர் எழுதுகிற நல்ல சித்திரங்களில் அமைந்துள்ள ஆழ்ந்த கருத்தையும் அந்தக் கருத்தின் திருத்தத்தையும் கண்டு களிப்பதற்கு இந்தியர்களுடைய கண்ணும் மனமும் இன்னும் போதுமானஅளவு பயிற்சி பெற்றில. எனினும், இந்தியர்களுக்கு இயற்கையாக உள்ள அலங்கார விமர்சன சக்தியினால் அவர்கள் ஐரோப்பியர்களுடைய சித்திரங்களின் அழகையும் பெருங்கருத்தையும் மெச்சிக் கொண்டாடுகிறார்கள்.

**சுவர்க்கோலச்சித்திரங்கள்:**—இத் தேசத்தில் எங்குப் பார்த்தாலும் சுவர்களில் நகைப்புக்கிடமான பொம்மைகள் (மனிதரின் உருவங்களும் மிருகங்களின் உருவங்களும்) வரையப்பட்டிருக்கின்றன. அவை நாணயமான வேலைப்பாடுள்ளனவல்ல; முக்கியமாகச் செங்காவிவர்ணமே மிகுந்திருக்கும்; போர் வீரர்கள், புலிகள், யா

லைகள் ஆகிய இவையே அந்தச் சித்திரங்களிற் காணக்கூடியவை. க்ஷேத்திரக் கணிதச் சம்பந்தமான உருவங்கள் சிலவேளை எழுதப்படுகின்றன; அவை முக்கியமாகப் படவுகளில் (ஓடங்களில்) அலங்காரத்தின்பொருட்டு எழுதப்பெறுகின்றன. வட இந்தியாவில் சிலவிடங்களிற் சிற்பாலங்காரங்கள் பெரும்பாலும் பூக்களைப்போன்றிருக்கும். அம்மாதிரியான வேலை கொற்றர்களே செய்துவிடுகிறார்கள்; புதிதாகப்போட்ட சாந்தின்மீது ஒரு சிறு இரும்புத் துடுப்பைக்கொண்டு வர்ணங்களை மெதுவாகப்பூசிவிடுகிறார்கள். வங்காளத்தில் அவ்விதமான சுவர்க்கோலங்கள் பூஜை மண்டபம் முதலிய இடங்களிற்காணலாம். அப்படிச் சுவர்க்கோலங்களினால் சிறக்க அலங்கரித்த கொலுமண்டபமொன்று (Krishnagar) கிருஷ்ண நகரிலிருக்கின்றது. பஞ்சாப் மாகாணத்தில் (Amritsar) அமிர்த சரசிலுள்ள பொற்கோவிலையலங்கரிக்கவும் இதர இடங்களிலுள்ள தேவாலயாதிகளை யலங்கரிக்கவும் அவ் விதச் சித்திரக்காரர்கள் அடிக்கடி நியமிக்கப்படுகிறார்கள். முற்காலத்தில் இந்துதேசத்துச் சாந்தமான வர்ணங்களை அந்தச் சித்திரங்களுக் குபயோகித்து வந்தனர். இப்போது பகட்டாக உள்ள பிறநாட்டு வர்ணங்கள் தலைப்பட்டுவிட்டன.

**அப்பிரகத்தகட்டிற்சித்திரமெழுதுதல்:**—இவ் விதமான சித்திரம் தென்னிந்தியாவிலுள்ள திரிச்சிராப்பள்ளியில் விசேஷமாக எழுதப்படுகின்றது. அந்தப் படங்கள் இந் நாட்டிலுள்ள வெவ்வேறு ஜாதியாரையும் பலவகைக் கைத்தொழில்களையுமே முக்கியமாக விளக்கிக் காட்டுவனவாகும். அவ் விதமான 12-படங்களடங்கிய புத்தகமொன்று 4-ரூபாவுக்குக்கிடைக்கும். அந்த வேலை காசியிலும் நடக்கின்றது. அங்கேஎழுதும் படங்கள், இந் நாட்டு வியாபாரங்கள், கைத்தொழில்கள், இந்துக்களின் பண்டிகைகள், உற்சவங்கள் முதலியவற்றை விளக்குவனவாகும்; தொழில்களைக்குறிக்கும் படங்களுக்கு முகம் ஒரே மாதிரியாக இருக்கும்; தலையிலணியும் பாகைகளின் வித்தியாசத்தினால் வெவ்வேறு ஜாதிகளைக்கண்டுகொள்ள வேண்டும்; அந்தப்படங்களின் விலை டஜன் ஒன்றுக்கு ரூ 3-முதல் 7-வரையில் ஆகும்.

**தோலிற்சித்திரமெழுதுதல்:**—கடப்பை ஜில்லாவிலுள்ள நொஸ்ஸம் என்னும் ஊரில் வட்டவடிவமான தோல் துண்டுகளில் வர்

ணங்கள் கொண்டு சித்திரங்கள் எழுதி மேஜைமீது போடுவதற்கு உபயோகிக்கக்கூடிய அழகிய விரிப்புக்களாகச்செய்கின்றார்கள். அஃது ஒரு விசித்திரமே; விநோதமெனினும் தகும்; ஆனால், அதில் வேலைத்திறமையொன்றுங் காணப்படாது.

**துணியிற்சித்திரமெழுதுதல்:**—சென்னைராஜதானியிற் கையினால் வர்ணங்கொடுத்து அச்சுவர்ணப் பருத்தி நூலாடைகளைப்போல் செய்கிறார்கள். அவை "பலம்பூர்" என்னும் சீட்டி ஆடைகளாகும். (அவற்றைச் 'சீட்டிகள்' என்னுந் தலைப்பின் கீழ் விவரிப்போம்.)

**மரத்திற்சித்திரமெழுதுதல்:**—இஃது இத்தேசத்தில் எங்கும் வழங்குகின்றது. வட இந்தியாவில் முஸபர்க்கர், (Muzaffargarh) டில்லி, லாகூர், ஜலந்தர், ஸிம்லா, காசி, பாரில்லி, பாட்னா (பாடலீபுரம்) ஆகிய இடங்களில் நேர்த்தியான வர்ணச் சித்திரங்கள் எழுதப்பெற்ற மரப்பெட்டிகளும் விளையாட்டுப் பண்டங்களும் செய்யப்படுகின்றன; அது 'காமாகரி' வேலையெனப்படும்; அப்பெயர் 'காமாம்' என்னும் பதத்தினின்று வந்ததாகும்; 'காமாம்'=வில்; அந்த அலங்காரவேலை முதன்முதலில் வில்லுக்குச்செய்யப்பட்டதாம். இன்றைக்கும் சில இடங்களில் அம்மாதிரியான வில்செய்து அதனை வர்ணங்களினால் அலங்கரிக்கிறார்கள். தட்டுகள், பேழைகள், கோழிமுட்டை வடிவான 'கௌதா' (kauta) என்னும் பெட்டிகள், மற்றுமனேக மரப்பண்டங்கள் ஆகிய இவைகளின்மீது நீர்வர்ணங்கள்கொண்டு சித்திரங்களெழுதி அவை அழியாதிருக்கும்பொருட்டு மெருகெண்ணெய் பூசுகிறார்கள். அத்தகைய பண்டங்களின் விலை அரை ரூபாமுதல் இருபது ரூபா வரையில் ஆகும். அவ் வேலையைக் குறித்து மற்றுமோரிடத்தும் பேசுவாம்.

**கையெழுத்துப்பிரதிகளைச் சோபிக்கச்செய்தல்:**—அழகிய எழுத்துக்களை வரையுந் திறமையை மெய்ச்சுவது மகம்மதியரது விசேஷகுணமாகும். அவர்களுடைய நெடுங்கணக்கிலடங்கிய எழுத்துக்களின் ரூபங்கள் விசித்திரமாக இருக்கின்றமையின் அவைகளை மேன்மேலும் அழகுபடுத்துவதற்கு அனுகூலமாக இருந்தது. பண்டைக்காலத்திலிருந்து மகம்மதிய ராஜசபைகளில் கவிவாணரும் கலாநிபுணரும் ஆதரிக்கப்படுவதன்றி அழகிய எழுத்துக்கள் எழுதுவோரும் ஆதரிக்கப்பட்டுவந்தார்கள். கையெழுத்துப் பிரதிகளை அலங்காரமாகப் படத்தைப்போல் வரைந்து வைப்பது மகம்மதியருடைய சட்டத்திற்கு விரோதமான காரியமானபோதிலும், அப்படிப்பட்ட படங்கள் வழக்கத்தில் வந்துவிட்டன. எப்படியெனில், எழுத்துக்களை அழகாகவும் அலங்காரமாகவும் எழுதுவதில் பாரசீகருக்குப் பிரியம்அதிகமுண்டு; அலங்காரமான எழுத்துக்களை எழு

துவது ஒரு வித்தையாக ஏற்பட்டது; வரவர, அது முதிர்ந்து, வாக்கியங்கள் பாடல்கள்முதலிய எழுத்துப்பிரதிகளைச் சோபிக்கச் செய்து படங்களாக உபயோகிப்பது வழக்கமாயிற்று. 'ரசம் நாமா'வைச்சோபிக்கச் செய்வதற்காகச் சித்திரவேலைக்காரர்களுக்கு ஆக்பர் சக்கரவர்த்தி 6-லக்ஷம் ரூபா கொடுத்தார். ஏறக்குறைய அறுபது வருஷங்களுக்கு முன்னர் ஆள்வார் (Alwar) என்னும் இராச்சியத்து மகாராஜா பன்னிசிங்கு என்பவர் பாரசீகக் கவிச்சிரேட்டரான ஸாதி என்பவர் எழுதிய 'குலிஸ்தான்' என்னும் அற்புதக்கிரந்தத்தின் கையெழுத்துப்பிரதியை 50,000 ரூபா கொடுத்துச் சோபிக்கச்செய்தனராம்; அந்தப்புத்தகத்திற்கான முழுச்செலவும் ஒரு லக்ஷம் ரூபா இருக்கும். ஒவ்வொரு புடத்திலும் (பக்கத்திலும்) உள்ள கரைக்கட்டுக்கோலம் மற்றொரு பக்கத்தில் இல்லாதவாறு புத்தகம் முழுமையும் வெவ்வேறுவிதமான கோலங்கள் வரையப்பட்டிருக்கின்றன. பாலி பாஷையிலுள்ள கையெழுத்துப் பிரதிகளும் இவ்வாறு தங்கத்தினாலும் வர்ணங்களினாலும் அலங்கரிக்கப்படுகின்றன. இன்றைக்கும் செல்வமிகுந்த மகம்மதியர்களிருக்குமிடங்களிற் கையெழுத்துப்பிரதிகளை யலங்கரிக்கும் வேலை கொஞ்சம் தலைகாட்டி நிற்கின்றது. லக்நௌ (லக்ஷ்மணபுரி), ராம்பூர், ஆக்ரா ஆகிய இப் பட்டணங்களில் காச்மீரதேசத்தவர் சிலர் இத்தொழிலை அவலம்பித்துவருகிறார்கள். விலைகள் ஒரே நிலையிலிரா; சோபிதமாக அலங்கரிக்கப்பட்ட 'கொரான்' புஸ்தகமொன்று ரூ 100-க்குக்கிடைக்கும்; திபேத்து தேசத்தில் அலங்காரமான கையெழுத்துப்பிரதிகள் உள; அவை வெள்ளியில் எழுதப்பட்டவை; ஜகந்நாதத்தைச்சேர்ந்த கடகம் ஜில்லாவில் (ஒரிஸ்ஸா) பனையோலையிலெழுதப்பட்ட புஸ்தகங்கள் வெகுவிநோதமாக அலங்கரிக்கப்படுகின்றன; சென்னை ராஜதானியிலும் வங்காளத்திற் சில பாகங்களிலும் பனையோலைகளில் கடிதங்கள், பத்திரங்கள், தஸ்தவேஜுகள், கணக்குகள், ரசீதுகள் முதலியன இன்றைக்கும் எழுதப்படுகின்றன. அவ்வோலைகளில் இரும்பாணிகொண்டெழுதி அந்த எழுத்துப்பள்ளங்களில் மசிபடியுமாறு கரிபூசுகிறார்கள்; பிறகு அந்த ஏடுகளை அலங்கரிக்கிறார்கள். அத்தகைய கிரந்தங்களுள் ஜயதேவகவி இயற்றிய கீதகோவிந்தம் என்னும் புத்தகம் மிக நேர்த்தியாகச்செய்யப்பட்டிருக்கின்றது; அது கல்கத்தாவில் இருக்கின்றது. புல்லாங்குழற்பிடித்த கிருஷ்ணவிக்கிரகம், கோபிகாஸ்த்ரீகளின் இயற்கை வடிவம், கன்றுகள் ஊட்டாநிற்கும் பசுக்களின் வாட்டமான நிலை, புஷ்பபாணமேந்திய மன்மதனுடைய வீம்பு ஆகிய இவை முதலான சித்திரங்கள் மேற்கண்டவாறு சோபிக்கப்பெற்ற கையெழுத்துப்பிரதிகளுள் மிக ரம்மியமாக விளங்குகின்றன.

(இன்னும் வரும்)

தேசசஞ்சாரி.

உ

கடவுள் துணை

# செந்தமிழ்

தொகுதி-௯.] விரோதிகிருது ஹு ஆவணி மீ .[பகுதி-௧0.

## ஒற்றுவர்

ஒற்றுவராவார்:—தமது பகைவர் நட்பினர் அயலவர் என்னும் மூவகையாரிடத்து நிகழு மிரகசிய கருமங்களையெல்லாம் அவர்களிருக்கு மிடங்களிற்சென்று ஒற்றியறிதற்காக அரசர்களால் நியமிக்கப் பட்டிருப்போர்.

ஒற்றுவர்கள் அரசர்களுடைய கண்கள் சென்றறியமாட்டாத இடங்களெல்லாஞ்சென்று அங்கு நிகழுங் கருமங்களை அறிந்துவந்து உணர்த்துதலின் அவர்களுக்குக் கண்ணாக உள்ளவர்கள்.

"ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண்."

என்னுந் தேவர் வாக்கானே அறியப்படும்.

இவர்கள் இரகசிய கருமங்களை அறியும்படி பகைவர் முதலியோரிடத்துச் செல்லுங்காலத்துத் தம் வடிவை மறைத்து அவர்கள் ஐயுறக் கூடாததான வேற்றுருவமெடுத்துச் செல்ல வல்லவராயும், அங்ஙனஞ் சென்றறியுமிடத்துப் பகைவர் முதலாயினோர் தம்மீது ஐயுற்றுப் பற்றி நான் குபாயங்களையுஞ்செய்து கேட்டாலும் உண்மையுரையாதவராயு முள்ளவராயிருத்தல் வேண்டும். அது,—

"கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகாஅமை வல்லதே யொற்று." எனவும்,

"துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று." எனவும்,

தேவர் கூறிய வாற்றா னறியப்படும்.

இங்ஙனமே ஸ்ரீ ராமன் சேதுபந்தனமிட்டு அதன்வழியாக இலங்கையில் வந்து பாசறை வகுத்திருக்கும்பொழுது, அவனது குரங்குச் சேனைகளது அளவு, வலி முதலியவற்றை அறிந்துவரும்படி இராவணனாலனுப்பப்பட்ட ஒற்றுவர்கள், ஸ்ரீ ராமன் முதலாயினோர் ஐயுறுதபடி குரங்குருபமாகவந்து அக் குரங்குகளோடு தாமும் ஒருவராகச் சேர்ந்து அளவுநோக்கிச் சுற்றித்திரிந்தார்களென்றும், அப்பொழுது விபீஷணன் அவர்களிடத்திற் சந்தேகமுற்று அவர்களைக் குரங்குகளைக் கொண்டு பிடிப்பித்துத் தண்டனைசெய்வித்து ஸ்ரீ ராமனுக்குக் காண்பித்தானென்றும், அப்பொழுதும் அவர்கள் உண்மையுரையாது தம்மை மறைத்தே கூறினார்களென்றும் இராமாவதாரத்திற் கூறப்பட்டிருக்கின்றது. அதனை,—

கடாஅ வுருவொடுசேறல்

"இற்றது காலமாக விலங்கையர் வேந்த னேவ
வொற்றர்வந் தளவு நோக்கிக் குரங்கென வுழல்கின் றாரைப்
பற்றின னென்ப மன்னோ பண்டுதான் பலநாட் செய்த
நற்றவப் பயன்றந் துய்ப்ப முந்துறப் போந்த நம்பி." (ஒற்-உச)

உழலல் - சுற்றித்திரிதல். பற்றுதல் - மனத்தாற் கிரகித்தல். நம்பி - விபீஷணன்.

தண்டஞ்செய்தல்

"கூட்டிய விரற்றிண் கையாற் குரங்குக ளிரங்கக் குத்தி
மீட்டொரு வினைசெய் யாமன் மானையின் கொடியால் வீக்கிப்
பூட்டிய கையர் வாயாற் குருதியே பொழிகின் றாரைக்
காட்டினன் கள்வ ரென்னக் கருணையங் கடலுங் கண்டான்." (ஷை-உஎ)

பூட்டிய - கட்டிய.

என்செயினுஞ் சோராமை

"கல்விக்கண் மிக்கோன் சொல்லக் கருமன நிருதக் கள்வர்
வல்விற்கை வீர மற்றிவ் வானரர் வலியை நோக்கி
வெல்விக்கை யரிதென் றெண்ணி வினையத்தா லெம்மை யெல்லாங்
கொல்விக்க வந்தான் மெய்ம்மைக் குரங்குநாங் கொள்க வென்றார்."

(ஷை-கூ0.)

கல்வி - கல்வி அறிவு; ஆகுபெயர். கருமனம் - வஞ்சகம்பொருந்திய மனம். குரங்குகளாகிய எம்மையெல்லாம் என்க. மெய்ம்மைக் குரங்கு—(உமக்குச் சைனியமாக) உண்மைக்குரங்கு; வேடக்குரங்கன்று. என்றபடிஎன்னுமிச் செய்யுட்களானறிக.

இவ்வாறே, குமரவேள் தாரகனைக்கொன்று தேவகிரியின்கண் வந்திருந்தபொழுது சூரபன்மனும் சேனைகளின் அளவுமுதலியவற்றை யறியும்படி பல ஒற்றுவரை யனுப்பியதாகக் கந்தபுராணத்துக் கூறப்பட்டிருக்கின்றது. அதனை,—

"பகனொடு மயூரன் சேனன் பரிதியம் புள்ளின் பேரோன்
சுகனிவர் முதலா வுள்ள தூதரைத் தருதி யென்னப்
புகழ்புனை சூர பன்மன் பொன்னடி யிறைஞ்சி யேத்தித்
தகுவர்க டலைவர் மற்றச் சாரணர் தம்மை யுய்த்தார்." (அசுரேந்-சுஉ.)

பகம் - கொக்கு. மயூரம் - மயில். சேனம் - பருந்து. பரிதியம்புள் - சக்கரவாகம். அம் - சாரியை. சுகம் - கிளி. இப்பறவைகளின் வடிவுகொண்டு சென்று பகைவரியல்புகளை ஒற்றியறிதலின் இவர்களுக்கிப்பெயர்க ளியைந்தனவென வறிக.

"சாரண ரினையர் போந்து தாண்முறை பணிந்து நிற்பச்
சூரனங் கவரை நோக்கித் துண்ணென நீவி ரேகிப்
பாரிடை வந்த கந்தன் பான்மையும் படைவெம் பூதர்
சேருறு தொகையும் யாவுந் தேர்ந்திவண் வருதி ரென்றான்."(ஷை-சுங)

சாரணர் - ஒற்றுவர். பான்மை - வீரம் வலி முதலிய வியல்பு. ஒற்றுவர்கள் வழியாக அரசர்கள் கருமங்களையறிந்து நிச்சயிக்குமிடத்து ஒருவரது சொல்லைநம்பி நிச்சயிக்காது, ஒருவரையொருவரறியாதபடிமூவரைவிடுத்துஅறிந்து நிச்சயித்தல்வேண்டும். அஃது;

"ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ
ரொற்றினா லொற்றிக் கொளல்." எனவும்,

"ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்." எனவும் தேவரும்,

"ஒற்றரைத் தூண்டி யன்னோ ருறுவலி யுணர்வ ரேனு
மற்றுமோ ரொற்றி னல்லா லன்னது மனத்துட் கொள்ளார்
சுற்றுறு மனிக மன்றி யொருபுடை யுவன்றிச் சூழும்
பெற்றியு முளதோ வென்ன வேயொரீஇத் தேர்வர் பின்னும்."

எனக் கந்தபுராணக்காரருங் கூறுதலானறியப்படும்.

இவ்வாறு ஒற்றுவரை வைத்துப் பகைவர் முதலியோரியல்பு யறிதல் முற்காலத்தரசர்களிடத்தில் மாத்திரமன்று; தற்காலத் தரசர்களிடத்து மிருப்பதாக நாமறிகின்றேம். ஆதலால் ஒற்று அரசர்களுக்கின்றியமையாததோரியல்பென்பது இதனாலறியக்கிடத் தல் காண்க.

சி. கணேசையர்.

---

உ
சிவமயம்.

# இராமாவதாரச்செய்யுட்பாடாந்தரமும்
## அரும்பத விளக்கமும்

(௬௭௭-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### மந்திரப்படலம்

(௧) பூவரு மயனொடும் புகுந்து பொன்னகர்
மூவகை யுலகினு மழகு முற்றுற
வேவென வியற்றினன் கணத்தி னென்பராற்
றேவரு மருள்கொளத் தெய்வத் தச்சனே.

தெய்வத்தச்சன் அயனொடும் புகுந்து இயற்றினன் என்க. நகர் இயற்றுதன் முதன்மை தெய்வத்தச்சனுக்கேயாதலின் ஒருவினை யொடுச்சொல் ஈண்டுயர்பின்கண்ணேயே வந்தது. இவ்வாறே ஒரு யர்புபற்றியன்றி வாராதென்பது சேனாவரையர் கருத்தாதல்;"ஒரு வினையொடுச்சொ லுயர்பின் வழித்தே" என்னுஞ் சூத்திரவிசேடவு ரையின்கண் "யாதானுமோராற்றான் அதற்குயர்புண்டாயினல்லது

அவ்வாறு கூறார்; கூறுபவாயின் அஃது ஒருவினையொடுச்சொலெனப்படாது" எனக்கூறியவாற்றானறியப்படும். பொன்னகர்-இலங்கை. உலகு-ஆகுபெயர்; நகரங்களுக்காதலின். இன் உறழ்பொருஉ. ஏயென என்பது தொடைநோக்கி ஏவென என்றாயிற்று. வரையறையின்மையின் வகரம்பெற்றதெனினுமமையும். என்பர் என்றது முதனூலாரை. ஆல்-அசைநிலை. தந் நகரமோ என்று தேவருமயங்க என்க. மருள்கொள முற்றுறக்குயிற்றினன் என்க.

(உ) பொன்னினு மணியினு மமைந்த பொற்புடை
நன்னகர் நோக்கினு னக நோக்கினுன்
முன்னையி னழகுடைத் தென்று மொய்கழன்
மன்னனு முவந்துதன் முனிவு மாறினன்.

அமைந்த-அமைக்கப்பட்ட. இதுவோ அதுவோ அழகுடைத்தென்றறியுமாறு நாகத்தை நோக்கினுன் என்க. நாகம்-சுவர்க்கம். நாகத்தினுஞ்சிறந்தமையின் முன்னையின் அழகுடைத்தென்று உவந்தான் என்க. முன்னையின் என்றதற்கு நெருப்பினுலெரிதற்கு முன்னுள்ள நகரினும் பார்க்க எனப்பொருள்கொள்க. முனிவு - நகரெரியுண்டமைபற்றிவந்த கோபம்.

(ந) முழுப்பெருந் தனிமுத லுலகின் முந்தையோன்
எழிற்குறி காட்டிநின் றியற்றி யீந்தனன்
பழிப்பரு முலகங்க ளெவையும் பன்முறை
அழித்தழித் தியற்றுவார்க் கரிதுண் டாகுமோ.

முழுப்பெருந்தனிமுதலாகிய முந்தையோன் என்க. உபசாரம். இனிமுதலாலாகிய உலகிற்பழையோனுமாம். எழிற்குறிகாட்டி நின்று-'காண்போர்க்கு அழகின்குறிப்பைக்காண்பித்துநின்று; எனவே இதுவே அழகு குறித்தறிதற்கிடமென்றபடி. குறி அடையாளமுமாம். காட்டினின்று என்பதற்கு (தச்சனுக்கு) காண்பித்துநின்று' எனப்பொருள்கொள்ளினுமமையும். இப்பொருட்கியைய இயற்றி என்பதை இயற்றுவித்து எனப் பொருள்கொள்க. இவ்விகுதி விகாரத்தாற்றொக்கது. பழிப்பரும் என்பதில் அருமை இன்மைப்பொருளில் வந்தது. அழித்து அழித்து என்பதை அழி

க்க அழிக்க எனச் செயவெனெச்சப்பொருளாக்குக. அடுக்கு பன்மைபற்றியது.

(௪) திருநகர் முழுவதுந் திருந்த நோக்கிய
பொருகழ லிராவண னயற்குப் பூசனை
வீரன்முறை யியற்றிநீ வழிக்கொள் வாயென்று
னரியன தச்சற்கு முதவி யாணையால்.

திருந்த நோக்கிய-செவ்விதாகப்பார்த்த. இனி முழுவதுந்திருத்தமடைய அதனை நோக்கிய எனினுமாம். உதவி இயற்றி வழிக்கொள்வாய் என்றான் என்க. ஆணையால் உதவி எனவே ஏவலாளரைக்கொண்டு கொடுப்பித்தான் என்பது பெறப்பட்டது. அரியன-விசேடமாயின.

(௫) அவ்வழி யாயிர மாயி ரம்மவிர்
செவ்வழிச் செம்மணித் தூணஞ் சேர்த்திய
இவ்வழி மண்டபத் தரிக ளேந்திய
வெவ்வழி யாசனத் தினிது மேவினான்.

இச் செய்யுளில், 'இவ்வழி' என்பது 'இவ்வெழில்' எனவும், 'வெவ்வழி' என்பது 'வெவ்வரி' எனவுங் காணப்படுகின்றன. முன்னையனபொருட்சிறப்பின்மையிற் பின்னையனவே சிறப்புடையன. அவ்வழி-அவ்விடத்து; கால இடம். செவ்வழிச் செம்மணி- செவ்விதான மாணிக்கம். இவ் எழில் மண்டபம்-இந்த அழகமைந்த மண்டபம். அரியாசனம் என்பதில் அரி வாளா பெயராய் நின்றது "திருமகள் கணவன் கமடமாய்ப் பூசை செய்திடு கச்சபா லயத்தில்" என்பதிற் கச்சபம்போல. இனி வெவ்வழி ஆசனமென்னும் பாடத்திற்கு கொடுங்கோன்மை நிகழ்தற்கிடமாகிய ஆசனம் எனப்பொருள் கொள்க.

(௬) வரம்பறு சுற்றமு மந்தி ரத்தொழி
னிரம்பிய முதிருருஞ் சேனை நீள்கடற்
றரம்பெறு தலைவருந் தழுவத் தோன்றினா
னரம்பையர் கவரியொ டாடுந் தாரினான்.

நிரம்பிய-முற்றப்பெற்ற. தரம்-உயர்ச்சி, வகையுமாம். தழுவ-தன்பக்கத்தே சேர்ந்திருப்ப. கவரியசைய அதனொடு அசையுந்தாரினான்

என்க. ஒடு உடனிகழ்ச்சியோடு வ துவாயு நின்றது. தேவருலகை யும் வென்று அங்குள்ள அரம்பையர் கவரிவீசச் சிறிதும் பகைத் துயரின்றி அரசுவீற்றிருந்தோன் இப்பொழுது மானுடரிருவர் பொ ருட்டு மந்திரந் தொடங்கினன் என ஆசிரியன் அவன் நிலையை இரங் கிக் கூறிற்று. அன்னனுயினன் இன்னனுயினன் என்றபடி.

(எ) முனைவருந் தேவரு மற்று முற்றுளோ
ரனைவருந் தவிர்கென வேய வானையான்
புனைகுழன் மகளிரொ டிளைஞர்ப் போக்கின
னினைவுறு காரிய நிகழ்த்த நெஞ்சினன்.

மற்றும் உற்றுளோர்-வேறும் மந்திரத்திற்கு விலக்காக நின்றவர் கள். தவிர்க என அகரம் விகாரத்தாற்றொக்கது. ஏய-கட்டளை செய்த. கிளைஞராயினும் மகளிரும் இளைஞரும் மந்திரத்துக்காகாத வர்களாதலின் அவர்களையும் போக்கினனென்க. மந்திரத்துக்காகா தவர் இவர் என்பதை "துன்றுபிணியோர்துறந்தோரடங்காதோர்-கன்றுசினமனத்தோர்கல்லாதவரிளையோ - ரொன்றுமுறைமையு ணராதவர்மகளி - ரொருறுமிவர்மந்தணத்தினெய்தப்பெறுதாரே" என்பதனுலறிக. நிகழ்த்துதல் - சொல்லுதல். நெஞ்சு - கருத்து; ஆகுபெயர்.

(அ) பண்டிதர் பழையவர் கிழவர் பண்பினர்
தண்டலின் மந்திரத் தலைவர் சார்கெனக்
கொண்டிட னிருந்தனன் கொற்ற வானையான்
வண்டொடு காலையும் வரவை மாற்றினன்.

பண்டிதர் - மந்திர நூலைக்கற்றுவல்லோர். பழையவர்- பரம்ப ரையாகவந்த மந்திரத்தலைவர். கிழவர்-தன்னால் நியோகிக்கப்பட்ட வயதில் முதிர்ந்த மந்திரத்தலைவர். பண்பினர் - நற்குணமமைந்த மந் திரத்தலைவர்; என்றது பெருமை சான்றுண்மைகளிற் றும் வழு வாது நின்று எல்லாரியல்புகளுமறிந்து ஒத்தொழுகுவோரை. "பண் பெனப்படுவது பாடறிந்தொழுகல்" என்றுர் பிறரும். இனிப் பண் டிதரும் பழையவரும் கிழவரும் பண்பினருமாகிய மந்திரத்தலை வர் எனினுமாம். அமாத்தியராதலின் தண்டலின் மந்திரத்தலை வர் என்றுர். ஒற்றுவோர் வண்டாயுங்காலாயும் வந்து ஒற்றுவாரெ

ன்னுங்கருத்தனாய் 'வண்டொடுகாலையும் வரவைமாற்றினான்' என்க. இனி ஆஞ்ஞையின் வலிமைகூறுவார் இங்ஙனம் கூறினார் எனினுமாம்.

(க) ஆன்றமை கேள்விய ரெனினு மாண்டொழிற்
சேன்றவர் நண்பின ரெனினும் யாரையும்
வான்றுணைச் சுற்றத்து மக்க டம்பியர்
போன்றவ ரல்லரைப் புறத்துப் போக்கினான்.

ஆன்று அமை கேள்வியர்-நிறைந்து அமைந்த கல்வியறிவையுடையோர்; இனிக் கல்வியானிறைந்தமைந்தோரும் கேள்வியையுடையோருமாகிய அவர்களாயினும் எனினுமாம். எனினும் அல்லரைப்புறத்துப்போக்கினான் என்க. சுற்றத்துள்ளே மக்களுந்தம்பியரும் போன்றவரல்லாதார் யாரையும் எனவே உடம்பொடு புணர்த்தலால் மக்களும் தம்பியரும் கொள்ளப்படுவர்; எனவே மக்களுந்தம்பியரும் அவர்போன்ற நம்பிக்கையுடையவருமே மந்திரத்துக்குரியவராயிருந்தாரென்பதாம் அறைபோவாராதலின் போன்றவரல்லரைப்புறத்துப்போக்கினான் என்க.

(க0) திசைதொறு நிறுவின னுலகு சேரினும்
பிசைதொழின் மறவரைப் பிறிதென் பேசுவ
விசையுறு பறவையும் விலங்கும் வேற்றவு
மசைதொழி லஞ்சின சித்தி ரத்தினே.

உலகு சேரினும் பிசைதொழின் மறவரைத்திசைதொறும் நிறுவினன் என மாற்றிப்பொருள்கொள்க. உலகு-ஆகுபெயர். அவன் காவலைக்குறித்துச் சொல்வது பிறிதென்னை? விசையுறு பறவை-விசையாகப்பறந்து செல்லும் பறவை. வேற்றவும்- பிறவும்; என்றது காற்றுமுதலியவற்றை. அவர்கள்காவலால் சித்திரத்தைப் போல் அசைவில்லாமலிருந்தன என்க. அசைதொழிலஞ்சின எனவே, அசைவில்லாமலிருந்தன என்பது கருத்து.

(கக) தாட்சியிங் கிதனின்மேற் றருவ தென்னினி
மாட்சியோர் குரங்கினு லழிந்த மாநக
ராட்சியு மமைவுமென் னரசு நன்றெனாச்
சூட்சியின் கிழவரை நோக்கிச் சொல்லினான்.

இனி இதனின் மேல் தாட்சிதருவது என்? என்? என்னும் வினா ஈண்டு இன்மைகுறித்து நின்றது. "கற்றதனாலாய பயனென்" என்புழிப்போல. தாட்சி-கீழ்மை. மாநகர் மாட்சி என்க. அமைவு-அடக்கம். அரசுக்குரிய (காவன் முதலிய) அமைவுமாம். சூட்சியின் கிழவர்—மந்திரிமார்.

(௧௨) சுட்டது குரங்கெரி சூறை யாடிடக்
கெட்டது கொடிநகர் கிளையு நண்பரும்
பட்டனர் பரிபவம் பரந்த தெங்கணு
மிட்டதிவ் வரியணை யிருந்த தென்னுடல்.

குரங்கு நகரைச் சுட்டது. அதனால் (அந்நகர்) எரி கொள்ளை கொள்ளக்கெட்டது என்க. சுடுதல் - நெருப்புக்கொளுவுதல். கொடிநகர் என்றான் எரிக்கப்படக்கூடாத அரசின் வலியுடைமையும் அழகுடைமையுந் தோன்ற. இனிக் கொடிவழியாகவே நகரைச் சுட்டது என அக் குரங்கின் வீரந்தோன்றக் கூறினான் எனினுமாம். அதனை "கொடியைப்பற்றி விதானங் கொளுத்தியே" என முன்னர்க் கூறுமாற்றானறிக. பரிபவம் - அவமானம். இட்டதாகிய அரியணை என்க. இவ் வரியணையிலிருந்தது (யானன்று) எனதுடலே. யான் உயிரோடு இவ் வாசனத்தில்வீற்றிருக்கவு மிதுநிகழ்ந்தமையின் யான் இறந்தவனேயன்றி உயிரோடிருந்தவனல்லன்என்பான்'இவ்வரியணை யிருந்த தென்னுடல்' என்றான்.

(௧௩) ஊறுகின் றனகிணை றுதிர மொண்ணக
ராறுகின் றிலதன லகிலு நாவியுங்
கூறுமங் கையர் நறுங் கூந்த லின்சுறு
நாறுகின் றதுநுகர்ந் திருந்து நாமெலாம்.

அகிலும் நாவியும் (கமழ்கின்ற) கூந்தல் என ஒரு சொல் அவாய் நிலையானே வருவித்துமுடிக்க. இனி நாறும் என்பது நறும் எனக்குறுகி நின்றதாகக்கொண்டு முடிக்கினுமமையும். சுறு - கருகுதலா லுண்டான மணம். நாம் அவற்றை முறையே நாவானும், உடம்பானும், மூக்கானும் நுகர்ந்திருந்தேம் என்க. அதனைப்பிடித்துக்கொல்லும் வலிமையற்றவர்களாய்ப் பேடியர்கள்போல் திருப்தியாக உண்டுகொண்டிருந்தேம் என்பான் இவ்வாறு கூறினான் எனினுமாம்.

சி. கணேசையர்.

# இந்தியா - இந்து

இக் காலத்தில் "இந்தியா" என்னும் பெயரால் யாண்டும் பிரசித்திபெற்று விளங்கும் எம் மாதிருபூமியானது பண்டைக்காலத் தோராற் "பரதகண்டம்" என வழங்கப்பட்டதென்பது பழையநூற் பயிற்சியுடையார் எவர்க்கும் நன்கு தெரிந்ததாகும். இப் பெயர்களுள் எது முன்னையது? எது பின்னையது? எனவும், ஒருபெயருளதாக மற்றொன்று நவமாய்ப்புகுந்தது எவ்வாறெனவும் ஆசங்கைகள்நிகழுமன்றே. அதனால், இப் பெயர்கள் இத் தேயத்திற்கு எக்காரணத்தால் வழங்கப்பட்டன என ஆராய்தறக்கது.

முதலாவது, பரதகண்டமென்பது பரதனால் ஆளப்பட்டமையால் வந்தபெயர். பாரத வருடம் என்னும் பெயரும் அப்பொருட்டு. ஈண்டுப் பரதனென்றது சந்திரகுலத்தரசனாகிய துஷ்யந்த மகாராசனுக்குச் சகுந்தலையிடத்துத் தோன்றிய புத்திரனை. அப் பரதன் வழித்தோன்றினோர் பாரதர். அவரைப்பற்றிக்கூறும் இதிகாசம் பாரதம். பரத மகாராஜனால் அரசாளப்பட்ட காரணத்தால் இந் நாடு பரதகண்டம் என்பது.

இனி, இந்தியா என்னும் பெயர் வருமாறு.—சிந்து என்பது பொசிதல், ஊறுதல், ஓடுதல் முதலிய பொருளைக்கொண்ட "ஸ்யந்த்" என்னும் வினையடியாகப்பிறந்த ஓர் ஆரியபதம். அஃது ஆறு, கடல் என்பவற்றிற்குப்பெயர். பூர்வத்தில் ஆரியர்வந்து முதற்குடியேறிய பாகம் "ஸப்தஸிந்தவ" மெனப்பட்டது. ஏழுயாறுகள் ஆண்டுண்மையின் அஃது அவ்வாறுபெயர்பெற்றது. அவ்வேழுட் "சிந்து" என்பதும் ஒன்று. ஸப்தஸிந்தவமென்னும் பெயர் வேதத்திற் காணப்படும். அந்தப்பிரதேசத்தை இக் காலத்துப் "பஞ்சாப்" என வழங்குப. ஆண்டுக்குடியேறிய பூர்வ ஆரியருள் ஒரு சாராராக வைத்து எண்ணப்படும் பாரசீகர் காலதேச வேறுபாட்டினாற்போலும் ஸகரத்தை யுச்சரிக்குஞ் சாமர்த்தியமற்றவராய் அதனை ஹகரமாக்கி ஸப்த ஸிந்தவ மென்பதை ஹப்தஹிந்தவ மெனவும், ஸிந்து

என்பதை ஹிந்து எனவும் வழங்கினர். அதனால், இத் தேசச் சனங்களையும் "ஹிந்து"க்களென்றனர். "ஜெந்தாவஸ்த" மென்னும் பாரசீக சமயநூலில் ஆரியர் குடியேறிய இந் நாடு "ஹப்த ஹிந்தவ" மெனக் குறிக்கப்பட்டிருத்தலே யிதற்குச்சான்றாகும். ஜெந்தாவஸ்தமே வேதம் ஒழிந்த ஏனை நூல்களெல்லாவற்றுக்கும் மிக முந்தியதாக எண்ணப்படுவது.

அக்காலத்தில் எமது தேசம் மேலைத்தேசங்களில் அதிபிரசித்தி பெற்றிருந்தது. விவிலியநூல் முதன் முதலில் எழுதப்பட்ட பழைய எபிரேய பாஷையில் "ஹிந்த" என்றே இந் நாட்டை வழங்கினர். கிரேக்கரும் வியாபார முதலியவற்றால் கீழைத்தேயங்களோடு சம்பந்த முற்றிருந்தனர். ஹிந்த என்பது கிரேக்கபாஷையில் "இந்தியொஸ்" என மருவி வழங்கப்பட்டது. பழைய காவியங்களில் யவனர் என்றெடுத்துக் கூறப்பட்டார் இக்கிரேக்கரே. கிரேக்கபாஷையில் வழங்கிய இந்தியொஸ் என்பதிலிருந்து "இந்தியா" என்னும் பெயர் வந்தது. அதனால், இந்தியா இந்து ஹிந்து என்னும் பதங்கள் பண்டைக்காலந்தொட்டுவழங்கிவரும் பிராசீன பதங்களேயென்பது நன்கு துணியப்படும். பரதகண்டவாசிகளை இந்துக்களெனவும், அவர் சமயத்தை இந்துசமயம் எனவுங் கூறுதல் இழுக்காகாது என்க.

தி. சதாசிவ ஐயர்.

உ

சிவமயம்

# சமயோசிதச் செய்யுட்டிரட்டு

பல்வளம்பழுநிய நஞ் செந்தமிழ்நாட்டின்கண் சமயோசிதமாகப்பேசவுஞ், சமயோசிதமாகக் கவிகூறவுங் கூடிய திறமை, வித்துவானெனப் பெயர்பூண்டா ரெல்லார்க்கும் வாய்ப்பதொன்றன்றாம். "ஆர்த்தசபை நூற்றொருவ ராயிரத்தொன் றாம்புலவர், வார்த்தை பதினாயிரத்தொருவர்" என்பது மூதுரையன்றோ. சிலர் தொல்காப்

பியத்தையுந் தொல்காப்பியங்களையுங் கசடறக்கற்றுப் பூர்ணபாண்டித்தியத்தை யடைந்திருப்பினும், நல்லவைக்களங்களினும், நல்லமையங்களினும் வாயடைத்து மதிமருண்டு மூகையராகின்றனர். சிலர் "கற்றதூஉமின்றிக் கணக்காயர்பாடத்தா" லென வான்றோர் கூறியாங்குச் சிலகற்று நல்லவைகளிலும், நல்லமையங்களிலும் பண்டிதர்முதற் பாமரரீறாக யாவரும் ஆனந்திக்குமாறு சகலகலா வல்லவரென நடித்துக் காட்டுகின்றனர். ஒன்றுமறியாத பேதை நல்லார் குழீஇய வவையிற்றானும் அவர்போலப் பேசவிரும்பல்"கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டு, மில்லாதாள்பெண்காமுற்றற்று" எனப் பொதுமறையருளிய பொய்யாமொழியார் கூறியதையொக்கு மன்றோ; அங்ஙனமன்றி யவன் பேசுவதிற் சதுரனாயிருப்பினும் "கல்லாதானொட்பங்கழியநன்றாயினுங்,கொள்ளாரறிவுடையார்" என்றதனாலவன் கூற்றை யான்றோராமோதியாது இகழ்வரென்க ஆகையாலவன் மௌனவிரதத்தைக் கடைப்பிடித்தொழுகின் அவனையான்றோர்கள் பாராட்டிப்புகழ்வதற்கையமின்றாம். "கல்லாதவரும்நனி நல்லர்கற்றார்முற், சொல்லாதிருக்கப்பெறின்"என்பது, தேவர்வாக்கன்றோ. நிற்க, சமயோசிதச்சொற்றிரளையும், செய்யுட்டிரளையும், அளவிட்டரிய அனந்தனாலும் அனந்தகாலஞ்செலினுமுடியா. ஆன்றோர்களியற்றிய பல நூல்களிலுமுள்ள செய்யுட்டிரள்களைக் கூடியவரையிற் றிரட்டியொரு நூலாகவச்சிடலாம். அது பல்லோர்க்கும் பயன்படுமென்பதிலையமின்றாம்; அது கற்றுத்துறைபோய பேரறிவாளர்கள் செய்யத்தக்க பெருங்காரியங்களிலொன்றாம். அன்னோர் அக்காரியத்தைச்செய்யும்போது செய்க. யான் இதுபொழுது செந்தமிழ் கற்குஞ்சிறார்க்குப் பயன்படுமாறு பெரியாராங்காங்கு நூல்களிற் கூறியிருக்குஞ் சமயோசிதச்செய்யுட்களைச் சிறிது எழுதிவரத் துணிந்தேன். இஃது இடையூறின்றி யினிதுமுடியுமாறு எல்லாம் வல்ல முழுமுதற்கடவுளைச் சிந்தித்து வாழ்த்தி வந்திக்கின்றேன்.

அருமறைச்சிறப்பும் அந்தணர் சிறப்பும்

க. மறையே நமது பீடிகையா மறையே நமது பாதுகையா
மறையே நமது வாகனமா மறையே நமது நூபுரமா
மறையே நமது கோவணமா மறையே நமது விழியாகு
மறையே நமது மொழியாகு மறையே நமது வடிவாகும்.

௨. வேதந் தானே நமதாணைச் சத்தி வடிவாய் விதிவிலக்காய்ப்
போதங்கொளுத்திநிலைநிறுத்திப்போகங்கொடுத்துப் பல்லுயிர்க்
பேதஞ்செய்யும்பிணியவிழ்த்தெம்பிரியாவீடுதருவதுதே [கும்
ஞதஞ்செய்யுந் தார்வேந்தே நமது செங்கோ லது வாகும்.

௩. அந்த மறைக ளடக்குறுதி யாவ ரந்நூல் வழிகளிநோய்
சிந்த மகத்தீ வளர்த்தெம்பாற் சிந்தை செலுத்து மந்தணரா
லிந்த மறையோர் வேள்விமழைக் கேது வாகு மிவர்தம்மை
மைந்த விகழ்ந்து கைவிட்டா யதனுன் மாரி மறுத்தன்றால்.

௪. மும்மைப் புவனங் களுமுய்ய முத்தீ வேட்கு மிவர்தம்மை
நம்மைப் போலக் கண்டொழுகி நாளு நாளு மறம்பெருக்கிச்
செம்மைத் தருமக் கோலோச்சித் திகிரி யுருட்டி வாழ்தியென
வும்மைப்பயன்போலெளிவந்தாருலவாக்கிழியொன் றுதவுவார்.

(திருவிளை. உலவாக்கிழி. ௯-முதல், ௧௨-வரை)

௫. கரிய மாலினுங் கண்ணுத லானினு
முரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமொ ரைந்தினு மெய்யினும்
பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால்.

௬. அந்த ணாளர் முனியவு மாங்கவர்
சிந்தை யாலருள் செய்யவுந் தேவரி
னொந்து ளாரையு நொய்துயர்ந் தாரையு
மைந்த வெண்ண வரம்புமுண் டாங்கொலோ.

௭. அனைய ராதலி னையவிவ் வையத்தி
வினையி னீங்கிய மேலவர் தாளிணைப்
புனையுஞ் சென்னிய யாய்ப்புகழ்ந் தேத்துதி
யினிய கூறிநின் றேயின செய்தியால்.

௮. ஆவ தற்கு மழிவதற் கும்மவ
ரேவ நிற்கும் விதியு மென் றுலினி
யாவ தெப்பொரு ளிம்மையு மம்மையுந்
தேவ ரைப்பர வுந்துணை சேர்த்ததே.

(இராமா. மந்தரைசூழ் சிப். ௭-முதல், ௧௦-வரை.)

இச்செய்யுட்களாலருமறையின் பெருமையித்துணைத்தென்பது மதனையோதுமந்தணர் பெருமை யிவ்வளவிற்றென்பது நன்கு விளங்குகின்றன.

கல்வியறிவோழுக்கங்களிற் சிறந்த பெரியோர்கள் நமதிற் கெழுந்தருளின் அப்பொழுதுபசரிக்க முறைமை

கூ. நிலஞ்செய்தவ மென்றுணரி னன்று நெடியோயென்
னலஞ்செய்வினை யுண்டெனினு மன்றுநகர் நீயான்
வலஞ்செய்து வணங்கவெளி வந்தவிது முந்தென்
குலஞ்செய்தவ மென்றினிது கூறமுனி கூறும்.

(இராமா. கையடை. சு.)

கo. அந்தமில் கால நோற்ற வாற்றலுண் டாயி னன்றி
யிந்திரன் முதலி னோரா லெய்தலா மியல்பிற் றன்றே
மைந்தநின் பாதங் கொண்டெம் மனைவரப் பெற்று வாழ்ந்தே
முய்ந்தனம் வினையுந் தீர்ந்தே முறுதிவே றிதனி னுண்டோ.

(இராமா. கிட்கிந்தைப். சக.)

கக. முன்ன மேதுயின் றருளிய முதுபயோ ததியோ
பன்ன காதிபப் பாயலோ பச்சையா லிலையோ
சொன்ன நால்வகைச் சுருதியோ கருதிநீ யெய்தற்
கென்ன மாதவஞ் செய்ததிச் சிறுகுடி லென்றான்.

(பாரத. கிருட்டிணன்றூ. அo)

இச்செய்யுட்களாற் பெரியோரை முகமன் கூறி யுபசரிக்கு முறைமை நன்கு விளங்குகின்றது.

மாதர்கட்கு ஏனைய வனப்பினுங் கூந்தலே வனப்பென்பது

கஉ. பூந்துகிலாற் பொன்னாற் பொதியின் மலைப்பிறந்த
சாந்தத்தாற் பன்மணியாற் சாலப் புனைந்தாலு
மேந்திழையார் தங்க ளெழிலெல்லா நெய்த்திருண்ட
கூந்தலி னின்றேற் குறையுங்கா ணென்பாரும்.

(சீகாளத்தி- விடசங். கரு.)

இச்செய்யுளாற் பெண்களுக்குக் கூந்தலே மிக்கவழகென்பது பெறப்பட்டது.

பெண்களணியுமிழைகளில் வளையணியே சிறந்தது

௪௩. இரங்குமே கலைசிலம் பன்றி யேனைய
விரும்பிய குழைதொடி மின்செய் கண்டிகை
மருங்கிறச் சுமப்பினும் வளைகைக் கில்லெனி
னரும்பிய முலையினார்க் கழகுண் டாகுமோ.

(திருவிளை. வளையல். உ௪.)

இச்செய்யுளான் மகளிரொத்துணையணியணியினும் வளையின் றெனினொருசிறிதும் பயனில்லையென்பது புலப்படுகின்றது.

சாதிவிசாரிக்கக்கூடாதவர்களிவரென்பது

௪௪. கற்ற வர்க்கு நலனி றைந்த கன்னி யர்க்கும் வண்மைகை
யுற்ற வர்க்கும் வீரரென் றுயர்ந்த வர்க்கும் வாழ்வுடைக்
கொற்ற வர்க்கு முண்மை யான கோதின் ஞான சரிதரா
நற்ற வர்க்கு மொன்று சாதி நன்மை தீமை யில்லை யால்.

௪௫. அரிபி றந்த தன்று தூணி லரனு வேயி லாயினன்
பரவை யுண்ட முனியு மிப்ப ரத்து வாசன் மைந்தனு
மொருவ யின்கண் முன்பி றந்த தொண்ச ரத்தி னல்லவோ
வரிய வென்றி முருக வேளு மடிகளும் பிறந்ததே.

(பாரத. வாரணா. ௬அ, ௬௬)

இச்செய்யுட்களாலின்னின்ன தன்மையுடையவர்களைச் சாதி விசாரிக்கக்கூடாதென்பது தெற்றென விளங்குகின்றது.

இரகசியம் பேசுமிடத்திற் குரியராகாதவர்

௪௬. துன்று பிணியோர் துறந்தோ ரடங்காதோர்
கன்று சினமனத்தோர் கல்லா தவரிளையோ
ரொன்று முறைமை யுணரா தவர்மகளி
ரென்றுமிவர் *மந்திரத்தி னெய்தப் பெறாதாரே.

( பாரத. கிருட்டிணன்றூ. ௯உ.)

---

* மந்தணத்தினெனவும்ப்பிரதிபேதம்.

இச்செய்யுளா னிரகசியம் பேசுமிடத்திலிவர்களை வைத்துப் பேசக்கூடாதென்பது தெளிவாம்.

குற்றேவ லெவ்வாற்றனுங் கொடிதென்பது

௧௭. ஓவா வறுமை யுழந்தாலு மற்றொருவ
ரேவா துயிர்வாழ்க் திருத்தலே நன்றாகுந்
தாவாத செல்வங் தருமேனுங் குற்றேவ
லாவா கொடிதுகொடி தென்பாரு மாயினர்.
(சீகாளத்தி. விடசங். ௬௭)

இச்செய்யுளாலெவ்வளவு செல்வம் வந்தாறினுங்குற்றேவல் மிகக்கொடிதென்பது புலப்படுகின்றது.

(இன்னும் வரும்.)

ஜீ. சதாசிவம்பிள்ளை.

## DEPARTMENT OF AGRICULTURE, MADRAS.

## நன்செய் நிலச்சுவான்களுக் கறிவிப்பு

ஜூன்மீ முதல் தேதியில் ஏகர் ஒன்றுக்கு $2\frac{1}{2}$ (பட்டணம்) படி வீதம் பசுந்தாள் உரத்துக்காக நெல்லிக்குப்பத்துக்கு அடுத்த பாலூர் விவசாயப் பண்ணையில் விதைக்கப்பட்ட வங்காளத்தகணகச்செடிகளின் வளர்ச்சியை நன்செய்நிலச் சுவான்கள் இப்போது வந்து பார்க்கலாம். உ௦-படி விதைக்கு விலை ரூ. 0—15—0 ஆகும். செடிகள் மூன்றடிமுதல் ஐந்தடிவரையில் வளர்ந்து மிகவும் செழிப்பாயிருக்கின்றன. இச்செடிகளைச் சீக்கிரத்தில் சம்பா நடவுக்கென்று பசுந்தாள் உரமாக மடக்கியுழுதுவிடப்படும். நன்செய் நிலத்திற்குச் சுலபமாய்த் தழையுற்பத்திசெய்ய இஃதல்லவோ நல்ல வழி. தேவையானவர்கள் நெல்லிக்குப்பத்துக்கு அடுத்த பாலூர் விவசாயப் பண்ணை மானேஜருக்கு எழுதி விதை தருவித்துக்கொள்ளலாம்.

புன்செய் நிலச்சுவான்களு முக்கியமாய் மானவாரிப் புன்செய் உள்ளவர்கள் பாலூர் விவசாயப் பண்ணையில் சாதாரண எருது கள் உழக்கூடிய சிந்துக்கலப்பையால் உழப்பட்ட பூமியில் சாகு படியாயிருக்கும் கம்பையும், அடுத்த நாட்டுக்கலப்பையால் உழப் பட்ட பூமியில் சாகுபடியாயிருக்கும் கம்பின் வளர்ச்சியையும் இப் போது பார்வையில் சிந்துக் கலப்பையின் குணநிசயம் இன்னதெ னத்தானே வெளிப்படும். சர்க்கார்ப் பண்ணைக் கம்போ இவ்வருடக் காய்ச்சலினால் வளர்ச்சி குறைந்திருந்தபோதிலும் பயிர்கள் செழித் துக்கருத்துத் தடித்த கதிர்களுடன் இருக்கின்றன. அடுத்த நிலங் களிலோ பயிர்கள் அனேகமாய்க் கரிந்துபோய்விட்டன. இறைக் கக்கூடிய இடங்களிற்கம்புக்குத் தண்ணீர் இறைக்கிறார்கள். இவ் வளவு அநுகூலத்தைத் தரக்கூடியதாய் ஆழமாய் உழும் (ரூ. 3-8-0 விலையுள்ள) சிந்துக் கலப்பையை நெல்லிக்குப்பத்துக்கடுத்த பாலூர் சர்க்கார் விவசாயப்பண்ணை மானேஜருக்கு எழுதிப்பெற்றுக்கொள் ளலாம்.

*Madras,*
*August 1911.*

## கால்நடைகளுக்கு வியாதிவராமல் அம்மை குத்தலும் அதன் உபயோகங்களும்

இருபது முப்பது வருஷங்களுக்குமுன் தொத்துவியாதிகளின் உண்மைக்காரணங்கள் இப்படிப்பட்டவையென்பது ஒருவருக்குந் தெரியாது. தேசமெங்கும் பரவி மிகவும் அதிகமான மரணங்களை யுண்டுபண்ணுகிற வைசூரி நோயும், வெதுப்பு என்ற வெக்கை (Rinderpest) நோயும், போன்ற கொடியநோய்கள் மாரியம்மை யென்ற காளிதேவியினால் உண்டாவதாக இந்தியாவிலுள்ள சாதா ரண ஜனங்கள் இன்னும் நம்பியிருக்கிறார்கள். மனிதர்களை வரு த்துகிற வைசூரிக்கும், மாடுகளைப் பிடிக்கிற வெதுப்புக்கும், அம் மையென்ற பொதுப்பெயர் வழங்குகின்றது. அம்மை அல்லது மாதாவென்பது காளிதேவியைக் குறிக்கிறதென்று சொல்லவேண்டி

யதில்லை. நாகரிக மிருந்த ஐரோப்பாவிலுள்ளவர்களும் சிறிது காலத்துக்கு முன்னர் யாம் மேலே சொல்லியதுபோன்ற நம்பிக்கைகளை உடையவர்களாயிருந்தார்கள். அங்கே இன்னும் நாட்டுப்புறங்களில் அப்படிப்பட்ட நம்பிக்கைகள் ஒழிந்துபோகவில்லை.

2. தொத்துவியாதிகளைப்பற்றிய ஆராய்ச்சியினால் அவ்வியாதிகளின் காரணங்கள் கண்டுபிடிக்கப்படவில்லை. வேறெவ்விதமாகக்கண்டுபிடிக்கப் பட்டனவென்றால், அதிநுட்பமான ஜெந்துக்களும் பூண்டுகளும் முன்புள்ள ஜெந்துக்கள் பூண்டுகளிலிருந்து உற்பத்தியாகின்றனவா? அல்லது சுயமாகத் தாமே உண்டாகின்றனவா? என்ற சந்தேகத்தை நிவிர்த்திசெய்யும்பொருட்டு விசாரணைகளும், சோதனைகளும் செய்யப்பட்டபோது, தொத்துவியாதிகளின் காரணங்களும் அந்த நுட்ப ஜெந்துக்கள், பூண்டுகளின் காரணங்கள்போலிருக்கலாமென்று முதலில் ஊகிக்கப்பட்டுப் பின்பு உறுதிப்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆகையால், ஜீவோற்பத்தி எவ்வாறு நிகழ்கின்றதென்று தெரியும்படி நிகழ்ந்த விசாரணை எப்படி முடிவுபெற்றதென்பதைத் தெரிவது தொத்துவியாதிகளின் காரணங்களைத் தெரிந்துகொள்வதற்கு மிகவும் உபயோகமாகவிருக்கும். வியாதியின் காரணத்தை அறிவது சிகிச்சைசெய்வதற்கு முக்கியமானதென்பது சொல்லாமலே விளங்கும்.

3. சில ஜெந்துக்கள் முற்காரணமின்றித் தாமே உற்பத்தியாகின்றனவென்ற நம்பிக்கை பூர்வகாலங்களில் சர்வசாதாரணமாயிருந்தது. "சாணியில் புழு உண்டாகிறது" என்பது இந்தப்பழைய நம்பிக்கையைச்சேர்ந்தது. "சாமிதான் பொய்த்ததென்றால் சாணி பாரு" என்று ஒருவர் பாடியதும் இந்த நம்பிக்கையினாலேயே. இந்தப்பாட்டில் சாணி என்றது பிள்ளையாராகப் பாவனைசெய்து பிடித்துவைக்கப்பட்ட சாணத்தை. அப்படிச்செய்யப்பட்ட சாணம் சுருக்கமாயிருப்பதனால் சீக்கிரம் உலர்ந்துவிடுகிறது, அதனால் மற்றைச்சாணத்தில் புழு உண்டாவதுபோல அதில் உண்டாகிறதில்லை. நாடாப்புழு (Tape-worm) என்ற ஒருவகைக்குடற்புழுவானது குடலிற்றானே யுற்பத்தியாவதாக நம்பப்பட்டிருந்தது. அழுக்குத்தண்ணீரில் அற்பஜெந்துக்கள் உற்பத்தியாகின்றனவெ

ன்றும், பிராணிகளின் வேர்வை நீரிலிருந்து பேன்கள் பிறக்கின்றனவென்றும், அரிஸ்டாட்டில் (Aristotle) என்ற ஐரோப்பிய ஆதிசாஸ்திரி கூறியிருக்கிறார். வேர்வையிலிருந்து சில ஜெந்துக்கள் உற்பத்தியாகின்றனவென்ற நம்பிக்கை ஹிந்துக்களுக்கும் உண்டென்பது சுவேதஜம் என்ற வார்த்தையினால் விளங்கும். சுவேதஜம் என்ற பதத்தின் பொருள் வேர்வையிற் பிறப்பதென்பது.

4. இவ்விஷயங்களைப் பற்றிக் கவனமாய்ச்செய்த விசாரணையினால், தாமே உற்பத்தியாகின்றவைகளென்று நம்பப்பட்டிருந்த அனேக ஜெந்துக்கள் அப்படிப்பட்டவைகள் அல்லவென்று நிச்சயிக்கப்பட்டன. சாணத்தில் ஈக்கள் முட்டையிட, அந்த முட்டைகளிலிருந்து புழுக்கள் உண்டாவதுபோலவே, இறைச்சியிலும் புழுக்கள் உண்டாகின்றன. சாணம் அல்லது இறைச்சியை ஈக்கள் நுழையக்கூடாத சிறுகண் வலைக்குள் வைத்துவிட்டால் அவைகள் ஒன்றிலும் எவ்வளவு காலமானாலும் புழுக்கள் ஜனிப்பதில்லை. ஆயினும் உண்ணும் உணவு குடிக்கும் தண்ணீர் இவைகளோடு குடலினுள்ளே பிரவேசித்த முட்டைகளிலிருந்து நாடாப்புழு (Tape-worm) கீரைப்பூச்சி (Round worm) முதலிய குடற்பூச்சிகள் உண்டாகின்றனவென்று ரூபிப்பது அவ்வளவு இலகுவாயிருக்கவில்லை. இப்படிப்பட்ட உண்மைகளை ஸ்தாபித்தற்குச் சில காலஞ் சென்றன. பல உறுப்புக்களோடு கூடிய ஜெந்துக்கள் எவையுந் தாமாக உற்பத்தியாவதில்லையென்பது சொற்ப சாஸ்திரப்பயிற்சியுடையவர்களாலும் நாளடைவில் துணியப்பட்டுவிட்டது. ஆயினும் சில சாஸ்திரிகள் மிகத் தாழ்வான சில நுட்பஜீவன்கள் (Organisms) புதிதாகவே உற்பத்தியாகின்றனவென்ற கொள்கையுடையவர்களாயிருந்தார்கள்.

5. ஜாக்கிரதையாகச் சிறுகண்வலைக்குள் வைக்கப்பட்ட மாமிசத்திலும் மாமிசம் வெந்த நீரைப் புட்டியில் விட்டு நல்ல மூடி கொண்டு இறுக்கமாக மூடினவத்திலும் பலகோடி சிற்றுயிர்கள் தோன்றுவது பூதகிருஷ்டிக்கண்ணாடியினால் தெரிந்தபோது, மேலே சொல்லிய கொள்கை பலமடைந்ததாகத் தோன்றியது. இச் சிற்றுயிர்கள் அதிசீக்கிரமாகத் தோன்றியதனால், அவைகள் முன்புள்ள சிற்

றுயிர்களாலல்லாமல் தாமே உற்பத்தியாகின்றனவென்றும், ஆதியில் நமது பூமியில் ஜீவோற்பத்தி இப்படித்தான் நிகழ்ந்திருக்க வேண்டுமென்றும் இப்படி யுண்டாகிய அற்ப ஜீவன்களிலிருந்து பெரிய ஜீவன்கள் படிப்படியாக நெடுங்காலத்தில் உற்பத்தியாயிருக்கின்றனவென்றும் அனேக சாஸ்திரிகள் கூறுகின்றார்கள்.

6. பூமியிலே ஆதியில் ஜீவோற்பத்தி எவ்வாறு நிகழ்ந்ததென்று ரூபிப்பது அசாத்தியமாலும், தற்கால நிலைமையில் எவ்வளவுநுட்பமான ஜெந்து அல்லது தாவரமும் (Plant) முந்திய ஜெந்துதாவரமில்லாமல் சுயமாக உற்பத்தியாகிறதில்லையென்று வேறு சில சாஸ்திரிகள் கூறினர்கள். இவ்வாறாக ஜீவோற்பத்தி விஷயமாக இருதிறத்தார் ஏற்பட்டார்கள். ஒரு கட்சியார் ஜீவன்கள் தாமே உற்பவிக்கின்றனவென்பவர். மற்றொரு கட்சியார் அவைகள் முந்திய ஜீவன்களால் உற்பத்தியாகின்றனவென்பவர். முந்தியவர் நன்றாகக்கொதித்த மாமிச நீரை ஒரு புட்டியில் விட்டுச் செவ்வையாக மூடிவைத்தபின் அதில் சிற்றுயிர்கள் தோன்றுதற்குக்காரணம் ஜீவசுயோற்பத்தியேயென்றும், பிந்தியவர்கள் கொதித்த மாமிச நீரிலாவது அதனோடு அடைபட்ட வாயுவிலாவது இருந்த சிற்றுயிர் வித்துக்களே சிற்றுயிர்களாயிருக்கக்கூடுமென்றும் விவாதித்தார்கள்.

7. இவ் விஷயத்தை யாராய்ச்சி செய்துகொண்டிருந்த ஒருவர் மாமிச ரசத்தைக் கண்ணுடிக் குப்பிகளில் விட்டுக்கொதிக்கவைத்துக் கொதித்துக்கொண்டிருக்கும்போதே அக்குப்பிகளின் வாய்களை உருக்கி மூடிவிடும்படி செய்தார். இப்படி மூடி நெடுங்காலங் கழிந்த பின்பும் அந்தக்குப்பிகள் ஒன்றிலும் எவ்வகை உயிரும் தோன்றவில்லை. கேவலம் உண்மையறியும்படி செய்த சோதனையினுற்கண்டுபிடிக்கப்பட்ட இந்த முறை லௌகிக காரியங்களுக்கு உபயோகமாகியது. எப்படியென்றால் சீக்கிரம் அழுகிக்கெட்டுப் போகும் இயல்புள்ள இறைச்சி காய்கனி முதலிய பதார்த்தங்கள் மேற்கூறிய முறையினுல் என்றும் அழியாமற் பாதுகாக்கப்பட்டு அபார வியாபாரச்சரக்குகளாகித் தூரதேசங்களுக்கு அனுப்பப்படுவது சாத்தியமாயிற்று.

8. இந்த ஆச்சரியமான முறையைக்கண்டும், ஜீவசுயோற்ப த்திவாதிகள் பின்னடையவில்லை. அவர்கள், குப்பிகளில் உள்ள வாயுவின் அளவும் குணமும் அக்குப்பிகள் கொதிக்கும்போது மாறுதல் அடைந்தனவென்றும், அதனால் சிற்றுயிர்கள் உற்பத்தி யாகவில்லையென்றும் விவகரித்தார்கள். வேறொரு சோதகர் பின் வரும் பரீட்சைசெய்தார். இவர் ஒரு குப்பியில் மாமிசத்தைக் கொதிக்கச்செய்து பின்பு அதிலுள்ள நீராவி வெளியே போகவி ட்டு ஆவிபோவது நின்ற உடனே குப்பிக்குள்ளே வெளியேயுள்ள வாயு பிரவேசிக்குமுன் அந்த வாயுவைக் காஸ்டிக்ஸோடா (Coustic Soda) ஸல்பூரிக் ஆசிட் (Sulphuric Acid) என்ற ரஸாயன வஸ் துக்களோடு சம்பந்தப்பட்டுச் செல்லும்படி செய்தார். இவ்வாறு செய்ததன் நோக்கம வாயுவைக் கொதிக்கச்செய்யாமல் அதன் ஜீவோற்பாதன சக்தியை நீக்குவதே. கொதித்தலுக்குள்ளாகாத வாயு சாதாரணமாக உள்ளே பிரவேசித்துக்கொண்டிருந்தும் குப் பியில் ஜீவோற்பத்தி சிறிதும் நிகழவில்லை.

9. இப்போது எதிர்க்கட்சியார், உஷ்ணத்துக்குள்ளாகவா வது ரஸாயந விகற்பத் (Chemical Change) துக்குள்ளாகவாவது செய்யப்பட்ட வாயு ஜீவோற்பத்தி செய்யும் சக்தியை இழந்துவிடு கிறதென்று கூறினார்கள்.

10. பின்விவரிக்கும் உபாயத்தினால் ஜீவசுயோற்பத்திவாதம் முடிவில் தோல்வியடைந்தது. மாமிசரசத்தை ஒரு குப்பி அல்லது சோதனைக்குழாயிற் (Test tube) சிலபாகமட்டும் நிறையும்படி விட் டுக் கொதிக்கவைத்தாக கொதிப்பது நிற்குமுன்னமே குப்பியின் வா ய்க்குள் சிறிதுசிறிதாகப் பஞ்சையடைக்கவேண்டும். அப்படி அ டைக்கும் பஞ்சானது நீளமும் உறுதியுமான அடைப்பாக அமைந்த உடனே, பஞ்சடைப்பதை நிறுத்திவிடவேண்டும். கொதிக்கும்படி செய்துகொண்டிருந்த தீயினின்றும் குப்பியை அப்புறப்படுத்திய போது, குப்பிக்குள் உள்ள மாமிச ரசம் குளிர்வதனால், குப்பியின் மேற்பாகத்தில் நிறைந்திருந்த நீராவி இறுகி வெற்றிடமுண்டாகின் றது. அந்த வெற்றிடத்தை நிரப்ப வெளியேயுள்ள வாயு உள்ளே புகுகின்றது. ஆயினும் அப்படிப்புகும்போது, அதில் உள்ளதூள்

கள் நெருக்கமாக அடைத்திருக்கும் பஞ்சின் இடைகளிற் சிறிதும் தப்பாமற் சிக்கிக்கொள்ள, சுத்தவாயுமாத்திரம் குப்பிக்குள் நுழைகின்றது. இவ்வாறு தூள்கள் முற்றும் நீக்கப்பட்ட வாயு உஷ்ணத்தாக்காவது ரஸாயநவிகற்பத்துக்காவது (Chemical change) உள்ளாக்கப்படாமல் குப்பியிற் பிரவேசித்து நெடுங்காலங் கழிந்தபின்னும் அக் குப்பிக்குள் சிற்றுயிர்கள் காணப்படுவதில்லை. குப்பியின் கழுத்தை S என்ற இங்கிலீஷ் எழுத்துப்போல வளைவாகச் செய்துவிட்டால், மேற்கூறியபடி பஞ்சடைக்கவேண்டிய அவசியமுமில்லையென்று பாஸ்டியர் (Pasteur) என்றவர் காண்பித்தார். மாமிசமுதலியவைகள் அழுகுவதற்கு உண்மைக்காரணமாக வாயுவிலுள்ள (சிற்றுயிர் வித்துக்கள் அடங்கிய) தூள்கள் மேற்காட்டிய வளைவின் கீழ்ப்பாகத்தில் தங்கிவிடுவதனால் அவைகள் குப்பியில் உள்ள ரசத்தைச் சேர மார்க்கமில்லாமற் போயிற்று.

11. இவ்வாறு நிரூபிக்கப்பட்டபின்புகூட, ஜீவசுயோற்பத்திவாதிகள் தாங்கள் தோற்றதாக ஒத்துக்கொள்ளாமல் மாமிசரசமானது காய்ச்சப்பட்டகாரணத்தினுற் சிற்றுயிர் உற்பத்தியாவதற்குரிய தன்மையை இழந்துவிட்டதென்று சொன்னர்கள். எதிர்ப்பக்கத்தார், கொதித்த மாமிச ரசமுள்ள குப்பிக்குள் வடிகட்டாத வாயுவைப் பிரவேசிக்கவிட்டுச் சிற்றுயிர் உற்பத்தியாவதைக்காட்டியதனுல், மேற்கூறிய கடைசி ஆக்ஷேபணையும் பயனற்றதாக ஒழிந்தது. மாமிசம் வெந்தநீராகிய மாமிச ரசமொன்றே மேலே சொல்லப்பட்டாலும், பால் கிழங்கு இலை காய் கனிகள்முதலியவைகள் வெந்தநீராகிய இவைகளும் சிற்றுயிர்கள் உற்பத்தியாகத் தக்கவைகள்.

12. பலவகை இந்திரவஸ்துக்களை (Organic matter) நீரில் வேகவைத்து, அவைகள் வெந்த நீர்களைக் குப்பிகளில்விட்டுக் கொதிக்கவைத்துக் கொதித்துக்கொண்டிருக்கும்போதே ஜாக்கிரதையாக மூடினுலும், ஏகதேசமாகச் சில குப்பிகளில் சிற்றுயிர்கள் தோன்றுவதுண்டு. இதற்குக் காரணம் என்னவென்றால், வாயுவிற் சிற்றுயிர்களும் சிற்றுயிர் வித்துக்களும் இருக்கின்றன. இவைகள் கொதிப்புக்குள்ளானபோது சிற்றுயிர்கள் முற்றும் இறந்துவிடுகின்றன; சிற்றுயிர் வித்துக்களும் பெரும்பான்மை இறந்துவிடுகின்றன. ஆயினும்

அவைகளிற் சில சாகாதிருக்கின்றன. இப்படிச் சாகாதிருப்பவைகளே கொதிப்பு ஆறினபின் சிற்றுயிர்களாகப் பரிணமிக்கின்றன. ஷை ரசநீர்களடங்கிய குப்பிகளை ஒருமுறை கொதிக்கவைத்தலோடு நில்லாமல் இடைவிட்டுப் பலமுறை கொதிக்கவைத்தால் (Intermittent boiling) ஒரு கொதி அல்லது இரண்டுகொதியிற் சாகாத சிற்றுயிர் வித்துக்கள் கொல்லப்படுகின்றனவென்று டிண்டால் பண்டிதர் (Tyndall) மிகவும் பிரயாசப்பட்டுப் பலபரீக்ஷைகள் செய்துபார்த்துக் கண்டுபிடித்தார். ஒரு கொதிப்புக்குட்பட்டபோது ஜனிக்காதிருந்த சிற்றுயிர் வித்துக்கள் காலக்கிரமத்தில் சிற்றுயிர்களாய் இரண்டாவது முறை அல்லது பிந்தியமுறை கொதிப்புக் குள்ளானபோது இறந்துவிடுகின்றன.

15. ஜீவோற்பத்தி விஷயமாக விவாதம் நிகழ்ந்துகொண்டிருக்கும் காலத்தில் சிலர் தொத்துவியாதிகளுக்கும், சிற்றுயிர்களுக்கும் சம்பந்தமுண்டு என்னும் கொள்கையைப் பின்பற்றுவாராயினார்கள். ஈஸ்டு (Yeast) என்ற ஒரு நுண்ணிய தாவரத்தினால் பதினி அல்லது பனஞ்சாறு கள்ளாகிறதென்று கண்டுபிடிக்கப்பட்டது. இதனால், பூததிருஷ்டிக்கண்ணாடி வாயிலாகக் காணக்கூடிய ஷை நுட்பத்தாவரம் போன்ற வேறு சிற்றுயிர்களால் தொத்துவியாதிகள் உண்டாகின்றனவென்னும் கொள்கை பலமடைந்தது. பாஸ்டியர் (Pasteur) ரென்னும் பிராஞ்சிய சாஸ்திரியும் காக் (Koch) என்ற ஜெர்மானிய சாஸ்திரியும் வியாதி உண்டாக்கும் சிற்றுயிர்களிருப்பதை நிராக்ஷேபமாக நிரூபித்தார்கள். சில தொத்துவியாதிச் சிற்றுயிர்கள் இவ்வாறு பிறந்து வளர்ந்திருக்கின்றனவென்று தெரிய முயன்று பரீக்ஷித்துப் பார்த்துத் தேர்ந்த தேர்ச்சியினாற் காரியத்துக் குதவும்படியான முக்கியமான பிரயோஜனங்கள் பெறப்பட்டன. அடைப்பான் நோயினாலும், பேய்நாய்க்கடியினாலும், மரணம் நேரிடாமல் விலக்கும்படி பாஸ்டியர் என்பவராற் கண்டுபிடிக்கப்பட்ட அம்மைகுத்தும் முறைகள் மிகப்பயன்படுகின்றன.

(இன்னும் வரும்)

வி. பி. சுப்பிரமணிய முதலியார்,
G. B. V. C.

உ

# நரிக்குடிசத்திரம் தானஸாஸனம்

ஸ்வஸ்தி ஸ்ரீமன் மஹாமண்டலெஸ்வரநு அரிராயர் தளவிபாடன் பாசைக்கி தப்புவாராயாகண்டன் மூவவராயாகண்டன். கண்டநாடுகொண்டு கொண்டநாடு குடாதான், பாண்டிமண்டல ஸ்தாபனாசாரியான். சோளமண்டல பிறதிஷ்ட்டாபனாசாரியான். தொண்டமண்டல சண்டப பிறசண்டன். யீளமுங்கொஙகும் யாலபாணராயன் பட்டணமும் மெமண்டலமும் கணடு கெசவேட்டை கொண்டருளிய ராசாதிராசன் ராசபரமெஸ்வரன். ராசமார்த்தாண்டன். ராசகுலதிலகன். ராசகெம்பீரன். ராசகண்டீரவன். ராசாக்கள தமபிரான். அரசராவணராமன். அநதமபிறகண்டன். ரற்றினகிரீடாதிபதி. ரற்றினசிஙகாசனாதிபதி. சூரியகுலதுஙகன். சந்திரகுலதிலகன். கிஷ்ணாவதாரன். கிலைவாளவந்தோன். குழந்தைநகராதிபன். முல்லைமாலிகையான். விபூதிருத்திராட்சமாலிகை ஆபரணன். வீரவெண்மாலிகையான். சிவபூசை குருபூசை மறவாத வஙகிஷாதிபன். காளநாயகர் காரியதுரந்திரன். வேதாந்த வெதியன். வேதியர்காவலன். பரதநாடகவிற்பன்னன். பங்கையவதனன். சஙகீதசாகித்திய வித்தியாவிநோதன். கலைதெரியும் விற்பனன். கெவுளிவிலாசன். பொதியமாமலையான். வைகையாருடையான். புனப்பிரளையனுடன். பாண்டிவளநாடன். தொண்டியன் துரைகாவலன். துட்டரில்த்துட்டன். துட்டநிக்கிறக சிட்டபரிபாலன். பட்டமானஙகாத்தான். பரதேசிகாவலன். பஞ்சகெதியுவளியான். பஞசவற்னப்பாவாடையான். மும்மதயானையான். மும்முரசதுருமுன்றிலான். திக்கெஙகும் ஆணைசெலுத்திய கெசசிங்கம். யேனாட்டுப்புலி. மலைகலஙகினும் மனஙகலஙகாதான். தாலிக்கிவேலி. தண்டுவார் முண்டன். தளஞ்சிஙகம். மிளஞ்சிஙகம். பகைமன்னர் சிவகத்துரைராசன். அஷ்ட்டதிக்கும் விசையன். யிரவிகுலசேகரன். யிவுளிபாவடிமிதித்தேறுவார்கண்டன். தொட்டவாரந்தவிராதான். வசியச்சறுவிவழியில்க் காலநீட்டி வீரதண்டை சேமத்தலைவிளஙகும இருதாளினான். புவனேகவீரன். வனனியராட்டம் தவிள்த்தான். ஒட்டியர்தளவிபாடன். பஞசவற்னன். பரிராவுத்தர் கொட்டமடக்கியசமர்கோலாகலன், சற்குணசுவாசிதன். சாடிக்காரர் கண்டன் சாமத்துரோகிகள்

மிண்டன். அடைக்கலங்காத்தான். யேளைபஙகாளன். யெதிரிட்ட மருவலர்கள் சிரமுருளவெட்டி நிலையிட்டதிரன். பரூசசேகரன். பரூசகேசரி. பாதளவிபாடன். அடியார்வேளைக்காறன். உபயசாமர உல்லாசன். நளினக்காரன். கொட்டமடக்கி வையாளி நாருயணன். கலியுகருமன்., கர்ணுவுதாரன். கொற்றவர்திருமுடிக்கி சிகருசரு சன். மருமனணியர் கப்பமவிளஙகியருயன். மருமன்னியர்வநதுவண ஙகிய பாதன். மன்னியர்கேசரி. மருமனணியர்கெப்புலி. பொருமன னர் ஆஞ்சிபுகலிடங்தேடிதிருமலைக்காட்டில் செவவெலெழுதசேதான். கெடிமனனர் காலாநதகன். கிரிதுர்க்கம். வனதுர்க்கம் சிலதுர்க்கம் உடையான். ஆத்தில்ப்பாச்சி. கடலில்பபாசசிய மதப்புலி. பளமொ ளிதவறு பாகபதமகிமையாய செகமெலலாம்புகழசெங்கோலநடத்து வோன். செஙகாளிகவொடை செங்காவிக்கொடி. செங்காவிசசிவிகை யான். அனுமகேதன. கெருடகேதன. வியாக்கிறகேதனன். சிஙககேத னன். மீனகேதனன். குக்குடகேதனன். நிமிலிகெதனன் பூலோக தெய்வேநதிரன். சநதிய அரிசசந்திரன். அனனக்கொடிவிளஙகியதி ரன். குடைக்கிகறனன். பொருமைக்கி தற்மபுத்திறன். விலலுக்கு விசையன். பரிக்கு நகுலன். சாஸ்திரத்துக்கு சகாதேவன். தமிழுக்கு அகஸ்தியன். ஆக்கிளைக்கு சுக்கிறீபன். அழகுக்கு வாலசீவகன். திலதநுதலமடமாதர் மயலுறறுமடலெழுதும் அதிரூப,புயசுமுகன். வீர லெடசுமி விசையலெடசுமி அஷட்டலெட்சுமி பொருநதியும் பொ ருநதிய வீருதிவீறன். வீரகெமபீரன். விசையமார்த்தாண்டன். சூரா னில்சசூரன். துரையள்சிகாமணி. சேதுக்குஅரசுநிலையிட்டோன் சிவ கெஙகைருசசிய பரிபாலகருன அசுவபதி கெசபதி நரபதி தனபதி ரவிகுலபதி அனனதானசோமவாசபெயருஙகிய காசிபகோத்திரத்தில் ஸ்ரீமது அரசுநிலையிட்ட விசைய ரெகுநாத பெரிய உடையாத் தேவ ரவர்கள் பூதானஸாஸனம் பணணிக்குடுத்தபடி. சாலீவாகன சகாப தம் சூளாள. கஅ௱ஞா சதஅாஅய௯ யிதின்மேலச் செலலாநின்ற விசுவாவசு நாம ஸம்வதஸரத்தில் உசுஷீணாயநத்தில் வஷைரிதுவாகிய ஸ்ராவணமாசம் உயௌவ ஈக்குல வஞஜிரும் ம-ரவாலரமும் சு வாதிநட்சத்திரமும் கூடிய சுபயோக சுபகரணமும் பெறற சுபயோக சுபதினத்தில் பூதானசாதனம் பணணிக்குடுத்தது பூதாணசாதனமா வது. வைகையாத்துக்குதென்பாரிசத்தில் சேதுமார்க்க உடையமா

ர்க்கப்பாதையில் நரிக்குடிக்கி பிரதிநாமமான செமபுகபுரத்தில பிறதா ணி மருதுசேர்வைகாராவர்கள் தடாகமும வெட்டிவைத்து தடாகத் துக்கு வடகரையில் சத்திரங்கட்டிவைத்ததில் பிருமணபோசனம். சு யமபாகம் அனனதானமும் நித்தியகட்டளையாக நடத்திவிச்சு வரச் சொல்லி,சாமதக்கினியாவசசகோத்திரத்தில ஆசுவலாயன சூத்திரத் தில் ருக்குசாகா அத்தியாபகருன. தேவரகொண்டம் சோாவதானிய ள் புத்திரன் அகிலாண்டமயயனுக்கு சஹிரண்ணி யோதக தாரூ தத் த பூருவமாக தானசாதனம்பணணிக்குடுத்த கிருமஙகளாவது.

பாண்டிதேசத்தில் புனபபிரளையநாட்டில் 'கொடுமளூர் கூத்தத் தில் பார்த்திபனூர்சசேர்க்கையில் முத்தூர்த்தட்டில் மேல்மாகாணத் தில் கிருமஙகளாவது நாளூர், வீரக்குடி, மேலபபசளை சிற சிறுதே ட்டுப பாதிக்கி பெறுநாஙகெலகைகண்டபடி. நாளூருக்கு யெலகையா வது கீளபார்கெலகை அத்திகுளம யெலகைக்கும் கடையிருப்பு யெலகைக்கும் மெரக்கு தெனபார்கெலகை ஒட்டஙகுளம் யெல கைக்கும் கடுக்காயக்குளம் யெலகைக்கும் வடக்கு மேறபார்கெல கை கட்டாஙகுளம் யெலகைக்கும் புதுக்குளம் யெலகைக்கும் கிள க்கு வடபார்கெலகை பரிசையேநதல் சாத்தநாபுரம் யெலகைக்கும தெர்க்கு யினுஙகெலகைக்குளளான நாளூரயேநதல பிரவிடை உள் படகிருமம் யிதுவும் வீரக்குடியெலகை கண்டபடி கீள்பார்கெலகை வரிசையூர் யெலகைக்கும் மெர்க்கு, தென்பார்கெலகை மூலலைக்கு ளம் புளிசகுளம் யெலகைக்கும் வடக்கு மேலபார்கெலகை முக் குளம் யெலகைக்கும் கிழக்கு வடபார்கெலகை நரிக்குடி யெல கைக்கும் தெர்க்கு யிநநாங கெலகைக்குளளான வீரக்குடி கிலலா வலையனேநதல உள்பட கிருமம—க. மேலபபசளைக்கு பெறுநாங கெலகை கணடபடி கீளபபசளை யெலகைக்கு மேர்க்கு கரிசைக் குளம் யெலகைக்கும் வடக்கு புளுதிக்குளம் எலகைக்குஙகிளக்கு தியனூா யெலகைக்குந் தெர்க்கு யினுஙகெலகைக்குளளான மேலப பசளையில் சிறுதேட்டு கிருமம பாதியும் ஷை சிறுதேடடு காவலும இதுவும் பிரதானி மருதைசேறுவைகாறர் சுத்தக்கிறையத்துக்கு தறமமாசனம் தெவதாயத்தில் சிலலரையில் அமபலம திசைகாவல நிலமைகள கொண்டதிலும் தேவதாயத்தில் நரிக்குடியில் கரை-க. தறுமமாசனத்தில கரை-ச. ஆககக்கரை ரு-ம். கருமானேநதல் (குமா

ணேநதல) கிரமம முழுதும் மெலபபசனை மகாசெனஙகளிடத்தில் கிரையத்துக்குவாஙகின கிராமமபாதியும் சிறுவனூர மகாஜெனஙகளி டத்தில கிரையத்துக்குவாஙகின பஙகு-௪. ஆலஙகுளம்மகாஜெனஙக ளிடத்தில கிறையத்துக்கு வாஙகின கிரமம பாதியும அத்திகுளம் செட்டிகளிடத்தில் கிறையத்து வாஙகின கிரமம ௫-ம் மறக் குளம்மகாஜென்ஙகளிடத்தில கிறையத்துக்குவாஙகின கிரமம பாதி யும தேவதாயத்தில நண்டுகோச்சி குருக்களிடத்தில கிறையத்துக்கு வாஙகின கிரமம பாதியும் மாணிக்கனேநதலில் நரிக்குடிக கோவில் ஸதானீகாளிடத்தில கிறையத்துக்குவாஙகின கிரமம பாதியும் முன ஆதித்தனேநதல் சத்திறம் கிரமம மாணிக்கனேநதலபபாதியும் ஆகக் கிரமம-௧ம், ஆதித்தனேநதலில் சத்திரம அகிலாண்டமயயனிடத் தில் கிறையத்துக்கு வாஙகின கிரமம பாதியும் நரிக்குடி சத்திரத் திலசேர்நத கிரமம பாதியும் ஆகக்கிரமம ௩-ம். யிதுவும் அமபலம திசைகாவலுக்கு வகையிருஞகிறையில திசைகாவல மூணு முளளிக் குடியில் அமபலம ஒண்ணு திசைகாவல் ஒண்ணு பாலையேநதலில் திசைகாவல ஒண்ணு மேலபபசனையில திசைகாவல ரெணடு நாஞு ரில திசைகாவல ஒண்ணு அமபலம ஒண்ணு சிறுவனூர்யேநதல உள்பட காவல ஒண்ணு யெளுவணிகுண்டு குளம்யேநதலுள்பட திசைகாவல ஒண்ணு கண்டுகொணடான மாணிக்கத்தில தலஙகாவல திசைகாவல ரெண்டு மாணிககனேநதல திசைகாவல-௧. ஆண்டுகொ ண்டான்திசைகாவல ஒண்ணு யிசலிதிசைகாவல ஒண்ணு சொடடை முரியன் திசைகாவல-௧. தியயனூர் திசைகாவல-௧. காளிசசாத்தான திசைகாவல-௧. குமுளமகுளம் திசைகாவல-௧. யினாக்கானேரி திசை காவல-௧. பனைக்குடி அமபலம் ஒண்ணு திசைகாவல ஒண்ணு ஆக யிந்தவகை கிரமஙகளுக்குண்டான நஞ்சை புஞ்சை மாவடை மரவ டை திடடுத் திடல் குட்டஙகுளி நதகஞ்செயநதலை பாசிபடுகை மேலநோக்கிய மரம் கீள்நோக்கிய கிணர் ஆகதுக்கால ஊத்துக்கால நிதிநிட்சேபம் ஜலதரு பாஷாணு க்ஷீணஅாகாமிஸித்த ஸாதய மெ ன்று சொலலபபட்ட அஷட்டபோகதேசசுவாமியஙகளும் தானுதி வினிய விக்கிறயஙகளுக்கு யோக்கியமாக தானசாதனம் பணணிக் குடுத்ததினாலே ஆச்சநதிறார்க்கஸதாயியாக சநதிர சூரியாள் உளள வரைக்கும புத்திர பவுத்திர பாரம்பிறியமாக ஆண்டனுபவித்துக

கோள்வாருகவும சத்திரத்தில் பிருமணபோசனம் சுயமபாகமும் அனனதானமும் தாள்விலலாமல் நடபபிவிசககோண்டு வறுவாருக வும். யிநதசத்திரப கிருமஙகளுக்கு தறமமாசனம் தேவதாயத்தில் பிர நத சில்வரி பெருவரி வெளளைகொடைக் கீதாரம் பளளுவரி யிருப் புக்கட்டி பாதிகாவல யிநத வரியள சருவமாணியமாகவும் யிநத கிரு மஙகளுக்குளள விறையடிக்கு க. ள. விரையடிக்கு மூணுபணம் வீதம் குடுத்து மீதமுளளதை அனனதானம் பணணிக்கொளளச சொலலி கட்டளையிட்டோம் ஆணடனுபவித்துக கோளளுவாருகவும் இநத தர்மததை யாதாமொறுவர் பரிபாலனம் பணணுகிறபேர்கள் காசியி லேயும ராமேசுறம தனிக்கோடிக்கரையிலேயும் கெஙகைக்கரையி லேயும் கோடி சிவலிஙகபபிரதிஷடையும் கோடி பிரமமபிறதிஷடை யும் கோடி விஷணுபபிரதிஷடையும் கோடி பூதர்ன கனனிகாதான கோதானமும் பணணின பலனை நித்தியமாக அடைவாருகவும் யிநத தருமத்துக்கு யாதாமொருதர் அகிதமபணணினபேர்கள் காசியிலே யும் கெஙகைக்கரையிலும ராமேசுறந தனுககோடியிலேயும் கோடி பிரமமஹத்தியும் மாதாபிதாவையும் அனேகஙகோடி காராமபசுவை யும் கொனற தோஷஙகளில் போகக்கடவாருகவும்.

[illegible]

[illegible]

யிநத ஶாஸநம் யெழுதினேன் [illegible] தர்ம[illegible]பிள்ளை குமா ரர் சொக்கு [illegible]

Filed 19th November 1805.
(Signed) R. H. LATHOM,
Judge.

(True Copy.)
(Signed.) G. W. Sansiders,
Ag. Judge.

Filed 14th January 1822.
(Signed) G. W. Sansiders, Ag. Judge.

(True Copy.)
(Signed) Illegible,
Judge.

M. V. Subramania Iyer.

உ

# KSHATTRIA TARA BAI

# க்ஷத்திரிய தாரா பாய்

### துணைகானப்பயன்

ஆரியாமணிகளின் அருங்குணங்களையும் அற்புதக்காரியங்களையும் தொகுத்துரைக்கத் துணிந்து எழுதுவதில், அவர்களுடைய குணாதிசயங்களை நினைக்கச் சந்தோஷமும் அவர்களுக்கு நேர்ந்த கஷ்டங்களை நினைக்கப் பரிதாபமும், அத்தகைய ரத்னங்கள் இக்காலத்தில் இலராயினரே என்பதை நினைக்கத் துக்கமும் மேலிட்டு அடிக்கடி எமக்குக் கண்ணீர் பெருகுகின்றது. அத்தனைவிதமான வேற்றுமை உணர்ச்சிகளும் எம்மனத்தில் எழுகின்றன. இந்தக் கதைகளைப் படிப்பவர்களுக்கும் மனவெழுச்சி, இரக்கம், தெய்வபக்தி, பெருநோக்கு, ஊக்கம், சௌரியம், தேசபக்தி முதலியவனைத்தும் தோன்றி வளருமென நம்புகிறோம்.

பூர்வத்திற் பெருந்தன்மை வாய்ந்து, அருங்காரியங்களியற்றிப் புகழ்பெற்று, அப் புகழுடம்பினோடு இன்றைக்கும் நக்ஷத்திரங்களென விளங்கும் பெண்பாலாருள் 'தாராபாய்' என்னும் நாமம்படைத்தவர் இருவரிருந்தனர். அவர்களிருவருக்கும் வித்தியாசம் தெரியும் பொருட்டு இந்தக் கதாநாயகியை 'க்ஷத்திரிய தாராபாய்' என்றனம். அவள் பிரபலமாக இருந்த காலத்தை வரையறுத்துக் குறிப்பதற்கு அனுகூலமும் அவகாசமும் இல்லையாயினும், அவளது நற்சரிதையைக் கவனிப்போமாக.

### ராஜா சூரதான் ராவ்

முன்னர் ஆரியாவர்த்தத்துத் துரைத்தனம் மகம்மதியர்பால் அமைந்திருந்த காலத்தில், நாட்டில் அங்கங்கே ஏற்பட்டிருந்த ஸம்ஸ்தானீகர்களும் சிற்றரசர்களும் மிகச் சங்கடப்பட்டுக்கொண்டிருந்தனர். தேசத்தில் அதர்மம் மேலிட்டது; தௌர்ஜன்யம் (துர்ஜனரின் தன்மை='ஜனும்') அதிகரித்தது; அநியாயம் சகிக்கமுடியாத

தாயிற்று. அதனால், குடிகள்சிறுமையடைந்து ஈனஸ்திதியில் மிருந்த வாதைப்பட்டுக்கொண்டிருந்தனர். அப்போது ராஜபுதனத்தில் வேத நகரம் என்னுமொரு சிறு ஸம்ஸ்தானம் இருந்தது; சூரதான்ராவ் என்பவர் அதற்கு அதிபர். அவர் மிக்க பலம் வாய்ந்தவர், சௌரிய மிகுந்தவர், சத்துருக்களைவென்றோட்டி வீரங்காட்டியவர்; ஆனால், அந்தத் தருணத்தில் அவர் வயது முதிர்ந்தவராக இருந்தார். எதற் கும் பருவம் உண்டன்றோ? மூப்புமேலிட்ட காலத்தில் வீரம் இரு ந்து என்செய்யும்? தளர்ந்து தலைநடுங்கித் தண்டூன்றியகாலத்துச் சௌரியம் பயன்படுமோ, போர்த்தொழில் ஏற்குமோ? காலத்தை யனுசரித்தே காரியங்கள் செய்யவேண்டும். ஒருகாலத்திற் செய்யக் கூடிய காரியம் மற்றொருகாலத்தில் நடவாது. காலம், போனால் வராது. ஆதலின், காலத்தை வீணிற் கழிக்கலாகாது. அந்தந்தக் காலத்திற் கியைந்த காரியங்களைச் செவ்வனே செய்தல்வேண்டும். இன்றைக்கு ஆகவேண்டிய காரியத்தை நாளைச்செய்வோமென்றிருப் பவர்கள் இலவம்பழங் காத்த கிளிகளாவார்கள். மூப்பின் முதிர்ச்சி யினால் சூரதான்ராவ் சத்துருவை யெதிர்க்கச் சக்தியற்றிருந்தனர். அவருக்குக் குமாரர் இலர்; ஓரிளம் புதல்விமாத்திரமே இருந்த னள். அந்தக் கன்யாரத்னமே தாராபாய் என்பவள்.

## பாரியாவியோகம்

முன்னரிருந்த வைபவங்கள் குன்றி முதுமை மேலிட்டுக் கால வேற்றுமையினால் மனமெலிந்திருக்கும் சூரதான்ராவ் அந்தியகாலத் தில் அருந்துணையாக இருப்பளெனக் கருதியிருந்த தம் மனைவியை யும் இழந்தனர். அதனால், அவருக்கு நேர்ந்த துக்கம் சொல்ல வொண்ணாது. அந்தத் தௌர்ப்பாக்கியத்தின் கொடுமை இதனடி யிற் காணும் செய்யுளினால் இனிது விளங்கும்:—

> மனைவியை யிழந்த துக்கம் வருமுற வினர்ப ழிச்சொல்
> இனைவுறக் கடனைக் கோட விழிஞர்பாற் றொழிலி யற்றல்
> முனைவுறு வறுமை நாளில் முன்னிய நேய னைந்தாம்
> இனையவுந் தீயேயின்றி யெரித்திடு முடலை மாதோ.

"மனைவியை இழந்த துக்கம், உற்றருரைக்கும் அபவாதம், கடன் பாக்கி, இழிஜனரிடத்து ஊழியம், வறுமைக்காலத்தில் நண்பரைக்

காண்டல்,—ஆகிய இவை ஐந்தும் நெருப்பின் சகாயம் இல்லாமலே தேகத்தை எரித்துவிடுவன."

## ராஜ்யப்பிரஷ்டம்

இவ்வாறு அவர் நிற்கும் நிலைமை யறிந்து லில்லா என்னும் துருக்கனொருவன் வேதநகரத்தின்மீது படையெடுத்து வந்தனன். அவனை யெதிர்த்துப் போர்புரியத் திறனுந் திடனுமில்லாத சூரதான் ராவ் தம் ராஜ்யத்தை அவனுக்கு விட்டுவிட்டு, தம் செல்வத்தாராவும் தாமுமாக தக்ஷசிலை (அல்லது, தக்பூர்) என்னும் இடத்திற்குப் போயினார். அங்கு அவருக்கு அன்பருமிலர், ஆப்தருமிலர், உற்றாருமிலர், உறவினருமிலர். அவருக்கு உயிர்த்துணையும் தாராவே, உயிரும் தாராவே. பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய் என்னுந் தாய்மார் ஐவருள், முலைத்தாயொழிய ஏனைய நான்குவிதமான தாய்மாரும் அவளுக்கு அவரே ஆனமையின், அவருடைய தாபத்திரயத் துன்பத்திற்கு அளவில்லை. தாயற்ற அந்தத் தாராவை அவர் தம் பிராணபதமாக வளர்த்து வந்தார். ஓடுகிறவர்களைக் கண்டால் துரத்துகிறவர்களுக்கு எளிதாமன்றோ? சூரதான்ராவினுடைய ஏழைமையையுணர்ந்து மேற்சொல்லிய துருக்கமூர்க்கன் அவரைத் தக்பூரினின்று ஓட்டத்துணிந்தான். அதன்பின் அவர் தம் பெண்மணியை அழைத்துக்கொண்டு அவ்வூரைவிட்டகன்று அபூ (Mount Abu) என்னும் மலையினுச்சியில் வசிக்கப் போயினர். அந்தச்சமயத்தில் ஏனைய சிற்றரசர்களெவரும் அவருக்குத் துணைபுரியாராயினர். ஒவ்வொருவரும் தத்தம்ராஜ்யத்தைக் காத்துக்கொள்வதே கருமமாக இருந்தனர்.

## தாரையின் வளர்ப்பு

சூரதான்ராவுக்குத் தாராபாய் தவிர வேறு சந்தானம் இல்லாமையின், அவர் அந்தக் கன்னியைக்கொண்டே தம் பகையைத் தீர்த்துக்கொள்ளவும், துராகிருதனான துருக்கனைத் தண்டிக்கவும் கங்கணங் கட்டிக்கொண்டார். அவர் தம் மகளையே மகனெனப் பாவித்துத் தாராபாய்க்குப் போர்த்தொழில் பயிற்றுவித்தார். அந்தக் கன்னியாரத்னமும் அபூமலைநாட்டில் அவரோடிருந்து அவருக்குச்

சேவைசெய்து, அவர் கற்பித்த ரணவித்தையைச் சிரத்தையுடன் பயின்று வந்தனள். அவளுக்கு அறிவு சற்று விளக்கமுற்ற கால முதற்கொண்டே, அவள் தனக்குத் தந்தையார் சஸ்திரவித்தையைக் கற்பிக்குங் காரணம் இன்னதென ஊகித்தறிந்துகொண்டாள். உத்தேசத்திற்குத்தக்கவாறு அவளுக்கு உற்சாகம் அதிகரித்தது. அவள் சஸ்திராஸ்திரவித்தை*யைக் கருத்துடன் கவனித்துக் கற்று அதனில் தேர்ச்சிபெற்றாள். அவள் இளமைப்பருவத்திலிருந்தே சரீரப் பயிற்சிக்குரிய வியாயாமங்கள் (Exercises, 'கஸரத்து') செய்து வந்தமையின், அவளுடையதேகம் மிக்கவன்மை பொருந்தியதாயிற்று. அன்றியும், வாலிபத்திலிருந்து ஹடயோகத்திற்குரிய ஆஸன முறைகளை அப்பியசித்தவனுக்குத் தேகம்நெகிழ்ந்து இணங்குவது போல, அவளுடையதேகம் மனத்தோடு முரண்படாமல் மனம்ஏவிய கட்டளையை நிறைவேற்றி வந்தது. அஃது அநேகருக்கு அசாத்தியமான காரியமாகும். எழுந்து ஓரிடத்துக்குப் போகவோ ஒரு காரியத்தைச் செய்யவோ மனமிருக்கும்; ஆயினும், தேகம் இணங்காது. அப்படிப்பட்ட நிலைமையிலுள்ளவர்களை நாம் எங்குங்காணலாம். பயிற்சியின்பயனாக அவளுடையதேகம் வன்மைபொருந்தியது ஒருவாறிருக்க, மலைநாட்டுவாசத்திலும் தந்தையின் உபதேசவிசேஷத்திலும் அவளுடைய மனமும், தேகத்தைப்போலவே, வன்மை பொருந்தியதாயிற்று; அவளது இளநெஞ்சம் வன்னெஞ்சமாகி வைரம்பற்றியது. இவ்வாறு, அவ்விளங்கொடியானவள், சுக்கில பக்ஷத்துச் சந்திரனைப்போல, நாளுக்குநாள் அபிவிருத்தியடைந்து வந்தனள். அந்த அபிவிருத்திக்குத் தக்கவாறு, தன் தந்தைக்கு நேர்ந்த அவமானத்தைப்பற்றிய விசனமும் அவளுக்கு அதிகரித்து வந்தது. அவருக்கு அத்தகைய அவமானம் விளைவித்தவனைக் கொன்று பகையைத் தீர்த்துக்கொள்ள அவள் சமயம் பார்த்துக் கொண்டேயிருந்தனள்.

---

* சஸ்திராஸ்திரவித்தை = சஸ்திரத்தையும் அஸ்திரத்தையும் பிரயோகிக்கும் வித்தை; சஸ்திரமாவது: கையிற் பிடித்திருக்கத்தக்க ஆயுதம்; அஸ்திரமாவது: எறிபடை, கையைவிட்டு அகன்று செல்லும் ஆயுதம். கத்தி சஸ்திரமெனப்படும்; அம்பு, அஸ்திரமெனப்படும்.

## இளமைப்பழக்கம்

அந்த எண்ணத்தைத் தவிர, அவளுடைய மனத்தில் வேறு எண்ணமே கிடையாது. குழந்தைகளாக இருக்கும்பொழுதே பிற மதத்தவரது பாடசாலைகளிற் கல்வி கற்கப்போகும் இந்துச் சிறுவர்களுக்கு ஆரியாசாரங்கள் அநுசிதமானவை யெனவும், விக்கிரகாராதனாதி காரியங்கள் வீணெனவும், அப்படிப்பட்ட காரியங்களிற் சிறுவர்களைப் பழக்கும் பெற்றோரும் பெரியோரும் வெறுக்கத் தக்கவர்களெனவும், கிறிஸ்துவின் மார்க்கமே தேவமார்க்கமெனவும் சில உபாத்தியாயர்கள் அடிக்கடி வற்புறுத்துகின்றார்கள். அந்தப் போதனைகள் அவ் விளைஞர் மனத்தில் நிலைகொண்டு நாளடைவிற் பெருகி, ஆரியாசாரங்களின் மீதும் ஆரியர்களின் மீதும் அவர்களுக்கு வெறுப்பை யதிகரிக்கச்செய்கின்றன. அவர்கள் ஆரியமதத்தை வெளிப்படையாகத் துறந்தொழிக்கச் சமயம் பார்த்துக்கொண்டே காத்திருந்து, விவாகம் நிச்சயிக்குந் தருணத்தில் ஒளிந்தோடிக் கிறிஸ்தவப் போதனாசிரியர்களிடஞ் சேர்ந்து, பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் பெருந்துயர் விளைவித்து, ஆரியமதத்தின்மீது பகைசாதிப்பது நம் காலத்தவர்களுடைய அநுபவத்திலுள்ள விஷயமேயன்றோ? இளம் பருவத்தில் எதனைப்போதிக்கினும் அது மனத்திற்பற்றும்; நிலைகொள்ளும்; ஆதலின், தாராபாய்க்கு அந்தத் துருக்கன்மீது பகையும், அதனைத்தீர்த்துக்கொள்ளும் அவாவும் அவ்வளவு அதிகமாக இருந்ததற்குக் காரணம் எளிதிற் புலப்படுமன்றோ?

## க்ஷாத்திர ஸங்கற்பம்

கல்வியிலும் சௌர்யத்திலும் தாராபாய் ஒப்புயர்வில்லாதிருந்ததன்றி, ரூபலாவண்யத்திலுஞ் சிறந்து விளங்கினள். அவளுக்கு வயது வந்தவுடன், அவளுடைய சௌந்தரியக் கீர்த்தியைக்கேட்டு அவளை மணக்க வெண்ணி ராஜபுத்திரர்களநேகர் அவளுடைய தந்தைக்கு வர்த்தமான மனுப்புவாராயினர். முதலில், மேவாடராஜபுத்திரனுன் ஜயமல்லன் என்பவன் அவளைத் தனக்குப் பாணிக்கிரகணஞ் செய்விக்கக் கேட்டான். ஆனால், தன் தந்தையின் பகைவனை படக்காமல் தான் விவாகஞ் செய்துகொள்வதில்லை யெனத் தாராபாய் நிச்சயித்துக்கொண்டமையின், "என் தந்தையின் பகை

வனைக் கொல்பவனே எனக்குக் கணவனாகத் தக்கவன்" என்று அந்த ராஜபுத்திரனுக்குச் சொல்லியனுப்பிவிட்டாள். கோபகாரணத்தை உடனே மறந்து பொறுமை மேற்கொள்வது அந்தணருக்குரிய தருமமாகும். வன்மம் வைத்துப் பகை சாதிப்பது க்ஷத்திரியருக்குரிய தருமமாகும். க்ஷாத்திரம் வைத்து விவகரிப்பவர்களாதலின் அவர்கள் க்ஷத்திரியர்கள் எனப்பெற்றனர்.

## துஷ்டஸம்ஹாரம்

சூரதான்ராவும் மேவாட ராணாவும் ஓரினத்தவர்களேயாதலின், மேவாட ராஜகுமாரன் தம்புதல்வியைக் கலியாணஞ்செய்துகொள்ள விரும்பியது சூரதான்ராவுக்கு நியாயமாகவே தோற்றியது. அந்த ராஜகுமாரன் தம் புத்திரியின் சங்கற்பத்தை நிறைவேற்றுவானாயின் அவனுக்கு அவளைப் பாணிக்கிரகணஞ் செய்விக்கலாமென்று அவர் நினைத்திருந்தார். ஆனால், ஜயமல்லனோ சௌரியமற்றவன், கருவங்கொண்டவன்; தாராபாயின் சபதத்தை நிறைவேற்று முன்னரே, விவாகம் நடந்தேறவேண்டுமென்றான். தந்தையும் மகளும் அதற்கு இசைந்தாரல்லர். அவனுடைய ஆசை நிறைவேறாதுபோகவே, ஜயமல்லன் தாராபாயைப்பார்த்து,—"உன் தந்தையைப்போல் நீயும் தரித்திரலக்ஷணமுடையவள். இப்போது என்னைப்போன்ற ராஜபுத்திரனைத் திரஸ்கரித்தனை (மறுத்தனை). ஆதலின், உன்வீட்டில் ஊழியஞ்செய்யும் இழிந்த வேலைக்காரன் தவிர வேறெவனும் உன்னை மணக்கமாட்டான் என்பதை உறுதியாகக்கொள்" என்று தூஷிக்கத் தொடங்கினான். அந்த நீச வார்த்தைகளைக் கேட்டவுடனே சூரதான் ராவ், மனம்பொறுக்காமல், கட்கத்தைக்கைக்கொண்டு அந்த ராஜகுமாரனைக் கடிந்து கூறுபடியெறிந்தார். அந்தச் செய்தி அவனுடைய தந்தையாகிய ராயமல்ல ராஜனுக்கு எட்டியது. ராயமல்லன் அதைக்கேட்டுச் சிறிதும் சிந்தையுறாது,—"நிர்மலமாகிய எங்கள் வமிசத்தைக்கெடுக்கவந்த அந்தத் துஷ்டப்பையனுக்குத் தக்கசிக்ஷை கிடைத்தது" என்றுரைத்து, துஷ்டனைத் துரைமகனெனத் தாக்ஷிணியம் வைக்காமல் துண்டாடிய சூரதான்ராவை மெச்சிக்கொண்டாடினான்.

## யுத்த யாத்திரை

ராயமல்லராஜனுக்குப் பிருதிவிராஜன் எனப் பெயர்படைத்த மற்றொரு குமாரனிருந்தனன். முன்னொரு தருணத்தில் ராயமல்லன்

அவன்மீது கோபங்கொண்டு அவனை ஊரினின்றும் அப்புறப்படுத்தியிருந்தான். மூத்தகுமாரனான ஜயமல்லன் மேற்சொல்லியவாறு தேகமிழக்கவே, ராயமல்லன் தன் இளையகுமாரனான பிருதிவியை வரவழைத்து அவனுக்கு இளவரசுப்பட்டங் கட்டினான். அவன் மிகுந்த நற்குணசீலன், நியாயப்பிரியன். ஆதலின், குடிகள் அவனிடத்து அநுராகங்காட்டி, அவன், தம்மூருக்குத் திரும்பி வந்து சேர்ந்ததைக்குறித்துச் சந்தோஷமடைந்தனர். சிலநாட்கழிந்த பின்னர், தாராபாயின் நற்குணங்களையும் ரூபலாவணியாதிகளையும் அவன் கேள்வியுற்றுத், தன் சௌரியத்தைக்காட்டி அவளை மணந்துகொள்ள நிச்சயித்தான். பின்னர், அவன் சூரதான்ராவுக்குச் சத்துருவாகிய துருக்கன்மீது படையெடுக்கலுற்றான். அதைக்கேட்டுத் தாராபாய் சந்தோஷித்துத் தானும் அவனுடன் கூட யுத்தயாத்திரைக்குப் புறப்பட்டாள். பிருதிவிராஜன் ஏறக்குறைய ஐயாயிரம் படைவீரரைத்திரட்டிக்கொண்டு அபகணதேசத்தவனான (Afghan) சத்துருவை வெல்வதற்காக அவனுடைய தோதா நகரத்தின்மீது படையெடுத்துச் சென்றான். அந்தச் சமயத்தில் தாராபாய் புருஷவேடந்தரித்துக் குதிரையேறி, பிரத்தியக்ஷ மஹிஷாஸுரமர்த்தினியே போன்று, அந்த யவனனுக்கு யமனாகப் பிரயாணமாயினள்!

## அம்பு எய்தல்

அவர்கள் தோதாநகரத்தண்டையிற் போய்ச்சேர்ந்த தினத்தில் துருக்கரெல்லோரும் உற்சவங்கொண்டாடிக்கொண்டிருந்தனர். அவர்களுக்கு மிகவும்முக்கியமான மொகரம்பண்டிகையின் கடைசித் தினமாதலின், அவர்கள் அதிக உற்சாகத்தோடு குதூகலமாக 'பீர்' உற்சவஞ்செய்து, ரதங்கள் வாகனங்கள் வாத்தியங்கள் முதலியனவைகளுடன் திரள்திரளாக ஊர்வலம் வந்துகொண்டிருந்தனர். அவர்களுடைய பிரபுவாகிய லில்லாஎன்பவன் மேன்மையான ஆடையாபரணங்களணிந்து தன் மாளிகையின் மேல்மேடையினின்று அம் மகோற்சவத்தைக் கண்டுகளித்துக்கொண்டிருந்தான். பிருதிவிராஜனும் தாராபாயும் தம் சேனைகளை ஊருக்குவெளிப்புறத்தில் நிறுத்தி விட்டுத் தம் வேலையாள் ஒருவனை மாத்திரம் தம்முடன் அழைத்துக்கொண்டு உற்சவம்பார்க்க வந்தவர்களைப்போல அந்தக்கூட்டத்திற்கலந்து

அப்போது போய்க்கொண்டிருந்தனர். அங்ஙனம் அவர்கள் செல்லு கையில், தாராபாய் தன் தந்தையின் சத்துரு அவனேயாவனென்று அறிந்து, குறியிட்டு அவன்மீது தைக்குமாறு ஓர் அம்பை யெய்த னள். தாராபாயோ, அனேக காலம் அஸ்திரவித்தையில் அதுவே தொழிலாகப் பழகி, அரங்கில் ஆடி, அப்போது அம்பலத்தில் ஆட வந்தவளாவள். அவள் எய்யும் அம்பும் அவமாகுமோ? ஜனசந்தடி யினிடையினின்று ஆகாசவாணமெனக் கிளம்பிச் சீற்றத்துடன் அதிவேகமாகப் பாய்ந்துசென்ற அவ்வஸ்திரம் அந்த யவனனுடைய மார்பைப்பிளந்து அவனை யமபுரிக்கு அனுப்பியது.

### மத்தகஜ மாரணம்

உடனே துருக்கர்கள் ஒருங்குகூடி நகரத் துவாரத்தில் மதக்கரி யொன்றைக் காவலாக வைத்துத் தம் தலைவனது பிராணனைப்போக் கிய போர்வீரன் யாவனெனத் தேடத்தொடங்கினர். ஆனால், அவ் வீரன் அவர்களுக்கு அகப்பட்டானல்லன். பகைவனைப்போக்கிய பின்னர், அம் மூவரும் ஊருக்கப்பாலிருந்த தம் சேனையுடன் சேர்வ தற்குப்போய்க்கொண்டிருந்தனர். நகரத்தலைவாயிலிலிருந்த துருக் கரது சிறுபடையும் மதக்களிறும் அவர்களை யெதிர்த்து மடக்கலா யின. பிருதிவிராஜனும் தாராபாயும் சேவகனும் மறுபடி தைரிய மேற்கொண்டு போராடச் சித்தமாயினர். மதங்கொண்ட அவ் யானை அண்டமதிர ஆரவாரித்து அருகில் வரவே, தாராபாய் தன்கையிற் பிடித்திருந்த வாளினால் அதன் தொண்டத்தைத் துண்டமாக்கினள். சீறிவந்த யானை சிதைவுண்டு பெருமுழக்கமிட்டுச் சோர்ந்து அப்புற மகன்றுவீழ்ந்தது. அங்கிருந்த சிறுபடையை வென்று மூவரும் வெளிப்போந்தனர்.

### விஜயத்துவஜம்

நகரத்தினின்று வெளிப்போந்த பின்னர்ப் பிருதிவிராஜன் தன் சேனைகளை நோக்கி, தோதா நகரத்துப்படைகளுடன் போர்புரியு மாறு கட்டளையிட்டான். உடனே அந்த வீரர்கள் பட்டணத்தை முற்றுகையிட்டு, அங்கிருந்த துருக்கர்சேனையை நாற்புறமுஞ்சிதறி யோட அடித்தனர். துருக்கர்களுள் முக்காற்பகுதி மாண்டுபோயி

னர். பின்னர்ப், பிருதிவிராஜனும் தாராபாயும் மகோற்சவத்துடன் நகரப்பிரவேசஞ்செய்து வெற்றிக்கொடி நாட்டினர். தமக்கு வெற்றி வாய்ந்த பின்னர்ப் பிருதிவிராஜனுடைய படைகள் துருக்கர்களைப் பிடித்து வருத்துவதைக்கண்ணுற்றுத் தாராபாய்,—"அங்ஙனஞ் செய்வது அடாது; பகைதீர்ந்த பின்னர்ப் பரிதாபங் காட்டுவதே பரம வீரலக்ஷணம். செத்தபாம்பையடிப்பது சௌரியமாகாது. பகைஞர் கைசோர்ந்து களைத்துக் காலில்வீழ்ந்தகாலத்து அவர்களிடத்துக் கருணைகொண்டொழுகுவதே உத்தம வீரர்க்குரிய கடமை" என்று சொல்லித் தம்மவருக்குப் புத்திபுகட்டி, மிகுந்திருந்த துருக்கர்களை யாதரிப்பாளாயினள்.

### விவாகம்

தான் கொண்டகொள்கையை முடித்தபின்னர் (தன்பிடிவாதத்தை நிறைவேற்றிய பின்னர்), தாராபாய் அந்தப்பிருதிவிராஜனை வரித்தனள். அவ்விருவருடைய தந்தைமாரும் அவர்களுடைய விருப்பத்திற்கிணங்கி, சுபமுகூர்த்தம் நிச்சயித்து விவாக மகோற்சவத்தை வெகுவிமரிசையாக நடப்பித்தனர். சூரதான்ராவுக்கு அவருடைய ராஜ்யம் திரும்பவுங் கிடைத்தது. தாராபாயின் சபதம் நிறைவேறியது. அவளுடைய சாகசமும், திறமையும், பெற்றோரிடத்தன்பும், வாக்குறை தவறுநெறியும், இரக்கமும் நமக்கு நற்பாடங்களாயின.

### பட்டாபிஷேகம்

சூரதான்ராவுக்கு விருத்தாப்பியம் அதிகரித்தமையின், அவர் தம் ராஜ்யத்தைத் தம் மருமகனான பிருதிவிராஜனுக்களித்துப் பட்டாபிஷேகம் செய்வித்தார். தாராபாயுங் கணவனும் சீருஞ் சிறப்பும பொருந்திக்குடிஜனங்களைத் தம் மக்களெனக்கொண்டு அவர்களிடத்து அன்புபாராட்டி அரசுபுரிவதைச் சூரதான்ராவ் கண்டுகளித்துச் சுகமாகத் தனித்திருப்பாராயினர். ராஜ்ய நிர்வாகத்தில் தாராபாய் தன் கணவனுக்குத் துணையாகி ஜனங்களுக்குப் பற்பலவிதங்களில் அனுகூலங்கள் அமைத்து வந்தாள்.

ஸாதுசேவகன்.

# NOTES ON ASTROLOGY
## சோதிட நூற் குறிப்புகள்

(ரு அசு-ஆம் பக்கத்தொடர்ச்சி)

பஞ்சாங்கத்திலிருந்து ஒரு தினக்குறிப்பையெடுத்து உதகரித்து, அதிலடங்கிய ஒவ்வொரு பதத்தின் அர்த்தத்தையும் விவரித்துக் காட்டுவோம்:—

**ஹேவிளம்பி வருஷம்**

| | |
|---|---|
| டிசம்பர் 23—1897 | மார்கழி 10, வியாழக்கிழமை |
| அமாவாசை 49—15 | ஜேஷ்டா 6-15, கண்ட 6-53 |
| சதுஷ்பாத் 21—5 | திவிஷகடிகை 25-33 |
| அமிர்த 47—57 | அதிவிஷகடிகை 31-22 |
| அஹஸ் 27—40 | மூலம் 4 ரவி 55-8,...... |

**விவரம்**

'மார்கழி' யென்பது தனுர்மாதத்திற்குத் தமிழ்ப்பெயர். தமிழ் மாதங்களெல்லாம் ஸௌரமாதங்கள். ஆதலின், மார்கழி 10-ஆம் தேதி என்பதனால், பத்துநாளாகச் சூரியன் தனுர்ராசியில் சஞ்சரிக்கிறான் என்பது பொருள். சூரியன் மூலாநக்ஷத்திரத்தில் சஞ்சரிக்கிறானென்பதும் அந்தத்தேதியினால் விளங்கும். 'அமாவாசை' என்று குறித்திருப்பதனால், சூரியனும் சந்திரனும் ஒரேராசியில் இருக்கிறார்களென்றும், அவர்கள் 49-கடிகை வரைக்கும், அஃதாவது, இரவில் 1½-மணிவரையில் அப்படிக் கூடியிருப்பார்களென்றும் அர்த்தமாம்.

'ஜேஷ்டா' என்னும் பதத்தினால், சந்திரன் ஜேஷ்டாநக்ஷத்திரத்தில் சஞ்சரிக்கிறானென்றும், 6-கடிகைக்குப்பிறகு, அஃதாவது, காலை 8½-மணிக்குப்பின்பு மூலாநக்ஷத்திரத்திற்குச் செல்வானென்றும் தெ

'கண்ட'என்பது அந்தத்தினத்து "யோக"த்தைக்குறிக்கின்றது. புஷ்யத்திலிருந்து சூரியன் இருக்கும் நக்ஷத்திரம் 12-ஆவது ஆகின்றது ; சிரவணத்திலிருந்து சந்திரன் இருக்கும் நக்ஷத்திரம் 25-ஆவது

ஆகின்றது. அவ்விரண்டு எண்களையும் கூட்டினால், $12+25=37$ ஆகின்றது. அதை 27-ஆல் வகுத்தால், $\frac{37}{27}$=மீதி 10-ஏற்படுகின்றது. அஃதாவது, அன்றையத்தினத்தில் பத்தாவது யோகம் என்பதாம். அந்தப் பத்தாவது யோகத்திற்குக் 'கண்டயோகம்' என்று பெயர்.

அயனசந்திகளிலிருந்து (கிராந்திபாதங்களிலிருந்து) சூரியசந்திரர்கள் அன்றன்றைக்கு இருக்கும் நிலையைக் கணக்கிட்டுத் தொகுத்ததின் பயனை "யோகம்" என்பது தெரிவிக்கின்றதெனின், பூமியின் மத்தியிலிருந்து சூரிய சந்திரர்கள் இருக்கும் தூரத்தையளந்து, அந்த இரண்டு தூரத்திற்குமுள்ள வித்தியாசத்தை "கரணம்" தெரிவிக்கின்றது.

அப்படிக் கணக்கிட்டுப்பார்ப்பதற்கு ராசிகளின் தொடக்கமே, அஃதாவது, முதலாவது ராசியை (மேஷராசியே) பூமியின் மத்தியைக் குறிப்பதாகக்கொள்ளவேண்டும். அந்தராசித்தொடக்கத்தினின்று சூரியன் அன்றையதினம் வரையில் ஏறக்குறைய 250-பாகை (டிகிரிகள்) விலகி நிற்கிறான்; சந்திரன் ஏறக்குறைய 240-பாகை (டிகிரிகள்) விலகியிருக்கிறான். இந்த இரண்டு சங்கியைகளுக்குமுள்ள வித்தியாசமே அன்றையதினத்துக்கரணம் ஆகும். அஃதாவது, அன்றைக்கு $250-240=10$-ஆவது கரணம்.

## பொழிப்பு

பஞ்சாங்கத்தைப்பார்த்து நாம் தெரிந்துகொள்ளும் முக்கியமான விஷயங்களாவன:—

1. தனியாகச் சூரியனுடைய நிலை.
2. தனியாகச் சந்திரனுடைய நிலை.

3. கோளஸந்திகளிலிருந்து பார்க்கும்போது அவ்விருவர்களுடைய நிலைகளுக்கும் உள்ள சம்பந்தம்.

4. பூமியின் மத்தியினின்று பார்க்கும்போது அவ்விருவர்களுடைய நிலைகளுக்கும் உள்ள சம்பந்தம்.

விவகாரப்பத்திரமொன்று எழுதுகிறவனுக்கு மாதம், தேதி, சாக்ஷிகள் ஆகிய இவை எவ்வளவு அவசியமோ, மேற்சொல்லிய யோகம்முதலிய நிலைகள் தெரியவேண்டியது ஆரியருக்கு அவ்வளவு

அவசியமாகும். ஏனெனில், ஆரியர்கள் மறுபிறப்பு உண்டென்று நம்புகிறவர்கள். அவர்கள் செய்யுங்காரியங்களுக்குச் சூரியசந்திரர்களே உத்தமமான சாக்ஷிகள் என்பது அவர்களுடைய கொள்கை. அவர்கள் எந்தக்காரியம் செய்வதானாலும் அதற்குச் "சங்கற்பம்" செய்வது வழக்கம். ஸங்கற்பமில்லாமல் காரியாரம்பம் இல்லை. 'ஸங்கல்பம்' என்னும் பதத்திற்கு 'தீர்மானம்' என்று அர்த்தமாம். மேற்சொல்லிய அபிப்பிராயமே அந்த ஸங்கற்பத்திற் காணப்பெறும். ஆரியர்கள் செய்யும் ஸங்கற்பத்தின் முக்கியமான தாற்பரியம் வருமாறு:—

"இன்னவருஷம் இன்னமாதம் இன்னதிதி இன்னகிழமையில் சூரியன் இன்னராசியிலும் சந்திரன் இன்னராசியிலும் சஞ்சரிக்கையில் காவேரிநதிதீரத்தில் உத்தரபாகத்தில் இன்ன ஈசுவர ஸந்நிதியுள்ள இன்னகிராமத்தில் வசிக்கும் இன்னான் ஈசுவரப்பிரீத்தியர்த்தமாக இன்னகாரியத்தைச் செய்கிறேன்."

இவ்வாறு சோதிடசாஸ்திரத்திற் சொல்லப்பட்ட அமிசம் ஒவ்வொன்றுக்கும் பாரமார்த்திகமான (மறுமைக்குச் சாதனமான, ஆத்மசம்பந்தமான) பிரயோசனம் உளதென்று காட்டக்கூடும்.

பஞ்சாங்கத்திலுள்ள தினக்குறிப்பில் காணும் 'விஷகடிகை,' 'அமிர்தகடிகை' என்பவை அந்தத் தினத்தில் அசுபகாலத்தையும் சுபகாலத்தையும் முறையே தெரிவிப்பனவாம்.

'அஹஸ்' என்பது பகற்பொழுதின் மானத்தைக் குறிக்கின்றது (இரவுப்பொழுதைத் தவிர்த்துக் காட்டுகின்றது).

ஆரியரது பஞ்சாங்கத்தில் அடங்கிய விஷயங்கள் இன்னவை யென்றும், சோதிடநூலிற் சாதாரணமாக வழங்கும் பதங்களின் அர்த்தங்கள் இன்னவையென்றும் இது வரையில் விவரித்தோம். இனிக் காலப்பகுதியின் உட்பிரிவினைகளைக் கவனிப்போம்.

### வருஷங்கள் (60)

காலசக்கரம் என்பது அறுபது வருஷங்களைக்கொண்டது. அறுபது வருஷங்களாவன:—

1. பிரபவ, 2. விபவ, 3. சுக்கில, 4. பிரமோதூத, 5. பிரஜோத்பத்தி, 6. ஆங்கீரஸ, 7. ஸ்ரீமுக, 8. பவ, 9. யுவ, 10. தாது, 11. ஈசு

வர, 12. பஹுதான்ய, 13. பிரமாதி, 14. விக்கிரம, 15. விஷு, 16. சித்திரபானு, 17. ஸ்வபானு, 18. தாரண, 19. பார்த்திவ, 20. வியய, 21. ஸர்வஜித்து, 22. ஸர்வதாரி, 23. விரோதி, 24. விகிருதி, 25. கர, 26. நந்தன, 27. விஜய, 28. ஜய, 29. மன்மத, 30. துர்முகி, 31. ஹேமவிளம்பி, 32. விளம்பி, 33. விகாரி, 34. சார்வரி, 35. பிலவ, 36. சுபகிருது, 37. சோபகிருது, 38. குரோதி, 39. விசுவாவஸு, 40. பராபவ, 41. பிலவங்க, 42. கீலக, 43. ஸௌமிய, 44. ஸாதாரண, 45. விரோதிகிருது, 46. பரிதாவி, 47. பிரமாதீச, 48. ஆனந்த, 49. ராக்ஷஸ, 50. நள, 51. பிங்கள, 52. காலயுக்தி, 53. ஸித்தார்த்தி, 54. ரௌத்திரி, 55. துர்மதி, 56. துந்துபி, 57. ருதிரோத்காரி, 58. ரக்தாக்ஷி, 59. குரோதன, 60. அக்ஷய.

ருதுக்கள் (6), மாதங்கள் (12)

| ருதுக்கள் | சாந்திரமாதங்கள் | ஸௌரமாதங்கள் | ஆங்கிலமாதங்கள் |
|---|---|---|---|
| 1. வஸந்தருது | 1. சைத்திரம் | மேஷம் (சித்திரை) | எப்பிரில் |
| | 2. வைசாகம் | விருஷபம் (வைகாசி) | மே |
| 2. கிரீஷ்மருது | 3. ஜ்யேஷ்ட | மிதுன (ஆனி) | ஜூன் |
| | 4. ஆஷாட | கடக (ஆடி) | ஜூலை |
| 3. வர்ஷருது | 5. சிரவண | சிங்க (ஆவணி) | ஆகஸ்டு |
| | 6. பாத்திரபத | கன்னியா (புரட்டாசி) | செப்டம்பர் |
| 4. சரத்ருது | 7. ஆச்வியுஜ | துலா (ஐப்பசி) | அக்டோபர் |
| | 8. கார்த்திக | விருச்சிக (கார்த்திகை) | நவம்பர் |
| 5. ஹேமந்தருது | 9. மார்க்கசிர | தனுர் (மார்கழி) | டிசம்பர் |
| | 10. புஷ்ய | மகர (தை) | ஜனவரி |
| 6. சசிர்ருது | 11. மாக | கும்ப (மாசி) | பிப்பிரவரி |
| | 12. பால்குண | மீன (பங்குனி) | மார்ச்சு |

பௌர்ணிமி தினங்களில் சாதாரணமாக ஏற்படுகிற நக்ஷத்திரங்களினூற் சாந்திர மாசங்களுக்குப் பெயர்கள் வந்திருக்கின்றன வென்று இதுவரையிலேயே சொல்லியிருக்கிறோம். அந்தநக்ஷத்திரங்களாவன:— 1. சித்தா, 2. விசாக, 3. ஜ்யேஷ்டா, 4. பூர்வாஷாடா, 5. சிரவண, 6. பூர்வபத்திரா, 7. அசுவினி, 8. கிருத்திகா, 9. மிருகசிரா, 10. புஷ்ய, 11. மகா, 12. உத்தரபல்(

| | | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. ஞாயிறு | பகல் ... | சு. | சு. | அ. | சு. | சு. | சு. | சு. | அ. |
| | இரவு ... | சு. | சு. | அ. | அ. | அ. | சு. | சு. | அ. |
| திங்கள் | பகல் ... | சு. | அ. | சு. | சு. | அ. | சு. | சு. | சு. |
| | இரவு ... | அ. | சு. | சு. | சு. | அ. | சு. | சு. | சு. |
| 3. செவ்வாய் | பகல் ... | அ. | சு. | அ. | சு. | சு. | சு. | அ. | சு. |
| | இரவு ... | சு. | அ. | அ. | சு. | அ. | சு. | சு. | சு. |
| 4. புதன் | பகல் ... | அ. | சு. | சு. | சு. | அ. | சு. | சு. | சு. |
| | இரவு ... | சு. | அ. | அ. | சு. | சு. | சு. | சு. | சு. |
| 5. வியாழன் | பகல் ... | சு. | அ. | அ. | சு. | சு. | அ. | அ. | அ. |
| | இரவு ... | சு. | அ. | அ. | சு. | சு. | அ. | சு. | சு. |
| 6. வெள்ளி | பகல் ... | அ. | அ. | சு. | அ. | சு. | சு. | சு. | சு. |
| | இரவு ... | சு. | அ. | அ. | சு. | சு. | சு. | சு. | அ |
| 7. சனி | பகல் ... | அ. | சு. | அ. | சு. | சு. | சு. | சு. | சு. |
| | இரவு ... | அ. | சு. | சு. | சு. | சு. | அ. | சு. | சு. |

(இன்னும் வரும்)

ஆரியன்.

# "நுண்பொருண்மாலை"

(௪௱அ-ம் பக்கத்தொடர்ச்சி.)

௧௦௦௫. "ஈட்ட..................பொறை"

நு - லை:—தோற்றம் - பிறப்பதற்குரியவுடம்பு.

௧௦௦௬. "எச்சமென்............தவன்."

நு - லை:—நச்சப்படாதவன - விரும்பப்படாஅதவன்.

| | | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. ஞாயிறு | பகல் | சு. | சு. | அ. | சு. | சு. | சு. | சு. | அ. |
| | இரவு | சு. | சு. | அ. | அ. | அ. | சு. | சு. | அ. |
| 2. திங்கள் | பகல் | சு. | அ. | சு. | சு. | அ. | சு. | சு. | சு. |
| | இரவு | அ. | சு. | சு. | சு. | அ. | சு. | சு. | சு. |
| 3. செவ்வாய் | பகல் | அ. | சு. | அ. | சு. | சு. | சு. | அ. | சு. |
| | இரவு | சு. | அ. | அ. | சு. | அ. | சு. | சு. | சு. |
| 4. புதன் | பகல் | அ. | சு. | சு. | சு. | அ. | சு. | சு. | சு. |
| | இரவு | சு. | அ. | அ. | சு. | சு. | சு. | சு. | சு. |
| 5. வியாழன் | பகல் | சு. | அ. | அ. | சு. | சு. | அ. | அ. | அ. |
| | இரவு | சு. | அ. | அ. | சு. | சு. | அ. | சு. | சு. |
| 6. வெள்ளி | பகல் | அ. | அ. | சு. | அ. | சு. | சு. | சு. | சு. |
| | இரவு | சு. | அ. | அ. | சு. | சு. | சு. | சு. | அ |
| 7. சனி | பகல் | அ. | சு. | அ. | சு. | சு. | சு. | சு. | சு. |
| | இரவு | அ. | சு. | சு. | சு. | சு. | அ. | சு | சு. |

(இன்னும் வரும்)

ஆரியன்.

ஸ்ரீ

# “நுண்பொருண்மாலை”

(௪௰௮-ம் பக்கத்தொடர்ச்சி.)

௧௦௦௩. “ஈட்ட.................பொறை”

நு - லை:—தோற்றம் - பிறப்பதற்குரியவுடம்பு.

௧௦௦௪. “எச்சமென்...............தவன்.”

நு - லை:—எச்சப்படாதவன - விரும்பப்படாதவன்,

௧௦௦௬. "கொடுப்பதூஉங்............மில்"

கு - ரை:—அடுக்கிய கோடியென்பதெண்ணப்படும்பொருண்மே னின்றது. "ஐந்தவித்தானாற்ற"(குறள்-௨௫.) லுமது.

௧௦௦௭. "அற்றார்க்கொன்............தற்று."

கு-ரை:-கொடுப்பாருங்கொள்வாருமின்றிக் குமரிருத்தல்காண்க.

௧௦௦௮. "நச்சப்............தற்று"

கு - ரை:—நடுவூர் - பின்முன்னாகத்தொக்கதொகை.

௧௦௧௦. "சீருடைச்............துடைத்து"

கு - ரை:—வறங்கூர்தல் - வறுமைமிகல்.

௧௦௧௧. "கருமத்தா............பிற"

கு - ரை:—திருநுதனல்லவரென்பது புகழ்ச்சிக்குறிப்பு. திருநுதல் - அழகிய நுதல்.

௧௦௧௪. "அணியன்றோ............நடை"

கு - ரை:—அன்றோவென்பதிரண்டுமிடைச்சொல். ஓகாரமெதிர் மறைக்கண் வந்தது.

௧௦௧௯. "குலஞ்சுடும்............கடை"

கு - ரை:—கொள்கை - ஒழுக்கம். இருவழியுஞ் சுடுதல் கெடுத் தல். ஒழுக்க வழுவினும் நாணழிபிறப்பத்தீதென்பதாம்.

௧௦௨௦. "நாணகத்............யற்று"

கு - ரை:—"மரப்பாவைநாணா லுயிர்மருட்டியற்றென்பது" கரு வியே கருத்தாவாயிற்று. "ஆயிருதிணையினிசைக்குமன்சொல்லே" (தொல் - சொல் - ௧.) யென்பதற்கும் நச்சினார்க்கினியா ரிவ்வா றுரைத்தா ரென்க.

௧௦௨௧. "கருமஞ்............தில்"

நு - லை:—கைதுவாமை - கையொழியாமை.

௧௦௨௩. "குடிசெய்வ.............தூறார்"

நு - லை:—மடிதற்றுதல்-ஆடையையிறுக உடுத்தல். முன்னடப் பார்செயல் நியதிமேலேற்றப்பட்டது. ஊழினுள் ஒருபொருட்கிளவிக்குளடங்க நியதிமேலேற்றப்பட்டது காண்க.

௧௦௨௪. "சூழாமற்.............பவர்க்கு"

நு - லை:—அவராலென்று சுட்டியுரைபோக்கியது முன்னடப் பாரை.

௧௦௨௯. "இடும்பைக்கே .........னுடம்பு"

நு - லை:- மறைத்தல் காத்தல் உறைப்புழியோலைபோல "மறைக் குவன்பெருமகிற்குறித்துவருவலே"(புறநா - ௨௯௦.)என்புழியுமது. "இடும்பைக்கே கொள்கலங்கொல்லோ" வென்பது குறிப்புமொழி.

௧௦௩௦. "இடுக்கண்கால்............குடி"

நு-லை:—முதல் அதன்வழிக்குரியார். வளர்ப்பாரைப்பெற்றுழி வளர்ந்து பயன்படுதலுமல்லாவழிக்கெடுதலுமுடைமையின், மரமாகக் கூறினார். "தூங்குசிறைவாவலுறை" (சீவகசிந்-காந்தரு-௩.) வென்பது மிதனாலறிக. இது குறிப்புருவகம்.

௧௦௩௨. "உழுவாருலகத்.........பொறுத்து"

நு - லை:—தொழுவாருழுதலலாததொழில்செய்வார் "காடுகொன்று நாடாக்கிக்குளந் தொட்" (பட்டினப்பாலை.) டென்றாற்போல வுழுவா ரென்பதுழுவிப்பார்மேலுஞ் சென்றது.

௧௦௩௩. "உழுதுண்டு...........பவர்"

நு - லை:—மற்றெல்லாமென்பதற்கு மற்றையாரெல்லாமென்றுரைத்து மற்றென்பது வழக்குப்பற்றி வந்ததென்றார். "சிற்றின்பம் வெஃகி" (குறள். ௧௭௩) என்பதில் மற்றைமற்றெனவந்ததென்றார். உயர்திணையாய் மற்றையார் மற்றெனவந்ததென்றார்.

௧௦௫௪. "பலகுடை..........லவர்"

ந - லை:—முன்னது நீழல்நிழலதாயமண்; பின்னது நீழல் தண்ணளி; அது செங்கோல்போல நிழல்போறலினிழலெனப்பட்டது. அலகு - நெற்கதிர். தங்குடை - தம்மரசன்குடை.

(இன்னும் வரும்.)

ப—ர்.

# புத்தகக்குறிப்பு.

**திருச்செந்தூர்ப்பிரபந்தத்திரட்டு:**—குன்றெறிந்த குகப்பிரான்மீது சின்னாட்பல்பிணிச்சிற்றறிவினராகிய நம்மனோரிடத்துக்கைம்மாறு கருதாத பேரன்பை விரதமாகப்பூண்டுள்ள அருந்தவத்துப் பெருந்தன்மைவாய்ந்த துறவிகள் பலரும், ஏனைய புலவர் பெருமக்களுமியற்றிய பல நூல்களையும், சில தோத்திரப்பாக்களையும், அப்பிரான்மாட்டன்புபூண்டொழுகுமடியவர்களுமேனையோர்களுமோதியுணர்ந்து இம்மை மறுமைச்செல்வங்களையெய்தற்பொருட்டு ஸ்ரீமத்- மு. ரா. அருணசலக்கவிராயரவர்கள் ஒருவழித்தொகுத்து அதற்கோர் அரும்பதவுரையும் அவ் நூலியற்றியவருட்சிலருடைய சரித்திரத்தையுமெழுதி வெளியிட்டுள்ளார்கள். கனம்- கவிராயரவர்கள் தமிழபிமானமும் கைம்மாறு வேண்டாத பரோபகாரகுணமும் நந்தமிழ்மக்கள் யாவரும் பாராட்டற்பாலன. இதனுளடங்கிய நூல்களின் விவரம்:— திருச்செந்தூர்த் தலபுராணம், திருச்செந்தூர்ப்பிள்ளைத்தமிழ், திருச்செந்தினிரோட்டைப யமகவந்தாதி, திருச்செந்திற்கலம்பகம், திருச்செந்தூர்க்கலிவெண்பா, திருச்செந்தூர்த்திருப்புகழ், கந்தவருக்கச்சந்தவெண்பா, பகழிக்கூத்தர்சரித்திரம், சிவப்பிரகாச சுவாமிகள்சரித்திரம், சுவாமிநாத தேசிகர்சரித்திரம், குமரகுருபர சுவாமிகள்சரித்திரம், அருணகிரிநாதர்சரித்திரம், சரவணப்பெருமாட்கவிராயர் சரித்திர முதலியனவாம்.

இதன் விலை ரூ. 1—8—0.

**குணபாலன்:**—ஓர் அரிய தமிழ்நாவல்; இது, கண்ணகி சந்திரோதயம், கற்பகச்சோலைமுதலிய நாவல்களையியற்றிய நாகை; ஸ்ரீமத்-வி. கோபாலகிருஷ்ணப்பிள்ளையவர்களால் ஆங்கிலக்கவிகளியற்றிய நாவல்களின் போக்கைத்தழுவி நந்தமிழ்மக்கட்கினியையுமாறு வேறு பல விஷயங்களைப் புதுவதாகப் புனைந்து கற்பவருள்ளங் களிமிகுமாறு இனிய கதாரசத்தோடு பற்பலவொழுக்கங்களையனுஷ்டிக்கு முறையையும் தீயனவாகிய பல குணங்களை நீக்கும் முறையையும், வீண்செலவு முதலியன கூடாதென்பதையும், பாலர்முதல் யாவருமெளிதிலுணருமாறு இனிய தமிழ்நடையிலியற்றப்பெற்றது. முழுதும் படித்துப்பார்ப்பதற் கவகாசமின்மையானும், பிற்பாகத்தாற்சில விளங்கவேண்டியிருத்தலானும், குணதோஷவிவரணங்களை விஸ்தரித்தெழுதவியலவில்லை. இதன் விலை அணா 12.

**ஒரு தமிழ்ப்பத்திரிகை:**— வோரீஸ் காலேஜ் கிண்டர் கார்ட்டன் ஸஞ்சிகை; இது வேலூரிலிருந்து பிராணிவர்க்கங்களின் சரீரதத்துவமுதலியவற்றை மாணவர்கள் எளிதினுணருமாறு பலராலும் எழுதப்பட்டுப் பிரதிமாதமும் ஸஞ்சிகைரூபமாக வெளிவருவது. இத்தகைய பத்திரிகை நஞ்செந்தமிழ்மக்கட்கறிவை வளர்த்தலோடு உபாத்திமார்களுக்கு மிகவும் பயன்படுமென்பதெமது துணிபு. இப்பத்திரிகைத் தலைவராகிய மிஸ்டர், M. C. ராஜா அவர்கள் தமிழபிமானமும் பெருமுயற்சியும் யாவராலுங்கொண்டாடற்பாலன.

இதன் வருடச்சந்தா ரூ 2—0—0.

**தேவாரப்பதிகங்கள்:**— சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய தேவாரத்திருப்பதிகங்களுக்குக் காஞ்சீபுரம் வித்வான் ஸ்ரீமத்-இராமாநந்தயோகிகள் உரையெழுதிச் சஞ்சிகைரூபமாக வெளியிட்டுவருகிறார்கள். எமது பார்வைக்கு முன்னரே ஒன்றுமுதல் நான்கு சஞ்சிகைகள் வந்துள்ளன. அவைகளைக்குறித்து எமதபிப்பிராயத்தைச்செந்தமிழ்ப்பத்திரிகைகளிற் பிரசுரஞ்செய்துள்ளோம். இதுபொழுது ஐந்துமுதல் ஏழுவரையிலுள்ள சஞ்சிகைகள் வெளிவந்துள்ளன. அவை பெரிதும் சைவாபிமானிகட்குப் பயன்படுமென்பதிலையமின்றாம். நந்தமிழ் மக்கள் இச்சஞ்சிகைகளையேற்று கனம்-

யோகியவர்கட்கு மேன்மேலுமிவ்விஷயத்திலூக்கமுண்டாக்குவார்களென வெண்ணுகின்றேம். இதன் விலை அணா 0—2—0.

**கிள்ளைவிடுதூது:**— இது சுன்னுகம் ஸ்ரீமத் வரதபண்டிதராற் குமாரதெய்வத்தின்மீது, கற்பவர் களிகூருமாறு கலிவெண்பாவாலியற்றப்பெற்றது. குமாரதெய்வத்தினிடத் தன்புள்ளவர்களால் மிகப் பாராட்டற்பாலது.

**அமிர்தவசனி:**—ஒரு மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகை. இது திருவனந்தபுரத்திலிருந்து அறிவு வளர்ச்சிக்குரிய பற்பல விஷயங்களையுஞ்செய்திகளையுஞ் செவ்விய தமிழ்நடையிற் பலரும் விரும்பும்படி யெழுதப்பெற்று மாதந்தோறும்வெளிவருவது. வருடச்சந்தா ரூ. 1.

**வைசிய மித்திரன்:**—வாரந்தோறும் பிரசுரமாகுமொரு தமிழ்ப்பத்திரிகை. இது தேவகோட்டையிலிருந்து வைசிய தருமங்களைக் கற்றவருமற்றவருமெளிதிலுணரும் வண்ணஞ் செவ்விய தமிழ்நடையிலெழுதப்பெற்று, வாரந்தோறும் வெளிவருவது. இத்தகைய பத்திரிகையை யொவ்வொரு வைசியருமபிமானித்து வாங்கிப்படித்துப்பத்திராதிபரவர்கட்கு ஊக்கமுண்டாக்குவார்களென நம்புகின்றேம்.

**விரோதிகிருது வருடத்தின் சென்னை விவசாயப்பஞ்சாங்கம்:**—இது, சென்னை விவசாயச்சங்கத்தாரால் திதிவார நக்ஷத்திரயோகங்களையும் விரதாதியுற்சவதினங்களையுங் காட்டுவதோடு, மா, தென்னை, பலா முதலிய விருக்ஷங்களையுற்பத்திசெய்யு முறைகளையும், நெல், சோளம், கேப்பை, பருத்தி, கரும்பு முதலியவைகளைப் பயிரிடுமுறைகளையும், யாவருமெளிதிலுணரும் வண்ணம் வெளியிடப்பெற்றது. இப்பஞ்சாங்கம், விவசாயிகளிடமிருக்குமாயின், அவர்கட்கு மிக்க நன்மை பயப்பதற்கையமில்லை.

கோயமுத்தூர் விவசாயக் கல்விச்சாலையிற்பெற்றுக்கொள்ளலாம்.

இதன் விலை அணா 1.

ப—ர்.

கடவுள் துணை

# செந்தமிழ்

தொகுதி-௯] விரோதிகிருது ௵ புரட்டாசி ௴. [பகுதி-௧௧.

## சுருங்கச்சொல்லல்

சுருங்கச்சொல்லலாவது சொற்கள் வீண்படத் தொடர்ந்து விரிந்து பரந்து நீடாது சுருங்கி நிற்கும்படி சொல்லுதல். பத்தழகுகளுள்ளே சுருங்கச்சொல்லலே முக்கியம். பத்தழகுங் கூறிய இலக்கண நூலார் "சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல்" என்று சுருங்கச் சொல்லலை முதற்கண் வைத்துச் செல்லுவர். வடமொழி, தென்மொழி என்னும் இருமொழிக்கவிஞரும் இன்றியமையாதது என்று சுருங்கச்சொல்லலை யாண்டும் வேண்டுவர். இருமொழிக்கவிஞருள்ளும் இலக்கண நூலார்க்கே சுருங்கச் சொல்லல் அத்தியாவசியகம். பாணினிமுனிவர், சாகல்லியர், வாமதேவர் முதலியோருடைய வடமொழி யிலக்கணங்களிலும், தொல்காப்பியமுனிவர், பவணந்திமுனிவர் முதலியோருடைய தென்மொழியிலக்கணங்களிலும் சொற்கம், பொருள்களும் சுருங்கிநிற்றலை அறிஞர் யாவரும் அறிவர்.

சொற்களன்றிச் சொற்றொடர்களாகிய வாக்கியங்கள் நீளாது சுருங்கிமுடிதலும் சுருங்கச்சொல்லல் என்றே கொள்ளத்தகும். சந்திராலோககாரர் சுருங்கச்சொல்லலை ஓரலங்காரமாகக் கொள்ளுவர். சரசுவதிகண்டாபரணகாரர் "அபுட்டம்" "கிலிட்டம்" என்னுங் குற்றங்கள் கூறுமுகத்தாற் சுருங்கச்சொல்லலை விளங்கவைப்பர். தொல்காப்பியமுனிவர் மிகைபடக் கூறலை எதிர்மறுத்துணர்தல் கூறுமுகத்தாற் சுருங்கச்சொல்லலை விளங்கவைப்பர். சுருங்கச்சொல்லலை நிரம்பப்பெறுதற்கு வாய்ப்புடைய யாப்புச் சூத்திரயாப்பொன்றே. சூத்திரயாப்பாவது சொற்ப எழுத்தமைந்த சொற்றொடராய்ப் பற்

பல பொருட்பரப்புக்களை உட்செறித்துத் திட்பமுநுட்பமும் அமைந்து வருவது. இதனைத் தமிழ்நூலார் "நூற்பா" என்பர். சூத்திரயாப்பினிலக்கணம் "கடையயற்பாதம்" என்னுங் காரிகையுரையில் நம்மாலும் எழுதப்பட்டுளது. வேண்டுவோர் ஆண்டுங் காண்க.

வடமொழியிலே பாணிநிமுநிவர் முதலியோருடைய இலக்கணங்களுஞ் சூத்திரயாப்பு. கணாதமுனிவருடைய வைசேடிகமுஞ் சூத்திரயாப்பு. கபிலமுநிவருடைய சாங்கியமுஞ் சூத்திரயாப்பு. பதஞ்சலிமுநிவருடைய பாதஞ்சலமுஞ் சூத்திரயாப்பு. சைமிநிமுநிவருடைய பூர்வமீமாஞ்சையுஞ் சூத்திரயாப்பு. வியாசமுநிவருடைய உத்தரமீமாஞ்சையுஞ் சூத்திரயாப்பு. தென்மொழியிலே தொல்காப்பியமுநிவருடைய இலக்கணமுஞ் சூத்திரயாப்பு. பவணந்திமுநிவருடைய இலக்கணமுஞ் சூத்திரயாப்பு. இங்ஙனஞ் சூத்திரயாப்பாகிவருவன இன்னும் பல.

வடமொழியிலக்கணங்களிலே இரண்டெழுத்துச் சூத்திரங்களும் இருக்கின்றன. 1. நாதி. 2. அசிடி. 3. ஷஹை:. 4. யேவ என்பன பாணிநீயத்துள்ள இரண்டெழுத்துச் சூத்திரங்கள். தென்மொழியிலக்கணங்களிலுஞ் சுருங்கிய சூத்திரங்கள் இருக்கின்றன. அவைகட்குச் சுருக்கம் ஓரடி. இச்சூத்திரங்கள் போன்று சுருங்கிய யாப்பு வேறில்லை. இவைகளெல்லாம் இலகுவிலே நெட்டுருச் செய்து நினைத்து நினைத்து மனத்திற்பதித்து வைத்துக்கொள்ளற்கு யாப்புறவுடையன. இவைபோலச் சுருக்கமாய் நின்று பொருள்களைப் பெருக்கமாய் அறிவிப்பனயாவை? இவைகட்கெல்லாம் எழுதப்பட்டிருக்கும் உரைகளோ விரிந்து பரந்து வெகுதூரஞ்சென்றன. நுண்ணறிவாளர் விரும்பிக்கற்றுச் சுவைபெறுவன இவையன்றி வேறு யாவை?

இச்சூத்திரங்களை அங்கில பௌம பண்டிதர் பலர் நன்குகற்று வருகின்றார்கள். கற்றுவருதல் ஒன்றோ! அங்கிலத்திலும் நன்கு மொழிபெயர்த்து அச்சிட்டு விடுகிறார்கள். அவர்களெல்லாம் இவ்வாறாக எங்கள் மாணவர்களுள்ளே அங்கிலங்கற்றார் சிலர் "சூத்திரங்களெல்லாம் கடினம்! கடினம்! வாக்கியரூபமாக்குதல் நன்று" என்று

வாய்விண்டு வாதமும் புரிவர். இச்சூத்திரங்களை வசனரூபமாக்கி முடிப்பவர் யாவர்! படிப்பவர் யாவர்! கேட்பவர் யாவர்! வேட்பவர் யாவர்! எழுதுபவர் யாவர்! ஏட்டில் அடங்குமா! பாட்டில் அடங்குமா! இலகுவிற் படிக்கமுடியுமா! எத்தனை நாட்கள் வேண்டும்!

சூத்திரயாப்பிலன்றிச் சுருங்கச்சொல்லல் மேகதூதம், மாகம் முதலிய வடமொழிக்காவிய சுலோகங்களிலும் காணப்படுகின்றன. ஒரு சுலோகப்பொருளை ஒருங்கியாத்தமைத்தற்கு ஒரு கவி போதுமா? பலகவி வேண்டுமே! மேகதூதத்திலே ஒரு சுலோகத்திலே வரும் "உதயநகதாகோவிதா=உதயனன் கதையை நன்கறிந்தவர்" என்னும் பாகத்தைச் சிறிது விரித்துக் கூறுதற்குக் கட்டளைக் கலித்துறை ஒன்று முற்றும் வேண்டியதாயிற்று.

மேகதூதக்காரிகை

ஆவந்தி கன்மகள் வாசவ தத்தையை யன்றுவற்சன்
பார்வந் தொளித்து விரகிற் கவர்ந்த பழங்கதையின்
பாவந் தெரிந்து நரையும் மிகுந்து பழிதொலைந்து
கோவந் தணிந்த பழையோரு மங்குளர் கோமுகிலே.

ஆவந்திகன்=அவந்திதேசராசன். இவன்பெயர் பிரத்தியோதன். இவன் மகள் பெயர் வாசவதத்தை. வற்சன்=குசத்துவிபராசனாகிய உதயநன். விரகு=கபடம். பாவம்=கருத்து. ஒரு சிறிய சுலோகந்தானும் ஒருபாட்டில் அடங்காது.

சுருங்கச்சொல்லல் திருக்குறள், இராமாயணம், பாரதம், கந்தபுராணம் முதலிய தென்மொழி நூல்களிலும் சிறந்தமைந்திருக்கின்றது. திருக்குறளும் இராமாயணமுஞ் சுருங்கச் சொல்லிற் சூத்திரம் என்றே சொல்லத்தக்கன. திருவள்ளுவர், திருக்குறளுக்கு இரண்டு, மூன்று முதலிய எழுத்துக்களில் அமைந்த செஞ்சொற்களையே பெரும்பாலுந் தெரிந்தெடுத்துக்கொள்வர்.

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

இக்குறளிலே வந்த சொற்களெல்லாஞ் சுருக்கமுடையன. சுவை, ஒளி, ஊறு, ஓசை, இன், வகை என்பன இரண்டெழுத்துச்

சொற்கள். என்ற, ஐந்து, தெரிவான், கட்டு, உலகு என்பன மூன் றெழுத்துச் சொற்கள். நாற்றம் என்பது ஒன்றே நான்கெழுத்துச் சொல். வ என்பது ஓரெழுத்துச்சொல். உரைகாரர் பரிமேலழ கர் நீளவிரித்துக் கூறிய சாங்கியதத்துவ வரன்முறைகளையெல்லாம், "வகை தெரிவான்" என்பதனாற் சுருங்கச் சொல்லலாக ஒருங்கு கூறினர்.

> நெடுநீர் மறவி மடிதுயி னான்கும்
> கெடுநீரார் காமக் கலன்.

இக்குறளிலே வருஞ்சொற்களுள்ளே பெரும்பாலன மூன்றெ ழுத்துச் சொற்கள். "நெடுநீர்" என்பது ஒன்றே நாலெழுத்துச் சொல். நெடுநீர் என்பதனாலே "விரைந்து செய்வதனை நீட்டித்துச் செய்யுந்தன்மை" என்னும் பொருளைச் சுருங்கச்சொல்லினர். நெடு நீர் என்பதனை வடநூலார் "தீர்க்கசூத்திரதை" என்பர். இங்ங னஞ் சுருங்கிவருங் குறள்கள் எத்தனையோபல.

திருவள்ளுவர் சொற்களும் வாக்கியமும் பொருளும் ஆக்கும் சுருக்கம்பெறச் சொன்னதேயன்றிச் சில கதைகளையும் சுருக்கம்பெ றச் சொல்லினர். அகலிகைபாலடைந்த இந்திரன் கௌதமர் சா பம் பெற்ற கதையை "இந்திரனே சாலுங்கரி" என்பதனாலும், விருத் திரனைக் கொல்லுதற்குத் ததீசிமுனிவர் இந்திரனுக்கு எலும்புகொ டுத்த கதையினை "என்புமுரியர்பிறர்க்கு" என்பதனாலும், மார்க்கண் டேயர் சிவபூசையால் மறலியைவென்ற கதையினைக் "கூற்றங்குதி த்தலும்" என்பதனாலும், நூறுயாகஞ்செய்து இந்திரப்பேறுபெறச் சென்ற நகுடன் கதையை "வேந்தனும் வேந்துகெடும்" என்பதனா லுஞ் சுருங்கச் சொல்லினர்.

சுருங்கச் சொல்லலென்னுங் குணம்பெறச் சில சொற்களால் தமது கருத்தைச் சொல்லத் தெரியாதவரே பல சொல்ல விரும்பு பவர் என்பது "பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற, சிலசொல்ல றேற்றா தவர்" என்பதனாற் பெறப்படும்.

திருவள்ளுவர் போலவே உரைகாரர் பரிமேலழகரும் சொற்க ளும் வாக்கியங்களும் சுருக்கம்பெறக் கூறுவர். மனம் வாக்குக்

காயம் என்பனவற்றை "மனமொழிமெய்" என்பார். இது நிற்க, இனி இராமாயணத்திற் சில கூறுதும்.

கம்பராமாயணத்திலே கவிகளாலும், சொற்களாலும், கதைகளாலும், சொற்றொடர்களாலுஞ் சுருங்கச்சொல்லல் அதிகம் விளங்குகின்றது. கம்பநாடர் சுருங்கச்சொல்லலையே யாண்டும் வேண்டுவர். கவிகளும், வினைமுடிவுகளும் நீண்டு செல்லுதலைப் பெரும்பாலும் வேண்டார்.

**அவையடக்கம்**

நொய்தி னொய்யசொ னூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமர மேழ்துளை
எய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே.

என்மாட்டுள்ள வன்மையின்மையை எட்டுணையும் நோக்காது இதனைப் பாடத்துணிந்த என்னறிவிருந்தவாறென்னை! என்பதனை "எனை" என்பதனாற் சுருங்கச்சொல்லினர்.

இராமபாணம் இலக்குத் தவறாது தைத்துப்பிளக்கும் இயல்புடைய அமோகபாணம் என்பதனை "வைதவைவு" என்பதனாற் சுருங்கச்சொல்லினர். அமோகம்=இலக்குத் தவறாமை. "வைதவைவு" என்பது இங்கே உபமான மாத்திரமாய் நின்று உபமேயமாகிய இராமபாணத்தினை உணர்த்திற்று. இதனை அலங்காரகாரர் ஒட்டணி என்பர். வைதவைவு=சபித்த சாபவார்த்தை. கம்பநாடர் தடுத்தற்கருமையுந், தவறாமையும் பற்றி முனிவர் சாபவார்த்தையைப் பாணத்திற்குப் பின்னும் உபமானமாக்குவர். "வைவன முனிவர்சொல்லனையவாளிகள்" (அதிகாயன். ௧௧௫.) "தெய்வநாயகன்றெரிகணை திசைமுகத்தொருவன் - வைவிதாமெனப்பிழைப்பில" (வருணனை வழி. ௩௨.) "வைதாலென......வடிவாளியினறுத்தான்" (முதற்போர். ௧௫௮.) தாடகைவதையிலே "சொல்லொக்குங்கடிய வேகச்சுடுசரம்" என்புழிச் "சொல்" என்றதும் முனிவர் சாபவார்த்தையை.

வைதவைவு என்பதுபோல உவமானத்தை மாத்திரங் கூறி உவமேயத்தை உய்த்துணரவைத்துச் செல்லுதல் இந்நூலாசிரியர்க்

குப் பெருவழக்கு. "சாளரந் தோறுந் தோன்றுஞ் சந்திரோதய முங்கண்டார்" (மிதிலைக்காட்சி) "அன்னமரிதிற்பிரிய" ( கோலங் காண் ) "கொம்பினை" (கார்மு) என்பவைகளும் உபமான மாத்திரையாய் நின்று உபமேயத்தை உணர்த்தின.

"வைதவைவின்" என்பதை "எய்தவற்கெய்தியமாக்கதை" என்பதனோடியைத்து, அம்பினால் எய்தவராகிய ஸ்ரீ ராமபிரான்பொருட்டுத் தைவிகமாய்த் தம்பாலெய்திய பெருங்கதை எனப்பொருள் கொள்ளல் நன்று. இனி "வைதவைவின்" என்பதனை "மாக்கதை செய்த" என்பனவற்றின் நடுவிலே வைத்துப் "பெருங்கதையை ஒரு வேடனை வைதவைவினாற் செய்த" என்று பொருள்கூறுவாருமுளர். இது பொருந்தாமையை "எய்திய" என்பதும், பிறவும் நோக்கி அறிக. இனி "வைதவைவு" என்பதனைத் துளையெய்தற்கு உபமானமாக்கி உரைப்பாருமுளர். வைதவைவு துளைசெய்யத் தகுவதன்றித் துளையெய்தத் தகுவதன்மையின் அதுவும் உரையன்மை அறிக.

ஒருநாள் வான்மீகிமுனிவர் சீடராகிய பரத்துவாசமுனிவரோடுந் தமசையாற்றங்கரையிற் சென்று ஸ்நாந செபதர்ப்பணங்களை முடித்துக்கொண்டு அதன் கரையிலுள்ள அடவிவளங்களை நோக்கினார். நோக்கும்போது கிரீடை செய்து களித்து நின்ற அன்றிற்பறவை யிரட்டையுள்ளே ஒன்றாகிய ஆண்பறவையை வேடனொருவன் கொன்றதையும், பெண்பறவை பரிதபித்துப் புலம்பிநின்றதையுங்கண்டார். இது பெரும்பாவம் என்று கருதி இரக்கங்கொண்டார். கொண்டபின்,

> மா நிஷாத ப்ரதிஷ்டாம் த்வமகம: சாச்வதீ: ஸமா: ।
> யத்க்ரௌஞ்சமிதுநாதேகமவதீ: காமமோஹிதம் ॥

என்னும் வாக்கியத்தினைக் கூறினார். கூறிய பின் எம்மால இப்படிக்கூறப்பட்டவாறு என்னை? என்று ஒரு முகூர்த்தம் சிந்தித்தார். சிந்திக்கும்போது அவ்வாக்கியம் ஒரு சுலோகமாய்த் தோன்றிற்று. பின்னர்ச் சுலோகப்பொருளைச் சிந்தித்துக்கொண்டு ஆச்சிரமத்திற்

சென்றபோது அச்சுலோகத்திலே தைவிகச்செயலாய் இராமகாதையும் எய்திற்று. இதனைக்கேட்டுணர்ந்த பிரமதேவர் இக்கதையினைக்காவியமாகச்செய்யும்படி வான்மீகி முனிவரை நியமித்தனர். அவர் காவியமாகச் செய்தற்குமுன் இவ்வாறே தைவிகச்செயலாய் அவர்பால் இக்கதை அடைந்தது என்பதனை "எய்தியமாக்கதை" என்பதனாற் சுருங்கச்சொல்லினர். எய்துதல்=அடைதல். பொருந்துதல் என்னும் பொருள் இதற்குப்பொருந்தாது.

வான்மீகி ராமாயணம் யாவராலும் விரும்பிக் கற்கப்பட்டு ஒப்புயர்வின்றி நின்று நிலவுகின்றது என்பதனைப் "செய்தவன்சொன்னின்ற" என்பதனாற் சுருங்கச்சொல்லினர்.

திருவவதாரப்படலம்

எதிர்வரு மவர்களை யெம்மையுடை யிறைவன்
முதிர்தரு கருணையின் முகமல ரொளிரா
எதுவினை யிடரிலை யினிதுநும் மனையும்
மதிதரு குமரரும் வலியர்கொ லெனவே.

ஸ்ரீ ராமபிரான் பாலியப்பருவத்திலே கல்வி கற்றும், படைக்கலம் பயின்றும், முனிவர் வாசங்களுக்குப் போக்குவரவு செய்துந் திரியுங்காலத்திலே எதிரே வருஞ் சனங்களை நோக்கிக் கருணைகொண்டு முகமலர்ந்து நான்கு வினாக்கள் வினாவினார்.

௧. எது வினை=தொழில் யாது?

௨. இடர் இலை=இடரொன்றும் இல்லையே?

௩. நும்மனையும் இனிது=நுங்குடும்பமுஞ் சுகவாழ்வுடையது தானே?

௪. குமரரும் வலியர்கொல்=நும்புத்திரரும் குசலமுடையரா?

இடரிலை என்பதும் இனிது நும்மனையும் என்பதும் சொல்லுந்திறக்குறிப்பினால் வினாப்பொருள் உணர்த்தி நின்றன. அவற்றொடு "கொல்" என்பதனைக் கூட்டியுரைத்தலும் அமையும். வலி

எனினும் குசலம் எனினும் ஒக்கும். இனிது என்பது அச்சிலே "இனிதின்" என வேறுபட்டது.

இந்நான்கு வினக்களுக்குஞ் சனங்கள் சொல்லும் மறுமொழிகளைப் பின்வரும் "அஃதையநினையெமதரசெனவுடையேம்" என்னுங் கவியின் முதற்கணுள்ள "அஃது" என்பதனாற் சுருங்கச்சொல்லினார். அஃது என்பது நீவிர் நினைத்தது என்பதைக்குறித்து நின்றது. நினைத்ததாவது உரியதொழிலுடைமையும் சுகமுடைமையுமாயிருத்தல். "அஃதேயுரைத்திலம்'' (சிந்தா. நாமக. உநக) என்புழி "அஃது" என்பதற்கு நச்சினார்க்கினியர் "நினது நினைவு" என்றார்.

இனி உரைகாரர் "அஃது" என்பதற்குத் "திக்கற்றவர்கள்" என்று உரை கூறுவர். முன்னை வினக்களுக்கு மறுமொழியின்மையானும், அஃது என்புழி அப்பொருட்கேற்ற ஆற்றலின்மையானும் அவ்வுரை பொருந்தாமை அறிக.

இன்னும் இராமாயணத்திலே எழுவாயும் பயனிலையுஞ் சமீபமாய் வாக்கியங்களும், கதைகளும், கவிகளும் பெரும்பாலுஞ்சுருங்கச்சொல்லலாய் அமைந்திருத்தலை ஆங்காங்கு நோக்கி அறிக.

சுருங்கச்சொல்லலை வாணிகம் புரியும் வணிகமாக்களும் வேண்டுவர். "சொற்சுருக்கியுஞ்சுட்டிக்கூறியும், விற்குமாவணம்" என்பது தணிகைப்புராணம். சூரியகுல மன்னரும் வேண்டுவர். "ஸத்யாய மிதபாஷிணாம்" என்பது இரகுவமிசம். நூலுரைகள் செய்வோரும் வேண்டுவர். அங்கில நியாயவாதிகளும் வேண்டுவர். பின்னர் வேண்டாதார் யாவர்? சுருங்கச்சொல்லலைப் பராமுகஞ்செய்யுங்கால் வருங்குற்றங்களோ பல. மிகைபடக்கூறல், கூறியது கூறன் முதலிய குற்றங்கள் பலவும் வரும்.

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

உ

சிவமயம்

# இமயமலையும், கிறிஸ்தவர் சுவர்க்கமும்

## Heaven.

இமயமலை உலகத்திலேயுள்ள மலைகளெல்லாவற்றினும் உயர்ந்ததும் சிறந்ததுமென்பது யாவர்க்குமுடன்பாடேயாம். அதனை ஒருவராவது மறுத்திடமாட்டார். அஃது எத்தேசத்திலுள்ளாருக்கும் எந்நிலையிலுள்ளாருக்கும் அற்புத மலையேயாம். அதுபற்றியே அது பர்வதராஜாவெனப்படுவதுமாம்.

இமயம் நடுவாக நான்மருங்கும் எல்லாச் சாதியாளரும் எல்லாச்சமயத்தாரும் சூழ்ந்திருக்கின்றார்கள். இமயமலை ஐந்து மைலுக்கு மேல் உயர்ந்தோங்கி வானளாவி ஆயிரகோடி சூரியப்பிரகாசமாய் வெள்ளிமயமாகிய சிகரங்களோடு விளங்குவது. பார்த்தோர் கண்களைக் கவர்ந்து அண்ணாந்த நிலையில் நிறுவி அதிசயாநந்தக்காட்சியையூட்டி மற்றை யுலகக்காட்சிகளையெல்லாம் மறப்பித்துத்தன்மாட்டவர்கள் கருத்தையுமொருங்கே கவரும் ரமணீயாலங்காரமுடையது. "அங்கே சென்றால் கிலேசமற்றிருக்கலாம்; அதுவே தேவகணங்கள் வாழும் திவ்வியக்ஷேத்திரம்; அங்கேயே எங்கள் கடவுள் சாந்நித்தியராயிருக்கின்றார்" என்று யாவரையும் அவாவச்செய்யும் தோற்றமும் கவர்ச்சியும் அச்சிகரங்களிடத்தே இயல்பாகவுண்டு. அதுபற்றியே, அச்சிகரங்களுக்கிடையேயுள்ள பிரதேசத்தைக்கைலாசமென்னும் பெயரால் ஆரியர் வழங்குவாராயினர். கைலாசம் கிலேசத்தைப்போக்குவது. அதனைச்சென்று தரிசித்தார் பலருளரென்னும் ஐதிகமுண்டேயன்றி அடைந்துமீண்டாரையறியேம்.

"பொன்னின்வெண்டிருநீறுபுனைந்தெனப்
பன்னுநீள்பனிமால்வரைப்பாலது
தன்னையார்க்குமறிவரியானென்று
மன்னிவாழ்கயிலைத்திருமாமலை."

"அண்ணல்வீற் றிருக்கப்பெற்றதா தலி
னண்ணுமூன் றுலகுநான் மறைகளும்
எண்ணின் மா தவஞ்செய்யவந்தெய் திய
புண்ணியந்திரண்டுள்ள துபோல்வது."

"நிலவுமெண்ணிறலங்களுநீடொளி
யிலகுதண்டளிராகவெழுந்ததோர்
உலகமென் னுமொளிமணிவல்லிமேன்
மலரும்வெண்மலர்போல்வதம்மால்வரை.

"மேன்மைநான்மறைநாதமும்விஞ்சையா
ரானவின்னயிசை யும்காரெதிர்
தானமாக்கண்முழக்கமுந்தாவில்சீர்
வான துந்துபியார்ப்புமருங்கெலாம்."

"நாயகன்கழல்சேவிக்கநான்முகன்
மேயகாலமலாமையின்மீண்டவன்
றூயமால்வரைச்சோதியின்மூழ்கியொன்
றூயவன்னமுங்காணுதயர்க்குமால்."

என்றிவ்வாறு அத்திருமலைச்சிறப்பைத் தெய்வப்புலமைச்சேக்கிழார்நாயனரும் பாடியருளினர். அது நிற்க;

இவ்வுயர்ந்த சிகரங்களின் அத்தியற்புதாநந்தத்தோற்றத்தைக் கண்ட பூர்வமேலைத்தேசவாசிகளும், உத்தரதேசவாசிகளும், அச்சிகரங்களையுடைய இமாலயமலையே புண்ணியஞ்செய்தோர் போயடையும் திவ்வியாநந்தசுவர்க்கமென்றும், அதுவே தமது கடவுளிருக்கும் க்ஷேத்திரமென்றும் கொண்டாராதல்வேண்டும். அவ்வுண்மை மேல் வருவனவற்றுல் துணியப்படும்.

ஆங்கில பைபிள் பிரார்த்தனை:—பிராரம்பம்.

"பரமண்டலங்களிலுள்ள எங்கள் பிதாவே."

"Our Father which art in Heaven"

இதிலே வரும் "ஹெவின்" என்னுஞ்சொல் ஐரோப்பியபாஷைகளில் எவ்வாறு வழங்குகின்றதெனக்காட்டுதும்.

German. ஜர்மன் பாஷை.

"Unser Vater, der du bist im *Himmel*"

ஆங்கிலத்தில் "ஹெவின்" என்பது ஜர்மன் பாஷையில் "ஹிம்மெல்" எனப்படுகின்றது.

Dutch - டட்சு பாஷை.

"Onze Vader, die in de *Hemelen*"

ஹெவின் என்பது டட்சுபாஷையில் "ஹெமெலென்" எனப்படுகின்றது.

Icelandic - ஐஸ்லாந்தியபாஷை.

"Fader von, thu sem ert a *Himnum*"

"ஹெவின்" என்பது ஐஸ்லாந்திய பாஷையில் "ஹிம்னம்" எனப்படுகின்றது.

Norwegian - நார்வே பாஷை.

Faer vaar, du som er i *himlen*

ஹெவின் என்பது நார்வே தேசபாஷையில் "ஹிம்லென்" எனப்படுகின்றது.

Swedish - சுவீடென்தேச பாஷை.

Fader Var som ast i *himlom*

"ஹெவின்" என்பது சுவீடென்தேச பாஷையிலே "ஹிம்லம்" எனப்படுகின்றது.

Danish - தேனியபாஷை.

Vor Fader, du som er i *himlene*

"ஹெவின்" என்பது தேனிய பாஷையிலே "ஹிம்லெனெ" எனப்படுகின்றது.

இவ்வாறே ஐரோப்பிய தேசபாஷைகளெல்லாவற்றிலும் பரமண்டலம் "ஹெவின்" (heaven) என்பதற்கு வழங்கப்படுஞ்சொற்களெல்லாம் ஹிமாலயம் (இமயம்) என்பதன் திரிபாகவும் சிதைவாகவுமே யிருத்தல் பிரத்தியக்ஷமாக விளங்குகின்றது. இவ்விஷயத்திலே செய்யத்தக்க சித்தாந்தத்தையும் அநுமானங்களையும் இதனை வாசிப்போர் செய்துகொள்ளுமாறு இவ்வளவில் முடிக்கின்றேம்.

ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை.

# யானைமலைக் காடர்கள்

யானைமலை யென்பது கோயமுத்தூர் ஜில்லாவில், கோயமுத்தூரிலிருந்து நாற்பதுமைல் தூரத்திலுள்ளது. இதன் அடிவாரத்திலுள்ள ஊருக்குச் சேதுமடையென்றும், மலையின் உச்சியிலுள்ள ஊருக்கு மவுண்டு ஸ்டூவர்டு (Mount stuart) என்றும் பெயர். இந்த மலைக்குச் சென்னை இராஜதானியில் முன்னர்க்கவர்னராக விருந்த ஸர்-மவுண்டுஸ்டுவர்ட் கிராண்டப் (Crant Duff) என்பவர் விஜயஞ்செய்ததின் நிமித்தம் இப் பெயரிடலாயிற்று. இம்மலையுச்சி சமுத்திர மட்டத்துக்குமேல், 2350-அடி, அதாவது சற்றேறக்குறைய அரைமைல் உயரமுள்ளது. இதனால், இது குளிர்ச்சிபொருந்திய தலங்களிலொன்றாயினும், இன்னும் இதனை ஐரோப்பியர் கோடைகால வாசஸ்தலமாக்கிக் கொள்ளவில்லை. அம்மலையிற் காடுகளடர்ந்து விசேஷமாயிருக்கின்றன. அதனில்வசிக்குஞ் சாதியாருக்குக் காடர் என்று பெயர். இவர்கள் குட்டையாயும், கருநிறமுடையராயும், சப்பைமூக்குடையராயுமிருக்கின்றனர். இம்மலைச்சாதியார் பேசும் பாஷையோ தமிழே யாயினும், வெகுகாலமாகச் சுத்தத் தமிழரிடம் பழகாமையால் ஒருவிதமான கொடுந்தமிழாயிருக்கின்றது. ஒரு ஆங்கிலேயர் இவர்களுடன் பேசும்பொழுது, "இங்கிலாந்திலுள்ள சப்போக் ஜில்லாவாசி (Suffolker) பேசுவதுபோல், மெதுவாக ஆரம்பித்து உச்சஸ்வரத்தில் கொண்டுபோய் முடிக்கிறார்கள்." என்றெழுதியிருக்கின்றார்.

அன்றியும், பேசும்பொழுதெல்லாஞ் சில சாதியினருக்குச் சில துர்வழக்கங்கள் படிந்திருப்பதுபோல், இவர்களிடத்தில் ஆலே, ஆலே என்று சேர்த்துப்பேசுவது இயல்பாக விருக்கின்றது. உதாரணமாக, பூவாலே, (பூவுடையவனென்றும்,) கரமாணாலே, (கருப்பன்) என்றும் பேசுகின்றனர். இவர்கள் கல்விநலம்பெறா மூடர்களே யாயினும் திருப்தியுள்ள வாழ்வுடையவர்கள். இவர்களுக்கு விருப்பு அதிகமில்லை. இவர்கள் பயிரிடுந் தொழிலுடையவருமல்

லர். காடுகளிற் கிடைக்கும் தேன், மெழுகு முதலியவைகளை யெடுத்து விற்று அவைகளாற் கிடைக்கும் ஊதியத்தைக்கொண்டு தமக்குவேண்டிய பல பண்டங்களைப் பெற்றுச் சுகவாழ்வடைவோர். இவர்கள் பூர்வகுடிகளென்பதற் கறிகுறியாக ஏதாவதொரு ஆயுதமுண்டானல், அதனைக்கொண்டே பல காரியங்களையுஞ்செய்து கொள்ளுகின்றனர். இவர்களைப்பற்றிப் பிரசங்கஞ்செய்த ஆங்கிலேயர், "ஒரு சாதியினர் எவ்வளவுக்கெவ்வளவு நாகரீகத்தில் குறைவுற்றிருக்கின்றனரோ, அவ்வளவுக்கவ்வளவு புத்திகூர்மையுடையவர்களாகத் தங்களுக்குத் தாங்களே எல்லாக்காரியங்களையுஞ் செய்துகொள்ளும் வன்மையுடையோராக விருக்கின்றனரென்பது இக் காட்டுச்சாதியரால் நன்கு புலப்படும்; இவர்களிடம் ஒரு அரிவாளைக்கொடுத்தால், இவர்கள் என்னென்ன அற்புதங்களைச் செய்கின்றனர் என்பதைப் பாருங்கள். அதனால், மரக்கிளைகளை வெட்டி வசித்தற்கு யோக்கியமாயும் அழகாயுந் தோற்றும்படிக்கு வீடுகட்டுகின்றனர். அவ்விடத்தில் ஓடும் காட்டாறுகளைக் கடத்தற்குப் பிரம்பு முதலியவைகளாற் பாலஞ் செய்கின்றனர். மூங்கிலால் தெப்பங்கட்டுகிறார்கள்; மூங்கிலால் நல்லசீப்புத் தயார்ச்செய்கிறார்கள். மீன்பிடிப்பதற்கு நார்களைக் கிழித்துக் கயிறுமுறுக்கி வலைசெய்கிறார்கள். அடுப்புக்கு விறகுவெட்டுகிறார்கள். நீங்கள் எங்கு உண்ண ஆகாரமின்றிப் பட்டினிகிடக்கவேண்டுமென்று எண்ணுகிறீர்களோ, அங்கு அவர்கள் அதிகமான உணவுப் பொருள்களைக் காட்டுவார்கள்; இன்ன மரக்கிளையை வெட்டினல் அதன்ரசம் ருசியாகவிருக்குமென்றுங் காட்டுவார்கள். நாகரீகம் பொருந்திய ஜாதியார் பட்சிகள் மிருகங்களைப்பிடிக்க வைத்திருக்கும் யந்திரங்களைக்காட்டிலும் மேலான வலை, கண்ணி முதலியவைகளைச் செய்வார்கள்" என்றார்.

இச் சாதியினர் எப்போதும் சஞ்சாரத்திலேயே பிரியமுடையவர்கள். மலையிலுள்ள காடுமுழுவதுஞ் சுற்றித்திரிவதே இவர்களுக்குப் பிரியம். அதற்குத் தக்கபடியே இவர்கள் குடிசைகளையும் தயாரித்து வைத்திருக்கின்றனர். இவர்கள் மூட்டைமுடிச்சுக்களைத் தலையிற்றாக்கும் வழக்கமுடையோரல்லர். எவ்வளவு பாரமாயினும் முதுகிற் சுமக்கவல்லவர். இவர்கள் இராக்காலங்களில், கரடி, புலி முத

வியன வந்து தங்களைத் தொந்தரவு செய்யாமலிருக்கும் நிமித்தம் கணப்புப் போட்டுக்கொண்டு தூங்குவார்கள். இவர்கள் பைசாவுக்கு விறகும் நெருப்புப்பெட்டியும் வாங்கவேண்டுவதில்லை. பழைய வழக்கமான தீக்கடைதலேயே கையாண்டுவருகின்றனர். இவர்களுக்கு மிருகபயமே கிடையாது. அவைகளோடு பழகுபவர்களுக்கு, அவைகளிடம் பயம் எப்படி ஜனிக்கும். இவர்கள் ஆதிகால முதலே வஸ்திரமுதலான ஆடையின்றிப் பட்டை முதலானவைகளை யுடுத்தி வந்திருக்கின்றனர். இப்பொழுது எல்லோரும் துணிகளை யுடுத்தவும் பித்தளை யிரும்பு முதலியவைகளாலான நகைகளை அணியவுந் தலைப்பட்டிருக்கின்றனர். இவர்களுக்கு நிலமுதலியவை யில்லாவிட்டாலும், அவ்வேலைகளைச் செய்யுந்திறமையுங்கிடையாது. மண்வெட்டியை யெடுத்தால் காலிற்போட்டுக்கொள்வார்களே யொழிய வேலைசெய்யமுடியாது. இராஜாங்கத்தார், காட்டில்விளையும் பொருள்களான தேன், மெழுகு, இலவங்கப்பட்டை, கடுக்காய், இஞ்சி, குங்குலியம், மஞ்சள், மான்கொம்பு, தந்தம், பிரம்பு முதலியவைகளைப் பொறுக்கி விற்குஞ் சுதந்தரத்தை யளித்திருக்கின்றனர். அவற்றை விற்று அதன்மூலமாகச் சீவிக்கின்றனர். இவர்கள் ஏறமுடியாதென நினைக்கும் உன்னதமரங்களிலும், மிக்க வழுவழுப்பான கற்பாறைகளிலுமேறி யிறங்கித் தேன் முதலியவை சேகரித்துவந்து விடுவார்கள். மரங்களில் ஏறுவதற்காக ஒரு மூங்கிலைக்கொண்டுவந்து சாத்தி, மரத்தினடியில் ஒருதுளையிட்டு மூங்கிலையும் மரத்தோடு சேர்த்துப் பிணிக்கிறார்கள். பிறகு நெஞ்சுயரத்தில் ஒருதுளையிட்டு அதனிடத்தும் அம்மூங்கிலைப் பிணிக்கிறார்கள். பின்பு அந்தக்கயிற்றின் றுளைக்கட்டில் நின்றுகொண்டு, மறுபடி ஒரு துளையிட்டு அதனிடத்தும் பிணிக்கிறார்கள். இவ்விதமாக மரக்கிளைகளைச் சமீபிக்கும்வரை யொன்றன்மேலொன்றாகவைத்துப் பிணித்து ஏறிவிடுகிறார்கள். மலையிலிருந்து செங்குத்தான பாறைகளிலிறங்க, ஒரு மரத்திலோ அல்லது துளையிலோ, நல்ல பலமானபிரம்பு அல்லது கொடிகளைக்கட்டி யதிற்படிப்படியாகக் கழிகளைக்கட்டித் தொங்கவிட்டு அதன்வழியாக ஏறியிறங்கி விடுகின்றனர். இப் படிச்செய்வதற்கு மாத்திரந் தனது மனைவியாவது மக்களாவது உயரக்காவலில்லாமற் செய்வதில்லையாம். அப்படியில்லாமல், வேற்றுமனிதனோடு போகவேண்டியிருந்தால்,

மேலேயிருப்பவன் மனைவியுங்கீழே போகிறவனுடன் செல்லவேண்டு
மாம். இவர்கள் மரங்களிலேறிச் செல்வதுபோற் குரங்குகள்கூடச்
செல்லாது.

இது போலவே, சிங்கப்பூருக்குக் கிழக்கிலுள்ள மலேய தீவுக
ளிலொன்ருன போர்னியோ தீவிலுள்ள தியாக்ஸ் (DYAKS) என்னும்
ஜாதியார் மரம் ஏறுகின்றனரென்றும், இவர்களும் அவர்களைப்போ
லவே ஏறுகிருர்களென்றும் வாலஸ் என்பவர் எழுதியிருக்கின்ருர்.
இவர்களுக்குணவு தேன், பழங்கள், கிழங்கு முதலியவைகளாம்.
அன்றியும், கூந்தற்பனையில் காலம் பார்த்துக் குருத்தைவெட்டி
ஒவ்வொருமுழத் துண்டுகளாக்கி ஜலத்திலூறப்போட்டு நன்ருக நசுக்
குகின்றனர். அதன் சத்து நீரிலிறங்கியவுடன், அதனை நன்ருய்க்
காய்ச்சி யுணவாகக்கொள்ளுகின்றனர். சவ்வரிசியும் இப்படிக்காய்
ச்சி மறுபடி யச்சில் வார்க்கப்படுகிறது. மாமிசம் நன்ருயுண்பார்கள்.
குரங்கு, முட்பன்றி, மலைப்பாம்பு முதலியவைகள் தள்ளுபடியல்ல.
இவைகளெல்லாம் முக்கிய உணவுகள். காடனொருவன் வயதுவந்து
கலியாணஞ்செய்துகொள்ள நினைப்பானுகில், அவன் யாரைமணக்க
விரும்புகிருனே அவள் தந்தைவீட்டிற்சென்று சிறிதுகாலம் வேலை
செய்து தன் சம்பாத்தியத்தைக்கொண்டு கலியாணத்தன்று ஆடு,கோ
ழி முதலியவை வாங்கி விருந்துசெய்யவேண்டும். ஊரார்கூடி விருந்து
ண்டு முடிந்தபிறகு, பெண்ணும் மாப்பிள்ளையும் பந்தலைச்சுற்றி யொ
ருவர் சுண்டுவிரலை யொருவர் கோத்துக்கொண்டு பிரதக்ஷிணஞ்செ
ய்து உட்கார்ந்து தாம்பூலம் மாற்றிக்கொள்ளுகின்றனர். முன்னதா
கவே மாப்பிள்ளையுடைய தங்கை தமக்கை யல்லது தாயினுல் தாலி
கட்டப்படுவது வழக்கமாம். தாலி பொன் அல்லது வெள்ளியாற்
செய்யப்பட்டதாயிருக்கும். இவ்வளவுதான் அவர்கள் கல்யாணம்.
ஒருவன்றன் பெண்டாட்டியை வேண்டாமென்று சொல்வதாகவிருந்
தாற், சமையல் முதலியவை தெரியாமலிருந்தால் வேண்டாமென்று
சொல்லிவிடலாம். வியபிசாரம், அடக்கமின்மை முதலிய தீக்குணங்
களிருப்பின் கேட்காமலே தள்ளிவிடலாம். ஊரார்கூடிச் சகல விசார
ணைகளையும் நடத்தித் தண்டனை செய்கிருர்கள். ஒருத்தியைத்தான்
கல்யாணஞ் செய்துகொள்ள வேண்டுமென்ற நியதியில்லை. முக்கியமா

கச் சந்தான விருத்தியின்பொருட்டு எத்தனைதாரம் வேண்டுமென்று லுஞ் செய்துகொள்ளலாம். இக் காட்டுச்சாதியாரிடங்கூடச் சந்தானவிருத்திக்காகக் கல்யாணஞ்செய்து கொள்ளுவது காணப்படுமாயின், இந்திய நாகரீகம் எத்தன்மையது என்று வியவகரிக்கவும் வேண்டுமோ? ஸ்திரீகள் பூப்புற்றிருக்கும்பொழுது குடிசைக்குள் நுழையக்கூடாதென்று, அதற்காகத் தனிக்குடிசைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஒரு பெண் ருதுவானால் அதற்கு இக்குடிசைகளையெல்லாந் தவிர்த்துத் தனிக்குடிசை தயாரிக்கப்படுகிறது. பிரசவித்தால் தனிக்குடிசைதான். பிரசவித்தவள் மூன்றுமாதம்வரையொன்றையுந் தொடக்கூடாதாம்.

இவர்களுள் இருக்கும் முக்கியமான வழக்கமொன்று என்னவெனில், ஆண்மக்கள் பதினெட்டு வயதடையும்போதும், பெண்கள் பத்துப்பன்னிரண்டு வயதடையும்போதும் பற்களை யுளி யல்லது கொடுவாள்கொண்டு கூர்மையாகும்படி செதுக்கி அரத்தால் அராவிவிடுகின்றனர். அராவும்போது உண்டாகும் கஷ்டத்திற்கு அளவில்லை. அங்ஙனம் இருந்தும் அப்படிச் செய்துதான் தீரவேண்டும். ஆனால், நாலைந்து நாட்களுள் வீக்கம் முதலியவை வாடிச் சௌக்கியமாகின்றன. இதுபோலத் திருவாங்கூரிலுள்ள மலைவேடர்களுஞ் செய்கின்றார்கள். ஸ்கீட், பிளாக்டன் என்னும் இருவரும் மலையநாடுகளைப் பற்றி யெழுதும்போது, அந்நாட்டிலுள்ள ஜாகும் ஜாதியினரும் இதேமாதிரி பற்களைக் கூர்மையாக்குவதோடு ஒரு கருப்புப் பொடியையும் பல்லில் தேய்க்கிறார்களென்றும், இதுதான் கல்யாணத்திற்குத் தக்க வயது வந்தவர்கள் என்பதற்கு அடையாளமென்றுங் கூறியுள்ளார்கள். சென்னை மியூசியம் என்னும் காக்ஷிசாலையதிபராயிருந்த மிஸ்டர் எட்கர்தர்ஸ்டன் தாமெழுதிய தென் இந்திய சாதிகள் என்னும் புத்தகத்தில் இச்சாதியினரும் மலைவேடரும், இப்படிப் பற்களைக் கூர்மையாக்குவது புராதன வழக்கமாக விருக்கலாமோ வென ஊகிக்க இடமிருக்கின்றதென எழுதுகின்றனர்.

இவர்களுக்குள் மற்றொரு வழக்கமாவது கல்யாணப் பெண்ணுக்கு மாப்பிள்ளை சீப்பொன்று தயாரித்து வெகுமதியளித்தலாம். இந்தச் சீப்பினிற் பலவிதமான அபூர்வ வேலைகளும் கொடிக்கருக்

குகளும் செய்யப்படுகின்றன. இதேமாதிரி மலையத் தீவுகளிலும் மூங்கிலினுற் சீப்புகள்செய்யப்பட்டு வெகுமதியாக அளிக்கப்படுவதுண்டாம். சேமங் என்னும் மலேய ஜாதியார்வைத்திருக்கும் சீப்புகளில் குறிபாஷைகள் நிரம்பியிருக்கின்றனவாம். பெராக் மலேயநாட்டு பெயிக் ஜாதியாரிடத்திருக்கும் சீப்பு ஒன்றுபோலொன்று இருப்பதில்லையாம். இவைகளால், பூர்வம் தென் இந்தியா அதாவது, திராவிட தேசம் வெகுதூரம் பரவியிருந்ததென்ப துண்மைதானென்று கொள்ள வேண்டியிருக்கிறது. இவர்கள் தொழுந் தெய்வங்களோ, வன தேவதை, ஐயப்பசுவாமி, மாசனியாத்தா என்பவைகளாம். காளி தேவதையையும் ஆராதிப்பதோடு மலைக்குக் கீழேயுள்ள கோயில் உற்சவங்களுக்குஞ் செல்லுகின்றனர். பூர்வத்தில் வனதேவதைகள் ஆராதிக்கப்பட்டு வந்தனவென்பது இவர்களால் நிச்சயமாகிறது. அன்றித், தெய்வங்களையாராதிப்பதென்னும் வழக்கமும் இவர்களது பழைமைக்கு ஆதாரமாகிறது. இவர்களும் ஈமக்கடன் முதலியன செய்கின்றனர். இறந்தோரைத் தகனம் செய்யாது புதைத்துவிடுகின்றனர். நாடுகளிற் சமாது செய்பவர்கள் அதன்மேற் கற்சிலை முதலிய சின்னங்கள் கிறிஸ்தவர்களைப்போல, எழுப்பாததையொப்ப இவர்களும் ஒன்றுஞ்செய்வதில்லை. இதனையறியாத ஐரோப்பிய ரொருவர் காடர்கள் பிணங்களைத் தின்றுவிடுவதாகக் கூறினராம். பொருள் இருப்பவர்கள், ஒருவன் இறந்த எட்டாநாள் படையல் போட்டு வுர்விருந்து செய்கிறார்கள். இல்லாதவர்கள் ஒரு வருஷம் சென்றபின்பாவது சாமான் சேகரம்செய்து செய்கின்றனர். இவர்களும் தென்புலத்தார்கடன் இறுக்கின்றனர். கானற்சோறு என்று சோற்றைக் குடிசைக்குச் சிறிதுதூரத்திற் பொங்கி இறந்தோர் எல்லோருக்கும் நிவேதனம் செய்கின்றனர். பிறகு எல்லோரும் கூடி இறந்தவன் குணதிசயங்களைப் போற்றிவிட்டு, வீட்டிற்குள் நுழைந்து அங்கு போட்டிருக்கும் படையலை தேவதைகளுக்கு, வந்திருப்போரிற் பெரியவன் அர்ப்பணஞ்செய்து வைக்கப்பட்டிருக்கும் வஸ்துக்களில் ஒவ்வொருபிடி எடுத்துத் தெய்வங்களை நினைத்து வெளியில் எறிந்துவிட்டு எல்லோரும் விலாப்புடைக்கத்தின்று சுக வாழ்வடைந்திருக்கின்றனர்.

இலக்கணவிளக்க பரம்பரை,

**திருவாரூர், சோமசுந்தரதேசிகன்.**

சிவமயம்

# திருக்குறளாராய்ச்சி.

யான் 'செந்தமிழ்' எ-ந்தொகுதி கக-ம் பகுதியில் வரைந்தவ ற்றுட் சிலவற்றை மறுத்து, 'செந்தமிழ்' கூ-ந்தொகுதி உ-ம் பகுதியில் ஸ்ரீ. அ. க. இளையதம்பி என்பவர் எழுதியிருக்கின்றார். யானெழுதியவற்றையும் அவரெழுதிய மறுப்புக்களையும் ஈண்டெடுத்தெழுதின் விரியுமாதலால் அவற்றை விடுத்துக் கருத்துவேறு பாட்டைமட்டும் எடுத்துக் காட்டி விளக்கி அவர் மறுப்பை மறுக்கின்றேன்.

கசுஅ. அழுக்காறெனவொருபாவி திருச்செற்றுத்
தீயுழியுய்த்துவிடும்.

என்னுங் குறளின் விசேடவுரை முதல்வாக்கியத்தில் "பண்பிற்குப் பண்பில்லையேனும்" என்னும் பாடம் பொருத்தமுடைத்தென்றேன் யான். அவரோ இதனை "விபரீத ஆராய்ச்சியர்கும்" என்று மறுத்து "பண்பிற்குப்பண்பியில்லையேனும் என்னும் பாடமே பொருத்தமுடையதும் உரையாசிரியர் கருத்துக்குடன்பாடானதும் ஆம்" எனக்கொள்ளுகின்றார். அவர் முதலில் "பண்பிற்குப்பண்பியில்லையேனும் என்பது—பண்புதானே பண்பியாயிருத்தல் கூடாதாயினும் என்னும் பொருள்பட்டுக்கிடக்கின்றது" என்று கூறுகின்றார். "பண்பிற்குப்பண்பில்லையேனும்" என்பதன் பொருளும் இதுவேயாம். இதுபற்றியே "பண்பிற்குப்பண்பு கோடல் பொருந்ாது" என்னுந் தருக்கசங்கிரகதீபிகை வாக்கியத்தையும், "குணத்திற்குக்குணமின்மையின்" என்னுஞ்சேனாவரையர் மொழியினையும் யானெடுத்துக்காட்டியிருக்கின்றேன். ஆதலால், பண்பானது ஒரு திரவியத்தைப்பற்றி நிற்குமல்லது தான் றனியே நின்று மற்றொரு பண்புக்குப் பற்றுக்கோடாகாதென்பது எங்களிருவருக்கும் உடன்பாடாம்.

இனி அவர் கூறிய 'பண்புதானே பண்பியாயிருத்தல்' என்பது 'ஒரு பண்பு மற்றொரு பண்பையேற்றிருத்தல்'என்று நான்கொண்ட பொருளையன்றி, 'ஒரு பண்பு அதனையுடைய பொருளாயிருத்தல்' என்னும் பொருளையுந்தருமாயினும் அவ்வாறு குணத்தையே அதனையேற்றுள்ள திரவியமாகச் சொல்லுவது * குணகுணிகட்குள்ள ஒற்றுமைபற்றிச்சொல்லும் வழக்கமாகலின், அது வழுவாகாது. மேலும் "பண்பிற்குப்பண்பியில்லையேனும்" என்ற பாடத்திற்கு அவர் இங்ஙனம் வலிந்து பொருள்கொள்ளினும் சொற்கிடக்கு முறை அங்ஙனங்கொள்ளற்கிடங்கொடாது: அஃது, ஒருவர் 'பண்புக்குப்பண்பியில்லை' எனின், மற்றையோர், "அங்ஙனமன்று, பண்பிற்குப்பண்பியுண்டு; குணம் தனியே நில்லாது திரவியத்தைப்பற்றியே நிற்குமாதலான்" என்று மறுக்க இடந்தந்துகிடக்கின்றது. பண்பிற்குப்பண்பில்லையென்ற பாடத்திற்கோ இப்படிப்பட்ட மறுப்பொன்றும் வாராது. அன்றியும் ஒரு பூர்வபக்ஷத்தை அங்கீகரிக்குமுன் அது சரியானதா என்று பார்க்கவேண்டும். "பண்புக்குப்பண்பி (பண்புதானே பண்பியாயிருத்தல்) உண்டா? இல்லையாகவும் இருப்பதுபோலக் கூறியிருக்கிறாரே; இது தகுமா? என்பது இளையதம்பியென்பவர் கொள்ளும் பூர்வபக்ஷம். அவர் கூறியவண்ணம் அழுக்காறே பாவம் என்போமாயின், 'பாவி' என்புழியிப் பாவத்திற்குப் பற்றுக்கோடான திரவியம் ஒன்று வேண்டும். அது தான் ஆன்மா எனின் விசேடவுரை வாக்கியத்திலுள்ள "தன்னையாக் கினனையிருமையுங்கெடுத்தற்கொடுமைபற்றி அழுக்காற்றினைப்பாவியென்றார்." என்பதனோடு மாறுபடும். ஆகவே 'பாவி' யென்பது பொருள் குறிக்காது சத்தமாத்திரமாய் நிற்கும். நிற்கவே, "பண்பிற்குப் பண்பியில்லையேனும்" என்னும் பூர்வபக்ஷமே கொள்ளத்தகாததாம்.

இஃதிங்ஙனமாக, இளையதம்பியென்பவர் "ஆசிரியர் கூறிய பண்பிற்குப் பண்பியில்லையேனும் என்பது பண்புதானே பண்பியாயிருத்தல் கூடாதாயினும் என்னும் பொருள்பட்டுக்கிடக்கின்றது." என்று முதலிற்கூறிப் பின்னும், "இவ்வாறன்றி, † பண்புக்குப்

* "மாண்பெனக்குணத்தின்பெயர் குணிமேனின்றது." என்று ருருஎ-ங் குறளுரையில் ஆசிரியர் பரிமேலழகரெழுதியது ஈண்டுக்கவனிக்கத் தக்கது.
† இவ்வாக்கியத்தின் பொருள் எனக்கு நன்கு விளங்கவில்லை.

பண்புடையபொருள் இல்லையேனும் எனப்பொருள்கொள்ளல் தவறு; பண்பியின்றிப்பண்பில்லையாதலின்.'' என்பன ஆதியாகப்பல கூறுகின்றார். அவர் கூறுபவற்றுள் "ஈண்டுப் பாவம் என்பது அழுக்காற்றையே உணர்த்தும்." என்பதும் ஒன்று. தருக்கநூலார் குணபதார்த்தம் 24 வகைப்படுமென்பர். பாவம் என்பது இவ்விருபத்துநான்கினுளொன்று. பாவம்-அதர்மம். "அதர்மம்-விலக்குவினையாற்றோன்றியது.'' என்பது பாவத்தின் இலக்கணம். இனி இலக்கணநூலார் "அறிவருளாசை'' என்பன ஆதியாகக் குணம் பலவென்றும், அவற்றுள் அழுக்காறு என்பது உடல்கொளுயிர்க்குணங்களுள் ஒன்றென்றுங்கூறுவர். உடல்கொள்உயிர், அழுக்காறென்னுங்குணத்தோடு கூடி வினைசெய்யின் அது விலக்குவினையாம். அவ்விலக்குவினையாற்றோன்றுவது பாவம் எனப்படும். இப்பாவம் என்னுங்குணம், தன்னையாக்கியவுடல்கொளுயிர் அவ்வுடலைவிட்டு நீங்கிப்போகுழியும் அதனைப்பற்றிச்செல்லும். அழுக்காறு அங்ஙனம் செல்லாது. ஆகவே இவ்விரண்டிற்கும் சிறிது வேறுபாடுண்டு. இளையதம்பி என்பவர் கூறியவண்ணம் பாவமும் அழுக்காறும் ஒன்றுயின் "அழுக்காறெனவொருபாவி'' என்றது அழுக்காறெனவொருபாவம் என்று குறளைக்கூறிவிடலாம். 'பண்பிற்குப்பண்பில்லையேனும்' என்னும் விசேடவுரை வாக்கியமும் வேண்டுவதின்றாம்.

ஆகவே, "அழுக்காறெனவொருபாவி'' என்பது "அழுக்காறென்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவத்தையுடையது'' என்று பொருள்படுதலானும், அதனையமைப்பான் ஆசிரியர் பரிமேலழகர் "பண்பிற்குப்பண்பில்லையேனும் தன்னையாக்கினானை யிருமையுங்கெடுத்தற்கொடுமைபற்றி, அழுக்காற்றினைப்பாவியென்றார்; கொடியானைப்பாவியென்னும் வழக்குண்மையின்.'' என்னும் வாக்கியத்தைக் கூறுதலானும், 'பண்பிற்குப்பண்பில்லையேனும்' என்பது பலரும் எடுத்தாண்ட கருத்துடையதாதலானும் "பண்பிற்குப்பண்பில்லையேனும்'' என்னும் இப்பாடமே பொருத்தமுடைத்தாம்.

௩0௪. நகையுமுவகையுங்கொல்லுஞ்சினத்திற்
பகையுமுளவோபிற.

இதன் விசேடவுரையிலே "துறவாற்புறப்பகையிலராயினும்— என்பதிலுள்ள துறவால் என்பது ஏடுகளில் துறவியால் என்றே

காணப்படுகிறது. திருக்கோவையார் ௪௦ வது செய்யுளின் விசேடவுரையில் 'துறவு துறவியென நின்றாற்போல அளவு அளவியென நின்றது.' என்னும் வாக்கியங்காணப்படுதலின் துறவியாற்புறப்பகையிலராயினும் என்றிருத்தல்கூடும்.'' என்று யானெழுதியதை இளையதம்பி என்பவர் "இவ்வாராய்ச்சி தருக்கநூலாராய்ச்சி சிறிதுமின்மையால்" வந்ததென்னலாம். 'ஏடுகளில்' என எல்லா ஏடுகளையும் உள்ளடக்கியதும், திருக்கோவையார் விசேடவுரையில் 'துறவு துறவியென நின்றாற்போல' எனக்காணப்படுதலின் பரிமேலழகர் விசேடவுரையிலும் 'துறவியால்' என்றிருத்தல் கூடுமென்பதும் தருக்கமுறைக்குப்பொருத்தமானவல்ல" என்றும, மேலுஞ்சிலவுங் கூறி மறுத்துத் துறவால் என்பதே பொருத்தமாயபாடம் என்கின்றனர். துறவால் என்பது பொருத்தமன்றென்று நான் சொல்லவில்லை. நான் 'ஏடுகளில்' என்றது * மதுரைத்தமிழ்ச்சங்கத்திலுள்ள ஏட்டுப்பிரதிகளையே குறிக்கும், யான் பாடங்கேட்கத்துணையாயிருந்தவை அவையேயாதலால். அன்றியும், 'ஏடுகளிலெல்லாம்' என்று யான் எழுதியிருந்தால் உலகத்திலுள்ள எல்லா ஏடுகளையும் உள்ளடக்கியதாகக்கொள்ளலாம். யான் எழுதாத 'எல்லாம்' என்னுஞ்சொல்லை இவர் மனத்தில் வருவித்துக்கொண்டு எனக்குத் தருக்கநூலாராய்ச்சி சிறிதுமில்லையென்று குறை கூறுகின்றார். இவர் தருக்கநூல் முற்றுமாராய்ந்திருப்பினும் இவ்வண்ணம் பிறரைக் குறைகூறலாகாது, அது நல்லோர் குணமன்மையின்.

இனி, துறவு—துறவியென மணிமேகலை, உ-வது ஊரலருரைத்த காதையில் "வயந்தமாலை! மாதவி துறவிக்கு" என்னும் ௪௦-வது அடியில் வந்திருத்தலும், இதன் அரும்பதவுரையில் ஸ்ரீமாந்- மஹாமஹோபாத்தியாயரவர்கள் 'துறவிக்கு—துறவுக்கு' என வரைந்திருத்தலும் துறவு, துறவியென்பன ஒருபொருட்சொற்கள் என்பதனை வற்புறுத்தும். இங்கே 'மாதவி துறவுக்கு' என்றாற்செய்யுளின்பங்கெடாமலிருக்கவும் அங்ஙனங்கூறாது "மாதவி துறவிக்கு" என்று

* மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் எட்டேட்டுப்பிரதிகளிருக்கின்றனவென்பது செந்தமிழ் ௭-ந்தொகுதி அ-ம் பகுதி ௩௯௨-ம் பக்கத்தில் என்றெற்காட்டப்பட்டிருக்கிறது.

கூறியிருத்தலின், துறவியென்பது செய்யுள் விகாரச்சொல்லாகாது இயற்சொல்லேயாம். முற்காலத்தில் இயற்சொல்லாய் வழங்கிவந்தவை பல இக்காலத்து வழக்கொழிந்தனவென்பது ஆன்றோர் பலரும் அறிந்தவிஷயம். இக்காலத்தில் உ-விகுதியும், வி-விகுதியும் இவ்வாறுறழ்ந்துவருதல் அரிதாயினும், பிறப்பு- பிறவி என, பு-விகுதியும், வி-விகுதியும் மறப்பு-மறதியென, பு-விகுதியும் தி-விகுதியும் பிறவும் உறழ்ந்துவருகின்றன.

இவற்றையெல்லாம் உற்றுநோக்கியும், மதுரைத் தமிழ்ச்சங்கத்திலுள்ள எட்டேட்டிலுமிருந்ததைக்கொண்டும், 'துறவியாற்புறப்பகையிலராயினும் என்பது கொள்ளத்தக்க பாடமென்றேனேயன்றி வேறன்று. பிறவிடங்களிலுள்ள ஏடுகளில் அச்சுப்பதிப்புப் பாடங்காணப்படின் அதுவுங்கொள்ளத்தக்கதேயாம். அதனை நான் மறுக்கவில்லை. ஆதலால் ஸ்ரீ. இளையதம்பி என்பவர் பொதுநோக்கத்துடனின்றாராய்ந்து உண்மை கைக்கொள்வாராக.

அ. கோபாலையன்.

௨

# * வடமலையப்பபிள்ளை ஐயன் சாஸனம்

சகாப்தம் 1574லின்மேல் செல்லாநின்ற கொல்லம் 827ஆண்டு நந்தன வருஷம் தக்ஷணாயனத்தில் கடகரவி ஆடிமீ 31உ சுக்கில பக்ஷத்துப் பஞ்சமியும் சுக்கிரவாரமும் சுத்தநாமயோகமும் சிங்ககர்ணமும் பெற்ற ஹஸ்த நக்ஷத்திரத்தில் நாள்ச்செய்த உதகபூர்வ தனதானப்பிரமாணமாவது அமிர்தகுலவளநாட்டில் முனஞ்சிமாகாணியில் காணியாள நாட்டவரும் திருவழுதிவளநாடாள் திருநகரி சுவாமியாள்வார் அரைக்கட்டளை பரிவிடப்பிள்ளை அய்யன் அவர்கள்

---

* இதன் அசல் திருநெல்வேலி கஸ்பா நொச்சிகுளம் மிட்டா ஜமீன்தார் மகா-ா-ா-ஸ்ரீ சாவடி N. திருமலைக்கொழுந்து பிள்ளையவர்கள் வசம் இருக்கிறது.

கட்டளைப்பூஜை நேவேத்தியத்துக்கு நடக்கும்படிக்கு சுவாமி திரு மலைநாயக்கர் அய்யன் அவர்களுக்கு புண்ணியமாகவும் நாயக்கர் அய்யன் அவர்கள் நிருதத்தின்படி நாங்கள் உதகபூர்வ தனதானப்பிரமாணமாகப்பண்ணிக்கொடுத்த நாட்டுப்புரமான பதக்கத்துக்கு எல்கையாவது, கீழ் எல்கை திருமலைபுரம் எல்கைக்கும் மேற்கு, தென் எல்கை விஜயநாராயணம் குட்டிப்பாறைக்கும் வடக்கு, மேல் எல்கை காடங்குளத்து எல்கைக்கும் கிழக்கு, வட எல்கை கோடாங்குளத்துக்கும் தெற்கு ஆக இந்நான்கெல்கைக்குள்பட்ட பூமியும் நஞ்சை புஞ்சை கிணறு குடியிருப்பு தோட்டக்கூறு உலாவுகாக்ஷிதரிக்கடைமை ஊத்தைப்பாட்டம் சொர்ணதாயம் பனைக்கடமை சகலமும் இதிலுள்ள நிதியாதியாக அஷ்டபோக தேச ஸ்வாமியங்களுக்கும் யோக்கியமாக தானாதி வினிவிக்கிரயங்களுக்கும் பண்டுள்ளாரையும் பழம்பேரையும் தவிர்த்து ஆதிச்சந்திரார்க்கம் சந்ததிப்பிரவேசம் செம்பிலும் சிலையிலும் வெட்டி அனுபவித்துக்கொள்வாராகவும். இப்படி சம்மதித்து தனம் தான சாதனம் பட்டயம் எழுதிக்கொடுத்தோம். பிள்ளை அய்யன் அவர்கள் கட்டளைக்காரியம் செய்வார்களுக்கு முனியஞ்சியில் காணியாளரும் இந்தப்புண்ணியத்தை பரிபாலனம் பண்ணினபேருக்கு சாலோக சமீப சாரூப சாயுஜ்யம் பெருவாராகவும். இந்த தர்மத்துக்கு யாராகிலும் இடையூறு பண்ணினபேர் கங்கைக்கரையிலே காராம்பசுவைக்கொன்ற பாவத்திலே போகக்கடவாராகவும். இப்படிக்கு அம்மையாண்டார் எழுத்து. இப்படிக்கு தாண்டவமுதலியார். இப்படிக்கு உதிரமாலை. இப்படிக்கு இந்தப்பட்டயம் எழுதினேன் தர்மக்குட்டி முதலியார். இப்படிக்கு அனஞ்சிப்பெருமாள் எழுத்து.

௨.

# இரண்டாவது சாஸநம்.

சகாப்தம் 1595ன்மேல் செல்லாநின்ற கொல்லம் 829 விஜய வருஷம் தைமீ 23௳ வெள்ளிக்கிழமையும் திரயோதசியும் சிவ

* திருச்செந்தூரில் பிள்ளையனவர்கள் 7-ம் திருநாள் வடக்கு மண்டபத்தில் பேலைச்சுவர் ஓரம் மத்தித்தளத்தில் நட்டிருக்கிற சிலாசாஸனத்திலிருந்து எடுத்தெழுதியது.

யோகம் சிவகர்ணமும் பெற்ற புனர்பூசத்தில் மிதுனலக்கினத்தில் விஸ்வநாத நாயக்கர் அய்யன் திருமலை நாயக்கர் அய்யன் வடமலையப்பபிள்ளை அய்யன் இவர்களை ரக்ஷிக்கும்பொருட்டாக சுவாமி எழுந்தருளினர். பூதநாதன் சசாசேர்வை.

உ

# மூன்றாவது சாஸநம்.

சாலிவாகன சகாப்தம் செல்லாநின்ற கொல்லம் 849 ஆண்டு தைமீ 15உ வெள்ளிக்கிழமையில் அனுஷநக்ஷத்திரம் சுக்கிரவாரமும் பெற்ற சுபயோக சுபதினத்தில் கீழவேம்பு நாடு திருநெல்வேலிக்கு அதிபதிகர்த்தராகிய மகா-ா-ா-மான்னியஸ்ரீ வடமலையப்பபிள்ளை அய்யன் அவர்களும் ஷை வடக்கு தெரு வேலூர் பனை சர்க்கரை சேர்வைகாரனுக்கு ரத்தகாணிக்கையாக தாரை வார்த்து நிலப்பட்டயம் எழுதிக்கொடுத்தபடி நிலப்பட்டயமாவது. நாங்கள் குருபரமுடையோர்களாக ஆண்டனுபவித்துவருகிற நிலத்தை தனக்கு தாரைவார்த்துவிட்டுக்கொடுத்தபடியினாலே விட்ட நிலத்துக்கு எல்லையாவது, மேற்கு எல்லை மதுரைப்பாதையாகிய ரஸ்தாவுக்குக்கிழக்கு, வட எல்லை அருவங்குளத்து வாய்க்கால் நீர்ப்பிடிக்கும் தெற்கு, தென் எல்லை நயினார்குளத்தைச்சேர்ந்த சின்னக்குளத்து நீர்ப்பிடிக்கும் வடக்கு, கீழ் எல்லை கழிவுதண்ணீர்போகிற தென்வடலோடிய ஓடைக்குமேற்கு ஆக இன் நான்கெல்லைக்குள்பட்ட நிலமும் விட்டு ஷை இன்நான்கு திசைக்கும் சூலம் சாத்திய கல்வெட்டி நாட்டிக்கொடுத்து ஷை வெகுமானக்குதிரை 1 பட்டத்துகத்தி 1 செங்கோல் கச்சிப்பட்டி 1 பட்டுத்து சால்வை 1 சங்கு சக்கர கடுக்கன் 1 மேல் எழுதிய இந்நான்கெல்லைக்குள்பட்ட நிலத்தையும் சத்தியப்பிரமாணமும் கொண்டு தனக்கு ரத்தக்காணிக்கையாக தாரை வார்த்துவிட்டுக்கொடுத்து கல்லும்

* இதன் எட்டுப்பிரதியொன்று மதுரை டவுன் 4-ஙெ. ஜாயின்ட் சப் ரிஸ்டர் மகா-ா-ா-ஸ்ரீ S. சுப்பிரமணிய பிள்ளை அய்யன் அவர்கள் வசம்

காவேரியும் புல்லும் பூமியும் சந்திரான் சூரியாள் உள்ளமட்டும் பிள்ளைபிள்ளை தலைமுறையாக சர்க்கரை சேர்வைகாரன் தானுதினி யோக விக்கிரயங்களுக்கும் தானே யேர்க்கியாகை ஆண்டனுபவித்து கையாட்சைபண்ணிக்கொள்வாளுகவும். இப்படிக்கு தான் கையாட்சைபண்ணிவருமிடத்தில் தடை இடை கூறுவந்தால் என் பிள்ளை பிள்ளை தலைமுறையாக தீர்த்துக்கொடுப்பார்களாகவும். இப்படிக்கு என் மனப்பூர்ணம்கொண்டு சத்தியப்பிரமாணமாய் தாரை வார்த்துக்கொடுத்த நிலத்துக்கு இனிமேல் யாதொருத்தர் எந்தச்சாதியிலும் ராஜாங்கத்துக்கு வரும் ராஜாக்கள் இந்த நிலத்தை ஆசைப்படுவார்களானுலும்....................அவர்கள் இந்த சத்தியதோஷத்தைத் தட்டி ஆசைப்படுவார்களாகில் நெல்லையப்பர் சன்னிதானத்தெப்பக்குளத்திலும் கெங்கைக்கரையிலும் காராம்பசுவைக் கழுத்தறுத்த ஏழாகிய நரகத்தின் தோஷத்தில் போவார்கள். என் மனப்பூர்வம்கொண்டு சத்தியப்பிரமாணம்பண்ணி ரத்தகாணிக்கை தாரைவார்த்துநிலம் விட்டுக்கொடுத்தேன். மகா-ா-ா-ஸ்ரீ வடமலையப்பபிள்ளை அய்யன் அவர்களும் ஷை வேலூர் பாைசர்க்கரை சேர்வைகாரனுக்கு இப்படி பெரியபட்டர் சுப்பய்யன் தானத்தார் தலத்தார் கோலைபட்டமார்காசட்டி நாராயணன் சுவாமிநாயக்கர் இவர்களறிய இந்த நிலப்பட்டயம் எழுதினேன். சாஸ்திரி சிவஞானப் பண்டாரம் இந்தப்படி வடமலையப்பபிள்ளை அய்யன் அவர்களும்.

M. V. Subbramania Iyer.

உ

## கால்நடைகளுக்கு வியாதிவராமல் அம்மை குத்தலும் அதன் உபயோகங்களும்

(சஎகூ-ம் பக்கத்தொடர்ச்சி.)

14. பாஸ்டியர், அடைப்பானுய்க்கு இரண்டு அம்மைப்பால்கள் செய்தார். பிராணிகளுக்கு முதலாவது அம்மைப்பால்வைத்து இரண்டு வாரமானபின், இரண்டாவது அம்மைப்பால் வைக்கப்பட்டது. முதலாவது அம்மைப்பாலினுல் அடைப்பானுயினின்று

அரைகுறையான காப்பும், இரண்டாம் பாலினற் பூரணமானகாப்பும் சித்தித்தன. இந்த இரண்டு பால்களில் முதற்பால் வைக்கப்பெறாத பிராணிக்கு இரண்டாம்பால் வைத்தால் அந்தப்பிராணி இறந்துவிடுகிறது. இவ்வாறாக ஏகதேசமாகப்பிழைபாடுகள் நேர்ந்திருக்கின்றன.

15. உத்தேசமாகப் பத்துவருஷத்துக்குமுன் தென்னாப்பிரிக்காவில் உக்கிரமான வெக்கைநோய் உண்டாகியது. அப்போது காக் (Koch) என்பவர் அங்கேபோய்ப் பல சோதனைகள் செய்துபார்த்தார். ஒரு மாட்டுக்கு வெதுப்புநோய் உண்டாகி ஏழு நாளாயிருக்கும்போது அதன் பித்துநீரை (Bile) எடுத்து ஷை வியாதிக்குள்ளாகாமல் சுகமாயிருக்கிற வேறொரு மாட்டின் தோலின்கீழ்ச் செலுத்த அம் மாட்டுக்கு அந்தவியாதி சிலகாலஞ்செல்லும்வரை அணுகுகிறதில்லையென்பதைக் கண்டுபிடித்தார். பித்துநீர் செலுத்திப்பத்துநாளானபின் ஷை மாட்டின் தோலின்கீழ், உக்கிரமாக வெக்கைநோய் பிடித்திருக்கிற வேறொரு மாட்டின் ரத்தத்தைச் செலுத்தினல், அப்படிச் செலுத்தப்பட்ட மாட்டுக்கு ஷை வியாதி சாந்தமாக உண்டாகி அதனல் அந்த மாட்டுக்கு ஆயுள் உள்ள அளவும், அல்லது பலவருஷங்கள் செல்லும் வரையும் அந்த வியாதி பீடிக்கிறதில்லை.

16. ஒரு மாட்டுக்கு வெதுப்புநோய்கண்டு ஏழுநாளான்போது அந்த மாட்டைக்கொன்று அதன் பித்துநீரை எடுத்தால் அந்தப் பித்துநீர் அநேக மாடுகளை ஷை வியாதியினின்றும் காப்பாற்றப்போதுமானதாயிருக்கும். அந்தப் பித்துநீர் ஒரு பங்குக்கு இரண்டு பங்கு கிளிஸரின் (Glycerin) என்ற தேன்போன்ற மருந்தைச்சேர்த்தால் அப்படிச்சேர்க்கப்பட்ட பித்துநீர் நெடுங்காலம் கெட்டுப்போகாமலிருக்கும்.

17. ஷை வியாதியை அடக்குவதற்குத்தக்க வேறுமுறைகளைக் கண்டுபிடிக்கும்படி பின்னும் பலபரீக்ஷைகள் செய்துபார்த்தபோது, ஷை வியாதி கண்டு குணமான மாட்டின் ரத்தத்தின் தெளிவான பாகமாகிய ஸீரத்தை (Serum) ஷை வியாதிக்குள்ளாகாமற் சுகமாயிருக்கும் வேறொரு மாட்டின் தோலின்கீழ்ச் செலுத்தினல், அப்படிச் செலுத்தப்பட்ட மாட்டுக்கு அந்தவியாதி சிலகாலஞ் செல்லும் வரை வருகிறதில்லையென்று கண்டுபிடிக்கப்பட்டது. இப்படிப் பாது

காக்கும் ஸீரத்தையும், ஷை வியாதி கண்டிருக்கும் மாட்டின் ரத்தத்தையும், சுகமாயிருக்கிற வேறொரு மாட்டின் தோலின்கீழ்ச் செலுத்தினால், அவ்விதம் செலுத்தப்பட்ட மாட்டுக்கு ஆயுள்பரியந்தம் ஷை வியாதி வருகிறதில்லை. அடைப்பான் (Anthrax) நோய்வாராமற் பாதுகாக்கும்பாஸ்டியர்முறையும் பித்துநீருள்ள வியாதி ரத்தமும்செலுத்தும் காக்கென்பவர் முறையும் ஸீரமும் வியாதிரத்தமும் ஏககாலத்திற் செலுத்தும் முறையும் ஆகிய ஆயுளளவும் வியாதிவராமற் பாதுகாக்கும் முறைகளெல்லா வற்றிலும், அந்த முறைகளே காரணமாகச் சில மரணங்கள் நேரிட்டன. இவைதவிரவும், ஷை முறைப்படி அம்மைவைக்கப்பட்ட பிராணிகளுக்கு உண்டாகும் சாந்தமான வியாதியிலிருந்து பக்கத்தில் உள்ள அம்மைவைக்கப்படாத பிராணிகளுக்கு உக்கிரமான வியாதி உண்டாகி அந்தப்பிராணிகளிலிருந்து வேறு பிராணிகள் பிணி அடைய, இவ் வாறாகப் பல சுற்றிடங்களிலும் வியாதிபரவி அளவற்ற சேத முண்டாகக்கூடும். தவிரவும் வியாதியுள்ள பிராணியின் ரத்தம் உபயோகிக்கப்படுவதால், அந்தப் பிராணிக்கு இரத்தமூத்திரம் (Redwater) போன்ற வேறு வியாதியும் இருந்தால், அந்த வியாதிவித்தும் ஷை ரத்தத்தோடு கலந்து உபயோகிக்கப்பட்டு அதனால் இதரவியாதிகளைப் பரவச்செய்யும் அபாயமும் ஷை முறைகளுக்குண்டு.

18. ஸீரத்தை மாத்திரங்கொண்டு அம்மைகுத்துவதில் அபாயமேயில்லை. பிராணிகளுக்குத் தொத்துநோய் வராமல் தடுப்பதற்கு இந்த முறையே ஸிவில் வெற்றெறிநெறி டிபார்ட்டுமெண்டாரால் கையாளப்பட்டு வருகிறது. ஷை டிபார்ட்டுமெண்டார் உபயோகப்படுத்தும் ஸீரத்தில் சிற்றுயிர்கள் உக்கிரமானவைகளாவது உக்கிரங் குறைக்கப்பட்டவைகளாவது கிடையா. ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த முக்டேஸாரில் (Muktesar) உள்ள இம்பீரியல் பாக்டீரியலாஜிக்கல் லாபிரட்டரியில்(Imperial Bacteriological Laboratory) அந்தஸீரம் சித்தஞ்செய்யப்படுகிறது. அங்கே ஸீரம் எவ்வாறு சித்தஞ்செய்யப்படுகிறதென்றால், வெக்கைநோய்போன்ற தொத்து நோயினாற் சுபாவமாகவாவது செயற்கையாகவாவது பீடிக்கப்பட்டுக் குணமானதாகவும் சுகத்தோடு தைரியமாக விருப்பதாகவும் உள்ள ஒரு பிராணியின் தோலின் கீழே அநேகவியாதியினால் வருந்திக்கொண்

டிருக்கிற வேறொரு பிராணியின் இரத்தத்தை முதலிற் சிற்றளவாக வும் பின்பு படிப்படியாக அதிக அளவாகவும் கடைசியாக அனேக ஆயிரமாடுகளைக் கொல்லப் போதுமான அளவாகவும் செலுத்துவ தினால் அப்படிச் செலுத்தப்பட்ட பிராணிக்கு அந்த நோயை நிரா கரிக்கும் சக்தி அதிகப்படுகிறது. ஷை பிராணி இவ்வாறாகப் பூரண நிராகரண சக்தி அடைந்த சமயத்தில் அதன் கழுத்திலுள்ள பெரு த்த நாளத்திலிருந்து மீண்டும் இரத்தம் எடுக்கப்பட்டு அதிலிருந்து ஸீரம் பிரிக்கப்படுகிறது. எவ்வகைத் தொத்தும் அணுகாமலிருக் கத்தக்க ஏற்பாடுகளோடு சர்வ ஜாக்கிரதையாக மேற்கூறிய சகலமும் செய்யப்படுகின்றன. இவ்வாறு சித்தஞ்செய்யப்பட்ட ஸீரத்திற் சிலபாகம் கார்பாலிக் ஆஸிட் கலக்கப்படுகிறது. மேற்கூறியபடி இரத்தம் எடுத்த பிராணியிலிருந்து வேண்டுமானால் சிலகாலஞ்சென் றபின் திரும்பவும் இரத்தம் எடுக்கலாம். ஒரு மாட்டுக்கு அம்மை குத்தவேண்டிய ஸீரத்தின் அளவு இவ்வளவென்று அந்த லாபிரட் டெரியிலேயே பரீக்ஷித்துப்பார்த்து நிச்சயித்தபின் அந்த ஸீரத்தை அடைக்கும் புட்டியின்மேல் அந்த அளவு குறிக்கப்படுகிறது. இப் படி இவ்வளவு ஸீரம் அம்மைகுத்தவேண்டுமென்று குறிக்கப்பட்ட பின்புதான், ஸீரப்புட்டிகள் பல ஜில்லாக்களுக்கும் அனுப்பப்படு கின்றன. வெற்றெறிநெறி காலேஜிற்படித்து யோக்கியதா பத்தி ரம் (Diploma) பெற்றிருக்கிற வெற்றெறிநெறி அஸிஸ்டண்டுகளில் அம்மைகுத்தும் முறையும் பயிற்றப்பெற்றவர்களே, வியாதி உண்டா யிருக்கிற கிராமங்களிற் கால்நடைகளுக்கு அம்மைகுத்துகிறார்கள். அம்மைகுத்துங் கருவிகளை நீரிற்கொதிக்கவைத்தல், அம்மை குத்து பவர் கைகளையும் அம்மை குத்தப்படும் தோற்பகுதியையும் கார்பா லிக்கு நீரில் நனைத்துச் சுத்திகரித்தல் முதலிய தொத்து நிவாரண முறைகளை அநுசரித்து அம்மைகுத்தும் பிரயோகம் செய்யப்படுகி றது. ஸீரத்தினால் அம்மை குத்துவதில் எவ்வகைத் தோஷமும் எப்போதும் நேரிட்டதேயில்லை. ஐம்பதினாயிரத்துக்கதிகமான பிரா ணிகளுக்கு யானே அம்மை குத்தியிருக்கிறேன். அப்படி அம்மை வைத்த பிராணி ஒன்றுக்கும் அம்மைவைத்தது காரணமாக எவ்வ கைத் தோஷ குணமும் நேரிட்டதில்லை. அம்மைகுத்திய பிராணிக ளில் ஏகதேசமாகச் சில பிராணிகளுக்கு அம்மைகுத்திய இடத்தில்

அற்பவீக்கம் காணுவதுண்டு. அந்த வீக்கம், ஒருநாள் அல்லது இரண்டுநாளில் மறைந்துவிடுவதுமல்லாமல் அந்தப்பிராணிகள் வேலைசெய்வதற்குச் சிறிதும் தடையாயிருப்பதில்லை. அம்மை குத்தப்பெற்றகர்ப்பமான பிராணிகளும் இளங்கன்றுகளும்கூடச்சிறிதுஞ்சுகவீனமடைவதில்லை. அம்மைகுத்திய பிராணிகளிற் சில சாவதற்கு ஒரு காரணம், அம்மைகுத்தப்படுவதற்குமுன்பேசிலபிராணிகளுக்கு வியாதி மறைவாயணுகியிருப்பது: மற்றொரு காரணம், சிலபிராணிகளுக்கு வழக்கத்துக்கு அதிகமாக அந்தவியாதி யடையக்கூடியதேகநிலைமையிருப்பது. கால்நடைகளுக்குஅம்மைகுத்தும்முறை ஆறுவருஷத்துக்குமுன் அனுசரிக்கப்பட்டபோது கால்நடைக்காரர் அதற்கு விரோத அபிப்பிராயமுடையவர்களாயிருந்தார்கள். அப்போது அவ் விரோத அபிப்பிராயத்தை மாற்றுவது மிகவும் கஷ்டமாயிருந்தது. அம்மைகுத்தும் விஷயத்தில் அவர்களுடைய நல்லபிப்பிராயம் படிப்படியாகப் பெறப்பட்டது. இப்போது அம்மைகுத்துவதற்கு ஆக்ஷேபணைசெய்கிற கால்நடைக்காரர் ஏகதேசமாகத்தான் இருக்கிறார்கள்.

19. கால்நடைகளுக்கு அம்மைகுத்துவதின் உபயோகங்கள் பின்வருபவை.

(1) வெக்கை (Rinderpest) நோய்போன்ற தொத்துநோய் ஒரு கிராமத்தில் உண்டானபோது வியாதி காணாமலிருக்கிற பிராணிகளுக்கு அம்மைகுத்தி அவைகளைப் பாதுகாக்கலாம். தொத்துநோய்கண்ட பிராணியைத் தொட்டுக்கொண்டாவது அதற்குச் சமீபத்திலாவது நின்ற பிராணிகளுக்கு அம்மை குத்தினால் அவைகள் அந்தநோயினால் சேதமடையாமற் பாதுகாக்கப்படுவதல்லாமல், அந்த வியாதி பரவுதற்குப் பெரும்பாலும் மார்க்கமில்லாமற் போகிறது.

(2) தொத்துநோயில்லாமலிருக்கிற கிராமத்துப் பிராணிகளைத் தொத்துநோய் உள்ள இடத்தில் நடக்கிற சந்தை அல்லது கண்காட்சிக்குக் கொண்டுபோக வேண்டியிருக்கும்போது அந்தப் பிராணிகளுக்கு அம்மை குத்துவதனால் அவைகள் அந்தச்சந்தை அல்லது கண்காட்சிக்குக் கொண்டுவரப்பட்ட தொத்துக்குள்ளாயிருக்கிற பிராணிகளோடு சம்பந்தப்படுவதனால் அடையக்கூடிய வியாதியினின்றும் பாதுகாக்கப்படுகின்றன.

20. ஒரு கிராமத்திற் கால்நடைகளுக்குக் கொள்ளைநோயுண்டானால், அந்தக்கிராமத்தார் தங்கள் கால்நடைகளுக்கு அம்மைமருத்தும்படி ஸிவில் வெற்றெறிநெறி டிபார்ட்மென்டைச் சேர்ந்த ஒரு வெற்றெறிநெறி அஸிஸ்டன்டை அனுப்பும்படி தாசில்தாருக்கெழுதிக் கேட்டுக்கொள்ளவேண்டும். வெற்றெறிநெறி அஸிஸ்டன்டு சில நாளுக்குள் வரவில்லையானால், தாமதஞ்செய்யாமற் சென்னப்பட்டணத்திலுள்ள ஸிவில்வெற்றெறிநெறி டிபார்ட்டுமென்டுசூப்பரிண்டண்டுக் கெழுதி ஒரு வெற்றெறிநெறி அஸிஸ்டென்டைஅனுப்பும்படி கேட்டுக்கொள்ள வேண்டும். தவிரவும், இந்தியாவில் கால்நடைகளுக்குக் காணுகிறஅதிகபிராணபாயமானவியாதிகளைப்பற்றியபுஸ்தகம் என்கின்ற மிருகவைத்திய நூலில் குறித்திருக்கிற விதிகளைக் கவனமாக வாசித்து அவைகளைக் கண்டிப்பாக அநுசரிக்கவேண்டும். மேற்சொல்லிய மிகுந்த சுலபமும் உயர்ந்த உபயோகமும் உள்ள இங்கிலீஷ் புஸ்தகம் (More Deadly Forms of Cattle Diseases In India) என்னுல் தமிழில் மொழிபெயர்க்கப்பெற்றுக் கவர்ன்மென்டாராற் பிரசுரமாயிருக்கிறது. இதன் விலை பிரதியொன்றுக்கு மூன்றணுவே. தமிழ்ச் சில்லாக்களிலுள்ள கிராமமுன்சீபுகளொவ்வொருவருக்கும் இப்புஸ்தகம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இது கால்நடைக்குரியவர்களொவ்வொருவர்கையிலும் இருக்கவேண்டிய முக்கியமானபுஸ்தகம்.

வி. பி. சுப்பிரமணிய முதலியார்,
G. B. V. C.

---

௨

சிவமயம்.

# சமயோசிதச் செய்யுட்டிரட்டு

(௪௯௨-ஆம் பக்கத்தொடர்ச்சி)

பெண்ணைப்பெறுதலினும் பெரியதுயரமில்லை யென்பது

௧அ. குலம்வேண்டுமென் றிருப்பார்குலத்துள்ளார்கல்வியினற்குறையானைப், பலம்வேண்டுமென் றிருப்பார் தந்தைமார்பரந்தபெருஞ்செல்வமுள்ள, தலம்வேண்டுமென் றிருப்பார் தாய்மார்கள்யவ்வனமுமழகுஞ்சார்ந்த, நலம்வேண்டுமென் றிருப்பார்நாறுகுழற் கன்னிமார்நலத்தின்மிக்கார்.

௧௯. பண்புடையகுடிப்பிறப்பும்பழிப்பில்லாப்பேரழகும்பரந்தகே ள்வி, நுண்பொருளைநீரொழியப்பாலுகருமன்னம்போனோக்கித் திரு, மொண்பொருளுமிந்நான்குமுடையாரைக்கிடையாதிவ்வுல கந்தன்னில், பெண்பெறுகைபோலிந்தப்பெரியதுயர் தானுண் டோபேசுங்காலே.

(இராமா-உத்தர. இராவணன்பிறப்-௬௦, ௬௧.)

இக்கவிகளாற் பெண்ணைப் பெற்றோரெய்துந்துயரம் இத்தகை யதென்பது கூறப்பட்டது.

### பெண்களினியல்பித் தன்மையதென்பது

௨௦. பெண்ணெனப்படுவகேண்மோபீடிலபிறப்புநோக்கா
வுண்ணிறையுடையவல்லவோராயிரமனத்தவாகு
மெண்ணிப்பத்தங்கையிட்டாலிந்திரன்மகளுமாங்கே [றே.
வெண்ணெய்க்குன்றெரியுற்றாற்போன்மெலிந்துபின்னிற்குமன்

௨௧. அன்புநூலாகவின்சொல்லலர்
வின்பஞ்செய்காமச்சாந்திற்கைபுனைந்தேற்றமாலை
நன்பகற்சூட்டிவிள்ளாதொழுகினுநங்கைமார்க்குப்
பின்செலும்பிறர்கணுள்ளம்பிணையனார்க்கடியதன்றே.

(சீவக. கனகமா-௪௧, ௪௦.)

௨௨. பள்ளமுதுநீர்ப்பழகினுமன்னம
வெள்ளம்புதியதுகாணின்விருப்புறாஉங்
கள்ளவிழ்கோதையர்காமனொடாயினு
முள்ளம்பிறிதாயுருகலுங்கொண்ணீ.

௨௩. உண்டியுட்காப்புண்டுறுபொருள்காப்புண்டு
கண்டவிழுப்பொருள்கல்விக்குக்காப்புண்டு
பெண்டிரைக்காப்பதிலமென்றுஞாலத்துக்
கண்டுமொழிந்தனர்கற்றறிந்தோரே.

(பன்னூற்றிரட்டு. ௧௭௬௭-௧௭௬௫, வளையாபதி.)

உச. எத்துணையாற் றளிரேணனீர்த் துளி
புற்பனியுக்கமரத் திலைநுண்மயி
ரத்துணையும்பிறரஞ்சொலினார் மனம்
புக்கனமென் றபொதியறைப்பட்டார்.
(செந்தமிழ்த்தொகுதி-க. பகுதி-ச: வளையாபதிச்-எ.)

உரு. தளிப்பெயற்றண்டுளி தாமரையின்மேல்
வளிப்பெயறுமாத்திரை நின்றற்றொருவ
னளிப்பவற்காணுஞ்சிறுவரையல்லாற்
றுளக்கிலர் நில்லார் துணைவளைக்கையார்.
(பன்னூற்றிரட்டு-கஅகூஅ - வளையாபதி)

உசு. ஐம்புலன்களும்போலவரும்பதிகளாகவுமின்னம்வேறொருவ, னெம்பெருங்கொழுநனுவதற்குருகுமிறவனேயெனதுபேரிதய, மம்புவிதனிற்பெண்பிறந்தவரெவர்க்குமாடவரிலாமையினல்லா, னம்புதற்குளதோவென்றனள்வசிட்டனல்லறமனைவியேயனையாள். (பாரத. பழம்பொருங்-உக.)

உஎ. ஏங்கெழின்மிக்கானிளையானிசைவல்லான்
காங்கையர்கண்கவர்நோக்கத்தான்—வாய்ந்த
நயனுடையின்சொல்லான்கேளெனினுமாதர்க்
கயலார்மேலாகுமனம். (நீதிநெறிவிளக்கம்-அஉ.)

உஅ. சிறைகாக்குங்காப்பெவன்செய்யுமகளிர்
நிறைகாக்குங்காப்பேதலை. (திருக்குறள்-ருஎ.)

இக்கவிகளாற் பெண்களின் இயல்பின்ன தன்மையதென்பது நன்கு விளங்குகின்றது.

கற்புடைமகளிரியல்பு இனையதென்பது

உகூ. சாமெனிறசாதன்னுதறனனவனறணநதகாலை
பூமனும்புனைதலின் றிப்பொற்புடன்புலம்பவைகிக்
காமனையென்றுஞ்சொல்லார்கணவற்கைதொழுதுவாழ்வார்
தேமலர்த்திருவோடொப்பார்சேர்ந்தவன்செல்லறீர்ப்பார்.
(சீவக. கனகமா-சஉ.)

௩௦. நாடெலாருநனிபுகழ்ந்தேத்தலும்
பீடுறும்மழைபெய்கெனப்பெய்தலுங்
கூடலாற்றவர்நல்லதுகூறுங்காற்
பாடுசான்மிகுபத்தினிக்காவதே.
(பன்னூற்றிரட்டு. ௨௦௧. விஜயாபதி.)

௩௧. தெய்வந்தொழாஅள்கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப்பெய்யுமழை. (திருக்குறள்-௫௫.)

௩௨. கண்டாரிகழ்வனவேகாதலன்றான்செய்திடினுங்
கொண்டானையல்லாலறியாக்குலமகள்போல்
விண்டோய்மதிள்புடைசூழ்வித்துவக்கோட்டம்மானீ
கொண்டாளாயாகிலுமுன்குரைகழலேகூறுவனே.
(பெருமாள் திருமொழி. ௫-வது தருதுயரம்-௨.)

௩௩. தங்கணயகரிற்றெய்வந்தவம்பிறவிலவென்றெண்ணும்
மங்கைமார்சிந்தைபோலத்தூயதுமற்றுங்கேளா
யெங்கணுன்மறைக்குந்தேவரறிவிற்கும்பிறர்க்குமெட்டாச்
செங்கண்மாலிருந்துமேனாட்செய்தவஞ்செய்ததன்றே.
(இராமா-பாலகாண். வேள்விப்-௧௬.)

இக்கவிகளாற் கற்புடை மகளிரியல்பு இத்தன்மைய தென்பது தெற்றெனப் புலப்படுகின்றது.

பெண்களினாலுண்டாகுந் துன்பமிணையவேன்பது

௩௪. தூமகேதுபுவிக்கெனத்தோன்றிய
வாமமேகலைமங்கையரால்வருங்
காமமில்லையெனிற்கடுங்கேடெனு
நாமமில்லைநரகமுமில்லையே.
(இராமா. அயோத்-மந்தரைசூழ்ச்-௨௧.)

௩௫. காமமேகொலைகட்கெல்லாங்காரணங்கண்ணோடாத
காமமேகளவுக்கெல்லாங்காரணங்கூற்றமஞ்சுங்
காமமேகள்ளுண்டற்குங்காரணமாதலாலே
காமமேநரகபூமிகாணியாக்கொடுப்பதென்றான்.

௩௬. கள்ளுண்டல்காமமென்பகருத்தறைபோக்குச்செய்வ
தெள்ளுண்டகாமம்போலவெண்ணினிற்காணிற்கேட்கிற்
றள்ளுண்டவிடத்தினஞ்சந்தலைக்கொண்டாலென்னவாங்கே
யுள்ளுண்டவுணர்வுபோக்காதுண்டபோதழிக்குங்கள்ளுண்.

(திருவிளை. மாபாதகந். ௨௭, ௨௬.)

௩௭. பெரும்பெயர்ப்பிரமனென்னும்பீடினாற்பெரியநீரா
னரும்பியமுலையினாளுக்கணிமுகநான்குதோன்ற
விரும்பியாங்கவளையெய்தான்விண்ணகமிழந்ததன்றித்
திருந்தினாற்கின்றுகாறுஞ்சிறுசொல்லாய்நின்றதன்றே.

௩௮. கைம்மலர்க்காந்தள்வேலிக்கணமலையரையன்மங்கை
மைம்மலர்க்கோதைபாகங்கொண்டதேமறுவதாகக்
கொய்ம்மலர்க்கொன்றைமாலைக்குளிர்மதிக்கண்ணியாற்குப்
பெய்ம்மலரலங்கன்மார்பபெரும்பழியாயிற்றன்றே.

௩௯. நீன்றவண்ணனன்றுநெடுந்துகில்கவர்ந்துதம்முன்
பானிறவண்ணனோக்கிற்பழியுடைத்தென்றுகண்டாய்
வேனிறத்தானைவேந்தேவிரிபுனற்றொழுனையாற்றுட்
கோனிறவளையினார்க்குக்குருந்தவனொசித்ததென்றான்.

௪௦. காமமேமகன்றின்றகழுதைகண்டு
வாமனார்சென்றுகூடிவருந்தினீரென்றுவையத்
தீமஞ்சேர்மாலைபோலவிழித்திடப்பட்டதன்றே
நாமவேற்றடக்கைவேந்தேநாமிதுதெரியினென்றான்.

௪௧. படுபழிமறைக்கலாமோபஞ்சவரன்றுபெற்ற
வடுவுரையாவர்பேர்ப்பார்வாய்ப்பறையறைந்துதூற்றி
யிடுவதேயன்றிப்பின்னுமிழுக்குடைத்தம்மகாம
நடுவுநின்றுலகமோம்பனல்லதேபோலுமென்றான்.

௪௨. கண்வலைக்காமுகரென்னுமாப்பு
தொண்ணிதித்தசைதழீஇயுடலம்விட்டிடும்
பெண்வலைப்படாதவர்பீடினோங்கிய
வண்ணலங்கடிநகரமைதிசெப்புவாம்.

(சீவக. நாமக-௧௭௮, ௧௭௯, ௧௮௦, ௧௮௧, ௧௮௨, ௪௯.)

சஙு. மாமடஞ்செறிந்தநெஞ்சின் மனிதராம்புட்பிடிக்கக்
காமனும்வேடன்வீசும்வலையொப்பார்கருங்கண்மாதர்
தீமனச்சேருர்சன்மச்சிறுகுழிமீனுமாந்தர்க்
கொப்பார்.

(ஞானவா. வைராக்யப்-கூச.)

சச. காதென்றுமூக்கென்றுகண்ணென்றுகாட்டியென்கண்ணெதி
மாதென்றுசொல்லிவருமாயைதன்னைமறலிவிட்ட [ரே
தூதென்றெண்ணுமற்சுகமென்றுநாடுமித்துர்ப்புத்தியை
யேதென்றெடுத்துரைப்பேனிறைவாகச்சியேகம்பனே.

சரு. சீறும்வினையதுபெண்ணுருவாகித்திரண்டுருண்டு
கூறுமுலையுமிறைச்சியுமாகிக்கொடுமையினாற்
பீறுமலமுமுதிரமுஞ்சாயும்பெருங்குழிவிட்
டேறுங்கரைகண்டிலேனிறைவாகச்சியேகம்பனே.

சசு. பெண்ணாகிவந்தொருமாயப்பிசாசம்பிடித்திட்டென்னைக்
கண்ணால்வெருட்டிமுலையான்மயக்கிக்கடிதடத்துப்
புண்ணாங்குழியிடைத்தள்ளியென்போதப்பொருள்பறிக்க
வெண்ணாதுனைமறந்தேனிறைவாகச்சியேகம்பனே.

(பட்டினத். திருவேகம்பமாலை-கஉ, கச, உங.)

சஎ. சீயுங்குருதியுஞ்செழுநீர்வழும்புஞ்செறிந்தெழுந்து
பாயும்புடைவையொன்றில்லாதபோதுபகலிரவா
யீயுமெறும்பும்புகுகின்றயோனிக்கிரவுபகன்
மாயுமனிதரைமாயாமல்வைக்கமருந்தில்லையே.

சஅ. வாய்நாறுமூழன்மயிர்சிக்குநாறிடுமையிடுங்கண்
பீநாறுமங்கம்பிணவெடிநாறும்பெருங்குழிவாய்ச்
சீநாறும்யோனியழுநாறுமிந்தியச்சேறுசிந்திப்
பாய்நாறுமங்கையர்க்கோவிங்ஙனேமனம்பற்றியதே.

(பட்டினத். பொது-கச, ஙக.)

சகூ. இரைக்கேயிரவும்பகலுந்திரிந்திங்கிளைத்துமின்று
ரைக்கேயவலக்குழியருகேயசும்பார்ந்தொழுகும்
புரைக்கேயுழலுந்தமியேனையாண்டருள்பொன்முகலிக்
கரைக்கேகல்லாலநிழற்கீழமர்ந்தருள்காளத்தியே.

ருo. நாறுங்குருதிச்சலதாரைதோற்புரைநாடொறுஞ்சீ
யூறுமலக்குழிகாமத்துவாரமொளித்திடும்புண்
டேறுந்தசைப்பிளப்பந்தரங்கத்துளசிற்றின்பவிட்
டேறும்பதந்தருவாய்திருக்காளத்தியீச்சுரனே.

(பட்டினத். திருக்காளத்தி-ரு,சு.)

ருக. சிற்றம்பலமுஞ்சிவனுமருகிருக்க
வெற்றம்பலந்தேடிவிட்டோமே—நித்தம்
பிறந்திடத்தைத்தேடுதேபேதைமடநெஞ்சங்
கறந்திடத்தைநாடுதேகண்.

(பட்டினத். பொது. பொது-க.)

ருஉ. திருமால்பயந்தநிசைமுகனமைத்து
வருமேழ்பிறவியுமானுடத்துதித்து
மலைமகள்கோமான்மலரடியிறைஞ்சிக்
குலவியசிவபதங்குறுகாதவமே
மாதரைமகிழ்ந்துகாதல்கொண்டாடும்
மானிடர்க்கெல்லாம்யானெடுத்துரைப்பேன்
விளிவெளிமாக்கடெளிவுறக்கேண்மின்
முள்ளுங்கல்லுமுயன்றுநடக்கு
முள்ளங்காலைப்பஞ்செனவுரைத்தும்
வெள்ளெலும்பாலேமேவியகணைக்காற்
றுள்ளும்வராலெனச்சொல்லித்துதித்துந்
தசையுமெலும்புந்தக்கபுன்குறங்கை
யிசையுங்கதலித்தண்டெனவியம்பியு
நெடுமுடைநாறுங்கிஞ்ன்றிடுமிடையைத்
துடிபிடியென்றுசொல்லித்துதித்து

மலமுஞ்சலமும்வழும்புந்திரையு
மலையும்வயிற்றறையாலிலையென்றுஞ்
சிலந்திபோலக்கிளைத்துமுன்னெழுந்து
திரண்டுவிம்மிச்சீப்பாய்ந்தேறி
யுகிராற்கீறவுலர்ந்துள்ளுருகி
நகுவார்க்கிடமாய்நான்றுவற்று
முலையைப்பார்த்துமுளரிமொட்டென்றுங்
குலையுங்காமக்குருடர்க்குரைப்பே
னீட்டவுமுடக்கவுநெடும்பொருள்வாங்கவு
மூட்டவும்பிசையவுமுதவியிங்கியற்று
மங்கையைப்பார்த்துக்காந்தளென்றுரைத்தும்
வேர்வையுமழுக்குமேவியகழுத்தைப்
பாரினிலினியகமுகெனப்பகர்ந்தும்
வெப்புமூத்தையுமேவியவாயைத்
துப்புமுருக்கின்றாய்மலரென்று
மன்னமுங்கறியுமசைவிட்டிறக்கு
முன்னியபல்லைமுத்தெனமொழிந்து
நீருஞ்சளியுநின்றுநின்றொழுகுங்
கூரியமூக்கைக்குமிழெனக்கூறியுந்
தண்ணீர்பீளைதவிராதொழுகுங்
கண்ணைப்பார்த்துக்கழுநீரென்று
முள்ளுங்குறும்பியொழுகுங்காதை
வள்ளைத்தண்டின்வளமெனவாழ்த்தியுங்
கையுமெண்ணெயுங்கலவாதொழியில்
வெய்யவதரும்பேனும்விளையத்
தக்கதலையோட்டின்முளைத்தெழுந்த
சிக்கின்மயிரைத்திரண்முகிலென்றுஞ்
சொற்பலபேசித்துதித்துநீங்க
ணச்சிச்செல்லுநரகவாயி
ரேழுமிறைச்சியுந்துதைந்துசீப்பாயுங்
காமப்பாழிகருவிளைகழனி
ரமக்கடவழிதொளைபெறுவாயி

லெண்சாணுடம்புமிழியும்பெருவழி
மண்பாற்காமங்கழிக்குமறைவிட
நச்சிக்காமுகநாய்தானென்று
மிச்சித்திருக்குமிடைகழிவாயி
றிங்கட்சடையோன்றிருவருளில்லார்
தங்கித்திரியுஞ்சவலைப்பெருவழி
புண்ணிதுவென்றுபுடைவையைமூடி
யுண்ணீர்பாயுமோசைச்செழும்புண்
மால்கொண்டறியாமாந்தர்புகும்வழி
நோய்கொண்டொழியா நண்ணியர்போம்வழி
தருக்கியகாமுகர்சாரும்படுகுழி
செருக்கியகாமுகர்சேருஞ்சிறுகுழி
பெண்ணுமாணும்பிறக்கும்பெருவழி
மலஞ்சொரிந்திழியும்வாயிற்கருகே
சலஞ்சொரிந்திழியுந்தண்ணீர்வாயி
லித்தைநீங்களினிதெனவேண்டா
பச்சிலையிடினும்பத்தர்க்கிரங்கி
மெச்சிச்சிவபதவீடருள்பவனை
முத்திநாதனைமூவாமுதல்வனை
யண்டரண்டமுமனைத்துளபுவனமுங்
கண்டவண்ணலைக்கச்சியிற்கடவுளை
யேகநாதனையிணையடியிறைஞ்சுமின்
போகமாதரைப்போற்றுதலொழிந்தே.

(பட்டினத். நான்காவது கச்சித்திருவகவல்.)

௫௩. நூலினேரிடையார்திறத்தேநிற்கும்
ஞாலந்தன்னொடுங்கூடுவதில்லையான்
ஆலியாவழையாவரங்காவென்று
மாலெழுந்தொழிந்தேனென்றன்மாலுக்கே.

ருச. மாரனார்வரிவெஞ்சிலைக்காட்செய்யும்
பாரினாரொடுங்கூடுவதில்லையான்
ஆரமார்வனரங்கனநந்தன்நல்
நாரணன்நரகாந்தகன்பித்தனே.

(நாலாயிர. பெருமாள் திருமொழி. ௩-வது. ௨, ௩.)

ருரு. பெண்டிராற்சுகங்களுய்ப்பான்பெரியதோரிடும்பைபூண்டு
உண்டிராக்கிடக்கும்போது உடலுக்கேகரைந்துநைந்து
தண்டுழாய்மாலைமார்பன்தமர்களாய்ப்பாடியாடி [றே.
தொண்டுபூண்டமுதமுண்ணாத்தொழும்பர்சோறுகக்குமா

ருசு. சூதனாய்க்கள்வனாகித்தூர்த்தரோடிசைந்தகாலம்
மாதரார்கயல்கணென்னும்வலையுள்பட்டழுந்துவேனை
போதரேயென்றுசொல்லிப்புந்தியில்புகுந்துதன்பால்
ஆதரம்பெருகவைத்தவழகனாரரங்கமன்றே.

ருஎ. மெய்யெல்லாம்போகவிட்டுவிரிகுழலாரில்பட்டு
பொய்யெல்லாம்பொதிந்துகொண்டபோட்கனேன்வந்துநின்
ஐயனே! அரங்கனே! உன்னருளென்னுமாசைதன்னால் [றேன்
பொய்யனேன்வந்துநின்றேன்பொய்யனேன்பொய்யனேனே.

(நாலாயிர. திருமாலை. ரு, கசு, ௩௩.)

ருஅ. வாடினேன்வாடிவருந்தினேன்மனத்தால்பெருந்துயரிடும்பையிற்பிறந்து, கூடினேன்கூடியிளையவர்தம்மோடவர்தருங்கலவியேகருதி, யோடினேனோடியுய்வதோர்பொருளாலுணர்வெனும்பெரும்பதந்தெரிந்து, நாடினேன்நாடிநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம்.

ருகூ. ஆவியேயமுதேயெனநினைந்துருகியவரவர்பணைமுலைதுணையா, பாவியேனுணராதெத்தனைபகலும்பழுதுபோயொழிந்தனநாட்கள், தூவிசேரன்னந்துணையொடும்புணரும்சூழ்புனல்குடந்தையேதொழுதென், நாவினாலுய்யநான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னும்நாமம்.

சுO. சேமமேவேண்டித்தீவினைபெருக்கித்தெரிவைமாருருவமேமருவி, ஊமனார்கண்டகனவிலும்பழுதாயொழிந்தனகழிந்தவந்நாள்கள், காமனார்தாதைநம்முடையடிகள்தம்மடைந்தார்மனத்திருப்பார், நாமம்நானுய்யநான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னும்நாமம்.

சுக. வென்றியேவேண்டிவீழ்பொருட்கிரங்கிவேற்கணார்கலவியேகருதி, நின்றவாநில்லாநெஞ்சினையுடையேனென்செய்கேன்நெடுவிசும்பணவும், பன்றியாயன்றுபாரகங்கீண்டபாழியானாழியானருளே, நன்றுநானுய்யநான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னும்நாமம். (நாலாயிர. பெரியதிருமொழி-க, உ, ௩, ச.)

சுஉ. வாணிலாமுறுவற்சிறுநுதற்பெருந்தோள்மாதரார்வனமுலைப்பயனே, பேணினேனதனைப்பிழையெனக்கருதிப்பேதையேன்பிறவிநோயறுப்பான், ஏணிலேனிருந்தேனெண்ணினேனெண்ணியிளையவர்கலவியின்றிறத்தை, நாணினேன்வந்துன்றிருவடியடைந்தேன்நைமிசாரணியத்துளெந்தாய்.

சு௩. சிலம்படியுருவிற்கருநெடுங்கண்ணார்திறத்தனாயறத்தையேமறந்து, புலன்படிந்துண்ணும்போகமேபெருக்கிப்போக்கினேன்பொழுதினைவாளா, அலம்புரிதடக்கையாயனேமாயாவானவர்க்கரசனேவானோர், நலம்புரிந்திறைஞ்சுந்திருவடியடைந்தேன்நைமிசாரணியத்துளெந்தாய்.

(நாலாயிர. பெரியதிருமொழி.க-ம் பத்து, சு-வது. க, உ.)

சுச, மின்னுமாவல்லியும்வஞ்சியும்வென்றநுண்ணிடைநுடங்கு
மன்னமென்னடையினார்கலவியையருவருத்தஞ்சினாயேல்
துன்னுமாமணிமுடிப்பஞ்சவர்க்காகிமுன்தூதுசென்ற
மன்னனார்வல்லவாழ்சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே.

(நாலாயிர. பெரியதிருமொழி. கூ-ம் பத்து, எ-வது-உ.)

இக்கவிகளாற் பெண்களாலுண்டாகுந் துன்பத்திற்கெத்துன்பமுமிணையில்லையென்பது வெள்ளிடைமலைபோல் விளங்குகின்றது.

(இன்னும் வரும்.)

ஜி. சதாசிவம் பிள்ளை.

ஸ்ரீ:

# "நுண்பொருண்மாலை"

(௫0௨-ம் பக்கத்தொடர்ச்சி.)

௧0௩௫. "இரவா.........யவர்"

நு - லை:—மாலை - இயல்பு.

௧0௩எ. "தொடிப்புழுதி.........படும்"

நு - லை:—கஃசு - காற்பலம். பிடித்து- பிடியின்கண்ணது; பிடித்த வென்பதன் விகாரமுமாம்.

௧0௩அ. "ஏரினு.........காப்பு"

நு - லை:—கட்டபின்- களைகட்டால்; களைகட்டதனோடு நேரென்பதுங் காண்க.

௧0௪௩. "தொல்வரவுங்.........நகை"

நு-லை:—தோலாவது, "இழுமென்மொழியால் விழுமியது நுவலினும்" (தொல். பொருள். செய். ௫௫௧.) என்றார் தொல்காப்பியனாரும்.

௧0௪௫, "நல்குர.........படும்"

நு - லை:—குரை - இசை நிறை. செலவு விரைவின்கண் வந்தது.

௧0௪எ. "அறஞ்சாரா.........படும்"

நு - லை:—நல்குரவினையுடையானென்றுரைத்த தாகுபெயரென்றறிக,

௧0௫௧. "இரக்க......யன்று"

நு - லை:—இரத்தக்கார், இரத்தற்கேற்புடையாரென்றுரைத்து இரவென்னுமுதனிலைத்தொழிற்பெயரிறுதிக்கண் நான்கனுருபுவிகாரத்தாற்றொக்கதென்றறிக. "உள்ளப்படுவன" (திருக்.அஎ.) என்னுங்கோவையாருள், "உரைத்தக்கவர்" என்பதுமது.

கoருஉ. "இன்பமொருவற்.........வரின்"

ரு - லை:-உருமலென்பதுருவெனக்கடைக்குறையாயிற்று. துன்பஞ் சாதிப்பெயர்.

கoருச. "இரத்தலு.........மாட்டு"

ரு - லை:—ஏகாரம் ஈற்றசை.

கoருகூ. "ஈவார்க.........கடை"

ரு - லை:—மேவுவாரென்பது செய்யுட்டொடைக்காரண விகாரமாயிற்று.

கoகூo. "இரப்பான்.........கரி"

ரு - லை:—வெருளாமை, வெருளாதொழிதல்வேண்டுமென்பது பல்லோர் படர்க்கையல்லாத விதிபற்றிச்செய்யுமென்னுமுற்றுக்கினுரென்க.

கoகூஉ. "இரந்து.........யான்"

ரு - லை:—"நாறுத்தகடேபோ" (நாலடி.உகூகூ.) லென்பதுபோலத்திட்டுதல்காண்க.

கoகூரு. "தெண்ணீ.........தில்"

ரு - லை:—தெண்ணீர் - தெளிந்தநீர்.

கoகூகூ. "ஆவிற்கு.........தில்"

ரு - லை:—அறனுமுயன்று செய்வதல்லது இரந்துசெய்யற்கவென்ப திதனாற் கூறப்பட்டதென்க.

கoகூஅ. "இரவென்னு.........விடும்"

ரு-லை:—ஏமாப்பிறேணி - காவலற்றதோணி. பார்-வன்னிலம். முருகாற்றுப்படையுள், "பார்முதிர்பணிக்கட" லென்பதுமது. பரிபாட்டுட்"பார்துகள்பட"வென்பதுமது. அதனையிக்காலத்தார் சில்லந்தட்டிற்றென்பர்; இஃதவயவவுருவகம்.

கoஎக. "மக்களே.........தில்"

ரு - லை: — ஒப்பாரி - ஒப்பு. அவரென்றது, அவர்மாட்டுளதாகியவொப்புமையை. ஒப்புமையையன்னவொப்பாரியெனக் கூட்டுக. "வடிக்கணிகூவவஞ்சி" (திருக். கூஉ.) யென்னுங்கோவையாரு "எம்பலம்போற்,படிச்சந்தமுமிதுவே" யென்பதுமது.

கOஎ௨. "நன்றறி.........மிலர்"

ந - லை:—திரு - நன்மை. திருவுடையாரெனக்குறிப்பாலிகழ் வாறுயிற்று.

கOஎ௩. "தேவ.........லான்"

ந - லை:—மேவன - விரும்புவன. புகழ்வார்போன்று பழித்த லுங் காண்க.

கOஎ௪. "அகப்பட்டி.........கீழ்"

ந - லை:—செம்மாத்தல் - இறுமாத்தல்.

கOஎ௫. "அச்சமே.........சிறிது"

ந - லை:—ஆசாரம் - ஒழுக்கம்; அது வடசொல்.

கOஎ௬. "அறைபறை.........லான்"

ந - லை:— மறைவெளிப்படிற் குற்றம்விளையுமென்று பிறரை மறைத்து ஒருவன் சொல்லியசொல்.

கOஎ௯. "உடுப்பதூஉ.........கீழ்"

ந - லை:—அழுக்காற்றி லுடுப்பதூஉ முண்பதூஉமென்பதுபோலச், செயப்படுபொருண்மேனில்லாநீண்டுத்தொழில்மேனின்றதெ ன்க.

கOஅO. "எற்றிற்.........விரைந்து"

ந-லை:—ஒரு தொழிற்குமுரியரல்லரென்பது குறிப்பெச்சம்.

கOகூஎ. "செறுஅச்.........குறிப்பு"

ந-லை:-செறுச்சிறுசொல்-பின்னினிதாய் முன்னின்னுதாயசொல். குறிப்புக்குறிப்புப்பற்றிவருவன; அது ஆகுபெயர்.

கOகூஅ. "அசையியற்.........நகும்"

ந - லை. ஏர் நன்மைக்குறிப்பாயவாகுபெயர். பசையினள் முற்றெச்சம். அசையியல் வினைத்தொகை.

கOகூகூ. "எதிலார்.........யுள"

ந-லை:—இது தோழிசொல்லியது.

ககOO. "கண்ணொடு.........மில"

நு - லை:— வாய்ச்சொல்-வாய்மைதோன்றச்சொல்லுஞ்சொல்; அது மனத்தின்கணின்றி வாயளவிற்றோன்றுஞ்சொல்.

கக0க. "கண்டுகேட்.........யுள"

நு - லை:—உம்மை முற்றும்மை, ஏகாரந்தேற்றேகாரம். ஒண்டொடி - ஒள்ளியதொடி.

கக0உ. "பிணிக்கு.........மருந்து"

நு - லை:— தன்னோய் - தன்னாலாய நோய். மன் ஒழியிசை. அணியிழை வினைத்தொகை; அணிதலையுடையவென வேற்றுமைத்தொகையுமாம். அன்மொழியாயினுமாகுபெயராயினுமாக.

கக0ச. "நீங்கிற்.........ளிவள்"

நு - லை:— தெறூஉமென்பது, நீண்டளபெடுத்து மாத்திரை பெற்று ஓரசையீரசையாய்நின்றது. நின்றமையாற்குறூஉச்சுடர்போலாதென்க. "எருவுஞ்செருவு" (தொல். எழுத். உசுO) மென்னுஞ் சூத்திரத்து மிகூஉ மென்பதனையுடம்பொடுபுணர்த்துக்கூறினார். நச்சினார்க்கினியாருரைத்தது நெட்டெழுத்தாதற்கென்க.

கக0ரு. "வேட்ட.........டோள்"

நு - லை:-தொழிலுவமம். 'தம்முடையபொருளொனது'என்பது மது.

கக0அ. "வீழு.........முயக்கு"

நு - லை:—இருவர்க்குமென்றுரைத்து முற்றும்மை விகாரத்தொகை. ஏகாரம் தேற்றேகாரம்.

கக0சு. "ஊட.........பயன்"

நு - லை:—உணர்தல்- அளவறிந்து நீங்குதல். புணர்தல் - புணர்ச்சி.

ககக0. "அறிதோ.........மாட்டு"

நு-லை:—காமம் - நுகர்தல். சேயிழை - சிவந்தயிழை. நலம்புனைந்துரைத்தலென்பதிற்புனைந்துரை துதி.

கககக. "நன்னீரை.........பவள்"

நு - லை:—வாழி- வாழ்வாயாகவென வியங்கோளாயவுடம்பாட்டுக் குறிப்பு.

கககஉ. "மலர்காணின்.........மென்று"

நு - லை:—மையாத்தி-மயங்காநின்றாய். மையாத்தல், அல்லாத்தலென்பன வொருசொல்.

கககா. "மூறிமேனி.........ளவட்கு"

நு - லை:—மூறி-தளிர். நிறமென ஆகுபெயரானது மூறுவதூ மந்து. அவட்குக்கண் வேலாயிருக்குமென உருவக வகையாற்கூறினா ரதிகாரநோக்கி. இனி நச்சினார்க்கினியார் உவமையாக்கினாரென்க.

கககச. "காரணிற்.........மென்று"

நு - லை:— மாணிழை-மாண்டவிழை. காணில்-காண்டற்றொழிலையுடையவாயின்.

கககரு. "அனிச்சப்பூக்.........பறை"

நு - லை:— மக்கட்குரிய சாக்காடு நெய்தற்பறைபடுதலூ நுசுப்பிற்கு இலக்கணச்சொல்லாற்பெற்றது. அத்துணை நுட்பமென்பது குறிப்பு. ஆதலால் இலக்கணமூலத்தொனியென்பர், வடநூலார். இலக்கணக்குறிப்பானுசுப்பின்மேலேற்றப்பட்டனவென்றார்.

கககசு. "மதியு.........மீன்"

நு - லை:—மீன், மழுவாய் கலங்கிய, பயனிலை. இது தற்குறிப்பேற்றம்.

கககஎ. "அறுவாய்.........முகத்து"

நு - லை:—இடம்-கலை. மதிக்கு, மதிக்கண் வேற்றுமைமயக்கம். அறுவாய் - முன்குறைந்தவிடம்.

கககஅ. "மாதர்.........மதி"

நு - லை:—காதலை, காதலையுடையை என முன்னிலை ஐயீற்றொருமை குறிப்பின்கண் வந்தது. வாழி இகழ்ச்சிக்குறிப்பு. நன்னிரையுள், வாழியுடம்பாட்டுக்குறிப்பு. ஈண்டு மாதர் ஒருமை. ஒருவரையுயர்த்துக் கூறும்பன்மையும் பகுதிப்பொருள்விகுதியு மன்றென்க.

கககக. "மலரன்ன.........மதி"

நு - லை:—முகமொத்தி- முகத்தையொக்க வேண்டுதி. ஒத்தலு

க்கு முதனிலையுணர்தலரிதென்க. தோன்றல், தோன்றுதொழிலென மறுத்தன்மேனின்றது.

கக௨o. "அனிச்சமு.........பழம்"

நு - லை:—முள்வலிதாகலிற் பழமென்றார்.

கக௨க. "பாலொடு.........நீர்"

நு - லை:- கலந்ததென்பது செய்யுணடையாற்கலந்தெனவிகாரமாயிற்று. "களித்தொறுங்கள்ளுண்டல்வேட்டற்று" (குறள்.கக௪௫.) என்பதுமது.

கக௨எ. "கண்ணுள்ளார்.........கழிந்து"

நு - லை:—கரப்பாக்கு வேபாக்கென்பன வினையெச்சம்; குறிப்பெச்சமுங்காண்க.

கக௩௨. "நோனு.........நிறுத்து"

நு - லை:—அவ்வருத்தத்தினைப்பொருதவுடம்பென் றுரைப்பார் செயப்படுபொருளீண்டுக்கூறாராயினார். வருந்தினரென மேல்வந்தமையினென்க.

கக௩௬. "மடலூர்தல்.........கண்"

நு-லை:—பேதைக்.........ரணமாகவென்க. குகரவுருபு பொருட்டுப்பொருளாயது. பேதை என்பது, பருவம்பற்றியன்று மடமைபற்றியென்க.

கக௩எ. "கடலன்ன.........தில்"

நு - லை:—பெண்.........பெருந்தக்கது-மிக்க தகுதியையுடைய பிறப்பு.

கக௩அ. "நிறையரியர்.........படும்"

நு - லை:—காமமெழுவாய். மறை - மறைத்தல். அஞ்சுதல்செய்யா.........யயாதென்றுரைத்து என்னுவென்பதனை முன்னுங்கூட்டிமகளிர் வருவிக்கப்பட்டதென்றார். காமம் எச்சவும்மைவிகாரத்தாற்றொக்கது. அளியர் - அளிக்கத்தக்கார். முருகாற்றுப்படை.........னருளே'யென்பதுமது.

கக௩௯. "அறியிலா.........மருண்டு"

ந - லை:—அறி முதனிலைத்தொழிற்பெயர். காமம் எழுவாய்.

கககo.—"யாங்கண்ணிற்.........வாறு"

ந - லை:—தாம்படாவாறு - தாம் உறுமையாலென்றுயிற்று.

ககசக. "அலரெழ.........தால்"

ந - லை:—பாக்கியர்.........லரு முற்றும்மை விகாரம்.

ககசஉ. "உறுதோ.........நீர்த்து"

ந - லை:—நீர்த்தென்பதற்கேற்ற மனமென்னும் வினைமுதல்வருவித்தது.

(இன்னும் வரும்.)

ப—ர்.

உ

# ஆசார விளக்கம்

(சசக-ஆம் பக்கத்தொடர்ச்சி)

இவையன்றி, தேசக்ஷோபை, லோகோபத்திரவம், அல்லது ஊர்ப்பிடை நேர்ந்தகாலத்தில் தோஷம் என்பது ஏற்படாதென்று பின்வரும் வாக்கியங்களில் வற்புறுத்தி யிருக்கிறார்கள்:—

விஷ்ணு சொல்லியது:—"தேவதாபிரதிஷ்டை செய்யும்பொழுதும், விவாஹோற்சவத்திலும், அவற்றைச் செய்யத்தொடங்கியிருந்தால், ஆசௌசம் ஏற்படாது; தேசமுழுதும் விபத்துக்குள்ளாகி இருந்தாலும் ஆசௌசமில்லை; (தொத்துநோய் அல்லது க்ஷாமம் போன்ற) பெரிய பொதுத்துன்பமேற்பட்ட காலத்திலும் ஆசௌசமில்லை."

மனு சொல்லியது:—"பிராணனையிழக்கும் ஆபத்தான சமயத்தில் எவனிடத்திலிருந்தாவது உணவு ஏற்பவன், மண்ணினால் வானம் அசுத்தமாகாததுபோலப் பாபத்தினாற் பிடிக்கப்படமாட்டான்."

"பசியினால் வருந்திய அஜீகர்த்தன் (தன்சொந்த) மகனைக்கொலைசெய்வதற்காக அவனை அனுப்பினான்; அவன் பசியின்கொடுமையினால் மரிக்காதிருக்க வகைதேடினனாதலின் அவன் பாபத்திற்காளாகவில்லை."

"புண்ணியபாபங்களை நன்கறிந்த வாமதேவர் பசியின்கொடுமையால் தன் பிராணனைக் காக்கவேண்டி நாயின்மாமிசத்தைப் புசிக்க விரும்பினும் பாபியாகவில்லை."

"மகத்தான யஜ்ஞங்களும் விரதங்களுஞ்செய்த பரத்துவாஜர் தம் குமாரர்களோடு தனிமையானதொரு காட்டிற் பட்டினியினால் வருந்தியபோது பிபு என்னும் தச்சனிடமிருந்து அனேகம் பசுக்களைத் தானம் ஏற்றார்."

"தர்மாதர்ம பரிஜ்ஞானமிருந்த விசுவாமித்திரர் பசி மேற்கொண்டபோது, ஒரு சண்டாளனிடத்திலிருந்து நாயின் தொடையை வாங்கிப் புசிக்கப்போனார்."

தேசத்தில் வறுமை விளைவிக்கத்தக்க வியாபாரக்ஷீணமும் உயிர்ச்சேதமும் "ஊர்ப்பீடை" என்னத்தகுமாயின் (அவற்றை ஊர்ப்பீடை யென்று சொல்லாதிருக்கமுடியாதென நினைக்கிறேன்) இவ் விராஜதானியிலுள்ள நாட்டாண்மைக்காரர்கள் வருங்காரியங்களைக்கருதி, தம் தேசத்தவர்களுடைய க்ஷேமத்தின்பொருட்டு, சிஷ்டாசாரபரர்களுடன் கலந்து ஆலோசித்து, பொதுநன்மைக்கு அனுகூலமாக, விஷயத்திற்கேற்றவாறு நினைக்கவும் செய்யவும் ஏற்பாடுசெய்யவேண்டியது. மேற்சொல்லியவை தேசபீடையென அவர்கள் பஹிரங்கமாக எடுத்துரைக்கவேண்டும்; அவற்றின்பொருட்டுத் தங்களுடைய ஆசாரங்களையும் கொள்கைகளையும் ஜனங்கள் மாற்றிக்கொள்ளவேண்டுமென்று அவர்கள் சொல்வது அவசியமாம். இப்படிப்பட்ட புதிய ஏற்பாடு கொள்ளைநோயினாற் பீடிக்கப்பட்ட இடங்களுக்குமாத்திரம் ஒக்குமாறு சாற்றுவித்து, அவ் விடங்களில் முன்போல தேசக்ஷேமம் உண்டானவுடன் மாறுதலான அந்தப் புது ஏற்பாடு அவசியமில்லையென்று செய்யலாம்.                    (இன்னும் வரும்)

கர்னல், உ. ஜி. கிங்கு, சி. ஐ. இ. ஐ. எம். எஸ்,

சானிடரி கமிஷனர்.

உ

கடவுள் துணை

# செந்தமிழ்

தொகுதி-௬.] விரோதிகிருது ௵ ஐப்பசி௴ [பகுதி-௧௨.

## திருக்குறட் பரிமேலழக ருரைவிளக்கம்

(செந்தமிழ்த்தொகுதி அ: ௪௬௨-ம் பக்கத்தொடர்ச்சி.)

*இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்*
*பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.*

"மயக்கத்தைப்பற்றி வரும் நல்வினை தீவினையென்னுமிரண்டு வினையுமுளவாகா இறைவனது மெய்ம்மை சேர்ந்த புகழைவிரும்பி னாரிடத்து" எ-று. மயக்கம் என்பது மாயையின் காரியமாய மயக்கவாசனை என்றபடி. அஃதாவது, "நாமல்லவிந்திரியம் நம்வழியி னல்லவழி - நாமல்லநாமு மரனுடைமை" என்று உள்ளவாறு பாசங்களினுண்மையையுணர்ந்து துறந்தவழியும் வாதனைபற்றித்துறக்கப்பட்ட புலன்கண்மேற் பயிற்சிவயத்தானே செல்லுமவா. பரிமேலழகரும் ௩௭-ம் அதிகாரமாகிய அவாவறுத்தலைவிளக்குழி "அஃதாவது, முன்னும் பின்னும் வினைத்தொடர்பறுத்தார்க்கு நடுநின்ற உடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களும் நின்றமையின் வேதனைபற்றி ஒரோவழித்துறக்கப்பட்ட புலன்கண்மேல் பழையபயிற்சிவயத்தானே 'நினைவுசெல்லுமன்றே; அந்நினைவுமவிச்சையெனப்பிறவிக்கு வித்தாமாகலின் எனக்கூறுதலானும், ௫ண்டும் "இன்னதன்மைத்தென் ஒருவராலுங்கூறப்படாமையின் அவிச்சையை இருளென்றும்" எனக்கூறுதலானும் மயக்கம் என்பது புலன்கண்மேற்செல்லுமவா என்பது தேற்றமாதல்காண்க. சிவஞானபோத மாபாடியகாரர் அஞ்ஞானகன்மமென்பதை விளக்குழி, ௫ண்டு அஞ்ஞானமெ

ன்றது மாலையின் காரியமாய மயக்கவாசனையேயாம் என்றதும் இதனையேயாம். ஆண்டு அஞ்ஞானகன்மமென்றதும் ஈண்டு இருள் சேரிருவினை என்றதும் ஒப்புமை உடைத்தென்க.

வரும் என்பது அம்மயக்கம் காரணமாகவருகின்ற என்றபடி. அம்மயக்கம் காரணமாகவே இருவினையும் வருமென்பது "அல்லு ழியெல்லாம் பிரபஞ்சந்தாக்காதொழியாது; அஃதொழியாவழி அது காரணமாக வரும் விருப்பு வெறுப்பு ஏறு தொழியாது" எனக்கூ றும் சிவ மாபாடிய வாக்கியத்தாற்பெறப்படும்.

நல்வினை தீவினையென்னு மிரண்டு வினையுமென்றது ஆகாமியவினை யை. இறை பணி நின்று புகழ் புரியாதார்க்கு விருப்பு வெறுப்பு ஏறும்; ஏறவே அவை ஆகாமியமாம். நல்வினையும் பிறவிக்கேதுவா கலின் இருவினையும் என்றார். அது, "சில நல்வினையுந்தீவினைபோலத் தமது முதலுபகாரத்தை மறந்து பிறவிக்கேதுவாய்ப் பசுபோதம் முனைத்துச்செய்யப்படுவதொன்றெனத்தெளிந்து உவர்த்துவிடுவோ னது அறிவின்கண் அவ்வாற்றுறைப்ப நிகழ்தல்" என்னும் மாபாடி யவாக்கியத்தானும், "தவஞ்செய்தாரென்றுந்தவலோகஞ்சார்ந்து, பவஞ்செய்துபற்றறுப்பாராகத்-தவஞ்செய்த, நற்சார்பில்வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக், கற்றார்சூழ்செல்லுமாங்கண்டு" என்னும் வெண்பாவானும் அறியப்படும். இக் கருத்துப்பற்றியே பரிமேலழக ரும் "சார்புணர்ந்துசார்புகெடவொழுகின் மற்றழித்துச்- சார்தரா சார்தருநோய்" என்னுங்குறளின் விசேடவுரையின்கண், பிறப்பிற் குக்காரணமாகலான் நல்வினைப்பயனும் நோய் எனப்பட்டது என் றும், "காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற- னாமங்கெடக்கெடுநோ ய்" என்னுங்குறளின் விசேடவுரையின்கண், நோய்-சாதியொருமை. காரணமாய அக்குற்றங்களைக்கெடுத்தார், காரியமாய இருவினைகளைச் செய்யாமையின் அவர்க்கு வரக்கடவதுன்பங்களுமில்லை என்பது இதனாற்கூறப்பட்டது என்றும் கூறினர் எனவுணர்க.

உளவாகா என்றது இவ்விருவினையும் ஏகனாகிப்புகழ்புரிந்து இறைபணிநிற்கும் ஞானியர்பாலடையாமையை. இருவினையும் சேரா என்றதனானே இறைபணி நிற்றலும், புகழ்புரிந்தார் என்றத னானே ஏகனாகி நிற்றலும், அதனான் மலவாதனை அறுதலும் பெற

ப்படும். என்னையெனின்,— "அவனேதானேயாகியவந்நெறி - ஏக னாகியிறைபணிநிற்க - மாயை தன்னொடுவல்வினையின்றே." எனக்கூ றப்படுதலின், இருவினையும் இறைபணிநிற்கும் ஞானியர்பாலடை யாமையை, "நாமல்லவிந்திரியம்........எத்தனுவினின்றுமிறைபணி யார்க்கில்லைவினை - முற்செய்வினையுந்தருவான்முன்." என்பதனானும், "இங்குளிவாங்குங்கலம்போலஞானிபான் - முன்செய்வினைமாயைமூ ண்டினும், பின்செய்வினை-மாயையுடனில்லாது மற்றவன்றன்மெய் ப்பொருளே, யாயவதனாலுளாருமச்சு" என்பதனாலும் (சிவஞான போ. க0-ம் சூ உ. ச.) அறிக.

இறைவன் என்றது இறைமைக்குணங்கள் முற்றுமமைந்த கடவுளை, என்றது ஆதிபகவனை. ஆதிபகவனியல்பு முதற்குறள்விள க்கத்தின்கண் விரித்துக்கூறப்பட்டது. ஆண்டுக்காண்க.

மெய்ம்மை - உண்மை.

சேர்ந்த - இயல்பாகவமைந்த.

புகழ் என்றது, இறைமைக்குணங்களை; அது, [illegible] ॥ (முன். ங. க. உ. சுவே. ச. எ.) என்னுஞ் சுலோகத்தானே அறியப்படும். ஈண்டு அது அவற்றை அடைதற்குச் சாதனமாயுள்ள அவன்றிருநாமமா கிய மந்திரத்தின் மேலதாய் நின்றது. இம் மந்திரம் வாதனாமலத் தை நீக்கி முத்தியைக்கொடுப்பதாதலின் இது சாதனமெனப்பட் டது. இங்ஙனமே சிவஞானபோத மாபாடியகாரரும் "சுட்டறிவி றந்து ஞானத்தான் ஞேயத்தைக்கண்டு எங்ஙுந்தானாக நிட்டைகூடிய வழியும் தொன்றுதொட்டுவரும் ஏகதேசப்பழக்கம்பற்றிப்புறத்தே விடயத்திற்சென்று பற்றுவதாகிய தன்னறிவை. அங்ஙனம் செல் லாது மடக்கி அகத்தே ஒரு குறியின்கண் நிறுத்தி நிட்டைகூடி நிற்குமுறைமையை அஞ்செழுத்தோதுமுறையிற்கண்டு சிந்திக்கச் சிந்திக்கச் சிவதரிசனத்தை விளக்கி வாதனைவயத்தாற் புறத்திற்செ ன்று பற்றும் ஏகதேச அறிவைப் பற்றறத்துடைத்துப் பூரண நிலை யிற்கொண்டு செல்லுமாகலான் அது, வாசனை நீக்குதற்குரிய சிற

ந்த சாதனமாதலறிக" எனக்கூறுமாறுகாண்க. "சிவ னெனுந்தனி ச்சொழுத்தினை - நவலுவோர் கதிநொய்தினெய்துவார்" என்பதும் இக்கருத்துப்பற்றியதேயாம்.

விரும்புதலென்றது, விரும்பித்தியானித்தலை. புகழை விரும் பித்தியானிப்பது, "வேம்புதின்றபுழு அதனைநீத்துக் கரும்பினிற்ற லைப்பட்டு அதன்சுவை தெரிந்துழியும் பயிற்சிவயத்தான் முன்னர்த் தான் நோக்கிய வேம்பின் சுவையை நோக்கிநிற்குமாறுபோல, சாத கங்களான் ஞானம் விளங்கி ஞேயங்காட்சிப்பட்ட விடத்தும் பயிற் சிவயத்தான் முன்னர்த் தானோக்கிய பாசத்தை நோக்கிநிற்குமாகலி ன், அந்நோக்கமாகிய வாசனையை நீக்குதற்குரிய சாதகம் அதுவா கலான்" என்க. இறைவன்றிருநாமம் மலவாசனையை நீக்கி இறை மைக்குணங்களைக் கொடுக்குமென்பது,

அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி—லஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி
லண்டனுஞ் சேடனு மங்கு. எனவும்,

இந்துவிற் பானுவில் ராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணு- முந்தவே
காட்டாக்கிற் றோன்றிக் கனல்சே ரிரும்பென்ன
வாட்டானு மோதஞ் செழுத்து. எனவும்,

கூறுமாற்றானறியப்படும். இதுபற்றியே பரிமேலழகரும் "அதனை இடைவிடாத மெய்ப்பொருளுணர்வானறுத்தல்" என்றதும், "புரி தல் - எப்பொழுதுஞ்சொல்லல்" என்றதும் என்க.

வி-ரை. இன்னதன்மைத்தென...........சொல்லுதல். நல்வினையும் பிறவிக்கேதுவாதல்,—

புண்ணியம் பாவம் பொருந்துமிக் கான்மியமும்
மண்முதன் மாயைகாண் மாயையுங்—கண்ணிய
வஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்றும்
மெய்ஞ்ஞானிக் காகா விடு.

எனவரும் வெண்பாவானறியப்படும்.

(இன்னும் வரும்.)

சி. கணேசையர்.

உ

சிவமயம்.

# பாரதம் பாடிய பெருந்தேவனார்

ஆதியிற் றமிழ்நூ லகத்தியர்க் குணர்த்திய
மாதொரு பாகன் மலரடி வழுத்துதும்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே.

அமிழ்தினுமினிய தமிழ்மொழியை முதலிடை கடையென்னு முச்சங்கநிறுவி யொவ்வொரு சங்கத்தினும் பலபாண்டிய மன்னர்களும், பல புலவர்பெருமக்களுங் குழீஇ வளர்த்துவந்தனரென்பது அறிஞர்பலரு மறிந்தவிஷயம். கடைச்சங்கமருவிய நாற்பத்தொன் பதின்மரில் ஒருவர், பாரதம்பாடிய பெருந்தேவனாரென்பது திருவள்ளுவமாலையில் அவர் கூறிய செய்யுளால் வெளியாகிறது. ஆயினும், இவர் யார்காலத்துள்ளார்? இவர் திருவவதாரஞ்செய்த நாடியாது? இவரெக்கொள்கையை யுடையார்? இவரியற்பெயரியாது? இவர் கல்விப்பெருமைமுதலியன வெத்தன்மையது? இவர் செய்தநூல் யாது? இவர்மாட்டுப்புலவர் பெருமக்களும், அரசர்களுங்கொண்டிருந்த அன்பு எத்தகையது? என்பன முதலியவற்றைப்பற்றிச் சிறிதாராய்வேன்.

### காலம்

இப்புலவர்பிரான் கடைச்சங்கத்திற் கனமாப்பலகை யேறித் தமிழாராய்ந்த புலவர்களுடன் குழுமியிருந்து திருக்குறளுக்கு "எப்பொருளும்யாருமியல்பினறிவுறச், செப்பியவள்ளுவர்தாஞ்செப்பவரு—முப்பாற்குப், பாரதஞ்சீராமகதைமனுப்பண்டைமறை,நேர்வன மற் றில்லை நிகர்." என்னும் வெண்பாவைச் சிறப்புப்பாயிரமாகக் கூறியிருத்தலால், அவர்காலத்திருந்தனரென்பதுபுலனும். ஆசிரியர் வள்ளுவர்காலம் கடைச்சங்கமருவிய உக்கிரப்பெருவழுதியார்காலமென்பது வழுதியார்கூறிய சிறப்புப்பாயிரத்தாற் றெளிவாம். வழுதியார் காலம் இற்றைக்கு இரண்டாயிரவருடமென்பது யாவரு மறுத்

தற்கொண்ணுததேயாம். யானெடுத்துக்கொண்டவாசிரியர்காலமுமி வர்காலமுமொன்றென்பதிலொருசிறிதுமையமின்றும்.

## நாடு

இவர் திருவவதாரஞ்செய்த நாடு "தெண்ணீர்வயற்றொண்டை, நன்னாடுசான்றோருடைத்து" எனவும், "வறுமையுற்றழியுந்தொண் டைவளமலிநாட்டோர்தங்க, ளிறுமுடல்வருத்தியேனுமீவதற்கொல் காரற்றே" எனவும், ஆன்றோர்கள் சிறப்பித்துக்கூறியதூஉம், உமா தேவியாரெண்ணான்கறத்தைவளர்த்தற்காகரமாகவுமிருந்த புண்ணி யபூமியாகிய தொண்டை நாடென்பது,—

> "சீருறுபாடல்பன்னீராயிரமுஞ்செழுந்தமிழ்க்கு
> வீரர்தஞ்சங்கப் பலகையிலேற்றிய வித்தகனார்
> பாரதம்பாடும் பெருந்தேவனார்வாழும் பதியுங்கொண்ட
> மாருதம்பூவின் மணம்வீசிடுந்தொண்டைமண்டலமே.

என்னுந் தொண்டைமண்டல சதகத்தால் வெள்ளிடைமலைபோல் வெளியாகுமென்பதிலொரு சிறிதுமையமின்றும்.

## கொள்கை

அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு மூன்றினும் இந்தரா வணியிறைவன்றுதியும், நற்றிணையில், நிலங்கடந்த நெடுமுடியண் ணறுதியும், குறுந்தொகையிற் குன்றெறிந்த குமரவேடுதியும், தாமி யற்றிய பாரதவெண்பாவில், வேழமுகப்பிரான் றுதியுங்கூறியிருத்த லால், "தெய்வமிகழேல்" லென்னும் மூதுரையை யநுட்டித்தபெரியா ரென்பது வெளியாகின்றது. ஒருசாராரிவர்கடவுள்வாழ்த்துப் பெ ரிதுஞ் சிவபரமாகக் கூறியிருப்பதோடு, அவ்விறைவனது திருவுரு வத்தையும், அம்பிகையபின்னசத்தியாய் அவன்கூற்றிலடங்கியிருக் கும் பெருமையையும், கொடி, மாலை முதலிய வேனையவற்றையும், அவனதிறைமைக் குணங்களையும், பதினெண்கணமு மேத்தவும்படு மென்றதனால் அவன் எத்தேவரினு முதல்வனென்பதையும், பிரமா முதல் ஸ்தம்பமீறாயுள்ள சகல வுயிர்களையுங் காத்தழித்துதவுமாற்ற லுடையவனென்பதுந்தோன்ற வெல்லாவுயிர்க்குமேமமாகிய வென் றுங் கூறியிருத்தலாற்,சிவமதத்தினரென்று கூறுகின்றனர். இன்னு

மொருசாரார் இவர் பாரதத்திற்கண்ணபிரானது சர்வவல்லமைகளை யும், அவனதிறைமைக்குணங்கள் பலவற்றையுங்கூறியதோடு நற்றி ணையிலவனது விராட்சொரூபத்தை யாவருமுணர்ந்தானந்திக்குமா று பூமியைப் பாதமாகவும், சலதியை யாடையாகவும், ஆகாயத்தைத் திருமேனியாகவும், திசைகளைத் திருக்கரங்களாகவும், சோமசூரிய ரைத் திருநயனங்களாகவும், வேதத்திறுற் பிரதிபாதிக்கப்படும் பரம் பொருள் திகிரியோனென்றுங் கூறியிருத்தலால், வைணவமதத்தின ரெனவுங் கூறுகின்றனர். இவ்விருதிறத்தார்கூற்று மெவ்வாறாயினு மாருக. பண்டைக்காலத்துள்ள மூதறிவுடையோர்கள் சிவனென் றும் விண்டுவென்றும் பேதப்படுத்தி யுணர்பவரல்லர். இருவருமொ ருவரெனவேகொண்டு வந்தனைவழிபாடுகள்செய்து வந்திருக்கின்ற னர். இப்பொழுதும் நம்நாட்டிற் பழைமையான தமிழ்மக்களிவ் விதபேதமின்றி வணங்கிவருவதையும், விழவுமுதலியன நடத்திவரு வதையுங் கண்கூடாகக் காணலாம். ஆசிரியரும் பண்டைக்காலத்த வராகலின் தற்காலத்து நவீனர்களைப்போலப் பேதம்பாராட்டியவர ல்லர்; பொதுநோக்குடைய புண்ணியமூர்த்தியென்பது தெளிவாம்.

## பெயர்

இவரியற்பெயர் பெருந்தேவனார்; இப்புலவர்பெருமான் ஐந் தாம்வேதமாகிய பாரதகதையைக் கற்போர்நெஞ்சங் களிமிகுமாறு சொன்னயம் பொருணயந் தொடைநயந்தோன்றப் புலவர்பெருமக் கள் கொள்ளைகொண்டுண்ணப்பாடியதனுற் 'பாரதம்பாடிய பெருந் தேவனார்' எனச் சிறப்புப்பெயர்பெற்றனரென்றுணர்க. இன்னு மொருசாரார் இயற்பெயர் வேறென்றும், இப்புலவர்பெருமான் ஐம் புலமடக்கி யருந்தவமியற்று மந்தணர்குழாங்களி னொருவரென்றுந், துறந்துயர்ந்தாரைத்தேவரென்னும் வழக்குப்பண்டைக்காலத்ததெ ன்றும், அதற்குச்சான்றாகச் சிந்தாமணியைச்செய்த திருத்தக்கதே வர் முதலியோரையுமெடுத்துக்காட்டுகின்றனர். இவருந்துறந்தாரா கலின் தேவரென்றழைக்கப்பட்டாரென்றும், சீவர்கண்மாட்டுக்கை ம்மாறு கருதாதுகொண்ட பெருங்கருணையினுற் பாரதத்தையுரையி டையிட்ட பாட்டாகவருளிச்செய்தாரென்றும், அதனுலிவர்க்குப் பாரதம்பாடியவென்னுமடைவந்ததென்றுங்கூறுவர்.

## பெருமை.

சங்கமருவிய தண்டமிழ்ப்புலவரும், முத்தமிழ்க்கல்வியும் முறையரசுரிமையு, மித்தலத்தெய்தியவரசர்பெருமக்களுமிப்புலவர் பிரானது கல்விமுதிர்ச்சியும் ஐம்புலமடக்கி யருந்தவமியற்றுமந்த ணார்க்குள்ள பெருந்தன்மையுமோர்ந்து பண்டைக்காலத்துத்தண் டமிழ்ப்பாக்களை யொருவழித்தொகுக்கும்போது, இவரருளிய திரு ப்பாடல்களை முன்னர் நிறீஇப் பின்னரேனையோரருளிய பாடல்களை வைத்துத்தொகுத்திருக்கின்றனர். இதனால் அக்காலத்திருந்த அர சர்பலரானும், வித்துவசிரோமணிகளானுமிவர் நன்குமதிக்கப்பட்டு வந்தனரென்பது தெளிவாம்.

## நூல்

இவர் பாடிய நூல், உரையிடையிட்டபாட்டாகிய பாரதத்தை யன்றிப்பூர்த்தியான நூல் வேறொன்றுமிதுகாறும் புத்தகபண்டா ரங்களினுங் கர்ணபரம்பரையினுங்காணவில்லை. இப்பாரதமுஞ்சிறிது பாகமே கிடைத்ததன்றி முற்றிலுமின்னுங்கிடைத்தபாடில்லை. நம் மவர் இதுபோன்ற அரும்பெருநூல்களைச்சிதலுக்கிரையாக்குவதே யன்றி மனப்பூர்வகமாகவொருவருக்குங்கொடார். அந்தோ! இவரறி வென்னே? இனியாயினுமிதுபோன்ற அரும்பெருநூல்களிருப்பின், தமிழை வளர்த்தற்பொருட்டே மதுரைமாநகரின் நான்காஞ்சங்கம் நிறீஇய ஸ்ரீமாந் - பாண்டித்துரைச்சாமித் தேவரவர்களுக்காவது, அல்லது மஹாமஹோபாத்தியாயர் ஸ்ரீமத்- உ. வே. சாமிநாதை யரவர்களுக்காவது அனுப்ப, நந்தமிழ்மக்களைச்சிந்தித்து வாழ்த்தி வணங்குகின்றேன். பண்டைக்காலத்துரையாசிரியருளொருவராகிய உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியர் தாங்கண்ட தொல்காப்பி யப்பொருளதிகாரவுரையுள் இப்பெரியாரலருளிச்செய்யுப்பட்ட பா ரதத்திலுள்ள செய்யுட்களை மேற்கோளாகவெடுத்தாண்டிருக்கின் றனர். ஆசிரியரெடுத்தாளுமிடங்களிலெல்லாம் இச்செய்யுட்பெருந் தேவனாரியற்றியது என மனப்பூர்வமான அன்புடன் பெருமைபாரா ட்டியெழுதிச்செல்கின்றனர். நச்சினார்க்கினியர் தேவனாரிடத்துமவ ரருளிய நூலிடத்தும் பாராட்டிய அன்பும் பெருமையும் பொருளதி காரம் பயின்றாரெல்லார்க்கும் புலனாம். பொருளதிகாரவுரையில் நச்

சினார்க்கினியரெடுத்தாண்ட செய்யு ளனந்தமுள. அவற்றளொன் றையீண்டுவரைகின்றேன்.

> "குன்று துகளாக்குங் கூர்ங்கணையான் வேலெறிந்
> தன்று திருநெடுமா லாடினான்—னென்றும்
> பனிச்சென்று மூளாத பல்கதிரோன் சேயோ
> டினிச்சென் றமர்பொரா யென்று."

எனவரும். பிறாண்டு மிவ்வாறேகாண்க.

7, இவர்கூறிய வேறுபாடல்கள் தொகைநூல் (புறநானூறு, அகநானூறு, ஐங்குறுநூறு, நற்றிணை, குறுந்தொகை) களிற் கடவுள்வாழ்த்துச் செய்யுளைந்தும், இஃதன்றி நற்றிணையிலொன்றும், அகநானூற்றிலொன்றும், திருவள்ளுவமாலையிலொன்றுமாகியவெட்டுமாம். அவற்றுள் எமக்குக்கிடைத்த மூன்றுசெய்யுட்களையீண்டுக் குறிக்கின்றேன்.

### அகநானூறு

> "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
> தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்
> மார்பி னஃதே மையி னுண்ஞா
> ணுதல திமையா நாட்ட மிகலட்டுக்
> கையது கணிச்சியொடு மழுவே மூவாய்
> வேலு முண்டத் தோலா தோற்கே
> யூர்ந்த தேறே சேர்ந்தோ ளுமையே
> செவ்வா னன்ன மேனி யவ்வா
> னிலங்கு பிறையன்ன விலங்குவால் வையெயிற்
> றெரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு புரிசடை
> முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி
> மூவா வமரரு முனிவரும் பிறரும்
> யாவரு மறியாத் தொன்முறை மரபின்
> வரிகிளர் வயமா னுரிவை தைஇய
> யாழ்கெழு மணிமிடற் றந்தணன்
> றாவி றாணிழற் றவிர்ந்தன் றாலுலகே."

நற்றிணை

"மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பௌவ முடுக்கை யாக
விசும்புமெய் யாகத் திசைகை யாக
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
வியன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்பது
தீதற விளங்கிய திகிரி யோனே."

குறுந்தொகை

"தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவளத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கு முடுக்கைக் குன்றி
னெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
வேம வைக லெய்தின்றா லுலகே."

முருகதாசன்.

---

௨

சிவமயம்.

## தமிழ்ப்புலவர்பெருமக்களுக்கொரு விண்ணப்பம்.

பாராவாரம் பல்வளம் பழுநிய பாண்டிவளநாட்டைத் தலைமை யாகவுடைய நந்தமிழ்நாட்டின்கண் புலவர்பெருமக்கள் பன்னூற்றுயிரவர் அவதரித்திருந்தனரென்பது மலையிலக்காம். அதுவன்றியும், அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை முதலிய நூல்களில் அவர்கள் பெயர்கள் வரையப்பட்டுள்ளன; ஆண்டுக்காண்க. அக்காலத்திருந்த புலவர்பெருமக்கள் பாடிய முத்தகச் செய்யுட்களையெல்லாம் பண்டைக்காலத்திருந்தவர்கள் ஒருசேரத்திரட்டி மேற்கூறிய நூல்களாகத் தொகுத்திருக்கின்றனர். இது யாவரு மறிந்ததே. நிற்க, அவர்கள்காலத்திற்குப் பிற்றைஞான்று அவதரித்த ஸ்ரீ கம்பநாட்டாழ்வார், பொய்யாமொழிப்புலவர், காளமேகப்புலவர்,

புகழேந்திப்புலவர், ஒட்டக்கூத்தப்புலவர், இரட்டைப்புலவர் முதலிய புலவர்பெருமக்களியற்றிய முத்தகச்செய்யுட்கள் எத்துணையோவுள்ளன. அவைகளிற்கிடைத்த சில செய்யுட்களைத் திரட்டித் தனிப்பாடற்றிரட்டென்று தலைப்பெயர் புனைந்து வெளியிட்டுள்ளார்கள். இத் தனிப்பாடற்றிரட்டி லடங்காத பலசெய்யுட்களைத் தனிச் செய்யுட்சிந்தாமணி யென்னும் பெயர் புனைந்து சின்னாளைக்கு முன் வெளிவந்த நூலின்கட் காணலாம். அன்னோர்கள் இயற்றிய அரும்பெருங்கவிகள் இதுகாறும் அச்சிற்கு வாராதன எத்துணையோவுள்ளன; அவைகள் அங்ஙனம் வாராமைக்குக் காரணம் யாதெனின், பண்டரசெய்திய தண்டமிழரசர்கள் புலவர்களுக்கு முற்றாட்டாக நிலமுதலியன விட்டும், பரிசுகொடுத்தும், இன்னுரை கூறியும், அவர்கள் கூறிய திருப்பாடல்களைக் கேட்டாநந்தமுற்றும், அவர்கள் மேன்மேலு மத்தொழிலைச் செய்வதற்கு ஊக்கமளித்ததோடு அவர்கள் அவ்வவ்வமையங்களிற்கூறிய முத்தகச் செய்யுட்களைச் சேமித்துவைத்திருந்து பின்பு நம்மனோர்க்குப் பயன்படுமாறு ஒரு நூலாகத் தொகுத்து வெளியிட்டிருக்கின்றார்கள்; அக்குரிசில்கள் அங்ஙனஞ் செய்திருந்ததனால், அச்செய்யுட்கள் தற்காலஞ் சரித்திரவாராய்ச்சிக்கு மிகப்பயன்பட்டுத் தமிழின் பழமையையும் அப்புலவர்களின் பெருமையையும் நன்கு விளக்குகின்றன. அன்றேல், தமிழ் ஒரு தனித் தலைமொழி என்பதை யெங்ஙன முணரலாகும். பிற்றைஞான்று வித்துவசிரோமணிகளை யாதரித்துப் பொருள் முதலியன கொடுத்து அவைகளைக்கேட்டு மகிழ்வாரின்மையால் அக்காலத்திருந்த செந்தமிழ்ப்புலவர்கள் சந்தர்ப்பம்பற்றிச் சுவைபெறப்பாடிய அரும் பெரும் பாடல்கள் மறந்தனவொழிய விருந்தனவற்றுள் இன்னும் வெளிவாராதன பலவும் நாளடைவிலிறந்து வருகின்றன. தற்காலத்திலுள்ள வித்துவசிரோமணிகளும் ஒவ்வொரு காலங்களிற் சொல்லிய சுவையமைந்த முத்தகச் செய்யுட்களை யெழுதிவைப்பாரின்மையால் இவையுமிறந்து பட்டுவருகின்றன. பின்போர் அமையத்தில் அக்கவிகளைக் கூறவேண்டுமானாற் றட்டுண்டு தடுமாறி வேறு சில சொற்களை யிடையிடையே பெய்து பாட்டைச் சிதைத்து விடுகின்றார்கள். இஃது ஒவ்வொருவரது அநுபவத்திலுமுள்ளது; யான் கூறவேண்டுவதின்று. 'அங்ஙனமிறந்து படாது என்று நின்று நிலவுமாறு முத்

தமிழ்க் கல்வியு முறையரசுரிமையு மித்தலத்தெய்திய விறைவராகிய ஸ்ரீமாந்-பாண்டித்துரைச்சாமித் தேவரவர்கள் தண்டமிழ் மங்கை தனக்கிருப்பிடமாகிய மாடக்கூடன் மாநகர்க்கண்ணே நிறீய தமிழ்ச் சங்கத்தில் நந்தமிழபிவிருத்தி கருதி வெளிவரும் செந்தமிழ்ப் பத்திரிகையில், முத்தகச் செய்யுட்டிரட்டெனத் தலையங்கமிட்டுத் தமிழறிஞர்கள் ஒவ்வொருவரும் தமக்குத் தெரிந்த அவ்வருமையான செய்யுட்களை வெளியிட்டு வருவாராயின், அது பிற்காலத்துச் செய்யத்தகும் புலவர்சரிதங்களுக்கு மிகவும் பயன்படுவதுடன் அவ்வப் புலவர் புகழையும் நிலைநிறுத்துமென்பதி லொருசிறிது மையமின்றாம். ஆகையால் தமிழபிவிருத்தியைக் கருதிய ஒவ்வொருவரும் தம் முன்னோராலாயினுந், தமதாசிரியராலாயினும், தம்மாலாயினுஞ்செய்துள்ள சொன்னயம் பொருணயம்பொருந்திச் சுவை பயக்கும் முத்தகச் செய்யுட்கள் பழயனவா யிருப்பினும் புதியனவா யிருப்பினு மிதுகாறும் அச்சில் வெளிவாரா திருப்பனவற்றை யவற்றிற்குரிய சந்தர்ப்பங்களையும் சரித்திரங்களையுங்காட்டி வெளியிடுமாறு பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்கிறேன்.

ஒரு தமிழ் நேயன்.

உ

கணபதிதுணை.

# தென்றிசைத் தமிழர்

இந்தியா இலங்கை என்னும் இக் கீழைத்தேசங்களுக்குப் பிராஞ்சியர் பறங்கியர் போர்த்துக்கேசர் என்னும் ஐரோப்பிய இராசாங்கங்கள் வரும்போதே கிறிஸ்துமத ஆசாரியர்களாகிய பாதிரிமாரும் வந்துகொண்டிருந்தார்கள். பூமியுண்டாகியும் அதிலுள்ள மனிதர் முதலிய யோனிபேதங்களுண்டாகியும் ஆக ஆறுயிரம் வருஷமேயென்றும், இதற்குமுன் ௪௨௲௦-ம் வருஷமளவிலே பிரளயமொன்று உண்டாகி எல்லாமனிதரையும் அழித்துவிட, அதற்குத் தப்பிய நோவாவுடைய பிள்ளைகள் மூவரிலிருந்தே பின் பூமி குடியேறப் பெற்ற

தென்றும், அவர்களுடைய சமயநூல் சொல்லுகிறபடியால், அவர்கள் இந்தியா இலங்கையென்னு மித் தேசங்களிலே வெகுகாலத்துக்கு முன்னே மனிதரில்லையென்னும் கருத்துடையராயும், இப்பொழுது இருப்பவர்கள் அந்தப் பிரளயத்தில் பேழைதங்கிய அராரத்து மலைப்பிர தேசங்களிலிருந்து வந்தவர்களாயிருக்க வேண்டுமென்று கொண்ட கருத்துடையராயும் இருந்தார்கள். அதனாலே, அப் பாதிரிமாரும் அவரை யுள்ளிட்ட கிறிஸ்தவர்களும் தாங்களெழுதிய இந்திய சரித்திர புத்தகங்களிலே இந்தியாவிற் குடியேறி மிகச் சொற்ப காலமாகுமென்று எழுதிவைத்தார்கள். அவர்களைப் பின்பற்றுகின்ற பின்னுள்ள சரித்திர கர்த்தாக்களும் அப்படியே கூறுவாராயினர்.

இந்தியர்களிடத்திலே ஒன்றற்கும் காலக்கணக்கு இல்லாமையால் அவர்களுடைய விஷயம் எதற்கும் காலநிச்சயம் பண்ணுவது மிக வருமையென்பது உலகமெங்கும் பரந்த ஒரு பெருங் கதையாய் விட்டது. காலக்கணக்கு இல்லையென்பது மெய்யே. காலக்கணக்கு எடுக்க அவர்களுடைய கதைகள், French Revolution, Discovery of America, Decline of the Roman Empire முதலானவைபோல நேற்று முந்தைநாட் கதைகளா! எத்தனை ஆயிரம் எத்தனை லக்ஷம் வருஷஞ்சென்ற கதைகள்! எத்தனை யுகங்கள் சென்ற கதைகள்! இவைகளுக்கு எப்படிக் கணக்குவைத்தல் கூடும்! அக் கணக்கு எழுதப்பட்ட ஏடுகள் எத்தனை வருஷம் அழியாமலிருக்கும். இது பற்றியே "ஆஸீத் ராஜா நலோ நாம" என்பது முதலாகப் "பூர்வத்திலொருவன் இருந்தான்" என்று சொல்லுவார்கள். இனிப்பிற்காலத்து அரசர்கள் பலர், ஏடுகள் பழுதுபட்டுவிடுமென்றும் பிற்காலத்தார் ஒருபோது பிழைப்படுத்தி விடுவார்களென்றும், சத்துருக்கள் மாற்றிவிடுவார்களென்றுங் கருதிப் பயந்து, சில விஷயங்களுடைய காலக்கணக்கை கல்லிலும் செப்பேடுகளிலும் தீட்டிவைத்தார்கள். கல்லும் செம்பும் எவ்வளவு காலத்துக்கிருக்கும்! பூர்வத்திலிருந்தவர்களும் இப்படியே கல்லிலும் செம்பிலும் தீட்டியிருப்பார்கள்; அவைகளெல்லாம் காலஞ்செல்லச் செல்ல அழிந்துபோயிருக்கலாம். அன்றியும் நம்முடைய தேசம் எத்தனையரசர் கையிற்பட்டு வந்தது. அவர்கள் இச்சாசனங்களை இருக்கவிடுவார்களா. இந்தி

யாவிலும் இலங்கையிலும் இவர்கள் எத்தனை ஆலயங்களை இடித்திருக்கிறார்கள். நம்மவர் பெரும்பாலும் கற்களிலெழுதிச் சுவர்களில் வைத்துக் கட்டுகிறவர்கள். அவ்வரசர்கள் இக்கற்களை அழித்துவிட்டுத் தம்முடைய கோட்டை முதலானவற்றைக் கட்டினார்கள். அவ்வரசர்களெல்லாம் இங்கிலீஷ் அரசர்போல நீதியுடையவர்களாயிருந்தவர்களா! அநபாயனென்னும் பெயர்பெற்று எத்தனை சோழர், விக்கிரமனென்னும் பெயரோடு எத்தனை பாண்டியர் இருந்திருப்பார்கள். தமக்குப்பின்னும் அநபாயர்கள் விக்கிரமர்கள் வருவார்களென்று நிச்சயமாய் எண்ணியிருந்தாலன்றோ அநபாயன் I. அநபாயன் II. என்று எழுதிவைப்பார்கள். இவைகளினாலேதான் காலக்கணக்குக்கள் தலைதடுமாறுகின்றன. கிறிஸ்து என்பவர் பிறந்து சொற்பகாலமாதற்கு முன்னமேயே அந்தத்தேசத்தில் அவர் பிறந்த நாள் மாசங்களைப் பற்றி நூற்றுமுப்பத்திரண்டு வகையான அபிப்பிராயங்கள் உளவாயினவென்று சொல்லப்படுமேயானால், மற்றை இந்தியர்களுடைய கதைகளைப்பற்றிப் பேசுவதென். இந்தியர்களோ எல்லாவற்றிற்கும் காலக்கணக்கு இருக்கவேண்டுமென்பதை அறியாதவர்களல்லர். அறிந்தமையினாலன்றோ நூல்களுக்கெல்லாஞ் சிறப்புப்பாயிரத்தில் காலமுமொன்றாகச் சொல்லப்படவேண்டுமென்றனர். ஆதலால் மற்றைத் தேசத்தாருடைய காலக்கணக்கெல்லாம் உண்மையானவையென்று ஒருபோதும் எண்ணக்கூடாது. மகாவம்சமென்னும் சிங்களச் சரித்திரத்தை மெய்யென்று அங்கீகரிப்போர் உலகத்தில் மிகப் பலரிருக்கிறார்கள். அதில் முன்னுள்ள சில சரித்திரங்கள் நடந்து எவ்வளவு காலத்துக்குப்பின் அந்தநூல் எழுதப்பட்டது. தொளாயிரம் வருஷத்துக்கு மேற்பட்ட கதைகளும் அதிலிருக்கின்றனவே. அதுவரையும் அக்கதைகள் கன்னபரம்பரையாகத்தானே வந்தன. இந்த மகாவம்சமே இலங்கையின் பழைய கதைகட்கெல்லாம் இப்பொழுது ஆதாரமாயிருப்பது.

கிரேக்கதேசத்திலிருந்து மகதனீசு என்றொருவர் இதற்குமுன் ௨௨௨௨-ம் வருஷத்திலும், சீனதேசத்திலிருந்து Fa Hian, Howen Tsang என்றிருவர் முறையே இதற்குமுன் ௧௫௧௧, ௧௨௮௦-ம் வருஷமளவிலும் இந்தியாவுக்கு வந்தார்களென்றும் அவர்களெழுதிய கதைகள் சிலவற்றிலிருந்து இந்தியாவிற் பிற்காலத்தில் நிகழ்ந்த சில

சங்கதிகள் அறியத்தக்கனவாயிருக்கின்றன என்றும், சொல்லுகி றார்கள். மகதனீசு என்பவர் வருதற்கு முன்னிகழ்ந்த கதைகளுள் ஒன்றற்கேனும் காலம் நிச்சயமாகச் சொல்லமுடியாது. எல்லாம் உத்தேசந்தான். இவருக்கு முந்திய காலங்களெல்லாம் நம்முடைய சரித்திர கர்த்தாக்களுக்குப் பனிக்குமேலே சந்திரன் என்பதுபோ லிருக்கும்.

இந்திய சரித்திரமானது Elphinston, Mills, Wilson, Hunter, Dutt முதலிய பலரால் எழுதப்பட்டிருக்கின்றது. சரித்திர கர்த்தாக்களும் அவர்கள் ஒவ்வொருவரும் செய்யும் உத்தேசங்க ளும் அதிகப்பட அதிகப்பட நமக்குச் சந்தேகங்களுமதிகமாய்விட் டன. ஆரியரென்றொரு சாதியார் வடஇந்தியாவில் இதற்குமுன் ௪000 வருஷமளவில் வந்து குடியேறினரென்பது அவர்களுட் சில ருடைய உத்தேசங்களுள் ஒன்று. இவர்கள், இந்தியர்களுடைய நூல்களுள்ளே மிகப் பழையது இருக்குவேத சங்கிதையென்றும், அதைக்கொண்டு இந்தியர்களுடைய பழைய சீர்திருத்தங்களையும் நிலையையும் அறிகிறோமென்றும், காலநிச்சயம் பண்ணுகிறோமென் றும் சொல்லுகிறார்கள்*. இவையனைத்தும் முழுத் தவறென்பதை யும் இத்தவறு தென்னிந்திய சரித்திரத்தையும் தமிழ் நூல்களையும் அவர்கள் முதலில் சரியாக ஆராயாமையால் உண்டாயிற்றென்பதை யும் முன்னே காட்டுவாம்.

இந்தியர்களுடைய நூல்களுள்ளே வேதம் மிக முந்தியதென்ப தற்கு எள்ளளவும் சந்தேகமில்லை. வேதத்திற் சொல்லப்பட்ட சில நட்சத்திரங்களுடைய நிலைகளைக்கொண்டு சரித்திர கர்த்தாக்களெல் லாரும் வேதத்துக்குச் சாதகம் குறித்துவிட்டார்கள். இவர்கள் வேதம் நித்தியமென்று சொல்லப்பட்டிருப்பதை அறியார்கள் போ லும். இவ் வேதங்களை வகுத்தவர் வியாசர். வியாசருக்கு முன்னி ருந்தவராகிய சைமினிமுனிவர் வேதம் நித்தியமென்று சொல்லியி ருக்கின்றாரே. பாரதயுத்தம் நடந்து ௫000 வருடங்கட்கு மேலாயிற்

* வேதம் நான்கும் இறைவன் திருமுகங்களிலிருந்து ஏக காலத்திற் றோன்றியிருப்ப, இருக்குவேதமே பழையது என்றும், அதர்வம் மிகப்பிற் காலத்தது என்றும் சிலர் சொல்லிக்கொள்வர். அது முழுத் தவறு.

றென்பதும், அக்காலத்தில் வியாசமுனிவர் இருந்தவரென்பதும், அவரே வேதங்களை நான்காக வகுத்தாரென்பதும் பிரசித்தம். முன்னொரு காலத்தில் வேதங்கள் தலைதடுமாறியபோது விஷ்ணுமூர்த்தியே வியாசராகப் பிறந்து வேதங்களை நான்காக வகுத்து நான்கு முனிவர்களுக்கு உபதேசித்துவிட்டுப், பின் புராணங்களைச் சூதருக்குச் சொல்லிப், பின் மகாபாரதத்தை ஐந்தாம் வேதமாகச் செய்தனரென்றும் புராணங்களும் இதிகாசங்களும் பேசும். வியாசர் வேதத்தை வகுத்தவரன்றி உண்டாக்கினவரல்லர்; உண்டாக்கினவர் ஈசுரன். வகுத்த காலம் ௫000 வருஷங்களுக்கு முன் பின்னுகவேயிருக்கும். அதனால் வேதம் முன்னே இல்லையென்பது கருத்தன்று. அவர் வகுத்த காலத்திலுள்ள நட்சத்திரங்களுடைய நிலையைக்கொண்டு வேதம் ௫000 வருஷஅளவில் உண்டாயினவென்பது கூடாது. மனு வேதத்திலே சொல்லப்படுகிறார்; வேதம் மனுவிலே சொல்லப்படுகின்றது. புராணங்கள் வேதங்களிலே சொல்லப்படுகின்றன; வேதங்கள் புராணங்களிலே சொல்லப்படுகின்றன. இம்மாறுபாடுகளுக்கெல்லாம் நாம் மேலே சொன்ன சமாதானமே சமாதானம். வேறு சமாதானமில்லை.

அச் சரித்திரகாரருட் சிலர் வேதத்துக்கு உரியவர்களாகிய ஆரியரென்று ஒருசாதியார்கள் வடக்கேயிருந்து வந்து இந்தியாவைப் பிடித்தார்களென்றும், சரசுவதி யமுனை கங்கை என்னும் யாற்றங்கரைத் தேசங்களிலிருந்து யாகங்கள் பலவற்றைச் செய்தார்களென்றும், அவர்கள் வருதற்கு முன்னும் யாரோ சில பூர்வக்குடிகள் இங்கே யிருந்தார்களென்றும், அவர்கள் இவர்களைக் கலைத்துக்கொண்டு வந்து விந்தியபர்வதத்துக்குத் தெற்கே விட்டார்களென்றும், கனவுகண்ட தோற்றம்போலச் சொல்லுகிறார்கள். ஆரியரென்பது வேதத்துக்கு அருகராகிய மூன்றுவருணத்தார்தாம் என்பதும் முன்னிருந்த பூர்வக்குடிகளே சூத்திரரென்பதும் சிலர் கருத்து. இதையறிந்து தற்காலத்துச் சூத்திரர் சிலர் தாங்கள் சூத்திரரல்லரென்றும் செட்டிகளென்றும் சொல்லவும், வேறு சிலர் தாங்கள் பிராமணரினும் உயர்ந்தவர்களென்று சொல்லவும் ஏதுவாகின்றது. இருக்கு முதலிய எல்லா வேதங்களிலும் பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரரென்னும் நான்கு வருணங்களும் பேசப்படுதலி

ளாலும்*, பின்னை நாம் காட்டும் வேறு சில ஏதுக்களினாலும், அவர்கள் கொள்கை சிறிதும் பொருந்தாது. இச் சரித்திர கர்த்தாக்கள் சரித்திரங்களைச் செய்ததிலும் செய்யாமலிருந்தால் அது பெரும் நன்மையாயிருக்கும். பிரமாணமிருந்தால் அதைக்கொண்டு ஒன்றைத் தாபிப்பதேயன்றி, இது என்னுடைய அபிப்பிராயம் அது அவருடைய அபிப்பிராயமென்று சொல்வதெல்லாம் வீண். எல்லாவற்றையும் ஐயத்துக் கிடமாக்கிவிடுவது சரித்திரமெழுதுவோர்க்கு முறையன்று. நம்முடைய சரித்திரகர்த்தாக்களாலே நம்பத்தக்கவர்களென்று கைக்கொள்ளப்பட்டவர்களும் ௧௫00-வருஷங்களுக்கு முன் இங்கே வந்தவர்களுமாகிய மகதனீசு முதலானவர்களுக்கே இந்தியர்களுடைய பூர்வ சரித்திரங்கள் பனைக்குமேலே சந்திரன் என்றாற்போலவும் மிகத் தூரத்திலே புகைபோலவும் தோன்றுமேயானால், இக்காலத்தார்க்கு எப்படி நிச்சயங்களாகும். இவர்கள் சொல்லும் ௫000-வருஷமல்ல அதற்கு எத்தனையோ ஐயாயிரம் வருஷங்களுக்கு முன்னே இந்தியாவின் எப்பகுதிகளும் குடியேறப்பெற்றிருந்தனவென்பதும், எல்லாரும் ஒருவர்தாமென்பதும், எல்லாருங்கலந்து இருந்தனரென்பதும் நிச்சயமாகும்.

தமிழ்ப்பாஷை இந்தியாவில் தெற்கே ஒரு மூலைக்குள் வழங்கி வருதலினாலே அதனை ஒருவரும் பொருட்படுத்தவில்லை. அதன் பழமையைச் சிறிது சொல்லுகின்றோம்.

சேர சோழ பாண்டியரென்னும் மூவரும் தமிழ்நாட்டை ஆண்டவர்கள். அவருள்ளும் பாண்டியரே முச்சங்கங்கள் வைத்துத் தமிழை வளர்த்துவந்தவர்கள். வியாசமுனிவர் செய்த மகாபாரதம் இந்தியாவில் எல்லாராலும் அறியப்பட்டது. கைக்கொள்ளப்பட்டது. அதில், அருச்சுனன் தீர்த்தயாத்திரை செய்தபோது பாண்டிநாட்டிலே மணலிபுரத்திலிருந்த பாண்டியன் மகளை விவாகஞ்செய்த கதை சொல்லப்படுகின்றது. (ஆதிப-௧௮௯-ம் அத்தி.) பாண்டவர் காலத்திலே பாண்டியனும் இருந்தானென்னும் இக்கதையை, சேரலாதனெ

---

* இருக்குவேதம் ௧௦. ௯௦. ௧௨.
சுக்கில யசுர்வேதம் ௧௮. ௪௮. ௩௦. ௫.
அதர்வவேதம் ௧௯. ௬. ௬.

ன்னும் சேரன் பாண்டவருக்கு விருந்திட்டான் என்னும் புறநானூற்றுக் கதையும், சிலப்பதிகாரத்து "ஓரைவரீரைம்பதின்மருடன்றெழுந்த—போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த-சேரன் பொறையன் மலையன் றிறம்பாடி" என்னும் செய்யுளும் ஸ்திரப்படுத்துகின்றன.

வியாசபாரதம்போல மற்றொரு இதிகாசமாகிய வான்மீகி இராமாயணமும் பழையநூலென்று எல்லாராலும் ஏற்றுக் கைக்கொள்ளப்பட்டது. அதில் கிஷ்கிந்தாகாண்டம் ௪௧-ம் சர்க்கத்தில் "𑌤𑌥𑍈𑌵𑌾𑌨𑍍𑌧𑍍𑌰𑌾𑌂𑌶𑍍𑌚𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑌾𑌂𑌶𑍍𑌚𑌚𑍋𑌳𑌾𑌨𑍍𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯𑌾𑌨𑍍𑌸𑌕𑍇𑌰𑌲𑌾𑌨𑍍" என்னும் ௧௨-ம் சுலோகத்தாலும் "𑌯𑍁𑌕𑍍𑌤𑌂𑌕𑌵𑌾𑌟𑌂𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯𑌾𑌨𑌾𑌂" என்னும் ௧௯-ம் சுலோகத்தாலும் தென்றேசத்திலே சோழன் பாண்டியன் சேரன் என மூன்று அரசர் இருந்தாரென்றும் பாண்டியன் கபாடபுரத்தி லிருந்தானென்றும் சொல்லப்படுகின்றன. இராமர் காலத்திலோ அன்றி வான்மீகி முனிவர் காலத்திலோ பாண்டியனொருவன் கபாடபுரத்தி லிருந்தானென்பது நிச்சயம். இந்தக் கபாடபுரமே முதற்சங்க மிருந்த இடம்.

மகததேசத்தரசனாகிய அசோகன் ௨௧௯௦-வருஷங்களுக்குமுன் எழுதுவித்த சிலாசாசனங்களில் II வதிலே சோழனுடைய பெயரும் பாண்டியனுடைய பெயரும் வருகின்றன. எத்தனையோ ஆயிரம் வருஷங்களுக்கு முன்றொட்டு இருந்த பாண்டியர்களை ௨௧௯௦-வருஷங்களுக்கு முன்னிருந்த அசோகனுடைய கதைகொண்டு ௨௧௯௦-வருடங்களுக்கு முன் இருந்தார்களென்று நாம் சொல்வதினால் யாதொரு சிறப்புமில்லை. ௨௨௨௫-வருஷங்களுக்கு முன் இங்கேவந்த மகதனீசு என்பவர் நந் தமிழ்நாட்டரசரைப்பற்றி எழுதியிருக்கிறாரென்று சொல்லுவதும் மிகையாகும்.

௨௫௦௦-வருடங்களுக்கு முன் இயற்றப்பட்ட சிலப்பதிகாரத்தில் மதுரையில் நடந்த அநேக பழைய கதைகள் குறிக்கப்படுகின்றன. உக்கிரபாண்டியர் கடல்சுவற வேல்விட்டது இந்திரனிட்ட ஆரம்பூண்டது முதலாகத் திருவிளையாடற் புராணத்திற் சொல்லப்பட்ட பழங்கதைகளை யெல்லாம் இச் சைனநூலாகிய 'சிலப்பதிகா

ரம் அங்கீகரித்தலினால், அக் கதைகளெல்லாம் எவ்வளவு காலத்துக்கு முன் நடந்திருக்கவேண்டும். இன்னும் இச் சிலப்பதிகாரம் முசுகுந்தச் சக்கிரவர்த்தியுடைய கதையையும் குறிப்பிக்கின்றது.

சிலப்பதிகாரத்தோடொப்பப் பழையதாக மதிக்கப்படும் நூல் மணிமேகலை. இம் மணிமேகலையின் காலத்துக்கு முன்னே மனுநீதி கண்டசோழர் என்றொருவர் தேர்க்காலில் தம்முடைய மகனை வீழ்த்திக் கொன்றார் என்று இந்நூல் கூறுகின்றது.

ஆயிரம் வருஷங்களுக்கு முன் இயற்றப்பட்ட பெரியபுராணத்தில் திருமூலநாயனார் என்னும் சிவயோகியார் தென்றேயத்திலே ௩000-வருஷம் திருவாவடுதுறையிலே சிவயோகத்திலிருந்தாரென்று சொல்லப்படுகின்றது. அவர்செய்த திருமந்திரம் என்னும் நூல் இன்றும் இருக்கின்றது. ஆதலால் ௪000-வருஷங்களுக்கு முன்னேறவே தமிழ்நாடும் தமிழும் சிறப்புற்றிருந்தனவென்பது திண்ணம்.

தென் றேசத்திலே முசுகுந்தன் மனுநீதிகண்ட சோழன் என்னும் இவர்கள் மாத்திர மன்றி இன்னும் துண்டீரன் தண்டகன் இரணியவன்மன் மகாபலி முதலாக வேறுபல வரசர்களும் முற்காலத்திலிருந்தார்களென்று பழைய காவியங்கள் கூறுகின்றன. இவர்களுடைய காலங்கள் இவையென்பது தெரியமாட்டாது. குமரியாற்றைக் கடல்கொண்டது எப்பொழுதென்பது தெரியமாட்டாது. இச் சரித்திரங்கள் மகதனீசு பிளினி ஸ்திறுபோ தொலோமி முதலிய பழையவர்களுக்குந் தெரியவரா; ஹன்றர்தத் பந்தர்க்கார் முதலிய புதியவர்களுக்கும் தெரியவரா. இப்பெயர்களெல்லாம் தமிழில் உள்ளவைகள்.

குறிஞ்சி முதலிய நிலங்களும் பாலை முதலிய யாழ்களுந் தமிழுக்கே சிறப்பாயுரியன. பாலையாழ்நரம்பு கூறுமிடத்து, பழைய இசைநூல்கள் "எதிரும்இராசி வலமிடமாக-எதிர" "ஏத்துமிடப மலவனுடன்" எனப் பன்னிரண்டு இராசிகளையும் நிறுத்தச் சொன்னதினால், மேடம் முதலிய பெயர்களும் பன்னிரண்டாக வகுத்த வகுப்பும் தமிழராலேயே ஆயினவென்க. கிரேக்கருக்கும் இந்தியருக்குமுள்ள சம்பந்தம் மகதனீசு என்பவருக்குப் பின்னேயன்றி

அதற்குமுன்னில்லை. இதனால் இப்பெயர்கள் கிரேக்கரால் வந்தனவென்று சிலர் சொல்வது தவறு. இந்தியராலேயே கிரேக்கருக்குப் போயினவென்பதே துணிவு.

இனி தமிழில் அழியா தெஞ்சியிருக்கும் நூல்களுள்ளே தொல்காப்பியமென்னும் இலக்கணமே மிகப் பழையது. இத்தொல்காப்பியம் ஆதியூழியி னந்தத்தே செய்யப்பட்டதென்று உரையாசிரியர் பலவிடத்தும் சொல்லுவர். உரையாசிரியர்கள் இத் தொல்காப்பியத்திற் சொல்லப்பட்ட இலக்கணங்களுக்கு இலக்கியம் தம்முடைய காலத்தில் இல்லையென்பது போதர "இக்காலத்து வீழ்ந்தன" என்கிறார்கள் இங்ஙனமாயின் உரையாசிரியர் காலத்துக்கு எவ்வளவு காலத்துக்கு முன் இந்நூல் செய்யப்பட்டிருத்தல்வேண்டும்! எட்டிய அளவில் தமிழைப்பற்றி நாம் ஏதும் அறியவேண்டுமேயானால், தொல்காப்பியத்தைக்கொண்டே அறிதல்வேண்டும். இதற்குமேலே வேறு நூலில்லை. அகத்தியம் இதற்கு முந்தியதாயினும் அது இறந்துபோயிற்று. கடைச் சங்கமழிந்த பின் ௨000 வருஷமாயின. இதற்குமுன் கடைச் சங்கமிருந்தது ௧௯௫0 வருஷம், இடைச் சங்கமிருந்தது ௩எ00௵ ஆகவே இடைச்சங்கம் தொடங்கி எ௯00 வருஷமாயின. இந்தக் காலக் கணக்கு இறையனாரகப் பொருளுரையானும் சிலப்பதிகாரத்தில் ஸ்ரீமத்-வே. சாமிநாதஐயரவர்கள் எடுத்துக் காட்டிய பழைய ஒரு செய்யுளானும் அறிக. இடைச் சங்கத்துக்கும் கடைச் சங்கத்துக்கும் இடையே சிறிதுகாலஞ் சென்றிருக்கும். கந்நாதபதிலகர், சதுர்யுகத்துக்கு ௧௨000 வருஷமென்று மனு சொன்னது மனுஷமானமென்று எழுதுகிறார். அது மெய்யாயின், ஆதியூழியினந்தத்திலே தொல்காப்பியம் செய்யப்பட்டதென்பதற்கு வேறு ஆக்ஷேபமேயில்லை. இக் காலக்கணக்கு, கேட்பவர் சிலருக்கு வியப்பை விளைக்கும். இவ்வியப்பு பூமியுண்டாகி ௬000, எ000 வருஷமென்று சொல்லுபவர்களுக்கேயாம்; எ௫00,000,000 வருஷங்களுக்கு மேலாயின என்று சொல்லும் தற்கால ஐரோப்பிய சாஸ்திரிகளுக்கு இது வியப்பன்று. இடைச் சங்கத்துக்கு முன்னே முதற்சங்கமிருந்தது ௪௪௪0௵. ஆகவே இவ்வளவு காலமெல்லாம் தமிழ் நடந்திருக்கின்றது. முதற்சங்கமிருந்த இடம் கபர்டபுரமாம்.

அதுவே வான்மீகி முனிவராற் கிஷ்கிந்தா காண்டத்திற் சொல்லப் பட்டது.

இவ்வளவு பழைய தொல்காப்பியத்திலே, வேதங்களிற்போல அந்தணர் அரசர் வணிகர் சூத்திரரென்னும் நான்கு வருணங்களும் சொல்லப்படுகின்றன. வடக்கிலும் தெற்கிலுமுள்ள பழைய இரண்டு நூல்களிலுஞ் சொல்லப்படுதலினாலே, ஆரியரென்பது முதன் மூன்று வருணத்தாருமே என்பதும், பூர்வத்திலிருந்த குடிகள் சூத்திரரென்பதும், ஆரியர் இதற்குமுன் ௩,௯00 வருஷமளவிலே மேற்கு "கணவாயாலும்" கிழக்குக் "கணவாயாலும்" வட இந்தியாவுக்கு வந்து அங்கிருந்த பூர்வக் குடிகளை ஓட்டிக் கலைத்தார்களென்பதும் பொருந்தாதனவாம்.

சோதிடத்தைப்பற்றிச் சொல்லும் பதினெட்டுச் சித்தாந்தங்களுளொன்றாகிய கர்க்கி சித்தாந்தத்திலே பாரதயுத்தம் நடந்தது, துவாபரயுக அந்தத்திலும் கலியுக ஆரம்பத்திலுமென்று சொல்லப் படுமேயானால்*, பாரதயுத்தம் நடந்தபின் ஏறக்குறைய ருOகஉ வருஷமாயினவே. இதனாலும் ஆரியரெனப்படும் பிரம க்ஷத்திரிய வைசியரென்பவர் இந்தியாவுக்கு வந்து ௩௯00 வருஷமென்று இவர்கள் சொல்லுவது எங்ஙனம் பொருந்தும்.

நாம் மேலே காட்டிய பிரமாணங்களெல்லாம் உOOO வருஷங்களுக்கு முந்தியவைகளாம். ஒருதேசத்தின் பழைய நிலையை அறிதற்கு அந்தத் தேசத்தார் செய்த பழைய நூல்கள் கருவியாமேயன்றி, அந்நியதேசத்தார் செய்த நவீன நூல்கள் கருவியாகுமா? ஆகமாட்டா. ருOOO வருஷங்களுக்கு முன் நடந்த சங்கதிகள் உOOO-உருOO வருஷங்களுக்கு முன்னிருந்தவர்களுக்கு நன்றாகத்தெரியுமா, ருO, கOO-வருஷங்களுக்கு முன்னிருந்தவர்களுக்கு நன்றாகத் தெரியுமா?

இனி வேதங்களை ஆரியர்களே கொண்டுவந்தார்களெனின்,—அப்படிச் சொல்லுபவர்களே வேதம் உண்டாகி சOOO-வருஷமென்றும்

---

* சிவரகசியமென்னும் பரமேதிகாசமும் இப்படியே சொல்லுகின்றது. Colebrook என்னும் ஐரோப்பியபண்டிதரும் இப்படியே சொல்லுவர்.

அதுவே ஆதிநூலென்றும் சொல்லுகிறார்கள். இப்போதுள்ள தமிழ் நூல்களுள்ளே தொல்காப்பியமே மிகப் பழையதென்றும், அது உண்டாகி ௪௬௦௦-வருஷங்களுக்கு மேலாயின என்றும் நிராக்ஷேபமாகத் தாபித்தேம். அத் தொல்காப்பியத்தில் நான்குவருணங்களும் பேசப்படுகின்றன; நான்கு வேதங்களும் பேசப்படுகின்றன. மாயோன் சேயோன் வருணனென்னும் தேவர்கள் பெயர்களும் பேசப்படுகின்றன; இதற்குமுன் ௩௦௦௦-வருஷங்களுக்கு முன் ஆரியராலே துரத்தப்பட்ட தமிழர்கள் ௪௬௦௦-வருஷங்களுக்கு முன் பிராமணர் முதலிய நான்கு வருணங்களாக வந்ததெப்படி? வேதமென்றதை அறிந்ததெப்படி? ஆதலினாலே இத் தமிழ் நூல் உண்டாக முன் வேதங்களும் நான்கு வருணங்களும் இங்கே இருந்திருக்கின்றன. இதனாலறியத்தக்கது யாதெனின்,—சாத்திரங்களை மனிதருக்கு உபதேசித்த இருஷிகள் பரதகண்டம் முழுதும் உலாவித்திரிந்து உபதேசித்து வந்தார்களென்பதேயாம். அவர்கள் பரதகண்டத்தில் மாத்திரமன்று, சீனம் யவனம் முதலிய தேசங்களிலும் உலாவியிருக்கிறார்கள். சைவாகமங்களுக்கு அறுவகைச் சம்பந்தங்கூறுஞ் சாஸ்திரங்கள், கைலாசத்தி லெழுந்தருளிய ஸ்ரீகண்டரிடமிருந்து பரம்பரையாக வந்து இருடிகளால் மனுஷருக்கு இவ்வாகமங்கள் உபதேசிக்கப்படுகின்றன என்று சொல்வதே இதற்குப்போதிய சான்று. வேதம் முதலிய ஆரிய நூல்களை ஆராயினும், மற்றைத் தமிழ்நூல்களை ஆராயினும், சாத்திரங்களெல்லாம் இமயமலைக்கு வடக்கேயிருந்து வந்தனவென்பதையே அவை வலியுறுத்துகின்றன.

இதுவரையுங் கூறியவாற்றால், ஆரியரென்பவர் முதன்மூன்று வருணத்தார் மாத்திரமல்லரென்றும், அவர் எங்கேயோ இருந்து இந்தியாவுக்கு வந்து நாலாயிர வருஷமன்று அதற்கு மிகமிக மேலாயிற்றென்றும் காட்டினேம். தமிழராகிய நாம் உத்தரதேச சரித்திரங்களைப் பார்க்கிலும் தக்ஷிணதேச சரித்திரங்களையே அதிகமறிவோம். தமிழ்நூல்களை வாசிக்குமிடத்து, அத்தமிழ் ௬௦௦௦-வருஷங்களுக்கு முன்னிருந்த ஒரு பாஷையென்பதும், குறைந்தபக்ஷம் ௪௬௦௦-வருஷங்களுக்கு முன்றொட்டுப் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும் நான்கு வருணத்தாரும் தலைமை பெற்றவராய் தென்றிசையிலிருந்தனரென்பதும் விளங்கும்.

அங்ஙனமாயின், தமிழ் தனிப்பாஷையா? சமஸ்கிருதத்திலிருந்து உண்டானதொன்றா? என்பதொரு ஆக்ஷேபம். சிலர் தனிப்பாஷையென்றும் சிலர் ற ன ழ எ ஒ ஐந்துமொழிந்த எழுத்தெல்லாம் ஆரியமாயிருக்க இது எப்படித் தனிப்பாஷையாமென்றும், தம்முண் மாறுபட்டுப் பெருஞ் சண்டையெல்லாம் செய்கிறார்கள். நம்முடைய தேசம் மற்றைத் தேசங்களைப்போன்றதன்று. இங்கே பாஷையும் சமயமும் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டு கிடக்கின்றன. வேதம் முதலிய கலைகளையெல்லாம் ஆதியிற் செய்தவர் ஈசுவரன். அவரே இந்த இரண்டு பாஷைக்கும் முதற்குரவர் எனப்படுவர். அதனால் இந்த இரண்டு பாஷைகளும் தாயும் பிள்ளையுமல்ல, அநேகவடிவொப்புடைய சகோதரர்களேயாம். மகேசுரராகிய சிவபெருமான் பாணினிமுனிவருக்கு உபதேசஞ் செய்தருளிய பதினன்கு சூத்திரங்களையும் அப்பாணினி முதலிய எல்லா வையாகரணர்களும் மகேசுர சூத்திரமென்று பாராட்டி உச்சிமேற்கொண்டு துதிப்பார்கள். இதுவே ஆதிவியாகரணம். இதுபோலவே அகத்திய முனிவருக்கும் தமிழிலக்கணத்தை உபதேசித்தார். இறையனுரைகப்பொருளென்னும் பொருணூலையும் செய்துகொடுத்தார். இதனால் பாஷைகளிரண்டும் வேறு என்றும், ஒருவராலே செய்யப்பட்டமையின் அதிக ஒற்றுமையுடையனவென்றும், ஒன்றோடொன்று நன்றாகக் கலந்துகொண்டனவென்றும் அறிக. எழுத்துக்களிலே ஆரியச் சிறப்பெழுத்தும் தமிழ்ச் சிறப்பெழுத்தும் இரண்டற்கும் பொதுவெழுத்தும் இருத்தல்போலச் சொற்களிலும் ஆரியச் சிறப்புச் சொற்களும் தமிழ்ச் சிறப்புச் சொற்களும் இரண்டற்கும் பொதுச் சொற்களும் உளவென வறிக. முகம்முதலானவைகள் இருபாஷைக்கும் பொதுவான சொற்கள். இருடிகளாலே தான் மனிதர் எல்லா நூல்களையும் பெற்றவர்கள். இவ்விருடிகள் நம்மனோர்போல ௧௦௦ வயதுக்கு மாத்திரம் இருந்தவர்களல்லர்; விவிலியநூலிற் சொல்லப்பட்ட மதூசலாவைப் போல ௮௦௦-௯௦௦ வருஷங்களுக்கு மாத்திரமிருந்தவர்களுமல்லர். எத்தனையோ ஆயிரம் வருஷங்களுக்கு இருந்தவர்கள் இருக்கிறவர்கள். வியாசர் சூதர் பாணினி முதலானோர் அதிகமாக உத்திரதேசங்களிலே திரிந்தாற்போல அகத்தியர், தொல்காப்பியர் முதலானோர் தக்ஷிண தேசங்களிலே திரிந்தவர்கள். ஆயினும், மாபாடியஞ்செய்த பதஞ்

சனியார் தமிழ்நாட்டிற் பிறந்தவரென்று சொல்லப்படுதலினாலும், அருச்சுனன், பாண்டிநாட்டு இராஜஸ்திரீயை விவாகஞ் செய்துகொண்டிருந்தமையினாலும், அகத்தியர் பஞ்சவடியிலும் அகத்தியரும் தொல்காப்பியரும் கங்கைப் பிரதேசங்களிலும் திரிந்தார்களென்று சொல்லப்படுதலினாலும், தொல்காப்பியர் "வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ" என்று சொல்லுதலினாலும், இருபகுதியாருக்கும் இருபாஷைகளும் வருமென்க.

சம்ஸ்கிருதமும் தமிழும் வெவ்வேறு பாஷைகளென்பதை அணியிலக்கணம் ஆரியத்திற்கே சிறந்ததாதற்போல், பொருளிலக்கணம் தமிழிற்கே சிறந்ததாயிருத்தலினாலும் அறியலாம்; தொல்காப்பியரும் பவணந்தியாரும் வடசொல்லாவது தமிழ்ச் சொல்லன்று என்று காட்டத்தொடங்கி, "இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொலென் றனைத்தே" என்றும், "வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ" என்றும், "இடையுரியடுத்து-நான்குமாந் திசைவட சொலணுகாவழி" என்றும், "பொதுவெழுத்தானுஞ் சிறப்பெழுத்தானும்" என்றும் கூறியவாற்றானும் அறியலாம். இதனால் வடசொல்லின்றியும் தமிழ் நடந்ததென்பதும் நடக்கவல்லதென்பதும் தெரிகின்றன.

இனி இரண்டும் ஒன்று என்பதை எழுத்துக்களினுடைய உருவத்தாலும் அநேக சொற்கள் இருபாஷைக்கும் பொதுச்சொற்களாயிருத்தலினாலும் அறியலாம், "இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர்" என்னும் வாக்கை ஊன்றி நினைப்போர்க்குச் சந்தேகந் தோன்றாது. இறைவனே இருபாஷைக்கும் ஆதியிலக்கணம் செய்தானென்பதை அந்நிய சமயத்தார் நம்பாமையினாலேதான் இக் கலகங்கள் உண்டாயின.

இன்னும் இருபாஷைகளுடைய சம்பந்தமுண்டான அக்காலந் தொடங்கியே சிவாகமங்கள் தென்தேசத்தில் வழங்குகின்றன. இல்லையாயின் ஆரியத்திற்கின்றித் தமிழிற்கேயுரிய பொருளதிகாரத்திற் சொல்லப்பட்ட தலைவன் தலைவி தோழன் தோழி முதலியவைகளும், புணர்தல் பிரிதல் முதலானவைகளும் சைவாகமங்களிற் பேசப்ப

சிவம் ஆன்மா சத்தி ஆன்மபோதம் முதலானவைகளைக் குறிப்பிக்க வந்தமை எவ்வாறாகும்? பொருளதிகாரத்திற் சொல்லப்பட்ட தலைவன் தலைவி கலவி புலவி கந்தருவ மணமுறைகளென்பன தமிழருடைய பழைய வழக்கங்களென்று சிலர் சொல்வர். அது எட்டுணையும் பொருந்தாது. நக்கீரர் "களவொழுக்கம் உலகத்தின்பமன்று" என்றும், "இவனும் (தலைவனும்) உலகத்துத் தலைமகனல்லன்" என்றுங் கூறினார். இதன் கருத்து யாது? அன்றியும் தஞ்சைவாணன் கோவையுரையில் சொக்கப்பநாவலர் களவொழுக்கத்துக்கு ௩௬ நாள்வைத்து அவற்றை நாட்களும் நாளிகைகளுமாகப் பிரித்துப் பழையநூற் கொள்கையை அநுசரித்து எழுதியிருத்தலினாலும், சிவாநுபூதிச் செல்வர்களுடைய தேவாரங்களில் அகப்பொருட்டுறைச் செய்யுட்கள் பலவருதலினாலும் என்க. அல்லதும் உலாவென்பது தமிழுக்கே உரியதாகலின் அதனாலும் தமிழருடைய பழைய வழக்கங்களை உணரலாமெனல்வேண்டும். பேதைப் பருவத்தாளும் பேரிளம்பெண் பருவத்தாளும் பவனி வருவானைக் கண்டு இங்ஙனம் சொல்வார்களென்பது யாண்டுமிலாமையால் அதுவுங்கூடாது. இதுவுங் குறிப்பால் பலவகைப் பக்குவங்களையுடைய ஆன்மா சிவமாகிய ஆன்மநாயகரை நோக்கிக் கூறியதென்பதேயாம். கந்தருவமணமே பழைய தமிழருடைய வழக்கமெனின், அவர்களுக்கு மற்றைப் பிரமமுதலிய எழுவகை மணங்களும் தெரிந்தனவேயாம். அது "அந்தணரருமறை மன்றலெட்டனுள்" என்னுந்தொல்காப்பியத்தினாலறிக.

இனிப் புறப்பொருளும் இப்படியேயாம். கந்தபுராணத்திலே சொல்லப்பட்ட சூரன் சிங்கன் தாரகன் என்போர் தேவர்களைச் சிறைவைக்கச் சுப்பிரமணியக்கடவுள் அவர்களைக் கொன்று தேவர்களைச் சிறைமீட்டாரென்ற கதையும், இராமாயணத்திலே சொல்லப்பட்ட இராவணன் சீதையைக் கவர்ந்துபோய்ச் சிறைவைக்க இராமர் அவனைக்கொன்று சீதையைச் சிறைமீட்டாரென்ற கதையும், மலத்தாற் கட்டுண்ட உயிரை இறைவன் அம்மலத்தை நாசம்பண்ணி தீக்ஷைசெய்து அவ்வுயிரை இரக்ஷிப்பதைக் குறிப்பாலுணர்த்துவன வென்று சைவர்களும் வைஷ்ணவர்களும் கூறுப. வெட்சித்திணையில் வேறு மிருகங்களுடைய பெயரைச் சொல்லாது

உயிருக்குரிய பெயராகிய பசு வென்னும் பெயரையும் அதன் பரியாயமாகிய நிரையென்னும் பெயரையும் கூறுவது இதற்கோர் கரி. பண்டைக்காலத்துத் தமிழர் எவ்வளவு ஆகமவுணர்ச்சியுடையராயிருந்தனரென்பதும் இவைகளால் விளங்குகின்றது. தமிழிலே சமய நூல்கள் ஆதியிலில்லை. இப்போதுள்ளனவெல்லாம் மெய்கண்டதேவருக்குப் பின் சம்ஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டனவன்றோ; கடவுளருளிய சமயசாஸ்திரமில்லாதபோது தமிழைச் சம்ஸ்கிருதத்திலிருந்து பிறந்ததன்றென்பது எங்ஙனம் பொருந்துமெனின்; நச்சினார்க்கினியர் "ஏனையவேளாளரும் ஆகமங்களாலும் அப்பொருளைக் கூறிய தமிழானும் உணர்க" என்றுரைத்தமையின், அக்காலத்தில் தமிழிலும் சமயசாஸ்திரங்கள் இருந்தனவென்பது துணியப்படும். அவைகள் பிற்காலத்தில் அழிந்தன.

மேலே காட்டியவைகளினாலே பழைய தமிழ் நூல்களைக்கொண்டே ஆரியர்கள் இதற்குமுன் ௭௦௦௦-௮௦௦௦ வருஷமளவில் இங்கு வந்தவரல்லரென்பது சாதிக்கப்பட்டது. இந்தியர்களுடைய சங்கதிகளெல்லாம் ௭௦௦௦-௮௦௦௦ அன்றி ௨௫,௦௦௦ வருஷத்துச் சங்கதிகளென்றுதான் வைத்துக்கொண்டாலும், இந்தியர்கள் வருஷமென்ற அளவுகருவி போதாமல் யுகங்கள் மகாயுகங்களென்ற கருவிகளை ஏன் உண்டாக்கிக்கொண்டார்கள். இவற்றால் அளக்கப்படும் பொருள்கள் இருந்தாலன்றோ இவர்கள் இக்கருவிகளைத் தேடல் வேண்டும். இல்லையாயின் இவற்றாற் பயன்யாது? மற்றை எத்தேசங்களிலும் அங்குள்ள யாறுகள் மலைகளுக்கு உற்பத்தி கூறுவாரில்லை. இந்தியாவிலோ காவேரி அருணசலம் முதலிய பலவற்றிற்கு உற்பத்தி கூறுகின்றனர். மற்றைத் தேசசரித்திரங்களுக்கு இணங்கப்பிடித்து இசைத்து நேற்றும் முந்தைநாளும் செய்யப்பட்ட நூல்களைப் பிரமாணமாக எடுப்பேமா? அன்றி இரண்டாயிரம் மூவாயிரம் வருஷங்களுக்கும் முன்னிருந்த பல நூலாசிரியர் உரையாசிரியர்கள் சொல்வதைப் பிரமாணமாக எடுப்பேமா? தொல்காப்பியம் ஆதியூழியினந்தத்திலோ வேறெந்தக்காலத்திலோ செய்யப்பட்டதென்பது நம்மிலும்பார்க்க அதன் உரையாசிரியர்களுக்கு நன்றாகத்தெரியும். அவர்கள் அதற்கு நம்மினும்பார்க்கச் சமீபகாலத்திலே இருந்தவர்கள். நாமோ தூரகாலத்திலே இருக்கிறவர்கள். ஒரு தேசசரித்திரத்தை

எழுதுவோர், அத் தேசத்துப் பழைய நூல்களை நம்பாமல் அவை களெல்லாம் Myths என்று கழித்துவிட்டால், அவர்களுக்கு வேறு என்ன ஆதாரம்? மகதனீசு பிளினி தொலமி ஸ்திருபோ என்பவர் களுக்கு நமோநம: என்று நாம் சொல்லவேண்டும். இவர்களில்லா விட்டால், மகமதியர் வர முன்னுள்ள கதைகள் மாத்திரமல்ல உ00 வருடக் கதைகளும் Myths என்றாய்விடும். ஐரோப்பியர் அப்படிச் சொன்னால், நம்மவர்களும் அந்தப்படிதான் என்பார்களேயன்றி மறுத்துரையாடமாட்டார்கள்.

மனிதர் உத்தரதேசத்தினின்று வந்து எ000-அ000 வருஷங்க ளளவில் மத்திய ஆசியாவிலிருந்தார்களென்றும், அதன்பின் இந்தி யாவில் வந்து குடியேறினரென்றும் கங்காதரதிலகரும் சொல்வா ராயினர். வேதத்திற் சொல்லப்பட்ட தேவர்களைப்பற்றிச் சொல்லு மிடம் முதலிய சிலவிடங்களில் அவர் சிறிது சிறிது தவறினும், வேதத்தின் பழமைசாதிக்க மிகவும் பிரயாசப்பட்டிருக்கிறார். பூர்வ காலத்து நிலையும் கதைகளுஞ் சொல்லுகிறதென்றால் அது மிக எளி தோ. இவரும் இவரோடுகூடிய வேறு ஐரோப்பிய அமரிக்கர் சில ரும் உ0,000-கூ0,000 வருஷ கதைகளல்ல அ0,000 வருஷ கதைக ளும் சொல்ல முயன்று சக்கரவாளகிரிக்கு அப்பாலுள்ள இருட்பூமி யினின்று திகைப்பார்போலத் திகைக்கின்றார்கள். இத்திலகர் ஈசு ரனைமறந்து சாங்கியநூற் கொள்கையை அநுசரித்து, பூர்வத்தி லிரு ந்தவர்கள் இயற்கைப் பொருள்களை (Nature) வணங்கிவந்தவர்கள் என்கிறவர். ஐரோப்பியரும் அமரிக்கரும் எல்லாக்கலைகளிலும் மிக் கசாதுரியமும் கூர்ந்த விவேகமும் உடையவர்களேயாயினும், அவர் களுடைய ஞானம்போலக் குறைவுடையது பிறிதில்லை. அவர்களு டைய எல்லாக் கலைகளும் வருஷத்துக்கு வருஷம் மாசத்துக்கு மா சம் நாளுக்கு நாள் நாழிகைக்கு நாழிகை வித்தியாசப்பட்டுக்கொண் டேவருகின்றன. ஆராய ஆராய, முன்கண்டவைகளெல்லாம் பொய் யாய்க்கொண்டே வருகின்றன. மனிதருடைய அறிவுகொண்டு அ மைக்கப்படுவனவெல்லாம் அப்படியே அபத்தமாம். ௰0,000 வரு ஷத்தில் பூமியில் எத்தனை வேறுபாடுகளுண்டாயிருக்கும்.

ஆயினும், திலகர், மனுஷர் ஆதியில் Polar Reigons ஆகிய துருவமண்டலத்திலிருந்து வந்தார்களென்பது அர்த்தாங்கீகாரஞ்

செய்யத்தக்கது. வேதசிவாகமங்கள் மேருமலையிலிருந்து வெளி வந்தனவென்று சைவாகமங்களும் சொல்லுகின்றன. அதுபற்றியே சிவாக்கிரயோகிகளும் சிவஞானபோதவுரையில் “[illegible]” என்று எடுத்துக்கொண்டார். இது ஆகமங்களுக்கு வெகுகாலத்துக்குமுன்னே தெரியும். துருவ மண்டலத்திலுள்ள மேருவிலோ துருவமண்டலமாகிய மேருவிலோ, தேவர்களோ இருடிகளோ மனிதர்களோ இருந்தார்களென்பதொன்று நிச்சயம். மேரு கைலாசமென்பவைகளே 'தேவர்களுக்கும் இருடிகளுக்கும் உறைவிடம். இதனாலே இந்தியா பிற்காலத்திற் குடியேறப்பெற்றதென்பது கூடாது. கந்தபுராணத்து அண்டகோசப் படலத்தைப் பார்த்தால் இந்தமயக்கம் கொஞ்சந்தீரும். சிவாலய முனிவர் அகத்திய முனிவரை நோக்கித் தவஞ்செய்தாற்போல, திலகர் முதலானோரும் யாரேனும் முனிவர்களை உத்தேசித்துத் தவஞ்செய்தமைத்து விஞ்ஞாபித்தால் பூர்வ சரித்திரங்களுடைய உண்மை விளங்கும். இல்லையாயின் இவர்கள் இன்னும் நடுக்கடலிற்றானே நின்று கரைகாணாது மயங்கவேண்டும்.

த. கைலாசபிள்ளை.

---

உ

சிவமயம்.

# சமயோசிதச் செய்யுட்டிரட்டு

(௫௩௩-ஆம் பக்கத்தொடர்ச்சி)

அரசன் அவதாரம் தேவாவதாரமென்பது

௩௭. திருவுடைமன்னரைக்காணில்திருமாலைக்கண்டேனேயென்னு, முருவுடைவண்ணங்கள்காணிலுலகளந்தானென்றுதுள்ளுங், கருவுடைத்தேவில்களெல்லாங்கடல்வண்ணன்கோயிலேயென்னும், வெருவிலும்வீழ்விலுமோவாக்கண்ணன்கழல்கள்விரும்புமே. (திருவாய்மொழி. ௪-ம்பத்து, ௪-வது மண்ணை. ௮)

௬௮. குலமகட்குத்தெய்வங்கொழுநனேமன்ற
புதல்வர்க்குத்தந்தையுந்தாயு—மறவோர்க்
கடிகளேதெய்வமனைவோர்க்குந்தெய்வ
மிலைமுகப்பைம்பூணிறை. (நீதிநெறிவிளக்கம்-௨௭)

௬௯. முறைசெய்துகாப்பாற்றுமன்னவன்மக்கட்
கிறையென்றுவைக்கப்படும். (திருக்குறள்-௩௮௮)

இக்கவிகளாலரசனே தெய்வமென்பது விளங்குகின்றது.

## தேவரிலும் அரசரே மேலானவரென்பது

௭0. திலகநீண்முடித்தேவரும்வேந்தரு
முலகமாந்தர்களொப்பவென்றோதுப
குலவுதார்மன்னர்க்கியானிதுகூறுவன்
பலவுமிக்கனர்தேவரிற்பார்த்திவர்.

௭௧. அருளுமேலரசர்க்குமன்காயுமேல்
வெருளச்சுட்டிடும்வேந்தெனுமாதெய்வ
மருளிமற்றவைவாழ்த்தினும்வையினு
மருளியாக்கலழித்தலங்காபவோ.

௭௨. உறங்குமாயினுமன்னவன்றன்னொளி
கறங்குதெண்டிரைவையகங்காக்குமா
லிறங்குகண்ணிமையார்விழித்தேயிருந்
தறங்கள்வௌவவதன்புறங்காக்கலார்.

௭௩. யாவராயினுநால்வரைப்பின்னிடற்
றேவரென்பதுதேறுமிவ்வையகங்
காவன்மன்னவர்காய்வனசிந்தியார்
நாவினும்முறையார்நவையஞ்சுவார்.

௭௪. தீண்டினார்தமைத்தீச்சுடுமன்னர்தீ
யீண்டுதங்கிளையோடுமெரித்திடும்
வேண்டிலின்னமிர்துந்நஞ்சுமாதலான்
மாண்டதன்றுநின்வாய்மொழித்தெய்வமே.

(சீவக. நாமக. ௨௧௭, ௨௧௮, ௨௧௯, ௨௨0, ௨௨௧.)

இக்கவிகளாற் பிறவரைக்காட்டிலும் அரசர் எவ்வாற்றானும் மேலானவரென்பது தெற்றென வெளியாகின்றது.

வேந்தன் சீறிற் றுணையில்லையென்பது

௭௫. பழைமைகடைப்பிடியார் கேண்மையும் பாரார்
கிழமைபிறிதொன்றுங் கொள்ளார்—வெகுளின் மன்
காதன்மையுண்டே யிறைமாண்டார்க் கேதிலரு
மார்வலருமில்லையவர்க்கு.

௭௬. கைவரும்வேந்தனமக்கென்றுகாதலித்த
செவ்விதெரியா துரையற்க—வொவ்வொருகா
லெண்மையனேனுமரியன்பெரிதம்மா
கண்ணிலனுள்வெயர்ப்பினான். (நீதிநெறிவிளக்கம். ௪௭, ௪௬)

இக்கவிகளால் வேந்தனால் வெகுளப்பட்டார்க்கு வேறெவருந் துணையாகாரென்பது விளங்குகின்றது.

அரயன்மனைகாத்தவன் வீணாகானென்பது

௭௭. மன்னர்புறங்கடைக்காத்துவறிதேயா
மென்றலங்காண்டுமென்றெள்ளற்க—பன்னெடுநாட்
காத்தவையெல்லாங்கடைமுறைபோய்க்கைகொடுத்து
வேத்தவையின்மிக்குச்செயும். (நீதிநெறிவிளக்கம். ௪௮)

இக்கவியாலரமனைகாத்தவன் மிக்கபயனடைவானென்பது வெளியாகின்றது.

அரசன் எவ்வழி யவ்வழி யன்றுயிரென்பது

௭௮. இகழினிகழ்ந்தாங்கிறைமகனொன்று
புகழினுமொக்கப்புகழ்ப—விகன்மன்னன்
சீர்வழிப்பட்டதேமன்பதைமற்றென்செய்யு
நீர்வழிப்பட்டபுணை. (நீதிநெறிவிளக்கம் ௪௪)

௭௯. தென்னவனுட்கோளெல்லைதெரிந்தனரவையத்துள்ளா
ரன்னவன்புகழ்ந்தவாறேபுகழ்ந்தனரவனைத்தானே

முன்னவனருளைப்பெற்றுமும்மையுந்துறந்தோரேனு
மன்னவன்சொன்னவாறேசொல்வதுவழக்காறன்றோ.
(திருவிளை. இசைவாதுவென்ற. கஅ)

இக்கவிகளால் அரசன் எவ்வழி நிற்கின்றானோ வவ்வழியேகுடிகளு நிற்குமென்பது தெளியக்கிடக்கின்றது.

பெரியோர் அரசனை காவாமலே பெருமையடைவர், சிறியோர்காத்திருந்தும் பெருமையடையாரென்பது

௮௦. வேத்தவைகாவார்மிகன்மக்கள்வேறுசிலர்
காத்ததுகொண்டாங்குவப்பெய்தார்—மாத்தகைய
வந்தப்புரத்ததுபூஞைபுறங்கடைய
கந்துகொல்பூட்கைக்களிறு. (நீதிநெறிவிளக்கம். உகூ)

இக்கவியால் பெரியோரரசனவையைக்காவாமலிருந்தும் பெருமையெய்துவர், சிறியோர் காத்திருந்தும் பெருமையுறாரென்பது விளங்குகின்றது.

அரையனிடத்திற் பொருளைப் பெறுவதிலுமவனா னன்குமதிக்கப்படுவதே மேலென்பது

மாகஞ்சிறகக்குவித்துநிதிக்குவை
யீகையினெக்கழுத்தமிக்குடைய—மாகொல்
பகைமுகத்தவெள்வேலான்பார்வையிற்றீட்டு
நகைமுகத்தன்குமதிப்பு. (நீதிநெறிவிளக்கம். ௩௬)

இக்கவியாலரசனிடத்துப் பொருளைப் பெறுவதினும் அவனானன்குமதிக்கப்படுவது மேலென்பது தெளியக்கிடக்கின்றது.

உலகத்திற்கு அரசனே யாதாரமென்பது

௮௨. நெல்லுமுயிரன்றேநீருமுயிரன்றே
மன்னனுயிர்த்தேமலர்தலையுலகம்
அதனால், யானுயிரென்பதறிகை
வேன்மிகுதானைவேந்தற்குக்கடனே. (புறநா. க௮௬)

இக்கவியால், உலகத்திற் கரசனே யாதாரமென்பது விளங்குகின்றது.

(இன்னும் வரும்)

ஜி. சதாசிவம் பிள்ளை.

ஸ்ரீ

# பாண்டிய சாசநம்

## II

"கோநேரினமைகொணடான" காலம திரிபுவன சககரவததி 'கோநேரிமைகொணடான' திருவழுதிவளநாடடுத திருககுருகூா பொ லிநதுநினறருளிய பரமஸவாமிகளகோயி

(2) லில "திருககுருகூா மஹாமுனிகள" ஸிஷ்யரிலதத "திரு வாயமொழிமஹாமுனிக" ளுககு ஒடநாடடடிகள செயவிககிற அரு ளாளதாஸா

(3) வத்திககும அஷ்டாதஸவிஷயதது ஸ ஹவிதாநுகளுககு ஹொஜனமுளளிடடு வேணடுவனவுககு இநநாடடு ஸ்ரீ ௬௬

(4) வகுநதமான இராசெநதிரசசதுவேதிமஙகலததுககிரா ஞசி இளைய திவாகரபடடனுளளிடடாரும காரமபிசசெடடு ஊதையழி

(5) வாகரபடடனுளளிடடாரும கருமாணிககாழவானும பக கல இவவொடநாடடடிகள விலைகொணடுகுடுதத இவவூாபிட

(6) ாகை இசஙகனகுளமும நெடுஙகுளமும விலையோலை படி நானகெலலைககுடபடட நீாநிலமும கருஞசெய புனசெ

(7) சயயுமநததமுநதொடடமும குளபபரிபபும உடபடட நில ததில பழநதேவதானம பளளிககநதம நீககி நீககி

(8) யுளள நிலம கடமையும அநதராயமும விநியோகமும' தருவதான அசசும காரியவாராசசியும வெடடிபாடட

(9) மும பஞசுபீலியும சநதுவிக்ரஹபபெறுமவாசறபெறும இலாஞ (சி) னைபபெறுமதறியிறையும செககிறையுமதட்டு

(10) டொலி பாட்டமும இடையாவரியுமினவரியும பொன வரியும மறறுமெறபெறபட்டினவும உட்பட நாலாவது முத

(11) லமட்டபபுற இறையிலியாக இடபபெறவேணுமென்று "காலிங்கராயர்" நமககுச்சொன்னமையில இவவொட்டநாட்ட

(12) டிகள் செயவிககிற அருளாளசுாவாாட்டததில வதிககும அஷடாசுமவிஷயதது ஸ்ரீவைஷணவர்களுககு ஸொஜனமுளளிட்டு வேணடுவனவுககு

(13) இ ஸ்ரீ வைகுநதமான இராசெநதிரசசதுவெதிமஙகல ததது கிராஞசி இளையதிவாகரபட்டனுளளிட்டாரும காராயிசசெட டு உதை

## வாசலுக்கு வடபுறம்

(14) ய திவாகரபட்டனுளளிட்டாருஙகருமாணிககாழவானும பககல இவவொட்டநாட்டடிகள

(15) விலைகொணடுகுடுதத இவவூரபிடாகை இசஙகனகுளமு நநெடுஙகுளமும விலை ஓலைபபடி

(16) நானகெலலைககுடபட்ட நீர நிலமுங கருஞசெயபுனசெ யநததமும தொட்டமும குளமும கு

(17) ளபபரிபபுமுட்பட்ட நிலததில பழநதெவதானமபளளி ககநதமநீககிநீககியுளள நிலஙக

(18) டமையும அநதராயமும விநியொகமுநதருவதான அச சும காரிய ஆராட்சியும வெட்டி

(19) ... ... ... ... ... டுபபெறும

(இத்துடன் குறைவாய் நின்றுவிட்டது.)

---

# வடக்குவாசலுக்குக்கிழைப்பத்தி

## III

"மாறவாமன சுநதரபாணடியதேவனின ௰௫ வது யாணடு"

(1) ஸுஸ்திஸ்ரீ ॥ ஸ்ரீ கோ மா ற பனமரான திரிபுவனசக கிர

(2) வாததிகள 'ஸ்ரீ சுநதரபாணடியதேவறகு' யாணடு ௰௫ வது

(3) இததிருமணடபமுஞ செயவிதது ஸ்ரீ வராகநாயஞ

(4) ரையுமுகாநதருளி விசசா(ர)செவவிருககைநாடடு

(5) சககரபாணிநலலூா அரையன விரதமுடிசசாளுன

(6) பலலவராயா

"எமமணடலமுஙகோணடருளிய ஸ்ரீ குலசேகரதேவாககு யாண்டு ௰எ வது"

(1) ஸ்வ ஸ்தி ஸ்ரீ ॥ எமமணடலமுஙகொணடருளிய ஸ்ரீ குலசேகரதேவறகு யாணடு ௰எ வது

(2) திரிபுவநசககிரவாததி 'கோநேரினமைகோணடான' மணலூா 'வகுளாபரணபடடறகு' திருவ

(3) ழுதிவளநாடடு திருநகரியில பொலிஞசு நினறருளிய பர மஸவாமிகளுககும ஆழவாா திருநாடுை

(4) டய பிரானுககும தாம உதிஷ்டாலவைாராணங்ககும வா சிததுசசிறபபுககளுககும வாசிதது சு

(5) ஷா(தங)களுஞசொலலி இதுககு முனபு பெறறுபபொ துமபடியிலெ நாளொனறு

(6) கரு மூனறு ஷவாதமும இரணடு அபபமும ஒரு அக காளையும நாழு திருததமபலமும

(7) ஒரு பிடிகளக வு்லாசமும தோணமாலையும மாத உத லவஙகளிலும திருநாளககளிலும திருவ

(8) ததி யயனஙகளிலும சிறபபாக பெறறுபபொதுமபெறு பேறுகளுநதாமுநதமமுடையவ

(9) (மி) சததொருமு வாசிததுபபெறறுபபொதவும இபபடி சநதிராதிததவஸ் செலவதாககலலிலும செம

(10) பிலும வெடடிககொளளவுமபாறக.

இவை ஆனுநதூருடையான எழுதது

யாணடு மெ வது நாள சுளாசமிசு

இவை யாதவராயன எழுததுகள

இவை * பழநதிபாராயன எழுதது

---

* பழந்திபாராயன்

அப்பு,

சடகோபராமாநுஜா சாரியன்.

உ

# நல்லொழுக்கம்

[ஸ்ரீமத்-இலக்குமணப்போற்றிகள் மொழிபெயர்த்தது]

(செந்தமிழ்த்தொகுதி அ: சஎ0-ம் பக்கத்தொடர்ச்சி.)

ஆகிலும் கடமையினுற்றாண்டப்பெற்ற அனேகபெரிய மனிதர்களைப் பிரான்சுதேசமானது உடைத்தாயிருந்த காலம் ஒன்று இருந்தது. ஆனால், ஒப்பிட்டுப்பார்க்கையில் அவர்கள் அனைவரும் வெகு காலத்திற்குமுந்தினவர்களாயிருந்தனர். பேயார்ட் (Bayard) டியூஜெஸலின் (Dugueslin) காலிக்னி (Coligny) டிக்கியூஸ்னி (Duquesne) டியூரென்னி (Turenue) கால்பொர்ட் (Colbert) சல்லி

(Sully) ஆகிய இவர்களுடைய வம்சமானது மாண்டு மறைந்து யாதொரு சந்ததியும் சேஷித்திருக்கப்பெறாததாகத் தோற்றுகிறது. தற்காலம் கடமையைப்பற்றிக் கூவிக்கொண்டு இடையிடையே பிரான்சு தேசத்திற் சிலர் தோன்றியிருக்கின்றனர். ஆனால், அவர்களுடைய வார்த்தையானது காட்டிற்கூவுகிறவனுடைய வார்த்தையைப்போலப் புறக்கணிக்கப்படுகின்றது. டிட்டாக்குவில்லி (Do-Tocquenllo) அத்தகையவர்களில் ஒருவராயிருந்தனர். ஆனாலவர் சாமானியமான மற்றைய மனிதரைப்போற் குற்றவாளியாகக் கூறப்பட்டுச் சிறைச்சாலையை யடைந்தனர். பின்பு இராஜாங்க உத்தியோகத்தினின்று நீக்கப்பட்டனர். அவர்தன் சிநேகிதனாகிய கெர்கார்லே (Kergorlay) என்பவனுக்கு ஒரு சமயத்தில் எழுதியதாவது, "யானும் உம்மைப்போலக்கடமையை நிறைவேற்றுவதிற் சித்தமாயிருக்கிறேன் நீவிரனுபவிக்குஞ் சுகத்தைப்பெற மேலும்மேலும் உள்ளக்கிளர்ச்சியுள்ளவனாயிருக்கிறேன். அவ்வளவு கௌரவமும் உண்மையுமான இன்பம் வேறொன்றுமின்றென நம்புகிறேன்; உலகத்தில் நமது முயர்ச்சிகளுக்குரிய யோக்கியதைபெற்ற ஒரு பெரிய இலக்ஷ்யம் யாதெனின் மனிதஜாதிக்குச்செய்யும் நன்மையேயாம்."

பதினான்காவது லூயிஸ் (Louis 14th) காலமுதல் ஐரோப்பாவினுள், பிரான்சுதேசமானது கலகத்தன்மையையுடையதாயிருந்தபோதிலும் அதில் ஒவ்வொருகாலத்தில் யோக்கியமும் விசுவாசமுமுள்ள புருஷர்கள் உண்டாயிருக்கிறார்கள். அவர்கள், தொந்தரவும் கலக இச்சையுமுள்ள சுபாவம்பொருந்திய ஜனங்களுக்கு விரோதமாய்ப்பேசிப் பிரசங்கித்ததுமட்டுமின்றிச், சமாதானமென்னும்தேவவாக்கை அனுஷ்டானத்திற்கொண்டுவரப் பிரயாசைப்பட்டனர். இப்பிரீப்பட்டவருள், ஆப்பி-டி-ஸெண்ட் பயற்றீ (Able-De-st-Pierre) என்பவர் மிகவும் தைரியமுள்ளவராயிருந்தனர் பதினான்காவது லூயிஸ் (Louis XIV) உடைய யுத்தங்களைக் குறைகூறவும் கிரேட் (Great) அதாவது "பெரிய" என்னும் அடைச்சொல் அவருக்குப் பாத்தியமில்லையென்று கூறவும் தைரியமுள்ளவராயிருந்தார். அதற்குசிக்ஷையாகச் சாஸ்திர சங்கத்தைவிட்டு அவர் நீக்கப்பட்டனர். ஆப்பி

(Abbe) என்பவர், தற்காலத்தின் இஷ்டஜனசமூகத்தின் (மெம்பர்கள்) புருஷரைப்போல, ஒரு ஜாதியாருடன் மற்றொருஜாதியார் சமாதானமாயிருக்கவேண்டிய ஒழுங்கை, வைராக்கியத்துடன் ஸ்தாபிப்பவராயிருந்தனர். ஜோஸப் ஸ்டர்ஜ் (Joseph-sturge) என்பவர், ஸெண்ட் பீட்டர்ஸ்பர்க் (St-Peters-burg) க்குத் தன்கொள்கைப்படி உருஷியசக்கரவர்த்தியை யாற்றுவதற்குச் சென்றதுபோல, ஆப்பி (Abbe) என்பவர் இடைவிடாத சமாதானத்தை, நிலைநிறுத்துவதற்கான தன் யோஜனைப்படி அட்ரெச்ட் (Utrecht)-ல் உள்ள ஜனப்பொது சங்கத்தாரைத்திருப்புவதற்கு, அங்கேபோயினர். ஆகவே அவர் ஒரு வைராக்யசாலியாக மதிக்கப்பட்டனர். கார்டினல் டியூபாய்ஸ் (Cardinal Dubois) என்பவர், அவருடைய யோஜனையை ஒரு "சத்யவானுடைய சொப்பனமாக" வகுத்துரைத்தனர். ஆகிலும் ஆப்பி (Abbe) என்பவர் தன் சொப்பனத்தை வேதப்புத்தகத்திற் கண்டிருந்தார். பொதுச்சனங்கள் யுத்தத்தின் பயங்கரங்களையும், அருவருப்புக்களையும் குறைப்பதைவிடத் தன் குருவினுடைய உபதேசத்தை வேறு எவ்விதத்தில் திருஷ்டாந்தப்படுத்தக்கூடும். ஜனப்பொதுச்சங்கம் என்பது கிறிஸ்தவர்களின் இராஜ்யங்களிலிருந்து கூடிய பிரதிநிதிக்கூட்டமேயாம. அவர்கள் நம்புவதாகப் பாவனைசெய்த விதிகளை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரத்தான் ஆப்பி என்பவர் அவர்களைக் கேட்டுக்கொண்டனர். அது பயனற்றுப்போய்விட்டது. அதன் முக்கிய அதிகாரிகளும், பிரதிநிதிகளும் அவர் சொற்குச் செவிசாய்க்கவில்லை.

ஆப்பி-டி-ஸெண்ட், பயற்ற் (Abbe-De-St-Pierre), தான் பிறந்திருக்கவேண்டிய காலத்திற்கு அனேக வருஷங்களுக்கு முன்னரே பிறந்திருந்தனர். ஆனால் அவருடைய கருத்து இழக்கப்படக்கூடாதென்று தீர்மானித்து 1713-ம் ௵த்திற் 'புராஜெக்ட்-ஆப்-பெர்ப்பெட்சுவல்-பீஸ்' (Project-of-perpetual peace) என்னும் ஓர் புத்தகத்தை வெளியிட்டனர். இராஜாக்கள், தாங்கள் யுத்தத்திற்குப் போகுமுன்னர்த், தங்கள் குறைகளைச்சொல்லி நிவிர்த்திபெற்றுக் கொள்ளத்தக்க, ஐரோப்பிய ஆலோசனைசபை ஒன்று, சகல ஜாதியார்களின் பிரதிநிதிகளடங்கியதாய் உண்டாதல் வேண்டுமெனக்

கோரிக்கொண்டனர். இந்தத்தந்திரம் வெளிவந்த ஏறக்குறைய எண்பது வருஷங்களுக்குப்பின்னர் வால்னி (Volney) என்பவர் எழுதினவியது வருவாறு, "ஜனங்கள் என்பது என்னை ?-பொதுவாயுள்ள ஜனசங்கத்தின் ஓரங்கம். யுத்தம் என்பது என்னை ?—இரண்டு அங்கமான ஜனங்களுக்குள் உண்டாகிய மல்யுத்தம், தங்கள் அங்கங்களாகிய இரண்டுஜனங்களும் யுத்தஞ்செய்கையில் ஜனசங்கத்தார் எவ்விதமாய் நடந்துகோடல் வேண்டும் ? ஊடேசென்று சமாதானப்படுத்தித் தடுத்தல்வேண்டும். ஆப்பி-டி-ஸெண்ட் பயற்றீ (Abbe-De-st-Pierre) நாட்களில் இது சொப்பனமாக நடத்தப்பட்டது. ஆனல், மனித ஜாதியின் பாக்கியமாக அது இப்போது நிறைவேறத் தொடங்குகிறது." வால்னி (Volney) என்பவரின் தீர்க்கதரிசனத்திற்குத்துர்ப்பாக்கியமாகஇந்தவாக்கியமெழுதியபின் இருபத்தைந்து வருடம்வரை இதற்குமுன் உலகத்தில் எப்பொழுதாவது சம்பவித்திராத கோரத்தன்மையுடையதும், அதிகமாய்ப் பாழாக்குவதும், மூர்க்கமானதுமான யுத்தங்கள் நடந்துகொண்டிருந்தன.

ஆகிலும் ஆப்பி (Abbe) என்பவர் கேவலம் ஒரு சொப்பனங்காண்கிறவரல்லர். அவர் சுறுசுறுப்புடன் பரோபகாரகுணத்தை அனுஷ்டானத்திற் காட்டத்தக்கவர். ஜனசங்கத்திற்குரிய அனேக சீர்திருத்தங்களை எதிர்பார்த்தனர். அவை பிற்பாடு சாதாரணமாக அனுசரிக்கப்பட்டனவாயிருக்கின்றன. அவர் எளிய குழந்தைகளுக்குக் கைத்தொழிற் கல்விச்சாலைகளை முதலில் ஸ்தாபித்தார். அங்கே அந்தக்குழந்தைகள் நன்றாய்க் கல்விகற்றதுமன்றி யவர்கள் சரியான பருவகாலத்தில் யோக்கியமாய்நடந்து தங்கள் சுகத்திற்கு வேண்டுவனவற்றைச் சம்பாதித்துக்கொள்ளக்கூடிய வியாபாரத்தொழிலையுங்கற்றுக்கொண்டனர். சட்டமுழுதையுந் திரும்பப்பார்த்துச் சுருக்கவேண்டுமென்று அவர் ஆக்ஷேபஞ்செய்தார். இந்த அப்பிராயம் பிற்பாடு முதலாவது நெப்போலிய (Nepoleon I.)-னால் நிறைவேற்றப்பட்டது. மல்யுத்தமாவது, மிதமிஞ்சினபோகமாவது, சூதாட்டமாவது, சந்யாசமாவது கூடாதென்று அவர் எழுதினார். "சந்யாசமாகத்தனித்துவாழ்வதற்குப் பித்துக்கொள்வது மனதிற்குவைசூரிபோலாம்" என்று சீக்ரெயிஸ் (Segrais) கூறிய குறிப்பையும் எடுத்துக்காட்டினர். அவர்தன்னுடைய வருவாய் முழுதும் தருமகாரி

யங்களிற் செலவிட்டனர். தருமமாவது பிச்சைகொடுப்பதல்ல; அத்தருமம் எளிய குழந்தைகளையும் எளிய மனிதரையும் ஸ்திரீகளை யும், தங்களுக்குத் தாங்களே உதவிசெய்துகொள்ளும்படி உபகரித்த லேயாம். எப்பொழுதும் அவருடைய கருத்துயாதெனின், தான் உதவிசெய்கிறவர்கள் நிலைத்தபயனைப் பெறவேண்டுமென்பதேயாம். அவர் கடைசிவரையும் உண்மையில் விருப்பையும், பேசுவதிற் சுவா தீனத்தையும் உடையவராயிருந்தார். அவர் எண்பதாவதுவயதிற் சொன்னதாவது "நம்வாழ்நாளானது, சந்தோஷத்திற்கு ஓர் அதிர்ஷ் டச்சீட்டாயிருப்பினும், என்மட்டில் மிகவும் நன்மையானதாகவே இருந்திருக்கிறது." அவர் மரணசயனத்திலிருக்கையில் வால்ட்டைர் (Voltaire) என்பவர், அவருக்கு என்னமாயிருந்ததென்று கேட்ட தற்கு "நாட்டுக்குட் பிரயாணம்செய்யப்போவதுபோலிருந்ததாக" விடைபகர்ந்தனர். இவ்விதமான மனச்சமாதானத்தோடு அவர் இற ந்தனர். உயர்ந்த ஸ்தானங்களுக்குக்கேடு நிகழாதவாறு செண்ட்பய ற்றீ (St-Pierre) இறந்ததற்காக அவருக்குப்பின் பட்டத்திற்குவந்த, மாப்பெர்ச்சுயஸ் (Maupertius) ஐ, தம்மீது மரணப்புகழ்க்கவிபாட விடாதபடி அவ்வளவு விசேஷமாய்ப் பேசப்பட்டிருந்தார். அவர் இறந்த முப்பத்திரண்டு வருஷங்களுக்குப்பின்னர், டி-ஆலம்பேர்ட் (D-Alembert) என்பவரால் அவருடைய ஞாபகச்சின்னமான இந் தக் கண்யதையானது செய்யப்பட்டது. நன்மையும் உண்மைவிருப் பும் சத்தியவாக்குமுள்ள ஆப்பி என்பவரைப்பற்றி அவருடையகோ ரியின்மீது எழுதியிருந்தமெய்ம்மையும் அழுத்தமுமான வாக்கியமா வது "அவர் விசேஷமான அன்புள்ளவர்" என்பதேயாம்.

கடமைக்கும் சத்யமென்னும் ஒழுக்கத்திற்கும் நெருங்கிய பந் துத்வம் உண்டு. கடமையுள்ளமனிதன் எல்லாவற்றையும் விடத் தன்வார்த்தைகளிலும் செய்கைகளிலும் உண்மையுள்ளவனாயிருக்கி றான். அவன் சரியான காரியத்தைச் சரியானமார்க்கத்தில், சரியான வேளையிற் பேசவும், செய்யவும் முயற்சிக்கிறான். ஆண்மையுள்ள வனென்று அங்கீகரித்தற்கு விசேஷமாக லார்ட் செஸ்டர்-பீல்டு (Lord Chester-field) சூசிப்பிக்கிறவாக்கியமாவது "கௌரவமுடை யவர்களுக்கு வெற்றியைக்கொடுப்பது சத்தியமே" என்பதைவிடவே றின்று. கிளாரெண்டன் (Clarendon) என்பவர் தன்காலத்திலிருந்த

மிகவும் மேன்மையும் பரிசுத்தமுமுள்ள ஒரு கனவானைப்பற்றிப்பேசுகையிற் பால்க்லெண்ட் (Falkland) ஐப் பற்றி "அவர் உண்மை விஷயத்தில் மிகவும் பூஜிதை செய்பவராயிருந்ததால் யாரும் அவரிடத்தில் இலகுவாய்த் திருடவும், பாசாங்குசெய்யவும் இடங்கொடுக்கத் தக்கவராயிருந்தார்" என்று சொல்லுகிறார்.

ஹட்ச்சின்ஸன் என்பவர் மிகவும் உண்மைக்கும், நம்பிக்கைக்கும் பாத்திரமானவரென்று அவருடைய மனைவிசொல்லும் மிக்க அழகான செய்தி வருமாறு, "அவர்தான் எண்ணுதகாரியத்தை, எண்ணியதுபோல ஒருக்காலும் தோற்றுவித்ததில்லை. தன்னுடைய வசத்திலில்லாமல் தான் நம்பியதைக்கொண்டு வாக்குத்தத்தம் செய்ததில்லை. நிறைவேற்றுவதற்குத் தனக்குத்தகுதியுள்ள எந்தக்காரியத்தையும் செய்வதில் தவறியதில்லை."

(Wellington) உவெல்லிங்க்டன் உண்மையைப்பற்றி விசேஷ வியப்புடையவர் என்பதற்கு ஒரு நிதர்சனங்கொடுக்கப்படும். அவர் செவிட்டினுற்றுன்பம் அடைந்தபொழுது ஒரு கைதேர்ந்த காதுவைத்தியனிடத்தில் காட்ட அவன் சகல சிகிச்சைகளுஞ்செய்துபார்த்துக் கடைசியாக மிக்கவீரமுள்ள காடிக்காரத்திராவகத்தை யவர் காதிற் பெய்தான்; அது அவருக்குமிக்கதுன்பத்தையுண்டாக்கிற்று. அவர் தமக்குரிய சமதிருஷ்டிக்குணத்துடன் அத்துன்பத்தைப்பொறுத்துக்கொண்டார்; அவர் குடும்பத்திற்கெப்பொழுதும் சிகிச்சை செய்யும் வைத்தியன், ஒருநாளவர்வீட்டிற்குவந்து அந்தப்பிரபுவைக் கண்ணமுங்கண்ணும் இரத்தம்போற்சிவந்திருக்கக்கண்டான்; அவரெழுந்திருந்தபோது ஒருகுடிகாரனைப்போற்றள்ளாடி விழுந்தார்; அந்த வைத்தியன் அவருடைய காதைப்பார்க்க அனுமதிதரும்படி கேட்டுக்கொண்டான், தந்தவுடன் அவர்காதிற் பலமான எரிவிருக்கக்கண்டான், உடனே பரிகாரஞ்செய்யாவிடின் மூளையிற்றாக்கி அவரைக் கொன்றேதீருமென்றெண்ணி யுடனே பலமான சிகிச்சைகள்செய்யத் தலைப்பட்டான், செய்த வக்கணமே அந்த எரிவுநின்று சாந்தமுற்றனர்.

(இன்னும் வரும்.)

# ஆசார விளக்கம்

(ரு௫உ-ஆம் பக்கத்தொடர்ச்சி.)

மகம்மதியர்களுக்கோவெனின், தனித்தனியே ஒவ்வொருவர்ணங்களுக்கும் ஆசாரவிதியேற்படுத்திய இந்துசாஸ்திரங்களைப் போலல்லாமல், அவர்கள் ஜன சமூகங்களுக்கேற்றவாறு சுகாதாரவிதிகளைக் கற்பித்திருப்பதாகத்தோன்றுகிறது; இஃது, அவர்கள் மதவீரர்களாக இருந்தமையினாலென்னலாம்; அவர்கள் தேசங்களை ஜயித்தபிறகு அத் தேசங்களைச் சீர்ப்படுத்த அவர்களுக்கு அவகாசமில்லை; இந்துக்களுக்கு அப்படியன்று. ஆயினும், ஒவ்வொருவருடைய க்ஷேமத்தின் பொருட்டுச் சுகாதார ஏற்பாடு அவசியமென்பதைப்பற்றியும் மகம்மதியருடைய மதகிரந்தமான கோரானிற் சொல்லப்பட்டிருக்கிறது.

கோரான்:— "சுத்தத்திற்காகவும், அழுக்கைப்போக்கும் பொருட்டும் தண்ணீர்உண்டாக்கப்பட்டது"; உன் ஆடைகளைச்சுத்தமாக வைத்துக்கொள்; அழுக்கையும் அசுத்தத்தையும் தவிர்; "பரிசுத்தமாக இருப்பவர்களிடத்துக் கடவுள்பிரீதியாக இருக்கிறார்." "உடம்பைச் சுத்தப்படுத்திக்கொள்ளும்போது, யாதேனுமொரு பாகத்தை அழுக்குடன் விட்டுவிட்டால் பாபத்திற்குள்ளாவாய்."

ஒவ்வொருவரும் அனுசரிக்கவேண்டிய முக்கியமான சுகாதார விதிகளுள், யூதர்கள் விதித்திருந்தவாறு, அசுத்தமான மிருகத்தின் மாமிசத்தைத் தின்னக்கூடாதென்றும், மதுபானங்களையும் லாஹிரி வஸ்துக்களையும் தவிர்க்கவேண்டுமென்றும் விதிக்கப்பட்டிருக்கிறது. சுகாதாரசாதகமான காரியங்களிலும், கட்டிட அமைப்பிலும் மகம்மதிய அரசர்கள் ஒன்றுங்குறைவாகச் செய்யவில்லை. பர்ஹான்பூர், ஆமத்நகர், ஔரங்காபாத் ஆகிய இடங்களில் மகம்மதிய அரசர்கள் குழாய்களின்வழியாகத் தண்ணீர் வியாபிக்குமாறு மகத்தான ஏற்பாடுகள் செய்துள்ளார். மூர் என்னும் ஜாதியார் ஸ்பெயின்தேசத்தின்

மீது படையெடுத்தபோது இம் மாதிரியான ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். இப்பொழுது 300-வருஷங்களாகியும் அப் புராதன கட்டடங்களில் ஒருவிதக்குறைவுமின்றிச் சரியாக வேலைநடந்து வருவதைப்பார்க்க மிக்க ஆச்சரியமாக இருக்கிறது. இரும்புக்குழாய்கள் இல்லாவிடினும் தண்ணீர் எவ்வித்க்குறைவுமின்றிப் பொதுக்காரியங்களுக்கும் வீட்டுவேலைகளுக்கும் உபயோகப்படுவதன்றியும் நந்தவனங்களிலும், தோட்டங்களிலும் ஸ்நானக்கட்டங்களிலும்,நீர்வீழ்ச்சிகளிலும், மாவறைக்கும் யந்திரங்களுக்கும் பாய்கின்றது. பாரமேற்றி அழுத்துவதனால் அந்தநீர் பாயும்படியான உபாயம் செய்யப்பட்டிருக்கின்றது; இந்தத் தண்ணீரைச் சுகாதாரத்திற்கேற்ற உத்தமமான இடத்திலிருந்து எடுத்திருக்கிறார்கள்; சுத்தமான பிரதேசத்தில் பூமியின்கீழுள்ள நீரை அடுக்குவரிசையாகத் தட்டுகளமைத்து வடிகட்டி யெடுக்கிறார்கள். இதனால், சுகாதாரக்கட்டிடங்கள் அமைப்பதில் தேர்ந்த வேலைக்காரர்கள் மகம்மதியர்களுள் இருந்தார்களென்று தோன்றுகிறது. இம் மாதிரியாகவே, பெலுசிஸ்தானத்துப் பள்ளத்தாக்குகளில் வேளாண்மைக்கு நீர் பாய்ச்சும்பொருட்டு, அத்தேசவாசிகள் மேடான இடங்களில் அடுக்குவரிசையாக வடிகட்டுந் தட்டுகள் இன்றைக்கும் அமைத்துவருகிறார்களென்று கேள்விப்படுகிறேன்.

புராதன விஷயங்கள் அப்படியிருக்கப் பிற்காலத்தில் கான்ஸ்டாண்டிநோபில் என்னும் பட்டணத்து மகம்மதியர் வைசூரிக்காக அம்மைகுத்த முதன்முதல் ஆரம்பித்தனரென்றும், அவர்களைப்பார்த்தே இங்கிலாந்தில், 'வாக்ஸிநேஷன்' ஏற்பாட்டுக்குப் பூர்வம், அவ்வழக்கத்தைக் கைக்கொண்டார்களென்றும் அறிகிறோம்.

இந்துக்களின் விஷயத்திற்சொல்லியது போலவே, கொள்ளைநோய்க்காக அம்மைகுத்திக்கொள்ளும் முறையை மகம்மதியர்களுடைய முன்னோர்களும் ஒப்புக்கொண்டிருந்தார்களென்று சொல்லலாம். கொள்ளைநோய் பரவியகாலத்தில் அதற்குச் சிகிச்சையாகச் சரியான சுகாதாரமுறைப்படியே மகம்மதியர்கள் தகுந்த ஏற்பாடுசெய்து வந்தார்களென்று அறிகிறோம்; அஃதாவது, உடனே வீடுகளை ஒழித்துவிட்டுப் போனார்களென்பதாம். இவைபோன்ற சங்கதிகள்

காலக்கிரமத்தில் மறந்துபோனபடியினாலும், ஆயினும் இவை இக்காலத்து மகம்மதியர்களுக்கு முக்கியமானதனாலும் மகம்மதிய சுகாதார சம்பந்தமான இந்த விஷயத்தைப்பற்றிய கிரந்தங்களை அரபிபாஷையிலிருந்து மொழிபெயர்த்துத்தரும்படியாக அலிகர்நகரத்து மகம்மதிய கலாசாலைத்தலைவரைச் சிலநாளைக்குமுன் கேட்டேன். உமார் என்பவர்செய்த காரியத்தின் விவரத்தை அரபிபாஷைதெரியாதவர்கள், ஸெராடூல்பருக் (Seratool Farookh) என்னும் உர்து கிரந்தத்திற்படிக்கலாம்; ஆனால், இந்த உர்துகிரந்தத்தில் ஒருதப்பிதம் இருக்கிறது; அங்கு விவரிக்கப்பட்ட தொத்துவியாதியின் பெயர் அரபிபாஷையில் டாஊன் (Ta-oon) அல்லது கொள்ளைநோயென்றிருக்க, உர்துவில் அது வோபா (Woba) அல்லது விஷபேதியென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், தளகர்த்தரான அபூஓபீடா (Abu Obeidah) என்பவர் இறந்துபோனபிறகு உமார் என்பவர் கொள்ளைநோயினாற் பீடிக்கப்பட்ட நாடுகளுக்குச் செல்லுகையில், வீணாக உயிரையிழக்க அவ்விடத்திற்குப்போவானேனென்று அவர்களுக்குப் புத்திகூறி அவர்களின் வார்த்தையைக்கேட்டு அவர்தம்மூருக்குத் திரும்பியபோது சொல்லிய மறுமொழி மேற்சொல்லிய கிரந்தத்திற் குறிக்கப்பட்டிருக்கிறது. அந்த மறுமொழி கவனிக்கத்தக்கது. ஆபத்துநேர்ந்தகாலத்தில் மகம்மதியனாக இருப்பவன், தன்னுயிரைக் காப்பாற்றிக்கொள்ளப் பிரயத்தனப்படாமல் தன்வீட்டிலேயே இருந்து இறக்கவேண்டுமென்னுங் கொள்கையை மேற்கொண்டவர்கள் சிலர் அவரை (உமாரை) ஆக்ஷேபித்தார்கள். அவர்கள் அவரைப்பார்த்து "தெய்வசங்கற்பத்திற்குப்பயந்து ஓளிந்தோடுகிறீர" என்று ஏசினார்கள். அதற்கு அவர், "கடவுளின் சம்மதத்தின்படி, அவர் கட்டளையிட்டவழியில், ஓடிக்கொண்டிருக்கிறேன்" என்றார். இந்த மறுமொழியின் தெளிவான தாற்பரியமாவது,— நமது பிராணனைத் தெய்வசங்கற்பத்திற் கொப்புவித்திருக்கிறோமெனினும், நாம் இந்தவழியிற் செல்வதே அவருடைய சங்கற்பமோ, அவருடையசங்கற்பம் எதென்று அறிந்துகொள்ளச் சக்தியற்றவர்களாக இருக்கிறோம்; அவருக்குத்தெரியாமல் நாம் ஒருகாரியமும் செய்யமுடியாது; அவர் அப்படி நாம் செய்யுங்காரியத்தை யறிந்திருப்பதனால், நாம் மேற்கொண்டு ஒழுகுவதற்காக அவர் நமக்கு அரு

ளிச்செய்திருக்கிற புத்தியை நாம் உபயோகிக்காமலிருக்கவேண்டு மென்பது கருத்தன்று—என்பதாம். எனினும், உமாரின் காலத்தில் நடந்த விருத்தாந்தங்களின் உண்மையான விவரத்தை நாம் அரபிபா ஷையிற் படித்தறியவேண்டும். ஆதலின், அலிகர்நகரத்து மகம்மதி யக் கலாசாலையில் அரபிபாஷைப் புலவரான மௌல்வி கலீத் ஆமத் என்பவர் எனக்கு மொழிபெயர்த்தெழுதியதை இதனடியிற் குறிக்க லானேன்:—

"ஆர்-எச். 18-ம் ஆண்டில் சிரியாமுதல் பஸ்ராவரையிலுள்ள நாடுகளிற் கொள்ளைநோய் பரவியிருந்தது. அபூ ஓபிடா பின் ஜர்ரா (Abu Obeidah bin jarrah) என்பவர் அப்பொழுது சிரியாவிலிரு ந்த சேனைகளுக்குத் தளகர்த்தராக இருந்தார்; மகம்மதுவின் கூட் டாளிகளுள் அவர் முதன்மையான அந்தஸ்துடையவர்; "மஹாஜு" என்னும் பட்டம்வாய்ந்தவர்களுளொருவர், முதன்முதல் மெக்காவில் மகம்மதியமதத்தை அவலம்பித்தவர். கொள்ளைநோயினாற் பீடிக்கப் பட்ட இடங்களை விட்டுச் சேனைகளை அகற்றிச் செல்லும்படியாகக் காலிப் ஓமார் என்பவர் அவருக்குக் கட்டளையிட்டார். இதைப் பற்றிய விவரங்களை அபூ ஆஷாரி (Abu Ashaari) என்பவர் பின்வரு மாறு சொல்லியிருக்கிறார்:—

"டான் அம்வாஸ் (Taun amwas கொள்ளைநோய்) சிரியாவிற் கண்டபோது நான் அபூ ஓபிடாபின் ஜர்ராவுடன் இருந்தேன். கொ ள்ளைநோயினால் விளைந்த விபத்துக்களைக்கேட்டு, சிரியாவைவிட்டக ன்று செல்லுமாறு அபூ ஓபிடாவுக்கு ஓமார் இப்படி எழுதினார்: உமக்கு க்ஷேமமுண்டாகுக. நான் இந்தக்கடிதம் உமக்கெழுதிய கா ரணம் என்னவெனில் முக்கியமான விஷயமொன்றிருக்கிறது, அதை ப்பற்றி நான் பேசவிரும்புகிறேன். ஆதலால், இந்தக்கடிதம் கண்ட வுடனே தவறாமல் நீர் வந்துசேரவேண்டியது."

"கொள்ளைநோய் குடிகொண்ட இடத்திலிருந்து தம்மையகற்று வதே காலிப் ஓமாரின் கருத்தெனெ அபூ ஓபிடா உடனே ஊகித்துக் கொண்டார். ஆகவே, அமீரினுடைய பாபங்களை மன்னிக்குமாறு கடவுளைப் பிரார்த்தித்து அபூ ஓபிடாவானவர் தம்முடன் ஓமார் கல ந்துபேச விரும்பிய விஷயம் தமக்குத்தெரியுமென்று பதில் எழுதி

ஞர். தாம் மகம்மதியப்படையிலிருப்பதாகவும், ஜனங்களிடத்தில் தமக்குமிகுந்த அன்பு இருப்பதாகவும், தமக்கும் சிரியாவிலிருந்த மகம்மதியருக்கும் அனுகூலமாகக் கடவுள் சங்கற்பித்தாலன்றி அவர்களைவிட்டு வரப் பிரியமில்லையென்றும், ஓமார் தம்மை மன்னித்துக் களத்திலேயேயிருக்க உத்தரவு அளிக்கவேண்டுமென்றும் அபூ ஒபீடா எழுதினர். இந்தக் கடிதத்தைப் படித்தபொழுது ஓமார் கண்ணீர்விட்டழுதார். அருகிலிருந்தவர்களெல்லாரும் ஆச்சரியப்பட்டு அபூ ஒபீடா இறந்துபோயினரோவென்று வினவினர்; இல்லை என்று ஓமார் உத்தரம் தந்தார். இதன்பிறகு அபூஒபீடாவுக்கு ஓமார் இன்னுமொரு கடிதம் இவ்வாறு எழுதினர்: உமக்கு க்ஷேமமுண்டாகுக. உம்முடனிருக்கும் ஜனங்கள் தாழ்ந்த சதுப்புநிலத்திற் பாளயமிறங்கி யிருக்கிறார்களென்று அஞ்சுகிறேன். தயவுசெய்து அவர்களை மேட்டுநிலத்தில் நல்ல இடத்திற்குக்கொண்டு போங்கள்.

"இந்தக்கடிதம் அபூ ஒபீடாவுக்குச் சேர்ந்ததும் அவர் அபூமூஸாவை (Abu Moosa) வரவழைத்து அமீரினிடத்திலிருந்துவந்த அந்தக்கடிதத்தின் சங்கதியைச்சொல்லி, மகம்மதியச்சேனைகளை வேறு இடத்துக்குப் பாளயம் மாற்றும்படியாகவும் தம்மோடுகூடச் சேனைகளை அழைத்துக்கொண்டு அபூமூஸா வரும்படியாகவும் அபூஒபீடா கட்டளையிட்டாரென்றும் அபூமூஸா சொல்லுகிறார். அபூ ஒபீடாவின் விருப்பத்தின்படி பயணம்போகத்தீர்மானித்து அபூமூஸா வீட்டுக்குப்போனர். ஆனால், வீட்டுக்குப்போய்ப் பார்க்கையில் அவருடைய மனைவிக்கு அந்தத் தொத்துவியாதி கண்டிருந்தது. அபூ ஒபீடாவினிடத்திற் போய்த் தம் மனைவிக்கு உடம்பு சௌக்கியமில்லையென்று சொல்லவே, அவர் நோயின் விவர மென்னவென்று கேட்டார். அவளுக்குக் கொள்ளைநோய் கண்டிருக்கிறதென்று அபூமூஸா சொன்னர்; அபூ ஒபீடாவானவர் தம் ஒட்டகத்தை வரவழைத்து அதற்கு ஜீனிபோடச்சொல்லி அதன் அங்கவடியிற் கால் வைத்தவுடனே அவருக்கும் அந்தநோய் கண்டுவிட்டது. பிறகு, அபூ ஒபீடாவானவர் தம் ஜனங்களுக்குக் கடிதமெழுதி அவர்கள் பாளயமிறங்குவதற்காக அவர் ஏற்பாடுசெய்திருந்த ஜாத்ராவென்னுமிடத்துக்குப் போகும்படி கட்டளையிட்டார்; கொள்ளைநோய்

இவ்விதமாக நிர்மூலமாக்கப்பட்டது (டாப்ரி 'Tabri,' பக்கங்கள் 2516—18). இதே சங்கதியை இனேஜார்ஸி (Ine Jarzi) என்பவர் தம்முடைய 'டைப்-இ-கமீல்' (Taibh-i-kamil) என்னும் கிரந்தத்தில் (புத்தகம் 2, பக்கம் 275)விவரித்திருக்கிறார்.

"மேலே உதகரிக்கப்பட்ட அத்தாட்சியானது இவ் விரண்டு சரித்திரங்களிலிருந்தும் எடுக்கப்பட்டது. சரித்திரங்களினாலும் சரித்திரத்திற் குறித்த சங்கதிகளினாலும் மகம்மதியர்களின் நம்பிக்கை மாறாதெனினும்,—மேற்குறித்த டாப்ரி என்னும் வித்துவான் மிகுந்த சாமர்த்தியமுடையவர், அவருடைய அபிப்பிராயங்களும் கொள்கைகளும் எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றன. ஹாதிஸ் (Hadis) என்னும் ஐதிகங்களில் மாத்திரமேயல்லாது டாபிர் (Tafir) என்னும் வியாக்கியானத்திலும் மகம்மதிய தர்மசாஸ்திரத்திலும் மற்றெல்லா மகம்மதியக்கலைகளிலும் அவருடைய அபிப்பிராயம் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இவ் விஷயத்தைப்பற்றி இபுக் உஹல்லாகான் (Ibuc Uhallakan) என்பவரும் இப்படியே சொல்லியிருக்கிறார்—என்று கவனித்துப்பார்க்கின், மேற்சொல்லிய அத்தாட்சி, சரித்திரத்திலிருந்து எடுக்கப்பட்டதெனினும் மதசம்பந்தமான விஷயங்களில் உள்ளதுபோல அவ் வளவு பலமானதாகின்றது.

"இதுவுமன்றி, மேலே நாம் சொல்லியது நிஜமென்பது இனேஹஜர் அகலானி (Ine Hajr Agalani) என்பவர் தம்முடைய பதேல்பாரி (Fathel Bari) என்னுங்கிரந்தத்தில், 10-ஆவதுபுத்தகம், 159-ஆவதுபக்கத்தில் எழுதியிருப்பதனால்வற்புறுத்தப்படுகின்றது. மகம்மதுவினுடைய ஐதிகக்கிரந்தங்களுள் புகாரி (Bukhari) என்பது உத்தமமானது போல, அதன் வியாக்கியானங்களுள் பதேல்பாரி [illegible]போல், ஆராய்ச்சியிலும் அர்த்தபுஷ்டியிலும் அவ்வளவுசிறந்ததுகிடையாது."

"விவரமான இந்த அத்தாட்சி இப்படியிருக்க, இன்னுமொன்றிருக்கிறது; கொள்ளைநோய் குடிகொண்ட இடத்தினின்று அகன்று போகவேண்டியது அவசியமென்பதை அது தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது. ஜாபியா (Jabia) வுக்குப் போய்ச்சேர்ந்தவுடனே அபூ ஒபிடாவானவர் கொள்ளைநோயினால் மரித்தார். மாஸ் இபுவெல்

ஜபால் (Maaz Ibuel Jadal) என்பவர் அவருடைய வேலைக்கு நியமிக்கப்பட்டார். ஆனால், இருவரும் சீக்கிரத்தில் மாண்டுபோனார். பிறகு எகிப்து (Egypt) தேசத்தை ஜயித்த ராஜதந்திர நிபுணரான அமீர் இபூவெல் ஆஸ் (Amir Ibuel Aas) என்பவர் இப்படிக்காலியான அந்தப்பெரிய வேலைக்கு நியமிக்கப்பெற்றார். அந்தஸ்தலம் குடியிருக்க யோக்கியமானதன்றென்றும் அதைவிட்டு வேற்றாருக்குப் போகவேண்டியதவசியமென்றும் அமீர் இபுவெல்ஆஸ் உடனேகண்டு கொண்டார். அதுவரையில் அங்குக் கொள்ளைநோய் பூர்த்தியாகத் தணியாததனாலே அவர் தம் மனிதர்களை மலைமீதுபோகும்படி கட்டளையிட்டார். அங்ஙனம் அவர் கட்டளையிட்டதனால் சிலபேருடைய வெறுப்புக்கு அவர் பாத்திரரானபோதிலும் அவர்தம் தீர்மானத்தையே நிறைவேற்றினார்; மலையின்மீது பாளயமிறங்கினார்; இவ் விதமாகக் கொள்ளைநோயைக் களைந்தார்.

"மேற்சொல்லிய விஷயம் டாப்ரி (Tabri) என்பவரால் 2519-ஆம் பக்கத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது."

"மூன்றாவது அத்தாட்சி அபூ மூஸா அஷாரி (Abu Moosa Ashaari) என்பவருடையதாகும். இவர் மகம்மதுவின் கூட்டாளிகளுள் பிரபலமானவர், அநேககாலம் இராக் (Irak) தேசத்துக் கவர்னராக இருந்தவர். ஸிரியாவில் அபூ ஒபீடாவை விட்டபிறகு, அபூமூஸா அஷாரியானவர் கூபா (Kufa) வில் தங்கியிருந்தார். அங்கே சிலர் ஸிரியாவில் நேர்ந்த கொள்ளைநோயைப்பற்றி விசாரித்தார்கள். அதன் விவரம் சரித்திரக்காரர்கள் சொல்லியதாவது:—

'டாரீப் இபூவெஷஹ (Tarib Ibue Shahah) சொல்லியது:—

அபூமூஸாவானவர் கூபாவிலிருந்தபோது அவரைக்கண்டு ஸிரியாவில் உண்டான கொள்ளைநோயைப்பற்றிக் கேட்கப்போனோம். நாங்களெல்லாரும் உட்கார்ந்துகொண்டபிறகு, கொள்ளைநோய் கண்ட கிராமத்தைவிட்டு அந்தஸ்தலத்தாரைக் காலிசெய்து அது பூர்த்தியாகத் தணிகிறவரை வேறே ஆரோக்கியமாக இருக்கிற நல்ல இடத்திற்குப்போ

வதனாற் குற்றமில்லையென்று அவர் சொன்னார். சிரியாவிற்கொள்ளைநோய் கண்டபொழுது அவர் அபூஒபீடா பின் ஜர்ராவுடனிருந்ததாகச் சொன்னார்." (டாப்ரி, பக்கம்-2516).

(இன்னும் வரும்)

கர்னல், உ. ஜி. கிங்கு, சி. ஐ. இ., ஐ. எம். எஸ்.,
சானிடரி கமிஷனர்.

## A MANUAL OF INDUSTRY

## கைத்தொழிற் கண்ணாடி

(சுறிகரு-ஆம் பக்கத்தொடர்ச்சி)

**தைலவர்ணப்படங்கள்:**—இந்தமாதிரியான படங்கள் எழுதும் வித்தையை ஐரோப்பியர்கள் மிருகியாகப் பயிற்சிசெய்திருக்கிறார்கள். அந்த முறைப்படி பார்த்தால், தைலவர்ணப்படமெழுதும் வித்தை இந்தியாவில் அபிவிருத்தியாகவில்லையென்றே சொல்லவேண்டும். மிகச்சரவையான தைலவர்ணப்படங்கள் இந்தியாவிற் சில இடங்களிற்செய்யப்படுகின்றன. அந்தப்படங்கள் முக்கியமாக ஜகந்நாதத்தில் எழுதுகிறார்கள். அந்தத்திவ்யக்ஷேத்திரத்திலுள்ள சித்திரக்காரர்கள் ஒரு பெரிய துணியையெடுத்து, அதன்மீது கருமண்ணைப்பிசைந்து பூசுகிறார்கள்; கருமண்ணையும் சாணியையும் கலந்து பூசுவதும் உண்டு. அது உலர்ந்த பிறகு, அதன்மேல் மெழுகைத்தடவுகிறார்கள். அப்படிச்செய்வதனால், துணிக்கு ஒரு விறைப்பு உண்டாகிறது; துணியிலிருக்கும் துளைகளும் அடைபட்டுப்போகின்றன. அவ்விதமாகச்சித்தஞ்செய்த துணியின்மீது வர்ணங்கொண்டு, ஜகத்துக்கெல்லாம் நாதனாக இருக்கிற பகவானுக்கு நடக்கும் பூஜைகளை எடுத்துக்காட்டுவதற்கான ரூபங்களையும் சாமக்கிரியைகளையும் எழுதுகிறார்கள். ஜகந்நாதப்பிரபுவைக் கைகால்களில்லாததொரு பிம்பத்தினால் விளக்குகிறார்கள். அந்தமாதிரியாக எழுத

ப்பட்ட படங்களுள் வேறு மூர்த்திகளின் பிரபாவங்களை விளக்குவனவும் உள. அலைந்துகொண்டிருக்கிற பிச்சைக்காரர்கள் அந்தப் படங்களை வைத்துக்கொண்டு, கிராமங்களிலிருந்து வந்திருக்கும் பாமரஜனங்கள் கண்டுகளிக்கக் காட்டிக்கொண்டிருப்பார்கள். பிச்சைக்காரர்கள் அந்தப்படங்களைச்சுருட்டிக் கக்கத்தில் வைத்துக்கொண்டுபோவார்கள். ஜனங்கள் கூடத்தக்க இடங்களில் அவைகளைத் தரையில் விரிப்பார்கள்; விரிக்கும்பொழுதே அந்தப்படத்திற் குறிக்கப்பெறும் விஷயங்களை விவரித்து உரைப்பார்கள்.

ஜகந்நாதத்துக்கோவிலையும் அங்கே நடைபெறுகிற பூஜைமுறைகளையும் எழுதிய தைலவர்ணப்படச்சுருள் ஒன்று ரூ 40-க்கு விற்கிறார்கள்.

சந்தைகளிலும் மற்றுமுள்ள பொதுஸ்தலங்களிலும் மேற்சொல்லியதைவிடச்சரவையான தைலவர்ணப்படங்கள் ஏராளமாக விலையாகின்றன. பழைய துணிகளுக்குக்கருமண்பூசி நாற்புறமும் மூங்கிற்பிளாச்சுச்சட்டத்தில் அவைகளைப் பதியவைக்கிறார்கள்; கருமண்பூச்சு காய்ந்தவுடனே சித்திரக்காரர்கள் அவைகளின்மீது வர்ணங்களை உபயோகிக்கிறார்கள். பத்துநிமிஷத்திற் படம் விற்பனைக்குச்சித்தமாய்விடுகின்றது. சித்திரமெழுதும் விஷயங்கள் பெரும்பாலும் புராணசம்பந்தமானவை. அப்படிப்பட்ட சித்திரப்படத்தின் விலை ஒன்றேகால் அணா.

தைலவர்ணப்படமெழுதும் வித்தையை, ராஜதானிப்பட்டணங்களில் ஸ்தாபித்திருக்கிற சித்திரகலாசாலைகளில் ஐரோப்பிய நிபுணர்கள் கற்றுக்கொடுத்துவருகிறார்கள். அந்தப் பள்ளிக்கூடங்களிற் கற்றுத்தேர்ந்தவர்கள் அநேகர் நல்ல சித்திரக்காரர்களெனப் பெயர்பெற்று, இந்தியச்செல்வவந்தர்களின் படங்களையெழுதுவதனாலும், இந்தியவாழ்க்கையிலுள்ள அமிசங்களை ஸ்வயமாகப் படமெழுதுவதனாலும் ஜீவனம் செய்துவருகிறார்கள்.

சித்திரக்கலாசாலையிற்கற்றுத்தேர்ந்தவன் ஓர் ஆளின் உயரமுள்ள தைலவர்ணப்படமொன்று எழுதுவதற்கு நூறு ரூபா முதல் முன்னூறு ரூபா வரையில் கேட்கிறான். இந்தியவாழ்க்கைநடை சம்பந்தமான சிறிய படங்கள் ரூபா 25 - முதல் ரூபா நூறுவரையில் விலையாகின்றன.

**காகிதப்படங்கள்:**—மகம்மதிய அரசாட்சியின் கடைசிக்காலத்தில் எழுதப்பெற்ற நீர்ச்சாயைப்படங்கள் அனேகம் இத் தேசத்தில் இருக்கின்றன. அவை எழுதப்பெற்றது கி. பி. 1500 முதல் 1800-க்குள் ஆகும். அந்தப்படங்கள் இந்தியக் குடும்பங்களில் இன்னும் இருக்கின்றன. அவற்றை எழுதின சித்திரக்காரர்களின் பெயர்கள் இப்போது நமக்குத் தெரியா. கல்கத்தாவில் நடந்த பொருட்காட்சிச்சந்தைக்கு டக்காவிலிருந்தும் ஸஹரான்பூரிலிருந்தும் நீர்ச்சாயைப்படங்கள் வந்திருந்தன. முன்னர் வங்காளத்திற்கு ராஜதானியாக இருந்த டக்காவிலிருந்து நவாப்பு யசவந்தகான் படமொன்று, நவாப்பு நஸரத்ஜங்கு படமொன்று, நவாப்பு ஷம்ஸுத்தௌலத்துப்படமொன்று ஆக மூன்று படங்கள் வந்தன. ஸஹரான்பூரிலிருந்துவந்தவைகளுள் நூர்ஜஹான்பீகம் படமொன்று, சக்கரவர்த்தி ஷா ஆலம் படமொன்று, ஹைதராபாத் யுத்தரங்கம் ஒன்று, பெர்ஷியமகாகவி ஷேக் ஸாதியின் படமொன்று ஆகிய இவைகள் முக்கியமானவை. இவையெல்லாம் ஆக்பர் சக்கரவர்த்தியினால் அபிவிருத்திக்கு வந்த பெர்ஷியமுறையில் எழுதப்பெற்றவை.

(இன்னும்வரும்.)

தேச சஞ்சாரி.

ஸ்ரீ:

## “நுண்பொருண்மாலை”

(௫௯௧-ம் பக்கத்தொடர்ச்சி.)

௧௧௪௪. “கவ்வையாற்........யிழந்து.”

நு - லை:—கவ்விது - அலர்தலையுடையது. செவ்வையுடையது செவ்விதென்றதுபோலக் கவ்வையையுடையது கவ்விதென்க. தவ்வென்னும் - சுருங்கும். “என்னுமரபினெனக் கூறு” மென்றதனை யச்சூத்திரத்துட் குறிப்புரையாகுமென்றதனாற் குறிப்புமொழியென்றுரிவ்வுரையாசி...............ரம் பூரணருமிலை பச்சென்றதெனக் காட்டினர். “பகைமையுங்கேண்மையுங் கண்ணுரைக்கும்” (குறள்-௭0௯)என்பதுமது.

௧௧௫0. "தாம்வேண்டி..............யிவ்வூர்."

நு - லை:—............எச்சவும்மை விகாரம். இவ்விருபதுபாட்டும் புணர்தல் நிமித்தம்.

௧௧௫௧. "செல்லாமை..... ........துறை."

நு-லை:—எனக்கென்றாள் தோழி, தானவள் என்னும் வேற்றுமையின்றி யென்க.

௧௧௫௨. "இன்கண்..............புணர்வு."

நு - லை:—இன்கண் - இன்பம். பார்வல் - பார்வை.

௧௧௫௩. "அரிதரோ..............யான்."

நு - லை:—அரோ, அசைநிலை. ஓரிடத்து - ஒரோவழி.

௧௧௫௪. "அழிக்தஞ்ச..............தவறு."

நு - லை:-தேறியாரென்பது, தன்னைப்பிறர்போற்கூறல். தெளித்தசொல் - தெளிவித்தசொல்.

௧௧௫௫. "ஓம்பி..............புணர்வு."

நு - லை:—ஓம்பல் - அழுங்குவிப்பாயாக.

௧௧௫௭. "துறைவன்..............வளே."

நு - லை:—நிகழ்காலத்திடைநிலை ஆநின்றுபெற்று இறவாநின்றவென்றாயிற்று. "அலராயிர" (திருக். ௧௧௪0) மென்னுங்கோவையாருள், 'அலராவிருக்கு'மென்றும், *பாவையாருள், ஆகா(ள்)கிடந்தாளென்றும் வரும்.

௧௧௫௬. "தொடிற்..... .........தி."

நு - லை:—சுடுதலை முன்னுங்கூட்டுக.

௧௧௬௧. "மறைப்பேன்..............மிகும்."

நு - லை:—ஓ.....று மீண்டுச்சுட்டுப்பெயரிஃதோவெனகூறு திரிந்து, இதுபொழுது இப்பொழுதெனப் பொருள்பட்டாற்போல, இஃதோநோய் இன்றேனெச் சுட்டெழுத்து மாத்திரையா நின்

* திருவாசகம். திருவெம்பாவை. ௧.

றது. "அன்றியனைத்தும் பெயர்ப்பயனிலை" (தொல். சொல். ௬௬) யென்பதற்கு அகரச்சுட்டு அன்றியெனத் திரிந்ததென்றார் சேனாவரையர் ; அவ்வாறு முழுதுந்திரிந்தது, "பொருளொடுபுணராச் சுட்" (தொல். சொல். ௩௭) டென்னுஞ் சூத்திரத்துச் சேனாவரையரும் நச்சினார்க்கினியாரு மிவ்வுரையாசிரியர் காட்டிய "இஃதோ செல்வர்க்"கென்னுஞ் சொற்சோதனையை வழுவமைத்தா ரென்க. "செய்குன்" (திருக். ௨௨௩) றென்னுங் கோவையாருள்; 'உந்திட மிந்திட' மென்பது மது.

௧௧௬௩. "காமமு..............னகத்து."

வி - ரை:—காவாத்தண்டாக்கரவென்பதிருதலையுந்தூங்குந்தார...

௧௧௬௪. "காமக்..............மில்."

வி - ரை:—ஏமப்புணை - அாறுகியபுணை. இருவழியும் மன்னும் உம்மும் அசை.

௧௧௬௫. "துப்பின்..............பவர்."

வி - ரை:—துப்பு - பகைமை.

௧௧௬௬. "இன்பங்............பெரிது."

வி - ரை:—அடுங்காலென்றமையின் இன்பஞ்செய்யுங்காலென மறுதலைவருவித்தார்.

௧௧௬௭. "காமக்..............புளேன்."

வி - ரை:— நீந்தியுமென் றுரைத்து உம்மைமுன் னுங் கூட்டினார். கடுமை யீண்டு மிகுதியுரிச்சொல்லென்க.

௧௧௬௮. "மன்னுயி............துணை."

வி - ரை:—மன்னுயிர் - நிலைபெற்ற உயிர். துயிற்றி - துயிலப்பண்ணுதலாலென்க. காரணப்பொருட்டாய்த் துயிற்றியெனத்திரிந்து ............யெச்சம் அவாய் நிலையான்வந்த உடைத்தாகலோடு முடிந்தது. அளித்து, அளித்தாயிருந்தது ; அஃதிகழ்ச்சிக்குறிப்பு.

௧௧௬௯. "கொடியார்............மிரா."

வி - ரை:—நெடிதிரா - நெடியவாய்ச்செல்கின்ற விரா.

ககஎ0. "உள்ளம்போன்..............கண்."

ந - லை:—செல்கற்பின் - செல்லவல்லனவாயின். கண் ணெழுவாய்ாதலிற், செய்யாமரபிற் றொழிற்படுத்தடக்கியது.

கண் - விழி. விதுப்பழிதலென்பதில், விதுப்பு - விரைதல். அழிதல் - வருந்துதல்.

கக்எக. "கண்டாங்..............தில்."

ந - லை:—தண்டா நோய் - தணியா நோய். "நோயுமின்பமுமிருவகை நிலையிற், காமங்கண்ணியமரபிடைதெரிய, வெட்டன்பகுதியும் விளங்கவொட்டிய, வுறுப்புடையதுபோ லுணர்வுடையதுபோன், மறுத்துரைப்பதுபோனெஞ்சொடுபுணர்த்துஞ், சொல்லாமரபினவற்றொடுகெழீஇச், செய்யாமரபிற்றொழிற்படுத்தடக்கியு,மவரவருறுபிணிதமபோலச்சேர்த்தியு,மறிவும் புலனும் வேறுபட நிறீஇ, யிருபெயர்மூன்றுமுரியவாக, வுவமவாயிற்படுத்தலு முவமமோ, டொன்றிடத்திருவர்க்குமுரியபாற்கிளவி" (தொல் - பொருள். ககூச) என்ற இலக்கணச்சொல்விதியாலிது, செய்யாமரபிற்றொழிற்படுத்தடக்கல்.

ககஎஉ. "தெரிந்துணரா..............தெவன்."

ந - லை:—உணரா - உணராது. பரிதல் - கூறுபடுதல். படல் - துன்பம். உணர்வுடையதுபோ லுரைத்தலுமாம்.

ககஎ௩. "கதுமெனத்..............துடைத்து."

ந - லை:—கதுமென - விரைந்து. இதுவென்பது மேற்சொல்லிய கழிமடச்செய்கை. கண்கள், அதிகாரத்தான் வந்தது. இதுவுந் தொழிற்படுத்தடக்கல். படலாற்றாவென்பதுந் தொழிற்படுத்தடக்கல்; அது பெரும்பான்மையாகலான் முன்னுங்காண்க.

ககஎச. "ஓஒ..................டது."

ந - லை:—ஓவென்பது, மிகுதிப் பொருளின் வந்த குறிப்புச்சொல்.

ககஎரு. "உழந்துழந்..............கண்."

ந - லை:—அடுக்கு இடைவிடாமைக்கண் வந்தது.

ககஎக. "வாராக்காற்...............கண்."

நு - லே:—ஆயிடையென்பதில், இடையேழாமுருபாகலின், நீட் வருதலென்பதனு னீளாது எழுத்ததிகாரப்புறநடையாலவ்வென்னு மஃறிணைப்பண்மைச்சுட்டுப்பெயர் நீண்டுவகரம்வேறுபட்டமுடிந்தது. "ஆயிடையிருபேராண்மைசெய்தபூச" லென்பது "மாயிடைத்தமி" (தொல். சிறப்புப்பா.) ழென்பதுமது."

கக௮0. "மறைபெற...............ரகத்து."

நு - லே:—அறைபறைகண் - பறையாகியகண்; செய்யுள்விகார மானது பறைக்கண்ணென்றுமையாலென்க.

பசப்புறுபருவரல் - பசப்புற்றவென விரிந்துபசப்புறுதலானுய வருத்தமாயிற்று. இதனைப்பசந்தெரிந்தவெயர்வென்பதுபோலக்கொள்க; அது காரணப்பொருட்டு.

கக௮க. "நயந்தவர்க்கு...............பிற."

நு - லே:—பிற அசைநிலை.

கக௮உ. "அவர்தந்தா...............பசப்பு."

நு - லே:—இவர்தல் - மேற்கோடல். "குருதிகொப்புளிக்கும் வேலான்கூந்தன்மாவிவர்ந்துசெல்ல." (சீவக. விமலையா. க.) வென்பதுமது.

கக௮ஙு. "சாயலு...............தந்து."

நு - லே:—சாயல் - அழகு.

கக௮௪. "உள்ளுவன்...............பசப்பு."

நு - லே:—பிறவும் ஒவுமசை.

கக௮ரு. "உவக்காணங்...............வது."

நு - லே:—உவக்காண், இவக்காணென்பன வொட்டிநின்றவிடைச்சொல். தேயவண்மையாற் காலவண்மைகருதப்பட்டது.

கக௮எ. "புல்லிக்...............பசப்பு."

நு - லே:—கொள்வது, கொளவெனச் செய்யுட்டொடையாற் குறைந்துநின்றது.

௧௧௮௬. "பசக்கமற்...............ரெனின்."

நு - லை:—பட்டாங்கு - பட்டது. பட, பட்டாங்காகவென ஆக்கம் வருவிக்க.

ப—ர்.

# புத்தகக்குறிப்பு.

(ஏசுகிறிஸ்து என்பவர் ஒழுகிக்காட்டிய) ஒழுக்கமுறை நூல் :— இது மதுரை பிரும்மஞ்ஞான சபைத்தலைவரான B. A., B. L. F. T. S. ஸ்ரீமத்-ப. நாராயண ஐயரவர்களால் ஆங்கில பாஷையினின்று தமிழில் மொழிபெயர்க்கப்பெற்றது. இதிற் பெரும்பாலும் பலசமய நூல்களிலுமுள்ள பொதுவான ஒழுக்கமுறைகளைக் கற்பிக்கும் 114-அதிகாரங்களடங்கியுள்ளன. இவையெல்லாங் கிறிஸ்துமதத்துக்கே யுரியவெனக்கருதி இந்துமதக்கொள்கை சிறிது முணராதிருப்பவர்களும், இந்து மதத்தினுமிவ்வொழுக்கங்களுண்டென்றுணருமாறு இடையிடையே சிலவிடங்களில் தேவாரம், திருவாசகம், திருமந்திரம், திருக்குறள் முதலிய சில சிறந்த தமிழ்நூல்களிலிருந்து வேண்டிய மேற்கோள்களெடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. இதன்கண் மனந்தூயராகி வழிபாடுசெய்தற்கேதுவாகிய ஒழுக்கமுறை நெறிகளும், உபதேசமொழிகளும் பிரார்த்தநா வாக்கியங்களும் பொதுப்பட நிரம்பியுள்ளமையால், மதத்துவேஷமின்றி ஐக்கிலையைநாடி வழிபட்டு உபசாந்தியடைய விரும்புமவர்களுக்கு இது பெரிதும் பயன்படுமென்பதிற் சிறிதுமையமில்லை. இதனை யிவ்வாறெழுதி முடித்தச்சிட்டுதவிய ஐயரவர்களின் லோகோபகார சிந்தையும் இத்தகைய காரியங்களிலிடைவிடாமுயற்சியும் மிகவும் பாராட்டத்தக்கன.

மௌநவாக்கு :— இதுவும் ஸ்ரீமத்-ப. நாராயண ஐயரவர்களால் ஆங்கிலத்தினின்றுந் தமிழில்மொழிபெயர்க்கப்பட்டது. இதில் பெரும்பான்மை புத்தமதக்கொள்கையுஞ் சிறுபான்மை குப்தசாத்

திர முறைகளையும் தழுவி ஞானயோக மார்க்கங்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன. இவற்றுள் பெரும்பான்மையும் உலகப்பற்றைவிட்டுத் துக்க நிவிர்த்தியடைய விரும்பியவர்கள் சித்தநிரோதஞ்செய்வதற்குரிய உபதேசமொழிகளடங்கியுள்ளன. இதன் விலை அணா—2.

சன்மார்க்கதீபம்:—இதுவும் ஸ்ரீமத்-ஐயரவர்களால் ஆங்கிலத்தினின்றுந் தமிழில் மொழிபெயர்க்கப்பெற்றது. இதில் நிவிர்த்தியடைபவர்களுக்கு வேண்டிய பலவகையுபதேசங்களும் பொதுமையிலடங்கியுள்ளன. இவற்றினிடையிடையேவரும் உருவகங்கள் விளங்குமாறு குறிப்புரை யெழுதப்பெற்றிருக்கிறது. இதன்விலை அணா-2

பிரகலாதாழ்வான் சரிதை:— இது வேலூர் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமத்-பு. க. ஸ்ரீநிவாஸாசாரியரவர்களால் கல்வியிற் பெரியாரென்று கற்றவர்போற்றும் நற்றவப்புலவராகிய கம்பநாட்டாழ்வாரருளிச்செய்த இராமாயணத்திற் கூறிய பிரகலாதாழ்வான் கதையைக் கற்பவருள்ளங்களிற்கொள்ளுமாறு சொன்னயமும் பொருணயமும் பக்திநயமுந் தோன்ற இனிய செந்தமிழ் நடையிலெழுதப்பெற்றது. இதைச் சிறுவர்கட்குஞ் சிறுமியர்கட்குங் கலாசாலைகளிற் பாடமாக வேற்படுத்தின் மிக்க நன்மை பயக்குமென்பது எமது துணிபு. இதன் விலை அணா—6.

மார்க்கண்டேய சரிதம்:— இதுவும் ஸ்ரீமத்-ஸ்ரீநிவாஸாசாரியரவர்களால் வடநாற்கடலையுந் தென்னாற்கடலையு நிலைகண்டுணர்ந்த கச்சியப்ப சிவாசாரியராலியற்றியருளிய கந்தபுராணத்துள்ள கதையை யாவருமுணர்ந்துள்ளக்களிதுளும்புமாறு, உரைநடையாக வெழுதப்பெற்றது. இத்தகைய புத்தகத்தை நந்தமிழ்ச்சிறுவர்கட்குஞ் சிறுமியர்கட்குங் கலாசாலைத் தலைவர்கள் பாடமாக வேற்படுத்தின் நன்மை பயக்குமென்பதிலையமின்றாம். இவ்வரிய நூல்களை நந்தம் மூலகத்திற்கச்சிட்டளித்தருளிய ஸ்ரீ ஆசாரியரவர்கள் கல்வித்திறமையும்பெருமுயற்சியும் யாவராலும் பாராட்டற்பாலன. இன்னுமிது போன்ற நூல்களையெழுதித் தமிழுலகத்தை மகிழ்வூட்டுவார்களென வெண்ணுகின்றேம். இதன் விலை அணா—4.

ப—ர்.

# 1911ஆம் ஜூலைமீ 1உ முதல் 31உ முடிவுவரையுள்ள வரவு, செலவு கணக்கு.

| வரவு | தொகை ரூ | அ. | ப. | செலவு | தொகை ரூ | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| 1911-ஆம் ஜூன், ஜூலை இரண்டுமாதங்களுக்கும் மீ 1-க்கு ரூ. 50 வீதம் புதுக்கோட்டை சமஸ்தானம் மாதச்சந்தா வரவு ரூ | 100 | 0 | 0 | கலாசாலை உபயோகத்துக்கு வாங்கிய புத்தகங்கள் ரூ | 0 | 6 | 9 |
| | | | | பைண்டிங் ஆபீசு கண்டின்ஜன்சிச்செலவு ... | 7 | 11 | 8 |
| விரோதிகிருது ஆம் ஆடிமீ த்துக்குரிய மாதச்சந்தாத்தொகை மகா-ா-ா-ஸ்ரீ சா. ராம. மு. சித. பெத்தாச்சிசெட்டியார் அவர்களிடமிருந்து வரவு ... | 50 | 0 | 0 | பிரிண்டிங் ஆபீசு ஸ்டேஷனரிச்செலவு 51-11-6 | | | |
| | | | | ஷை ஆபீசு ரயில்வே சார்ஜ் செலவு 0—12—0 | | | |
| செந்தமிழ்ச்சந்தா வரவு ... | 15 | 2 | 0 | ஷை ஆபீசு ஆயில் எஞ்சின் சம்பந்தமாய் எண்ணெய்ச் செலவு 14—10—4 | | | |
| பிரிண்டிங் ஆபீசு அச்சுக்கூலி வரவு .. | 326 | 9 | 6 | ஷை ஆபீசு கண்டின்ஜன்சிச்செலவு 16—12—3 | | | |
| பைண்டிங் ஆபீசு வரவு ... | 33 | 6 | 6 | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 83 | 14 | 1 |
| புத்தக விற்பனை வரவு ... | 104 | 14 | 6 | போஸ்டேஜ் வகையிற் செலவு ... | 29 | 0 | 0 |
| சங்கம் காலி நிலம் மாக்கடைவாடகை நாளது விரோதிகிருது ஆம் ஆனிமீ த்துக்கு வரவு... | 35 | 0 | 0 | ரிபேர் வகையிற் செலவு ... | 4 | 10 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| லைபிரேரி உபயோகத்துக்கு வாங்கிய புத்தகங்கள் ... | | 3 | 1 | 0 |
| செந்தமிழ் விஷய தானத்துக்காக கனம் பிரசிடெண்ட் டிரஸ்டி அவர்கள் உத்தரவுப்படி மணியார்டர்மூலம் அனுப்பியது ரூ | 4—8—0 | | | |
| ரசீது லேபிள், மணியார்டர் கமிஷன் வகையிற் சலவு ... | 0—4—0 | | | |
| வண்டிவாடகை, சுமைகூலி வகையிற் செலவு ... | 0—5—3 | | | |
| ஆபீசு உபயோகத்துக்கு ஸ்டேஷனரி வகையருவும் கலாசாலை உபயோகத்துக்கு கண்டின்ஜன்சிச் செலவும் ... | 2—1—3 | | | |
| பிரிண்டிங் ஆபீசு பில்ப்படி சங்கம் ஆபீசு அச்சுக்கூலி வகைக்குச் செல் ... | 86—0—0 | | | |
| ஷை ஆபீசு பில்ப்படி ஷை ஆபீசு பைண்டிங் வகைக்குச் செல் ... | 15–12—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | | 108 | 14 | 6 |

| | ரூ. | அ. | பை. | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|---|---|
| ஆக வரவு ரூ. | 665 | 0 | 6 | ஆகமொத்தம் செலவு ரூ. | 237 | 10 | 0 |
| சென்ற ஜூன்மீ"த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ... | 814 | 14 | 9 | போக பாக்கியிருப்பு ... | 1242 | 5 | 3 |
| ஆக மொத்தம் ... | 1479 | 15 | 3 | ஆக மொத்தம் ... | 1479 | 15 | 3 |
| ஆக மொத்தம் ... | 1479 | 15 | 3 | ஆக மொத்தம் ... | 1479 | 15 | 3 |

திரு நாராயணையங்கார்,

மானேஜர்.

*Audited and found Correct*

S. GOPALASAMY IYENGAR,

*Auditor.* 3—9—11.

மதுரைத் தமிழ்ச் சங்கத்து

## 1911-ளு ஆகஸ்டுமீ 1௳ முதல் 31௳ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு. | தொகை ரூபா. | அ. | ப. | செலவு. | தொகை ரூபா. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| 1911-ளு ஆகஸ்டுமீ த்துக்குரிய புதுக்கோட்டை சமஸ்தானம் மாதச்சந்தாவரவ ரூ | 50 | 0 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்குச் சென்ற ஜூன்மீ த்திய பட்வாடாரிஜிஸ்டர்ப்படி சம்பளம் செல்லாக்கியது ரூ | 352 | 13 | 11 |
| செந்தமிழ்ச் சந்தாவரவு ... | 60 | 4 | 0 | ஷை சிப்பந்திகளுக்குச் சென்ற ஜூலைமீ த்திய பட்வாடா ரிஜிஸ்டர்ப்படி சம்பளம் செல்லாக்கியது ... | 354 | 11 | 2 |
| பிரிண்டிங் ஆபீசு அச்சுக்கூலி வரவு ... | 281 | 13 | 0 | கலாசாலை உபயோகத்துக்கு புத்தகம் வாங்கியது ... | 2 | 10 | 0 |
| பைண்டிங் ஆபீசு வரவு ... | 53 | 3 | 0 | பைண்டிங் ஆபீஸ் கண்டின்ஜன்சிச் செலவு ... | 14 | 2 | 2 |
| புத்தக விற்பனை வரவு ... | 88 | 11 | 3 | பிரிண்டிங் ஆபீசு ஸ்டேஷனரிச் செலவு ரூ 32— 3—6 | | | |
| சங்கம் காலிநிலம் மாக்கடை வாடகை விரோதிகிருது ளு ஆடிமீ த்துக்குவரவு ... | 35 | 0 | 0 | ஷை ஆபீசு ஆயில்என்ஜின் சம்பந்தமாய் எண்ணெய்ச்செலவு ... 13—14—9 | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| ஷை ஆபீசு கண்டின்ஜன்சிச்செலவு ரூ 15— 4—0 | | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி பிரிண்டிங் ஆபீசுச் செலவு ... | | 61 | 6 | 3 |
| போஸ்டேஜ் வகையிற் செலவு ... | | 30 | 0 | 0 |
| ரிபேர் வகையிற் செலவு ... | | 13 | 6 | 0 |
| லைபிரேரிஉபயோகத்துக்கு வாங்கியபுத்தகம்... | | 8 | 12 | 0 |
| சென்னை வைஜயந்தி பிரஸ் ஆபீசிலிருந்துவந்த அபிதானசிந்தாமணி 92புத்தகத்துக்குரயில்சார்ஜ் செலுத்தியது ரூ | 7—13—0 | | | |
| வண்டிவாடகை, மணியார்டர் கமிஷன், சுமைகூலி வகையறா ... | 1— 1—9 | | | |
| ஆபீசு லைபிரேரி உபயோகத்துக்கு வாங்கிய ஸ்டேஷனரிவகையறா | 2—11—3 | | | |
| கலாசாலை உபயோகத்துக்கு வாங் மண்ணெண்ணெய் டின் 1-க்குக் கிரயம் கொடுத்தது ... | 1—10—0 | | | |
| செந்தமிழ் விஷயதானத்துக்காக கனம் பிரசிடெண்ட் டிரஸ்டி அவர்கள் உத்தரவுப்படி மணியார்டர் மூலம் அனுப்பியது ... | 31— 4—0 | | | |

| வரவு | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| ஆக வரவு ரூ. ரூ. | 568 | 15 | 3 |
| சென்ற ஏப்பிரல்மீ த்தில் கடைசித்தேதியில்நின்ற பாக்கித்தொகை ரூ. .. | 1242 | 5 | 3 |
| ஆக மொத்தம் வரவு ... | 1811 | 4 | 6 |
| ஆக மொத்தம் ரூ. ... | 1811 | 4 | 6 |

| செலவு | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| பிரிண்டிங் ஆபீசு பில்ப்படி சங்கம் ஆபீசு அச்சுக்கூலி வகைக்குச் செல் ... 110—2—0 | | | |
| ஷை ஆபீசு பில்ப்படி ஷை ஆபீசு பைண்டிங் வகைக்குச் செல் ... 31—12—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ. | 186 | 6 | 0 |
| ஆக மொத்தம் செலவு .. | 1024 | 3 | 6 |
| போக பாக்கியிருப்பு ... | 787 | 1 | 0 |
| ஆக மொத்தம் ... | 1811 | 4 | 6 |
| ஆக மொத்தம் ... | 1811 | 4 | 6 |

திரு. நாராயணையங்கார்,

மானேஜர்.

*Audited and found Correct*

**S. GOPALASAMY IYENGAR,**

*Auditor.* 4—9—11.